பத்து லட்சத்திற்கும் அதிகமாக விற்பனையாகியுள்ள நூல்

யுவால் நோவா ஹராரி






# ஹோமோ டியஸ்

## வருங்காலத்தின் ஒரு சுருக்கமான வரலாறு

Tamil Edition

தமிழில்: நாகலட்சுமி சண்முகம்

# ஹோமோ டியஸ்

## வருங்காலத்தின் ஒரு சுருக்கமான வரலாறு


## யுவால் நோவா ஹராரி


## தமிழில்: நாகலட்சுமி சண்முகம்





மஞ்சுள் பப்ளிஷிங் ஹவுஸ்

*First published in India by*



**Manjul Publishing House**

*Corporate and Editorial Office*

· 2nd Floor, Usha Preet Complex,
42 Malviya Nagar, Bhopal 462 003 - India

*Sales and Marketing Office*

·7/32, Ansari Road, Daryaganj, New Delhi 110 002 - India
Website: www.manjulindia.com

*Distribution Centres*

Ahmedabad, Bengaluru, Bhopal, Kolkata, Chennai,
Hyderabad, Mumbai, New Delhi, Pune

Original English Edition first published by Harvill Secker in 2016

Revised edition was first published with the title The History of Tomorrow in Hebrew in Israel by Kinneret, Zmora-Bitan, Dvir in 2015

Copyright © 2015 Yuval Noah Harari

Tamil translation of
*Homo Deus: A Brief History of Tomorrow by Yuval Noah Harari*
© 2018 by Manjul Publishing House Private Limited.
All rights reserved.

ISBN 978-93-88241-70-0

Translation by Nagalakshmi Shanmugam
Editing and layout by PSV Kumarasamy

Illustration ©Stuart Daily; Design © Suzanne Dean

# உள்ளடக்கம்

# நூலாசிரியரைப் பற்றி

# யுவால் நோவா ஹராரி

முனைவர் யுவால் நோவா ஹராரி ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்திலிருந்து வரலாற்றில் முனைவர் பட்டம் பெற்றவர். அவர் இப்போது ஜெரூசலம் ஹீப்ரூ பல்கலைக்கழகத்தில் சொற்பொழிவுகள் ஆற்றி வருகிறார். 'உலக வரலாறு' குறித்து அவர் தனித்துவமான ஆய்வுகள் நடத்தி வருகிறார். அவருடைய ஆய்வுகள், பின்வரும் பரந்த கேள்விகளுக்கு விடை காணுவதை நோக்கமாகக் கொண்டுள்ளன: வரலாற்றுக்கும் உயிரியலுக்கும் இடையேயான உறவு என்ன? வரலாற்றில் நியாயம் இருக்கிறதா? வரலாற்றின் ஊடாக மக்கள் அதிக மகிழ்ச்சி அடைந்தனரா?

ஹராரி நடத்துகின்ற 'மனிதகுலத்தின் ஒரு சுருக்கமான வரலாறு' என்ற தலைப்புக் கொண்ட இணையவழிப் பயிற்சி வகுப்பில் 65,000க்கும் அதிகமானோர் பங்கு கொண்டு பயின்று வருகின்றனர். ஹோமோ டியஸ் என்ற இந்நூல் உலகம் நெடுகிலும் வெற்றிகரமாக விற்பனையாகிக் கொண்டிருக்கிறது. உலக அளவில் முப்பது மொழிகளில் இது பிரசுரிக்கப்பட்டுள்ளது. 2012ம் ஆண்டில் பேராசிரியர் ஹராரிக்குப் பொலோன்ஸ்கி விருது வழங்கப்பட்டது.

# மொழிபெயர்ப்பாளரைப் பற்றி

## நாகலட்சுமி சண்முகம்

நாகலட்சுமி ஒரு மிகச் சிறந்த ஊக்குவிப்புப் பேச்சாளர். அமெரிக்காவின் தலைசிறந்த பேச்சாளர்களில் ஒருவரும், 'சிக்கன் சூப் ஃபார் த சோல்' புத்தக வரிசையை உருவாக்கியவருமான ஜாக் கேன்ஃபீல்டின் 'வெற்றிக் கொள்கைகள்' பயிலரங்கை நடத்துவதற்கு அவரிடம் நேரடியாகப் பயிற்சி பெற்றவர் இவர்.

இவர் ஒரு சிறந்த மொழிபெயர்ப்பாளரும்கூட. கடந்த ஏழு ஆண்டுகளில் எழுபதுக்கும் மேற்பட்ட நூல்கள் இவருடைய மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ளன. இவருடைய மொழிபெயர்ப்புக்குக் கிடைத்துள்ள அங்கீகாரங்களில் 2014ல் திருப்பூர் தமிழ்ச் சங்கம் அளித்த 'தமிழ் மொழிபெயர்ப்புத் துறைக்கான சிறப்பு விருதும்,' இவர் மொழிபெயர்த்த 'இறுதிச் சொற்பொழிவு' நூலுக்கு 2014ல் வழங்கப்பட்ட 'நல்லி திசை எட்டும் மொழியாக்க விருதும்' அடங்கும். 2017 மே மாதம் தமிழக அரசு சிறந்த மொழிபெயர்ப்பாளருக்கான விருதை நாகலட்சுமிக்கு வழங்கி கௌரவித்துள்ளது.

தமிழ் நாடகத் துறையின் முன்னோடி மேதைகளான டி.கே.எஸ். சகோதரர்களில் ஒருவரான திரு. முத்துசாமி அவர்களின் பேத்திகளில் ஒருவர் இவர். இவர் தற்போது தன் கணவருடனும் தன் குழந்தைகள் இருவருடனும் மும்பையில் வசித்து வருகிறார்.

தம்பதியருக்கு இடையேயான உறவுகளை மேம்படுத்துவதற்கு உதவும் இவரது முதல் சுயபடைப்பான 'மாயாஜாலமான மணவாழ்க்கை - மறந்து போன ரகசியங்கள்' என்ற நூல் சமீபத்தில் வெளியாகிப் பெரும் பாராட்டுக்களைப் பெற்றுள்ளது.

# மொழிபெயர்ப்பாளரின் முன்னுரை

மதிப்பிற்குரிய வாசகப் பெருமக்களுக்கு,
வணக்கம்!

'சேப்பியன்ஸ்' நூலைத் தொடர்ந்து திரு யுவால் நோவா ஹராரி எழுதிய அடுத்தப் புத்தகம் 'ஹோமோ டியஸ்'. இந்நூலின் வாயிலாக உங்களை மீண்டும் சந்திப்பதில் நான் மட்டற்ற மகிழ்ச்சி கொள்ளுகிறேன். சேப்பியன்ஸைப்போலவே இந்நூலின் மொழிபெயர்ப்பும் எனக்கு ஓர் அற்புதமான கற்றல் அனுபவமாக அமைந்தது. மிக முக்கியமாக, மனத்தை விசாலப்படுத்த வேண்டியதன் முக்கியத்துவத்தையும் ஒரு பரந்த கண்ணோட்டத்தைக் கொண்டிருக்க வேண்டியதன் முக்கியத்துவத்தையும் சேப்பியன்ஸ் மற்றும் ஹோமோ டியஸ் நூல்கள் வாயிலாக நான் உணர்ந்து கொண்டிருக்கிறேன் என்றால் அது மிகையல்ல. சுமார் மூன்று மாதகாலக் கடும் உழைப்பிற்குப் பிறகு வெளிவந்துள்ள இந்நூலில், மனிதகுலத்தைப் பற்றிய சுவாரசியமான தகவல்கள் கொட்டிக் கிடக்கின்றன, மனிதகுலத்திற்கான அபாய அறிவிப்புகள் ஆங்காங்கே முளைத்து நம் தலையில் ஓங்கித் தட்டி நமக்கு விழிப்பூட்டுகின்றன.

இந்நூலிலும் இயற்பியல், செயற்கை நுண்ணறிவு, உயிரியல், மனிதவியல் போன்ற பல துறைகளுக்குரிய தனித்துவமான வார்த்தைகளை ஹராரி தாராளமாகப் பயன்படுத்தியிருக்கிறார். அச்சொற்களுக்கு மிகப் பொருத்தமான, வாசிப்பதற்கு எளிமையான தமிழ்ச் சொற்களைத் தேடிக் கண்டுபிடிப்பது உண்மையிலேயே சவாலானதாக இருந்தது. ஏற்கனவே புழக்கத்தில் இருக்கின்ற பொருத்தமான தமிழ் வார்த்தைகளை நான் பயன்படுத்தியுள்ளபோதிலும், படிப்பதற்குக் கரடுமுரடாகவும் படிப்போரை அந்நியப்படுத்தும் விதத்திலும் இருப்பதாக நான் கருதுகின்ற வார்த்தைகளை நான் தவிர்த்துவிட்டேன் என்பதை நான் இங்கு கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

மேலும், அறிவியல் மற்றும் தொழில்நுட்பம் தொடர்பான ஓரிரு ஆங்கில வார்த்தைகளுக்கு இணையான தமிழ் வார்த்தைகள் புழக்கத்தில் இல்லாததால் அவற்றை நான் அப்படியே அவற்றின் ஆங்கில

உச்சரிப்புடன் தமிழில் எழுதியிருக்கிறேன். இந்நூலில் இடம்பெற்றுள்ள பெயர்ச்சொற்கள் அனைத்தும் அந்தந்த மொழிகளில் (ஸ்பானிய மொழி, ஹங்கேரிய மொழி, பிரெஞ்சு, ஆங்கிலம் போன்றவை) அவற்றுக்குரிய உச்சரிப்பின்படி அப்படியே

மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. சில பெயர்ச்சொற்களின் தமிழ் உச்சரிப்பு மூலமொழியிலிருந்து வேறுபட்டு இருந்தாலும், மக்கள் அவற்றை நெடுங்காலமாக அப்படியே வாசித்துப் பழகிவிட்டதால், நான் அவற்றை அப்படியே விட்டுவிட்டேன் (எ.கா. ஆங்கிலத்தில் ‘சார்ல்ஸ்’ என்று உச்சரிக்கப்படுகின்ற வார்த்தை, தமிழில் ‘சார்லஸ்’ என்று பரவலாக உச்சரிக்கப்படுவதால், இந்நூலிலும் அது சார்லஸ் என்றே இடம்பெற்றுள்ளது.)

ஒவ்வோர் அத்தியாயத்திலும் இடம்பெற்றுள்ள சிறப்பு வார்த்தைகளை (ஆங்கிலம் மற்றும் தமிழ்) உள்ளடக்கிய கலைச்சொல் பட்டியல் ஒன்றை இந்நூலின் முடிவில் நான் கொடுத்திருக்கிறேன். இம்முறையும் ஹராரி அவர்கள் சமீபத்தில் மும்பைக்கு வருகை தந்தபோது, என் கணவர் திரு குமாரசாமி அவர்கள் அவரை நேரில் சந்தித்து, இந்நூலில் எங்களுக்கு எழுந்த சந்தேகங்களை அவரிடம் கேட்டுத் தெளிவுபடுத்திக் கொண்டது மொழிபெயர்ப்புக்குப் பேருதவியாக இருந்தது.

இந்நூலின் மொழிபெயர்ப்பில் தமிழ் தொடர்பாக எனக்கு எழுந்த ஐயங்களைக் களைந்து தக்கப் பரிந்துரைகளை வழங்கி எனக்கு வழிகாட்டிய தமிழறிஞரான பத்மஸ்ரீ அவ்வை நடராசன் அவர்களுக்கு நான் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

மனிதகுல வரலாற்றையும் மனிதகுல எதிர்காலத்தையும் பற்றிய மேலும் சுவையான தகவல்களை உள்ளடக்கிய இந்நூல், நீங்கள் ரசித்து மகிழும் விதத்திலும் ஆழ்ந்து சிந்திக்கும் விதத்திலும் இருக்க வேண்டும் என்ற விருப்பத்தை மனத்தில் கொண்டு இதை நான் மொழிபெயர்த்திருக்கிறேன். இருப்பினும், ஏதேனும் தவறுகள் எங்கேனும் இடம்பெற்றிருந்தால், தயவு செய்து நீங்கள் அவற்றைப் பொறுத்துக் கொள்ளுவீர்கள் என்று நான் நம்புகிறேன்.

இந்நூல் தொடர்பான உங்களுடைய கருத்துக்களை நீங்கள் என்னோடு பகிர்ந்து கொள்ள விரும்பினால், ஸீணீரீணீறீணீளீsலீனீவீ.sலீணீஸீனீuரீணீனீ@ரீனீணீவீறீ.நீஷீனீ என்ற மின்னஞ்சல் முகவரியில் நீங்கள் என்னைத் தொடர்பு கொள்ளலாம்.

உங்கள் வருங்காலம் வளமானதாகவும் மகிழ்ச்சியானதாகவும் அமைய என் மனமார்ந்த வாழ்த்துக்கள்!

உண்மையுடன்,

நாகலட்சுமி சண்முகம்

முக்கியமான விஷயங்களை அன்போடு எனக்குக் கற்றுக் கொடுத்த என் ஆசான் எஸ்.என்.கோயெங்கா (1924-2013) அவர்களுக்கு இந்நூலை நான் காணிக்கையாக்குகிறேன்.

## அத்தியாயம் 1

# மனிதகுலத்தின் புதிய நோக்கம்



படம் **1:** சோதனைக்குழாய் வழிக் கருக்கட்டல்**:** படைப்பில் மேதமை பெறுதல்**.**

இருபத்தோராம் நூற்றாண்டின் விடியலில், மனிதகுலம் தன் கைகால்களை நீட்டிச் சோம்பல் முறித்துக் கொண்டும் தன் கண்களைக் கசக்கிக் கொண்டும் கண்விழிக்கிறது. ஏதோ மோசமான கொடுங்கனவின் எச்சங்கள் அதன் மனத்தில் இன்னும் அலைபாய்ந்து கொண்டிருக்கின்றன. "மாபெரும் முள்வேலிக் கம்பிகள், பிரம்மாண்டமான அணுசக்திக் காளான் மேகங்கள் போன்றவை கண்முன் விரிந்தன. நல்ல வேளை, அது வெறும் கொடுங்கனவுதான்!" என்று அது தனக்குத் தானே கூறிக் கொண்டு, குளியலறைக்குச் சென்று தன் முகத்தைக் கழுவிக் கொண்டு, தன் முகத்தின்மீது உள்ள சுருக்கங்களைக் கண்ணாடியில் ஆய்வு செய்துவிட்டு, ஒரு குவளை காபி தயாரித்துக் கொண்டு, தன்னுடைய நாட்குறிப்பேட்டைத் திறந்து, "இன்றைய சவால்கள் என்னவென்று பார்க்கலாம்," என்று மீண்டும் தனக்குத் தானே கூறிக் கொள்ளுகிறது.

இக்கேள்விக்கான விடை ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மாறாமல் அப்படியே இருந்து வந்துள்ளது. அந்த விடையில் உள்ளடங்கியுள்ள அதே மூன்று பிரச்சனைகள்தான் இருபதாம் நூற்றாண்டின் சீனர்களையும், இடைக்காலத்து இந்தியர்களையும், பண்டைய எகிப்தியர்களையும் ஆட்டுவித்தன. பஞ்சம், கொள்ளைநோய், போர் ஆகியவைதான் சவால்கள் பட்டியலில் எப்போதும் முதலிடம் வகித்தன. தலைமுறை தலைமுறையாக மனிதர்கள் பல்வேறு கடவுளரிடமும் தேவதைகளிடமும் மகான்களிடமும் பிரார்த்தனை செய்து வந்துள்ளனர், எண்ணற்றக் கருவிகளையும் கழகங்களையும் சமூக அமைப்புகளையும் கண்டுபிடித்து வந்துள்ளனர், ஆனால் லட்சக்கணக்கான மக்கள் பசியாலும் கொள்ளைநோய்களாலும் வன்முறையாலும் தொடர்ந்து இறந்தனர். பஞ்சமும் கொள்ளைநோய்களும் போரும் கடவுளுடைய திட்டத்தின் அல்லது நம்முடைய கச்சிதமற்ற இயல்பின் ஒரு முக்கியப் பகுதி என்றும், காலத்தின் முடிவைத் தவிர வேறு எதுவொன்றாலும் அவற்றிலிருந்து நம்மை விடுவிக்க முடியாது என்றும் பல சிந்தனையாளர்களும் தீர்க்கதரிசிகளும் முடிவு கட்டிவிட்டனர்.

ஆனாலும், மூன்றாம் ஆயிரமாண்டு பிறந்தபோது, மனிதகுலம் ஓர் அற்புதமான விஷயத்தை உணர்ந்து கொண்டது. பெரும்பாலான மக்கள் அவ்விஷயத்தைப் பற்றி அரிதாகவே சிந்திக்கின்றனர், ஆனால் கடந்த சில ஆண்டுகளில், பஞ்சம், கொள்ளைநோய், போர் ஆகியவற்றுக்கு நாம் எப்படியோ கடிவாளம் போட்டுள்ளோம். இப்பிரச்சனைகள் முழுமையாகத் தீர்க்கப்படவில்லை என்பது உண்மைதான். ஆனால், அவை புரிந்து கொள்ளப்பட முடியாத மற்றும் கட்டுப்படுத்தப்பட முடியாத இயற்கை ஆற்றல்கள் என்ற நிலை நீங்கி,

சமாளிக்கப்படக்கூடிய சவால்களாக உருமாறியுள்ளன. அவற்றிலிருந்து நம்மைப் பாதுகாப்பதற்கு எந்தக் கடவுளிடமும் அல்லது எந்த மகானிடமும் நாம் பிரார்த்தனை செய்ய வேண்டியதில்லை. பஞ்சம், கொள்ளைநோய், போர் ஆகியவற்றைத் தவிர்ப்பதற்கு நாம் என்ன செய்ய வேண்டும் என்பதை நாம் நன்றாக அறிந்திருக்கிறோம். அவற்றைத் தடுப்பதில் பொதுவாக நாம் வெற்றி பெற்றுவிடுகிறோம்.

கண்கூடான தோல்விகள் இன்னும் இருக்கத்தான் செய்கின்றன, ஆனால் நாம் அத்தகைய தோல்விகளை எதிர்கொள்ளும்போது, “கச்சிதமற்ற நம்முடைய உலகத்தில் விஷயங்கள் இப்படித்தான் நிகழும்,” என்றோ, அல்லது “எல்லாம் கடவுளின் விருப்பப்படியே நடக்கும்,” என்றோ நாம் கூறுவதில்லை. மாறாக, பஞ்சமோ, கொள்ளைநோயோ அல்லது போரோ நம்முடைய கட்டுப்பாட்டை மீறும்போது, யாரோ ஏதோ தவறு செய்துள்ளதை நாம் உணர்ந்து கொண்டு, அதற்காக ஒரு விசாரணைக் குழுவை அமைக்கிறோம், அடுத்த முறை நாம் சிறப்பாகச் செயல்படுவோம் என்று நமக்கு நாமே வாக்குறுதி அளித்துக் கொள்ளுகிறோம். அது உண்மையில் சிறப்பாகப் பலனளிக்கிறது. இத்தகைய பேரிடர்கள் நிகழுவது மேன்மேலும் குறைந்து கொண்டே வருகிறது. வரலாற்றில் முதன்முறையாக, இன்று உணவுப் பற்றாக்குறையால் இறக்கின்ற மக்களின் எண்ணிக்கையைவிட, அளவுக்கதிகமாக உண்ணுவதால் இறக்கின்ற மக்களின் எண்ணிக்கை அதிகரித்துள்ளது; கொள்ளைநோய்களின் காரணமாக இறக்கின்றவர்களைவிட முதுமையினால் அதிகமானோர் இறக்கின்றனர்; போர்வீரர்கள், தீவிரவாதிகள், குற்றவாளிகள் ஆகியோரால் கொல்லப்படுகின்ற மக்களின் ஒட்டுமொத்த எண்ணிக்கையைவிட, தற்கொலை செய்து கொள்ளுகின்றவர்களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கிறது. இருபத்தோராம் நூற்றாண்டின் துவக்கத்தில், ஒரு சராசரி மனிதன், வறட்சியாலோ, எபோலா நோயாலோ, அல்லது அல்கைதா தீவிரவாதத் தாக்குதல் ஒன்றினாலோ இறப்பதைவிட மெக்டொனால்ட்ஸ் துரித உணவகத்தில் அளவுக்கு மீறிச் சாப்பிடுவதால் இறப்பதற்கான சாத்தியம் அதிகம் உள்ளது.

அதிபர்கள், பெருநிறுவனத் தலைவர்கள், ராணுவத் தளபதிகள் ஆகியோர் தினமும் பொருளாதார நெருக்கடிகளையும் ராணுவச் சண்டைகளையும் கையாள வேண்டியிருந்தாலும்கூட, ஒட்டுமொத்தமாக வரலாற்றைக் கருத்தில் கொள்ளும்போது, மனிதகுலத்தால் தன் கண்களை உயர்த்தி, புதிய தொடுவானங்களை நோக்கித் தன் பார்வையைச் செலுத்த முடியும். மனிதன் எதிர்கொண்டுள்ள சவால்களின் பட்டியலில் முன்னணியில் உள்ள

பஞ்சம், கொள்ளைநோய், போர் ஆகியவற்றை நாம் முழுமையாக நம்முடைய கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவந்தால், வேறு எது அவற்றின் இடத்தை எடுத்துக் கொள்ளும்? நெருப்பு இல்லாத ஓர் உலகில் இருக்கின்ற தீயணைப்பு வீரர்களைப்போல, இருபத்தோராம் நூற்றாண்டில் வாழும் மனிதகுலம், இதற்கு முன்பு ஒருபோதும் கேட்கப்பட்டிராத ஒரு கேள்வியைத் தன்னைத் தானே கேட்டுக் கொள்ள வேண்டியுள்ளது. "நம்மைக் கொண்டு நாம் என்ன செய்யப் போகிறோம்?" என்பதுதான் அக்கேள்வி. ஆரோக்கியமான, செழிப்பான, இணக்கமான ஓர் உலகில், எந்த விஷயத்திற்கு நம்முடைய கவனமும் சாமர்த்தியமும் தேவைப்படும்? உயிர்தொழில்நுட்பமும் தகவல் தொழில்நுட்பமும் நமக்கு வழங்கிக் கொண்டிருக்கின்ற அளப்பரிய புதிய சக்திகளைக் கணக்கில் எடுத்துக் கொள்ளும்போது, இக்கேள்வி இருமடங்கு அவசரமாகக் கையாளப்பட வேண்டிய ஒன்றாக ஆகிறது. இவ்வளவு சக்திகளைக் கொண்டு நாம் என்ன செய்யப் போகிறோம்?

இக்கேள்விக்கு விடையளிப்பதற்கு முன்பாக, பஞ்சம், கொள்ளைநோய், போர் ஆகிய மூன்றைப் பற்றியும் கூடுதலாக ஒருசில வார்த்தைகளைச் சொல்லியாக வேண்டும். நாம் அவற்றை நம்முடைய கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்து கொண்டிருக்கிறோம் என்ற நம்முடைய முழக்கம் மட்டுமீறியதாகவும், மிகவும் அபத்தமானதாகவும், கல்நெஞ்சத்தனமானதாகவும் பலருக்குத் தோன்றக்கூடும். நாளொன்றுக்கு இரண்டு டாலர்களுக்கும் குறைவான ஊதியத்தில் வாழ்க்கை நடத்தப் போராடிக் கொண்டிருக்கின்ற கோடிக்கணக்கான மக்களைப் பற்றி என்ன சொல்லுவது? ஆப்பிரிக்காவில் தொடர்ந்து நிலவி வருகின்ற எய்ட்ஸ் நெருக்கடியையும், சிரியாவிலும் ஈராக்கிலும் நிகழ்ந்து கொண்டிருக்கின்ற போர்களையும் பற்றி என்ன சொல்லுவது? இந்த விவகாரங்களைக் கையாளுவதற்கு, இருபத்தோராம் நூற்றாண்டின் துவக்கத்தில் உலகம் எப்படி இருக்கிறது என்பதை நாம் சற்றுக் கூர்ந்து ஆராயலாம். இனிவரும் காலங்களில் மனிதர்கள் எதிர்கொள்ள வேண்டிய சவால்களைப் பற்றி அதற்குப் பிறகு நாம் ஆய்வு செய்யலாம்.

## உயிரியல்ரீதியான வறுமைக் கோடு

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மனிதகுலத்தின் மிக மோசமான எதிரியாக இருந்து வந்துள்ள பஞ்சத்திலிருந்து நாம் துவக்கலாம். சமீபகாலம்வரை, பெரும்பான்மையான மக்கள் உயிரியல்ரீதியான

வறுமைக் கோட்டின் விளிம்பில் வாழ்ந்து வந்தனர். இந்த வறுமைக் கோட்டிற்குக் கீழே அவர்கள் போகும் பட்சத்தில், ஊட்டச்சத்துக் குறைவுக்கும் பட்டினிக்கும் அவர்கள் பலியாவர். ஒரு சிறு தவறோ அல்லது துரதிர்ஷ்டமோ ஓர் ஒட்டுமொத்தக் குடும்பத்திற்கும் அல்லது கிராமத்திற்கும் வெகு சுலபமாக ஒரு மரண தண்டனையாக அமைந்துவிடக்கூடிய சாத்தியம் இருந்தது. கனமழை உங்கள் கோதுமைப் பயிர்களைச் சேதப்படுத்தியிருந்தாலோ அல்லது திருடர்கள் உங்களுடைய ஆட்டு மந்தையைத் திருடிச் சென்றிருந்தாலோ, நீங்களும் உங்கள் அன்புக்குரியவர்களும் பட்டினியால் இறந்திருப்பீர்கள். துரதிர்ஷ்டமோ அல்லது ஒரு கூட்டு நிலையில் மேற்கொள்ளப்பட்ட முட்டாள்தனமான ஒரு காரியமோ அல்லது தீர்மானமோ ஒரு மிகப் பெரிய அளவில் பஞ்சம் ஏற்பட வழி வகுத்தது. பண்டைய எகிப்தை அல்லது இடைக்கால இந்தியாவை ஒரு தீவிர வறட்சி தாக்கியபோதெல்லாம், பொதுவாக ஐந்திலிருந்து பத்து சதவீத மக்கள் இறந்து போயினர்; உணவுப் பொருட்கள் பற்றாக்குறை ஏற்பட்டது; போதுமான அளவு உணவை இறக்குமதி செய்ய முடியாத அளவுக்குப் போக்குவரத்து மிக மெதுவாக இயங்கியது, அதற்கு அதிகச் செலவும் ஆனது; நிலைமையைச் சீராக்க முடியாத அளவுக்கு அரசாங்கங்கள் பலவீனமாக இருந்தன.

நீங்கள் எந்தவொரு வரலாற்றுப் புத்தகத்தைத் திறந்தாலும், பட்டினியால் வாடிய மக்கட்கூட்டங்களைப் பற்றிய கொடூரமான கதைகளை நீங்கள் நிச்சயமாக எதிர்கொள்ளுவீர்கள். 1694ம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில், பூவே நகரைச் சேர்ந்த பிரெஞ்சு அதிகாரி ஒருவர், பஞ்சத்தின் தாக்கத்தையும் கிடுகிடுவென்று ஏறிக் கொண்டிருந்த விலைவாசியையும் பற்றி இப்படி விவரித்தார்: "எந்த வேலையும் கிடைக்காததால் ரொட்டி வாங்குவதற்குக்கூடப் பணம் இல்லாமல் எண்ணற்ற வறியவர்கள் பசியால் பலவீனமடைந்தும் மிக அவலமான நிலையிலும் உள்ளனர், ஏராளமானோர் பட்டினியால் இறந்து கொண்டிருக்கின்றனர். தங்கள் வாழ்நாளை இன்னும் சில நாட்கள் நீட்டிப்பதற்காகவும் தங்களுடைய பசியைத் தணித்துக் கொள்ளுவதற்காகவும், இந்த ஏழை மக்கள், சாணக் குவியல்கள்மீது வீசப்பட்டுள்ள இறந்த பூனைகள், தோலுறிக்கப்பட்டக் குதிரைகள் போன்ற சுகாதாரமற்றப் பொருட்களை உண்ணுகின்றனர். இன்னும் பலர், பசுக்களும் எருதுகளும் வெட்டப்படும்போது வழிந்தோடுகின்ற ரத்தத்தையும் உணவகங்கள் தெருக்களில் வீசுயெறிகின்ற இறைச்சிக் கழிவுகளையும் உட்கொள்ளுகின்றனர். மிக அவலமான நிலையில் உள்ள மற்றவர்கள், சுள்ளிகள், களைகள், வேர்கள் மற்றும்

பச்சிலைகளை நீரில் கொதிக்க வைத்து உட்கொள்ளுகின்றனர்."

இதே போன்ற அவலக் காட்சிகள் பிரான்ஸ் நெடுகிலும் நிகழ்ந்தன. அதற்கு முந்தைய இரண்டு ஆண்டுகளில், மோசமான வானிலை அந்த சாம்ராஜ்ஜியம் நெடுகிலும் அறுவடையைச் சீரழித்திருந்தது. எனவே, 1694ம் ஆண்டின் வசந்தகாலத்தையொட்டி, தானியக்களஞ்சியங்கள் அனைத்தும் முற்றிலும் காலியாக இருந்தன. பணக்காரர்கள் தங்களால் இயன்ற அளவுக்குப் பதுக்கி வைத்திருந்த உணவுப் பொருட்களை மிக அதிக விலையில் விற்றனர், ஏழைகள் கூட்டங்கூட்டமாக மடிந்தனர். 1692ம் ஆண்டுக்கும் 1694ம் ஆண்டுக்கும் இடையே, பிரான்ஸின் மக்கட்தொகையில் 15 சதவீதத்தினர், அதாவது 28 லட்சம் மக்கள் பட்டினியால் மடிந்தனர். ஆனால், அதே காலகட்டத்தில், பிரான்ஸின் அரசரான பதினான்காம் லூயி தன்னுடைய வெர்சாய் மாளிகையில் தன்னுடைய காதலியருடன் களியாட்டம் போட்டுக் கொண்டிருந்தார். 1695ல், எஸ்டோனியா நாட்டில் ஏற்பட்டப் பஞ்சம் அதன் மக்கட்தொகையில் ஐந்தில் ஒரு பகுதியைக் கொன்றது. 1696ல் ஃபின்லாந்து நாட்டில் ஏற்பட்டப் பஞ்சத்தின் காரணமாக மூன்றில் ஒரு பங்கு மக்கள் உயிரிழந்தனர். 1695ம் ஆண்டுக்கும் 1698ம் ஆண்டுக்கும் இடையே ஸ்காட்லாந்து மிகத் தீவிரமான பஞ்சத்தினால் துன்புற்றது. அதன் சில மாவட்டங்களில் இருபது சதவீத மக்கள் இறந்து போயினர்.

என்றேனும் ஒருநாள் மதிய உணவைத் தவறவிட நேர்ந்தாலோ, அல்லது ஒரு விசேஷ நாளன்று உண்ணாவிரதம் இருக்கும்படி நேர்ந்தாலோ, அல்லது ஒருசில நாட்களுக்கு வெறும் காய்கறிச் சாறுகளை மட்டுமே உட்கொண்டு ஏதோ ஒரு நவீனப் பத்தியத்தை கடைபிடிக்கும்போதோ ஏற்படக்கூடிய உணர்வைப் பெரும்பாலான வாசகர்கள் அறிந்திருக்கக்கூடும். ஆனால், நீங்கள் நாட்கணக்கில் சாப்பிடாமல் இருந்திருந்து, அடுத்த வேளைச் சோறு எங்கிருந்து கிடைக்கும் என்பது குறித்து உங்களுக்கு எந்த யோசனையும் இல்லாமல் போகும்போது, அந்த நிலைமை எப்படி இருக்கும் என்பதை உங்களால் கற்பனை செய்ய முடியுமா? இன்றைய மக்களில் பெரும்பாலானோர் இந்தக் கொடூரமான சித்தரவதையை ஒருபோதும் அனுபவித்ததில்லை. நம்முடைய மூதாதையர் இதை அனுபவித்தனர். "இந்தப் பஞ்சத்திலிருந்து எங்களைக் காப்பாற்று!" என்று இறைவனிடம் அவர்கள் முறையிட்டபோது, அடுத்த வேளைச் சாப்பாடு எங்கிருந்து கிடைக்கும் என்ற எண்ணம்தான் அவர்களுடைய மனத்தில் இருந்தது.

கடந்த நூறு ஆண்டுகளின் ஊடாக, தொழில்நுட்ப வளர்ச்சியும் பொருளாதார வளர்ச்சியும் அரசியல் வளர்ச்சியும் மனிதகுலத்தை உயிரியல்ரீதியான வறுமைக் கோட்டிலிருந்து பிரிக்கின்ற மிக

உறுதியான ஒரு பாதுகாப்பு வலையை உருவாக்கியுள்ளன. அந்த வலை மேன்மேலும் வலிமையடைந்து கொண்டே வருகிறது. பெரிய அளவிலான பஞ்சங்கள் அவ்வப்போது சில பகுதிகளை இன்னும் தாக்கிக் கொண்டுதான் இருக்கின்றன என்றாலும் அவை பரவலாக இல்லை. உலகில் இனியும் இயற்கையான பஞ்சங்கள் ஏற்படுவதில்லை. அரசியல் காரணமாக ஏற்படுகின்ற பஞ்சங்கள் மட்டுமே நிகழுகின்றன. சிரியா, சூடான், சோமாலியா போன்ற நாடுகளில் மக்கள் பட்டினியால் இறக்கின்றனர் என்றால், அவர்கள் அவ்வாறு சாக வேண்டும் என்று சில அரசியல்வாதிகள் விரும்புவதுதான் அதற்குக் காரணம்.

இப்புவியின் பெரும்பான்மைப் பகுதிகளில், ஒருவர் தன்னுடைய வேலையையும் தன்னுடைய அனைத்து உடமைகளையும் இழந்தால்கூட, பசியால் அவர் இறந்து போவதற்கான வாய்ப்பு மிகவும் குறைவுதான். தனியார் காப்பீட்டுத் திட்டங்கள், அரசாங்க அமைப்புகள், சர்வதேசத் தொண்டு நிறுவனங்கள் ஆகியவை அவரை வறுமையிலிருந்து மீட்டெடுக்காமல் போகக்கூடும், ஆனால் உயிர்பிழைத்திருப்பதற்குத் தேவையான அன்றாட உணவை அவை அவருக்கு நிச்சயமாக வழங்கும். உலகளாவிய வர்த்தகப் பிணையம் ஓர் ஒருங்கிணைந்த முறையில் வறட்சிகளையும் வெள்ளங்களையும் வியாபார வாய்ப்புகளாக மாற்றி, உணவுப் பற்றாக்குறைகளிலிருந்து விரைவாகவும் அதிகச் செலவின்றியும் மக்கள் மீளுவதைச் சாத்தியமாக்குகிறது. போர்கள், நிலநடுக்கங்கள், சுனாமிகள் போன்றவை ஒட்டுமொத்த நாடுகளையும் நாசப்படுத்தும்போதுகூட, பஞ்சம் வராமல் தடுப்பதில் சர்வதேச முயற்சிகள் பொதுவாக வெற்றி பெற்றுவிடுகின்றன. கிட்டத்தட்ட தினமும் லட்சக்கணக்கான மக்கள் பசியால் வாடுகிறார்கள் என்றாலும்கூட, பெரும்பாலான நாடுகளில் வெகுசில மக்களே உண்மையில் பட்டினியால் சாகின்றனர்.

ஏழ்மை நிச்சயமாகப் பிற ஆரோக்கியப் பிரச்சனைகளை உருவாக்குகிறது. உலகின் பணக்கார நாடுகளில்கூட ஊட்டச்சத்துக் குறைவால் ஆயுட்காலம் குறைகிறது. எடுத்துக்காட்டாக, பிரான்ஸில் 60 லட்சம் மக்கள் (மக்கட்தொகையில் சுமார் 10%) ஊட்டச்சத்துக் குறைவால் துன்புறுகின்றனர். மதிய உணவுக்கு ஏதேனும் கிடைக்குமா என்பது தெரியாமல்தான் அவர்கள் தினமும் காலையில் கண்விழிக்கின்றனர். பல சமயங்களில் இரவில் அவர்கள் பட்டினியாகத்தான் தூங்குகின்றனர். அவர்களுக்குக் கிடைக்கும் ஊட்டச்சத்துக்கூட சமச்சீரற்றதாகவும் ஆரோக்கியமற்றதாகவும் இருக்கிறது. அவர்கள் சாப்பிடும் உணவில் மாவுச்சத்தும் சர்க்கரையும் உப்பும் ஏராளமாக இருக்கின்றன, ஆனால் புரதச்சத்தும்

வைட்டமின்களும் போதிய அளவு இருப்பதில்லை. ஆனாலும், ஊட்டச்சத்துக் குறைவு என்பது வேறு, பஞ்சம் என்பது வேறு. இருபத்தோராம் நூற்றாண்டின் ஆரம்பகாலத்து பிரான்ஸும் 1694ம் ஆண்டுகாலத்து பிரான்ஸும் ஒன்றல்ல. இருபத்தோராம் நூற்றாண்டில், பூவே நகரையோ அல்லது பாரீஸ் நகரையோ ஒட்டி அமைந்துள்ள மிக மோசமான குடிசைப் பகுதிகளில்கூட மக்கள் வாரக்கணக்கில் சாப்பிடாமல் இருப்பதால் மடிவதில்லை.

இதே மாற்றம் எண்ணற்றப் பிற நாடுகளில், குறிப்பாகச் சீனாவில், நிகழ்ந்துள்ளது. பல நூற்றாண்டு காலம், மஞ்சள் பேரரசரின் ஆட்சியில் தொடங்கி கம்யூனிசவாதிகளின் ஆட்சிவரை, ஒவ்வொரு சீன ஆட்சியிலும் பஞ்சம் தலை நீட்டியது. சில ஆண்டுகளுக்கு முன்புவரைகூட, உணவுப் பற்றாக்குறைகளுக்கான ஒரு கச்சிதமான எடுத்துக்காட்டாகச் சீனா திகழ்ந்தது. சீன அரசாங்கம் செயல்படுத்திய ‘பெரும் முற்போக்குப் பாய்ச்சல்’ என்ற மோசமான பொருளாதார மற்றும் சமூக நடவடிக்கையின் விளைவாக லட்சக்கணக்கான சீனர்கள் பட்டினியால் மடிந்தனர். இப்பிரச்சனை மேலும் தீவிரமடையவே செய்யும் என்று வல்லுநர்கள் கணித்தனர். 1974ல் ரோம் நகரில் நடைபெற்ற முதல் ‘உலக உணவு மாநாட்டில்’ கலந்து கொண்ட பிரதிநிதிகளிடம் மிக மோசமான கணிப்புகள் கூறப்பட்டன. தன்னுடைய கோடிக்கணக்கான மக்களின் பசியைப் போக்குவதற்குச் சீனாவிடம் எந்த வழியும் இல்லை என்றும், உலகின் மிக அதிக மக்கட்தொகையைக் கொண்ட அந்நாடு ஒரு பேரழிவை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது என்றும் அவர்களிடம் கூறப்பட்டது. ஆனால் உண்மையில், வரலாற்றில் மாபெரும் பொருளாதார அதிசயத்தை நோக்கி அந்நாடு போய்க் கொண்டிருந்தது. 1974ம் ஆண்டிலிருந்து பல லட்சக்கணக்கான சீனர்கள் வறுமையிலிருந்து வெளிக்கொணரப்பட்டுள்ளனர். உணவுப் பற்றாக்குறையாலும் ஊட்டச்சத்துக் குறைபாட்டினாலும் பல லட்சக்கணக்கான சீனர்கள் இன்னும் துன்புற்றுக் கொண்டிருந்தாலும்கூட, தன் வரலாற்றில் முதன்முறையாக, சீனா இப்போது பஞ்சத்திலிருந்து முற்றிலுமாக விடுபட்டுள்ளது.

இன்று பெரும்பாலான நாடுகளில், அளவுக்கதிகமாக உணவு உட்கொள்ளுவது பஞ்சத்தைவிடை மிகப் பெரிய ஒரு பிரச்சனையாக உருவெடுத்துள்ளது. பதினெட்டாம் நூற்றாண்டில், பசியால் வாடிக் கொண்டிருந்த மக்கள் ரொட்டி கிடைக்கவில்லை என்றால் அதற்கு பதிலாக ‘கேக்’ சாப்பிட வேண்டும் என்று பிரான்ஸ் நாட்டு அரசியான மேரி அந்துவானத் அறிவுறுத்தியதாகக் கூறப்படுகிறது. இன்று,

ஏழைகள் இந்த அறிவுரையை இம்மி பிசகாமல் பின்பற்றிக் கொண்டிருக்கின்றனர். அமெரிக்காவின் பெவர்லி ஹில்ஸ் எனும் பகுதியில் வாழுகின்ற பெரும் பணக்காரர்கள், இலைக்கோசு சாலட்டையும், ஆவியில் வேக வைத்த டோஃபூவைக் கீன்வா தானியத்தோடு சேர்த்தும் சாப்பிட்டுக் கொண்டிருக்கின்றனர். ஆனால், குடிசைப் பகுதிகளில் வாழுகின்ற ஏழை மக்கள், பர்கர்களையும் பீட்சாக்களையும் கேக்குகளையும் சீட்டோஸ்களையும் அளவுக்கதிகமாகச் சாப்பிடுகின்றனர். 2014ல் 210 கோடி மக்கள் மிதமிஞ்சிய உடல் எடை கொண்டவர்களாக இருந்தனர், 85 கோடி மக்கள் ஊட்டச்சத்துக் குறைவால் துன்புற்றனர். 2030ம் ஆண்டுவாக்கில் ஒட்டுமொத்த மனிதகுலத்தில் ஐம்பது சதவீதத்தினர் மிதமிஞ்சிய உடல் எடை கொண்டவர்களாக இருப்பார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது. 2010ல் பஞ்சமும் ஊட்டச்சத்துக் குறைவும் சேர்ந்து சுமார் 10 லட்சம் மக்களைக் கொன்றது, ஆனால் மிதமிஞ்சிய உடல் எடை 30 லட்சம் மக்களைக் கொன்றது.

## பார்வைக்குப் புலப்படாத படை

பஞ்சத்திற்குப் பிறகு, கொள்ளைநோய்களும் தொற்றுநோய்களும்தான் மனிதகுலத்தின் இரண்டாவது மாபெரும் எதிரிகளாக இருந்தன. வணிகர்கள், அதிகாரிகள், புனிதப் பயணியர் ஆகியோரின் இடையறாத போக்குவரத்தால் இணைக்கப்பட்டப் பரபரப்பான நகரங்கள் மனித நாகரிகத்தின் அடித்தளமாக இருந்ததோடு, நோய்க்கிருமிகள் இனப்பெருக்கம் செய்வதற்கான கச்சிதமான இடங்களாகவும் இருந்தன. இதன் விளைவாக, பண்டைய ஏதென்ஸ் நகரிலும் இடைக்காலத்து ஃபுளோரென்ஸ் நகரிலும் வாழ்ந்த மக்கள், தாங்கள் நோய்வாய்ப்பட்டு மறுவாரமே இறக்கக்கூடும் என்ற அறிதலுடனோ, அல்லது ஏதோ ஒரு கொள்ளைநோய் திடீரென்று முளைத்துத் தங்களுடைய ஒட்டுமொத்தக் குடும்பத்தையும் ஒரேயடியாக அழித்துவிடக்கூடும் என்ற அறிதலுடனோதான் வாழ்ந்தனர்.

மிகப் பிரபலமான அப்படிப்பட்ட ஒரு திடீர் நிகழ்வு 1330களில் தொடங்கியது. ‘கருப்புச் சாவு’ என்று அழைக்கப்பட்ட அந்நிகழ்வு கிழக்கு ஆசியாவில் அல்லது மத்திய ஆசியாவில் எங்கோ தொடங்கியது. தெள்ளுப் பூச்சிகளில் வாழுகின்ற எர்சினியா பெஸ்டிஸ் என்ற பற்றுயிரி, அப்பூச்சிகளால் கடிக்கப்பட்ட மனிதர்களைத் தாக்கத் தொடங்கியதிலிருந்து அந்தக் கொள்ளைநோய் ஆரம்பமானது. பிறகு அந்நோய் எலிகள் மற்றும் தெள்ளுப்பூச்சிகள் வாயிலாக ஆசியா,

ஐரோப்பா, மற்றும் வட ஆப்பிரிக்கா நெடுகிலும் மிக வேகமாகப் பரவியது. வெறும் இருபது ஆண்டுகளுக்குள் அது அட்லாண்டிக் கடற்கரைகளை வந்தடைந்தது. 7.5-20 கோடி மக்கள் மடிந்தனர். இது யுரேசியாவின் மக்கட்தொகையில் கால்வாசிக்கும் அதிகம். இங்கிலாந்தில் பத்தில் நான்கு பேர் இறந்தனர். அந்த நோய் தாக்குவதற்கு முன்பாக 37 லட்சமாக இருந்த அதன் மக்கட்தொகை, அந்நோய் தாக்கிய பிறகு 22 லட்சமாகக் குறைந்தது. ஃபுளோரென்ஸ் நகரம் தன்னுடைய 1 லட்சம் குடிமக்களில் 50,000 நபர்களை இழந்தது.



படம் **2:** **'**கருப்புச் சாவு**'** என்பது மனிதப் புரிதலுக்கும் கட்டுப்பாட்டிற்கும் அப்பாற்பட்ட ஒரு கொடூரமான அழிவாற்றல் என்றே இடைக்கால மக்கள் சித்தரித்தனர்**.**

இந்தப் பேரிடரின்முன் அதிகாரிகள் முற்றிலும் செயலற்றுப் போயினர். கூட்டுப் பிரார்த்தனைகளையும் ஊர்வலங்களையும் ஏற்பாடு செய்வதைத் தவிர, அந்தக் கொடூரமான நோய் பரவுவதைத் தடுத்து நிறுத்த வழியறியாமல் அவர்கள் திகைத்து நின்றனர். நவீன காலகட்டம்வரை, மோசமான காற்றும், கெடுநோக்குக் கொண்ட அரக்கர்களும், கோபக்காரக் கடவுளரும்தான் நோய்களுக்குக் காரணம் என்று கருதி மக்கள் அவர்கள்மீது பழி சுமத்தினர். ஆனால், நுண்ணியிரிகள் மற்றும் நச்சுயிரிகள் இருப்பதை அவர்கள் ஒருபோதும் அறியவில்லை. தேவதைகள் என்ற ஒன்று இருந்ததாக நம்புவதற்கு மக்கள் தயாராக இருந்தனர், ஆனால் ஒரு சிறு தெள்ளுப்பூச்சியோ அல்லது ஒரு துளி நீரோ, சாதாரணக் கண்களுக்குப் புலப்படாத மிகவும் பயங்கரமான கொன்றுண்ணிகளின் ஓர் ஒட்டுமொத்தப் படையை

உள்ளடக்கியிருக்கக்கூடும் என்பதை அவர்களால் கற்பனை செய்ய முடியவில்லை.



படம் **3:** எர்சினியா பெஸ்டிஸ் என்ற மிக நுண்ணிய பற்றுயிரிதான் உண்மையான குற்றவாளி**.**

கருப்புச் சாவு ஒரு தனி நிகழ்வும் அல்ல, வரலாற்றிலேயே மிக மோசமான கொள்ளைநோயும் அல்ல. அதைவிட அதிக மோசமான பேரிடர்கள் அமெரிக்காவையும் ஆஸ்திரேலியாவையும் பசிபிக் தீவுகளையும் தாக்கின. ஐரோப்பியர்கள் முதன்முதலாக அங்கு அடியெடுத்து வைத்தபோது அந்தச் சீரழிவு தொடங்கியது. அந்த இடங்களுக்கு வந்த ஐரோப்பிய ஆய்வாளர்களும், ஐரோப்பாவிலிருந்து அங்கு குடியேற வந்தவர்களும் தங்களுக்கே தெரியாமல் புதிய கொள்ளைநோய்களைத் தங்களுடன் கொண்டுவந்தனர். ஆனால் உள்ளூர்வாசிகளுக்கு இந்த நோய்களை எதிர்ப்பதற்கான சக்தி இருக்கவில்லை. அதன் விளைவாக, உள்ளூர் மக்களில் 90 சதவீதத்தினர் மரணமடைந்தனர்.

1520ம் ஆண்டு மார்ச் 5ம் நாளன்று, ஒரு சிறிய ஸ்பானியக் கப்பற்படை கியூபா தீவிலிருந்து புறப்பட்டு மெக்சிகோவை நோக்கிப் பயணித்தது. அந்தக் கப்பல்களில் 900 ஸ்பானிய வீரர்களும், குதிரைகளும், ஆயுதங்களும், ஒருசில ஆப்பிரிக்க அடிமைகளும் இருந்தனர். அந்த அடிமைகளில் ஒருவரான ஃபிரான்சிஸ்கோ த எக்வியா என்பவர் மிக பயங்கரமான ஒரு சரக்குப் பொருளைத் தன் உடலில் சுமந்து வந்திருந்தார். அதை அவர் அறிந்திருக்கவில்லை, ஆனால் எந்நேரத்திலும் வெடித்துவிடக்கூடிய ஆபத்து நிறைந்த

உயிரியல் வெடிகுண்டு ஒன்று அவருடைய உடலிலிருந்த கோடிக்கணக்கான உயிரணுக்களுக்கு இடையே ஒளிந்திருந்தது. பெரியம்மை நச்சுயிரிதான் அது. பிரான்சிஸ்கோ மெக்சிகோவில் தரையிறங்கியவுடன் அவருடைய உடலில் அந்த நச்சுயிரி பன்மடங்கு இனப்பெருக்கம் அடையத் தொடங்கியது. இறுதியில் அது அவருடைய தோல் முழுவதிலும் பயங்கரமான தடிப்புகளாக வெளிப்பட்டது. செம்போலா நகரில் ஓர் அமெரிக்கப் பழங்குடியினக் குடும்பத்தினருடைய வீட்டில் ஒரு படுக்கையில் பிரான்சிஸ்கோ படுக்க வைக்கப்பட்டார். அவர் அந்தக் குடும்ப உறுப்பினர்கள் அனைவரிடமும் அந்த நோயைப் பரப்பினார். அவர்களிடமிருந்து அவர்களுடைய அண்டைவீட்டார் அனைவருக்கும் அந்நோய் பரவியது. பத்து நாட்களுக்குள் செம்போலா நகரம் ஓர் இடுகாடாக மாறியது. புகலிடம் தேடி வந்தவர்கள் செம்போலா நகரிலிருந்து பக்கத்து நகரங்களில் அந்நோயைப் பரப்பினர். அடுத்தடுத்து ஒவ்வொரு நகரமாக அந்நோய்க்கு பலியாகியது. வெலவெலத்துப் போய் ஓடிய அகதிகள் அந்த நோயை மெக்சிகோ நெடுகிலும் சுமந்து சென்று பரப்பினர், மெக்சிகோவுக்கு அப்பாலும் அவர்கள் அதைக் கொண்டு சென்றனர்.

எக்பெட்ஸ், உசான்கக், சோயாகக் ஆகிய மூன்று தீய கடவுளர்தான் இரவில் ஒவ்வொரு கிராமமாகச் சென்று பெரியம்மை நோயை எல்லோரிடத்திலும் பரப்பிக் கொண்டிருந்ததாக யுகடான் தீபகற்பத்தில் வாழ்ந்த மாயன்கள் நம்பினர். ஆஸ்டெக் பழங்குடியினர் தங்களுடைய கடவுளரான டெஸ்காட்லிபோகாவின்மீதும் சிபெட்டோடெக்மீதும் பழி சுமத்தினர். அவர்களில் சிலர், வெள்ளைக்காரர்களுடைய தீய மாந்திரீகம்தான் அந்நோய் பரவியதற்குக் காரணம் என்று உறுதியாக நம்பினர். மக்கள் இந்நோய் குறித்துப் பூசாரிகளிடமும் மருத்துவர்களிடமும் ஆலோசனை நாடிச் சென்றனர். பிரார்த்தனை செய்யுமாறும், குளிர்ந்த நீரில் குளிக்குமாறும், உடலைத் தாரால் தேய்த்துக் குளிக்குமாறும், கருவண்டுகளைச் சிதைத்து அவற்றை அந்தப் புண்கள்மீது பூசும்படியும் அவர்களுக்குப் பரிந்துரைக்கப்பட்டது. ஆனால் இவை எதுவும் பலனளிக்கவில்லை. ஆயிரக்கணக்கான சடலங்கள் அழுகியபடி வீதிகளில் கிடந்தன. அவற்றின் அருகே செல்லவோ அல்லது அவற்றைப் புதைக்கவோ யாரும் துணியவில்லை. ஒட்டுமொத்தக் குடும்பங்களும் ஒருசில நாட்களில் அழிந்தன. அவர்களுடைய வீடுகள் அவர்களுடைய உடல்கள்மீது இடித்துத் தள்ளப்பட வேண்டும் என்று அதிகாரிகள் உத்தரவிட்டனர். சில குடியிருப்புகளில் ஐம்பது சதவீத மக்கள் இறந்தனர்.

1520ம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில், பெரியம்மை நோய் மெக்சிகோ

பள்ளத்தாக்கைச் சென்றடைந்திருந்தது. அக்டோபரில் அது ஆஸ்டெக் தலைநகரான டெனோச்டிட்லான் நகருக்குள் நுழைந்தது. இரண்டரை லட்சம் மக்களைக் கொண்டிருந்த ஒரு பிரம்மாண்டமான நகரம் அது. இரண்டு மாதங்களுக்குள், ஆஸ்டெக் பேரரசரான குவிட்லாவாக் உட்பட, அந்நகரின் மூன்றில் ஒரு பங்கு மக்கள் இறந்தனர். 1520ம் ஆண்டு மார்ச் மாதத்தில் அந்த ஸ்பானியக் கப்பல்கள் மெக்சிகோவுக்கு வந்து சேர்ந்தபோது, மெக்சிகோவில் 2.2 கோடி மக்கள் இருந்தனர், ஆனால் டிசம்பர் மாதத்தில் வெறும் 1.4 கோடி மக்கள் மட்டுமே எஞ்சியிருந்தனர். பெரியம்மை நோய் வெறும் தொடக்கம் மட்டுமே. புதிய ஸ்பானியப் பெருமுதலாளிகள் உள்ளூர்வாசிகளிடம் சுரண்டித் தங்களை வளப்படுத்திக் கொள்ளுவதில் மும்முரமாக இருந்தபோது, சளிக்காய்ச்சல், தட்டம்மை, மற்றும் பிற பயங்கரமான கொள்ளைநோய்கள் அடுத்தடுத்து ஒவ்வொன்றாக மெக்சிகோவைத் தாக்கின. இதன் விளைவாக, 1580ல் அதன் மக்கட்தொகை வெறும் 20 லட்சமாகக் குறைந்துவிட்டது.

இரண்டு நூற்றாண்டுகளுக்குப் பிறகு, 1778ம் ஆண்டு ஜனவரி 18ம் நாளன்று, ஆங்கிலேய ஆய்வாளரான கேப்டன் ஜேம்ஸ் குக் ஹவாய் தீவுகளுக்கு வந்து சேர்ந்தார். அடர்த்தியான மக்கட்தொகையைக் கொண்ட அத்தீவுகளில் சுமார் ஐந்து லட்சம் மக்கள் வாழ்ந்தனர். அவர்கள் ஐரோப்பாவிலிருந்தும் அமெரிக்காவிலிருந்தும் முற்றிலும் தனித்து வாழ்ந்தனர். எனவே, ஐரோப்பிய மற்றும் அமெரிக்க நோய்களுக்கு அவர்கள் ஒருபோதும் ஆளாகியிருக்கவில்லை. ஜேம்ஸ் குக்கும் அவருடைய ஆட்களும்தான் முதல் சளிக்காய்ச்சல் நோய்க்கிருமியையும் காசநோய் நோய்க்கிருமியையும் சிபிலிஸ் நோய்க்கிருமியையும் ஹவாய் தீவுகளுக்கு அறிமுகப்படுத்தினர். அவர்களுக்குப் பிறகு வந்த ஐரோப்பியர்கள் டைஃபாய்டு காய்ச்சலையும் தட்டம்மை நோயையும் உடனழைத்து வந்தனர். 1853ம் ஆண்டுவாக்கில், ஹவாய் தீவுகளில் வெறும் 70,000 மக்கள் மட்டுமே பிழைத்திருந்தனர்.

இருபதாம் நூற்றாண்டு தொடங்கிய பிறகும்கூட அந்தக் கொள்ளைநோய்கள் தொடர்ந்து லட்சக்கணக்கான மக்களைக் கொன்று கொண்டிருந்தன. முதலாம் உலகப் போரின்போது, 1918ம் ஆண்டு ஜனவரி மாதத்தில், பிரான்ஸ் நாட்டின் வடக்குப் பகுதியில் பதுங்குக் குழிகளில் மறைந்திருந்த போர்வீரர்கள், ‘ஸ்பானியக் காய்ச்சல்’ என்று அழைக்கப்பட்ட, வீரியம் மிக்க ஒரு கொள்ளைநோயால் ஆயிரக்கணக்கில் மடிந்தனர். பிரிட்டன், அமெரிக்கா, இந்தியா, ஆஸ்திரேலியா ஆகிய இடங்களிலிருந்து ஆயுதங்களும் வீரர்களும்

வந்து குவிந்து கொண்டிருந்தனர். மத்தியக் கிழக்கு நாடுகளிலிருந்து எண்ணெய் அனுப்பி வைக்கப்பட்டது, அர்ஜென்டினாவிலிருந்து தானியங்களும் மாட்டிறைச்சியும் வந்தன, மலயாவிலிருந்து ரப்பர் வந்தது, காங்கோவிலிருந்து தாமிரம் வந்தது. அதற்கு பதிலீடாக, அவர்கள் எல்லோருக்கும் ஸ்பானியக் காய்ச்சல் பரிசாகக் கிடைத்தது. போர் முடிந்து வீரர்கள் தத்தம் நாடுகளுக்குத் திரும்பிச் சென்றபோது, சுமார் 50 கோடி மக்கள் (உலக மக்கட்தொகையில் மூன்றில் ஒரு பகுதியினர்) அந்த நச்சுயிரியால் பாதிக்கப்பட்டனர். இந்தியாவில் ஐந்து சதவீத மக்கள் (1.5 கோடி) அந்நோயால் இறந்தனர். தகித்தி தீவில் 14 சதவீத மக்களும், சமோவா தீவில் 20 சதவீத மக்களும் இறந்தனர். காங்கோ நாட்டின் தாமிரச் சுரங்கங்களில் ஐந்தில் ஒரு தொழிலாளி இறந்தார். மொத்தத்தில் அந்தக் கொள்ளைநோய் ஓராண்டுக்குள் 5-10 கோடி மக்களைக் காவு வாங்கியது. ஆனால் 1914க்கும் 1918க்கும் இடையே நடைபெற்ற முதலாம் உலகப் போரில் கொல்லப்பட்டோரின் எண்ணிக்கை 4 கோடி மட்டுமே.

ஒருசில ஆண்டுகளுக்கு ஒருமுறை மனிதகுலத்தைத் தாக்கிய அப்படிப்பட்டக் கொள்ளைநோய்களோடு கூடவே, வேறு சிறிய கொள்ளைநோய்களும் மக்களைத் தொடர்ந்து தாக்கிக் கொண்டே இருந்தன. அவை ஒவ்வோர் ஆண்டும் பல லட்சக்கணக்கான மக்களைக் கொன்றன. குறிப்பாக, நோயெதிர்ப்பு சக்தி இல்லாத குழந்தைகள் அவற்றுக்கு பலியாயினர். எனவே, அவை ‘குழந்தைப்பருவ நோய்கள்’ என்று அழைக்கப்பட்டன. இருபதாம் நூற்றாண்டின் துவக்ககாலம்வரை, ஊட்டச்சத்துக் குறைவு மற்றும் பல நோய்களால் மூன்றில் ஒரு பங்கு குழந்தைகள் முதிர்பருவத்தை அடையும் முன்பாகவே இறந்தனர்.

கடந்த நூற்றாண்டின்போது, மனிதகுலம் கொள்ளைநோய்களால் எளிதில் தாக்கப்படக்கூடிய ஒரு நிலையில் இருந்தது. தொடர்ந்து அதிகரித்துக் கொண்டிருந்த மக்கட்தொகையும் சிறப்பான போக்குவரத்து வசதிகளும்தான் அதற்குக் காரணம். இடைக்கால ஃபுளோரென்ஸ் நகரைவிடவும் 1520ம் ஆண்டுகாலத்திய டெனோச்டிட்லான் நகரைவிடவும் டோக்கியோ அல்லது கின்ஷாஸா போன்ற ஒரு நவீனப் பெருநகரத்தில் கொள்ளைநோய்கள் வேகமாகப் பரவுவதற்குத் தேவையான அனைத்து அம்சங்களும் இன்று இருக்கின்றன. ஒரு ஸ்பானிய நச்சுயிரியால் இருபத்து நான்கு மணிநேரத்திற்குள் காங்கோவை அல்லது தகித்தி தீவைச் சென்றடைந்துவிட முடியும். எனவே, அடுத்தடுத்து ஒவ்வொரு கொள்ளைநோயாகத் தாக்குகின்ற ஒரு கொள்ளைநோய் நரகத்தில் நாம்

வாழ்ந்து கொண்டிருப்போம் என்றுதான் நாம் எதிர்பார்த்திருக்க வேண்டும்.

ஆனால், கடந்த சில ஆண்டுகளில் அந்நோய்களின் நிகழ்வும் தாக்கமும் குறிப்பிடத்தக்க அளவு குறைந்துள்ளன. குறிப்பாக, உலக அளவில் குழந்தைகளின் இறப்பு விகிதம் முன்பு எப்போதையும்விட இப்போது மிகமிகக் குறைவாக உள்ளது. 5 சதவீதக் குழந்தைகள் மட்டுமே முதிர்பருவத்தை எட்டுவதற்கு முன்பாக இறக்கின்றனர். வளர்ந்த நாடுகளில் அது 1 சதவீதத்திற்கும் குறைவாகவே உள்ளது. இந்த அதிசயத்திற்குக் காரணம் இருபத்தோராம் நூற்றாண்டின் நவீன மருத்துவச் சாதனைகள்தான். நோய்த்தடுப்பு மருந்தேற்றம், நுண்ணுயிர்க்கொல்லிகள், மேம்பட்ட சுகாதாரம், அதிகச் சிறப்பான மருத்துவ வசதிகள் போன்றவற்றை நவீன மருத்துவம் நமக்கு வழங்கியுள்ளது.

எடுத்துக்காட்டாக, பெரியம்மை நோய்த்தடுப்பு மருந்தேற்றம் பற்றி உலக அளவில் மேற்கொள்ளப்பட்ட ஒரு பிரச்சாரம் மாபெரும் வெற்றி பெற்றதைத் தொடர்ந்து, மனிதகுலம் வெற்றி பெற்றுவிட்டிருந்ததாகவும் பெரியம்மை நோய் முற்றிலுமாக ஒழிக்கப்பட்டிருந்ததாகவும் 1979ல் உலக சுகாதார அமைப்பு அறிவித்தது. மனிதர்களால் இவ்வுலகிலிருந்து முற்றிலுமாக ஒழிக்கப்பட்ட முதல் கொள்ளைநோய் அதுதான். 1967ல் அந்நோய் 1.5 கோடி மக்களைத் தாக்கி, அவர்களில் 20 லட்சம் மக்களை பலி வாங்கியது. ஆனால் 2014ல் ஒருவர்கூட அந்நோயால் தாக்கப்படவும் இல்லை, கொல்லப்படவும் இல்லை. இன்று மக்களுக்குப் பெரியம்மை நோய்த்தடுப்பு மருந்தேற்றம் செய்வதை உலக சுகாதார அமைப்பு நிறுத்தும் அளவுக்கு அந்நோய்க்கு எதிரான வெற்றி முழுமையானதாக இருந்தது.

ஒருசில ஆண்டுகளுக்கு ஒருமுறை ஏதேனும் ஒரு புதிய கொள்ளைநோய் பரவி நம்மை அச்சுறுத்துகிறது. எடுத்துக்காட்டாக, 2002-2003ல் தாக்கிய சார்ஸ் நோய், 2005ல் தாக்கிய பறவைக் காய்ச்சல், 2009-2010ல் தாக்கிய பன்றிக் காய்ச்சல், 2014ல் தாக்கிய எபோலா போன்றவற்றைக் கூறலாம். ஆனால், இவற்றை முறியடிப்பதற்கு மேற்கொள்ளப்பட்ட ஆற்றல்மிக்க முயற்சிகளின் காரணமாக, இவற்றால் இறந்தவர்களுடைய எண்ணிக்கை கணிசமாகக் குறைந்து வந்துள்ளது. எடுத்துக்காட்டாக, சார்ஸ் நோய் தோன்றியபோது, அது ஒரு புதிய ‘கருப்புச் சாவு’ என்ற பயம் மக்களிடையே பரவியது. ஆனால் இறுதியில், உலக அளவில் ஆயிரத்திற்கும் குறைவான மக்களே அந்நோயால் இறந்தனர். மேற்கு ஆப்பிரிக்காவில் தோன்றிய எபோலா கொள்ளைநோய் முதலில்

நம்முடைய கையை மீறிப் போயிருந்ததுபோலத் தோன்றியது. 2014ம் ஆண்டு செப்டமபர் 26ம் நாளன்று, “நவீன காலத்தில் உலகம் எதிர்கொண்டுள்ள, ஆரோக்கியம் தொடர்பான ஒரு தீவிரமான நெருக்கடி இது,” என்று உலக சுகாதார அமைப்பு அறிவித்தது. ஆனாலும், 2015ம் ஆண்டின் துவக்கத்திலேயே அந்நோய் கட்டுப்படுத்தப்பட்டிருந்தது. 2016ம் ஆண்டு ஜனவரியில், அது முற்றிலும் ஒழிக்கப்பட்டிருந்ததாக உலக சுகாதார அமைப்பு அறிவித்தது. அந்நோய் 30,000 மக்களைத் தாக்கி, அவர்களில் 11,000 பேரைக் கொன்றது, மேற்கு ஆப்பிரிக்கா நெடுகிலும் மாபெரும் பொருளாதாரச் சேதத்தை ஏற்படுத்தியது, உலகம் நெடுகிலும் அதிர்ச்சியையும் கவலையையும் உருவாக்கியது. ஆனால், மேற்கு ஆப்பிரிக்காவைத் தாண்டி அது வேறு எங்கும் பரவவில்லை. ஸ்பானியக் காய்ச்சலோ அல்லது மெக்சிகோவின் தட்டம்மைத் கொள்ளைநோயோ விளைவித்த மரணங்களின் எண்ணிக்கையோடு ஒப்பிடுகையில் இந்நோயால் இறந்தவர்களின் எண்ணிக்கை மிகமிகக் குறைவே.

கடந்த சில ஆண்டுகளில் மருத்துவ உலகம் எதிர்கொண்ட மாபெரும் தோல்வியாகக் கருதப்படுகின்ற எய்ட்ஸ் அவலத்தைக்கூட முன்னேற்றத்திற்கான ஓர் அறிகுறியாக நாம் பார்க்கலாம். 1980களின் துவக்கத்தில் அது முதன்முதலாக மிகப் பெரிய அளவில் வெடித்த நேரத்திலிருந்து 3 கோடிக்கும் அதிகமான மக்கள் அந்நோயால் இறந்துள்ளனர். இன்னும் பல லட்சக்கணக்கானோர் அந்நோயால் உடல்ரீதியாகவும் உளவியல்ரீதியாகவும் பாதிக்கப்பட்டுப் பெரும் துன்பத்தை அனுபவித்துள்ளனர். அந்நோய் வெளிப்படையானதாக அல்லாத தனித்துவமான ஒரு நோயாக இருப்பதால், அதைப் பற்றிப் புரிந்து கொள்ளுவதும் அதற்குச் சிகிச்சை அளிப்பதும் கடினமாக இருந்தது. தட்டம்மை நச்சுக்கிருமியால் தாக்கப்பட்ட ஒருவர் ஒருசில நாட்களுக்குள் இறந்துவிடுகிறார், ஆனால் எய்ட்ஸ் நோயால் பாதிக்கப்பட்ட ஒருவர் வாரக்கணக்கிலோ அல்லது மாதக்கணக்கிலோ கச்சிதமான ஆரோக்கியத்துடன் இருக்கிறார். அதே நேரத்தில், அவர் தனக்கே தெரியாமல் மற்றவர்களுக்கு அந்நோயைப் பரப்புகிறார். எய்ட்ஸ் நச்சுக்கிருமி தானாக ஒருவரைக் கொல்லுவதில்லை. மாறாக, அது அவருடைய உடலின் நோயெதிர்ப்பு அமைப்புமுறையைத் தாக்கி அழிக்கிறது. இதனால், பல்வேறு நோய்கள் தாக்கக்கூடிய சாத்தியமுள்ள ஒரு நிலைக்கு அவர் ஆளாகிறார். இந்த நோய்கள்தான் எய்ட்ஸ் நோயாளிகளை உண்மையிலேயே கொல்லுகின்றன. இதன் காரணமாகத்தான், எய்ட்ஸ் நோய் பரவத் தொடங்கியபோது என்ன

நிகழ்ந்து கொண்டிருந்தது என்பதை யாராலும் புரிந்து கொள்ள முடியவில்லை. 1981ல் இரண்டு நோயாளிகள் நியூயார்க் நகரில் உள்ள ஒரு மருத்துவமனையில் சேர்க்கப்பட்டபோது, ஒருவர் நுரையீரல் அழற்சியால் இறந்து கொண்டிருந்தார், மற்றவர் புற்றுநோயால் இறந்து கொண்டிருந்தார். ஆனால் இருவரும் எய்ட்ஸ் நச்சுக்கிருமியால் பாதிக்கப்பட்டு இருந்தனர் என்ற உண்மை வெளிப்படையாகத் தெரியவில்லை. இந்த நச்சுக்கிருமி அவர்கள் இருவரையும் சில மாதங்களுக்கு முன்போ அல்லது சில ஆண்டுகளுக்கு முன்போ தாக்கியிருந்திருக்கக்கூடும்.

ஆனால், இச்சிரமங்கள் எல்லாம் இருந்தும்கூட, இப்புதிய கொள்ளைநோயைப் பற்றிய விழிப்புணர்வு மருத்துவச் சமுதாயத்திற்கு ஏற்பட்டவுடன், அறிவியலறிஞர்கள் இரண்டு ஆண்டுகளுக்குள் அந்த நச்சுக்கிருமியைக் கண்டுபிடித்து, அது எப்படிப் பரவியது என்பதை புரிந்து கொண்டு, அந்நோய் பரவும் வேகத்தைக் குறைப்பதற்கு உதவக்கூடிய ஆற்றல்மிக்க வழிகளைப் பரிந்துரைத்தனர். அடுத்தப் பத்தாண்டுகளில் கண்டுபிடிக்கப்பட்டப் புதிய மருந்துகள், எய்ட்ஸ் நோய் என்பது மனிதனுக்கு விதிக்கப்பட்ட ஒரு மரண தண்டனை என்ற நிலையை மாற்றி, அது மற்றுமொரு தீவிரமான நோய் என்ற நிலையை உருவாக்கின. செல்வந்தர்களுக்கு இச்சிகிச்சை மிகவும் உதவியது. எய்ட்ஸ் நோய் 1981ல் முளைத்ததற்கு பதிலாக 1581ல் முளைத்திருந்தால் என்ன ஆகியிருக்கும் என்று நினைத்துப் பாருங்கள். அக்காலகட்டத்தில், எது அந்தக் கொள்ளைநோயை உருவாக்கியது என்பதையும், அது எப்படி ஒருவரிடமிருந்து இன்னொருவரிடம் பரவியது என்பதையும், அதை எப்படித் தடுத்து நிறுத்துவது என்பதையும் யாரும் கண்டுபிடித்திருக்க மாட்டார்கள். அத்தகைய ஒரு சூழ்நிலையில், அந்நோய் மனித இனத்தின் பெரும்பகுதியைக் கொன்றிருக்கக்கூடும். கருப்புச் சாவினால் மரணமடைந்தவர்களின் எண்ணிக்கையைவிட எய்ட்ஸால் மரணமடைந்தவர்களின் எண்ணிக்கை மிக அதிகமானதாக இருந்திருக்கும்.

எய்ட்ஸ் நோயால் ஏற்பட்டக் கொடூரமான விளைவு ஒரு புறமும், நீண்டகாலமாக இருந்து வந்துள்ள மலேரியா போன்ற கொள்ளைநோய்கள் ஒவ்வோர் ஆண்டும் லட்சக்கணக்கான மக்களைக் கொல்லுவது இன்னொரு புறமும் இருந்தாலும்கூட, முந்தைய இரண்டாயிரம் ஆண்டுகளில் இருந்ததைவிட இன்று கொள்ளைநோய்கள் மனித ஆரோக்கியத்திற்கு மிகமிகச் சிறிய அச்சுறுத்தலாகவே இருக்கின்றன. பெரும்பாலான மக்கள், புற்றுநோய், இதய நோய் போன்ற, தொற்றுநோய் அல்லாத நோய்களினாலோ

அல்லது முதுமையினாலோதான் இறக்கின்றனர். (புற்றுநோயும் இதய நோயும் புதிய நோய்கள் அல்ல. அவை பண்டைய காலத்திலிருந்தே இருந்து வந்துள்ளன. ஆனால், முந்தைய யுகங்களில், பொதுவாக மக்களுடைய ஆயுட்காலம் மிகவும் குறைவாக இருந்ததால், அந்நோய்களால் இறந்தவர்களின் எண்ணிக்கையும் குறிப்பிடத்தக்க அளவு இருக்கவில்லை.)

இது ஒரு தற்காலிகமான வெற்றிதான் என்றும், கருப்புச் சாவோடு தொடர்புடைய வேறு ஏதோ ஒரு கொள்ளைநோய் எந்நேரத்திலும் ஏற்படும் என்றும் பலர் அஞ்சுகின்றனர். கொள்ளைநோய்கள் மீண்டும் ஒருபோதும் வர வாய்ப்பில்லை என்று யாராலும் உத்தரவாதம் கொடுக்க முடியாதுதான், ஆனால் மருத்துவர்களுக்கும் நோய்க்கிருமிகளுக்கும் இடையேயான ஓட்டப் பந்தயத்தில் மருத்துவர்கள் அதிக வேகமாக ஓடுகின்றனர் என்று சிந்திப்பதற்கு நியாயமான காரணங்கள் இருக்கின்றன. பெரும்பாலும், நோய்க்கிருமிகளின் மரபணுத் தொகுதிகளில் ஏற்படுகின்ற தற்செயலான மரபுச்சிதைவு மாற்றங்களின் விளைவாகவே புதிய கொள்ளைநோய்கள் தோன்றுகின்றன. இந்த மரபுச்சிதைவு மாற்றங்கள், அந்த நோய்க்கிருமிகள் விலங்குகளிடமிருந்து மனிதர்களிடம் தாவுவதற்கும், மனிதர்களுடைய நோயெதிர்ப்பு அமைப்புமுறையின் தாக்குதலுக்கு உட்படாமல் அதனிடமிருந்து தப்பிப்பதற்கும், நுண்ணுயிர்க்கொல்லிகள் போன்ற மருந்துகளை எதிர்த்துத் தாக்குப்பிடிப்பதற்கும் அவற்றுக்கு சக்தியைக் கொடுக்கின்றன. அப்படிப்பட்ட மரபுச்சிதைவு மாற்றங்கள் கடந்தகாலத்தைவிட இன்று மிக அதிக வேகமாக நிகழுவதோடு வேகமாகவும் பரவுகின்றன. சுற்றுச்சூழல்கள்மீது மனிதர்கள் ஏற்படுத்தியுள்ள தாக்கத்தின் விளைவுதான் அதற்குக் காரணம். ஆனாலும், மருத்துவத்திற்கு எதிரான ஓட்டப் பந்தயத்தில், இறுதியில் நோய்க்கிருமிகளுக்குக் குருட்டுத்தனமான அதிர்ஷ்டம் மட்டுமே கைகொடுக்கும்.

ஆனால் இதற்கு நேர்மாறாக, மருத்துவர்கள் அதிர்ஷ்டத்தை மட்டுமே சார்ந்திருப்பதில்லை. எதிர்பாராத கண்டுபிடிப்புகளுக்கு அறிவியல் மிகவும் கடமைப்பட்டுள்ளது என்றாலும், மருத்துவர்கள் வெறுமனே பல்வேறு வேதிப்பொருட்களைச் சோதனைக் குழாய்களுக்குள் வீசிவிட்டு, அவற்றிலிருந்து ஏதேனும் புதிய மருந்து கிடைக்கும் என்று நம்பிக் கொண்டிருப்பதில்லை. ஆண்டுகள் செல்லச் செல்ல, மருத்துவர்கள் அதிகமான மற்றும் சிறப்பான அறிவைச் சேகரிக்கின்றனர். அந்த அறிவைப் பயன்படுத்தி, அதிக ஆற்றல்மிக்க மருந்துகளையும் சிகிச்சைகளையும் அவர்கள் உருவாக்குகின்றனர்.

அதன் விளைவாக, 2050ல் அதிக எதிர்ப்புத் திறன் கொண்ட கிருமிகளை நாம் எதிர்கொள்ள நேரிடும் என்றாலும், இன்றைவிட 2050ல் மருத்துவத்தால் அவற்றை அதிகச் சிறப்பாகக் கையாள முடியும்.

2015ல், டிக்சோபேக்டின் என்ற முற்றிலும் புதிய வகையான நுண்ணுயிர்க்கொல்லி ஒன்று கண்டுபிடிக்கப்பட்டிருந்ததாக மருத்துவர்கள் அறிவித்தனர். இந்த மருந்தை எதிர்த்துச் சமாளிக்கக்கூடிய திறன் பற்றுயிரிகளுக்கு இப்போது இல்லை. மிக அதிக எதிர்ப்பு சக்தி கொண்ட கிருமிகளுக்கு எதிரான சண்டையில் இந்த மருந்து ஒரு மிகப் பெரிய மாற்றத்தை உருவாக்கக்கூடிய காரணியாக விளங்கக்கூடும் என்று சில அறிஞர்கள் நம்புகின்றனர். முந்தைய மருந்துகளிலிருந்து முற்றிலும் வித்தியாசமான வழிகளில் செயல்படுகின்ற புரட்சிகரமான புதிய சிகிச்சைகளையும் அறிவியலறிஞர்கள் உருவாக்கிக் கொண்டிருக்கின்றனர். எடுத்துக்காட்டாக, சில ஆய்வுக்கூடங்கள் நேனோரோபாட்டுகளை உருவாக்கிக் கொண்டிருக்கின்றன. எதிர்காலத்தில் ஒருநாள் இந்த நேனோரோபாட்டுகள் நம்முடைய ரத்த ஓட்டத்தின் வழியாகப் பயணித்து, நோய்களைக் கண்டுபிடித்து, நோய்க்கிருமிகளையும் புற்றுநோய் உயிரணுக்களையும் கொல்லும். இயற்கையான எதிரிகளை எதிர்த்துச் சண்டையிடுவதில் நுண்ணுயிரிகளுக்கு மொத்தம் 400 கோடி ஆண்டுகள் அனுபவம் இருக்கக்கூடும், ஆனால் உயிர்மின்னணுக் கொன்றுண்ணிகளை எதிர்த்துச் சண்டையிடுவதில் அவற்றுக்கு எந்த அனுபவமும் இல்லை. எனவே, இப்புதிய நுண்ணுயிர்க்கொல்லிக்கு எதிராகத் தம்மைத் தற்காத்துக் கொள்ளுவது அவற்றுக்கு இருமடங்கு கடினமாக இருக்கும்.

ஏதேனும் புதிய எபோலா நோயோ அல்லது நமக்குத் தெரியாத ஒரு காய்ச்சல் கிருமியோ இனி இவ்வுலகத்தில் பரவி லட்சக்கணக்கானோரைக் கொல்ல வாய்ப்பில்லை என்று நம்மால் உறுதியாகக் கூற முடியாவிட்டாலும்கூட, அது தவிர்க்கப்பட முடியாத ஓர் இயற்கைப் பேரழிவு என்று இனி நாம் கருத மாட்டோம். மாறாக, சாக்குப்போக்குக் கூறப்பட முடியாத ஒரு மனிதத் தோல்வியாகவே நாம் அதைப் பார்ப்போம். அந்தத் தோல்விக்குக் காரணமானவர்களுடைய தலைகளை நாம் காவு கேட்போம். 2014ம் ஆண்டின் கோடைக்காலத்தின் பிற்பகுதியில் எபோலா நுண்ணுயிரி நோயின் கை ஓங்கிக் கொண்டிருந்ததுபோலவும் உலக சுகாதார அதிகாரிகள் அந்நோய்க்கு முன்னால் எதுவும் செய்ய முடியாதவர்களாக இருந்ததுபோலவும் ஒரு சூழ்நிலை ஒருசில வாரங்கள் நிலவியபோது, அவசர அவசரமாக விசாரணைக் குழுக்கள் அமைக்கப்பட்டன.

எபோலா நோய் பரவிக் கொண்டிருந்த-தைத் தடுப்பதற்கு உலக சுகாதார அமைப்பு மேற்கொண்ட நடவடிக்கைகள் திருப்திகரமாக இல்லை என்று 2014ம் ஆண்டு அக்டோபர் மாதம் 18ம் நாளன்று வெளியான ஓர் அறிக்கை விமர்சித்ததோடு, அந்த அமைப்பின் ஆப்பிரிக்கக் கிளையில் நிலவிய ஊழலும் அதன் கையாலாகாத்தனமும்தான் அந்தக் கொள்ளைநோயின் பரவலுக்குக் காரணம் என்றும் அது குறை கூறியது. மேலும், சர்வதேசச் சமூகம் ஒன்றிணைந்து வேகமாகவும் போதிய அளவு தீர்க்கமாகவும் செயல்விடை அளிக்கவில்லை என்றும் அது விமர்சித்தது. இந்த விமர்சனங்களுக்குப் பின்னால் உள்ள அனுமானம் இதுதான்: ‘கொள்ளைநோய்களைத் தடுக்கக்கூடிய அறிவும் கருவிகளும் மனிதகுலத்திடம் இருக்கின்றன. ஆனாலும் ஒரு கொள்ளைநோய் எப்படியோ மனிதனின் கட்டுப்பாட்டை மீறிப் பரவினால், அது மனிதனுடைய கையாலாகாத்தனத்தின் விளைவே அன்றி, கடவுளுடைய கோபத்தின் விளைவு அல்ல.’ அதேபோல, எய்ட்ஸ் நோய்க்கிருமி செயல்படும் விதத்தை மருத்துவர்கள் நன்றாகப் புரிந்து கொண்ட பல வருடங்களுக்குப் பிறகும்கூட சகாரா பாலைவனத்திற்குத் தெற்கே உள்ள பகுதிகளில் அந்த நோய்க்கிருமிகள் தொடர்ந்து லட்சக்கணக்கானோரைத் தாக்கிக் கொன்று கொண்டிருந்தன என்ற உண்மை, அந்தச் சீரழிவு மனிதகுலம் ஒழுங்காகச் செயல்படத் தவறியதால் ஏற்பட்டதே அன்றி ஒரு கொடூரமான துரதிர்ஷ்டத்தின் விளைவு அல்ல என்பதைச் சுட்டிக்காட்டுகிறது.

எனவே, எய்ட்ஸ், எபோலா போன்ற இயற்கைப் பேரழிவுகளுக்கு எதிரான போராட்டத்தில், தராசு முள் மனிதகுலத்திற்குச் சாதகமாகச் சாய்ந்து கொண்டிருக்கிறது. ஆனால் மனித இயல்புக்குள் உறைந்திருக்கின்ற ஆபத்துக்களைப் பற்றி என்ன கூறுவது? பற்றுயிரிகளையும் நச்சுயிரிகளையும் தோற்கடிப்பதற்கு உயிர்தொழில்நுட்பம் நமக்கு உதவுகிறது, ஆனால் அதே சமயத்தில், மனிதர்களையே ஒரு மாபெரும் அச்சுறுத்தலாக அது மாற்றுகிறது. புதிய நோய்களை விரைவாகக் கண்டுபிடித்து அவற்றை குணப்படுத்துவதற்கு எந்தக் கருவிகள் உதவுகின்றனவோ, அதே கருவிகள், அதிகக் கொடூரமான நோய்களையும் இவ்வுலகை முற்றிலுமாக அழிக்கக்கூடிய நோய்க்கிருமிகளையும் வடிவமைத்து உருவாக்குவதற்கு ராணுவத்தினருக்கும் தீவிரவாதிகளுக்கும் உதவக்கூடும். எனவே, ஏதோ அரக்கத்தனமான சித்தாந்தம் ஒன்றுக்கு சேவை செய்வதாகக் கூறிக் கொண்டு மனிதகுலம் தானாக உருவாக்கினால் மட்டுமே எதிர்காலத்தில் மிகப் பெரிய கொள்ளைநோய்கள் ஏற்படுவதற்கு

வாய்ப்பு உள்ளது. இயற்கையான கொள்ளைநோய்களுக்கு முன்னால் மனிதகுலம் செயலற்று நின்ற காலம் மலையேறிவிட்டது.

# காட்டு விதியை மீறுதல்

போர்களும் மறைந்து கொண்டிருக்கின்றன என்பது மூன்றாவது நல்ல செய்தி. வரலாறு நெடுகிலும் பெரும்பாலான மக்கள் போர்களை சஜகமானவையாக ஏற்றுக் கொண்டிருந்தனர். ஆனால் அமைதி தற்காலிகமானதாகவும் எந்த நேரத்தில் வேண்டுமானாலும் சீர்குலைந்துவிடக்கூடிய ஆபத்து நிறைந்ததாகவுமே இருந்தது. சர்வதேச உறவுகள் 'வல்லவனே வாழ்வான்' என்ற காட்டு விதிக்குக் கட்டுப்பட்டு இருந்தன. அவ்விதியின்படி, இரண்டு அரசுகள் சமாதானமாக இருந்து வந்தாலும், போருக்கான வாய்ப்பு எப்போதும் இருந்தது. எடுத்துக்காட்டாக, 1913ல் ஜெர்மனியும் பிரான்ஸும் சமாதானமான உறவைக் கொண்டிருந்தபோதிலும், 1914ல் அவ்விரு நாடுகளுக்கும் இடையே ஒரு பெரிய சண்டை மூளக்கூடும் என்பதை எல்லோரும் அறிந்திருந்தனர். அரசியல்வாதிகள், படைத்தளபதிகள், தொழிலதிபர்கள், பொதுமக்கள் ஆகியோர் எதிர்காலத்திற்கான திட்டங்களை எப்போது வகுத்தாலும், அதில் போருக்கு எப்போதும் ஓர் இடத்தை அவர்கள் ஒதுக்குகின்றனர். தங்கள் அண்டை நாட்டுக்காரர்கள் தங்கள்மீது போர் தொடுத்துத் தங்களுடைய எல்லையை ஆக்கிரமித்து, தங்களுடைய ராணுவத்தைத் தோற்கடித்து, தங்களுடைய மக்களை வெட்டிக் கொன்று, இறுதியில் தங்கள் நிலத்தை ஆக்கிரமிக்கக்கூடும் என்பதைக் கற்காலத்தில் தொடங்கி நீராவிக் காலம்வரை, ஆர்க்டிக் பகுதியிலிருந்து சகாரா பாலைவனம்வரை, இப்புவியில் வாழ்ந்த ஒவ்வொருவரும் அறிந்திருந்தனர்.

இருபதாம் நூற்றாண்டின் இரண்டாம் பகுதியில் இந்தக் காட்டு விதி ரத்து செய்யப்படாவிட்டாலும்கூட, அது மீறப்பட்டுள்ளது. பெரும்பான்மையான பகுதிகளில் போர்கள் தொடர்ந்து அரிதாகிக் கொண்டே போயின. பண்டைய விவசாயச் சமுதாயங்களில் மனித வன்முறை சுமார் 15 சதவீத மரணத்தை விளைவித்தது. இருபதாம் நூற்றாண்டின்போது வன்முறையின் காரணமாக வெறும் 5 சதவீத மரணமே நிகழ்ந்தது. இருபத்தோராம் நூற்றாண்டின் துவக்ககாலத்தில் உலகில் 1 சதவீத மரணத்திற்கு மட்டுமே வன்முறை காரணமாக இருந்தது. 2012ல் உலகம் நெடுகிலும் 5.6 கோடி மக்கள் இறந்தனர்; அவர்களில் 6.2 லட்சம் மக்கள் மனித வன்முறையால் இறந்தனர் (போர் 1.2 லட்சம் மக்களைக் கொன்றது, குற்றங்கள் 5 லட்சம் மக்களைக்

கொன்றன). இதற்கு நேர்மாறாக, 8 லட்சம் மக்கள் தற்கொலை செய்து கொண்டனர், 15 லட்சம் மக்கள் நீரிழிவு நோயால் இறந்தனர். வெடிமருந்தைவிடச் சர்க்கரை இப்போது அதிக ஆபத்தானதாக இருக்கிறது.

அதைவிட முக்கியமாக, போர் என்பது நினைத்துப் பார்க்கப்பட முடியாத ஒன்று என்ற ஒரு மனநிலை மனிதர்களிடையே அதிகரித்து வருகிறது. வரலாற்றில் முதன்முறையாக, அரசாங்கங்கள், பெருநிறுவனங்கள், தனிநபர்கள் ஆகியோர் தங்களுடைய உடனடி எதிர்காலத்தைத் திட்டமிடும்போது, போர் நிகழுவதற்கான ஒரு சாத்தியம் இருக்கிறது என்ற நினைப்பு அவர்களில் பலருக்கு இருப்பதில்லை. உலக வல்லரசுகளுக்கு இடையேயான போரை அணுவாயுதங்கள் ஒரு முட்டாள்தனமான கூட்டுத் தற்கொலை நடவடிக்கையாக ஆக்கியுள்ளன. எனவே, உலகின் மிகவும் சக்திவாய்ந்த நாடுகள் தமக்கு இடையேயான சச்சரவுகளைத் தீர்த்துக் கொள்ளுவதற்கு மாற்று வழிகளையும் அமைதியான வழிகளையும் தேடுவதற்கான ஒரு கட்டாயத்தை அணுவாயுதங்கள் உருவாக்கியுள்ளன. அதேபோல, உலகளாவிய பொருளாதாரம், பொருட்களை அடிப்படையாகக் கொண்ட ஒரு பொருளாதாரமாக இருந்த ஒரு நிலையிலிருந்து மாறி, அறிவை அடிப்படையாகக் கொண்ட ஒரு பொருளாதாரமாக ஆகியுள்ளது. தங்கச் சுரங்கங்கள், கோதுமை வயல்கள், எண்ணெய்க் கிணறுகள் ஆகிய பௌதிகச் சொத்துக்கள்தான் செல்வத்திற்கான முக்கிய மூலாதாரங்களாக முன்பு இருந்தன. ஆனால் இன்று அறிவுதான் செல்வத்திற்கான முக்கிய மூலாதாரமாகத் திகழுகிறது. போரின் வாயிலாக எண்ணெய்க் கிணறுகளை உங்களால் கைப்பற்றிவிட முடியும், ஆனால் அறிவை அவ்வழியில் உங்களால் கைவசப்படுத்த முடியாது. எனவே, அறிவு மிக முக்கியமான பொருளாதார மூலாதாரமாக ஆனதால், போரினால் ஏற்படக்கூடிய லாபங்கள் கணிசமாகக் குறைந்தன. பழைய பாணியில் பொருட்களின் அடிப்படையில் அமைந்த பொருளாதாரங்கள் நிலவுகின்ற மத்தியக் கிழக்கு நாடுகள், மத்திய ஆப்பிரிக்க நாடுகள் போன்ற இடங்களில் மட்டுமே போர்கள் இன்னும் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன.

1998ல், தன் அண்டை நாடான காங்கோவின் செழிப்பான கோல்ட்டன் சுரங்கங்களைக் கைப்பற்றி அவற்றைக் கொள்ளையடிப்பது ருவாண்டா நாட்டிற்கு அர்த்தம் வாய்ந்ததாக இருந்தது. ஏனெனில், அந்தத் தாதுப்பொருள் அலைபேசிகள் மற்றும் மடிக்கணினிகளின் தயாரிப்பிற்கு மிகவும் தேவையாக இருந்தது. உலகின் மொத்தக் கோல்ட்டனில் 80 சதவீதம் காங்கோவிடம் இருந்தது.

ருவாண்டா தான் கொள்ளையடித்தக் கோல்ட்டனில் இருந்து ஆண்டுதோறும் 24 கோடி டாலர்கள் பணம் சம்பாதித்தது. ஏழை நாடான ருவாண்டாவிற்கு அது ஏராளமான பணமாக இருந்தது. இதற்கு நேர்மாறாக, சீனா கலிபோர்னியாவை முற்றுகையிட்டு சிலிக்கான் பள்ளத்தாக்கைக் கைப்பற்றுவது எந்த விதத்திலும் அர்த்தம் வாய்ந்ததாக இருக்காது. ஏனெனில், சீனா அம்முயற்சியில் வெற்றி பெற்றால்கூட, அந்த சிலிக்கான் பள்ளத்தாக்கில் அது கொள்ளையடிப்பதற்கு சிலிக்கான் சுரங்கங்கள் எதுவும் இல்லை. எனவே, அதற்கு பதிலாக, உயர்தொழில்நுட்ப ஜாம்பவான்களான ஆப்பிள், மைக்ரோசாஃப்ட் ஆகிய நிறுவனங்களுடன் ஒத்துழைத்ததன் மூலம், சீனர்கள் அந்நிறுவனங்களின் மென்பொருட்களை வாங்கி அவர்களுடைய பொருட்களைத் தங்களுடைய நாட்டில் தயாரித்துக் கொடுத்து, அதன் மூலம் பல கோடிக்கணக்கான டாலர்கள் பணத்தை ஈட்டியுள்ளனர். ஓராண்டு முழுவதும் காங்கோவின் கோல்ட்டனைக் கொள்ளையடித்ததிலிருந்து ருவாண்டா ஈட்டிய பணத்தைச் சீனர்கள் அமைதியான வர்த்தகத்தின் மூலம் ஒரே நாளில் ஈட்டுகின்றனர்.

இதன் விளைவாக, 'அமைதி' என்ற வார்த்தைக்கு ஒரு புதிய அர்த்தம் கிடைத்துள்ளது. அமைதி என்பது போர் இல்லாத ஒரு தற்காலிக நிலை என்றுதான் முந்தைய தலைமுறையினர் நினைத்தனர். ஆனால் இன்று, அமைதி என்பது போருக்கான சாத்தியம் இல்லாத ஒரு நிலை என்று நாம் நினைக்கிறோம். 1913ல் பிரான்ஸுக்கும் ஜெர்மனிக்கும் இடையே அமைதி நிலவியதாக மக்கள் கூறியதன் உண்மையான பொருள், 'பிரான்ஸுக்கும் ஜெர்மனிக்கும் இடையே தற்போது எந்தப் போரும் நிகழ்ந்து கொண்டிருக்கவில்லை, ஆனால் அடுத்து வரும் காலத்தில் என்ன நடக்கும் என்று யாரறிவார்?' என்பதுதான். பிரான்ஸுக்கும் ஜெர்மனிக்கும் இடையே அமைதி நிலவுவதாக இன்று நாம் கூறும்போது, அவ்விரு நாடுகளுக்கு இடையே போர் நிகழுவதற்கான சூழல்கள் எதுவும் இல்லை என்றும், அவற்றுக்கிடையே போர் நிகழும் என்பது நினைத்துப் பார்க்கப்பட முடியாத ஒன்று என்றும் நாம் அதற்குப் பொருள் கூறுகிறோம். இத்தகைய அமைதி பிரான்ஸுக்கும் ஜெர்மனிக்கும் இடையே மட்டுமல்லாமல், உலகின் பெரும்பாலான நாடுகளுக்கு இடையேயும் நிலவுகிறது (எல்லா நாடுகளிலும் அல்ல). ஜெர்மனிக்கும் போலந்து நாட்டிற்கும் இடையேயோ, இந்தோனேசியாவுக்கும் பிலிப்பைன்ஸுக்கும் இடையேயோ, அல்லது பிரேசிலுக்கும் உருகுவே நாட்டிற்கும் இடையேயோ அடுத்த வருடம் ஒரு தீவிரமான போர் வெடிப்பதற்கான சூழல் எதுவும் இல்லை.

இப்புதிய அமைதி வெறுமனே ஒரு கற்பனை அல்ல. அதிகார வெறி

கொண்ட அரசாங்கங்களும் பேராசை கொண்ட பெருநிறுவனங்களும்கூட அதை நம்புகின்றன. கிழக்கு ஐரோப்பாவில் தன்னுடைய கார்களை விற்பனை செய்வதற்கான உத்திகளை மெர்சிடீஸ் நிறுவனம் வடிவமைக்கும்போது, ஜெர்மனி போலந்தை வெற்றி கொள்ளக்கூடும் என்ற சாத்தியக்கூறை அது கண்டுகொள்ளுவதில்லை. பிலிப்பைன்ஸிலிருந்து மலிவான தொழிலாளர்களை இறக்குமதி செய்கின்ற ஒரு பெருநிறுவனம், அடுத்த ஆண்டு பிலிப்பைன்ஸ்மீது இந்தோனேசியா படையெடுக்கக்கூடும் என்று கவலைப்படுவதில்லை. அடுத்த ஆண்டுக்கான பட்ஜெட்டைப் பற்றி விவாதிப்பதற்காக பிரேசில் நாட்டு அமைச்சரவை ஒன்றுகூடும்போது, அந்நாட்டின் பாதுகாப்பு அமைச்சர் தன் இருக்கையைவிட்டு எழுந்து, தன் முஷ்டியால் மேசைமீது ஓங்கிக் குத்திவிட்டு, “ஒரு நிமிடம்! நாம் உருகுவேமீது போர் தொடுத்து அதை வெற்றிக் கொள்ள விரும்பினால் என்ன செய்வது? அதை நீங்கள் கருத்தில் கொள்ளவில்லையே! இந்தப் போருக்காக நாம் 500 கோடி டாலர்களை ஒதுக்கியாக வேண்டும்,” என்று கூறுவதாக உங்களால் கற்பனை செய்ய முடியுமா? ஒருசில இடங்களில் சில பாதுகாப்பு அமைச்சர்கள் அப்படிப்பட்ட விஷயங்களைக் கூறத்தான் செய்கின்றனர். புதிய அமைதி சில பகுதிகளில் வேரூன்ற முடியாமல் போயுள்ளதும் உண்மைதான். எனக்கு இது நன்றாகத் தெரியும். ஏனெனில், அத்தகைய பகுதிகளில் ஒன்றில்தான் நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். ஆனால் இவையெல்லாம் விதிவிலக்குகள்தாம்.

இப்புதிய அமைதி என்றென்றும் நிரந்தரமாக நிலைத்திருக்கும் என்பதற்கு எந்த உத்தரவாதமும் இல்லை. அணுவாயுதங்கள் எப்படி இப்புதிய அமைதியைச் சாத்தியமாக்கினவோ, அதேபோல, எதிர்காலத் தொழில்நுட்பப் படைப்புகள் புதிய வகையிலான போருக்கான அடித்தளத்தை அமைத்துக் கொடுக்கக்கூடும். குறிப்பாக, உலகின் வல்லரசு நாடுகளை ஆற்றல்மிக்க விதத்தில் எதிர்த்துச் சண்டையிடுவதற்கான திறனைச் சிறு நாடுகளுக்கும், அரசு சாராத, ஆனால் அரசியல் செல்வாக்குமிக்கத் தனிநபர்களுக்கும் தனியார் நிறுவனங்களுக்கும் வழங்குவதன் மூலம் இணையப் போர்கள் இவ்வுலகின் அமைதியைச் சீர்குலைக்கக்கூடும். 2003ல் அமெரிக்கா ஈராக்குடன் சண்டையிட்டபோது, பாக்தாத் மற்றும் மோசுல் நகரங்களுக்கு அது பேரழிவைக் கொண்டுவந்தது, ஆனால் லாஸ் ஏஞ்சலீஸ் நகரிலோ அல்லது சிக்காகோவிலோ ஒரு குண்டுகூடப் போடப்படவில்லை. ஆனால் எதிர்காலத்தில், வட கொரியா அல்லது ஈரான் போன்ற ஒரு நாட்டினால் ‘லாஜிக் வெடிகுண்டு’களைப்

பயன்படுத்திக் கலிபோர்னியாவில் மின்சார விநியோகத்தை முற்றிலுமாகத் துண்டித்து அந்த ஒட்டுமொத்த மாநிலத்தை இருளில் மூழ்கடிக்க முடியும், டெக்சாஸ் நகரில் உள்ள அனைத்து எண்ணெய் சுத்திகரிப்பு ஆலைகளையும் வெடிக்கச் செய்து முற்றிலுமாகத் தரைமட்டமாக்க முடியும், மிச்சிகன் மாநிலத்தில் ரயில்களுக்கு இடையே மோதல்களை ஏற்படுத்த முடியும் (லாஜிக் வெடிகுண்டுகள் என்பவை அமைதிக் காலத்தில் விதைக்கப்படுகின்ற, கெடுநோக்குடன்கூடிய மென்பொருள் நிரல்களாகும். இவை தொலைவிலிருந்து இயக்கப்படுகின்றன. அமெரிக்காவிலும் பிற நாடுகளிலும் முக்கியமான கட்டமைப்பு வசதிகளைக் கட்டுப்படுத்துகின்ற பிணையங்களில் ஏற்கனவே இப்படிப்பட்ட நிரல்கள் நிரம்பி வழிவதற்கான சாத்தியம் மிகவும் அதிகம்.)

ஆனாலும், திறனையும் நோக்கத்தையும் நாம் குழப்பிக் கொள்ளக்கூடாது. இணையப் போர்கள் அழிவுக்கான புதிய வழிகளை அறிமுகப்படுத்தினாலும், அவ்வழிகளைப் பயன்படுத்துவதற்கு அது எந்தப் புதிய வெகுமானத்தையும் கொடுப்பதில்லை. கடந்த எழுபது ஆண்டுகளின் ஊடாக மனிதகுலம் அந்தக் காட்டு விதியை மட்டுமல்லாமல், செக்கோவ் விதியையும் மீறியுள்ளது. ஆன்டன் செக்கோவ் கூறிய மிகப் பிரபலமான ஒரு வாசகம் இது: “ஒரு நாடகத்தில் முதல் காட்சியில் தோன்றும் ஒரு துப்பாக்கி மூன்றாம் காட்சியில் தவறாமல் பயன்படுத்தப்படும்.” அரசர்களும் பேரரசர்களும் ஏதேனும் புதிய ஆயுதத்தைக் கைவசப்படுத்தினால், விரைவில் அதைப் பயன்படுத்துவதற்கான சபலம் அவர்களுக்குள் எழுந்ததை வரலாறு நெடுகிலும் நாம் காணுகிறோம். ஆனால், 1945ம் ஆண்டிலிருந்து, மனிதகுலம் இந்த சபலத்திற்கு அடிபணியாமல் இருக்கக் கற்றுக் கொண்டுள்ளது. பனிப்போரின் முதல் காட்சியில் தோன்றிய துப்பாக்கி ஒருபோதும் பயன்படுத்தப்படவே இல்லை. வெடிக்கப்படாத வெடிகுண்டுகளும் ஏவப்படாத ஏவுகணைகளும் நிரம்பியுள்ள ஓர் உலகில் வாழ இன்று நாம் பழக்கப்பட்டுவிட்டோம். காட்டு விதியையும் செக்கோவ் விதியையும் மீறுவதிலும் நாம் மேதமை பெற்றுவிட்டோம். இந்த விதிகள் என்றேனும் நம்மைத் துரத்திப் பிடித்தால், அது நம்முடைய சொந்தத் தவறாக இருக்குமே அன்றி, தப்பிக்கப்பட முடியாத நம்முடைய தலைவிதியாக இருக்காது.



படம் 4: மாஸ்கோவில் அணு ஏவுகணைகள் அணிவகுத்து எடுத்துச் செல்லப்படுகின்றன. எப்போதும் காட்சிப்படுத்தப்பட்ட, ஆனால் ஒருபோதும் பயன்படுத்தப்படாத ஆயுதம் அது.

அப்படியானால், தீவிரவாதத்தைப் பற்றி என்ன சொல்லுவது? பயங்கரமான ஆயுதங்களைப் பயன்படுத்துவதற்கு ஏற்படும் சபலத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ள மத்திய அரசாங்கங்களும் சக்திவாய்ந்த நாடுகளும் கற்றுக் கொண்டுள்ளபோதிலும், புதிய மற்றும் அழிவுபூர்வமான ஆயுதங்களைப் பயன்படுத்துவதற்குத் தீவிரவாதிகளுக்கு எந்தத் தயக்கமும் இல்லாமல் போகலாம். நாம் கவலைப்பட வேண்டிய ஒரு சாத்தியக்கூறு அது என்பதில் ஐயமில்லை. ஆனால், உண்மையான அதிகாரத்தைக் கைவசப்படுத்த முடியாதவர்கள் சுவீகரிக்கின்ற ஒரு பலவீனமான உத்திதான் தீவிரவாதம். கடந்தகாலத்திலாவது, தீவிரவாதம் பயத்தைப் பரப்பியதன் மூலம் செயல்பட்டதே அன்றி, பெரிய அளவில் பொருட்சேதத்தை விளைவித்ததன் மூலமாக அல்ல. பொதுவாக, ஒரு ராணுவப் படையைத் தோற்கடிப்பதற்கோ, ஒரு நாட்டை ஆக்கிரமிப்பதற்கோ, அல்லது ஒட்டுமொத்த நகரங்களை அழிப்பதற்கோ தேவையான வலிமை தீவிரவாதிகளிடம் இருப்பதில்லை. 2010ல், உடற்பருமன் மற்றும் அது தொடர்பான நோய்கள் சுமார் 30 லட்சம் பேரைக் கொன்றன, ஆனால் உலகம் நெடுகிலும் தீவிரவாதிகளால் கொல்லப்பட்டவர்கள் மொத்தம் 7,697 பேர். இவர்களில் பெரும்பாலானோர் வளரும் நாடுகளைச் சேர்ந்தவர்கள். ஒரு சராசரி அமெரிக்கருக்கோ அல்லது ஐரோப்பியருக்கோ, அல்கைதாவைவிட கோகோ-கோலா பானம் அதிக பயங்கரமான அச்சுறுத்தலாக அமைந்துள்ளது.

அப்படியானால், தீவிரவாதிகள் எப்படித் தலைப்புச் செய்திகளில் இடம்பிடித்து உலகம் நெடுகிலும் அரசியல் சூழ்நிலையை மாற்றுகின்றனர்? அதை அவர்கள் எவ்வாறு சாதிக்கின்றனர்? தங்களுடைய எதிரிகள் அளவுக்கதிகமாக உணர்ச்சிவசப்பட்டு நடந்து

கொள்ளும் விதமாக வேண்டுமென்றே அவர்களைத் தூண்டுவதன் மூலமாகத்தான். தீவிரவாதிகள் அரங்கேற்றுகின்ற பயங்கரமான வன்முறைக் காட்சி ஒன்று நம்முடைய கற்பனையைக் கைப்பற்றி, நாம் மீண்டும் இடைக்காலத்துக் குழப்பங்களுக்குள் திரும்பிச் சென்று கொண்டிருக்கிறோம் என்ற உணர்வை நம்முள் ஏற்படுத்துகிறது. அதன் விளைவாக, தீவிரவாத நாடகத்திற்கு எதிர்வினையாற்ற வேண்டிய ஒரு நிலைமை நாடுகளுக்கு ஏற்படுகிறது, அவை தம்முடைய பலத்தை அந்தத் தீவிரவாதிகளுக்கு வெளிக்காட்ட வேண்டியதாகிறது. எனவே, ஒட்டுமொத்த மக்களையும் துன்புறுத்துவது, அந்நிய நாடுகள்மீது படையெடுப்பது போன்ற, தம்முடைய ஆற்றலை வெளிப்படுத்தக்கூடிய விஷயங்களை அந்நாடுகள் மேற்கொள்ளுகின்றன. இதன் மூலம் அவை தம்முடைய வலிமையை அந்தத் தீவிரவாதிகளுக்கு உணர்த்துகின்றன. பெரும்பாலான சமயங்களில், தீவிரவாதம் குறித்து அளவுக்கதிகமாக உணர்ச்சிவசப்பட்டு எதிர்வினையாற்றுவது நம்முடைய பாதுகாப்பிற்குத் தீவிரவாதிகளைவிட மிகப் பெரியதோர் அச்சுறுத்தலாக அமைகிறது.

தீவிரவாதிகள் என்போர் பீங்கான் பொருட்களை விற்பனை செய்கின்ற ஒரு கடையை நாசப்படுத்த முயற்சிக்கின்ற ஓர் ஈயைப் போன்றவர்கள். ஒரே ஒரு தேநீர்க் குவளையைக்கூட சேதப்படுத்த முடியாத அளவுக்கு அந்த ஈ பலவீனமாக உள்ளது. எனவே, அது ஒரு காளை மாட்டைக் கண்டுபிடித்து, அதன் காதுக்குள் நுழைந்து ரீங்காரமிடத் தொடங்குகிறது. அந்தக் காளை பயத்தோடும் கோபத்தோடும் தறிகெட்டு அக்கடைக்குள் ஓடிச் சென்று அதை நாசப்படுத்துகிறது. பத்து ஆண்டுகளுக்கு முன்பு மத்தியக் கிழக்குப் பகுதியில் இதுதான் நடந்தது. இஸ்லாமிய அடிப்படைவாதிகளால் தனியாக சதாம் உசேனை ஒருபோதும் கவிழ்த்தியிருக்க முடியாது. மாறாக, 2001ம் ஆண்டு செப்டம்பர் 11ம் நாளன்று அமெரிக்காவில் தீவிரவாதத் தாக்குதல்களை நடத்தியதன் மூலம் அவர்கள் அந்நாட்டைக் கொதித்தெழச் செய்தனர். பதிலுக்கு, அந்தத் தீவிரவாதிகளுக்காக மத்தியக் கிழக்குப் பீங்கான் கடையை அமெரிக்கா அழித்துச் சின்னாபின்னமாக்கியது. இப்போது அந்தத் தீவிரவாதிகள் அந்தச் சிதைவுகளில் கொழித்துக் கொண்டிருக்கின்றனர். தீவிரவாதிகளால் தனியாக நம்மை மீண்டும் இடைக்காலத்திற்கு அழைத்துச் சென்று காட்டு விதியை நிலைப்படுத்த முடியாது. அவர்கள் நம்மைத் தூண்டக்கூடும், ஆனால் இறுதியில், எல்லாம் நாம் ஆற்றுகின்ற எதிர்வினைகளைச் சார்ந்துள்ளது. காட்டு விதி மீண்டும் செயல்படுத்தப்பட்டால், அது நிச்சயமாகத் தீவிரவாதிகளின் தவறாக இருக்காது.

***

பஞ்சம், கொள்ளைநோய், போர் ஆகியவை இனிவரும் ஆண்டுகளில் லட்சக்கணக்கானோரைத் தொடர்ந்து பலி வாங்கக்கூடும். ஆனாலும், இப்போது அவை நிராதரவான ஒரு மனிதகுலத்தின் புரிதலுக்கும் கட்டுப்பாட்டிற்கும் அப்பாற்பட்ட, தவிர்க்கப்பட முடியாத பேரழிவுகளாக இல்லை. மாறாக, சமாளிக்கப்படக்கூடிய சவால்களாக அவை மாறியுள்ளன. ஆனால், வறுமையின் கொடுமைக்கு ஆளாகியுள்ள கோடிக்கணக்கான மக்களின் துன்பத்தை இக்கூற்று எள்ளளவும் சிறுமைப்படுத்தவில்லை. மலேரியா, எய்ட்ஸ், காசநோய் போன்றவற்றால் ஒவ்வோர் ஆண்டும் கொல்லப்படுகின்ற லட்சக்கணக்கான மக்களையும் இது சிறுமைப்படுத்தவில்லை. சிரியா, காங்கோ, ஆப்கானிஸ்தான் போன்ற நாடுகளில் வன்முறைக்கு ஆளாகித் துன்புற்றுக் கொண்டிருக்கின்ற லட்சக்கணக்கான மக்களையும் இது எந்த விதத்திலும் சிறுமைப்படுத்தவில்லை. பஞ்சம், கொள்ளைநோய், போர் ஆகியவை இந்த பூமியிலிருந்து முற்றிலுமாக

மறைந்துவிட்டன, அவற்றைப் பற்றிக் கவலைப்படுவதை நாம் நிறுத்த வேண்டும் என்பது இங்கு செய்தியல்ல. இதற்கு நேரெதிரானதுதான் உண்மையான செய்தி. இம்மூன்று பிரச்சனைகளும் தீர்க்கப்பட முடியாதவை என்றும், எனவே இவற்றுக்கு ஒரு முடிவு கட்ட முயற்சிப்பதில் எந்த அர்த்தமும் இல்லை என்றும் வரலாறு நெடுகிலும் மக்கள் கருதி வந்திருந்தனர். அதிசயங்களை நிகழ்த்திக் கொடுக்கும்படி மக்கள் கடவுளிடம் பிரார்த்தனை செய்தனர். ஆனால் இப்பிரச்சனைகளை ஒழிப்பதற்கு அவர்கள் தாங்களாக எந்தத் தீவிர முயற்சியும் மேற்கொள்ளவில்லை. 2016ம் ஆண்டுகாலத்திய உலகம் 1916ம் ஆண்டில் இருந்ததைப்போலவே பசியும் நோயும் வன்முறையும் நிரம்பிய ஒன்றாக இருந்ததாக வாதிடுபவர்கள், தோல்வி மனப்போக்குடன்கூடிய இந்தப் பழங்காலக் கண்ணோட்டத்தைத் தொடர்ந்து நிலைப்படுத்துகின்றனர். இருபதாம் நூற்றாண்டில் மேற்கொள்ளப்பட்ட மாபெரும் மனித முயற்சிகள் அனைத்தும் எதையும் சாதிக்கவில்லை என்றும், மருத்துவ ஆராய்ச்சிகளும் பொருளாதாரச் சீர்திருத்தங்களும் சமாதான முயற்சிகளும் எந்தப் பலனும் அளிக்கவில்லை என்றும் அவர்கள் கூறுகின்றனர். மேலும், நிலைமை இப்படி இருக்கும்போது, அதிக மருத்துவ ஆராய்ச்சிகளிலும் புதுமையான பொருளாதாரச் சீர்திருத்தங்களிலும் புதிய சமாதான முயற்சிகளிலும் நம்முடைய நேரத்தையும் வளங்களையும் முதலீடு செய்வதில் என்ன அர்த்தம் இருக்கிறது என்று அவர்கள் கேட்கின்றனர்.

நம்முடைய கடந்தகாலச் சாதனைகளை அங்கீகரிப்பது நமக்கு நம்பிக்கையூட்டி, நம்முடைய பொறுப்பை நமக்கு நினைவுபடுத்துகிறது. எதிர்காலத்தில் நாம் இன்னும் அதிகமாக முயற்சிக்க வேண்டும் என்று அது நம்மை ஊக்குவிக்கிறது. இருபதாம் நூற்றாண்டில் நாம் நிகழ்த்திய சாதனைகளைக் கருத்தில் கொள்ளும்போது, பஞ்சத்தாலும் கொள்ளைநோய்களாலும் போர்களாலும் மக்கள் தொடர்ந்து துன்புற்றால், அதற்கு இயற்கையின்மீதோ அல்லது கடவுளின்மீதோ நம்மால் பழி சுமத்த முடியாது என்பது நமக்கு நினைவூட்டப்படுகிறது. விஷயங்களைச் சிறப்புறச் செய்வதும் துன்பத்தைக் குறைப்பதும் நம்முடைய சக்திக்கு உட்பட்டுத்தான் இருக்கின்றன.

நம்முடைய சாதனைகளின் பிரம்மாண்டத்தை மெச்சுவது இன்னொரு செய்தியை நமக்குக் கொடுக்கிறது: 'வரலாறு ஒரு வெற்றிடத்தை சகித்துக் கொள்ளுவதில்லை.' பஞ்சம், கொள்ளைநோய், போர் ஆகியவை நிகழுவது குறைந்து கொண்டிருக்கிறது என்றால், வேறு ஏதோ ஒன்று அவற்றின் இடத்தைப் பிடித்துக் கொள்ளும். மனிதகுலம் எதிர்கொள்ளப் போகின்ற அந்தப் புதிய சவால் என்னவாக இருக்கும்

என்பதைப் பற்றி நாம் கவனமாக சிந்திப்பது நல்லது. இல்லாவிட்டால், பழைய போர்க்களங்களில் நாம் முழு வெற்றியைக் கைவசப்படுத்திவிட்டு, முற்றிலும் புதிய போர்க்களங்களில் நாம் தடுமாறி நிற்போம். சவால்கள் பட்டியலில் முதலிடத்தில் உள்ள பஞ்சம், கொள்ளைநோய், போர் ஆகியவற்றின் இடத்தை இருபத்தோராம் நூற்றாண்டில் எந்தப் பணித்திட்டங்கள் எடுத்துக் கொள்ளும்?

நம்முடைய சொந்த சக்தியில் உறைந்துள்ள ஆபத்துக்களிலிருந்து மனிதகுலத்தையும் இந்த ஒட்டுமொத்த பூமியையும் பாதுகாப்பதுதான் நம்முடைய மையப் பணித்திட்டமாக இருக்கும். அபரிமிதமான உணவையும் மருந்துகளையும் ஆற்றலையும் கச்சாப் பொருட்களையும் நமக்கு வழங்குகின்ற நம்முடைய மாபெரும் பொருளாதார வளர்ச்சியால் பஞ்சத்தையும் கொள்ளைநோய்களையும் போரையும் நாம் நம்முடைய கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்திருக்கிறோம். ஆனால் இதே வளர்ச்சிதான் நம்முடைய பூமியின் சூழலியல்ரீதியான சமநிலையை எண்ணற்ற வழிகளில் குலைக்கிறது. இந்த விவகாரத்தை நாம் இப்போதுதான் ஆய்வு செய்யத் தொடங்கியிருக்கிறோம். இந்த ஆபத்தை மனிதகுலம் மிகத் தாமதமாகவே உணர்ந்து கொண்டுள்ளது. எனவே, அது குறித்து அது அவ்வளவாக எதுவும் செய்யவில்லை. மாசுபாடு, உலக வெப்பமயமாதல், வானிலை மாற்றம் ஆகியவற்றைப் பற்றிப் பேசப்பட்டுக் கொண்டிருந்தாலும், சூழ்நிலையை மேம்படுத்துவதற்குத் தேவையான பொருளாதாரத் தியாகங்களையும் அரசியல்ரீதியான தியாகங்களையும் பெரும்பாலான நாடுகள் இன்னும் மேற்கொள்ளவில்லை. பொருளாதார வளர்ச்சிக்கும் சூழலியல் பாதுகாப்புக்கும் இடையே ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டிய நேரம் வரும்போது, அரசியல்வாதிகளும் பெருநிறுவனத் தலைவர்களும் வாக்காளர்களும் எப்போதும் வளர்ச்சியையே தேர்ந்தெடுக்கின்றனர். இருபத்தோராம் நூற்றாண்டில் நாம் ஒரு பேரழிவைத் தவிர்க்க விரும்பினால், அது குறித்து நாம் அதிகச் சிறப்பாகச் செயல்பட வேண்டியது இன்றியமையாதது.

மனிதகுலம் வேறு எந்த விஷயத்திற்காகக் கடுமையாக முயற்சிக்கும்? நமக்குக் கிடைத்துள்ள ஆசீர்வாதங்களைக் கணக்கிட்டுக் கொண்டும், பஞ்சம், கொள்ளைநோய், போர் ஆகியவற்றைத் தொடர்ந்து கட்டுப்பாட்டில் வைத்துக் கொண்டும், நம்முடைய சூழலியல்ரீதியான சமநிலையைப் பாதுகாத்துக் கொண்டும் இருப்பது நமக்கு மனநிறைவைக் கொடுக்குமா? அதுதான் அறிவார்ந்த செயலாக இருக்கும், ஆனால் மனிதகுலம் அதைப் பின்பற்றப் போவதில்லை. தங்களிடம் இருப்பவற்றைக் கொண்டு மனிதர்கள் அரிதாகவே

திருப்தியடைகின்றனர். ஒன்றைச் சாதித்திருக்கும்போது மனித மனம் திருப்தி கொள்ளுவதற்கு பதிலாக, பொதுவாக இன்னும் அதிகமாக ஆசைப்படுகிறது. மனித மனத்தின் பொதுவான எதிர்வினை இதுதான். அதிகச் சிறப்பான, இன்னும் பெரிய, மற்றும் அதிகச் சுவையானவற்றை மனிதர்கள் எப்போதும் தேடிக் கொண்டிருக்கின்றனர். மனிதகுலத்திடம் அளப்பரிய புதிய சக்திகள் இருந்து, பஞ்சம், கொள்ளைநோய், போர் ஆகியவை குறித்த அச்சுறுத்தல் ஒருவழியாக நீக்கப்படும்போது, நம்மைக் கொண்டு நாம் என்ன செய்வோம்? அறிவியலறிஞர்கள், முதலீட்டாளர்கள், வங்கியாளர்கள், அதிபர்கள் ஆகியோர் நாள் முழுவதும் என்ன செய்வர்? அவர்கள் கவிதையா எழுதுவார்கள்?

வெற்றியானது லட்சியத்தை வளர்த்தெடுக்கிறது. எனவே, நம்முடைய சமீபத்தியச் சாதனைகள் அதிகத் துணிகரமான இலக்குகளை நிர்ணயிப்பதற்கு மனிதகுலத்தை இப்போது உந்தித் தள்ளிக் கொண்டிருக்கின்றன. முன்பு ஒருபோதும் இல்லாத அளவுக்கு அபரிமிதமான செழிப்பையும் ஆரோக்கியத்தையும் இணக்கத்தையும் நாம் கைவசப்படுத்தியுள்ள நிலையில், நம்முடைய கடந்தகாலச் சாதனைகளையும் நம்முடைய தற்போதைய விழுமியங்களையும் வைத்துப் பார்க்கும்போது, இறவாநிலையும் பேரின்பமும் தெய்விகமும் மனிதகுலத்தின் அடுத்த இலக்குகளாக இருப்பதற்கான வாய்ப்பு அதிகம் உள்ளது. பட்டினி, நோய், வன்முறை ஆகியவற்றால் நிகழும் மரணங்களின் எண்ணிக்கையைக் கணிசமாகக் குறைத்துள்ள நாம், முதுமையிலிருந்து மீளுவதையும் மரணத்தை வெற்றி கொள்ளுவதையும் இப்போது குறி வைப்போம். மிகவும் அவலமான நிலையில் துன்பப்பட்டுக் கொண்டிருந்த மக்களை அந்தத் துன்பத்திலிருந்து காப்பாற்றியுள்ள நாம், இப்போது அவர்களை நேர்மறையான விதத்தில் மகிழ்ச்சியானவர்களாக ஆக்குவதை நம்முடைய இலக்காக ஆக்குவோம். உயிர்பிழைத்திருப்பதற்கான கடுமையான போராட்டங்களில் சிக்கிக் கிடந்த மனிதகுலத்தை அந்நிலையிலிருந்து மீட்டெடுத்துள்ள நாம், மனிதர்களைக் கடவுளராக ஆக்குவதையும், ஹோமோ சேப்பியன்ஸை ஹோமோ டியஸாக மாற்றுவதையும் நம்முடைய இலக்காக ஆக்குவோம்.

## மரணத்திற்கு மரண அடி

இருபத்தோராம் நூற்றாண்டில் மனிதகுலம் இறவாநிலையை அடைவதற்கான சாத்தியக்கூறு தெரிகிறது. முதுமைக்கும் மரணத்திற்கும் எதிரான போராட்டம் நெடுங்காலமாகப் பஞ்சத்திற்கும்

நோய்க்கும் எதிராக நிகழ்ந்து வந்துள்ள போராட்டத்தைப்போலவே தொடரும். அதோடு, 'மனிதனே மதிப்பு வாய்ந்தவன்' என்ற, நவீனக் கலாச்சாரத்தின் உச்சகட்ட விழுமியத்தை அது நிலைப்படுத்தும். மனித வாழ்க்கைதான் இப்பிரபஞ்சத்தில் உள்ள மிகவும் புனிதமான விஷயம் என்று நமக்குத் தொடர்ந்து நினைவூட்டப்படுகிறது. பள்ளிகளில் ஆசிரியர்களும், நாடாளுமன்றங்களில் அரசியல்வாதிகளும், நீதிமன்றங்களில் வழக்கறிஞர்களும், நாடக மேடைகளில் நடிகர்களும் அதை எடுத்துக்கூறுகின்றனர். 'வாழுவதற்கான உரிமை'தான் மனிதகுலத்தின் மிக அடிப்படையான விழுமியம் என்று 'மனித உரிமைகளுக்கான உலகளாவிய பிரகடனம்' கூறுகிறது. இரண்டாம் உலகப் போர் முடிந்த பிறகு ஐக்கிய நாடுகள் சபை சுவீகரித்த அந்தப் பிரகடனம் கிட்டத்தட்ட ஒரு சர்வதேச அரசியலமைப்பு என்று கூறலாம். மரணம் இந்த உரிமையை மீறுகிறது என்பதால், மரணம் மனிதகுலத்திற்கு எதிரான ஒரு குற்றமாக ஆகிறது. எனவே, நாம் அதற்கு எதிராக முழுமையாகப் போர் தொடுத்தாக வேண்டும்.

வரலாறு நெடுகிலும், மதங்களும் பிற சித்தாந்தங்களும் வாழ்க்கையைப் புனிதமானதாகக் கருதவில்லை, அதற்கு அந்த அந்தஸ்தைக் கொடுக்கவில்லை. இருத்தலுக்கு மேலான அல்லது அதைக் கடந்த ஏதோ ஒன்றைத்தான் அவை எப்போதும் புனிதப்படுத்தின. எனவே, மரணத்தை அவை பொறுத்துக் கொண்டன. நம்முடைய இருத்தலின் அர்த்தம் நம்முடைய மரணத்திற்குப் பிந்தைய வாழ்க்கையில் நம்முடைய தலைவிதியைச் சார்ந்துள்ளது என்று கிறித்தவமும் இஸ்லாமும் இந்துமதமும் வலியுறுத்தியதால், மரணத்தை இவ்வுலகின் இன்றியமையாத மற்றும் நேர்மறையான ஒரு பகுதியாக அவை பார்த்தன. கடவுள் ஆணையிட்டதால் மனிதர்கள் மடிந்தனர் என்றும், அவர்கள் மரணம் எய்திய கணம் ஆழ்ந்த அர்த்தம் வாய்ந்த, புனிதமான ஒரு மீமெய்யியல் அனுபவம் என்றும் அவை கருதின. மேலும், ஒரு மனிதன் இறக்கவிருக்கும் தருணம்தான் பாதிரியார்களும் யூத குருமார்களும் ஷாமன்களும் அழைக்கப்பட வேண்டிய நேரம் என்றும், பிரபஞ்சத்தில் ஒருவர் தன்னுடைய உண்மையான பாத்திரத்தை சுவீகரிக்க வேண்டிய நேரம் அது என்றும் அவை வலியுறுத்தின. மரணம் இல்லாத ஓர் உலகத்தில் கிறித்தவமும் இஸ்லாமும் இந்துமதமும் இருப்பதைக் கற்பனை செய்து பாருங்கள். சொர்க்கம், நரகம், மறுபிறப்பு போன்றவையும் இல்லாத ஓர் உலகம் அது.

வாழ்க்கை மற்றும் மரணம் குறித்து நவீன அறிவியலும் நவீனக் கலாச்சாரமும் முற்றிலும் வித்தியாசமான ஒரு கண்ணோட்டத்தைக்

கொண்டுள்ளன. மரணத்தை ஒரு மீமெய்யியல் மர்மமாக அவை பார்ப்பதில்லை. மரணம்தான் வாழ்வின் அர்த்தத்தின் மூலாதாரம் என்று நிச்சயமாக அவை கருதுவதில்லை. மாறாக, நவீன மக்களைப் பொருத்தவரை, மரணம் என்பது நம்மால் தீர்க்கப்படக்கூடிய, நாம் தீர்க்க வேண்டிய ஒரு தொழில்நுட்பப் பிரச்சனையே.

மனிதர்கள் துல்லியமாக எப்படி இறக்கின்றனர்? இடைக்காலக் கற்பனைக் கதைகள் மரணத்தைச் சித்தரித்தபோது, முக்காடுடன்கூடிய கருப்பு அங்கி ஒன்றை அணிந்த, கையில் ஒரு பெரிய கொடுவாளைத் தாங்கிய ஓர் உருவமாக அதைச் சித்தரித்தன. அந்த உருவத்தை 'கிரிம் ரீப்பர்' என்று அவை அழைத்தன. ஒரு மனிதன் பல்வேறு விஷயங்களைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டும், இங்குமங்கும் ஓடியலைந்து கொண்டும் தன் வாழ்க்கையை வாழுகிறான். திடீரென்று ஒருநாள் கிரிம் ரீப்பர் உருவம் அவன்முன் தோன்றி, தன்னுடைய விரலால் அவனுடைய தோளைத் தட்டி, “வா!” என்று அழைக்கிறது. அப்போது அவன், “தயவு செய்து இப்போது என்னைக் கூட்டிச் செல்லாதே. இன்னும் ஒரே ஒரு வருடம் பொறுத்திரு! இன்னும் ஒரு மாதம் காத்திரு! இன்னும் ஒரே ஒரு நாள் காத்திரு!” என்று அதனிடம் கெஞ்சுகிறான். ஆனால், முக்காடு அணிந்த அந்த உருவம் கோபத்தோடு, “முடியாது! நீ இக்கணமே என்னுடன் வந்தாக வேண்டும்!” என்று கூறுகிறது. இப்படித்தான் நாம் இறக்கிறோம்.



படம் **5:** இடைக்கால ஓவியத்தில் மரணம் கிரிம் ரீப்பராகச் சித்தரிக்கப்பட்டுள்ளது**.**

ஆனால் யதார்த்தத்தில், மனிதர்கள் இறப்பது ஒரு கருப்பு அங்கி அணிந்த ஓர் உருவம் அவர்களுடைய தோளைத் தட்டுவதாலோ, அல்லது கடவுள் அப்படி ஆணையிட்டதாலோ, அல்லது சாவு என்பது ஏதோ மிகப் பெரிய பிரபஞ்சத் திட்டத்தின் இன்றியமையாத ஒரு பகுதி என்பதாலோ அல்ல. மனிதர்கள் எப்போதும் ஏதோ தொழில்நுட்பக்

கோளாறினால்தான் இறக்கின்றனர். இதயம் பிற உறுப்புகளுக்கு ரத்தத்தை அனுப்புவதை நிறுத்திவிடுகிறது. முக்கியத் தமனியில் கொழுப்பு சேர்ந்து அதை அடைத்துள்ளது. புற்றுநோய் உயிரணுக்கள் கல்லீரலில் பரவுகின்றன. நுரையீரல்களில் கிருமிகள் பெருகுகின்றன. இந்த அத்தனைத் தொழில்நுட்பப் பிரச்சனைகளுக்கும் எது காரணம்? பிற தொழில்நுட்பப் பிரச்சனைகள்தான். இதயம் ரத்தத்தை வெளியே அனுப்பாமல் போவதற்குக் காரணம் போதிய அளவு ஆக்சிஜன் இதயத் தசையைச் சென்றடையாமல் இருப்பதுதான். புற்றுநோய் உயிரணுக்கள் பரவுவதற்குக் காரணம் ஒரு மரபுச்சிதைவு மாற்றம் அந்த உயிரணுக்களில் பதிவு செய்யப்பட்டுள்ள அறிவுறுத்தல்களை மாற்றி எழுதியதுதான். நுரையீரல்களில் கிருமிகள் தங்குவதற்குக் காரணம் மின்சார ரயிலில் என்னோடு பயணம் செய்த யாரோ ஒருவர் தும்மியதுதான். இதில் மீமெய்யியல் தொடர்பானது எதுவுமில்லை. இவை அனைத்தும் தொழில்நுட்பப் பிரச்சனைகளே.

ஒவ்வொரு தொழில்நுட்பப் பிரச்சனைக்கும் ஒரு தொழில்நுட்பத் தீர்வு இருக்கிறது. மரணத்திலிருந்து மீளுவதற்கு ஏசுவின் இரண்டாம் வருகைக்காக நாம் காத்திருக்க வேண்டியதில்லை. ஒரு பரிசோதனைக்கூடத்தில் ஒருசில தொழில்நுட்ப வல்லுநர்களால் அதைச் செய்ய முடியும். பாரம்பரியமாக, மரணம் என்பது பாதிரியார்கள் மற்றும் இறையியல் வல்லுநர்களின் தனிச்சிறப்பாக இருந்தது என்றால், இப்போது அந்தப் பாத்திரத்தைப் பொறியாளர்கள் அவர்களிடமிருந்து பிடுங்கிக் கொண்டுள்ளனர். வேதிச்சிகிச்சை அல்லது நேனோரோபாட்டுகளைக் கொண்டு புற்றுநோய் உயிரணுக்களை நம்மால் அழித்துவிட முடியும். நம்முடைய நுரையீரல்களில் உள்ள கிருமிகளை நுண்ணுயிர்க்கொல்லிகளின் மூலம் நம்மால் அடியோடு அழித்துவிட முடியும். இதயம் தன்னுடைய துடிப்பை நிறுத்தினால், மருந்துகள் மற்றும் மின்னதிர்ச்சி மூலம் அதை நம்மால் மீண்டும் துடிக்கச் செய்ய முடியும். மருந்துகளும் மின்னதிர்ச்சியும் பலனளிக்கவில்லை என்றால், வேறொரு புதிய இதயத்தை நம்மால் பொருத்திவிட முடியும். அனைத்துத் தொழில்நுட்பப் பிரச்சனைகளுக்கும் தற்போது நம்மிடம் தீர்வுகள் இல்லை என்பது உண்மைதான். ஆனால், துல்லியமாக இக்காரணத்திற்காகத்தான், புற்றுநோய், மரபியல், கிருமிகள், நேனோதொழில்நுட்பம் ஆகியவற்றைக் குறித்து ஆராய்ச்சிகளை மேற்கொள்ளுவதற்காக நாம் ஏகப்பட்டப் பணத்தையும் நேரத்தையும் முதலீடு செய்து கொண்டிருக்கிறோம்.

அறிவியல் ஆராய்ச்சி எதிலும் ஈடுபட்டிராத சாதாரண மக்கள்கூட

மரணத்தை ஒரு தொழில்நுட்பப் பிரச்சனையாகப் பார்ப்பதற்குப் பழக்கப்பட்டுவிட்டனர். ஒரு பெண் தன்னுடைய மருத்துவரிடம் சென்று, "என் உடலில் என்ன பிரச்சனை?" என்று கேட்கும்போது, "உங்களுக்குக் காய்ச்சல் வந்திருக்கிறது," என்றோ, "உங்களுக்குக் காசநோய் ஏற்பட்டிருக்கிறது," என்றோ, அல்லது "உங்களுக்குப் புற்றுநோய் உருவாகியிருக்கிறது," என்றோ அந்த மருத்துவர் கூறக்கூடுமே அன்றி, "உங்களுக்கு மரணம் வந்திருக்கிறது," என்று அவர் ஒருபோதும் கூற மாட்டார். காய்ச்சல், காசநோய், புற்றுநோய் ஆகிய அனைத்தும் தொழில்நுட்பப் பிரச்சனைகள் என்றும், என்றேனும் ஒருநாள் நாம் அவற்றுக்கு ஒரு தொழில்நுட்பத் தீர்வைக் கண்டுபிடிக்கக்கூடும் என்றும் நாம் அனைவரும் நம்புகிறோம்.

மக்கள் ஒரு சூறாவளியில் சிக்கி இறந்தாலோ அல்லது ஒரு கார் விபத்தில் அல்லது ஒரு போரில் இறந்தாலோகூட, தடுக்கப்பட்டிருக்கக்கூடிய மற்றும் தடுக்கப்பட்டிருக்க வேண்டிய ஒரு தொழில்நுட்பத் தோல்வியாகவே அதை நாம் பார்க்கிறோம். அரசாங்கம் மட்டும் ஒரு சிறந்த கொள்கையை சுவீகரித்திருந்தால்; மாநகராட்சி தன் வேலையை ஒழுங்காகச் செய்திருந்தால்; ராணுவத் தளபதி ஓர் அறிவார்ந்த தீர்மானத்தை எடுத்திருந்தால், மரணம் தவிர்க்கப்பட்டிருக்கும் என்று நாம் நினைக்கிறோம். மரணம் என்பது வழக்குகளுக்கும் விசாரணைகளுக்குமான ஒரு நியாயமான முகாந்திரமாக மாறியுள்ளது. "அவர்களால் எப்படி இறந்திருக்க முடியும்? நிச்சயமாக யாரோ எங்கோ ஒரு பெரும் தவறு செய்துள்ளனர்."

பெரும்பான்மையான அறிவியலறிஞர்களும் மருத்துவர்களும் அறிஞர்களும் இறவாநிலை பற்றிய கனவுகளிலிருந்து இன்றும் தங்களை வெகுதூரம் விலக்கி வைத்துள்ளனர். மாறாக, குறிப்பிட்ட ஏதோ ஒரு பிரச்சனையிலிருந்து மீளுவதற்கு மட்டுமே தாங்கள் முயற்சி செய்து கொண்டிருப்பதாக அவர்கள் கூறுகின்றனர். ஆனாலும், முதுமையும் மரணமும் குறிப்பிட்ட சில பிரச்சனைகளின் விளைவே அன்றி வேறொன்றுமில்லை என்பதால் அவர்கள் தங்கள் முயற்சிகளை ஒருபோதும் கைவிட மாட்டார்கள். "காசநோயிலிருந்தும் புற்றுநோயிலிருந்தும் மீளுவதற்கான வழியை நாங்கள் ஏற்கனவே கண்டுபிடித்துவிட்டோம். இனி அல்சைமர் நோயை எதிர்ப்பதற்கு நாங்கள் எங்கள் சுண்டுவிரலைக்கூட உயர்த்தப் போவதில்லை. மக்கள் அந்நோயால் மரணமடைந்தால் அது பற்றி எங்களுக்குக் கவலையில்லை," என்று அவர்கள் ஒருபோதும் கூற மாட்டார்கள். 'தொண்ணூறு வயதுவரை வாழுவதற்கான உரிமை' மக்களுக்கு இருக்கிறது என்று 'மனித உரிமைகளுக்கான உலகளாவிய பிரகடனம்'

கூறவில்லை. மாறாக, வாழுவதற்கான உரிமை ஒவ்வொரு மனிதனுக்கும் இருக்கிறது என்றுதான் அது முழங்குகிறது. காலாவதியாகும் நாள் எனும் முத்திரை எதுவும் அந்த உரிமைமீது குத்தப்படவில்லை.

அறிவியலறிஞர்களும் சிந்தனையாளர்களும் இன்று அது பற்றி அதிக வெளிப்படையாகப் பேசுவது தொடர்ந்து அதிகரித்து வருகிறது. மரணத்தை வெற்றி கொண்டு, மனிதர்களுக்கு நிரந்தரமான இளமையை வழங்குவதுதான் நவீன மருத்துவத்தின் மிக முக்கியமான பணித்திட்டமாகும். முதுமையியல் மருத்துவரான ஆபுரே த கிரேயும், பல்துறை அறிஞரும் கண்டுபிடிப்பாளருமான ரே கர்ஸ்வெயிலும் இதற்கான குறிப்பிடத்தக்க எடுத்துக்காட்டுகளாவர். 1999ம் ஆண்டுக்கான 'தொழில்நுட்பம் மற்றும் புதுமைக்கான அமெரிக்க தேசியப் பதக்கத்தை' கர்ஸ்வெயில் வென்றார். 2012ல் கூகுள் நிறுவனத்தில் பொறியியல் துறையின் இயக்குநராக அவர் நியமிக்கப்பட்டார். ஓராண்டுக்குப் பிறகு, கேலிகோ என்ற துணை நிறுவனம் ஒன்றை கூகுள் துவக்கியது. 'மரணப் பிரச்சனையைத் தீர்ப்பது' என்பதுதான் அந்நிறுவனத்தின் குறிக்கோளாகும். இறவாநிலையில் உண்மையான நம்பிக்கை கொண்டிருந்த இன்னொரு நபரான பில் மாரிஸ் 2009ல் 'கூகுள் வென்சர்ஸ்' என்ற முதலீட்டு நிறுவனத்தின் தலைவராக கூகுளால் நியமிக்கப்பட்டார். 2015ம் ஆண்டு ஜனவரி மாதத்தில் அவர் ஒரு பேட்டியில், "500 வயதுவரை உயிர்வாழ முடியுமா என்று நீங்கள் இன்று என்னிடம் கேட்டால், ஆமாம் என்பதுதான் என்னுடைய பதில்," என்று கூறினார். அவருடைய துணிச்சலான வார்த்தைகளுக்குப் பக்கபலமாக ஏகப்பட்டப் பணம் அவரிடம் இருக்கிறது. 200 கோடி டாலர்கள் பெறுமானமுள்ள கூகுள் வென்சர்ஸ் நிறுவனம், அதில் 36 சதவீதப் பணத்தைப் பல உயிரறிவியல் நிறுவனங்களைத் துவக்குவதில் முதலீடு செய்து கொண்டிருக்கிறது. குறிப்பாக, வாழ்நாளை நீட்டிப்பதற்கான பணித்திட்டங்கள் பலவற்றில் அது முதலீடு செய்து கொண்டிருக்கிறது. மரணத்திற்கு எதிரான சண்டையை அமெரிக்கக் கால்பந்து உவமையைப் பயன்படுத்தி அவர் இவ்வாறு விளக்கினார்: "நாங்கள் ஒருசில கஜ தூரம் மட்டும் முன்னேறிச் செல்ல விரும்பவில்லை. நாங்கள் இந்தப் போட்டியில் வெற்றி பெற முயற்சித்துக் கொண்டிருக்கிறோம்." அது ஏன் என்ற கேள்விக்கு, "ஏனெனில், இறப்பதைவிட வாழுவது சிறந்தது," என்று அவர் பதிலளித்தார்.

'சிலிக்கான் பள்ளத்தாக்கு' என்று பிரபலமாக அழைக்கப்படுகின்ற சான்பிரான்சிஸ்கோவின் தென்பகுதியில் உள்ள தொழில்நுட்ப

மேதைகளும் அப்படிப்பட்டக் கனவுகளைக் கொண்டுள்ளனர். தான் என்றென்றும் நிரந்தரமாக வாழ விரும்புவதாக 'பேபால்' நிறுவனத்தின் சக நிறுவனரான பீட்டர் தியல் சமீபத்தில் வெளிப்படையாக அறிவித்தார். "மரணத்தை மூன்று முக்கிய வழிகளில் அணுகலாம் என்று நான் நினைக்கிறேன். ஒன்று, நீங்கள் அதை ஏற்றுக் கொள்ளலாம், அல்லது அதை மறுக்கலாம், அல்லது அதை எதிர்த்துச் சண்டையிடலாம். நம்முடைய சமுதாயத்தில், ஏற்றுக் கொள்ளுபவர்களும் மறுப்பவர்களும்தான் மிக அதிக எண்ணிக்கையில் இருக்கின்றனர் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால் நான் மரணத்தை எதிர்த்துச் சண்டையிட விரும்புகிறேன்," என்று அவர் கூறினார். இதெல்லாம் வெறும் விடலைப்பருவக் கனவுகள் என்று பலர் இத்தகைய முழக்கங்களை உதாசீனப்படுத்தக்கூடும். ஆனால், தியல் சாதாரணமானவர் அல்லர். சிலிக்கான் பள்ளத்தாக்குப் பகுதியில் மிகவும் வெற்றிகரமான மற்றும் செல்வாக்குமிக்கத் தொழிலதிபர்களில் ஒருவர் அவர். அவருடைய தனிப்பட்டச் சொத்து மதிப்பு 220 கோடி டாலர்கள். 'சமத்துவம் வெளியேற்றப்பட்டுவிட்டது, இறவாநிலை உள்ளே அடியெடுத்து வைத்துக் கொண்டிருக்கிறது' என்பதற்கான அறிகுறி தெளிவாகத் தெரிகிறது.

திசுக்கள், உயிரணுக்கள், உறுப்புகள் போன்றவற்றை மீண்டும் புதுப்பிப்பதை உள்ளடக்கிய மருத்துவம், மரபுப் பொறியியல், நேனோதொழில்நுட்பம் போன்ற துறைகளின் அதிவேக வளர்ச்சி, அதிக நேர்மறையான தீர்க்கதரிசனங்களை ஊக்குவிக்கிறது. 2200ம் ஆண்டுக்குள் மனிதர்கள் மரணத்திலிருந்து மீண்டுவிடுவர் என்று சில வல்லுநர்கள் நம்புகின்றனர். கர்ஸ்வெயிலும் ஆபுரேயும் இன்னும் அதிக நேர்மறையான நம்பிக்கை கொண்டுள்ளனர். 2050ல் ஆரோக்கியமான ஓர் உடலையும் செழிப்பான ஒரு வங்கிக் கணக்கையும் கொண்ட எவரொருவரும் இறவாநிலையை அடையக்கூடிய சாத்தியம் உள்ளவர்களாக இருப்பர் என்று அவர்கள் உறுதியாகக் கூறுகின்றனர். ஒரு நேரத்தில் பத்தாண்டுகள் என்ற கணக்கில் மரணத்தை அவர்களால் ஏய்க்க முடியும். பத்தாண்டுகளுக்கு ஒரு முறை ஒரு மருத்துவமனைக்குச் சென்று அவர்களால் ஓர் ஒட்டுமொத்தச் சிகிச்சை பெற்றுக் கொள்ள முடியும் என்று கர்ஸ்வெயிலும் ஆபுரேயும் கூறுகின்றனர். அச்சிகிச்சை நம்முடைய நோய்களை குணப்படுத்துவதோடு மட்டுமல்லாமல், அழுகிக் கொண்டிருக்கின்ற திசுக்களைப் புதுப்பிக்கும், கைகளையும் கண்களையும் மூளையையும் மேம்படுத்தும். பத்து ஆண்டுகள் கழித்து மீண்டும் அந்நபர் அந்த மருத்துவமனைக்குச் சிகிச்சைக்காக வரும்போது, ஏகப்பட்டப் புதிய மருந்துகளையும் மேம்பாடுகளையும்

மருத்துவக் கருவிகளையும் மருத்துவர்கள் கண்டுபிடித்திருப்பர். கர்ஸ்வெயிலும் ஆபுரேயும் கூறுவது சரியாக இருந்தால், சாவற்றவர்கள் சிலர் ஏற்கனவே தெருவில் உங்களுக்குப் பக்கத்தில் நடந்து சென்று கொண்டிருக்கக்கூடும். குறிப்பாக, நியூயார்க் நகரிலுள்ள வால்ஸ்டிரீட் அல்லது ஐந்தாம் அவென்யூ பகுதிகளில் நீங்கள் அந்த அனுபவத்தைப் பெறக்கூடும்.

உண்மையில், அவர்கள் இறவாநிலையை அடைந்திருக்க மாட்டார்கள், ஆனால் சிரஞ்சீவியாக ஆகியிருப்பார்கள். கடவுளைப் போலன்றி, எதிர்கால அதிமனிதர்கள் ஏதேனும் போரிலோ அல்லது விபத்திலோ இறக்கக்கூடும், எதுவும் அவர்களை மீண்டும் உயிர்ப்பிக்காது. ஆனால், என்றேனும் ஒருநாள் இறக்கவிருக்கின்ற நம்மைப் போன்றவர்களைப் போலன்றி, அவர்களுடைய வாழ்க்கைக்குக் 'காலாவதியாகும் நாள்' எதுவும் இருக்காது. எனவே, ஏதேனும் ஒரு வெடிகுண்டு அவர்களைத் தாக்கி அவர்களைத் துண்டுதுண்டாக ஆக்காதவரை, அல்லது ஏதேனும் லாரி அவர்கள்மீது ஏறிச் செல்லாதவரை, அவர்கள் தொடர்ந்து வாழ்ந்து கொண்டே இருக்கலாம். இதுதான் அவர்களை வரலாற்றில் மிகவும் அதிகமாகக் கவலைப்படுகின்ற நபர்களாக ஆக்கப் போகிறது. நிரந்தரமற்ற வாழ்க்கையை வாழுகின்ற நாம் தினமும் நம் வாழ்க்கையில் சவால்களை எதிர்கொள்ளத் தயாராக இருக்கிறோம். ஏனெனில், அவை எப்படியோ முடிவுக்கு வந்துவிடும் என்பதை நாம் அறிவோம். எனவே, நாம் இமயமலையில் நடைப்பயணம் மேற்கொள்ளுகிறோம், கடலில் நீந்துகிறோம், தெருவைக் கடந்து செல்லுதல் அல்லது வெளியே உணவருந்துதல் போன்ற ஆபத்தான விஷயங்கள் பலவற்றைச் செய்கிறோம். ஆனால், உங்களால் என்றென்றும் உயிர்வாழ முடியும் என்று நீங்கள் நம்பினால், நீங்கள் இத்தகைய காரியங்களில் ஈடுபட மாட்டீர்கள்.

எனவே, நாம் சற்று மிதமான இலக்குகளிலிருந்து துவக்குவது நல்லது. முதலில் நம்முடைய ஆயுட்காலத்தை இரட்டிப்பாக்குவதைப் பற்றி யோசிக்கலாம். இருபதாம் நூற்றாண்டில் ஆயுட்காலத்தை நாற்பதிலிருந்து எழுபது ஆண்டுகளாக நாம் கிட்டத்தட்ட இரட்டிப்பாக்கியிருக்கிறோம். எனவே, இருபத்தோராம் நூற்றாண்டில், அதை 150 ஆண்டுகளாகவாவது நம்மால் ஆக்க முடிய வேண்டும். இது சிரஞ்சீவி நிலையல்ல என்றாலும், மனிதச் சமுதாயத்தில் இது புரட்சிகரமான மாற்றங்களை ஏற்படுத்தும். முதலில், குடும்ப அமைப்புமுறை, திருமண உறவுகள், குழந்தைகளுக்கும் பெற்றோருக்கும் இடையேயான உறவுகள் ஆகியவை மாற்றமடையும். இன்று, 'மரணம்

நம்மைப் பிரிக்கும்வரை' தங்கள் மணவாழ்வில் தாங்கள் இணை பிரியாமல் இருக்கப் போவதாக மக்கள் எதிர்பார்க்கின்றனர். குழந்தைகளைப் பெற்று வளர்ப்பதைச் சுற்றியே வாழ்வின் பெரும்பகுதி அமைகிறது. இப்போது 150 ஆண்டுகள் ஆயுட்காலத்தைக் கொண்ட ஒருவரைக் கற்பனை செய்து பாருங்கள். அவருடைய திருமணம் 110 ஆண்டுகள் நீடிக்கும் என்று எதிர்பார்ப்பது யதார்த்தமானதாக இருக்குமா? கத்தோலிக்க அடிப்படைவாதிகள்கூட இதை ஒப்புக் கொள்ள மறுப்பர். எனவே, தற்போது நிலவி வருகின்ற, திருமணம்-விவாகரத்து-மறுதிருமணம் என்ற முடிவற்றப் போக்கு எதிர்காலத்தில் மேலும் தீவிரமடையும் நிலைதான் உள்ளது. தன்னுடைய நாற்பதுகளில் இரண்டு குழந்தைகளைப் பெற்று வளர்க்கும் ஒரு பெண், 120வது வயதை எட்டும்போது, அவர் அக்குழந்தைகளை வளர்த்தெடுத்த ஆண்டுகள் ஒரு தொலைதூர நினைவாகவே அவருக்கு இருக்கும். ஏனெனில், அவருடைய நீண்ட வாழ்க்கையில் அது ஒரு சிறு அத்தியாயம்தான். அப்படிப்பட்டச் சூழல்களில், பெற்றோருக்கும் குழந்தைகளுக்கும் இடையே எத்தகைய புதிய உறவு உருவாகும் என்பதைக் கூறுவது கடினமானதாக இருக்கும்.

அல்லது தொழில்வாழ்க்கையை எடுத்துக் கொள்ளுங்கள். நாம் நம்முடைய விடலைப்பருவத்திலும் இருபதுகளிலும் ஒரு தொழிலைக் கற்றுக் கொண்டு, பிறகு நம் எஞ்சிய வாழ்நாள் முழுவதையும் அதே வேலையில்தான் நாம் கழிப்போம் என்று இன்று நாம் அனுமானிக்கிறோம். உங்களுடைய நாற்பதுகளிலும் ஐம்பதுகளிலும்கூட நீங்கள் புதிய விஷயங்களைக் கற்றுக் கொள்ளத்தான் செய்கிறீர்கள். ஆனால், வாழ்க்கை என்பது பொதுவாக இரண்டு காலகட்டங்களாகப் பிரிக்கப்படுகிறது. முதலாவது, நீங்கள் கற்கின்ற காலகட்டம். இரண்டாவது, நீங்கள் வேலை செய்கின்ற காலகட்டம். ஆனால், நீங்கள் 150 வயதுவரை வாழுகிறீர்கள் என்றால், இது சரிப்பட்டு வராது. குறிப்பாக, புதிய தொழில்நுட்பங்கள் தொடர்ந்து நம்மைப் புரட்டிப் போட்டுக் கொண்டிருக்கின்ற ஓர் உலகில் வாழ்க்கையை வெறுமனே அந்த இரண்டு காலகட்டங்களாகப் பிரிப்பது எந்த விதத்திலும் உதவாது. மக்கள் மிக நீண்டகாலம் வேலை செய்வர். எனவே, அவர்கள் தங்களுடைய தொண்ணூறாவது வயதில்கூடத் தொழில்ரீதியாகத் தங்களை மீண்டும் மீண்டும் புதுப்பித்துக் கொள்ள வேண்டிய கட்டாயம் இருக்கும்.

அதே நேரத்தில், மக்கள் தங்களுடைய அறுபத்தைந்தாவது வயதில் பணியிலிருந்து ஓய்வு பெற மாட்டார்கள், புதுமையான யோசனைகளையும் விருப்பங்களையும் கொண்ட புதிய தலைமுறைக்கு

அவர்கள் வழிவிட மாட்டார்கள். 'ஒரு நேரத்தில் ஓர் இறுதிச் சடங்கு என்ற கணக்கில் அறிவியல் முன்னேறுகிறது' என்பது இயற்பியலாளரான மேக்ஸ் பிளாங்க்கின் பிரபலமான கூற்று. அதாவது, ஒரு தலைமுறை மடிந்து போகும்போதுதான், பழைய கோட்பாடுகளை வேரறுத்துத் தூக்கியெறிவதற்கான வாய்ப்பு புதிய கோட்பாடுகளுக்குக் கிடைக்கிறது என்பது அவருடைய கருத்து. இது அறிவியலின் விஷயத்தில் மட்டும் உண்மையல்ல. நீங்கள் இப்போது வேலை பார்க்கின்ற இடத்தைப் பற்றி ஒரு கணம் நினைத்துப் பாருங்கள். நீங்கள் ஓர் அறிஞராக இருந்தாலும் சரி, அல்லது ஒரு பத்திரிகையாளராக, சமையற்காரராக, அல்லது கால்பந்து விளையாட்டு வீரராக இருந்தாலும் சரி, உங்கள் மேலதிகாரி 120 வயதுக்காரராக இருந்து, இன்னும் இருபது ஆண்டுகளுக்கு அவரே உங்களுடைய மேலதிகாரியாக நீடிப்பார் என்றால் அது உங்களுக்குள் எத்தகைய உணர்வுகளைத் தோற்றுவிக்கும்? அவருடைய யோசனைகளும் கருத்துக்களும் விக்டோரியா பேரரசி ஆட்சி செய்து கொண்டிருந்த காலத்தில் உருவாக்கப்பட்டவை என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

அரசியல் தளத்தில் விளைவுகள் இன்னும் அதிகக் கேடு விளைவிப்பவையாக இருக்கும். ரஷ்ய அதிபரான விளாடிமிர் புடின் இன்னும் தொண்ணூறு ஆண்டுகளுக்கு வாழுவது உங்களுக்கு சம்மதமா? இன்னொரு விஷயத்தை நினைத்துப் பாருங்கள். மக்கள் 150 வயதுவரை வாழ்ந்தால், இன்றும் ஸ்டாலின் மாஸ்கோவில் ஆட்சி செய்து கொண்டிருப்பார். அவருக்கு 140 வயதுதான் ஆகியிருக்கும். மாசேதுங் 125 வயது கொண்ட ஒரு நடுத்தர வயதுக்காரராக இருப்பார். எலிசபெத் இளவரசி, 123 வயது மன்னரான ஆறாம் ஜார்ஜிடமிருந்து ஆட்சியை சுவீகரிப்பதற்காகக் காத்துக் கொண்டிருப்பார். அவருடைய மகன் சார்லஸுக்கு ஆட்சிப் பொறுப்பு 2076ம் ஆண்டுவரை கிடைக்காது.

நாம் இப்போது யதார்த்தத்திற்கு வரலாம். கர்ஸ்வைல் மற்றும் ஆபுரேயின் தீர்க்கதரிசனங்கள் 2050ல் அல்லது 2100ல் மெய்யாகும் என்பது நிச்சயமில்லை. இருபத்தோராம் நூற்றாண்டில் எல்லோரும் நிரந்தரமான இளமையைப் பெற்றுவிடுவர் என்ற நம்பிக்கை சற்று அவசரத்தனமானது என்பது என் கருத்து. யாரெல்லாம் அந்த நம்பிக்கையைத் தீவிரமாக எடுத்துக் கொள்ளுகிறார்களோ, அவர்களுக்கு ஏமாற்றமே மிஞ்சும். நீங்கள் என்றேனும் ஒருநாள் இறக்கப் போகிறீர்கள் என்ற அறிதலோடு வாழுவது சுலபமானதல்ல. ஆனால், இறவாநிலையில் நம்பிக்கை கொண்டு, அந்த நம்பிக்கை பொய்யானது என்று நிரூபணமாகும்போது அது இன்னும் அதிகக்

கடினமானதாக இருக்கும்.

கடந்த நூறு ஆண்டுகளில் சராசரி ஆயுட்காலம் இரட்டிப்பாகியுள்ளபோதிலும், இனி வரும் நூற்றாண்டில் அதை 150 ஆண்டுகளாக மீண்டும் இரட்டிப்பாக்க முடியும் என்ற முடிவுக்கு வருவது நியாயமானதல்ல. 1900ல் உலகளாவிய ஆயுட்காலம் நாற்பது ஆண்டுகளுக்கும் குறைவாகவே இருந்தது. ஏனெனில், ஊட்டச்சத்துக் குறைவு, கொள்ளைநோய்கள், வன்முறை ஆகியவற்றால் பலர் இளவயதிலேயே இறந்தனர். ஆனால், பஞ்சம், கொள்ளைநோய், போர் ஆகியவற்றிலிருந்து தப்பிப் பிழைத்தவர்கள் எழுபது மற்றும் எண்பது வயதைக் கடந்தும் வாழ்ந்தனர். அதுதான் ஹோமோ சேப்பியன்ஸின் இயல்பான ஆயுட்காலம். முந்தைய நூற்றாண்டுகளில், எழுபது வயதுக்காரர்கள் இயற்கைக்கு மாறானவர்களாகப் பார்க்கப்பட்டதாகப் பரவலாகக் கருதப்படுகிறது. ஆனால் அது உண்மையல்ல. நுண்ணுயிரிக்கொல்லிகள், தடுப்பு மருந்தேற்றங்கள், உறுப்பு மாற்று அறுவைச் சிகிச்சைகள் போன்றவற்றின் உதவியின்றி கலீலியோ கலிலி 77 வயதுவரையும், ஐசக் நியூட்டன் 84 வயதுவரையும், மைக்கேல் ஏஞ்சலோ 88 வயதுவரையும் வாழ்ந்தனர். காடுகளில் இருக்கும் சிம்பன்ஸிகள்கூட சில சமயங்களில் அறுபது வயதைத் தாண்டி வாழுகின்றன.

உண்மையில், நவீன மருத்துவம் நம்முடைய இயற்கையான ஆயுட்காலத்தை ஓராண்டுகூட நீட்டிக்கவில்லை. உரிய வயதுக்கு முன்னதாகவே நாம் இறப்பதிலிருந்து நம்மைப் பாதுகாத்து, நாம் நம்முடைய முழு வாழ்நாளையும் மகிழ்ச்சியாக அனுபவித்து வாழ நமக்கு உதவியிருப்பதுதான் நவீன மருத்துவத்தின் மாபெரும் சாதனையாகும். இப்போது புற்றுநோயிலிருந்தும் நீரிழிவு நோயிலிருந்தும் இன்னும் பிற கொடிய நோய்களிலிருந்தும் நாம் மீண்டாலும்கூட, கிட்டத்தட்ட எல்லோரும் தொண்ணூறு வயதுவரை மட்டுமே வாழுவார்கள் என்றுதான் அது அர்த்தமாகும். ஆனால், 150 வயதை அடைய அது போதுமானதாக இருக்காது. எனவே, 500 வயதுவரை வாழுவதைப் பற்றிப் பேச வேண்டியதே இல்லை. இது சாத்தியமாவதற்கு, மருத்துவம் மனித உடலின் மிக அடிப்படைக் கட்டமைப்புகளையும் செயல்முறைகளையும் மறுவடிவமைப்பு செய்தாக வேண்டும், உடலுறுப்புகளையும் திசுக்களையும் எப்படி மீண்டும் புதிதாக உருவாக்குவது என்பதைக் கண்டுபிடித்தாக வேண்டும். 2100ம் ஆண்டுக்குள் இதை நம்மால் சாதிக்க முடியும் என்பதற்குத் தெளிவான காரணங்கள் எதுவும் இல்லை.

ஆனாலும், மரணத்திலிருந்து மீளுவதற்கு மேற்கொள்ளப்பட்ட

முயற்சிகளில் தோல்வியைத் தழுவும் ஒவ்வொரு முயற்சியும் அந்த இலக்கிற்கு ஓரடி அருகே நம்மை அழைத்துச் செல்லும். இது இன்னும் அதிக நம்பிக்கையை வளர்த்தெடுத்து, மேலும் அதிகமான முயற்சிகளை மேற்கொள்ளுவதற்கு மக்களை ஊக்குவிக்கும். கூகுள் நிறுவனத்தை நிறுவிய செர்ஜி பிரின்னும் லேரி பேஜும் இறவாநிலையை அடையும் விதத்தில், மரணம் எனும் பிரச்சனைக்குச் சரியான நேரத்தில் தீர்வு காணுவது அவர்களுடைய கேலிகோ நிறுவனத்திற்கு சாத்தியப்படாது என்றாலும், உயிரணு உயிரியல், மரபியல் மருந்துகள், மனித ஆரோக்கியம் ஆகியவற்றைப் பற்றிய குறிப்பிடத்தக்கக் கண்டுபிடிப்புகளை அது நிச்சயமாக நிகழ்த்தும். எனவே, கூகுளின் அடுத்தத் தலைமுறையினர், மரணத்திற்கு எதிரான தாக்குதலைப் புதிய மற்றும் சிறப்பான நிலைகளிலிருந்து துவக்குவது சாத்தியப்படும். இறவாநிலை பற்றிக் கூச்சலிடுகின்ற அறிவியலறிஞர்கள் 'புலி வந்துவிட்டது' என்று கத்திய அந்தச் சிறுவனைப் போன்றவர்கள்தான். இன்றோ அல்லது நாளையோ அந்தப் புலி நிச்சயமாக வந்துவிடும்.

எனவே, நாம் நம்முடைய வாழ்நாளில் இறவாநிலையை அடையாவிட்டாலும்கூட, மரணத்திற்கு எதிரான சண்டைதான் இனி வரும் நூற்றாண்டின் முக்கியப் பணித்திட்டமாக இருக்கும். மனித வாழ்க்கை புனிதமானது என்று நாம் கொண்டுள்ள நம்பிக்கையையும், அறிவியல் துறையின் இயல்பையும், அதோடு முதலாளித்துவப் பொருளாதாரத்தின் தேவைகளையும் கணக்கில் எடுத்துக் கொண்டால், மரணத்திற்கு எதிரான தொடர்ச்சியான போர் ஒன்று தவிர்க்கப்பட முடியாததாக ஆகிவிடுகிறதுபோலத் தெரிகிறது. மனித வாழ்க்கை குறித்து நாம் கொண்டுள்ள கொள்கைரீதியான அர்ப்பணிப்பு, மனித மரணத்தை நாம் ஏற்றுக் கொள்ள நம்மை ஒருபோதும் அனுமதிக்காது. மக்கள் ஏதோ ஒன்றால் இறந்து கொண்டிருக்கும்வரை, அதிலிருந்து மீளுவதற்கு நாம் இன்னும் அதிகக் கடுமையாக முயற்சி செய்து கொண்டே இருப்போம்.

அறிவியல் அமைப்புகளும் முதலாளித்துவப் பொருளாதாரமும் இப்போராட்டத்திற்கு ஆதரவளிக்கத் தயாராக இருக்கும். புதிய கண்டுபிடிப்புகளை நிகழ்த்துவதற்கும் மிகப் பெரிய லாபங்களை ஈட்டுவதற்கும் வாய்ப்புக் கிடைக்கும் பட்சத்தில், தாங்கள் எந்தப் பணித்திட்டத்தில் ஈடுபட்டிருக்கிறோம் என்பது பற்றிப் பெரும்பாலான அறிவியலறிஞர்களும் வங்கியாளர்களும் அக்கறை கொள்ளுவதில்லை. மரணத்தை சாமர்த்தியமாகத் தோற்கடிப்பதைவிட அதிக உற்சாகமளிக்கக்கூடிய ஏதேனும் அறிவியல் சவாலையோ, அல்லது நிரந்தரமான இளமைக்கான சந்தையைவிட அதிகமாக ஊக்குவிக்கின்ற

ஒரு சந்தையையோ உங்களால் கற்பனை செய்ய முடியுமா? நீங்கள் நாற்பது வயதைக் கடந்தவர் என்றால், ஒரு நிமிடம் உங்கள் கண்களை மூடிக் கொண்டு, இருபத்தைந்து வயதில் நீங்கள் பெற்றிருந்த உடலை நினைத்துப் பார்க்க முயற்சி செய்யுங்கள். அதன் தோற்றம் எப்படி இருந்தது என்பதை மட்டுமல்லாமல், அது உங்களுக்குள் எத்தகைய உணர்வை ஏற்படுத்தியது என்பதையும் நினைவுகூருங்கள். அந்த உடலை உங்களால் திரும்பப் பெற முடிந்தால், அதற்காக நீங்கள் எவ்வளவு விலையைக் கொடுக்கத் தயாராக இருப்பீர்கள்? சிலர் அந்த வாய்ப்பை மகிழ்ச்சியாக விட்டுத்தள்ளுவர் என்பதில் சந்தேமில்லை, ஆனால் போதுமான வாடிக்கையாளர்கள் அதற்காக எந்தவொரு விலையையும் கொடுப்பார்கள். இதன் மூலம், கிட்டத்தட்ட நிரந்தரமான ஒரு சந்தையை அவர்கள் உருவாக்குவார்கள்.

இதெல்லாம் போதாதென்றால், பெரும்பான்மையான மக்களிடத்தில் ஆழமாகப் பதிந்துள்ள மரண பயம், மரணத்திற்கு எதிரான சண்டைக்கு எதிர்க்கப்பட முடியாத ஒரு வேகத்தைக் கொடுக்கும். மரணம் தவிர்க்கப்பட முடியாதது என்று மக்கள் அனுமானித்தவரை, என்றென்றும் வாழுவதற்கான ஆசையை அடக்கிக் கொள்ளுவதற்குச் சிறு வயதிலிருந்தே அவர்கள் தங்களைப் பழக்கப்படுத்திக் கொண்டனர் அல்லது அதற்கு பதிலாக மாற்று இலக்குகளை அவர்கள் வகுத்துக் கொண்டனர். என்றென்றும் வாழ வேண்டும் என்பது மக்களுடைய விருப்பமாக இருப்பதால், 'காலத்தால் அழியாத' சிம்பொனி இசையை அவர்கள் உருவாக்குகின்றனர், ஏதோ போரில் 'நிரந்தரப் புகழை' சம்பாதிப்பதற்காக அவர்கள் கடுமையாக முயற்சி செய்கின்றனர், அல்லது தங்களுடைய ஆன்மாக்கள் 'சொர்க்கத்தில் நிரந்தரமான பேரானந்தத்தை அனுபவிப்பதற்காக' அவர்கள் தங்களுடைய உயிர்களைக்கூடத் தியாகம் செய்கின்றனர். நம்முடைய கலைத்திறன் சார்ந்த படைப்பாற்றல், நம்முடைய அரசியல்ரீதியான அர்ப்பணிப்பு, நம்முடைய மதரீதியான அர்ப்பணிப்பு ஆகியவற்றின் பெரும்பகுதி மரணம் குறித்த பயத்தால்தான் தூண்டப்படுகிறது.

மரணம் குறித்த பயத்தை மையமாகக் கொண்டு திரைப்படங்களை இயக்கி அற்புதமான ஒரு தொழில்வாழ்க்கையை உருவாக்கிக் கொண்டுள்ள உட்டி ஆலன் என்ற ஹாலிவுட் நடிகரிடம் ஒருமுறை ஒரு பத்திரிகையாளர், "நீங்கள் வெள்ளித் திரையில் என்றென்றும் வாழுவீர்கள் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?" என்று கேட்டபோது, அதற்கு அவர், "நான் என் சொந்த வீட்டில் வாழவே விரும்புகிறேன். என் வேலையின் மூலம் இறவாநிலையை அடைவதைவிட, இறவாமல் இருப்பதன் மூலமே நான் அதை அடைய விரும்புகிறேன்," என்று

பதிலளித்தார். நிரந்தரப் புகழ், தேசியவாதிகளுக்குப் புகழஞ்சலி செலுத்தும் விழாக்கள், சொர்க்கத்தைப் பற்றிய கனவுகள் ஆகியவை உட்டி ஆலனைப் போன்ற மனிதர்களுடைய 'இறவாமல் இருத்தல்' விருப்பத்திற்கான மிக மோசமான மாற்றுகளாகும். பொருத்தமான காரணத்துடனோ அல்லது எந்தக் காரணமும் இன்றியோ, மரணத்திலிருந்து தப்பிப்பதற்கான ஒரு நல்ல வாய்ப்பு தங்களுக்கு இருப்பதாக மக்கள் நினைத்துவிட்டால், வாழ்க்கை குறித்த ஆழ்விருப்பமானது, கலை, கொள்கை, மதம் ஆகியவற்றை உள்ளடக்கிய, நொறுங்கிவிடக்கூடிய நிலையில் உள்ள வண்டியைத் தொடர்ந்து இழுத்துச் செல்ல மறுத்துவிடும். மாறாக, ஒரு பனிச்சரிவைப்போல அது முன்னோக்கிப் பாய்ந்து செல்லும்.

சுட்டெரிக்கும் கண்களையும் நீண்ட தாடிகளையும் கொண்ட மத வெறியர்கள் இரக்கமற்றவர்கள் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அப்படியானால், நிரந்தரமான வாழ்க்கைக்கான அமுதம் தங்கள் கைக்கெட்டும் தூரத்தில் இருப்பதாக நினைக்கும்போது முதிய தொழிலதிபர்களும் ஹாலிவுட் நட்சத்திரங்களும் என்ன செய்வார்கள் என்பதைப் பொறுத்திருந்து பாருங்கள். மரணத்திற்கு எதிரான போரில் அறிவியல் குறிப்பிடத்தக்க முன்னேற்றத்தை அடையும்போது, உண்மையான யுத்தம் பரிசோதனைக்கூடங்களில் இருந்து பாராளுமன்றங்களுக்கும் நீதிமன்றங்களுக்கும் தெருக்களுக்கும் இடம்பெயரும். அறிவியல் முயற்சிகள் வெற்றி வாகை சூடும்போது, அவை மோசமான அரசியல் சச்சரவுகளைத் தூண்டும். வரலாற்றின் அனைத்துப் போர்களும் சச்சரவுகளும், எதிர்காலத்தில் நாம் எதிர்கொள்ளவிருக்கின்ற உண்மையான போராட்டமான 'நிரந்தர இளமைக்கான' போராட்டத்தின் முன்பு ஒரு தூசுபோலப் பார்க்கப்படும்.

## மகிழ்ச்சியைக் கைவசப்படுத்துவதற்கான உரிமை

மனிதன் எதிர்கொண்டுள்ள சவால்களில் இரண்டாவது பெரிய பணித்திட்டம் மகிழ்ச்சிக்கான அடிப்படைக் காரணத்தைக் கண்டுபிடிப்பதாகத்தான் இருக்கும். வாழ்க்கையைவிட மகிழ்ச்சிதான் மிகவும் மேன்மையானது என்று வரலாறு நெடுகிலும் எண்ணற்றச் சிந்தனையாளர்களும் தீர்க்கதரிசிகளும் சாதாரண மக்களும் வரையறுத்து வந்துள்ளனர். கடவுளை வழிபடுவது ஒரு நேர விரயம் என்றும், மரணத்திற்குப் பிந்தைய இருத்தல் எதுவும் இல்லை என்றும், மகிழ்ச்சிதான் வாழ்வின் ஒரே நோக்கம் என்றும் பண்டைய கிரேக்கத் தத்துவவியலாளரான எபிகியூரஸ் விளக்கினார். பண்டைய

காலகட்டங்களில் பெரும்பாலான மக்கள் அவருடைய கோட்பாட்டை நிராகரித்தனர், ஆனால் இன்று அதுவே பொதுவான கண்ணோட்டமாக ஆகியுள்ளது. மரணத்திற்குப் பிந்தைய வாழ்க்கை குறித்த சந்தேகம் இறவாநிலையை மட்டுமல்லாமல் பூலோக மகிழ்ச்சியையும் நாடிச் செல்லுவதற்கு மனிதகுலத்தை உந்தித் தள்ளுகிறது. நிரந்தரத் துயரத்தில் வாழ யார்தான் விரும்புவார்கள்?

எபிகியூரஸைப் பொருத்தவரை, மகிழ்ச்சி குறித்தத் தேடல் ஒரு தனிப்பட்டத் தேடலாக இருந்தது. நவீனச் சிந்தனையாளர்கள் இதற்கு நேர்மாறாக அதை ஒரு கூட்டுப் பணித்திட்டமாகப் பார்க்கின்றனர். அரசாங்கத் திட்டங்கள், பொருளாதார வளங்கள், அறிவியல் ஆராய்ச்சிகள் ஆகியவை இல்லாமல், மகிழ்ச்சி குறித்தத் தங்களுடைய தேடலில் தனிநபர்களால் வெகுதூரம் முன்னேறிச் செல்ல முடியாது. உங்கள் நாடு ஒரு போரினால் சின்னாபின்னமாகிக் கொண்டிருந்தாலோ, உங்கள் நாட்டின் பொருளாதாரம் ஒரு நெருக்கடியான நிலையில் இருந்தாலோ, அல்லது உங்கள் நாட்டில் நலவாழ்வுத் திட்டம் எதுவும் இல்லை என்றாலோ, நீங்கள் துயரத்தை அனுபவிக்கக்கூடும். 'மாபெரும் எண்ணிக்கையிலான மக்கள் மாபெரும் மகிழ்ச்சியை அனுபவிப்பதுதான்' மிக உன்னதமான விஷயம் என்று பதினெட்டாம் நூற்றாண்டின் முடிவில் ஆங்கிலேயத் தத்துவவியலாளரான ஜெரமி பென்தம் கூறினார். உலகளாவிய மகிழ்ச்சியை அதிகரிப்பதுதான் நாடுகள், சந்தைகள், மற்றும் அறிவியல் சமூகங்களின் மதிப்பு வாய்ந்த ஒரே நோக்கம் என்று அவர் கூறினார். அவரைப் பொருத்தவரை, அரசியல்வாதிகள் அமைதியை உருவாக்க வேண்டும், தொழிலதிபர்கள் செழிப்பை வளர்த்தெடுக்க வேண்டும், அறிஞர்கள் இயற்கையை ஆய்வு செய்ய வேண்டும். இவையெல்லாம் அரசர்களுடைய பெருமைக்காகவோ அல்லது நாட்டின் பெருமைக்காகவோ அல்லது கடவுளின் புகழுக்காகவோ செய்யப்படக்கூடாது. மாறாக, நீங்களும் நானும் ஒரு மகிழ்ச்சியான வாழ்க்கையை வாழுவதை நோக்கமாகக் கொண்டே அவர்கள் அனைவரும் செயல்பட்டாக வேண்டும்.

பத்தொன்பது மற்றும் இருபதாம் நூற்றாண்டுகளில், பென்தமின் முன்னோக்கிற்குப் பலர் உதட்டளவில் போலி ஆதரவைத் தெரிவித்தாலும், அரசாங்கங்களும் பெருநிறுவனங்களும் பரிசோதனைக்கூடங்களும் சிறப்பாக வரையறுக்கப்பட்ட உடனடி இலக்குகள்மீதே கவனம் செலுத்தின. நாடுகள் தம்முடைய எல்லைகளின் அளவைக் கொண்டும், தம்முடைய மக்கட்தொகையின் அதிகரிப்பைக் கொண்டும், தம்முடைய மொத்த உற்பத்தியைக்

கொண்டுமே தம் வெற்றியை அளவிட்டனவே அன்றி, தம்முடைய குடிமக்களின் மகிழ்ச்சியைக் கொண்டு அல்ல. ஜெர்மனி, பிரான்ஸ், ஜப்பான் போன்ற தொழில்வள நாடுகள் மக்களுடைய கல்விக்காகவும் ஆரோக்கியத்திற்காகவும் நலனுக்காகவும் மாபெரும் அமைப்புமுறைகளை உருவாக்கின. ஆனால் இந்த அமைப்புமுறைகள் அனைத்தும் நாட்டை வலுப்படுத்துவதை நோக்கமாகக் கொண்டிருந்தனவே அன்றி, தனிநபருடைய நலனை உறுதி செய்வதை அல்ல.

நாட்டிற்கு விசுவாசத்தோடு சேவை செய்யக்கூடிய, திறமையான மற்றும் கீழ்ப்படிதல் மனப்போக்குக் கொண்ட குடிமக்களை உருவாக்குவதற்காகவே பள்ளிக்கூடங்கள் தோற்றுவிக்கப்பட்டன. பதினெட்டு வயதில், இளைஞர்களும் யுவதிகளும் நாட்டுப்பற்றுக் கொண்டவர்களாக மட்டுமல்லாமல் கல்வியறிவு பெற்றவர்களாகவும் இருந்தாக வேண்டியிருந்தது. ஏனெனில், தங்களுடைய படைத்தலைவரின் அன்றைய ஆணையைப் படிக்கவும், நாளைய போர்த்திட்டங்களை வகுக்கவும் அவர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டியிருந்தது. குண்டுகளின் ஏவுபாதையைக் கணக்கிடவும், எதிரியின் ரகசியக் குறியீடுகளைக் கண்டுபிடிக்கவும் அவர்களுக்குக் கணித அறிவு தேவையாக இருந்தது. கம்பியில்லாக் கருவிகளை இயக்கவும், பீரங்கிகளை ஓட்டிச் செல்லவும், போரில் காயப்பட்ட சக வீரர்களுக்குச் சிகிச்சையளிக்கவும் மின்னணுவியல், இயந்திரவியல், மருத்துவம் ஆகியவற்றிலும் அவர்களுக்குப் போதிய அறிவு இருக்க வேண்டியிருந்தது. அவர்கள் ராணுவச் சேவையை முடித்து ராணுவத்திலிருந்து வெளியேறியபோது, அவர்கள் எழுத்தர்களாகவும் ஆசிரியர்களாகவும் பொறியாளர்களாகவும் செயல்பட்டு, ஒரு நவீனப் பொருளாதாரத்தை உருவாக்குவதன் மூலமும் ஏகப்பட்ட வரிகளைச் செலுத்துவதன் மூலமும் நாட்டிற்குச் சேவை செய்ய வேண்டும் என்று அவர்களிடமிருந்து எதிர்பார்க்கப்பட்டது.

உடல்நலப் பராமரிப்பு அமைப்புமுறையின் விஷயத்திலும் இதுதான் நடந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முடிவில், பிரான்ஸ், ஜெர்மனி, ஜப்பான் போன்ற நாடுகள் தம்முடைய குடிமக்களுக்கு இலவச உடல்நலப் பராமரிப்புச் சேவையை வழங்கின. கைக்குழந்தைகளுக்கு நோய்த்தடுப்பு மருந்துகளுக்காகவும், சிறு குழந்தைகளுக்கு சரிவிகித உணவுக்காகவும், பருவவயதுக் குழந்தைகளுக்கு உடற்பயிற்சிக் கல்விக்காகவும் அவை நிதி ஒதுக்கின. அழுகிக் கொண்டிருந்த சதுப்பு நிலங்களை அவை மறுசீரமைத்தன, கொசுக்களை ஒழித்தன, கழிவுநீர் அமைப்புமுறைகளைக் கட்டியெழுப்பின.

நாட்டை வலிமைப்படுத்துவதை நோக்கமாகக் கொண்டே இத்தகைய முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டனவே அன்றி, மக்களை மகிழ்ச்சிப்படுத்துவதற்காக அல்ல. திடகாத்திரமான போர்வீரர்கள் மற்றும் தொழிலாளர்கள், அத்தகைய திடகாத்திரமான போர்வீரர்களையும் தொழிலாளர்களையும் ஈன்றெடுப்பதற்கு ஆரோக்கியமான பெண்கள், நோய்வாய்ப்பட்டு வீட்டில் படுத்துக் கிடப்பதற்கு பதிலாகத் துல்லியமாகக் காலை எட்டு மணிக்கு அலுவலகத்திற்கு வரக்கூடிய அதிகாரிகள் ஆகியோர் நாட்டுக்குத் தேவைப்பட்டனர்.

மக்கள் நலத் திட்டங்கள்கூட, உதவி தேவைப்பட்டத் தனிநபர்களுக்காக அல்லாமல் நாட்டின் நலனை மனத்தில் வைத்தே வகுக்கப்பட்டன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஜெர்மனியில் தொழிலாளர்களுக்கு ஓய்வூதியம் மற்றும் சமூகப் பாதுகாப்புத் திட்டங்களை ஓட்டோ வான் பிஸ்மார்க் அறிமுகப்படுத்தியபோது, தன் நாட்டு மக்கள் விசுவாசத்தோடு இருப்பதை உறுதி செய்வதுதான் அவருடைய நோக்கமாக இருந்ததே அன்றி, அவர்களுடைய நலனைப் பாதுகாப்பது அல்ல. உங்களுக்குப் பதினெட்டு வயதாக இருந்தபோது நீங்கள் உங்கள் நாட்டிற்காகச் சண்டையிட்டீர்கள், உங்களுடைய நாற்பதாவது வயதில் உங்கள் அரசாங்கத்திற்கு உங்கள் வரிகளைச் செலுத்தினீர்கள். ஏனெனில், நீங்கள் எழுபது வயதை எட்டும்போது அரசாங்கம் உங்களை கவனித்துக் கொள்ளும் என்று நீங்கள் நம்பினீர்கள்.

மறுக்கப்பட முடியாத மூன்று மனித உரிமைகளில், வாழுவதற்கான உரிமை, சுதந்திரத்திற்கான உரிமை ஆகியவற்றோடு கூடவே, மகிழ்ச்சியை நாடிச் செல்லுவதற்கான உரிமையும் ஒன்று என்று 1776ல் அமெரிக்காவின் தேசத் தந்தைகள் பிரகடனம் செய்தனர். ஆனால், அமெரிக்க சுதந்திரப் பிரகடனம், மகிழ்ச்சியை நாடிச் செல்லுவதற்கான உரிமைக்குத்தான் உத்தரவாதம் வழங்கியதே தவிர, மகிழ்ச்சிக்கு அல்ல என்பதை நீங்கள் கவனிக்க வேண்டும். தாமஸ் ஜெபர்சன், குடிமக்களின் மகிழ்ச்சிக்கு நாடுதான் பொறுப்பு என்று கூறவில்லை, மாறாக, நாட்டின் அதிகாரத்தை மட்டுப்படுத்த மட்டுமே அவர் விரும்பினார். நாட்டின் கண்காணிப்பின்றித் தனிநபர்கள் சுதந்திரமான தேர்ந்தெடுப்புகளை மேற்கொள்ளுவதற்கு அவர்களுக்கு ஒரு தனிப்பட்டத் தேர்ந்தெடுப்புத் தளத்தை அவர் கொடுக்க விரும்பினார். நான் ஜானைத் திருமணம் செய்து கொள்ளுவதைவிட மேரியைத் திருமணம் செய்து கொள்ளுவதும், சால்ட் லேக் சிட்டியில் வாழுவதற்கு பதிலாக சான்பிரான்சிஸ்கோவில் வாழுவதும், பால் பண்ணைத் தொழில்

செய்வதைவிட மதுவிடுதியில் மது விநியோகம் செய்பவராக வேலை செய்வதும் எனக்கு அதிக மகிழ்ச்சியளிக்கும் என்று நான் நினைத்தால், என் சொந்த வழியில் மகிழ்ச்சியைத் தேடிச் செல்லுவது என்னுடைய உரிமையாகிறது. எனவே, அம்முயற்சியில் நான் ஒரு தவறான தேர்ந்தெடுப்பை மேற்கொண்டாலும், நாடு அதில் குறுக்கிடக்கூடாது.

ஆனாலும், கடந்த சில ஆண்டுகளில் நிலைமை மாறியுள்ளது. பென்தமின் முன்னோக்கு அதிகத் தீவிரமாகக் கருத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டு வந்துள்ளது. ஒரு நாட்டை வலிமைப்படுத்துவதற்கு ஒரு நூற்றாண்டுக்கு முன்பு நிறுவப்பட்ட அமைப்புமுறைகள் தனிநபர்களின் மகிழ்ச்சிக்கும் நலனுக்கும்தான் உண்மையில் பங்காற்ற வேண்டும் என்று மக்கள் அதிகமாக நம்புகின்றனர். நாட்டிற்கு சேவை செய்வதற்காக நாம் இங்கு இல்லை, மாறாக, நமக்கு சேவை செய்வதற்காகவே நாடு இருக்கிறது. மகிழ்ச்சியைத் தேடிச் செல்லுவதற்கான உரிமை இன்று மெல்ல மெல்ல மகிழ்ச்சிக்கான உரிமையாக மாறியுள்ளது. மகிழ்ச்சியாக இருப்பதற்கான ஓர் இயல்பான உரிமை மனிதர்களுக்கு இருப்பதுபோலவும், நமக்கு அதிருப்தி அளிக்கின்ற எதுவொன்றும் நம்முடைய அடிப்படை மனித உரிமைகளை மீறுவதாக ஆகிறது என்றும், நம் நாடு அது குறித்து ஏதேனும் செய்தாக வேண்டும் என்றும் நாம் நினைக்கிறோம்.

இருபதாம் நூற்றாண்டில், தனிநபர் சராசரி வருடாந்திர உற்பத்திதான் ஒரு நாட்டின் வெற்றியை அளவிடுவதற்கான உச்ச அளவுகோலாகப் பார்க்கப்பட்டது. இந்தக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, கோஸ்ட்டா ரிக்காவைவிட சிங்கப்பூர் அதிக வெற்றிகரமான நாடாகத் திகழுகிறது. ஏனெனில், சிங்கப்பூரின் குடிமக்கள் ஒவ்வொருவரும் சராசரியாக ஓராண்டில் 56,000 டாலர்கள் மதிப்புக் கொண்ட பொருட்களையும் சேவைகளையும் உற்பத்தி செய்கின்றனர். ஆனால் கோஸ்ட்டா ரிக்காவின் குடிமக்கள் ஒவ்வொருவரும் ஆண்டொன்றுக்கு 14,000 டாலர்கள் மட்டுமே உற்பத்தி செய்கின்றனர். ஆனால் இன்றைய காலகட்டத்தில், நாட்டின் மொத்த உற்பத்தியோடு கூடவே நாட்டின் மொத்த மகிழ்ச்சியையும் கணக்கில் எடுத்து கொள்ள வேண்டும் என்றும், முடிந்தால் நாட்டின் மொத்த உற்பத்திக்கு பதிலாக நாட்டின் மொத்த மகிழ்ச்சியை மட்டும் கணக்கில் எடுத்து கொள்ள வேண்டும் என்றும் சிந்தனையாளர்களும் அரசியல்வாதிகளும் பொருளாதார வல்லுநர்களும்கூட அறைகூவல் விடுக்கின்றனர். மொத்தத்தில், மக்கள் எதை விரும்புகின்றனர்? அவர்கள் உற்பத்தி செய்ய விரும்புவதில்லை, மகிழ்ச்சியாக இருக்க மட்டுமே விரும்புகின்றனர். உற்பத்தி முக்கியம்தான். ஏனெனில், மகிழ்ச்சிக்கான லௌகிக அடித்தளத்தை

அது வழங்குகிறது. ஆனால் அது மகிழ்ச்சிக்கான ஒரு வழியே அன்றி, அதுவே மகிழ்ச்சியாகிவிடாது. சிங்கப்பூர்வாசிகளைவிட கோஸ்ட்டா ரிக்காவின் குடிமக்கள் தங்கள் வாழ்வில் மிக அதிகத் திருப்தியை அனுபவிப்பதாக அடுத்தடுத்து மேற்கொள்ளப்பட்டப் பல கருத்தாய்வுகள் தெரிவிக்கின்றன. அதிக உற்பத்தித்திறன் கொண்ட, ஆனால் திருப்தியற்ற ஒரு சிங்கப்பூர்வாசியாக இருக்க நீங்கள் விரும்புகிறீர்களா, அல்லது குறைவான உற்பத்தித்திறன் கொண்ட, ஆனால் மனநிறைவு கொண்ட ஒரு கோஸ்ட்டா ரிக்காவாசியாக இருக்க நீங்கள் விரும்புகிறீர்களா?

இந்த வகையான தர்க்கவாதம், மகிழ்ச்சியை இருபத்தோராம் நூற்றாண்டுக்கான இரண்டாவது முக்கிய இலக்காக ஆக்கிக் கொள்ளுவதற்கு மனிதகுலத்தைத் தூண்டக்கூடும். மேலோட்டமாகப் பார்க்கும்போது இது சுலபமான ஒரு பணித்திட்டம்போலத் தோன்றும். பஞ்சம், கொள்ளைநோய், போர் ஆகியவை மறைந்து கொண்டிருந்தால், முன்பு ஒருபோதும் இருந்திராத அமைதியையும் செழிப்பையும் மனிதகுலம் அனுபவித்துக் கொண்டிருந்தால், ஆயுட்காலத்தை மிக அதிக அளவில் அதிகரித்தால், இவையெல்லாம் சேர்ந்து மக்களை நிச்சயமாக மகிழ்ச்சிப்படுத்தும், இல்லையா?

இல்லை. மகிழ்ச்சிதான் உச்ச நன்மை என்று எபிகியூரஸ் வரையறுத்தபோது, மகிழ்ச்சியாக இருப்பது ஒரு கடினமான வேலை என்று அவர் தன் சீடர்களை எச்சரித்தார். லௌகிகப் பொருட்களைக் கைவசப்படுத்துவது மட்டுமே நீண்டகாலம் நமக்குத் திருப்தியளிக்காது. உண்மையில், பணம், புகழ், இன்பம் ஆகியவற்றைக் கண்மூடித்தனமாகப் பின்தொடர்ந்து செல்லுவது நமக்கு அதிக அவலத்தையே கொண்டுவரும். எடுத்துக்காட்டாக, மக்கள் மிதமாகச் சாப்பிடவும் குடிக்கவும் வேண்டும் என்றும், அவர்கள் தங்களுடைய பாலியல் இச்சைகளை அடக்கிக் கொள்ள வேண்டும் என்றும் எபிகியூரஸ் பரிந்துரைத்தார். நீண்டகால நோக்கில் பார்க்கும்போது, கட்டுப்பாடற்ற ஒரு சிற்றின்பக் களியாட்டத்தைவிட ஓர் ஆழமான நட்பு நமக்கு அதிக மனநிறைவைக் கொடுக்கும். மகிழ்ச்சிக்கான அபாயகரமான பாதையில் மக்களை வழிநடத்துவதற்கு எபிக்யூரஸ் சில நெறிமுறைகளை அவர்களுக்கு வகுத்துக் கொடுத்தார். மகிழ்ச்சியைக் கைவசப்படுத்துவதற்கு அவர்கள் எவற்றையெல்லாம் செய்ய வேண்டும், எவற்றைச் செய்யக்கூடாது என்று அவர் விளக்கினார்.

எபிகியூரஸ் ஏதோ முக்கியமான ஓர் உண்மையைக் கண்டறிந்தார்போலும். மகிழ்ச்சியாக இருப்பது அவ்வளவு சுலபமாக வருவதில்லை. கடந்த சில ஆண்டுகளில் நாம் நிகழ்த்தியுள்ள

சாதனைகள் ஒரு புறம் இருந்தாலும், இப்போதைய மக்கள் தங்களுடைய பண்டைய மூதாதையரைவிடக் குறிப்பிடத்தக்க அளவு அதிக மனநிறைவோடு இல்லை என்பதுதான் உண்மை. ஏனெனில், மிக உயர்ந்த செழிப்பும் வசதிகளும் பாதுகாப்பும் இருக்கின்ற வளர்ந்த நாடுகளில், தற்கொலை விகிதம் பாரம்பரியச் சமுதாயங்களைவிடவும் மிக உயர்வாக இருப்பது ஒரு மோசமான அறிகுறியாகும்.

ஏழ்மையாலும் அரசியல் நிலையின்மையாலும் பெரிதும் துன்புற்றுக் கொண்டிருக்கின்ற, வளர்ந்து வரும் நாடுகளான பெரூ, குவாத்தமாலா, பிலிப்பைன்ஸ், மற்றும் அல்பேனியாவில் ஒவ்வோர் ஆண்டும் லட்சத்தில் ஒருவர் தற்கொலை செய்து கொள்ளுகிறார். செல்வச் செழிப்பும் அமைதியும் கோலோச்சுகின்ற சுவிட்சர்லாந்து, பிரான்ஸ், ஜப்பான், நியூசிலாந்து போன்ற நாடுகளில் ஆண்டுதோறும் லட்சத்தில் இருபத்தைந்து பேர் தற்கொலை செய்து கொள்ளுகின்றனர். 1985ல், தென்கொரிய நாட்டினரில் பெரும்பாலானோர் ஏழைகளாகவும், கல்வியறிவு இல்லாதவர்களாகவும், பாரம்பரியத்தைத் தீவிரமாகக் கடைபிடிப்பவர்களாகவும் இருந்தனர். ஓர் எதேச்சாதிகார ஆட்சியின்கீழ் அவர்கள் வாழ்ந்து கொண்டிருந்தனர். இன்று, அந்நாடு பொருளாதாரத்தில் ஒரு முன்னணி நிலையில் உள்ளது. உலகில் மிகச் சிறப்பாகக் கற்றறிந்தவர்களில் தென்கொரிய மக்களும் அடங்குவர். அந்நாட்டில் ஒரு நிலையான, தாராளவாத மக்களாட்சி நடைபெறுகிறது. ஆனாலும், 1985ல் லட்சத்தில் ஒன்பது தென்கொரியர்கள் மட்டுமே தற்கொலை செய்து கொண்டனர். இன்று, தென்கொரியாவின் வருடாந்திரத் தற்கொலை விகிதம் மும்மடங்காகியுள்ளது. இன்று லட்சத்தில் முப்பது பேர் தற்கொலை செய்து கொள்ளுகின்றனர்.

இதற்கு நேர்மாறாக, உற்சாகமூட்டும் போக்குகளும் இருக்கத்தான் செய்கின்றன. குழந்தை இறப்பு விகிதம் பெருமளவு குறைந்திருப்பது மனித மகிழ்ச்சியை நிச்சயமாக அதிகரித்துள்ளது. நவீன வாழ்க்கையினால் ஏற்படுகின்ற மன அழுத்தத்தை இது சிறிதளவு ஈடு செய்கிறது. நாம் நம்முடைய மூதாதையரைவிட சற்று அதிக மகிழ்ச்சி கொண்டவர்களாக இருந்தாலும்கூட, நம்முடைய நலன் நாம் எதிர்பார்த்த அளவுக்கு அதிகரிக்கவில்லை. கற்காலத்தில், ஒரு சராசரி மனிதன் தினமும் செலவிடுவதற்கு 4,000 கலோரிகள் ஆற்றல் அவனிடம் இருந்தது. உணவு, கருவிகள், ஆடைகள், ஓவியங்கள் ஆகியவற்றைத் தயாரிப்பதிலும் நெருப்பு மூட்டுவதிலும் செலவிடப்பட்ட ஆற்றலை உள்ளடக்கியது அது. இன்று அமெரிக்கர்கள் ஒவ்வொருவரும் தங்களுடைய வயிற்றுக்கு உணவளிப்பதற்கு மட்டுமல்லாமல், தங்களுடைய கார்களுக்கும் கணினிகளுக்கும்

குளிர்சாதனப் பெட்டிகளுக்கும் தொலைக்காட்சிகளுக்கும் தேவையான 'உணவை' வழங்குவதற்கும் தினமும் சராசரியாக 2,28,000 கலோரிகள் ஆற்றலைப் பயன்படுத்துகின்றனர். எனவே, ஒரு சராசரிக் கற்கால வேட்டையாடியைவிட ஒரு சராசரி அமெரிக்கர் அறுபது மடங்கு அதிக ஆற்றலைப் பயன்படுத்துகிறார். ஆனால், ஒரு சராசரி அமெரிக்கர் அறுபது மடங்கு அதிக மகிழ்ச்சியாக இருக்கிறாரா? அது சந்தேகத்திற்குரியதுதான்.

நாம் நேற்றைய துயரங்களிலிருந்து மீண்டாலும்கூட, உண்மையான மகிழ்ச்சியை அடைவது துன்பத்தை அடியோடு வேரறுப்பதைவிட அதிகக் கடினமானதாக இருக்கக்கூடும். பசியோடு இருந்த ஓர் இடைக்கால உழவனை மகிழ்ச்சிப்படுத்துவதற்கு ஒரு ரொட்டித் துண்டு போதுமானதாக இருந்தது. சலிப்படைந்துள்ள, அளவுக்கதிகமாகச் சம்பளம் பெற்றுக் கொண்டிருக்கின்ற, பருமனான உடலைக் கொண்ட ஒரு பொறியாளருக்கு நீங்கள் எப்படி மகிழ்ச்சியைக் கொண்டுவருவீர்கள்? இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதி, அமெரிக்காவுக்கு ஒரு பொற்காலமாக இருந்தது. இரண்டாம் உலகப் போரில் கிடைத்த வெற்றியும், அதைத் தொடர்ந்து பனிப்போரில் கிடைத்த மாபெரும் வெற்றியும், அமெரிக்காவை ஒரு முன்னணி உலக வல்லரசாக ஆக்கியது. 1950ம் ஆண்டுக்கும் 2000ம் ஆண்டுக்கும் இடைப்பட்டக் காலத்தில் அமெரிக்காவின் மொத்த உற்பத்தி 2 லட்சம் கோடி டாலர்களிலிருந்து 12 லட்சம் கோடி டாலர்களாக வளர்ந்தது. தனிநபர் சராசரி வருடாந்திர வருவாய் இருமடங்காகியது. புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டக் கருத்தடை மாத்திரைகள் சுதந்திரமாக உடலுறவு கொள்ளுவதை அதிகரித்தன. பெண்கள், ஓரினச் சேர்க்கையாளர்கள், ஆப்பிரிக்க அமெரிக்கர்கள், மற்றும் பிற சிறுபான்மையினருக்கு இறுதியில் அதிக உரிமை கிடைத்தது. மலிவான கார்கள், குளிர்சாதனப் பெட்டிகள், குளிரூட்டிகள், மின்தூசியுறிஞ்சிகள், பாத்திரம் கழுவும் இயந்திரங்கள், துணி துவைக்கும் இயந்திரங்கள், தொலைபேசிகள், தொலைக்காட்சிகள், கணினிகள் ஆகியவை அன்றாட வாழ்க்கையை அடையாளம் காணப்பட முடியாத அளவுக்கு மாற்றின. ஆனாலும், அமெரிக்கர்களின் அகவயமான நலனின் அளவு 1950களில் எவ்வளவு இருந்ததோ, 1990களிலும் கிட்டத்தட்ட அவ்வளவே இருந்ததாக ஆய்வுகள் காட்டியுள்ளன.

ஜப்பானில், 1958ம் ஆண்டுக்கும் 1987ம் ஆண்டுக்கும் இடையே சராசரி வருமானம் ஐந்து மடங்காக உயர்ந்தது. வரலாற்றின் மிக வேகமான பொருளாதார வளர்ச்சிகளில் ஒன்று அது. அபரிமிதமான செல்வமும், ஜப்பானிய வாழ்க்கைமுறையிலும் சமூக உறவுகளிலும்

ஏற்பட்ட எண்ணற்ற நேர்மறை மாற்றங்களும் எதிர்மறை மாற்றங்களும் சேர்ந்து ஜப்பானியர்களின் அகவயமான நலனின் அளவின்மீது மிகமிகக் குறைவான தாக்கமே ஏற்படுத்தியது ஆச்சரியமான ஒரு விஷயமாகும். 1950களில் ஜப்பானியர்கள் எந்த அளவு மனநிறைவுடனோ (அல்லது மனநிறைவின்றியோ) இருந்தனரோ, 1990களிலும் அவர்கள் அப்படியேதான் இருந்தனர்.

முன்பு ஒருபோதும் இல்லாத அளவுக்கு நாம் அளப்பரிய சாதனைகளை நிகழ்த்தியும்கூட, கண்களுக்குப் புலப்படாத ஏதோ ஒரு கண்ணாடிக் கூரை நம்முடைய மகிழ்ச்சி பெருகிவிடாதவாறு தடுத்துக் கொண்டிருப்பதுபோலத் தோன்றுகிறது. நாம் எல்லோருக்கும் இலவச உணவு வழங்கி, எல்லா நோய்களையும் குணப்படுத்தி, உலகில் அமைதியை நிலைப்படுத்தினாலும்கூட, அது அந்தக் கண்ணாடிக் கூரையைத் தகர்த்தெறியும் என்ற அவசியமில்லை. உண்மையான மகிழ்ச்சியை அடைவது முதுமையையும் மரணத்தையும் வெற்றி கொள்ளுவதைவிட அதிக சுலபமானதாக இருக்கப் போவதில்லை.

மகிழ்ச்சியின் கண்ணாடிக் கூரையைத் தடிமனான இரண்டு தூண்கள் தாங்கிப் பிடித்துள்ளன. ஒன்று உளவியல்ரீதியானது, மற்றொன்று உயிரியல்ரீதியானது. உளவியல் நிலையில் பார்க்கும்போது, மகிழ்ச்சியானது எதிர்பார்ப்புகளைச் சார்ந்துள்ளதே அன்றி, பாரபட்சமற்றச் சூழ்நிலைகளை அல்ல. அமைதியான மற்றும் செழிப்பான வாழ்க்கையை வாழுவதன் மூலம் நாம் மனநிறைவு கொள்ளுவதில்லை. மாறாக, யதார்த்தம் நம்முடைய எதிர்பார்ப்புகளுக்கு ஏற்ப அமையும்போது நாம் திருப்தி அடைகிறோம். ஆனால், மோசமான செய்தி என்னவென்றால், சூழ்நிலைகள் மேம்படுகின்றன, எதிர்பார்ப்புகள் தவிடுபொடியாகின்றன. சமீப காலங்களில் சூழ்நிலைகள் வெகுவாக மேம்பட்டு வந்துள்ளன. மனிதகுலம் இதை நன்றாக அறியும். ஆனால் இந்த மேம்பாடுகள் மனநிறைவைக் கொடுப்பதற்கு பதிலாக, மேலும் பெரிய எதிர்பார்ப்புகளாக மாறிவிடுகின்றன. இது குறித்து இப்போது நாம் ஏதேனும் செய்யவில்லை என்றால், எதிர்காலத்தில் நாம் சாதிக்கவிருக்கின்ற விஷயங்களும் நமக்கு மனநிறைவைக் கொடுக்கப் போவதில்லை. நாம் எப்போதும் அதிருப்தியுடனேயே வாழ்ந்து கொண்டிருப்போம்.

உயிரியல் நிலையில் பார்க்கும்போது, நம்முடைய எதிர்பார்ப்புகளும் மகிழ்ச்சியும் நம்முடைய உயிர்வேதியியலால் தீர்மானிக்கப்படுகின்றனவே அன்றி, நம்முடைய பொருளாதார, சமூக, அல்லது அரசியல் சூழ்நிலையால் அல்ல. நாம் இனிமையான உணர்வுகளை அனுபவிக்கும்போதும், இனிமையற்ற உணர்வுகள் எதுவும் நமக்கு ஏற்படாதபோதும் நாம் மகிழ்ச்சியாக இருக்கிறோம் என்று எபிகியூரஸ் கூறியுள்ளார். ஜெரமி பென்தமும் இதே ரீதியில் கருத்துத் தெரிவித்தார். "மனிதன்மீது ஆதிக்கம் செலுத்துவதற்கான அதிகாரத்தை இன்பம், வேதனை ஆகிய இரண்டு முதலாளிகளுக்கு இயற்கை கொடுத்துள்ளது. நாம் செய்கின்ற, கூறுகின்ற, மற்றும் சிந்திக்கின்ற அனைத்தையும் அவ்விரண்டு காரணிகள் மட்டுமே தீர்மானிக்கின்றன," என்று அவர் கூறினார். அவருக்குப் பின்னால் வந்த ஜான் ஸ்டூவர்ட் மில் இவ்வாறு விளக்கினார்: "மகிழ்ச்சி என்பது இன்பமும் வேதனையிலிருந்து விடுதலையும்தானே அன்றி வேறெதுவுமில்லை. இன்பத்திற்கும் வேதனைக்கும் அப்பால் எந்த நன்மையும் இல்லை, எந்தத் தீமையும் இல்லை. கடவுளின் கட்டளை, தேசிய நலன் போன்ற வேறு ஏதோ ஒன்றிலிருந்து நல்லதையும் தீயதையும் உய்த்தறிய முற்படுகின்ற எவரொருவரும் உங்களை முட்டாளாக்கிக் கொண்டிருக்கிறார் என்பதோடு கூடவே, தன்னைத் தானே முட்டாளாக்கிக் கொண்டிருக்கிறார்."

எபிகியூரஸின் காலத்தில் இப்படிப்பட்டப் பேச்சு இறைவனைப் பழிப்பதாகப் பார்க்கப்பட்டது. பென்தம் மற்றும் மில்லின் காலகட்டங்களில் அது அரசாங்கத்தைக் கவிழ்ப்பதற்கான ஒரு சதியாகக் கருதப்பட்டது. ஆனால் இருபத்தோராம் நூற்றாண்டின் முற்பகுதியில் இது அறிவியல் கோட்பாடாகப் பார்க்கப்படுகிறது. உயிரறிவியலின்படி, மகிழ்ச்சியும் துன்பமும் உடலில் தூண்டப்படுகின்ற உணர்வுகளின் வெவ்வேறு சமநிலைகளே அன்றி வேறெதுவுமில்லை. நாம் புறவுலகில் உள்ள நிகழ்வுகளுக்கு ஒருபோதும் எதிர்வினையாற்றுவதில்லை, மாறாக, நம்முடைய சொந்த உடலில் தூண்டப்படுகின்ற உணர்வுகளுக்குத்தான் நாம் எதிர்வினையாற்றுகிறோம். ஒருவர் தன் வேலையை இழப்பதாலோ, அல்லது அவருக்கு விவாகரத்து ஆவதாலோ, அல்லது அரசாங்கம் ஒரு போரைத் துவக்குவதாலோ துன்புறுவதில்லை. மக்களைத் துயரத்திற்கு ஆளாக்குகின்ற ஒரே விஷயம் அவர்களுடைய சொந்த உடல்களில் தூண்டப்படுகின்ற இனிமையற்ற உணர்வுகள்தாம். ஒருவர் தன் வேலையை இழக்கும்போது, அது அவருக்குள் மனச்சோர்வை நிச்சயமாகத் தூண்டும், ஆனால் மனத்தளர்ச்சிகூட நம் உடலில் தூண்டப்படுகின்ற இனிமையற்ற ஓர் உணர்வுதான். ஓராயிரம் விஷயங்கள் நமக்குக் கோபத்தை உண்டாக்கக்கூடும், ஆனால் கோபம் ஒருபோதும் கற்பனையானதல்ல. நம் உடலில் வெப்பமாகவும் இறுக்கமாகவும் அது உணரப்படுகிறது. அதுதான் கோபத்தை அவ்வளவு கடுமையானதாக ஆக்குகிறது. நாம் கோபத்தில் 'கொதித்துக் கொண்டிருப்பதாக' நாம் கூறுவதில் அர்த்தம் இல்லாமல் இல்லை.

இதற்கு நேர்மாறாக, ஒரு பதவி உயர்வு கிடைப்பதன் மூலமாகவோ, லாட்டரியில் ஒரு பரிசை வெல்லுவதன் மூலமாகவோ, அல்லது உண்மையான காதல் கைவரப் பெறுவதன் மூலமாகவோ யாரும் மகிழ்ச்சிப்படுத்தப்படுவதில்லை என்று அறிவியல் கூறுகிறது. ஒரே ஒரு விஷயம் மட்டுமே மக்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. அவர்களுடைய உடல்களில் தூண்டப்படுகின்ற இனிய உணர்வுகள்தாம் அது. 2014ம் ஆண்டு உலகக் கோப்பைக் கால்பந்து இறுதிப் போட்டியில் அர்ஜென்டினாவுக்கு எதிராக விளையாடிக் கொண்டிருக்கின்ற ஜெர்மானிய அணியின் மாரியோ கோட்சே என்ற வீரராக உங்களைக் கற்பனை செய்து கொள்ளுங்கள். அப்போட்டியில் ஒரு கோல்கூடப் போடப்படாமல் 113 நிமிடங்கள் ஏற்கனவே கழிந்துவிட்டன. பெனால்டி கிக் அறிவிக்கப்படுவதற்கு வெறும் ஏழு நிமிடங்கள் மட்டுமே எஞ்சியுள்ளன. ரியோ நகரில் அந்த மரகானா விளையாட்டரங்கில் கூடியுள்ள 75,000 ரசிகர்களிடையே உற்சாகம்

கரை புரண்டு ஓடுகிறது. உலகம் நெடுகிலும் தொலைக்காட்சியில் லட்சக்கணக்கான ரசிகர்கள் பதற்றத்தோடு அப்போட்டியைப் பார்த்துக் கொண்டிருக்கின்றனர். உங்களுடைய கோல் போஸ்ட்டிலிருந்து ஒருசில மீட்டர் தூரத்தில் நீங்கள் நின்று கொண்டிருக்கிறீர்கள். அப்போது உங்களுடைய சக வீரரான ஆன்ட்ரே ஷர்லே நீங்கள் இருக்கும் திசையை நோக்கிப் பந்தை அற்புதமாக உதைக்கிறார். நீங்கள் அதை உங்கள் மார்பால் தடுக்கிறீர்கள். அப்பந்து உங்கள் காலை நோக்கிக் கீழே விழுகிறது. நீங்கள் அதை அந்தரத்தில் எட்டி உதைக்கிறீர்கள். அது அர்ஜென்டினா அணியின் கோல்கீப்பரைத் தாண்டிப் பறந்து சென்று கோல் போஸ்ட்டுக்குள் ஆழமாகத் தன்னைப் புதைத்துக் கொள்ளுவதை நீங்கள் பார்க்கிறீர்கள். அப்போது அந்த ஒட்டுமொத்த அரங்கமும் ஓர் எரிமலைபோலப் பொங்குகிறது. பல ஆயிரக்கணக்கான மக்கள் பித்துப் பிடித்தவர்கள்போலக் கத்துகின்றனர், உங்களுடைய அணியினர் உங்களை நோக்கி வேகமாக ஓடி வந்து உங்களைக் கட்டியணைத்து முத்தமிடுகின்றனர். பெர்லின் நகரிலும் மியூனிக் நகரிலும் லட்சக்கணக்கான மக்கள் தொலைக்காட்சித் திரைகளின் முன்னால் கண்களில் கண்ணீருடன் உணர்ச்சிவசப்பட்டு உட்கார்ந்திருக்கின்றனர். நீங்கள் மிகவும் பரவசத்தோடு இருக்கிறீர்கள். அதற்குக் காரணம், நீங்கள் அடித்தப் பந்து அர்ஜென்டினாவின் வலைக்குள் இருப்பதோ அல்லது உங்களைச் சுற்றி நிகழ்ந்து கொண்டிருக்கும் கொண்டாட்டங்களோ அல்ல. மாறாக, உங்களுக்குள் பொங்கி எழுந்துள்ள பல்வேறு உணர்வுகளுக்கு நீங்கள் எதிர்வினையாற்றிக் கொண்டிருக்கிறீர்கள் என்பதுதான். உங்கள் உடல் சிலிர்க்கிறது, அந்த அரங்கில் பொங்கியெழுந்துள்ள ஆற்றல் வெள்ளத்தில் நீங்கள் மூழ்கிக் கொண்டிருப்பது போன்ற ஓர் உணர்வு உங்களுக்குள் எழுகிறது.

இப்படிப்பட்ட உணர்வுகளை உங்கள் உடலில் அனுபவிப்பதற்கு உலகக் கோப்பை இறுதிப் போட்டியில் உங்கள் அணிக்கு வெற்றியைப் பெற்றுக் கொடுக்கும் கோலை நீங்கள் போட வேண்டியதில்லை. வேலையில் நீங்கள் எதிர்பார்த்திராத ஒரு பதவி உயர்வு உங்களுக்குக் கிடைத்து, அதனால் நீங்கள் மகிழ்ச்சியில் துள்ளிக் குதிக்கத் தொடங்கினால், நீங்கள் அதே வகையான உணர்வுத்தூண்டல்களுக்கு எதிர்வினையாற்றிக் கொண்டிருக்கிறீர்கள் என்று பொருள். உங்கள் மனத்தின் ஆழமான பகுதிகளுக்குக் கால்பந்தைப் பற்றியோ அல்லது வேலைகளைப் பற்றியோ எதுவும் தெரியாது. உணர்வுத்தூண்டல்கள் மட்டுமே அவற்றுக்குத் தெரியும். உங்களுக்கு ஒரு பதவி உயர்வு கிடைத்து, ஆனால் ஏதோ காரணத்தால் உங்கள் உடலில் இனிய உணர்வுகள் எதுவும் தூண்டப்படவில்லை என்றால், அந்தப் பதவி

உயர்வு உங்களுக்கு மனநிறைவைக் கொடுக்காது. இதற்கு நேரெதிரானதும் உண்மை. நீங்கள் இப்போதுதான் உங்கள் வேலையிலிருந்து நீக்கப்பட்டிருந்து (அல்லது ஒரு முக்கியமான கால்பந்துப் போட்டியில் நீங்கள் தோற்றிருந்து), ஆனால் மிக இனிமையான உணர்வுகளை நீங்கள் அனுபவித்துக் கொண்டிருக்கிறீர்கள் என்றால் (நீங்கள் ஏதோ போதை மாத்திரைகளை உட்கொண்டதால் இருக்கலாம்), நீங்கள் மிகவும் மகிழ்ச்சியாக இருப்பீர்கள்.

ஆனால், மோசமான செய்தி என்னவென்றால், இந்த இனிய உணர்வுகள் விரைவிலேயே அடங்கிவிடும், விரைவில் அவை இனிமையற்ற உணர்வுகளாக மாறிவிடும். உலகக் கோப்பை இறுதிப் போட்டியில் வெற்றியை ஈட்டித் தரும் கோலைப் போடுவதுகூட நிரந்தர மகிழ்ச்சிக்கு உத்தரவாதம் கொடுப்பதில்லை. உண்மையில், அது அங்கிருந்து முற்றிலும் இறங்குமுகமாக இருக்கக்கூடும். அதேபோல, கடந்த ஆண்டு என் வேலையில் எனக்கு ஒரு பதவி உயர்வு கிடைத்திருந்தால், இப்போதும் நான் அப்புதிய பதவியில் இருக்கக்கூடும், ஆனால் அந்தப் பதவி உயர்வு பற்றிய செய்தியைக் கேள்விப்பட்டவுடன் என்னுள் தோன்றிய இனிமையான உணர்வுகள் அடுத்த ஒருசில மணிநேரத்திற்குள் மறைந்துவிட்டன. அந்த அற்புதமான உணர்வுகளை நான் மீண்டும் அனுபவிக்க விரும்பினால், எனக்கு இன்னொரு பதவி உயர்வு கிடைத்தாக வேண்டும். பிறகு, இன்னுமொரு பதவி உயர்வு கிடைக்க வேண்டும். அது எனக்குக் கிடைக்கவில்லை என்றால், நான் ஒரு சாதாரணச் சிப்பாயாகவே இருந்திருந்தால் எவ்வளவு கோபத்துடனும் வெறுப்புடனும் இருந்திருப்பேனோ, இப்போது நான் அதைவிட அதிகக் கோபமும் வெறுப்பும் கொள்ளக்கூடும்.

இதெல்லாம் பரிணாம வளர்ச்சியின் தவறுதான். எண்ணற்றத் தலைமுறைகளாக, நம்முடைய உயிர்வேதி அமைப்புமுறையானது நாம் உயிர்பிழைத்து இருப்பதற்கும் நம்முடைய இனப்பெருக்கத்திற்குமான வாய்ப்புகளை அதிகரிப்பதற்காகவே தன்னை மாற்றிக் கொண்டதே அன்றி நம்முடைய மகிழ்ச்சியை அதிகரிப்பதற்காக அல்ல. அந்த உயிர்வேதி அமைப்புமுறை நாம் பிழைத்திருப்பதற்கும் நம்முடைய இனப்பெருக்கத்திற்கும் சாதகமாக அமையக்கூடிய நடவடிக்கைகளுக்கு வெகுமதியாக இனிமையான உணர்வுகளைக் கொடுக்கிறது. ஆனால் இவை நிலையற்ற விற்பனைத் தந்திரங்களே. பசியால் ஏற்படக்கூடிய இனிமையற்ற உணர்வுகளைத் தவிர்ப்பதற்காகவும், இனிய சுவைகளையும் ஆனந்தமான புணர்ச்சிப் பரவசநிலையையும்

அனுபவிப்பதற்காகவும் உணவையும் துணைவர்களையும் கைவசப்படுத்த நாம் பாடுபடுகிறோம். ஆனால், அருமையான சுவைகளும் ஆனந்தமான புணர்ச்சிப் பரவசநிலைகளும் நீண்டகாலம் நீடிப்பதில்லை. எனவே, நாம் அவற்றை மீண்டும் உணர விரும்பினால், நாம் இன்னும் அதிகமான உணவையும் துணைவர்களையும் தேடிச் சென்றாக வேண்டும்.

ஏதோ ஓர் அரிய மரபுச்சிதைவு மாற்றம், ஒரே ஒரு கொட்டையைத் தின்ற உடனேயே நிரந்தரமான மகிழ்ச்சியுணர்வை அனுபவிக்கக்கூடிய ஓர் அணிலை உருவாக்கியிருந்தால் என்ன நிகழ்ந்திருக்கும்? உண்மைத் தகவல்களை வைத்துப் பார்க்கும்போது, அந்த அணிலின் மூளையில் உள்ள நரம்பணுத் தொடர்புகளை மாற்றியமைப்பதன் மூலம் அதைச் செய்ய முடியும். லட்சக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பு ஏதோ ஓர் அதிர்ஷ்டக்கார அணிலுக்கு அது உண்மையிலேயே நிகழ்ந்திருக்கலாம். ஆனால், அப்படி நடந்திருந்தால், அந்த அணில் மிக மகிழ்ச்சியான மற்றும் மிகக் குறுகியதொரு வாழ்க்கையை வாழ்ந்திருக்கும். அந்த அரிய மரபுச்சிதைவு மாற்றம் அத்துடன் முடிவுக்கு வந்திருக்கும். ஏனெனில், ஆனந்தமாக இருந்த அந்த அணில் அதிகக் கொட்டைகளையும் அதிகத் துணைகளையும் தேடிச் செல்லாமல் இருந்திருக்கும். ஆனால், ஒரு கொட்டையைச் சாப்பிட்டு வெறும் ஐந்து நிமிடங்களில் மீண்டும் பசியை உணர்ந்த மற்ற அணில்களுக்கு, அவை உயிர்பிழைத்திருப்பதற்கும் தம்முடைய மரபணுக்களை அடுத்தத் தலைமுறைக்குக் கொடுப்பதற்கும் அதிகச் சிறப்பான வாய்ப்புகள் இருந்தன. துல்லியமாக இதே காரணத்திற்காகத்தான், மனிதர்களாகிய நாம் தேடிச் சென்று கொண்டிருக்கின்ற, கை நிறையச் சம்பளத்துடன்கூடிய வேலைகள், பெரிய வீடுகள், வசீகரமான தோற்றத்தைக் கொண்ட துணைவர்கள் போன்ற கொட்டைகள் மிகக் குறுகிய காலம் மட்டுமே நமக்கு மனநிறைவைக் கொடுக்கின்றன.

இது ஒன்றும் அவ்வளவு மோசமான விஷயமல்ல; ஏனெனில், நாம் பின்தொடர்ந்து சென்று கொண்டிருக்கின்ற இலக்குகள் நம்மை மகிழ்ச்சிப்படுத்துவதில்லை, மாறாக, அந்தப் பயணங்கள்தான் நமக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கின்றன என்று சிலர் கூறக்கூடும். எவரெஸ்ட் சிகரத்தின்மீது ஏறிச் செல்லுவது அதன் உச்சியில் நின்று கொண்டிருப்பதைவிட அதிக மனநிறைவைக் கொடுக்கிறது; சரசமாடுவது புணர்ச்சிப் பரவசநிலையை அடைவதைவிட அதிக உற்சாகமளிக்கிறது; பரிசோதனைக்கூடங்களில் புதுமையான கண்டுபிடிப்புகளை நிகழ்த்துவது பாராட்டுக்களையும் பரிசுகளையும் பெறுவதைவிட அதிக சுவாரசியமானதாக இருக்கிறது. ஆனாலும், இது

எதையும் மாற்றுவதில்லை. மாறாக, பல்வேறு வகையான இன்பங்களின் மூலம் பரிணாம வளர்ச்சி நம்மைக் கட்டுப்படுத்துகிறது என்பதைத்தான் இது உணர்த்துகிறது. சில சமயங்களில், மகிழ்ச்சி, அமைதி ஆகிய உணர்வுகளைக் கொண்டு அது நம்மை மயக்குகிறது. மற்ற சமயங்களில், உற்சாகம், கிளர்ச்சி ஆகிய உணர்வுகளைக் கொண்டு அது நம்மை முன்னோக்கி உந்தித் தள்ளுகிறது.

தான் பிழைத்திருப்பதற்கும் தன்னுடைய இனப்பெருக்கத்திற்குமான வாய்ப்புகளை அதிகரிக்கக்கூடிய ஏதோ ஒன்றை (எடுத்துக்காட்டாக, உணவு, துணைகள், அல்லது சமூக அந்தஸ்து) ஒரு விலங்கு தேடும்போது, மூளையானது எச்சரிக்கையுணர்வையும் உற்சாகத்தையும் உற்பத்தி செய்கிறது. இது அந்த விலங்கு அதிகமான முயற்சிகளை மேற்கொள்ள அதை உந்தித் தள்ளுகிறது. எலிகளைக் கொண்டு மேற்கொள்ளப்பட்டப் பிரபலமான பரிசோதனை ஒன்றில், மின்முனைகள் பல எலிகளின் மூளைகளோடு இணைக்கப்பட்டன. ஒரு மிதிப்படியை அழுத்துவதன் மூலம் அந்த எலிகள் தமக்குள் உற்சாக உணர்வுகளை உருவாக்கிக் கொள்ளும் விதத்தில் அந்த ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. சுவையான உணவுக்கும் மிதிப்படியை அழுத்துவதற்கும் இடையே ஒன்றைத் தேர்ந்தெடுக்கும் வாய்ப்பு அந்த எலிகளுக்குக் கொடுக்கப்பட்டபோது, அவை அந்த மிதிப்படியையே தேர்ந்தெடுத்தன (சாப்பிட வருவதற்கு பதிலாக வீடியோ விளையாட்டுக்களை விளையாடுவதைக் குழந்தைகள் விரும்புவதைப்போல). அந்த எலிகள் அந்த மிதிப்படியை மீண்டும் மீண்டும் அழுத்திக் கொண்டே இருந்தன. அவை பசியாலும் களைப்பாலும் சோர்ந்து விழும்வரை அதைச் செய்து கொண்டே இருந்தன. மனிதர்களும் வெற்றியையும் பாராட்டுக்களையும்விட, போட்டியினால் ஏற்படக்கூடிய உற்சாகத்தை அதிகமாக விரும்பக்கூடும். ஒரு போட்டியினால் ஏற்படுகின்ற பேருவகை மற்றும் உற்சாக உணர்வுகள்தான் அப்போட்டியை மிகவும் வசீகரமானதாக ஆக்குகின்றன. மலையேறுதல், வீடியோ விளையாட்டுக்களை விளையாடுதல், காதலித்தல் போன்றவற்றால் மன அழுத்தம், தளர்ச்சி, சலிப்பு போன்ற இனிமையற்ற உணர்வுகள்தான் ஏற்படும் என்றால், அப்படிப்பட்ட நடவடிக்கைகளில் ஈடுபட யாரும் விரும்ப மாட்டார்கள்.

ஒரு போட்டியினால் ஏற்படுகின்ற உற்சாக உணர்வு எப்படித் தற்காலிகமானதோ, அதேபோல வெற்றியால் ஏற்படும் மகிழ்ச்சியுணர்வுகூட நிலையற்ற ஒன்றுதான். முன்பின் தெரியாத ஏதோ ஒரு பெண்ணுடன் ஒரே ஓர் இரவு உறவு வைத்துக் கொள்ளுவதில் இன்பத்தை அனுபவிக்கின்ற காமக் களியாட்டக்காரர் ஒருவர், பங்குச்

சந்தை நிலவரத்தைக் கண்காணிக்கும்போது தன்னுடைய விரல் நகங்களைக் கடிப்பதில் மகிழ்ச்சியை அனுபவிக்கின்ற ஒரு தொழிலதிபர், கணினியில் இணையத்தள விளையாட்டுக்களில் தோன்றும் அரக்கர்களைக் கொல்லுவதில் பேரின்பம் கொள்ளுகின்ற ஒருவர் போன்றோர் நேற்றைய சாகச அனுபவங்களை நினைத்துப் பார்ப்பதில் எந்த மனநிறைவையும் பெற மாட்டார்கள். மிதிப்படியை மீண்டும் மீண்டும் அழுத்துகின்ற எலிகளைப்போல, காமக் களியாட்டக்காரர்களுக்கும் தொழிலதிபர்களுக்கும் கணினி விளையாட்டில் ஈடுபடுவோருக்கும் தினமும் ஒரு புதிய சாகசம் தேவைப்படுகிறது. ஆனால் இங்கும்கூட எதிர்பார்ப்புகள் சூழ்நிலைகளுக்கு ஏற்ப அனுசரித்துப் போகின்றன என்பது மோசமான செய்தி. நேற்று சாகசமாகத் தெரிந்த ஒன்று இன்று சலிப்பூட்டும் ஒன்றாக ஆகிவிடுகிறது. ஒரு போட்டியோ அல்லது அதில் கிடைக்கும் ஒரு தங்கப் பதக்கமோ மகிழ்ச்சிக்கான திறவுகோல் அல்ல, மாறாக, உற்சாகமும் அமைதியும் சரியான அளவில் ஒன்றுசேர்ந்திருப்பதுதான் மகிழ்ச்சிக்கு இன்றியமையாததாகும். ஆனால் நம்மில் பெரும்பாலானோர், மன அழுத்தத்திலிருந்து சலிப்பிற்குத் தாவுகிறோம், பிறகு மீண்டும் மன அழுத்தத்திற்குத் திரும்பிச் செல்லுகிறோம். ஆனால் அவற்றில் எதுவும் நமக்கு மனநிறைவைக் கொடுப்பதில்லை.

நம்முடைய உயிர்வேதி அமைப்புமுறைதான் நம்முடைய மகிழ்ச்சியைத் தீர்மானிக்கிறது என்று அறிவியல் கூறுவது உண்மையாக இருந்தால், இந்த அமைப்புமுறையில் தில்லுமுல்லு செய்வதுதான் நிரந்தரமான மனநிறைவைப் பெறுவதற்கான ஒரே வழியாகும். பிறகு, பொருளாதார வளர்ச்சி, சமூகச் சீர்திருத்தங்கள், அரசியல் புரட்சிகள் ஆகிய எல்லாவற்றையும் நீங்கள் மறந்துவிடலாம். ஏனெனில், உலகளாவிய மகிழ்ச்சி அளவை அதிகரிப்பதற்கு மனிதனின் உயிர்வேதியியலை நாம் நமக்கு ஏற்றபடி மாற்றி அமைத்தால் போதும். கடந்த சில ஆண்டுகளாக நாம் துல்லியமாக இதைத்தான் செய்யத் தொடங்கியுள்ளோம். ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு, மனநோய்க்கான மருந்துகளை உட்கொள்ளுவது அவமானகரமான ஒரு விஷயமாகக் கருதப்பட்டது. ஆனால் இன்று நிலைமை முற்றிலுமாக மாறியுள்ளது. அன்றாட அடிப்படையில் மனநோய்க்கான மருந்துகளை உட்கொள்ளுகின்றவர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே இருக்கிறது. தீவிரமான மனநோய்களை குணப்படுத்துவதற்கு மட்டுமல்லாமல், மனச்சோர்வு மற்றும் மகிழ்ச்சியின்மையைக் கையாளுவதற்குக்கூடப் பலர் அத்தகைய மருந்துகளை உட்கொள்ளுகின்றனர்.

எடுத்துக்காட்டாக, மிக அதிக எண்ணிக்கையிலான பள்ளி மாணவர்கள் ரிட்டலின் போன்ற, உணர்வுகளைத் தூண்டும் மருந்துகளை உட்கொள்ளுவது அதிகரித்து வருகிறது. 2011ல் 35 லட்சம் அமெரிக்கக் குழந்தைகள் ‘கவனக்குறைவு மிகையியக்கக் கோளாறு’க்காக மருந்துகளை உட்கொண்டு கொண்டிருந்தனர். இங்கிலாந்தில் 1997ல் 92,000ஆக இருந்த அந்த எண்ணிக்கை 2012ல் 7,86,000ஆக உயர்ந்தது. கவனக் கோளாறுகளைச் சரி செய்வதுதான் துவக்கத்தில் அந்த மருந்துகளின் நோக்கமாக இருந்தது. ஆனால் இன்று, முற்றிலும் ஆரோக்கியமான குழந்தைகள்கூடத் தங்களுடைய செயற்திறனை மேம்படுத்துவதற்காகவும், தங்களுடைய பெற்றோர்கள் மற்றும் ஆசிரியர்களின் மிதமிஞ்சிய எதிர்பார்ப்புகளை நிறைவேற்றுவதற்காகவும் அப்படிப்பட்ட மருந்துகளை உட்கொள்ளுகின்றனர். பலர் இந்தப் போக்கைக் கடுமையாக எதிர்க்கின்றனர். பிரச்சனை நம்முடைய கல்வி முறையில்தான் இருக்கிறதே அன்றி நம்முடைய குழந்தைகளிடத்தில் அல்ல என்று அவர்கள் வாதிடுகின்றனர். கவனக்குறைவுக் கோளாறு, மன அழுத்தம், குறைவான மதிப்பெண்கள் போன்ற பிரச்சனைகளால் மாணவர்கள் துன்புறுகின்றனர் என்றால், காலாவதியாகிவிட்டக் கற்பித்தல் முறைகளையும், மிக அதிக எண்ணிக்கையிலான மாணவர்களைக் கொண்ட வகுப்பறைகளையும், இயற்கைக்கு மாறான அதிவேக வாழ்க்கையையும்தான் நாம் குறை சொல்லியாக வேண்டும். ஒருவேளை, நாம் குழந்தைகளை மாற்றுவதற்கு பதிலாகப் பள்ளிக்கூடங்களில் மாற்றங்களை ஏற்படுத்த வேண்டுமோ? இது குறித்த விவாதங்கள் வளர்ச்சியடைந்துள்ள விதத்தைக் காணுவது சுவாரசியமானதாக இருக்கிறது. கல்விமுறைகளைப் பற்றி ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மக்கள் சண்டையிட்டு வந்துள்ளனர். பண்டைய சீனாவிலும் விக்டோரியா பேரரசியார் காலத்திய பிரிட்டனிலும் ஒவ்வொருவரும் தமக்குப் பிடித்தமான ஒரு வழிமுறையைக் கொண்டிருந்தனர், ஆனால் அனைத்து மாற்றுகளையும் அவர்கள் கடுமையாக எதிர்த்தனர். ஆனாலும், அவர்கள் எல்லோரும் ஒரே ஒரு விஷயத்தில் ஒத்துப் போயினர். கல்வியை மேம்படுத்துவதற்குப் பள்ளிக்கூடங்களை நாம் மாற்றியாக வேண்டும் என்பதுதான் அது. வரலாற்றில் இன்று முதன்முறையாக, மாணவர்களுடைய உயிர்வேதியியலை மாற்றுவது அதிகப் பலனளிப்பதாக இருக்கும் என்று சிலராவது சிந்திக்கின்றனர்.

ராணுவங்களும் இதே போக்கைக் கடைபிடித்துக் கொண்டிருக்கின்றன. ஈராக்கில் உள்ள அமெரிக்க வீரர்களில் 12

சதவீதத்தினரும், ஆப்கானிஸ்தானில் உள்ள அமெரிக்க வீரர்களில் 17 சதவீதத்தினரும் போரினால் ஏற்பட்ட அழுத்தத்தையும் துயரத்தையும் சமாளிப்பதற்காகத் தூக்க மாத்திரைகளையோ அல்லது உளச்சோர்வைப் போக்குவதற்கான மாத்திரைகளையோ உட்கொண்டனர். பயம், மனச்சோர்வு, பேரதிர்ச்சியுடன்கூடிய மனவேதனை போன்றவை துப்பாக்கிக் குண்டுகளாலும் கண்ணிவெடி போன்ற சூழ்ச்சிகரமான பொறிகளாலும் கார் வெடிகுண்டுகளாலும் ஏற்படுவதில்லை. ஹார்மோன்கள், நரம்புப் பிணையங்கள் ஆகியவற்றால் அவை ஏற்படுகின்றன. எதிரிகளைத் திடீரெனத் தாக்குவதற்காகப் பதுங்கியிருக்கின்ற இரண்டு போர்வீரர்களில் ஒருவர் பயத்தில் உறைந்து போகக்கூடும்; அச்சம்பவம் நிகழ்ந்து பல ஆண்டுகளுக்குப் பிறகும்கூட இரவில் அது பற்றிய கொடுங்கனவுகளால் அவர் துன்புறக்கூடும். இன்னொரு வீரர் துணிச்சலாக முன்னே சென்று ஒரு பதக்கத்தை வெல்லக்கூடும். இவர்கள் இருவருக்கும் இடையேயான வித்தியாசம் அவர்களுடைய உயிர்வேதியியலில் இருக்கிறது. அதைக் கட்டுப்படுத்துவதற்கான வழிகளை நாம் கண்டுபிடித்துவிட்டால், ஒரே நேரத்தில், அதிக மகிழ்ச்சியான வீரர்களையும் அதிக ஆற்றல்மிக்கப் படைகளையும் நம்மால் உருவாக்க முடியும்.

உயிர்வேதிப் பொருட்களை உட்கொள்ளுவதன் மூலம் மகிழ்ச்சியை அடைய முற்படுவதுதான் உலகில் குற்றங்கள் நிகழுவதற்கான முதன்மைக் காரணமாகவும் இருக்கிறது. 2009ல் அமெரிக்காவின் மத்தியச் சிறைச்சாலைகளில் இருந்த கைதிகளில் பாதிப் பேர் அங்கு அடைக்கப்பட்டிருந்ததற்குக் காரணம் போதைப் பொருட்கள். 38 சதவீத இத்தாலியக் கைதிகள் போதைப் பொருட்கள் தொடர்பான குற்றங்களுக்காகச் சிறையில் அடைக்கப்பட்டிருந்தனர். பிரிட்டன் சிறைகளில் இருந்த கைதிகளில் 55 சதவீதத்தினர் போதைப் பொருட்களை உட்கொண்டது தொடர்பான அல்லது அவற்றை விற்பனை செய்தது தொடர்பான குற்றங்களைத் தாங்கள் செய்ததாகத் தெரிவித்தனர். ஆஸ்திரேலியக் குற்றவாளிகளில் 62 சதவீதம் பேர் குற்றம் இழைத்துக் கொண்டிருந்த நேரத்தில் போதை மருந்துகளின் தாக்கத்தின்கீழ் இருந்ததாக 2001ல் வெளியிடப்பட்ட ஓர் அறிக்கையில் கூறப்பட்டுள்ளது. மக்கள் ஏதோ ஒன்றை மறப்பதற்காக மது அருந்துகின்றனர், மனஅமைதியை உணருவதற்காகக் கஞ்சாவைப் புகைக்கின்றனர், தன்னம்பிக்கையோடும் விழிப்போடும் இருப்பதற்காகக் கோக்கெயினையும் மெதாம்ஃப்ஹெட்டமீன்களையும் உட்கொள்ளுகின்றனர். எக்ஸ்டஸி என்ற போதை மருந்து பெரும்

பரவசமூட்டும் உணர்வுகளை ஏற்படுத்துகிறது. படித்து, ஒரு வேலையில் சேர்ந்து, ஒரு குடும்பத்தை வளர்த்தெடுப்பதன் மூலம் சிலர் பெற விரும்புகின்ற ஒன்றை, மற்றவர்கள் சரியான அளவு 'மூலக்கூறுகளின்' மூலமாக அதிக சுலபமாகப் பெற முயற்சி செய்கின்றனர். இது ஒரு நாட்டின் சமுதாய ஒழுங்கிற்கும் பொருளாதார ஒழுங்கிற்கும் அச்சுறுத்தலாக இருக்கிறது. எனவேதான், உயிர்வேதிப் பொருட்கள் தொடர்பான குற்றங்கள்மீது நாடுகள் ஒரு தீவிரமான, கடுமையான, ஆனால் பயனற்ற ஒரு போரைத் தொடுக்கின்றன.

உயிர்வேதிப் பொருட்களைப் பயன்படுத்துவதன் வாயிலாக மகிழ்ச்சியை அடைய மேற்கொள்ளப்படுகின்ற முயற்சியை முறைப்படுத்த அரசாங்கங்கள் முயற்சிக்கின்றன. உயிர்வேதிப் பொருட்களை 'நல்லவிதமாகவும்' பயன்படுத்தலாம், 'தீய வழிகளிலும்' பயன்படுத்தலாம் என்று அவை கருதுவதால், அரசியல் உறுதிநிலையையும் சமுதாய ஒழுங்கையும் பொருளாதார வளர்ச்சியையும் வலிமைப்படுத்துகின்ற வகையான பயன்பாடுகளை அரசாங்கங்கள் அனுமதிக்கின்றன. இன்னும் சொல்லப் போனால், அவை அவற்றை ஊக்குவிக்கின்றன (பள்ளிகளில் அளவுக்கதிகமாகத் துறுதுறுவென்று நடந்து கொள்ளுகின்ற குழந்தைகளை அமைதிப்படுத்துவதற்குப் பயன்படக்கூடிய உயிர்வேதிப் பொருட்கள், பதற்றமும் கவலையும் கொண்ட ராணுவ வீரர்களைப் போரில் முன்னோக்கி உந்தித் தள்ள உதவக்கூடிய உயிர்வேதிப் பொருட்கள் போன்றவை இதற்கான எடுத்துக்காட்டுகளாகும்). உறுதிநிலைக்கும் வளர்ச்சிக்கும் அச்சுறுத்தலாக இருக்கின்ற உயிர்வேதிப் பொருட்கள் தடை செய்யப்படுகின்றன. ஆனால், பல்கலைக்கழகங்கள், மருந்து உற்பத்தி நிறுவனங்கள், குற்றவியல் அமைப்புகள் ஆகியவற்றின் பரிசோதனைக்கூடங்களில் ஒவ்வோர் ஆண்டும் புதிய மருந்துகள் கண்டுபிடிக்கப்படுகின்றன. அதோடு, அரசாங்கத்தின் தேவைகளும் சந்தையின் தேவைகளும்கூட மாறுகின்றன. உயிர்வேதிப் பொருட்களைப் பயன்படுத்துவதன் மூலம் மகிழ்ச்சியைக் கைவசப்படுத்துவதற்கான தேடலின் வேகம் அதிகரிக்கும்போது, அது அரசியலையும் சமுதாயத்தையும் பொருளாதாரத்தையும் மாற்றியமைக்கும். எனவே, அம்முயற்சியைக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவருவது அதிகக் கடினமானதாக ஆகும்.

போதைப் பொருட்கள் வெறும் துவக்கம் மட்டுமே. மூளையில் பொருத்தமான இடங்களுக்கு மின்தூண்டல்களை நேரடியாக அனுப்புதல், மரபணுக்களில் மாற்றங்களை விளைவித்தல் போன்ற, மனிதனின் உயிர்வேதியியலை மாற்றுவதற்கான உயர்நய வழிகளைக்

கண்டுபிடிப்பதற்கு ஆய்வுக்கூட்டங்களில் வல்லுநர்கள் ஏற்கனவே மும்முரமாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றனர். அது எந்த வழியாக இருந்தாலும் சரி, உயிரியல்ரீதியான மாற்றத்தின் மூலம் மகிழ்ச்சியைக் கைவசப்படுத்துவது அவ்வளவு சுலபமானதாக இருக்காது. ஏனெனில், அதற்கு வாழ்வின் அடிப்படை அமைப்புகளை மாற்றியாக வேண்டும். அப்படிப் பார்த்தால், பஞ்சம், கொள்ளைநோய், போர் ஆகியவற்றை வெற்றி கொள்ளுவதுகூட சுலபமானதாக இருக்கவில்லைதானே?

***

உயிர்வேதிப் பொருட்களைப் பயன்படுத்துவதன் வாயிலாக மகிழ்ச்சியைக் கைவசப்படுத்துவதற்கு மனிதகுலம் அதிக முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும் என்று நிச்சயமாகக் கூற முடியாத ஒரு நிலைதான் இப்போது இருக்கிறது. மகிழ்ச்சி அவ்வளவு முக்கியமானதல்ல என்றும், தனிநபர் மனநிறைவுதான் மனிதச் சமுதாயத்தின் மிக உயர்ந்த இலக்கு என்ற கருத்து மிகவும் தவறானது என்றும் சிலர் வாதிடக்கூடும். மற்றவர்கள், மகிழ்ச்சிதான் பிரதானம் என்று கூறக்கூடும் என்றாலும், 'இனிமையான உணர்வுகளை அனுபவிப்பதுதான் மகிழ்ச்சி' என்ற உயிரியல்ரீதியான வரையறையில் அவர்களுக்கு உடன்பாடு இருப்பதில்லை.

இன்பத்தை மிதமிஞ்சிப் பின்தொடர்ந்து செல்லுவது மகிழ்ச்சியைக் கொடுப்பதைவிட அதிகத் துயரத்தையே கொண்டுவரும் என்று சுமார் 2,300 ஆண்டுகளுக்கு முன்பு எபிகியூரஸ் தன் சீடர்களை எச்சரித்தார். ஒருசில நூற்றாண்டுகளுக்கு முன்பு புத்தர் இன்னும் ஒரு படி மேலே போய், இன்பம் தரும் உணர்வுகளைத் துரத்திச் செல்லுவதுதான் துன்பத்திற்கான மூலகாரணம் என்றும், அப்படிப்பட்ட உணர்வுகள் மிகமிகக் குறைவான நேரமே நீடிக்கின்ற அர்த்தமற்ற அதிர்வுகள் என்றும் கூறினார். நாம் அந்த உணர்வுகளை அனுபவிக்கும்போதுகூட நமக்குத் திருப்தி ஏற்படுவதில்லை, மாறாக, அவை இன்னும் அதிகமாக வேண்டும் என்று நாம் விரும்புகிறோம். எனவே, மகிழ்ச்சியும் உற்சாகமும் ஊட்டக்கூடிய எத்தனை உணர்வுகளை நான் அனுபவித்தாலும், அவற்றால் என்னை ஒருபோதும் திருப்திப்படுத்த முடியாது.

மிகச் சிறிதளவு நேரம் மட்டுமே நீடிக்கின்ற, இன்பத்தைத் தருகின்ற உணர்வுகள்தான் எனக்கு மகிழ்ச்சியளிக்கும் என்று நான் உறுதியாக நம்பி, அவற்றை அதிக அளவில் மீண்டும் மீண்டும் அனுபவிப்பதற்கு நான் தீவிரமாக ஆசைப்பட்டால், அந்த உணர்வுகளைத் தொடர்ந்து துரத்திப் பிடிப்பதைத் தவிர எனக்கு வேறு வழி இருக்காது. ஒருவழியாக நான் அவற்றைக் கைவசப்படுத்தும்போது, அவை வேகமாக

மறைந்துவிடுகின்றன. கடந்தகால இன்பங்கள் பற்றிய வெறும் நினைவு எனக்கு மனநிறைவைக் கொடுக்காது என்பதால், நான் மீண்டும் முதலிலிருந்து துவக்கியாக வேண்டும். நான் பலப்பல ஆண்டுகள் இந்தத் தேடலைத் தொடர்ந்தாலும்கூட, நிரந்தரமான நிறைவு எதையும் அது எனக்குக் கொண்டுவராது. மாறாக, நான் அந்த இன்ப உணர்வுகள் குறித்து எவ்வளவு அதிகமாக ஆசைப்படுகிறேனோ, நான் அவ்வளவு அதிகமான மன அழுத்தத்தை அனுபவிப்பேன், அவ்வளவு அதிகத் திருப்தியற்றவனாக ஆவேன். மக்கள் உண்மையான மகிழ்ச்சியைக் கைவசப்படுத்த விரும்பினால், இன்பத்தை நாடிச் செல்லும் வேகத்தை அவர்கள் குறைத்துக் கொள்ள வேண்டுமே அன்றி, அதைத் துரிதப்படுத்தக்கூடாது.

மகிழ்ச்சி குறித்து புத்தமதத்தினர் கொண்டுள்ள கண்ணோட்டத்திற்கும் உயிர்வேதியியல் கண்ணோட்டத்திற்கும் இடையே ஏராளமான ஒற்றுமைகள் இருக்கின்றன. இன்ப உணர்வுகள் எவ்வளவு வேகமாக எழுகின்றனவோ அவ்வளவு வேகமாக மறைந்துவிடுகின்றன என்றும், இன்ப உணர்வுகளை உண்மையிலேயே அனுபவிக்காமல் வெறுமனே அவை குறித்து ஆசைப்பட்டுக் கொண்டே இருக்கும்வரை மக்கள் தொடர்ந்து அதிருப்தியுடனேயே இருப்பர் என்றும் இரண்டு கண்ணோட்டங்களும் ஒப்புக் கொள்ளுகின்றன. ஆனாலும், இந்தப் பிரச்சனைக்கு இரண்டு வெவ்வேறு தீர்வுகள் இருக்கின்றன. மனிதர்களுக்கு இன்ப உணர்வுகளைத் தொடர்ந்து கொடுத்துக் கொண்டே இருக்கின்ற பொருட்களையும் சிகிச்சைகளையும் உருவாக்குவது உயிர்வேதிப் பொருள் தீர்வாகும். ஆனால், இன்ப உணர்வுகள் குறித்த ஆசையை நாம் குறைத்துக் கொள்ள வேண்டும் என்றும், அவை நம்முடைய வாழ்க்கையைக் கட்டுப்படுத்த நாம் அனுமதிக்கக்கூடாது என்றும் புத்தர் பரிந்துரைத்தார். அனைத்து உணர்வுகளும் எப்படி நம்முள் தொடர்ந்து எழுவதும் மறைவதுமாக இருக்கின்றன என்பதை உன்னிப்பாக கவனிப்பதற்கு நம்முடைய மனத்தை நம்மால் பயிற்றுவிக்க முடியும் என்று அவர் கூறினார். நம்முடைய உணர்வுகளை உள்ளது உள்ளபடியே பார்ப்பதற்கு நம்முடைய மனம் கற்றுக் கொள்ளும்போது, அதாவது, அவை மிகமிகக் குறைவான நேரமே நீடிக்கின்ற அர்த்தமற்ற அதிர்வுகள் என்பதை நம் மனம் அறிந்து கொள்ளும்போது, அவற்றைப் பின்தொடர்ந்து செல்லுவதற்கான ஆர்வத்தை நாம் இழந்துவிடுகிறோம். எழுகின்ற வேகத்தில் மறைந்துவிடுகின்ற ஏதோ ஒன்றின் பின்னால் ஓடுவதில் என்ன அர்த்தம் இருக்கிறது?

தற்சமயம், உயிர்வேதிப் பொருள் தீர்வில் மனிதகுலம் அதிக ஆர்வம்

கொண்டுள்ளது. இமயமலைக் குகைகளில் உள்ள துறவிகளும் உச்சாணிக் கொம்புகளில் அமர்ந்துள்ள தத்துவவியலாளர்களும் என்ன கூறினாலும் சரி, சக்திவாய்ந்த ஒரு பெருமுதலாளிக்கு இன்பம்தான் மகிழ்ச்சி. ஆண்டுகள் செல்லச் செல்ல, இனிமையற்ற உணர்வுகள் குறித்து நாம் கொண்டுள்ள சகிப்புத்தன்மை குறைந்து கொண்டே போகிறது, இன்ப உணர்வுகள் குறித்த நம்முடைய ஆசை அதிகரித்துக் கொண்டே வருகிறது. இதை மனத்தில் வைத்தே அறிவியல் ஆராய்ச்சிகளும் பொருளாதார நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்படுகின்றன. ஒவ்வோர் ஆண்டும் சிறந்த வலிநிவாரணிகளும், புதிய சுவை கொண்ட ஐஸ்கிரீம்களும், அதிக வசதியான மெத்தைகளும் தயாரிக்கப்படுகின்றன. அது மட்டுமல்லாமல், பேருந்துக்காக நாம் காத்துக் கொண்டிருக்கும் நேரத்தில் ஒரு கணம்கூட நாம் சலிப்படையாமல் இருப்பதற்காக, நம்மை அதிகமாக அடிமைப்படுத்துகின்ற அலைபேசி விளையாட்டுக்களும் உற்பத்தி செய்யப்படுகின்றன.

இவையெல்லாம் நமக்குப் போதுமானவையாக இல்லை. ஹோமோ சேப்பியன்ஸ் தொடர்ச்சியான இன்பத்தை அனுபவிப்பதற்குப் பரிணாம வளர்ச்சி அவர்களை வடிவமைக்கவில்லை என்றாலும், அதைத்தான் மனிதகுலம் விரும்புகிறது என்றால், வெறும் ஐஸ்கிரீம்களும் ஸ்மார்ட்போன் விளையாட்டுக்களும் போதாது. மாறாக, நம்முடைய உயிர்வேதியியலை மாற்றி, நம்முடைய உடல்களையும் மனங்களையும் மறுவடிவமைப்பு செய்ய வேண்டிய தேவை எழும். அது நல்லதா அல்லது கெட்டதா என்று நீங்கள் விவாதிக்கலாம், ஆனால் ‘உலகளாவிய மகிழ்ச்சியை உறுதி செய்தல்’ என்ற, இருபத்தோராம் நூற்றாண்டின் இரண்டாவது மாபெரும் பணித்திட்டம், என்றென்றும் நீடித்து நிலைக்கக்கூடிய இன்பத்தை ஹோமோ சேப்பியன்ஸ் இனத்தினர் அனுபவிக்கும் விதத்தில் அவர்களை மறுவடிவமைப்பு செய்வதை உள்ளடக்கியிருக்கும்.

## புவியின் கடவுளர்

பேரின்பத்தையும் இறவாநிலையையும் குறித்தத் தேடலில் மனிதர்கள் உண்மையில் தங்களைக் கடவுளராக உயர்த்திக் கொள்ள முயற்சி செய்து கொண்டிருக்கின்றனர். இவ்விரண்டும் தெய்விகப் பண்புகள் என்பது அதற்குக் காரணமல்ல. மாறாக, முதுமையையும் துயரத்தையும் வெற்றி கொள்ளுவதற்கு மனிதர்கள் முதலில் தங்களுடைய உயிரியல் அடித்தளத்தைக் கடவுளைப்போலத் தங்கள் சொந்தக்

கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவந்தாக வேண்டும் என்பதுதான் காரணம். மரணத்தையும் வலியையும் நம்முடைய அமைப்புமுறையிலிருந்து களையும் விதத்தில் நம்மை மறுவடிவமைப்பு செய்வதற்கான சக்தி நம்மிடம் இருந்தால், அதே சக்தி நம்முடைய அமைப்புமுறையை நாம் விரும்பும் எந்தவொரு விதத்திலும் மறுவடிவமைப்பு செய்வதற்கும், நம்முடைய உறுப்புகளையும் உணர்ச்சிகளையும் அறிவையும் எண்ணற்ற வழிகளில் மாற்றியமைக்கவும் போதுமானதாக இருக்கும். ரோமத் தொன்மவியலின் கதாநாயகர்களில் ஒருவரான ஹெர்குலிஸின் வலிமையையும், பண்டைய கிரேக்கப் பழங்கதைகளில் இடம்பெற்றுள்ள பெண்கடவுளரில் ஒருவரான அஃப்ரோடைடியின் கவர்ச்சியையும், பண்டைய கிரேக்கப் பழங்கதைகளில் இடம்பெற்றுள்ள இன்னொரு பெண்கடவுளான அத்தீனாவின் ஞானத்தையும், அல்லது டயானைஸஸின் கிறுக்குத்தனத்தையும் நீங்கள் உங்களுக்காக வாங்கிக் கொள்ள முடியும் - அதைப் பெறத்தான் நீங்கள் விரும்புகிறீர்கள் எனும் பட்சத்தில்! இந்நாள்வரை, அதிகரித்துக் கொண்டிருக்கும் மனித சக்தி நம்முடைய புறவயமான கருவிகளை மேம்படுத்துவதையே முக்கியமாகச் சார்ந்திருந்தது. எதிர்காலத்தில், அது மனித உடலையும் மனத்தையும் மேம்படுத்துவதை அதிகமாகச் சார்ந்திருக்கக்கூடும் அல்லது நேரடியாக நம்முடைய கருவிகளோடு நம்மை நாம் ஒன்றிணைத்துக் கொள்ளுவதைச் சார்ந்திருக்கும்.

மனிதர்களைக் கடவுளராக உயர்த்தும் செயல்முறை, பின்வரும் மூன்று வழிகளில் ஏதேனும் ஒன்றைப் பின்பற்றக்கூடும்: உயிர்பொறியியல், சைபார்க் பொறியியல், மற்றும் செயற்கை உயிரினப் பொறியியல்.

உயிர்பொறியியலானது இயற்கையான உயிரினங்களின் உடல்களின் முழு ஆற்றலைப் பயன்படுத்துவதிலிருந்து நாம் இன்னும் வெகுதூரத்தில் இருக்கிறோம் என்ற உள்நோக்குடன் தொடங்குகிறது. நானூறு கோடி ஆண்டுகளாக, இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறை இந்த உடல்களைத் தேவைக்கு ஏற்றபடி மாற்றியும் குறைகள் அகற்றியும் வந்துள்ளது. எனவே, அமீபாக்களாகத் தொடங்கிய நாம், ஊர்ந்து செல்லும் விலங்குகளாகவும் பாலூட்டிகளாகவும் மாறி, இறுதியில் சேப்பியன்ஸாக ஆகியுள்ளோம். ஆனாலும், சேப்பியன்ஸ்தான் கடைசி நிலை என்று சிந்திக்க எந்தக் காரணமும் இல்லை. தீக்கல் முனைகளைக் கொண்ட ஈட்டிகளைவிட அதிக வசீகரமான எதையும் உருவாக்கத் திறனற்றவர்களாக இருந்த ஹோமோ எரெக்டஸ் இனத்தை, விண்வெளிக் கப்பல்களையும் கணினிகளையும் உருவாக்குகின்ற ஹோமோ சேப்பியன்ஸ் இனமாக

மாற்றுவதற்கு மரபணுக்களிலும் ஹார்மோன்களிலும் நரம்பணுக்களிலும் மிகச் சிறு மாற்றங்கள் போதுமானவையாக இருந்தன. நம்முடைய டிஎன்ஏ, ஹார்மோன் அமைப்புமுறை, மூளைக் கட்டமைப்பு ஆகியவற்றுக்கு இன்னும் ஒருசில கூடுதல் மாற்றங்கள் செய்யப்பட்டால் என்ன நிகழும் என்று யாருக்குத் தெரியும்? இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறை தன்னுடைய அதிசயத்தை நிகழ்த்துவதற்காக உயிர்பொறியியல் பொறுமையாகக் காத்திருக்காது. மாறாக, உயிர்பொறியாளர்கள் பழைய சேப்பியன்ஸின் உடலை எடுத்து, அதன் மரபணுப் பதிவுகளை மாற்றி எழுதி, மூளையின் நரம்புப் பிணையங்களை மாற்றியமைத்து, உயிர்வேதிப் பொருட்களின் சமநிலையை மாற்றுவர், முற்றிலும் புதிய கைகால்களைக்கூட வளர்ப்பர். இதன் மூலம், கடவுளரின் அம்சங்களோடுகூடிய மனிதர்களை அவர்கள் உருவாக்குவர். சேப்பியன்ஸாகிய நாம் எப்படி ஹோமோ எரெக்டஸிலிருந்து வேறுபட்டிருக்கிறோமோ, அதேபோல இப்புதிய வகை மனிதர்கள் நம்மிடமிருந்து வேறுபட்டிருக்கக்கூடும்.

சைபார்க் பொறியியல் இன்னும் ஒரு படி முன்னேறி, இயற்கையான உடல்களை பயானிக் கைகள், செயற்கைக் கண்கள் போன்ற செயற்கையான கருவிகளோடு ஒன்றிணைக்கும். நம்முடைய ரத்த ஓட்டத்தின் வழியாக நம் உடல்கள் நெடுகிலும் பயணித்து, பிரச்சனைகளைக் கண்டறிந்து, பாதிப்புகளைச் சரிசெய்யக்கூடிய லட்சக்கணக்கான நேனோரோபாட்டுகளையும்கூட அது நம்முடைய இயற்கையான உடல்களோடு ஒன்றிணைக்கும். அப்படிப்பட்ட ஒரு சைபார்க், ஓர் இயற்கையான உடலுக்கு இருக்கும் திறனைவிடப் பன்மடங்கு அதிகத் திறன் படைத்ததாக இருக்கும். எடுத்துக்காட்டாக, இயற்கையான ஓர் உடலின் அனைத்துப் பகுதிகளும் ஒழுங்காக இயங்குவதற்கு அவை ஒன்றோடொன்று நேரடியாகத் தொடர்பு கொண்டிருக்க வேண்டும். ஒரு யானையின் மூளை இந்தியாவிலும், அதன் கண்களும் காதுகளும் சீனாவிலும், அதன் பாதங்கள் ஆஸ்திரேலியாவிலும் இருந்தால், அந்த யானை நிச்சயமாக இறந்துவிட்டது என்று பொருள். ஒருவேளை அது ஏதோ மர்மமான விதத்தில் உயிரோடு இருந்தாலும், அதனால் பார்க்கவோ, பேசவோ, அல்லது நடக்கவோ முடியாது. இதற்கு நேரெதிராக, சைபார்க் ஒன்றினால் ஒரே நேரத்தில் எண்ணற்ற இடங்களில் இருக்க முடியும். சைபார்க் மருத்துவர் ஒருவர் ஸ்டாக்ஹோம் நகரில் உள்ள தன்னுடைய மருத்துவமனையைவிட்டு வெளியே வராமலேயே டோக்கியோவிலும் சிக்காகோவிலும் செவ்வாய்க்கிரகத்தில் உள்ள விண்வெளி நிலையத்திலும் அறுவைச் சிகிச்சைகளை மேற்கொள்ள முடியும்.

வேகமான இணையத்தளத் தொடர்பு ஒன்றும் ஒருசில ஜோடி பயானிக் கண்களும் கைகளும் மட்டுமே அவருக்குத் தேவைப்படும். அது சரி, ஏன் 'ஜோடி'யோடு நிறுத்திக் கொள்ள வேண்டும்? அவை ஏன் நான்காக இருக்கக்கூடாது? இன்னும் சொல்லப் போனால், பயானிக் கைகளே தேவையில்லை. ஏனெனில், ஒரு சைபார்க் மருத்துவரால் தன்னுடைய மனத்தை நேரடியாக அந்த அறுவைச் சிகிச்சைக் கருவியோடு இணைத்துக் கொள்ள முடியும் எனும்போது, அவர் ஏன் அறுவைச் சிகிச்சைக் கத்தியைத் தன் கையில் பிடித்திருக்க வேண்டும்?

இது அறிவியல் புனைகதைபோலத் தோன்றக்கூடும், ஆனால் இது ஏற்கனவே யதார்த்தமாகியுள்ளது. குரங்குகள் தம்முடைய உடல்களிலிருந்து பிரிக்கப்பட்டுள்ள பயானிக் கைகளையும் கால்களையும் தம்முடைய மூளைகளில் பதிக்கப்பட்டுள்ள மின்முனைகள் வாயிலாகக் கட்டுப்படுத்துவதற்கு சமீபத்தில் கற்றுக் கொண்டுள்ளன. முடக்குவாதத்தால் பாதிக்கப்பட்டுள்ளவர்கள் வெறும் எண்ணத்தின் சக்தியை மட்டுமே கொண்டு பயானிக் கைகளையும் கால்களையும் அசைப்பது சாத்தியமாகியுள்ளது, அவர்களால் கணினிகளைக்கூட இயக்க முடிகிறது. நீங்கள் விரும்பினால், உங்கள் மனத்தில் உள்ளதை அப்படியே அறிந்து கொண்டு செயல்படக்கூடிய மின்தலைக்கவசத்தைப் பயன்படுத்தி உங்கள் வீட்டில் உள்ள மின்சாதனங்களைத் தொலை இயக்கி மூலம் இப்போது உங்களால் இயக்க முடியும். இந்தத் தலைக்கவசத்தைப் பயன்படுத்துவதற்கு உங்கள் மூளையில் எந்தவொரு கருவியையும் பதிய வைக்க வேண்டியதில்லை. உங்களுடைய உச்சந்தலை வழியாகப் பாய்ந்து செல்லுகின்ற மின்சமிக்கைகளை உணர்ந்து கொள்ளுவதன் மூலம் அது செயல்படுகிறது. நீங்கள் உங்கள் சமையலறை விளக்கை ஒளிர்விக்க விரும்பினால், அந்தத் தலைக்கவசத்தை அணிந்து கொண்டு, ஏற்கனவே திட்டமிடப்பட்டுள்ள மனக்காட்சிகளைக் கற்பனை செய்வதன் மூலம் (எ.கா. உங்கள் வலது கை உயருவதுபோலக் கற்பனை செய்தல்) இப்போது அந்த விளக்கு தானாகவே எரியும். அப்படிப்பட்டத் தலைக்கவசங்களை வெறும் 400 டாலர்களுக்கு உங்களால் வாங்க முடியும்.

ஆனால், சைபார்க் பொறியியல்கூடப் பழமையை விரும்புவதுபோலத்தான் தெரிகிறது. ஏனெனில், இயற்கையான மூளைகள்தான் தொடர்ந்து வாழ்வின் கட்டுப்பாட்டு மையங்களாகவும் கட்டளையிடும் மையங்களாகவும் இருக்கும் என்று அது அனுமானிக்கிறது. இயற்கையான பாகங்கள் அனைத்தையும் ஒட்டுமொத்தமாக ஒதுக்கிவிட்டு, முழுக்க முழுக்கச் செயற்கையான

உயிரினங்களை உருவாக்க முடியும் என்று ஒரு துணிகர அணுகுமுறை நம்புகிறது. நரம்புப் பிணையங்களுக்கு பதிலாக அறிவார்ந்த மென்பொருட்கள் பயன்படுத்தப்படும். கரிம வேதியியலின் குறைபாடுகளிலிருந்து விடுபட்டு மாய உலகத்தையும் நிஜ உலகத்தையும் அவற்றால் உலா வர முடியும். கரிமச் சேர்மங்களின் சாம்ராஜ்ஜியத்தினுள் நானூறு கோடி ஆண்டுகள் சுற்றித் திரிந்த பிறகு, வாழ்க்கையானது, பரந்து விரிந்த கனிமத் தளத்திற்குள் அடியெடுத்து வைக்கப் போகிறது. நம் கனவில்கூட நம்மால் நினைத்துப் பார்க்க முடியாத பல வடிவங்களை அது எடுக்கும். என்ன இருந்தாலும், நம்முடைய கனவுகள் இன்னும் கரிம வேதியியலின் விளைவுதானே!

வாழ்க்கையானது கரிமத் தளத்தை உடைத்துக் கொண்டு வெளியே வரும்போது, இறுதியில் அது இந்த பூமியிலிருந்து விடுபடுவதற்கான சக்தியையும் பெறும். அனைத்து உயிரினங்களும் பறக்கும் பாறையான இந்த பூமியின் தனித்துவமான சூழல்கள்மீது முழுமையாகச் சார்ந்திருக்கும்படி இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறை அவற்றை வடிவமைத்திருப்பதால், நானூறு கோடி ஆண்டுகளாக வாழ்க்கை இச்சிறிய பூமியினுள் அடைந்து கிடந்துவிட்டது. மிக உயர்ந்த தாங்குதிறன் கொண்ட பற்றுயிரிகளால்கூடச் செவ்வாய்க்கிரகத்தில் உயிர்வாழ முடியாது. இதற்கு நேர்மாறாக, செயற்கை நுண்ணறிவு அந்நியக் கோள்களில் மிக எளிதாகக் குடியேறிவிடும். கரிம வாழ்க்கையை அப்புறப்படுத்திவிட்டு அதனிடத்தில் செயற்கை உயிரினங்களைக் குடியமர்த்துவது தரவுகளால் ஆளப்படுகின்ற ஓர் எதிர்காலப் பிரபஞ்ச சாம்ராஜ்ஜியத்திற்கான ஒரு விதையை ஊன்றக்கூடும்.

***

இப்பாதைகள் நம்மை எங்கே கூட்டிச் செல்லும் என்பது நமக்குத் தெரியாது. கடவுளைப் போன்ற நம்முடைய எதிர்காலத் தலைமுறையினரின் தோற்றம் எப்படி இருக்கும் என்பதும் நமக்குத் தெரியாது. எதிர்காலத்தைப் பற்றி ஆரூடம் கணிப்பது ஒருபோதும் எளிதானதாக இருப்பதில்லை. புரட்சிகரமான உயிர்தொழில்நுட்பங்கள் அதை மேலும் அதிகக் கடினமாக்குகின்றன. போக்குவரத்து, தகவல் தொடர்பு, ஆற்றல் போன்ற துறைகளில் புதிய தொழில்நுட்பங்கள் ஏற்படுத்தக்கூடிய தாக்கத்தைக் கணிப்பதே கடினமாக இருக்கின்ற இந்நேரத்தில், மனிதர்களின் நிலையை உயர்த்துவதற்கான தொழில்நுட்பங்கள் முற்றிலும் வித்தியாசமானதொரு சவாலை முன்வைக்கின்றன. மனித மனங்களையும் விருப்பங்களையும் மாற்றுவதற்கு அந்தத் தொழில்நுட்பங்களைப் பயன்படுத்த முடியும்

என்பதால், அப்புதிய தொழில்நுட்பங்கள் ஏற்படுத்தக்கூடிய விளைவுகளை இன்றைய மனங்களைக் கொண்டு நம்மால் புரிந்து கொள்ள முடியாது.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக, தொழில்நுட்பரீதியான, சமுதாயரீதியான மற்றும் அரசியல்ரீதியான திடீர்மாற்றங்களால் வரலாறு நிரம்பி வழிந்தது. ஆனால் ஒரு விஷயம் மட்டும் மாறவே இல்லை. மனிதகுலம்தான் அது. நம்முடைய கருவிகளும் அமைப்புகளும் பைபிள் காலத்தியக் கருவிகள் மற்றும் அமைப்புகளிலிருந்து மிகவும் வேறுபட்டிருந்தாலும், மனித மனத்தின் ஆழமான கட்டமைப்புகள் மட்டும் மாறாமல் அப்படியே இருக்கின்றன. அதனால்தான், பைபிளின் பக்கங்களுக்கு இடையேயும், கன்பூசியலின் எழுத்துக்களிலும், கிரேக்க எழுத்தாளர்களான சோஃபோக்கில்ஸ் மற்றும் யூரிபிடிஸ் அரங்கேற்றிய துயர நாடகங்களுக்குள்ளும் நம்மை நம்மால் அடையாளம் காண முடிகிறது. காலத்தால் அழியாத இந்த அற்புதப் படைப்புகள் அனைத்தும் நம்மைப் போன்ற மனிதர்களாலேயே உருவாக்கப்பட்டன என்பதால், அவர்கள் நம்மைப் பற்றிப் பேசுகிறார்கள் என்ற உணர்வு நமக்கு ஏற்படுகிறது. நவீன நாடகத் தயாரிப்புகளில், ஒடீபஸ், ஹேம்லெட், ஒத்தெல்லோ ஆகிய கதாபாத்திரங்கள் ஜீன்ஸும் டி-ஷர்ட்டும் அணியக்கூடும், முகநூலில் கணக்கு வைத்திருக்கக்கூடும், ஆனால் அவர்களுடைய உணர்ச்சிரீதியான முரண்பாடுகள் அந்தக் காலத்திய நாடகங்களில் இருந்ததைப்போலவே இருக்கின்றன.

மனித மனங்களை மறுவடிவமைப்பு செய்யக்கூடிய தொழில்நுட்பங்கள் கண்டுபிடிக்கப்பட்டுவிட்டால், ஹோமோ சேப்பியன்ஸ் அழிந்துவிடுவர், மனித வரலாறு ஒரு முடிவுக்கு வந்துவிடும், முற்றிலும் புதியதொரு வகையான செயல்முறை தொடங்கும். அச்செயல்முறையை உங்களையும் என்னையும் போன்றவர்களால் புரிந்து கொள்ள முடியாது. 2100ம் ஆண்டில் அல்லது 2200ம் ஆண்டில் உலகம் எப்படி இருக்கும் என்பதைக் கணிக்கப் பல அறிஞர்கள் முயற்சி செய்கின்றனர். இது வெறும் நேர விரயம்தான். பயனளிக்கவல்ல எந்தவொரு கணிப்பும் மனித மனங்களை மாற்றியமைப்பதற்கான திறனைக் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். ஆனால் இது சாத்தியமற்றது. “நம்மைப் போன்றவர்களுடைய மனங்களைக் கொண்ட மக்கள் உயிர்தொழில்நுட்பத்தை வைத்து என்ன செய்யப் போகிறார்கள்?” என்ற கேள்விக்குப் பல அறிவார்ந்த விடைகள் இருக்கின்றன. ஆனால், “ஒரு வித்தியாசமான வகையான மனத்தைக் கொண்ட உயிரினங்கள் உயிர்தொழில்நுட்பத்தை வைத்து என்ன செய்யும்?” என்ற கேள்விக்கு

நல்ல பதில்கள் எதுவும் இல்லை. நம்மை ஒத்த மக்கள் தங்கள் சொந்த மனங்களை மறுவடிவமைப்பதற்கு உயிர்தொழில்நுட்பத்தைப் பயன்படுத்துவதற்கான வாய்ப்புகள் அதிகம், ஆனால் அடுத்து என்ன நிகழக்கூடும் என்பதை நம்முடைய இன்றைய மனங்களால் புரிந்து கொள்ள முடியாது.

அது குறித்த விபரங்கள் இப்போது தெளிவின்றி இருந்தாலும், வரலாற்றின் பொதுவான போக்கை நாம் உறுதியாக நம்பலாம். படைத்தல், அழித்தல் ஆகிய இரண்டு தெய்விக சக்திகளைக் கைவசப்படுத்தி ஹோமோ சேப்பியன்ஸை ஹோமோ டியஸாக மாற்றுவதுதான் இருபத்தோராம் நூற்றாண்டில் மனிதகுலத்தின் மூன்றாவது பெரிய பணித்திட்டமாக இருக்கும். இந்த மூன்றாவது பணித்திட்டம் முதல் இரண்டு பணித்திட்டங்களையும் உள்ளடக்கியுள்ளது, அவற்றால் தூண்டப்படுகிறது. முதுமை, மரணம், மற்றும் துயரத்திலிருந்து விடுபடுவதற்காக நம்முடைய உடல்களையும் மனங்களையும் மாற்றியமைப்பதற்கான திறனை நாம் கைவசப்படுத்த விரும்புகிறோம். ஆனால் அது நம் வசப்பட்டுவிட்டால், அதைக் கொண்டு நாம் வேறு என்னவெல்லாம் செய்வோம் என்று யாருக்குத் தெரியும்? எனவே, கையாளப்பட வேண்டிய புதிய விஷயங்களை உள்ளடக்கிய பட்டியலில், உண்மையில் பல்வேறு கிளைகளைக் கொண்ட ஒரே ஒரு பணித்திட்டம் மட்டுமே இருக்கிறது என்று நாம் கருதலாம். தெய்விகத்தை அடைவதுதான் அது.

இது அறிவியல் கொள்கைகளுக்கு எதிரானதாகவும் பைத்தியக்காரத்தனமானதாகவும் தோன்றக்கூடும். தெய்விகத்தின் பொருளை மக்கள் அடிக்கடித் தவறாகப் புரிந்து கொள்ளுவதுதான் அதற்குக் காரணம். தெய்விகம் என்பது தெளிவற்ற ஒரு மீமெய்யியல் பண்புநலன் அல்ல. சர்வ வல்லமையும் தெய்விகமும் ஒன்றல்ல. மனிதர்களைக் கடவுளராக உயர்த்துவதைப் பற்றிப் பேசும்போது, பைபிளில் குறிப்பிடப்பட்டுள்ள, சர்வ வல்லமை படைத்தப் பரமபிதாவைப் பற்றி நினைப்பதற்கு பதிலாக, கிரேக்கக் கடவுளர் அல்லது இந்துமதத்தின் தேவர்கள் என்ற ரீதியில் சிந்தியுங்கள். கிரேக்கப் புராணக் கதைகளில் வரும் கடவுளான சியூஸிடமும் இந்துமதப் புராணங்களில் வரும் தேவேந்திரனிடமும் எப்படி சில பலவீனங்களும் நெளிசல்களும் குறைபாடுகளும் இருந்தனவோ, அதேபோல நம்முடைய சந்ததியினரிடமும் சில பலவீனங்களும் நெளிசல்களும் குறைபாடுகளும் இருக்கத்தான் செய்யும். ஆனால் நம்மைவிட மிக பிரம்மாண்டமான அளவில் அவர்களால் அன்பு செலுத்தவும், வெறுக்கவும், ஆக்கவும், அழிக்கவும் முடியும்.

பெரும்பாலான கடவுளர் சர்வ வல்லமை படைத்தவர்கள் அல்லர், மாறாக, குறிப்பிட்ட அதிதிறன்கள் அவர்களுக்கு இருந்தன என்று வரலாறு நெடுகிலும் மக்கள் நம்பி வந்துள்ளனர். எடுத்துக்காட்டாக, உயிரினங்களை வடிவமைத்து உருவாக்குவதற்கான திறன், தங்கள் சொந்த உடல்களை உருமாற்றிக் கொள்ளுவதற்கான திறன், சுற்றுச்சூழலையும் வானிலையையும் கட்டுப்படுத்துவதற்கான திறன், அடுத்தவருடைய மனத்தில் இருப்பதை அறிந்து கொள்ளுவதற்கான திறன், தொலைதூரத்தில் இருக்கும் ஒருவரிடம் கருத்துப் பரிமாற்றம் மேற்கொள்ளுவதற்கான திறன், அதிவேகத்தில் பயணிப்பதற்கான திறன், மரணத்திலிருந்து தப்பித்து முடிவின்றி வாழுவதற்கான திறன் போன்றவற்றைக் கூறலாம். மனிதர்கள் இந்தத் திறன்களோடு சேர்த்து இன்னும் சில கூடுதல் திறன்களையும் கைவசப்படுத்தும் முயற்சியில் மும்முரமாக இறங்கியுள்ளனர். பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக தெய்விகமானவையாகக் கருதப்பட்டு வந்த சில குறிப்பிட்டத் திறன்கள் இன்று மக்களிடையே பரவலாக இருக்கின்றன. அவற்றைப் பற்றி நாம் அவ்வளவாக நினைத்துப் பார்ப்பதுகூட இல்லை. பண்டைய கிரேக்கக் கடவுளரையும் இந்துமதக் கடவுளரையும் ஆப்பிரிக்கக் கடவுளரையும்விட இன்றைய சராசரி நபர் ஒருவர் அதிக வேகமாகப் பயணிக்கிறார், வெகுதொலைவில் உள்ள இடங்களில் வசிப்பவர்களிடம் அதிக சுலபமாகக் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளுகிறார்.

எடுத்துக்காட்டாக, நைஜீரியாவைச் சேர்ந்த இக்போ இன மக்களிடையே பின்வரும் நம்பிக்கை ஒன்று நிலவுகிறது: படைப்புக் கடவுளான சக்வூ, துவக்கத்தில் மனிதர்களை மரணமற்றவர்களாகவே படைக்க விரும்பினார். யாரேனும் இறக்கும்போது அவருடைய சடலத்தின்மீது சாம்பலைத் தூவினால் அந்த உடல் மீண்டும் உயிர் பெற்றுவிடும் என்று கூறிவிட்டு வரும்படி அவர் ஒரு நாயை அவர்களிடம் அனுப்பி வைத்தார். துரதிர்ஷ்டவசமாக, அந்த நாய் மிகவும் களைத்துப் போனதால், வழியில் அது மிகவும் மெதுவாக நடக்கத் தொடங்கி நேரத்தை வீணாக்கியது. பொறுமையிழந்த சக்வூ, தன்னுடைய முக்கியமான செய்தியை விரைவாக மனிதர்களிடம் தெரிவித்துவிட்டு வரும்படி ஒரு செம்மறியாட்டை அனுப்பி வைத்தார். தான் போய்ச் சேர வேண்டிய இடத்திற்கு மூச்சிரைத்தபடி வந்து சேர்ந்த அந்தச் செம்மறியாடு, தனக்குக் கொடுக்கப்பட்டச் செய்தியைத் தவறுதலாக மாற்றிக் கூறியது. இறந்தவர்கள் புதைக்கப்பட வேண்டும் என்று அது அவர்களிடம் கூறியது. இதன் மூலம், அது மரணத்தை நிரந்தரமானதாக ஆக்கியது. இதனால்தான் இன்றுவரை மனிதர்கள்

இறக்க வேண்டியுள்ளது. சக்வூ தன்னுடைய செய்திகளைத் தெரிவிப்பதற்கு சோம்பேறித்தனமான நாய்களையும் மந்தமான அறிவு படைத்தச் செம்மறியாடுகளையும் சார்ந்திருந்ததற்கு பதிலாக டுவிட்டரில் மட்டும் ஒரு கணக்கு வைத்திருந்தால் வேலை சுலபமாக முடிந்திருக்குமே!

பண்டைய வேளாண் சமுதாயங்களில் பல மதங்கள் மீமெய்யியல் கேள்விகளிலும் மரணத்திற்குப் பிந்தைய வாழ்க்கையிலும் அவ்வளவு ஆர்வம் காட்டவில்லை. அதற்கு பதிலாக, விளைச்சலை அதிகரித்தல் என்ற சாதாரண விவகாரத்தின்மீது மட்டுமே அவை கவனம் செலுத்தின. பைபிளின் பழைய ஏற்பாட்டின் கடவுள், மரணத்திற்குப் பிறகு வெகுமதிகள் அல்லது தண்டனைகள் கிடைக்கும் என்று ஒருபோதும் வாக்குக் கொடுப்பதில்லை. அவர் அதற்கு பதிலாக இஸ்ரேலியர்களைப் பார்த்து இப்படிக் கூறுகிறார்: "நான் கொடுக்கும் கட்டளைகளை நீங்கள் கவனமாக நிறைவேற்றினால், பிறகு உரிய காலத்தில் நான் மழையை அனுப்பி வைப்பேன். தானியமும் மதுரசமும் எண்ணெயும் உங்களுக்குக் கிடைக்கும். உங்களுடைய கால்நடைகளுக்காக உங்கள் மேய்ச்சல் நிலங்களுக்குப் புல்லை வழங்குவேன். நீங்கள் மகிழ்ச்சியாக உணவு உட்கொண்டு மனநிறைவோடு இருக்கலாம். நீங்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்! இல்லாவிட்டால், உங்கள் இதயம் உங்களை ஏமாற்றும். நீங்கள் வேறு தேவர்களுக்கு சேவகம் செய்யப் போய்விடுவீர்கள், அவர்களை வழிபடத் தொடங்கிவிடுவீர்கள். கடவுளின் கோபம் உங்களுக்கு எதிராகத் திரும்பி, மேகங்களைக் கட்டுப்படுத்தி மழை பொழியாதபடி செய்துவிடும். இதனால் உங்கள் நிலம் விளைச்சலைக் கொடுக்காது. கடவுள் உங்களுக்குக் கொடுக்கவிருக்கும் சிறந்த நாட்டிலிருந்து நீங்கள் விரைவில் அழிக்கப்படுவீர்கள்" (உப ஆகமம் 11:13-17). இன்றைய அறிவியலறிஞர்களால் பைபிளின் பழைய ஏற்பாட்டின் கடவுளைவிட அதிகச் சிறப்பாகச் செயல்பட முடியும். செயற்கை உரங்கள், தொழிற்சாலையில் தயாரிக்கப்படும் பூச்சிக்கொல்லி மருந்துகள், மரபணு மாற்றம் செய்யப்பட்டப் பயிர்கள் ஆகியவற்றால் இன்று வேளாண் உற்பத்தியானது பண்டைய விவசாயிகள் தங்கள் கடவுளரிடம் கொண்டிருந்த மிக உயர்ந்த எதிர்பார்ப்புகளையும் விஞ்சிவிடுகிறது. வறண்ட நாடான இஸ்ரேல், கோபக்காரக் கடவுள் ஒருவர் மேகங்களைக் கட்டுப்படுத்தி மழை வராதபடி செய்துவிடுவார் என்று இனியும் பயப்படுவதில்லை. ஏனெனில், மத்தியத் தரைக்கடலின் கரையோரத்தில் கடல்நீரைக் குடிநீராக ஆக்குவதற்கான பெரிய ஆலை ஒன்றை அவர்கள்

கட்டியுள்ளனர். இப்போது தங்களுக்குத் தேவையான குடிநீர் முழுவதையும் அவர்களால் கடலிலிருந்து பெற்றுக் கொள்ள முடியும்.

மேன்மேலும் சிறப்பான கருவிகளை உருவாக்குவதன் மூலம் பண்டைய கடவுளருடன் நாம் இதுவரை போட்டியிட்டு வந்துள்ளோம். எதிர்காலத்தில் விரைவில் நாம் அதிமனிதர்களை உருவாக்கக்கூடும். அவர்கள் தங்களுடைய கருவிகள் விஷயத்தில் மட்டுமல்லாமல், உடல்ரீதியான மற்றும் மனரீதியான சக்திகள் விஷயத்திலும் பண்டைய கடவுளரை விஞ்சிவிடுவர். நாம் அந்த நிலையை அடையும்போது, தெய்விகம் ஓர் இணையவெளிபோல ஒரு சாதாரணமான விஷயமாக ஆகிவிடும். இணையவெளிகூட ஓர் அதிசயம்தான். ஆனால் நாம் அதை மிகச் சாதாரணமான ஒன்றாகப் பார்க்கிறோம்.

மனிதர்கள் தெய்விகத்தை அடைவதற்கு முயற்சிப்பர் என்று நாம் உறுதியாக நம்பலாம். ஏனெனில், அத்தகைய ஓர் உயர்ந்த நிலைக்குத் தங்களை உயர்த்திக் கொள்ள மனிதர்கள் விரும்புவதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன, அதை அடைவதற்குப் பல வழிகள் இருக்கின்றன. நம்பிக்கையூட்டுவதாக இருக்கின்ற ஒரு பாதை ஒரு முட்டுச்சந்தில் போய் முடிந்தால்கூட, மாற்று வழிகள் எப்போதும் திறந்திருக்கும். எடுத்துக்காட்டாக, மனித மரபணுத் தொகுதி மிகமிகச் சிக்கலானது என்பதால் அதில் தீவிர மாற்றங்களைச் செய்வது அதிகக் கடினமானதாக இருக்கும் என்பதை நாம் கண்டறியக்கூடும். ஆனால், மூளைக்கும் கணினிக்கும் இடையேயான நேரடி இணைப்பு, நேனோரோபாட்டுகள், செயற்கை நுண்ணறிவு போன்றவற்றின் உருவாக்கத்தை அது தடுக்காது.

ஆனால் நாம் பீதியடையத் தேவையில்லை. குறைந்தபட்சம், இப்போதைக்கு நாம் அவ்வளவாகக் கவலைப்பட வேண்டியதில்லை. சேப்பியன்ஸின் நிலையை உயர்த்துவது படிப்படியான ஒரு வரலாற்றுச் செயல்முறையாக இருக்குமே அன்றி, ஹாலிவுட் பாணியிலான ஓர் உலக அழிவாக இருக்காது. ரோபாட்டுகளின் ஆயுதப் புரட்சியொன்று ஹோமோ சேப்பியன்ஸை அழித்துவிடாது. மாறாக, ஹோமோ சேப்பியன்ஸ் இனம், ரோபாட்டுகளுடனும் கணினிகளுடனும் ஒன்றுகலந்து படிப்படியாகத் தன்னுடைய நிலையை உயர்த்தப் போகிறது. அச்செயல்முறையின் இறுதியில் ஹோமோ சேப்பியன்ஸின் வம்சாவளியினர் தங்கள் வளர்ச்சியைத் திரும்பிப் பார்த்து, ஹோமோ சேப்பியன்ஸிடமிருந்து தாங்கள் முற்றிலும் வேறுபட்டிருப்பதை உணருவர். பைபிளை எழுதி, சீனப் பெருஞ்சுவரைக் கட்டி, சார்லி சாப்ளினின் நகைச்சுவையைக் கேட்டுச் சிரித்த வகையான விலங்கு அல்ல தாங்கள் என்பதை அவர்கள் உணருவர். இது ஒரே நாளிலோ

அல்லது ஒரே ஆண்டிலோ நிகழப் போவதில்லை. உண்மையைக் கூற வேண்டும் என்றால், சலிப்பூட்டுகின்ற, சாதாரணமான, எண்ணற்ற நடவடிக்கைகள் மூலமாக இது ஏற்கனவே நிகழ்ந்து கொண்டிருக்கிறது. ஒவ்வொரு நாளும் லட்சக்கணக்கான மக்கள் தங்கள் வாழ்க்கையை சற்றுக் கூடுதலாகக் கட்டுப்படுத்தத் தங்கள் ஸ்மார்ட்போன்களுக்கு அனுமதி வழங்கவும், மனச்சோர்வைப் போக்குவதற்கான புதிய மற்றும் அதிகப் பலனளிக்கும் மருந்து ஒன்றை முயற்சித்துப் பார்க்கவும் தீர்மானிக்கின்றனர். ஆரோக்கியம், மகிழ்ச்சி, மற்றும் சக்திக்கான தேடலில், மனிதர்கள் படிப்படியாகத் தங்களுடைய ஒவ்வோர் அம்சத்தையும் மாற்றுவர். இறுதியில், அவர்கள் மனிதர்களாகவே இருக்க மாட்டார்கள்.

## தயவு செய்து யாரேனும் அதன் வேகத்தை மட்டுப்படுத்துகிறீர்களா?

அமைதியான விளக்கங்கள் ஒரு புறம் இருந்தாலும், இப்படிப்பட்ட சாத்தியக்கூறுகளைக் கேட்கும்போது பலர் பீதியடைகின்றனர். அவர்கள் தங்களுடைய ஸ்மார்ட்போன்கள் கொடுக்கின்ற அறிவுரையை மகிழ்ச்சியாகப் பின்பற்றுவர், தங்களுடைய மருத்துவர் பரிந்துரைக்கின்ற எந்தவொரு மருந்தையும் மகிழ்ச்சியாக உட்கொள்ளுவர், ஆனால் நிலை உயர்த்தப்பட்ட அதிமனிதர்களைப் பற்றிய பேச்சை எடுத்தால் மட்டும், "அது நிகழுவதற்கு முன்பாக நான் இறந்துவிட்டால் நல்லது," என்று அவர்கள் கூறுகின்றனர். முதுமை குறித்துத் தான் மிகவும் பயப்படுகின்ற விஷயம் பற்றி என் தோழி ஒருவர் என்னிடம் இவ்வாறு கூறினார்: "நான் இவ்வுலகிற்குப் பொருத்தமற்றவளாக ஆகிவிடுனோ என்று நான் பயப்படுகிறேன். என்னைச் சுற்றி இருக்கின்ற உலகத்தைப் புரிந்து கொள்ளவோ அல்லது அதற்கு அவ்வளவாகப் பங்களிக்கவோ முடியாதவளாகவும், பழைய நினைவுகளில் மூழ்கிக் கிடக்கின்ற ஒரு கிழவியாகவும் நான் மாறிவிடுவேனோ என்றும் நான் பயப்படுகிறேன்." அதிமனிதர்களைப் பற்றிக் கேள்விப்படும்போது, ஓர் இனம் என்ற முறையில், நாம் எல்லோரும் கூட்டாக பயப்படுவது என் தோழி கூறிய அதே விஷயத்திற்குத்தான். அதிமனிதர்களை உள்ளடக்கிய ஓர் உலகில் நம்முடைய அடையாளமும் கனவுகளும் பயங்களும்கூடப் பொருத்தமற்றவையாக ஆகிவிடும். நாம் பங்களிப்பதற்கு இனி எதுவும் இருக்காது. இன்று நீங்கள் யாராக இருந்தாலும் சரி, மேம்பட்ட ஓர் உலகில் நீங்கள் வால்ஸ்டிரீட்டில் ஒரு நியான்டர்தால்

வேட்டையாடியைப்போல உணருவீர்கள். நீங்கள் அவ்வுலகில் பொருந்த மாட்டீர்கள்.

நாஸ்டாக் பங்குச் சந்தையைப் பற்றி நியான்டர்தால்கள் கவலைப்பட வேண்டியிருக்கவில்லை. ஏனெனில், அவர்களுடைய காலகட்டம் முடிந்து பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்குப் பின்னர்தான் அது வந்தது. ஆனால் இன்று, அர்த்தமுள்ள நம்முடைய உலகம் வெகுசில ஆண்டுகளுக்குள் நிலைகுலைந்துவிடக்கூடும். நீங்கள் முற்றிலும் பொருத்தமற்ற ஒருவராக ஆவதிலிருந்து உங்களைக் காப்பாற்றுவதற்கு மரணத்தின்மீது உங்களால் நம்பிக்கை வைக்க முடியாது. 2100ம் ஆண்டுவாக்கில் கடவுளர் நம்முடைய தெருக்களில் நடமாடாவிட்டாலும்கூட, ஹோமோ சேப்பியன்ஸை ஒரு மேம்பட்ட நிலைக்கு உயர்த்துவதற்கான முயற்சி இந்த நூற்றாண்டில் இந்த உலகத்தை அடையாளம் காணப்பட முடியாத அளவுக்கு மாற்றிவிடக்கூடிய சாத்தியம் உள்ளது. நம்மில் பெரும்பாலானோரால் புரிந்து கொள்ள முடியாத அளவுக்கு அறிவியல் ஆராய்ச்சிகளும் தொழில்நுட்ப வளர்ச்சிகளும் அதிவேகத்தில் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன.

நீங்கள் வல்லுநர்களிடம் பேசினால், மரபணு மாற்றம் செய்யப்பட்டக் குழந்தைகளை உருவாக்குவதிலிருந்தும் மனித அறிவின் அளவுக்கு ஆற்றல்வாய்ந்த செயற்கை நுண்ணறிவை உருவாக்குவதிலிருந்தும் நாம் இன்னும் வெகுதூரத்தில் இருக்கிறோம் என்று அவர்களில் பலர் உங்களிடம் கூறுவர். ஆனால் எதிர்காலம் குறித்தக் கிட்டப்பார்வைக் குறைபாடு உடையவர்கள் அவர்கள். தங்கள் பதவிகள் மற்றும் தங்களுக்குக் கிடைக்கும் ஆராய்ச்சி உதவித் தொகைக்குப் புறம்பாக அவர்கள் சிந்திப்பதில்லை. எனவே, 'வெகு தூரத்தில்' என்பதற்கு இருபது ஆண்டுகள் என்பது அர்த்தமாக இருக்கக்கூடும், 'ஒருபோதும் இல்லை' என்பதற்கு ஐம்பது ஆண்டுகளுக்குள் என்பது அர்த்தமாக இருக்கக்கூடும்.

நான் இணையத்தை முதன்முதலாக எதிர்கொண்ட நாள் எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. இது 1993ல் நடந்தது. அப்போது நான் உயர்நிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தேன். நானும் என்னுடைய நண்பர்கள் சிலரும் சேர்ந்து எங்கள் நண்பன் ஐடோவின் வீட்டிற்குச் சென்றோம் (அவன் இப்போது ஒரு கணிப் பொறியாளராக வேலை செய்து கொண்டிருக்கிறான்). நாங்கள் டேபிள் டென்னிஸ் விளையாட விரும்பினோம். ஐடோ அந்த வயதிலேயே கணினியின் மிகத் தீவிர ரசிகனாக இருந்தான். எனவே, டேபிள் டென்னிஸ் பலகையைத் திறப்பதற்கு முன்பாக, அப்போதைய புதிய அதிசயம்

ஒன்றை எங்களுக்குக் காட்டுவதில் அவன் பிடிவாதமாக இருந்தான். அவன் தன்னுடைய தொலைபேசி ஒயரைத் தன்னுடைய கணினியோடு இணைத்து, ஏதோ ஒருசில விசைகளைத் தட்டினான். முழு ஒரு நிமிடத்திற்கு வெறும் கீச்சொலியும் இன்னும் பல சத்தங்களும் மட்டுமே எங்களுக்குக் கேட்டன. பிறகு எல்லாச் சத்தங்களும் அடங்கி அங்கு வெறும் மௌனம் நிலவியது. என் நண்பனின் முயற்சி வெற்றி பெறவில்லை. நாங்கள் எல்லோரும் முணுமுணுத்துக் கொண்டும் முனகிக் கொண்டும் இருந்தோம். ஆனால் ஐடோ இன்னொரு முறை முயற்சி செய்தான். அவன் மீண்டும் மீண்டும் முயற்சித்தான். இறுதியில், அருகிலிருந்த ஒரு பல்கலைக்கழகத்தின் மையக் கணினியோடு தன்னுடைய கணினியைத் தான் வெற்றிகரமாக இணைத்துவிட்டதாக அவன் களிப்போடு கூறினான். “அந்த மையக் கணினியில் என்ன இருக்கிறது?” என்று நாங்கள் கேட்டோம். “அங்கு இன்னும் எதுவும் இல்லை. ஆனால் பல்வேறு வகையான விஷயங்களை அதில் போடலாம்,” என்று அவன் கூறினான். “எந்த மாதிரி விஷயங்கள்?” என்று நாங்கள் கேட்டோம். “எனக்குத் தெரியாது. ஆனால் அனைத்து வகையான விஷயங்களையும் அதில் போட்டு வைக்க முடியும்,” என்று அவன் உறுதியாகக் கூறினான். ஆனால் அது அவ்வளவு நம்பிக்கையூட்டுவதாக இருக்கவில்லை. பிறகு நாங்கள் எல்லோரும் டேபிள் டென்னிஸ் விளையாடப் போய்விட்டோம். அடுத்தப் பல வாரங்களாக, ஐடோவின் கிறுக்குத்தனமான யோசனை குறித்து நாங்கள் அவனைக் கேலியும் கிண்டலும் செய்து மகிழ்ந்தோம். வெறும் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்த விஷயம் இது. ஆனால், அடுத்த இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பிறகு என்ன நிகழும் என்பதை யார் அறிவார்?

அதனால்தான், இறவாநிலை, பேரின்பம், கடவுளுக்குரிய சக்திகள் ஆகியவற்றுக்கான தேடலை அதிக எண்ணிக்கையிலான தனிநபர்களும் பெருநிறுவனங்களும் அரசாங்கங்களும் மிகத் தீவிரமாக எடுத்துக் கொண்டிருக்கின்றன. காப்பீட்டு நிறுவனங்கள், ஓய்வூதிய நிதிகள், சுகாதார அமைப்புகள், நிதி அமைச்சகங்கள் ஆகியவை, ஆயுட்காலம் வெகுவாக அதிகரித்திருப்பது குறித்து ஏற்கனவே அதிர்ச்சியடைந்து இருக்கின்றன. எதிர்பார்த்ததைவிட அதிக காலம் மக்கள் உயிர்வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். அவர்களுடைய ஓய்வூதியங்களுக்கும் மருத்துவச் சிகிச்சைகளுக்கும் போதுமான பணம் இல்லை. எழுபது வயது இன்றைய புதிய நாற்பது வயதாக ஆகியுள்ளதால், பணியிலிருந்து ஓய்வு பெறுவதற்கான வயதை உயர்த்துவதற்கும், ஒட்டுமொத்த வேலைச் சந்தையை மறுவடிவமைப்பு செய்வதற்கும் வல்லுநர்கள் அறைகூவல்

விடுக்கின்றனர்.

நமக்குத் தெரியாத அந்த மாபெரும் விஷயத்தை நோக்கி நாம் எவ்வளவு வேகமாகப் போய்க் கொண்டிருக்கிறோம் என்பதையும், மரணத்தால்கூட அந்த மாபெரும் விஷயத்திலிருந்து நம்மைப் பாதுகாக்க முடியாது என்பதையும் மக்கள் உணரும்போது, யாரோ ஒருவர் பிரேக்கை அழுத்தி நம்முடைய வேகத்தைக் குறைப்பார்கள் என்று நம்புவதுதான் அவர்கள் செய்யக்கூடிய காரியமாக இருக்கிறது. ஆனால் பல்வேறு காரணங்களால் நம்மால் அந்த பிரேக்கை அழுத்த முடியாது.

முதலாவதாக, அந்த பிரேக் எங்கே இருக்கிறது என்பது யாருக்கும் தெரியாது. செயற்கை நுண்ணறிவு, நேனோதொழில்நுட்பம், பிக் டேட்டா, மரபியல் போன்றவற்றில் ஏதேனும் ஒரு துறையில் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் வளர்ச்சிகள் பற்றி சில வல்லுனநர்கள் அறிந்து வைத்திருப்பர். ஆனால் எல்லோருக்கும் எல்லாத் துறைகளிலும் நிகழ்ந்து கொண்டிருக்கும் விஷயங்கள் பற்றித் தெரியாது. எனவே, எல்லாப் புள்ளிகளையும் இணைத்து முழுப் படத்தையும் பார்ப்பதற்கான திறனும் தகுதியும் யாருக்கும் இல்லை. ஒவ்வொரு துறையும் வேறு பிற துறைகள்மீது மிக நுண்ணிய வழிகளில் தாக்கம் ஏற்படுத்துவதால், செயற்கை நுண்ணறிவுத் துறையில் நிகழ்த்தப்படும் புதிய கண்டுபிடிப்புகள் எப்படி நேனோதொழில்நுட்பத்தின்மீது தாக்கம் ஏற்படுத்தும் அல்லது நேனோதொழில்நுட்பக் கண்டுபிடிப்புகள் எவ்வாறு செயற்கை நுண்ணறிவுத் துறையை பாதிக்கும் என்பதைத் தலைசிறந்த வல்லுநர்களால்கூடப் புரிந்து கொள்ள முடியாது. புதிய அறிவியல் கண்டுபிடிப்புகள் அனைத்தையும் எல்லோராலும் உட்கிரகித்துக் கொள்ள முடியாது. பத்து ஆண்டுகளில் உலகப் பொருளாதாரம் எப்படி இருக்கும் என்று யாராலும் கணிக்க முடியாது. நாம் இவ்வளவு அதிவேகத்தில் எதை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறோம் என்பது பற்றி யாருக்கும் எள்ளளவுகூட யோசனை இல்லை. ஆகவே, என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பது யாருக்கும் தெரியாமல் இருப்பதால், யாராலும் அதைத் தடுத்து நிறுத்த முடியாது.

இரண்டாவதாக, நாம் பிரேக்கை அழுத்துவதில் வெற்றி பெற்றுவிட்டாலும்கூட, நம்முடைய சமுதாயத்தோடு சேர்ந்து நம்முடைய பொருளாதாரமும் நிலைகுலைந்து விழுந்துவிடும். பின்னர் ஓர் அத்தியாயத்தில் நான் விளக்கியிருப்பதுபோல, நவீனப் பொருளாதாரம் பிழைத்திருப்பதற்கு நிலையான மற்றும் முடிவற்ற வளர்ச்சி இன்றியமையாதது. வளர்ச்சி நின்றுவிட்டால், பொருளாதாரம் ஒரு வசதியான சமநிலையை எட்டாது; மாறாக, அது சுக்குநூறாக

நொறுங்கிவிடும். அதனால்தான், இறவாநிலையையும் பேரின்பத்தையும் தெய்விகத்தையும் அடைவதை நோக்கிச் செல்லுவதற்கு முதலாளித்துவம் நம்மை ஊக்குவிக்கிறது. நம்மால் எத்தனைக் காலணிகளை அணிய முடியும் என்பதற்கும், எத்தனைக் கார்களை ஓட்ட முடியும் என்பதற்கும், எத்தனைப் பனிச்சறுக்கு விடுமுறைகளை அனுபவிக்க முடியும் என்பதற்கும் ஓர் எல்லை இருக்கிறது. நிரந்தரமான வளர்ச்சியை அடித்தளமாகக் கொண்டு கட்டியெழுப்பப்படுகின்ற ஒரு பொருளாதாரத்திற்கு, இறவாநிலை, பேரின்பம், தெய்விகம் போன்றவை குறித்தத் தேடல்களைப்போலவே, தொடர்ச்சியான பணித்திட்டங்கள் தேவைப்பட்டுக் கொண்டே இருக்கும்.

தொடர்ச்சியான பணித்திட்டங்கள் நமக்குத் தேவை என்றால், நாம் ஏன் மகிழ்ச்சி மற்றும் இறவாநிலையோடு நிறுத்திக் கொண்டு, அதிமனித சக்திகளை அடைவதை நோக்கிய அச்சுறுத்தும் தேடலை ஒதுக்கி வைக்கக்கூடாது? ஏனெனில், பிரித்தெடுக்கப்பட முடியாத அளவுக்கு அது மற்ற இரண்டோடும் பின்னிப் பிணைந்துள்ளது. உடலின் கீழ்ப்பகுதியில் பக்கவாதத்தால் பாதிக்கப்பட்டவர்கள் மீண்டும் நடப்பதற்கு பயானிக் கால்களை நீங்கள் உருவாக்கும்போது, அதே தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தி ஆரோக்கியமான மக்களுடைய நிலையை மேலும் மேம்படுத்த முடியும். முதியவர்களிடையே ஞாபகமறதியைத் தடுப்பதற்கான வழியை நீங்கள் கண்டுபிடிக்கும்போது, அதே சிகிச்சைகள் இளவயதினரின் நினைவாற்றலை மேம்படுத்தக்கூடும்.

குணப்படுத்துவதற்கும் மேம்படுத்துவதற்கும் இடையே தெளிவான எந்த எல்லைக்கோடும் இல்லை. மருத்துவம் கிட்டத்தட்ட எப்போதுமே மக்கள் ஒரு குறிப்பிட்ட நிலைக்குக் கீழே போய்விடாதபடி அவர்களைப் பாதுகாப்பதிலிருந்துதான் தொடங்குகிறது. ஆனால் அந்தக் குறிப்பிட்ட நிலையைக் கடந்து விஞ்சுவதற்கும் அதே கருவிகளையும் சிகிச்சைமுறைகளையும் நம்மால் பயன்படுத்த முடியும். வயாகரா மாத்திரை ரத்த அழுத்தப் பிரச்சனைகளுக்கான ஒரு சிகிச்சையாகத்தான் தன் வாழ்க்கையைத் துவக்கியது. ஆனால், அது ஆண்மைக் குறைவையும் போக்கவல்லது என்ற விஷயம் கண்டுபிடிக்கப்பட்டபோது அதைத் தயாரித்த ஃபைசர் மருந்து நிறுவனம் ஆச்சரியமும் மகிழ்ச்சியும் அடைந்தது. லட்சக்கணக்கான ஆண்கள் தங்களுடைய இயல்பான பாலியல் திறன்களை மீண்டும் பெறுவதற்கு வயாகரா உதவியது. ஆனால் விரைவில், ஆண்மைக் குறைவு இல்லாத ஆண்கள்கூட, இயல்பு நிலையை விஞ்சி, இதற்கு

முன்பு தங்களிடம் ஒருபோதும் இருந்திராத பாலியல் சக்திகளைக் கைவசப்படுத்துவதற்கு அதே மாத்திரையைப் பயன்படுத்தத் தொடங்கினர்.

குறிப்பிட்ட சில மருந்துகள் விஷயத்தில் என்ன நிகழுகிறதோ, அது ஒட்டுமொத்த மருத்துவத் துறையிலும் நிகழுவது சாத்தியம்தான். முதலாம் உலகப் போரின்போது, டாக்டர் ஹரால்டு ஜில்லீஸ், ஆல்டர்ஷாட் ராணுவ மருத்துவமனையில் வீரர்களின் முகக் காயங்களுக்குச் சிகிச்சையளிக்கத் தொடங்கினார். போர் முடிந்தபோது, அதே தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தி, ஆரோக்கியமான ஆனால் அழகற்ற மூக்குகளை அதிக அழகான மூக்குகளாக மாற்ற முடியும் என்பதை ஒட்டுறுப்பு அறுவைச் சிகிச்சை வல்லுநர்கள் கண்டுபிடித்தனர். ஒட்டுறுப்பு அறுவைச் சிகிச்சையானது நோயுற்றவர்களுக்கும் காயப்பட்டவர்களுக்கும் தொடர்ந்து உதவியது என்றாலும், ஆரோக்கியமான மக்களின் நிலையை மேம்படுத்துவதன்மீது அது அதிக அளவில் கவனம் செலுத்தத் தொடங்கியது. இன்றெல்லாம், ஒட்டுறுப்பு அறுவைச் சிகிச்சை வல்லுநர்கள் தனியார் மருத்துவமனைகளில் லட்சக்கணக்கில் சம்பாதிக்கின்றனர். ஆரோக்கியமான மக்களை மேம்படுத்துவதும் பணக்காரர்களை அழகுபடுத்துவதும்தான் அவர்களுடைய தனிப்பெரும் நோக்கமாக இருக்கிறது.

மரபுப் பொறியியல் விஷயத்திலும் இதே நிலைமை ஏற்படக்கூடும். தான் அதிசாமர்த்தியசாலிக் குழந்தைகளை உருவாக்க விரும்புவதாக ஒரு கோடீஸ்வரர் பகிரங்கமாக அறிவித்தால், பொதுமக்களிடையே அது எவ்வளவு பெரிய சர்ச்சையைக் கிளப்பும் என்று கற்பனை செய்து பாருங்கள். ஆனால் அது அந்த விதத்தில் நிகழாது. நாம் ஒரு வழுவழுப்பான சறுக்குமரத்தின் வழியாகக் கீழ்நோக்கி வழுக்கிச் செல்லக்கூடிய நிலைமைதான் தெரிகிறது. தங்களுடைய மரபியல் அமைப்பின் காரணமாகத் தங்கள் குழந்தைகளுக்கு பயங்கரமான மரபியல் நோய்கள் வரக்கூடும் என்று அஞ்சுகின்ற பெற்றோரிடமிருந்து அது தொடங்குகிறது. அவர்கள் அவ்வாறு பயப்படுவதால், ஐவிஎஃப் என்று அழைக்கப்படுகின்ற 'சோதனைக்குழாய் வழிக் கருக்கட்டல்' மூலம் ஒரு கருவை உருவாக்கி, அதன் டிஎன்ஏவைப் பரிசோதிக்கின்றனர். எல்லாம் ஒழுங்காக இருந்தால் நல்லது. ஆனால், டிஎன்ஏ பரிசோதனை ஏதேனும் பயங்கரமான மரபுச்சிதைவு மாற்றங்களைக் கண்டுபிடித்தால், அந்தக் கரு அழிக்கப்பட்டுவிடுகிறது.

ஆனாலும் ஏன் ஒரே ஒரு முட்டையை மட்டும் கருவுறச் செய்ய வேண்டும்? பல முட்டைகளைக் கருக்கட்டி, அவற்றில் மூன்று அல்லது நான்கு கருக்கள் குறையுள்ளவையாக இருந்தாலும்கூட, குறைந்தபட்சம் ஒரு நல்ல கருவாவது அங்கு இருக்கும். இந்தச் சோதனைக்குழாய் வழிக் கருக்கட்டல் ஏற்றுக் கொள்ளப்பட்டு, போதுமான அளவு மலிவானதாக ஆகும்போது, அது பரவலாகப் பயன்படுத்தப்படக்கூடும். மரபுச்சிதைவு மாற்றங்கள் எல்லோரிடத்திலும் ஏற்படக்கூடிய ஓர் ஆபத்துதான். தீங்கு விளைவிக்கக்கூடிய சில மரபுச்சிதைவு மாற்றங்களும் செம்மையற்ற எதிருருக்களும் அனைத்து மக்களின் டிஎன்ஏவிலும் இருக்கின்றன. பாலியல்ரீதியான இனப்பெருக்கம் என்பது ஒரு லாட்டரியைப் போன்றது. (உறுதிப்படுத்தப்படாத பிரபலமான கதை ஒன்று பின்வருமாறு அமைந்துள்ளது. நோபல் பரிசு பெற்ற நூலாசிரியரான அனடோல் பிரான்ஸுக்கும் அழகும் திறமையும் ஒருங்கே அமையப் பெற்ற நாட்டியத் தாரகையான ஐசடோரா டங்கனுக்கும் இடையே 1923ல் நடைபெற்ற ஒரு சந்திப்பைப் பற்றிய அக்கதை, மனிதகுலத்தின் மரபியல் தன்மையை மேம்படுத்துவதை நோக்கமாகக் கொண்ட சில கொள்கைகள் மற்றும் வழக்கங்களை உள்ளடக்கியது. 'யூஜெனிக்ஸ்' இயக்கத்தைப் பற்றி அவர்கள் இருவரும் பேசிக் கொண்டிருந்தனர். அப்போது ஐசடோரா பிரான்ஸிடம், "என்னுடைய அழகையும் உங்களுடைய மூளையையும் கொண்ட ஒரு குழந்தையைக் கற்பனை செய்து பாருங்கள்!" என்று கூறினார். அதற்கு பிரான்ஸ், "அது சரிதான், ஆனால் என்னுடைய அழகையும் உங்களுடைய மூளையையும்

கொண்ட ஒரு குழந்தை உருவானால் என்னவாகும்?” என்று பதிலளித்தார்.) அப்படியானால், அந்த லாட்டரியில் தில்லுமுல்லு செய்தால் என்ன? பல முட்டைகளைக் கருக்கட்டி, மிகச் சிறந்த பண்புநலன்களைக் கொண்ட ஒரு முட்டையைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாமே? மலிவான விலையில் எல்லையற்ற மனிதக் கருக்களை உருவாக்குவதற்குக் குருத்தணு ஆராய்ச்சி நமக்கு வழி வகுத்துவிட்டால், பிறகு, உங்களுடைய டிஎன்ஏவைச் சுமந்து கொண்டிருக்கின்ற, கச்சிதமாக இயல்பானவையாக இருக்கின்ற, நவீன மரபுப் பொறியியல் தேவைப்படாத அந்த நூற்றுக்கணக்கான கருக்களிலிருந்து உங்களுக்கு வேண்டிய வகையான குழந்தையை உங்களால் தேர்ந்தெடுத்துக் கொள்ள முடியும். இதே செயல்முறை ஒருசில தலைமுறைகள் தொடரப்பட்டால், நாம் சுலபமாக அதிமனிதர்களை உருவாக்கியிருப்போம். அதாவது, மிக மோசமான, மிகவும் அச்சுறுத்துகின்ற ஒரு சமுதாயத்தை நாம் உருவாக்கியிருப்போம்.

ஆனால், எண்ணற்ற முட்டைகளைக் கருக்கட்டிய பிறகு, அவை ஒவ்வொன்றிலும் ஏதோ பயங்கரமான மரபுச்சிதைவு மாற்றம் ஏற்பட்டுள்ளதை நீங்கள் கண்டால் என்ன செய்வது? அத்தனைக் கருக்களையும் அழித்துவிட வேண்டுமா? அவ்வாறு செய்வதற்கு பதிலாக, பிரச்சனைகரமான மரபணுக்களை மட்டும் நீக்கிவிட்டால் என்ன? மைட்டோகாண்டிரியாவின் டிஎன்ஏவைக் கொண்டு ஒரு புதிய கண்டுபிடிப்பு நிகழ்த்தப்பட்டது. மைட்டோகாண்டிரியா என்பவை மனித உயிரணுக்களுக்குள் இருக்கின்ற நுண்ணுறுப்புகளாகும். ஓர் உயிரணுவினுள் இருக்கின்ற மைட்டோகாண்டிரியா உற்பத்தி செய்கின்ற ஆற்றலை அந்த உயிரணு பயன்படுத்திக் கொள்ளுகிறது. மைட்டோகாண்டிரியாவுக்கென்று தனியான மரபணுக்கள் உள்ளன. இந்த மரபணுக்கள் அந்த உயிரணுவின் கருவிலுள்ள ‘டிஎன்ஏ’யிடமிருந்து முற்றிலும் தனித்திருக்கின்றன. குறைபாடுள்ள மைட்டோகாண்டிரியா டிஎன்ஏ, வலுவிழக்கச் செய்கின்ற பல்வேறு நோய்களுக்கும் பயங்கரமான பல நோய்களுக்கும் வழி வகுக்கிறது. தற்போதைய சோதனைக்குழாய் வழிக் கருக்கட்டல் முறையைப் பயன்படுத்தி மைட்டோகாண்டிரியா சம்பந்தப்பட்ட மரபியல் நோய்களிலிருந்து மீளுவது கோட்பாட்டுரீதியாக சாத்தியம்தான். ‘மூன்று பெற்றோரைக் கொண்ட ஒரு குழந்தையை’ உருவாக்குவதன் மூலம் அதை நாம் சாதிக்கலாம். அக்குழந்தையின் அணுக்கருவின் டிஎன்ஏ இரண்டு பெற்றோரிடமிருந்து வருகிறது, அதன் மைட்டோகாண்டிரியா டிஎன்ஏ மூன்றாவது நபர் ஒருவரிடமிருந்து வருகிறது. 2000ல், மிச்சிகன் மாநிலத்தில் உள்ள வெஸ்ட் புளூம்ஃபீல்டு

நகரில் ஷேரன் சாரினென் என்ற பெண்மணி அலானா என்ற ஆரோக்கியமான பெண்குழந்தையைப் பெற்றெடுத்தார். அலானாவின் அணுக்கரு டிஎன்ஏ அவளுடைய தாயாரான ஷேரனிடமிருந்தும் அவளுடைய தந்தையான பவுலிடமிருந்தும் வந்தது, ஆனால் அவளுடைய மைட்டோகாண்டிரியா டிஎன்ஏ இன்னொரு பெண்ணிடமிருந்து வந்தது. வெறும் கோட்பாட்டுரீதியாகப் பார்க்கும்போது, அலானாவுக்கு உயிரியல்ரீதியான மூன்று பெற்றோர் இருக்கின்றனர். ஓராண்டுக்குப் பிறகு, 2001ல், அமெரிக்க அரசாங்கம் இச்சிகிச்சைக்குத் தடை விதித்தது. பாதுகாப்பு மற்றும் அறநெறி தொடர்பான கரிசனம்தான் அதற்குக் காரணம்.

ஆனாலும், 2015ம் ஆண்டு பிப்ரவரி 3ம் நாளன்று, 'மூன்று பெற்றோர்களைக் கொண்ட கரு' சட்டத்திற்கு சாதகமாக பிரிட்டனின் நாடாளுமன்றம் வாக்களித்தது. இதன் மூலம் பிரிட்டனில் அச்சிகிச்சைக்கும் அது தொடர்பான ஆராய்ச்சிக்கும் அது அனுமதியளித்தது. தற்சமயம் அணுக்கரு டிஎன்ஏவை மாற்றுவது தொழில்நுட்பரீதியாக சாத்தியமில்லை, அது சட்டத்திற்குப் புறம்பானதும்கூட. ஆனால், தொழில்நுட்பப் பிரச்சனைகளுக்குத் தீர்வு காணப்படும்போது, குறைபாடுள்ள மைட்டோகாண்டிரியா டிஎன்ஏவை மாற்றுவதற்கு சாதகமாக இருந்த அதே தர்க்கவாதம், அணுக்கரு டிஎன்ஏவை மாற்றுவதற்கும் பொருந்தும் என்று வாதிடப்படக்கூடும்.

தேர்ந்தெடுத்தல் மற்றும் மாற்றியமைத்தலைத் தொடர்ந்து, திருத்தம்தான் அடுத்த நடவடிக்கையாக இருக்கிறது. பயங்கரமான உயிரணுக்களைத் திருத்தியமைப்பது சாத்தியமாகும்போது, மரபுச்சிதைவு மாற்றம் ஏற்பட்ட ஒரு பயங்கரமான மரபணுவின் மரபுக் குறியீடுகளை வெறுமனே திருத்தி எழுதி அந்த உயிரணுவை ஆபத்தற்ற ஒன்றாக மாற்றுவதை விட்டுவிட்டு, ஏதோ அந்நிய டிஎன்ஏவை நுழைக்க ஏன் வீணாக சிரமப்பட வேண்டும்? பிறகு, இதே செயல்முறையை, பயங்கரமான மரபணுக்களைச் சரிசெய்வதற்கு மட்டுமல்லாமல், சாதாரணமான நோய்கள், மதியிறுக்கம், முட்டாள்தனம், உடற்பருமன் போன்றவற்றைச் சரிசெய்வதற்கும் நாம் பயன்படுத்தத் தொடங்கக்கூடும். இந்த நோய்களில் ஏதேனும் ஒன்றால் தங்கள் குழந்தை துன்புற யார்தான் விரும்புவார்கள்? எதிர்காலத்தில் உங்களுக்குப் பிறக்கக்கூடிய உங்கள் மகள் சாமர்த்தியமும் அழகும் பரிவும் கொண்டவளாக இருப்பாள் என்றும், ஆனால் அதே சமயத்தில் அவள் தீவிர மனச்சோர்வால் துன்புறுவாள் என்றும் மரபியல் பரிசோதனை ஒன்று சுட்டிக்காட்டினால், சோதனைக்குழாயில் விரைவான மற்றும் வலி ஏற்படுத்தாத ஒரு மாற்றத்தை மேற்கொண்டு

அவள் ஆண்டுக்கணக்கில் துயரப்படுவதிலிருந்து நீங்கள் அவளைக் காப்பாற்ற விரும்புவீர்கள் அல்லவா?

உங்கள் குழந்தைக்கு ஒரு லேசான அனுகூலத்தைக் கொடுத்தால் என்ன? ஆரோக்கியமான மக்களுக்குக்கூட வாழ்க்கை கடினமானதாகவும் சவாலானதாகவும் இருக்கிறது. எனவே, அந்தக் குட்டிப் பெண்ணுக்கு, வழக்கத்தைவிட அதிக வலிமையான நோயெதிர்ப்பு அமைப்புமுறையும், சராசரிக்கும் மேலான நினைவாற்றலும், குதூகலமான ஒரு மனநிலையும் வாய்த்தால் அது அவளுக்கு உதவிகரமாக இருக்குமல்லவா? உங்கள் குழந்தைக்கு இதெல்லாம் வேண்டும் என்று நீங்கள் விரும்பாவிட்டாலும், உங்களுடைய அண்டைவீட்டார் தங்கள் குழந்தைகளுக்கு இதைச் செய்து கொண்டிருந்தால் நீங்கள் என்ன செய்வீர்கள்? உங்கள் குழந்தை மற்றவர்களைவிட வெகுவாகப் பின்தங்கிவிடுவதை நீங்கள் விரும்புவீர்களா? குழந்தைகளை இத்தகைய முறையில் உருவாக்குவதை நம்முடைய அரசாங்கம் தடை செய்து, ஆனால் வடகொரியர்கள் இச்செயல்முறையைப் பயன்படுத்தி எல்லா விதத்திலும் நம்மை விஞ்சக்கூடிய அற்புதமான மேதைகளையும் கலைஞர்களையும் தடகள வீரர்களையும் உருவாக்கிக் கொண்டிருந்தால் என்ன நிகழும்? குறிப்பிட்ட அம்சங்களுடன்கூடிய குழந்தைகளை ஒரு பட்டியலிலிருந்து தேர்ந்தெடுத்துக் கொள்ளுகின்ற காலத்தை நோக்கி நாம் ஒருசில அடிகளை ஏற்கனவே எடுத்து வைத்துவிட்டோம்.

தரத்தை மேம்படுத்த மேற்கொள்ளப்படுகின்ற ஒவ்வொரு முயற்சியையும் நியாயப்படுத்தும்போது, 'குணப்படுத்துதல்' என்ற காரணம்தான் முதலில் கொடுக்கப்படுகிறது. மரபுப் பொறியியல் அல்லது மூளைக்கும் கணினிக்கும் இடையேயான நேரடிப் பிணைப்பு தொடர்பான பரிசோதனைகளில் ஈடுபட்டுள்ள சில பேராசிரியர்களைக் கண்டுபிடித்து, அவர்கள் ஏன் அத்தகைய ஆராய்ச்சிகளில் ஈடுபட்டுள்ளனர் என்று அவர்களிடம் கேளுங்கள். நோயை குணப்படுத்துவதற்காகத்தான் தாங்கள் அதைச் செய்து கொண்டிருப்பதாக அவர்கள் பதிலளிப்பர். "மரபுப் பொறியியலின் உதவியோடு புற்றுநோயை நம்மால் தோற்கடிக்க முடியும். மூளைகளையும் கணினிகளையும் நம்மால் நேரடியாக இணைக்க முடிந்தால், மறதிநோயை நம்மால் குணப்படுத்த முடியும்," என்று அவர்கள் விளக்குவர். அவர்கள் கூறுவது உண்மையாக இருக்கலாம், ஆனால் அது நிச்சயமாக அதோடு நிற்காது. மூளைகளையும் கணினிகளையும் நாம் வெற்றிகரமாக இணைக்கும்போது, மறதிநோயை குணப்படுத்துவதற்கு மட்டும்தான் நாம் இந்தத் தொழில்நுட்பத்தைப்

பயன்படுத்துவோமா? இதை யாரேனும் உண்மையிலேயே நம்பினால், மூளைகளையும் கணினிகளையும் பற்றி ஏகப்பட்ட விஷயங்களை அவர்கள் அறிந்திருந்தாலும் மனித மனத்தையும் மனிதச் சமுதாயத்தையும் பற்றி அவர்கள் மிகக் குறைவாகவே அறிந்திருக்கின்றனர் என்று பொருள். பெரும் சிறப்பு வாய்ந்த ஒரு புதிய கண்டுபிடிப்பை நீங்கள் நிகழ்த்தியிருக்கும்போது, அது மக்களை குணப்படுத்துவதற்காக மட்டுமே பயன்படுத்தப்பட வேண்டும் என்றும், ஒருவருடைய ஆரோக்கியத்தை மேம்படுத்துவதற்கு அதைப் பயன்படுத்தக்கூடாது என்றும் உங்களால் கட்டளையிட முடியாது.

புதிய தொழில்நுட்பங்களைப் பயன்படுத்துவதற்கு மனிதர்களால் ஓர் எல்லையை வகுத்துக் கொள்ள முடியும், அவர்கள் அதைச் செய்து கொண்டுதான் இருக்கின்றனர். அதனால்தான் இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு யூஜெனிக்ஸ் இயக்கம் மக்களுடைய ஆதரவை இழந்தது. மனித உறுப்புகளின் வியாபாரம் இன்று சாத்தியமானதாகவும் லாபம் கொழிக்கும் ஒன்றாகவும் இருக்கும்போதிலும் அது இன்னும் அவ்வளவு பரவலாக இல்லை. ஆர்டர் கொடுத்துப் பெறப்படும் குழந்தைகள் ஒரு காலகட்டத்தில் தொழில்நுட்பரீதியாக சாத்தியப்படும் என்றாலும், உடல் உறுப்புகளுக்காக ஒருவரைக் கொலை செய்வது எப்படி ஒரு பெரிய அளவில் நிகழுவதில்லையோ, அதேபோல இதுவும் அரிதாகவே நிகழக்கூடும்.

போர் விஷயத்தில் செக்கோவ் விதியின் பிடிகளிலிருந்து நாம் தப்பித்துள்ளதுபோல, பிற செயற்களங்களிலும் அதன் பிடிகளிலிருந்து நம்மால் தப்பிக்க முடியும். மேடையில் தோன்றுகின்ற சில துப்பாக்கிகள் ஒருபோதும் பயன்படுத்தப்படாமல் போகின்றன. அதனால்தான், மனிதகுலத்தின் புதிய நோக்கத்தைப் பற்றி சிந்திப்பது இன்றியமையாததாக இருக்கிறது. புதிய தொழில்நுட்பங்களைப் பயன்படுத்துவது தொடர்பான விஷயங்களில் தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரம் நமக்கு இருக்கிறது என்பதால், என்ன நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதை ஒழுங்காகப் புரிந்து கொண்டு, அதைப் பற்றி நாம் ஒரு தீர்மானத்திற்கு வருவது நல்லது. இல்லாவிட்டால், நம்மை முந்திக் கொண்டு அது நமக்காகத் தீர்மானிக்கத் தொடங்கிவிடும்.

## அறிவின் முரண்பாடு

இருபத்தோராம் நூற்றாண்டில் மனிதகுலம் இறவாநிலையையும் பேரின்பத்தையும் தெய்விகத்தையும் அடைவதை நோக்கமாகக்

கொள்ளுவதற்கான வலுவானதொரு சாத்தியக்கூறு இருக்கிறது என்ற கணிப்பு எண்ணற்ற மக்களுக்குக் கோபத்தை ஏற்படுத்தக்கூடும், அவர்களை அந்நியப்படுத்தக்கூடும், அல்லது அவர்களை அச்சுறுத்தக்கூடும் என்பதால், இங்கு ஒருசில விஷயங்களைத் தெளிவுபடுத்த வேண்டியது அவசியமாகிறது.

முதலாவதாக, இருபத்தோராம் நூற்றாண்டில் பெரும்பாலான தனிநபர்கள் செய்யப் போகின்ற காரியம் அல்ல இது. மாறாக, இது மனிதகுலம் ஒட்டுமொத்தமாகச் செய்யப் போகின்ற ஒரு விஷயமாகும். இப்பணித்திட்டங்களில் பெரும்பாலான மக்கள் ஒரு சிறு பங்கு வேண்டுமானால் வகிக்கக்கூடும். பஞ்சம், கொள்ளைநோய், போர் போன்றவை அவ்வளவு பரவலாக இல்லாமல் போனாலும்கூட, வளர்ந்து வரும் நாடுகளிலும் மிகவும் தரக்குறைவான சூழ்நிலைகளை உள்ளடக்கிய பகுதிகளிலும் வாழுகின்ற கோடிக்கணக்கான மக்கள் தொடர்ந்து வறுமையையும் நோய்களையும் வன்முறையையும் எதிர்கொள்ளுவார்கள். அதே நேரம், மேட்டுக்குடி மக்கள் நிரந்தர இளமையையும் கடவுளின் சக்திகளையும் ஏற்கனவே கைவசப்படுத்திக் கொண்டிருக்கின்றனர். இது முற்றிலும் நியாயமற்றதுபோலத் தோன்றுகிறது. ஊட்டச்சத்தினால் ஒரே ஒரு குழந்தை இறந்து கொண்டிருந்தாலும், போதை மருந்து கடத்தல் தொடர்பான சண்டைகளில் ஒரே ஒரு நபர் கொல்லப்பட்டாலும், மனிதகுலம் தன்னுடைய அனைத்து முயற்சிகளையும் இந்த இன்னல்களை எதிர்த்துச் சண்டையிடுவதன்மீது ஒன்றுகுவிக்க வேண்டும் என்றும், கடைசி வாள் என்றைக்கு ஒரு கலப்பையாக மாற்றப்படுகிறதோ அன்றுதான் அடுத்தப் பெரிய விஷயத்தின் பக்கம் நாம் நம் கவனத்தைத் திருப்ப வேண்டும் என்றும் ஒருவர் வாதிடலாம். ஆனால் வரலாறு இப்படிச் செயல்படுவதில்லை. குடிசைகளில் வாழ்ந்து கொண்டிருப்பவர்களோடு ஒப்பிடுகையில், மாளிகைகளில் வாழுகின்றவர்களுடைய நோக்கங்கள் எப்போதும் வித்தியாசமாகவே இருந்து வந்துள்ளன. இந்த நிலை மாறுவதற்கான எந்த சாத்தியக்கூறும் இருபத்தோராம் நூற்றாண்டில் இல்லை.

இரண்டாவதாக, இது ஒரு வரலாற்றுக் கணிப்பே அன்றி, அரசியல் கட்சிகள் ஒரு தேர்தலுக்கு முன்னால் வெளியிடுகின்ற கொள்கை அறிவிப்பு அல்ல. குடிசைவாழ் மக்களின் தலைவிதியை நாம் உதாசீனப்படுத்தினாலும்கூட, இறவாநிலையையும் பேரின்பத்தையும் தெய்விகத்தையும் அடைவதை நாம் குறி வைக்க வேண்டுமா என்ற கேள்விக்கு ஒரு தெளிவான பதில் இல்லை. குறிப்பிட்ட இந்தப் பணித்திட்டங்கள் ஒரு மாபெரும் தவறாக இருக்கக்கூடும். ஆனால்

வரலாறு முழுவதும் மிகப் பெரிய தவறுகளால்தானே நிரம்பியிருக்கிறது! நம்முடைய கடந்தகாலச் சாதனைகளையும் இன்றைய விழுமியங்களையும் பார்க்கும்போது, பேரின்பம், தெய்விகம், இறவாமை ஆகியவற்றை நாம் நிச்சயமாக அடைந்துவிடுவோம் - அந்த முயற்சியில் நாம் கொல்லப்பட்டால்கூட!

மூன்றாவதாக, ஒன்றை அடைய முயற்சி செய்வது என்பது வேறு, அதை உண்மையிலேயே அடைவது என்பது வேறு. வரலாறு, பல சமயங்களில், மிகைப்படுத்தப்பட்ட நம்பிக்கைகளால் வடிவமைக்கப்படுகிறது. ஏற்றத்தாழ்விலிருந்து மீளுவதற்குக் கம்யூனிசவாதிகள் மேற்கொண்ட முயற்சி இருபதாம் நூற்றாண்டு காலகட்டத்திய ரஷ்யாவைப் பெருமளவு வடிவமைத்தது, ஆனால் அம்முயற்சி வெற்றி பெறவில்லை. இருபத்தோராம் நூற்றாண்டில் மனிதகுலம் எதை அடைய 'முயற்சிக்கும்' என்பதன்மீதுதான் என்னுடைய கணிப்பு கவனம் செலுத்துகிறதே அன்றி, எதை அடைவதில் 'வெற்றி பெறும்' என்பதன்மீது அல்ல. நம்முடைய எதிர்காலப் பொருளாதாரமும் சமுதாயமும் அரசியலும், மரணத்தை வெற்றி கொள்ளுவதற்கான முயற்சியினால் வடிவமைக்கப்படும். ஆனால் 2100ல் மனிதர்கள் இறவாநிலையை அடைந்துவிடுவார்கள் என்று அதற்கு அர்த்தமில்லை.

நான்காவதாக, இக்கணிப்பு ஒரு தீர்க்கதரிசனம் அல்ல. நம்முடைய தற்போதைய தேர்ந்தெடுப்புகளைப் பற்றி விவாதிப்பதற்கான ஒரு வழி இது. இது மிக முக்கியமான ஒரு விஷயம். ஏனெனில், அந்தக் கணிப்பு தவறு என்று நிரூபிக்கப்படக்கூடிய விதத்தில் நாம் வித்தியாசமான தேர்ந்தெடுப்பை மேற்கொள்ள அந்த விவாதம் வழி வகுத்தால் நமக்கு நல்லது. கணிப்புகளால் எதையும் மாற்ற முடியாது என்றால், பிறகு அந்தக் கணிப்புகளால் என்ன பயன்?

வானிலை போன்ற சில சிக்கலான அமைப்புமுறைகள் நம்முடைய கணிப்புகளைப் பற்றி எந்தக் கவலையும் கொள்ளுவதில்லை. ஆனால், இதற்கு நேர்மாறாக, மனித வளர்ச்சிச் செயல்முறை அக்கணிப்புகளுக்கு எதிர்வினையாற்றுகிறது. எனவே, நாம் மேன்மேலும் அதிகத் தகவல்களைச் சேகரித்து நம்முடைய கணக்கிடும் சக்தியை அதிகரித்துக் கொண்டே போகும்போது, நிகழ்வுகள் அதிகக் குழப்பமூட்டுபவையாகவும் எதிர்பாராதவையாகவும் ஆகின்றன. நமக்கு எவ்வளவு அதிகமாகத் தெரிந்திருக்கிறதோ, நம்மால் அவ்வளவு குறைவாகவே கணிக்க முடிகிறது. எடுத்துக்காட்டாக, திடீரென்று ஒருநாள், பொருளாதாரத்தின் அடிப்படை விதிகளை வல்லுநர்கள் கண்டுபிடித்துவிடுவதாகக் கற்பனை செய்து கொள்ளுங்கள். அவர்கள்

அதைத் தெரிந்து கொண்டவுடன், வங்கிகள், அரசாங்கங்கள், முதலீட்டாளர்கள், வாடிக்கையாளர்கள் ஆகியோர் இப்புதிய அறிவைப் பயன்படுத்திப் புதுமையான வழிகளில் செயல்படத் தொடங்குவர், தங்களுடைய போட்டியாளர்களைவிட அதிக அனுகூலமான நிலையை அவர்கள் அடைவர். புதிய அறிவு புதுமையான நடத்தைகளுக்கு இட்டுச் செல்லவில்லை என்றால் அந்த அறிவால் என்ன பயன்? தாங்கள் நடந்து கொள்ளும் விதத்தை மக்கள் மாற்றிக் கொண்ட பிறகு, பொருளாதாரக் கோட்பாடுகள் வழக்கொழிந்து போய்விடுகின்றன. கடந்தகாலத்தில் பொருளாதாரம் எப்படிச் செயல்பட்டது என்பதை நாம் அறியக்கூடும், ஆனால் நிகழ்காலத்தில் அது எப்படிச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது என்பது நமக்கு இன்னமும் புரிவதில்லை. நிலைமை இப்படி இருக்கையில், எதிர்காலத்தைப் பற்றிக் கேட்கவே வேண்டாம்.

இது ஒரு கற்பனையான எடுத்துக்காட்டு அல்ல. பத்தொன்பதாம் நூற்றாண்டின் நடுவில், கார்ல் மார்க்ஸ் அற்புதமான பொருளாதார உள்நோக்குகளைக் கண்டறிந்தார். இந்த உள்நோக்குகளின் அடிப்படையில் அவர் ஒரு கணிப்பை முன்மொழிந்தார். அதாவது, பாட்டாளி வகுப்பினருக்கும் பெருமுதலாளிகளுக்கும் இடையே வன்முறையான மோதல்கள் அதிகரிக்கும் என்றும், இறுதியில் பாட்டாளிகள் வெற்றி பெறுவர் என்றும் கணித்த அவர், முதலாளித்துவம் முற்றிலுமாக நிலைகுலைந்து சரிந்துவிடும் என்றும் கூறினார். இந்தப் புரட்சி, தொழிற்புரட்சியை முன்னின்று வழிநடத்திய பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா போன்ற நாடுகளில் தொடங்கி, உலகின் மற்றப் பகுதிகளுக்குப் பரவும் என்று அவர் உறுதியாக நம்பினார்.

பெருமுதலாளிகளுக்குப் படிக்கத் தெரியும் என்பதை மார்க்ஸ் மறந்துவிட்டார். துவக்கத்தில் மார்க்ஸின் சீடர்களில் வெகுசிலர் மட்டுமே அவர் கூறியதைத் தீவிரமாக எடுத்துக் கொண்டு அவர் எழுதியவற்றைப் படித்தனர். ஆனால் இந்த சோசியலிசப் புரட்சிக்காரர்கள் அந்தச் சீடர்களையும் ஆட்சியதிகாரத்தையும் கைப்பற்றியபோது, பெருமுதலாளிகள் பீதியடைந்தனர். கார்ல் மார்க்ஸ் எழுதிய ‘மூலதனம்’ என்ற நூலை அவர்களும் கவனமாகப் படித்து, அவருடைய ஆய்வினால் விளைந்த பல கருவிகளையும் உள்நோக்குகளையும் ஏற்றுக் கொண்டு செயல்படுத்தினர். இருபதாம் நூற்றாண்டில், தெருவில் வாழ்ந்த குழந்தைகளில் தொடங்கி அதிபர்கள்வரை பொருளாதாரம் மற்றும் வரலாறு குறித்து மார்க்ஸ் கொண்டிருந்த அணுகுமுறையை ஏற்றுக் கொண்டனர். மார்க்ஸின் கணிப்பைக் கடுமையாக எதிர்த்த வெறித்தனமான

பெருமுதலாளிகள்கூட அவர் கண்டுபிடித்துக் கூறிய விஷயங்களைப் பயன்படுத்திக் கொண்டனர். அமெரிக்க உளவுத்துறை 1960களில் வியட்நாமிலும் சிலி நாட்டிலும் சூழ்நிலையை ஆய்வு செய்தபோது, சமுதாயத்தை அது பல வகுப்புகளாகப் பிரித்தது. நிக்சனும் தாட்சரும் உலகத்தைப் பார்த்தபோது, உற்பத்திக்கான இன்றியமையாத வழிகள் யாருடைய கட்டுப்பாட்டில் இருந்தன என்று அவர்கள் தங்களைத் தாங்களே கேட்டுக் கொண்டனர். 1989ம் ஆண்டிலிருந்து 1991ம் ஆண்டுவரை, ஜார்ஜ் புஷ்ஷின் மேற்பார்வையின்கீழ் கம்யூனிசவாதம் எனும் 'தீய சாம்ராஜ்ஜியம்' சுக்குநூறாக நொறுக்கப்பட்டது. ஆனால் 1992ம் ஆண்டில் நடைபெற்ற அமெரிக்க அதிபர் தேர்தலில் பில் கிளிண்டனிடம் அவர் தோற்றுப் போனார். கிளிண்டனுக்கு வெற்றியைப் பெற்றுக் கொடுத்தப் பிரச்சார வாசகம் இப்படி அமைந்திருந்தது: "பொருளாதாரம்தான் முக்கியம், முட்டாளே!" மார்க்ஸால்கூட இதைவிடச் சிறப்பாகக் கூறியிருக்க முடியாது.

கார்ல் மார்க்ஸின் கண்டுபிடிப்பை மக்கள் ஏற்றுக் கொண்டபோது, அவர்களுடைய நடத்தை அதற்கேற்ப மாறியது. பிரிட்டன், பிரான்ஸ் போன்ற நாடுகளில் இருந்த பெருமுதலாளிகள் தொழிலாளர்களின் வாழ்க்கையை மேம்படுத்தவும், அவர்களுடைய தேசிய உணர்வை வலிமைப்படுத்தவும், அரசியல் அமைப்புமுறைக்குள் அவர்களை ஒருங்கிணைக்கவும் கடுமையாக முயற்சித்தனர். அதையடுத்து, தொழிலாளர்கள் தேர்தல்களில் வாக்களிக்கத் தொடங்கி, தொழிலாளர் கட்சிகள் தேர்தல்கள் மூலம் ஒவ்வொரு நாடாக ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றியபோதுகூட, பெருமுதலாளிகளால் இரவில் நிம்மதியாகத் தூங்க முடிந்தது. அதன் விளைவாக, மார்க்ஸின் கணிப்பு ஒன்றுமில்லாமல் போய்விட்டது. பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா போன்ற முன்னணித் தொழில்வள நாடுகளைக் கம்யூனிசவாதப் புரட்சிகள் ஒருபோதும் ஆட்கொள்ளவில்லை. பாட்டாளி வகுப்பின் சர்வாதிகாரம் வரலாற்றின் குப்பைத்தொட்டிக்குள் தூக்கி வீசப்பட்டது.

வரலாற்று அறிவின் முரண்பாடு இதுதான். மக்களுடைய நடத்தையை மாற்றாத அறிவு பயனற்றது. ஆனால், நடத்தையை மாற்றுகின்ற அறிவு விரைவில் பொருத்தமற்றதாக ஆகிவிடுகிறது. நம்மிடம் எவ்வளவு அதிகத் தகவல்கள் இருக்கின்றனவோ, வரலாற்றை நாம் எவ்வளவு அதிகச் சிறப்பாகப் புரிந்து கொண்டிருக்கிறோமோ, அவ்வளவு வேகமாக வரலாறு தன் போக்கை மாற்றிக் கொள்ளுகிறது, நம்முடைய அறிவு அவ்வளவு வேகமாக வழக்கொழிந்து போகிறது.

பல நூற்றாண்டுகளுக்கு முன்பு மனித அறிவு மெதுவாக அதிகரித்தது. எனவே, அரசியலும் பொருளாதாரமும் ஒரு நிதானமான வேகத்தில்

மாறின. இன்று நம்முடைய அறிவு அபாயகரமான வேகத்தில் அதிகரித்துக் கொண்டிருக்கிறது. கோட்பாட்டுரீதியாகப் பார்த்தால், உலகத்தை நாம் மேன்மேலும் அதிகச் சிறப்பாகப் புரிந்து கொண்டிருக்க வேண்டும். ஆனால் இதற்கு நேரெதிரானதுதான் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. நமக்குப் புதிதாகக் கிடைத்துள்ள அறிவு அதிவேகப் பொருளாதார மாற்றங்களுக்கும், சமூக மாற்றங்களுக்கும், அரசியல் மாற்றங்களுக்கும் வழி வகுக்கிறது. என்ன நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளும் முயற்சியில், அறிவைச் சேகரிப்பதன் வேகத்தை நாம் அதிகரிக்கிறோம். இது அதிக வேகமான, அதிகத் தீவிரமான கொந்தளிப்புகளுக்குத்தான் இட்டுச் செல்லுகிறது. இதனால், நம்மால் நிகழ்காலத்தையும் புரிந்து கொள்ள முடிவதில்லை, எதிர்காலத்தையும் கணிக்க முடிவதில்லை. இன்றைய சூழ்நிலையோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது, 1050ல் ஐரோப்பா எப்படி இருக்கும் என்பதை 1016ல் கணிப்பது அதிக சுலபமாக இருந்தது. பேரரசுகள் கவிழக்கூடும், முன்பின் தெரியாத முற்றுகையாளர்கள் முற்றுகையிடக்கூடும், இயற்கைப் பேரழிவுகள் தாக்கக்கூடும் என்றாலும், 1050ம் ஆண்டில் ஐரோப்பாவில் அரசர்களும் மதகுருமார்களும்தான் ஆட்சி செலுத்திக் கொண்டிருப்பார்கள் என்பதும், அது ஒரு வேளாண் சமுதாயமாக இருக்கும் என்பதும், அதன் குடிமக்களில் பெரும்பாலானோர் விவசாயிகளாக இருப்பார்கள் என்பதும், அந்தக் கண்டம் தொடர்ந்து பஞ்சத்தாலும் கொள்ளைநோய்களாலும் போர்களாலும் துன்புறும் என்பதும் தெளிவாகத் தெரிந்தன. இதற்கு நேர்மாறாக, 2050ம் ஆண்டில் ஐரோப்பா எப்படி இருக்கும் என்று 2016ல் நமக்கு எந்த யோசனையும் இல்லை. நம்முடைய அரசியல் அமைப்புமுறை எந்த வகையானதாக இருக்கும், வேலைவாய்ப்புச் சந்தை எப்படி வடிவமைக்கப்பட்டிருக்கும் என்று நம்மால் கூற முடியாது. அப்போது குடிமக்கள் எந்த மாதிரியான உடல்களைக் கொண்டிருப்பர் என்றுகூட நம்மால் உறுதியாகக் கூற முடியாது.

## அலங்காரப் புல்வெளிகளின் ஒரு சுருக்கமான வரலாறு

வரலாறு நிலையான விதிகள் எதையும் பின்பற்றுவதில்லை என்றால், அதன் எதிர்காலப் போக்கை நம்மால் கணிக்க முடியாது என்றால், நாம் ஏன் அதைப் படிக்க வேண்டும்? பல சமயங்களில், எதிர்காலத்தைக் கணிப்பதுதான் அறிவியலின் முக்கிய நோக்கம் என்பதுபோலத்

தோன்றுகிறது. நாளைக்கு மழை பெய்யுமா அல்லது வெயில் காயுமா என்று வானிலை வல்லுநர்கள் கணிக்க வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிறது; பணத்தின் மதிப்பைக் குறைப்பது ஒரு பொருளாதார நெருக்கடியைத் தவிர்க்குமா அல்லது உருவாக்குமா என்பதைப் பொருளாதார வல்லுநர்கள் அறிந்திருக்க வேண்டும்; நுரையீரல் புற்றுநோயை குணப்படுத்துவதில் வேதிச்சிகிச்சை அதிக வெற்றிகரமானதாக இருக்குமா அல்லது கதிர்வீச்சுச் சிகிச்சை அதிக வெற்றிகரமானதாக இருக்குமா என்பதைத் திறமையான மருத்துவர்களால் கணிக்க முடிய வேண்டும். அதேபோல, நம்முடைய மூதாதையர் மேற்கொண்ட அறிவார்ந்த தீர்மானங்களை நாம் மேற்கொள்ளவும், அவர்கள் செய்த தவறுகளை நாம் தவிர்க்கவும் உதவுவதற்காக அவர்களுடைய செயல்நடவடிக்கைகளை ஆய்வு செய்யும்படி வரலாற்றியலாளர்களிடம் கேட்டுக் கொள்ளப்படுகிறது. ஆனால் அது ஒருபோதும் அப்படி வேலை செய்வதில்லை. ஏனெனில், நிகழ்காலம் கடந்தகாலத்திலிருந்து பெருமளவு வேறுபட்டுள்ளது. மூன்றாம் உலகப் போரில் நாம் பயன்படுத்துவதற்காக இரண்டாம் பியூனிக் போரில் கார்த்தேஜியத் தளபதியான ஹேனிபல் பயன்படுத்திய உத்திகளை ஆய்வு செய்வது வெறும் நேர விரயம்தான். குதிரைப்படைகளை உள்ளடக்கிய போர்களில் பலனளித்த உத்திகள் இணையவெளிப் போரில் அதே அளவு நன்மை பயக்க வேண்டும் என்ற அவசியமில்லை.

அறிவியல் என்பது வெறுமனே எதிர்காலத்தைக் கணிப்பதைப் பற்றியது அல்ல. அனைத்துத் துறைகளையும் சேர்ந்த அறிஞர்கள் நம்முடைய தொடுவானங்களை விரிவுபடுத்தி, புதிய மற்றும் யாருக்கும் தெரியாத எதிர்காலங்களை நமக்காகத் திறக்கின்றனர். குறிப்பாக, வரலாற்றின் விஷயத்தில் இது உண்மையானதாக இருக்கிறது. வரலாற்றியலாளர்கள் தீர்க்கதரிசனங்களை வழங்க எப்போதேனும் முயற்சிக்கின்றனர் (குறிப்பிடத்தக்க வெற்றி எதுவும் இன்றி) என்றாலும், நாம் பொதுவாகக் கருத்தில் கொள்ளாத சாத்தியக்கூறுகளைப் பற்றிய விழிப்புணர்வை நமக்கு ஏற்படுத்துவதுதான் வரலாற்றை அவர்கள் ஆய்வு செய்வதன் முக்கிய நோக்கமாகும். வரலாற்றியலாளர்கள் கடந்தகாலத்தை ஆய்வு செய்வது மீண்டும் அதை அப்படியே நகலெடுப்பதற்காக அல்ல, மாறாக, அதிலிருந்து விடுபடுவதற்காகத்தான்.

நாம் ஒவ்வொருவரும் ஒரு குறிப்பிட்ட வரலாற்று யதார்த்தத்திற்குள் பிறந்திருக்கிறோம், குறிப்பிட்ட விதிமுறைகளாலும் விழுமியங்களாலும் கட்டுப்படுத்தப்படுகிறோம், ஒரு தனித்துவமான பொருளாதார

அமைப்புமுறையாலும் அரசியல் அமைப்புமுறையாலும் நிர்வகிக்கப்படுகிறோம். இந்த யதார்த்தம் இயல்பானது, தவிர்க்கப்பட முடியாதது, மாற்றப்பட முடியாதது என்ற நினைப்பில் நாம் அதை அவ்வளவாகக் கண்டுகொள்ளாமல் இருந்துவிடுகிறோம். தற்செயலாக நிகழ்ந்த பல்வேறு தொடர் நிகழ்வுகளால்தான் நம்முடைய உலகம் உருவாக்கப்பட்டது என்பதையும், வரலாறு நம்முடைய தொழில்நுட்பத்தையும் அரசியலையும் சமுதாயத்தையும் மட்டுமல்லாமல் நம்முடைய எண்ணங்களையும் பயங்களையும் கனவுகளையும்கூடச் செதுக்கி வடிவமைத்தது என்பதையும் நாம் மறந்துவிடுகிறோம். கடந்தகாலத்தின் கொடூரக் கரங்கள் நம்முடைய மூதாதையரின் கல்லறைகளுக்குள் இருந்து வெளிவந்து நம்முடைய கழுத்தைப் பிடித்து, ஓர் ஒற்றை எதிர்காலத்தை நோக்கி நம்முடைய பார்வையை வழிநடத்துகின்றன. நாம் பிறந்த நேரத்திலிருந்து அந்தப் பிடியை நாம் உணர்ந்து வந்துள்ளதால், அது நம்மில் ஓர் இயல்பான பகுதி என்றும், அதிலிருந்து நாம் தப்பிக்க முடியாது என்றும் நாம் அனுமானிக்கிறோம். எனவேதான், நம்மை நாம் விடுவித்துக் கொள்ளவும் மாற்று எதிர்காலங்களைக் கற்பனை செய்து பார்க்கவும் நாம் அரிதாகவே முயற்சி செய்கிறோம்.

கடந்தகாலத்தின் பிடியைத் தளர்த்துவதுதான் வரலாற்றை ஆய்வு செய்வதன் நோக்கமாகும். நாம் நம்முடைய தலையை அப்படியும் இப்படியுமாகத் திருப்பி, நம் முன்னோர்களால் கற்பனை செய்ய முடிந்திராத அல்லது நம்முடைய கற்பனையில் உதிக்கக்கூடாது என்று அவர்கள் விரும்பிய சாத்தியக்கூறுகளை நாம் கவனிக்கத் தொடங்க அது நமக்கு உதவுகிறது. நம்மை இங்குவரை அழைத்து வந்துள்ள தற்செயலான மற்றும் தொடர்ச்சியான பல நிகழ்வுகளை கவனமாகக் கண்காணிப்பதன் மூலம், நம்முடைய எண்ணங்களும் கனவுகளும் எப்படி வடிவம் பெற்றன என்பதை நாம் உணருகிறோம், பிறகு நாம் வித்தியாசமாக சிந்திக்கவும் கனவு காணவும் தொடங்குகிறோம். வரலாற்றை ஆய்வு செய்வது நாம் எதைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதை நமக்குக் கூறாது, ஆனால் நாம் தேர்ந்தெடுப்பதற்கான அதிகமான மாற்றுகளை அது நமக்குக் கொடுக்கிறது.

உலகை மாற்றுவதற்காகத் தோற்றுவிக்கப்படுகின்ற இயக்கங்கள் பல சமயங்களில் வரலாற்றை மீண்டும் எழுதுவதிலிருந்து தொடங்குகின்றன. இதன் மூலம், எதிர்காலத்தை மீண்டும் கற்பனை செய்வதற்கான வாய்ப்பை இது மக்களுக்குக் கொடுக்கிறது. தொழிலாளர்கள் ஒரு பொது வேலை நிறுத்தத்தில் ஈடுபட வேண்டும் என்பது உங்கள் விருப்பமாக இருந்தாலும் சரி, அல்லது பெண்கள்

தங்கள் உடல்களைத் தங்கள் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவர வேண்டும் என்று நீங்கள் விரும்பினாலும் சரி, அல்லது அடக்கி ஒடுக்கப்பட்டுள்ள சிறுபான்மையினர் அரசியல் உரிமைகளைக் கேட்டுப் போராட வேண்டும் என்று நீங்கள் விரும்பினாலும் சரி, அதற்கு நீங்கள் மேற்கொள்ள வேண்டிய முதல் நடவடிக்கை அவர்களுடைய வரலாற்றை மீண்டும் எடுத்துரைப்பதுதான். புதிய வரலாறு பின்வருமாறு விளக்கமளிக்கும்: "நம்முடைய தற்போதைய சூழ்நிலை இயல்பானதும் அல்ல, நிரந்தரமானதும் அல்ல. விஷயங்கள் முன்பொரு காலத்தில் வித்தியாசமாக இருந்தன. நாம் வாழுகின்ற நியாயமற்ற இவ்வுலகைத் தற்செயலான பல தொடர்ச்சியான நிகழ்வுகள்தான் உருவாக்கின. நாம் அறிவார்ந்த முறையில் நடந்து கொண்டால், இந்த உலகத்தை நம்மால் மாற்ற முடியும், இதைவிட அதிகச் சிறப்பான ஓர் உலகத்தை உருவாக்க முடியும்." அதனால்தான் மார்க்சியவாதிகள் முதலாளித்துவத்தின் வரலாற்றை நினைவுகூருகிறார்கள், பெண்ணியவாதிகள் தந்தைவழிச் சமுதாயங்களின் உருவாக்கத்தை ஆய்வு செய்கிறார்கள், ஆப்பிரிக்க அமெரிக்கர்கள் அடிமை வணிகத்தின் கொடுமைகளை நினைவுகூர்ந்து அதற்காக விழா எடுக்கின்றனர். தங்களுடைய கடந்தகாலத்தைத் தொடர்ந்து நிலைநிறுத்துவது அவர்களுடைய நோக்கம் அல்ல, மாறாக அதிலிருந்து விடுபடுவதுதான் அவர்களுடைய நோக்கமாக இருக்கிறது.

பிரம்மாண்டமான சமுதாயப் புரட்சிகளின் விஷயத்தில் எது உண்மையோ, அன்றாட வாழ்வில் மிகச் சிறிய நிலையில்கூட அது அதே அளவு உண்மையாக இருக்கிறது. தங்களுக்காக ஒரு புதிய வீட்டைக் கட்டுகின்ற ஓர் இளம் தம்பதியர், தங்கள் வீட்டின் முன்முற்றத்தில் அழகான புல்வெளி ஒன்று வேண்டும் என்று தங்களுடைய கட்டடக்கலைஞரிடம் கேட்கக்கூடும். எதற்காக ஒரு புல்வெளி வேண்டும்? "ஏனெனில், புல்வெளிகள் அழகாக இருக்கின்றன," என்று அத்தம்பதியர் விளக்கமளிக்கக்கூடும். ஆனால் அவர்கள் ஏன் அப்படி நினைக்கின்றனர்? அதற்குப் பின்னால் ஒரு வரலாறு இருக்கிறது.

கற்காலத்து வேட்டையாடிகள் தங்கள் குகைகளின் நுழைவாயிலுக்கு முன்னால் புற்களை வளர்க்கவில்லை. ஏதென்ஸ் நகரில் அமைந்த அக்ராபொலிஸ் கோட்டை, ரோம் நகரில் உள்ள கேப்பிடோலின் குன்று, ஜெரூசலம் நகரில் உள்ள யூதக் கோவில், பெய்ஜிங் நகரில் உள்ள 'தடைவிதிக்கப்பட்ட நகரம்' என்று அழைக்கப்படுகின்ற சீன அரண்மனை போன்ற எந்தவோர் இடத்தின் முகப்பிலும் எந்தப் புல்வெளியும் பார்வையாளர்களை வரவேற்கவில்லை. தனியார் வீடுகள்

மற்றும் பொதுக் கட்டடங்களின் நுழைவாயிலில் ஒரு புல்வெளியை உருவாக்கிப் பராமரிக்கும் யோசனை இடைக்காலத்தின் பிற்பகுதியில் பிரெஞ்சு மற்றும் ஆங்கிலேய மேட்டுக்குடியினரின் கோட்டைகளில்தான் பிறந்தது. நவீன யுகத்தின் துவக்கத்தில் இந்தப் பழக்கம் ஆழமாக வேரூன்றி, மேட்டுக்குடியினரின் அடையாளச் சின்னமாக ஆகியது.

மிகச் சிறப்பாகப் பராமரிக்கப்பட்டப் புல்வெளிகளுக்கு நிலமும் ஏராளமான உழைப்பும் தேவைப்பட்டன. குறிப்பாக, புல்வெளிகளைச் சீராக்கும் இயந்திரங்களும் தானியங்கி நீர்த்தூவிகளும் கண்டுபிடிக்கப்படுவதற்கு முந்தைய காலகட்டங்களில் மிக அதிக உழைப்பு வேண்டியிருந்தது. ஆனால் பதிலுக்கு, மதிப்பு வாய்ந்த எதையும் அவை உற்பத்தி செய்யவில்லை. விலங்குகளை அவற்றில் மேயவிடக்கூட முடியாது. ஏனெனில், அவை அந்தப் புற்களை உட்கொண்டு, அவற்றை மிதிக்கவும் செய்யும். புல்வெளிகளுக்காக பொன்னான நிலங்களையும் நேரத்தையும் விரயம் செய்வது ஏழை உழவர்களுக்குக் கட்டுப்படியாகவில்லை. பிரெஞ்சுப் பிரபுக்களின் அரண்மனைகளின் வாசலில் இருந்த நேர்த்தியான புல் தரை, அந்தஸ்தின் ஓர் அடையாளமாக இருந்தது. அவ்வழியே சென்றவர்களிடம் அந்தப் புல் தரை துணிச்சலாக இவ்வாறு பிரகடனம் செய்தது: "நான் பெரும் பணம் படைத்தவன், மிகுந்த செல்வாக்குக் கொண்டவன். என்னிடம் ஏகப்பட்ட ஏக்கர் நிலம் இருக்கிறது, ஏராளமான அடிமைகள் இருக்கின்றனர். இந்த பசுமையான ஆடம்பரம் எனக்குக் கட்டுப்படியாகிறது." ஒரு புல்வெளி எவ்வளவு அதிகப் பெரியதாகவும் அதிக நேர்த்தியானதாகவும் இருந்ததோ, அந்த வம்சம் அவ்வளவு அதிக சக்தி படைத்ததாக இருந்தது. நீங்கள் ஒரு நிலப்பிரபுவின் மாளிகைக்கு வருகை தரும்போது அவருடைய புல்வெளி மோசமான நிலைமையில் இருப்பதை நீங்கள் கண்டால், அவர் ஏதோ பிரச்சனையில் இருக்கிறார் என்று நீங்கள் அறிந்து கொள்ளலாம்.

பல சமயங்களில், பிரம்மாண்டமான அந்தப் புல்வெளிகளில்தான் முக்கியமான கொண்டாட்டங்களும் சமூக நிகழ்வுகளும் இடம்பெற்றன. மற்ற சமயங்களில் அங்கு செல்லத் தடை விதிக்கப்பட்டது. இன்றுவரை, எண்ணற்ற அரண்மனைகளிலும் அரசாங்கக் கட்டடங்களிலும் பொது இடங்களிலும் 'புல்லின்மீது நடக்காதீர்கள்' என்ற கண்டிப்பான அறிவிப்பு ஒன்று கட்டளையிடுகிறது. நான் படித்த ஆக்ஸ்போர்டு கல்லூரியில், பெரிய, வசீகரமானதொரு புல்வெளியைச் சுற்றியே அனைத்துக் கட்டடங்களும் நிர்மாணிக்கப்பட்டிருந்தன. வருடத்தில் ஒரே ஒரு நாள் மட்டும் அந்தப் புல்வெளியின்மீது நடக்கவோ அல்லது

உட்காரவோ எங்களுக்கு அனுமதி வழங்கப்பட்டது. மற்ற நாட்களில், யாரேனும் தவறுதலாக அந்தப் புனிதமான புல்வெளியின் தூய்மைக்குத் தன் பாதங்களால் களங்கம் ஏற்படுத்திவிட்டால், அவருடைய கதி அதோகதிதான்.

அரச அரண்மனைகளும் நிலப்பிரபுக்களின் மாளிகைகளும் புல்வெளிகளை அதிகாரத்தின் ஓர் அடையாளமாக மாற்றின. நவீன காலகட்டத்தில் அரசர்கள் தங்களுடைய பதவிகளிலிருந்து தூக்கியெறியப்பட்டு, நிலப்பிரபுக்கள் கில்லெட்டின் இயந்திரத்தால் கொல்லப்பட்டபோது, புதிய அதிபர்களும் பிரதம மந்திரிகளும் அந்தப் புல்வெளிகளை மட்டும் அப்படியே விட்டுவைத்தனர். நாடாளுமன்றங்கள், உச்ச நீதிமன்றங்கள், அதிபர்களின் வீடுகள், பிற பொதுக் கட்டடங்கள் ஆகியவையும் தம்முடைய அதிகாரத்தை அழகான புல்வெளிகளைக் கொண்டு பிரகடனம் செய்தன. அதே நேரத்தில், புல்வெளிகள் விளையாட்டுலகத்தை வெற்றி கொண்டன. மனிதர்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகப் பனியில் தொடங்கிப் பாலைவனம்வரை கிட்டத்தட்ட அனைத்து வகையான நிலங்களின்மீதும் விளையாடினர். ஆனாலும், கடந்த இரண்டு நூற்றாண்டுகளில், கால்பந்து, டென்னிஸ் போன்ற முக்கியமான விளையாட்டுக்கள் புல்வெளிகள்மீது விளையாடப்படுகின்றன. அதற்கு உங்களிடம் பணம் இருக்க வேண்டும், அவ்வளவுதான். ரியோ டி ஜெனிரோ நகரின் குடிசைப் பகுதிகளில், பிரேசில் நாட்டுக் கால்பந்தின் எதிர்காலத் தலைமுறையினர் தாங்களாகவே உருவாக்கிய தற்காலிகப் பந்தைக் கொண்டு மண்ணின்மீதும் புழுதியின்மீதும் அதை உதைத்துக் கொண்டிருக்கின்றனர். ஆனால் செழிப்பான நகர்ப்புறங்களில் வாழும் பணக்காரர்களுடைய மகன்கள், மிகவும் நேர்த்தியாகப் பராமரிக்கப்படுகின்ற புல்வெளிகளில் தங்கள் வாழ்க்கையை மகிழ்ச்சியாக அனுபவித்துக் கொண்டிருக்கின்றனர்.

புல்வெளிகளை அரசியல் அதிகாரத்தோடும், சமூக அந்தஸ்தோடும், பொருளாதாரச் செழிப்போடும் மனிதர்கள் தொடர்புபடுத்தலாயினர். பத்தொன்பதாம் நூற்றாண்டில் அதிகரித்துக் கொண்டிருந்த நடுத்தர வகுப்பினர் இந்தப் புல்வெளிகள் யோசனையை சுவீகரித்துக் கொண்டனர். துவக்கத்தில் வங்கியாளர்கள், வழக்கறிஞர்கள், தொழிலதிபர்கள் ஆகியோருக்கு மட்டுமே அவர்களுடைய சொந்த வீடுகளில் அப்படிப்பட்ட ஆடம்பரங்கள் கட்டுப்படியாயின. ஆனாலும், தொழிற்புரட்சியின் விளைவாக நடுத்தர வகுப்பினர் பல்கிப் பெருகினர், புல்வெளியைச் சீராக்கும் இயந்திரமும் நீர் பாய்ச்சுவதற்குத் தானியங்கி நீர்த்தூவியும் கண்டுபிடிக்கப்பட்டன. அதைத் தொடர்ந்து, திடீரென்று,

தங்கள் வீடுகளில் ஒரு புல்வெளியை உருவாக்குவது லட்சக்கணக்கான குடும்பங்களுக்குக் கட்டுப்படியானது. அமெரிக்கப் புறநகர்ப் பகுதிகளில், பணக்காரர்களுடைய ஆடம்பரப் பொருளாக இருந்த புல்வெளி நடுத்தர வகுப்பினரின் ஒரு தேவையாக ஆனது.



படம் **6:** லுவர் வேல்லியில் உள்ள ஷத்தூ த ஷாம்போ மாளிகையின் புல்வெளிகள். **16**ம் நூற்றாண்டின் துவக்கத்தில் முதலாம் ஃபிரான்ஸுவா மன்னர் கட்டிய மாளிகை அது. எல்லாமே இங்குதான் தொடங்கியது.



படம் **7:** இரண்டாம் எலிசபெத் மகாராணியை கௌரவிக்கும் பொருட்டு வெள்ளை மாளிகையின் புல்வெளியில் நிகழ்த்தப்பட்ட வரவேற்பு நிகழ்ச்சி.




படம் **8:** மரகானா புல்வெளியில் நடைபெற்றப் போட்டியில் மாரியோ கோட்சே போட்ட கோல் **2014**ல் ஜெர்மனிக்கு உலகக் கோப்பையைப் பெற்றுக் கொடுத்தது**.**



படம் **9:** கீழ்த்தட்டு நடுத்தர வகுப்பினரின் சொர்க்கம்**.**

அச்சமயத்தில்தான், வீட்டுக் கடமைகளில் இன்னொரு புதிய சடங்கும் சேர்ந்து கொண்டது. பலர் ஞாயிற்றுக்கிழமையன்று தங்களுடைய தேவாலயங்களில் பிரார்த்தனையை முடித்தப் பிறகு வீட்டிற்கு வந்து தங்களுடைய புல்வெளிகளைச் சீராக்கினர். நீங்கள் ஒரு தெருவின் வழியாக நடந்து சென்றால், ஒவ்வொரு வீட்டின் முன்னாலும் உள்ள புல்வெளியின் அளவையும் தரத்தையும் வைத்து அக்குடும்பத்தின் செல்வத்தையும் அந்தஸ்தையும் உங்களால் விரைவாகவும் உறுதியாகவும் கூறிவிட முடியும். ஒரு வீட்டின் முன்னால் கவனிப்பாரற்றுக் கிடக்கின்ற ஒரு புல்வெளி, அந்த வீட்டில் ஏதோ பிரச்சனை என்பதற்கான ஒரு நிச்சயமான அறிகுறியாகக் கருதப்படுகிறது. சோளம், கோதுமை ஆகிய பயிர்களுக்குப் பிறகு புல்தான் அமெரிக்காவில் மிகப் பரவலாகப் பயிரிடப்படுகிறது.

தாவரங்கள், உரங்கள், புல்வெளியைச் சீராக்கும் இயந்திரங்கள், நீர்த்தூவிகள் ஆகியவற்றையும் தோட்டக்காரர்களையும் உள்ளடக்கிய புல்வெளித் தொழிற்துறை ஒவ்வோர் ஆண்டும் பல கோடிக்கணக்கான டாலர்களைச் சம்பாதித்துக் கொண்டிருக்கிறது.

புல்வெளிகள்மீது மோகம் கொண்டிருந்தது ஐரோப்பியர்களும் அமெரிக்கர்களும் மட்டுமல்ல. பிரான்ஸில் உள்ள லுவர் வேல்லி எனும் இடத்திற்கு ஒருபோதும் நேரில் சென்றிருக்காதவர்கள்கூட, அமெரிக்க அதிபர்கள் வெள்ளை மாளிகையின் புல்வெளியின்மீது நின்று கொண்டு உரையாற்றுவதையும், முக்கியமான கால்பந்து விளையாட்டுக்கள் பசுமையான அரங்கங்களில் விளையாடப்படுவதையும் காணுகின்றனர். உலகம் நெடுகிலும் உள்ள மக்கள், புல்வெளிகளை அதிகாரத்துடனும் பணத்துடனும் அந்தஸ்துடனும் தொடர்புபடுத்துகின்றனர். எனவே, புல்வெளிகள் எல்லா இடங்களுக்கும் பரவியுள்ளன. இஸ்லாமிய உலகின் மையப் பகுதியை வெற்றி கொள்ள இப்போது அது தயாராக இருக்கிறது. கத்தார் நாட்டில் புதிதாகக் கட்டப்பட்டுள்ள இஸ்லாமியக் கலை அருங்காட்சியகத்தின் முன்னால் அற்புதமான புல்வெளிகள் உருவாக்கப்பட்டுள்ளன. அவை அரசர் ஹரூன்அல் ரஷீத்தின் பாக்தாத் அரண்மனையைப் பிரதிபலித்ததைவிட, 14ம் லூயி மன்னரின் வெர்சாய் அரண்மனையை அதிகமாகப் பிரதிபலித்தன. அப்புல்வெளிகள் ஓர் அமெரிக்க நிறுவனத்தால் உருவாக்கப்பட்டன. அரேபியப் பாலைவனத்தின் நடுவே 1 லட்சம் சதுர மீட்டர் பரந்து விரிந்துள்ள புற்கள் பசுமையாக இருப்பதற்கு தினமும் எக்கச்சக்கமாகத் தண்ணீர் தேவைப்படுகிறது. இதற்கிடையே, தோஹா மற்றும் துபாயின் புறநகர்ப் பகுதிகளில், நடுத்தர வகுப்பு மக்கள் தங்களுடைய புல்வெளிகளைக் கண்டு பெருமிதம் கொள்ளுகின்றனர். வெள்ளைநிற அங்கிகளும் கருப்புநிற முகத்திரைகளும் அங்கு இல்லாமல் போயிருந்தால், நீங்கள் மத்தியக் கிழக்கு நாடு ஒன்றில் இருக்கிறீர்கள் என்று நினைப்பதற்கு பதிலாக, மத்திய மேற்கு நாடு ஒன்றில் இருக்கிறீர்கள் என்று நீங்கள் சுலபமாக நினைத்துவிடுவீர்கள்.

புல்வெளிகளைப் பற்றிய இச்சிறிய வரலாற்றை நீங்கள் இப்போது படித்து முடித்திருப்பதால், நீங்கள் வாங்க விரும்புகின்ற ஒரு வீட்டை நீங்கள் திட்டமிடும்போது, உங்கள் வீட்டின் முன்முற்றத்தில் ஒரு புல்வெளியை உருவாக்குவதைப் பற்றி ஒருமுறைக்கு இருமுறை நீங்கள் யோசிக்கக்கூடும். நீங்கள் தாராளமாக ஒரு புல்வெளியை அமைத்துக் கொள்ளலாம். அதற்கு உங்களுக்கு முழு சுதந்திரம் இருக்கிறது. ஆனால், அதே நேரத்தில், ஐரோப்பிய நிலப்பிரபுக்களும் பெருமுதலாளிகளும் உங்களுக்கு வழங்கிச் சென்றுள்ள கலாச்சாரரீதியான சரக்குப்

பொருட்களை விட்டுத்தள்ளிவிட்டு, ஒரு ஜப்பானியப் பாறைத் தோட்டத்தையோ அல்லது முற்றிலும் புதியதொரு படைப்பையோ கற்பனை செய்து பாருங்கள். வரலாற்றைப் படிப்பதற்கான மிகச் சிறந்த காரணம் இதுதான். நீங்கள் வரலாற்றைப் படிப்பது எதிர்காலத்தைக் கணிப்பதற்கு அல்ல, மாறாக, கடந்தகாலத்திலிருந்து உங்களை விடுவித்துக் கொண்டு மாற்றுத் தலைவிதிகளைக் கற்பனை செய்வதற்குத்தான். இது முழு சுதந்திரம் அல்ல. கடந்தகாலம் நம்மைச் செதுக்குவதை நம்மால் தவிர்க்க முடியாது. ஆனால் சுதந்திரமே இல்லாமல் இருப்பதைவிடவும் சிறிதளவு சுதந்திரம் மேல்.

## முதல் காட்சியில் வரும் ஒரு துப்பாக்கி

இப்புத்தகம் நெடுகிலும் இடம்பெற்றுள்ள கணிப்புகள் அனைத்தும் இன்றைய இருதலைக் கொள்ளி எறும்பு நிலைகளைப் பற்றி விவாதிப்பதற்கான ஒரு முயற்சியும் எதிர்காலத்தை மாற்றியமைப்பதற்கான ஓர் அழைப்பும் மட்டுமே. இறவாநிலை, பேரின்பம், தெய்விகம் ஆகியவற்றைக் கைவசப்படுத்துவதற்கு மனிதகுலம் முயற்சி செய்யும் என்று கணிப்பது, ஒரு வீட்டைக் கட்டும் ஒவ்வொருவரும் தங்களுடைய முன்முற்றத்தில் ஒரு புல்வெளி இருக்க வேண்டும் என்று விரும்புவர் என்று கணிப்பதைப் போன்றதாகும். இது நிகழுவதற்கான சாத்தியக்கூறு அதிகம் இருப்பதுபோலத் தெரிகிறது. ஆனால், அதை ஒருமுறை நீங்கள் வாய்விட்டு உரக்கக் கூறிவிட்டீர்களேயானால், அதற்கான மாற்றுகளைப் பற்றி நீங்கள் சிந்திக்கத் தொடங்கலாம்.

இறவாநிலை மற்றும் தெய்விகம் குறித்தக் கனவுகள் மக்களுக்குத் திகைப்பூட்டுவதற்குக் காரணம் அவை அந்நியமானவைபோலவும் நிகழுவதற்கான சாத்தியம் இல்லாதவைபோலவும் தோன்றுவது அல்ல, மாறாக, முகத்தில் அறைந்தாற்போல வெளிப்படையாக இருப்பதுதான். இருந்தாலும், மக்கள் அவற்றைப் பற்றி சிந்திக்கத் தொடங்கும்போது, இதில் உண்மையிலேயே ஏகப்பட்ட அர்த்தம் இருப்பதை அவர்களில் பெரும்பாலானோர் உணருகின்றனர். இத்தகைய கனவுகள் தொழில்நுட்பப் பெருமிதத்தில் தோய்க்கப்பட்டிருந்தாலும், சித்தாந்தரீதியாக அவை பழமையானவையே. ஹோமோ சேப்பியன்ஸின் வாழ்க்கையையும் மகிழ்ச்சியையும் சக்தியையும் புனிதப்படுத்துகின்ற மனிதவாதம் முந்நூறு ஆண்டுகளாக இவ்வுலகத்தின்மீது ஆதிக்கம் செலுத்தி வந்துள்ளது. இறவாநிலை, பேரின்பம், மற்றும் தெய்விகத்தைக் கைவசப்படுத்துவதற்கான முயற்சி,

நெடுங்காலமாக இருந்து வந்துள்ள மனிதவாதக் கொள்கைகளை நனவாக்குகிறது. நாம் மிக நீண்டகாலமாக நம்முடைய கைக்குட்டைக்குள் ஒளித்து வைத்து வந்திருந்த விஷயங்களை அது வெளிப்படையாக மேசையின்மீது காட்சிப்படுத்துகிறது.

இப்போது நான் வேறொரு பொருளை மேசைமீது காட்சிப்படுத்த விரும்புகிறேன். ஒரு துப்பாக்கிதான் அது. மூன்றாவது காட்சியில் பயன்படுத்தப்படுவதற்காக முதலாம் காட்சியில் இடம்பெறும் ஒரு துப்பாக்கி அது. மனிதவாதம், அதாவது மனிதகுல வழிபாடு, எப்படி இவ்வுலகை வெற்றி கொண்டுள்ளது என்பதைப் பற்றிப் பின்வரும் அத்தியாயங்கள் விவரிக்கின்றன. அதே நேரம், மனிதவாதத்தின் எழுச்சிதான் அதன் வீழ்ச்சிக்கான விதைகளையும் தன்னகத்தே கொண்டுள்ளது. மனிதர்களைக் கடவுளராக மேம்படுத்தி உயர்த்துவதற்கான முயற்சி மனிதவாதத்தைத் தர்க்கரீதியான ஒரு முடிவுக்கு இட்டுச் செல்லுகிறது. அதே நேரத்தில், மனிதவாதத்தின் உள்ளார்ந்த குறைபாடுகளையும் அது வெளிப்படுத்துகிறது. குறைபாடுகளைக் கொண்ட ஒரு கொள்கையோடு நீங்கள் துவக்கும்போது, அந்தக் கொள்கை நனவாகவிருக்கும் நேரத்தில்தான் அதன் குறைபாடுகளை நீங்கள் உணரத் தொடங்குவீர்கள்.

மருத்துவமனைகளில் முதியோருக்கான பிரிவுகளில் இச்செயல்முறை ஏற்கனவே செயல்பாட்டில் இருப்பதை நம்மால் காண முடிகிறது. மனித வாழ்க்கை மிகப் புனிதமானது என்ற அசைக்கப்பட முடியாத மனிதவாத நம்பிக்கையின் காரணமாக, மக்கள் ஒரு பரிதாபகரமான நிலைமையை அடையும்வரை நாம் அவர்களை உயிரோடு வைத்திருக்கிறோம். அவர்கள் அந்நிலையை அடையும்போது, "இங்கு அப்படியென்ன புனிதம் இருக்கிறது?" என்று நாம் கேட்க வேண்டிய ஒரு கட்டாய நிலை ஏற்படுகிறது. இதே போன்ற மனிதவாத நம்பிக்கைகளின் காரணமாக, இருபத்தோராம் நூற்றாண்டில் மனிதகுலத்தை ஒட்டுமொத்தமாக அதன் எல்லைகளுக்கு அப்பால் நாம் உந்தித் தள்ளக்கூடிய சாத்தியம் தெரிகிறது. மனிதர்களைக் கடவுளராக உயர்த்தக்கூடிய அதே தொழில்நுட்பங்கள் மனிதர்களைப் பொருத்தமற்றவர்களாகவும் ஆக்கக்கூடும். எடுத்துக்காட்டாக, முதுமையடைதலுக்கும் மரணத்திற்கும் பின்னால் உள்ள செயல்முறைகளைப் புரிந்து கொண்டு அவற்றிலிருந்து மீளுவதற்குப் போதுமான சக்தி படைத்தக் கணினிகள், எல்லா வேலைகளிலும் மனிதகுலத்திற்கு ஒரு மாற்றாக ஆகக்கூடிய அளவுக்கு சக்தி வாய்ந்தவையாகவும் இருக்கும்.

எனவே, இருபத்தோராம் நூற்றாண்டில் மனிதகுலத்தின் உண்மையான நோக்கம் இந்த நீண்ட, துவக்க அத்தியாயம்

பரிந்துரைத்துள்ளதைவிட அதிகச் சிக்கலானதாக இருக்கப் போகிறது. தற்சமயம், இறவாநிலையும் பேரின்பமும் தெய்விகமும் நம்முடைய பட்டியலில் முதலிடத்தைப் பிடித்துள்ளதுபோலத் தோன்றக்கூடும். ஆனால் இந்த இலக்குகளை நாம் நெருங்கியிருக்கும்போது ஏற்படக்கூடிய கொந்தளிப்புகளும் குழப்பங்களும் முற்றிலும் புதிய இலக்குகளை நோக்கி நம்மைத் திசை திருப்பிவிடக்கூடும். இந்த அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ள எதிர்காலம் வெறுமனே கடந்தகாலத்தின் எதிர்காலம்தான். அதாவது, கடந்த முந்நூறு ஆண்டுகளாக இவ்வுலகின்மீது ஆதிக்கம் செலுத்திய கொள்கைகள் மற்றும் நம்பிக்கைகளின் அடிப்படையில் அமைந்த எதிர்காலம் இது. உண்மையான எதிர்காலம், அதாவது, இருபத்தோராம் நூற்றாண்டின் புதிய கொள்கைகள் மற்றும் நம்பிக்கைகளிலிருந்து தோன்றுகின்ற ஓர் எதிர்காலம், முற்றிலும் வித்தியாசமானதாக இருக்கக்கூடும்.

இவற்றையெல்லாம் புரிந்து கொள்ளுவதற்கு, வரலாற்றைத் திரும்பிப் பார்த்து, ஹோமோ சேப்பியன்ஸ் உண்மையிலேயே யார் என்பதையும், மனிதவாதம் எப்படி ஆதிக்கமான உலக மதமாக ஆகியது என்பதையும், மனிதவாதக் கனவை நிறைவேற்ற முயற்சிப்பது ஏன் அதன் நிலைகுலைவுக்குக் காரணமாக இருக்கும் என்பதையும் நாம் ஆய்வு செய்தாக வேண்டும். இதுதான் இப்புத்தகத்தின் அடிப்படைத் திட்டம்.

எது ஹோமோ சேப்பியன்ஸை அவ்வளவு தனித்துவமானவர்களாக ஆக்குகிறது என்பதைப் புரிந்து கொள்ளுவதற்கான ஒரு முயற்சியில், இப்புத்தகத்தின் முதல் பகுதி, ஹோமோ சேப்பியன்ஸுக்கும் பிற விலங்குகளுக்கும் இடையேயான உறவை அலசுகிறது. எதிர்காலத்தைப் பற்றிய ஒரு புத்தகத்தில் விலங்குகளுக்கு ஏன் இவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருக்கிறது என்று சில வாசகர்கள் நினைக்கக்கூடும். என்னைப் பொருத்தவரை, நம்முடைய அலசலை நம்முடைய சக விலங்குகளிடமிருந்து துவக்காவிட்டால், மனிதகுலத்தின் இயல்பையும் எதிர்காலத்தையும் பற்றிய ஒரு தீவிரமான விவாதத்தை நம்மால் மேற்கொள்ள முடியாது. தான் ஒரு விலங்கு என்ற உண்மையை மறப்பதற்கு ஹோமோ சேப்பியன்ஸ் இனம் தன்னால் இயன்ற எல்லாவற்றையும் செய்கிறது. நம்மைக் கடவுளராக மாற்றுவதை நோக்கி நாம் போய்க் கொண்டிருக்கின்ற இந்நேரத்தில், நாம் தோன்றிய விதத்தை நாம் நினைத்துப் பார்ப்பது இருமடங்கு முக்கியமாகிறது. நம்முடைய தெய்விகமான எதிர்காலத்தைப் பற்றிய எந்தவோர் ஆய்வாலும், விலங்குகளாக இருந்த நம்முடைய சொந்தக் கடந்தகாலத்தையும் மற்ற விலங்குகளுடனான நம்முடைய உறவுகளையும் உதாசீனப்படுத்த முடியாது. ஏனெனில்,

மனிதர்களுக்கும் விலங்குகளுக்கும் இடையேயான உறவுதான் அதிமனிதர்களுக்கும் மனிதர்களுக்கும் இடையேயான எதிர்கால உறவுகளுக்கான சிறந்த மாதிரியாக இருக்கப் போகிறது. ரத்தமும் சதையும் கொண்ட சாதாரண மனிதர்களை அதிபுத்திசாலி சைபார்குகள் எப்படி நடத்தும் என்பதை நீங்கள் தெரிந்து கொள்ள விரும்புவீர்கள். அறிவில் தங்களைவிட மிகவும் தாழ்ந்த விலங்குகளை மனிதர்கள் எப்படி நடத்துகிறார்கள் என்று ஆய்வு செய்வதிலிருந்து நாம் துவக்குவது நல்லது. இது ஒரு கச்சிதமான ஒப்புமை அல்ல என்றாலும்கூட, வெறுமனே கற்பனை செய்வதற்கு பதிலாக நாம் உண்மையிலேயே கூர்ந்து கவனிக்கக்கூடிய சிறந்த எடுத்துக்காட்டு இதுதான்.

கடந்த ஆயிரமாண்டில் ஹோமோ சேப்பியன்ஸ் படைத்துள்ள ஒரு விநோதமான உலகத்தையும், தற்போது நாம் ஒரு முக்கியத் தீர்மானம் மேற்கொள்ள வேண்டிய ஒரு நிலைமைக்கு நம்மை அழைத்து வந்துள்ள பாதையையும், இந்நூலின் முதல் பகுதியில் முன்வைக்கப்பட்டுள்ள முடிவுகளின் அடிப்படையில் இதன் இரண்டாம் பகுதி ஆய்வு செய்கிறது. இப்பிரபஞ்சம் மனிதகுலத்தைச் சுற்றி இயங்குகிறது என்றும், மனிதர்கள்தாம் அனைத்து அர்த்தங்கள் மற்றும் அதிகாரத்தின் மூலாதாரம் என்றும் நம்புகின்ற மனிதவாத மதத்தை ஹோமோ சேப்பியன்ஸ் எப்படி நம்பத் தொடங்கினர்? இந்த மதம் நம்முடைய பொருளாதாரத்தின்மீதும் சமுதாயத்தின்மீதும் அரசியல்மீதும் எத்தகைய தாக்கங்களை விளைவிக்கிறது? அது நம்முடைய அன்றாட வாழ்க்கையையும் கலைப் படைப்புகளையும் ரகசிய விருப்பங்களையும் எவ்வாறு செதுக்குகிறது?

இப்புத்தகத்தின் கடைசிப் பகுதி மீண்டும் இருபத்தோராம் நூற்றாண்டின் ஆரம்பகாலத்திற்கு வருகிறது. மனிதகுலம் மற்றும் மனிதவாத மதத்தைப் பற்றிய ஓர் ஆழமான புரிதலின் அடிப்படையில், அது நம்முடைய தற்போதைய இக்கட்டான சூழ்நிலையையும் சாத்தியமுள்ள நம்முடைய எதிர்காலங்களையும் விவரிக்கிறது. மனிதவாதத்தை நிறைவேற்றுவதற்கான முயற்சிகள் ஏன் அதன் வீழ்ச்சிக்கு வழி வகுக்கின்றன? இறவாநிலை, பேரின்பம், தெய்விகம் ஆகியவற்றைக் குறித்தத் தேடல் எப்படி மனிதகுலத்தின்மீதான நம்முடைய நம்பிக்கையின் அடித்தளங்களை ஆட்டம் காணச் செய்யும்? இந்தப் பேரழிவைப் பற்றி எந்த அறிகுறிகள் முன்கூட்டியே எச்சரிக்கின்றன? அவை நாம் ஒவ்வொருவரும் அன்றாடம் மேற்கொள்ளுகின்ற தீர்மானங்களில் எப்படிப் பிரதிபலிக்கின்றன? மனிதவாதம் உண்மையில் ஆபத்தில் இருக்கிறது என்றால், எது அதன்

இடத்தை எடுத்துக் கொள்ளும்? இந்த மூன்றாம் பகுதி வெறுமனே தத்துவரீதியான விளக்கங்களைக் கொடுப்பதையோ அல்லது எதிர்காலத்தைப் பற்றிக் கணிப்பதையோ உள்ளடக்கியது அல்ல. மாறாக, வரவிருக்கும் விஷயங்களைப் பற்றிய அறிகுறிகளைத் தெரிந்து கொள்ளுவதற்காக அது நம்முடைய ஸ்மார்ட்போன்களையும் டேட்டிங் வழக்கங்களையும் வேலைவாய்ப்புச் சந்தைகளையும் கூர்ந்து ஆராய்கிறது.

மனிதவாதத்தின்மீது உண்மையான நம்பிக்கை கொண்டுள்ளோருக்கு இவையெல்லாம் அவநம்பிக்கை ஏற்படுத்துவதாகவும் மனசோர்வூட்டுவதாகவும் தோன்றக்கூடும். ஆனால், அவர்கள் அவசர அவசரமாக ஒரு முடிவுக்கு வராமல் இருப்பது நல்லது. பல மதங்கள், பேரரசுகள், மற்றும் கலாச்சாரங்களின் எழுச்சியையும் வீழ்ச்சியையும் வரலாறு கண்டுள்ளது. அப்படிப்பட்ட மாற்றங்கள் மோசமானவையாக இருக்க வேண்டிய அவசியமில்லை. மனிதவாதம் முந்நூறு ஆண்டுகளாக இவ்வுலகின்மீது ஆதிக்கம் செலுத்தி வந்துள்ளது. அது ஒன்றும் அவ்வளவு நீண்டகாலம் அல்ல. ஃபாரோ மன்னர்கள் மூவாயிரம் ஆண்டுகளாக எகிப்தை ஆண்டனர். போப்பாண்டவர்கள் ஐரோப்பாவின்மீது ஆயிரம் ஆண்டுகளாக ஆதிக்கம் செலுத்தினர். எகிப்தை இரண்டாம் ராமசேஸ் என்ற மன்னர் ஆண்டு கொண்டிருந்த காலகட்டத்தில், எதிர்காலத்தில் ஒருநாள் ஃபாரோக்கள் எல்லோரும் காணாமல் போய்விடுவர் என்று நீங்கள் ஓர் எகிப்தியரிடம் கூறியிருந்தால், அவர் அதிர்ச்சியடைந்திருப்பார். “ஒரு ஃபாரோ இல்லாமல் எப்படி நம்மால் வாழ முடியும்? ஒழுங்கையும் அமைதியையும் நியாயத்தையும் யார் நிலை நாட்டுவார்கள்?” என்று அவர் தன்னைத் தானே கேட்டுக் கொண்டிருப்பார். ஒருசில நூற்றாண்டுகளில் கடவுள் இறந்துவிடுவார் என்று இடைக்காலத்து மக்களிடம் நீங்கள் கூறியிருந்தால், அதைக் கேட்டு அவர்கள் திகிலடைந்திருப்பர். “கடவுள் இல்லாமல் எப்படி நம்மால் வாழ முடியும்? வாழ்க்கைக்கு யார் அர்த்தம் கொடுப்பார்கள்? குழப்பங்களிலிருந்து யார் நம்மைக் காப்பாற்றுவார்கள்?” ஆகிய கேள்விகள் அவர்களுக்குள் முளைத்திருக்கும்.

வரலாற்றை இப்போது திரும்பிப் பார்த்தால், ஃபாரோக்களின் வீழ்ச்சியும் கடவுளின் மரணமும் நேர்மறையான நிகழ்வுகள்தான் என்று பலர் நினைக்கக்கூடும். மனிதவாதத்தின் வீழ்ச்சியும் நன்மை பயப்பதாக இருக்கக்கூடும். மக்கள் பொதுவாகவே மாற்றத்தைக் கண்டு பயப்படுகின்றனர். ஏனெனில், தெரியாத ஒன்றைக் குறித்து அவர்கள் அஞ்சுகின்றனர். ஆனால், எல்லாமே மாறுகிறது என்பதுதான்

வரலாற்றின் தனிப்பெரும் நிரந்தரமான அம்சமாகும்.

பகுதி **1**

# சேப்பியன்ஸ் இவ்வுலகை வெற்றி கொள்ளுகின்றனர்

## மனிதர்களுக்கும் பிற விலங்குகளுக்கும் இடையேயான வேறுபாடு என்ன?

## நம்முடைய இனம் உலகை எப்படி வென்றது?

## ஹோமோ சேப்பியன்ஸ் ஓர் உயர்வான உயிரினமா அல்லது ஒடுக்குகின்ற உயிரினமா?



படம் **10:** அசீரியாவின் அரசர் அசுர்பனிபால் ஒரு சிங்கத்தைக் குத்திக் கொல்லுகிறார்**:** விலங்கு ராஜ்ஜியத்தை வெற்றி கொள்ளுதல்**.**

## அத்தியாயம் **2**

# பூமியில் மனிதகுலத்தின் ஆதிக்கம்

பிற விலங்குகளின் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, மனிதர்கள் நெடுங்காலத்திற்கு முன்பே கடவுளராக ஆகிவிட்டனர். இதைப் பற்றி நாம் ஆழமாக சிந்திக்க விரும்புவதில்லை. ஏனெனில், நாம் நியாயமான மற்றும் இரக்கம் கொண்ட கடவுளராக இருந்து வரவில்லை. நீங்கள் 'நேஷனல் ஜியோகிராபிக்' சேனலைப் பார்த்தாலோ, ஒரு டிஸ்னி திரைப்படத்திற்குப் போனாலோ அல்லது தேவதைக் கதைகளை உள்ளடக்கிய ஒரு புத்தகத்தைப் படித்தாலோ, பூமியில் முக்கியமாக ஓநாய்களும் சிங்கங்களும் புலிகளும்தான் இருக்கின்றன என்றும், அவை மனிதர்களுக்கு இணையானவை என்றும் நீங்கள் சுலபமாக நினைத்துவிடக்கூடும். சிங்க அரசனான 'சிம்பா' மற்றக் காட்டுவிலங்குகள்மீது அதிகாரம் செலுத்துகிறது. 'ரெட் ரைடிங் ஹுட்' என்ற ஒரு சிறுமி ஒரு மோசமான ஓநாயிடமிருந்து தப்பிக்க முயற்சிக்கிறாள். மோக்லீ என்ற ஒரு சிறுவன் 'ஷேர் கான்' என்ற புலியைத் துணிச்சலாக எதிர்கொள்ளுகிறான். ஆனால் யதார்த்தத்தில், சிங்கங்களும் ஓநாய்களும் புலிகளும் இனியும் அங்கு இல்லை. நம்முடைய தொலைக்காட்சிகளிலும் புத்தகங்களிலும் கற்பனைகளிலும் கொடுங்கனவுகளிலும் அவை நிரம்பி வழிகின்றன, ஆனால் நம்முடைய பூமியின் சிம்பாக்களும் ஷேர் கான்களும் ஓநாய்களும் மாயமாய் மறைந்து கொண்டிருக்கின்றன.

ஒரு பெரிய மோசமான ஓநாயை உள்ளடக்கிய 'லிட்டில் ரெட் ரைடிங் ஹுட்' கதையின் தாயகமான ஜெர்மனியில் இன்று எத்தனை ஓநாய்கள் வாழுகின்றன? நூற்றுக்கும் குறைவான ஓநாய்களே வாழுகின்றன (இவற்றில் பெரும்பாலானவை போலந்து நாட்டு ஓநாய்கள்; சமீப ஆண்டுகளில் எல்லை தாண்டி வந்தவை அவை). இதற்கு நேர்மாறாக, ஜெர்மனியில் 50 லட்சம் வீட்டு நாய்கள் இருக்கின்றன. இந்த பூமியில் ஒட்டுமொத்தமாக 2 லட்சம் காட்டு ஓநாய்கள் சுற்றித் திரிகின்றன, ஆனால் 40 கோடிக்கும் அதிகமான வீட்டு நாய்கள் இருக்கின்றன. இவ்வுலகில் 40,000 சிங்கங்கள் இருக்கின்றன, ஆனால் 60 கோடி வீட்டுப் பூனைகள் இருக்கின்றன; 9 லட்சம் ஆப்பிரிக்க எருமைகள் இருக்கின்றன, ஆனால் 150 கோடி பசுக்கள் வளர்க்கப்படுகின்றன; 5 கோடி பெங்குவின்கள் இருக்கின்றன, 2000 கோடி கோழிகள் இருக்கின்றன. 1970ம் ஆண்டிலிருந்து சுற்றுச்சூழல் பற்றிய

விழிப்புணர்வு அதிகரித்து வந்திருந்தும்கூட, காட்டு விலங்குகளின் எண்ணிக்கை மட்டும் பாதியாகக் குறைந்துவிட்டது (1970ம் ஆண்டில் அவை கொழித்துக் கொண்டிருந்தன என்று அதற்கு அர்த்தமில்லை). 1980ல் ஐரோப்பாவில் 200 கோடி காட்டுப் பறவைகள் இருந்தன. 2009ல் 160 கோடி மட்டுமே எஞ்சின. அதே ஆண்டில், இறைச்சிக்காகவும் முட்டைகளுக்காகவும் ஐரோப்பியர்கள் 190 கோடி கோழிகளை வளர்த்தனர். தற்போது, உலகின் பெருவிலங்குகளில் (ஒருசில கிலோவுக்கு அதிகமான எடை கொண்டவை) 90 சதவீதத்திற்கும் அதிகமானவை மனிதர்களோ அல்லது மனிதர்களால் வளர்க்கப்படுகின்ற விலங்குகளோதான்.

அறிவியலறிஞர்கள் நம்முடைய பூமியின் வரலாற்றை பிளைஸ்டோஸீன், பிளையோஸீன், மயோஸீன் போன்ற பல யுகங்களாகப் பிரிக்கின்றனர். அதிகாரபூர்வமாக, நாம் இப்போது ஹோலோஸீன் யுகத்தில் வாழுகிறோம் என்றாலும், கடந்த 70,000 ஆண்டுகளை, ஆந்த்ரபொஸீன் யுகம், அதாவது, மனிதகுலத்தின் யுகம், என்று அழைப்பது பொருத்தமானதாக இருக்கும். ஏனெனில், அந்தக் காலகட்டத்தின்போதுதான், ஹோமோ சேப்பியன்ஸ், உலகளாவிய சூழலியலில் மாற்றத்திற்கான தனிப்பெரும் முக்கியக் காரணியாக ஆயினர்.

முன்பு ஒருபோதும் நிகழ்ந்திராத ஒரு நிகழ்வு இது. சுமார் 400 கோடி ஆண்டுகளுக்கு முன்பு பூமியில் உயிர் தோன்றியதிலிருந்து எந்தவோர் உயிரினமும் தன்னந்தனியாக உலகளாவிய இயற்கைச் சூழலை மாற்றியதில்லை. சூழலியல் புரட்சிகளுக்கும் பெருந்திரளாக உயிரினங்கள் அழிந்த நிகழ்வுகளுக்கும் எந்தக் குறைச்சலும் இருக்கவில்லை என்றாலும்கூட, இவை ஒரு குறிப்பிட்டப் பல்லியாலோ, வெளவாலாலோ அல்லது பூஞ்சைகளாலோ நிகழவில்லை. மாறாக, தட்பவெப்பநிலை மாற்றம், கண்டத்தட்டு நகர்வு, எரிமலைக் குமுறல்கள், சிறுகோள் மோதல்கள் போன்ற வலிமையான இயற்கை ஆற்றல்களின் செயல்பாடுகளாலேயே அவை நிகழ்ந்தன.




படம் 11: பெருவிலங்குகளின் உலகளாவிய உயிர்த்திரளின் விளக்கப்படம்.

படம் **11:** பெருவிலங்குகளின் உலகளாவிய உயிர்த்திரளின் விளக்கப்படம்**.**

பெரிய அளவிலான எரிமலைக் குமுறல்கள் ஏற்படக்கூடிய அல்லது சிறுகோள்கள் பூமியின்மீது மோதக்கூடிய ஆபத்தை நாம் இன்று மீண்டும் எதிர்கொண்டிருப்பதாக சிலர் பயப்படுகின்றனர். ஹாலிவுட் தயாரிப்பாளர்கள் இந்த பயத்தை மையமாக வைத்துத் திரைப்படங்களைத் தயாரித்துக் கோடிக்கணக்கில் சம்பாதிக்கின்றனர். ஆனால் யதார்த்தத்தில், இந்த ஆபத்து ஏற்படுவதற்கான சாத்தியம் மிகமிகக் குறைவுதான். உயிரினங்கள் பெருந்திரளாக அழிவது லட்சக்கணக்கான ஆண்டுகளுக்கு ஒருமுறை மட்டுமே நிகழுகிறது. அடுத்த 10 கோடி ஆண்டுகளில் ஏதோ ஒரு நேரத்தில் ஒரு பெரிய சிறுகோள் நம்முடைய பூமியின்மீது வந்து மோதக்கூடும், ஆனால் அது அடுத்தச் செவ்வாய்க்கிழமை நிகழுவதற்கான சாத்தியம் இருப்பதுபோலத் தெரியவில்லை. சிறுகோள்கள் குறித்து பயப்படுவதற்கு பதிலாக, நம்மைக் கண்டுதான் நாம் பயப்பட வேண்டும்.

ஏனெனில், பூமியின் தலைவிதியை ஹோமோ சேப்பியன்ஸ் இனம் மாற்றி எழுதியுள்ளது. இந்த ஒரு தனி மனிதக்குரங்கினம் 70,000 ஆண்டுகளில் உலகளாவிய சூழலியலை இதுவரை கண்டிராத வழிகளில் அடியோடு மாற்றியுள்ளது. நம்முடைய தாக்கம் ஏற்கனவே பனியுகத் தாக்கங்களுக்கும் கண்டத்தட்டு நகர்வுகளுக்கும் இணையானதாக ஆகியுள்ளது. 6.5 கோடி ஆண்டுகளுக்கு முன்பு டைனசோர்களைக் கொன்ற சிறுகோளின் தாக்கத்தை இன்னும் ஒரு நூற்றாண்டுக்குள் நம்முடைய தாக்கம் விஞ்சிவிடக்கூடும்.

அந்தச் சிறுகோள் நிலம்வாழ் உயிரினங்களின் பரிணாம வளர்ச்சியின் போக்கை மாற்றியதே தவிர, அதன் அடிப்படை விதிகளை மாற்றவில்லை. நானூறு கோடி ஆண்டுகளுக்கு முன்பு முதல் உயிரினம் தோன்றியதிலிருந்து அவ்விதிகள் மாறாமல் அப்படியே இருந்து வந்துள்ளன. அந்த அத்தனை யுகங்களின்போதும், நீங்கள் ஒரு நச்சுரியிரியாக இருந்திருந்தாலும் சரி அல்லது ஒரு டைனசோராக இருந்திருந்தாலும் சரி, இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறையின் நிலையான கொள்கைகளுக்கு ஏற்பவே நீங்கள் பரிணாம வளர்ச்சி அடைந்தீர்கள். அதோடு, ஓர் உயிரினம் எவ்வளவு விநோதமான வடிவங்களை எடுத்தாலும், அது கரிமத் தளத்திற்குள்தான் தொடர்ந்து இருந்தது. அது ஒரு கள்ளிச்செடியாக இருந்தாலும் சரி அல்லது ஒரு திமிங்கலமாக இருந்தாலும் சரி, அது கரிமச் சேர்மங்களால்தான் உருவாக்கப்பட்டிருந்தது. இப்போது மனிதகுலம் இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறையை ஒதுக்கிவிட்டு, நுண்ணறிவுசார் வடிவமைப்பை சுவீகரிக்கவும், வாழ்க்கையைக் கரிமத் தளத்திலிருந்து கனிமத் தளத்திற்கு எடுத்துச் செல்லவும் தன்னைத் தயார்படுத்திக் கொண்டு வருகிறது.

நாம் இந்த எதிர்கால சாத்தியக்கூறுகளை ஒதுக்கி வைத்துவிட்டு, கடந்த 70,000 ஆண்டுகளை மட்டும் திரும்பிப் பார்த்தால்கூட, மனிதகுலம் இவ்வுலகை இதுவரை இல்லாத அளவுக்கு மாற்றியுள்ளது கண்கூடாக நமக்குத் தெரியும். சிறுகோள்கள், கண்டத்தட்டுகள், தட்பவெப்பநிலை மாற்றம் ஆகியவை உலகம் நெடுகிலும் இருந்த உயிரினங்கள்மீது தாக்கம் ஏற்படுத்தியிருக்கக்கூடும், ஆனால் அவற்றின் தாக்கம் பகுதிக்குப் பகுதி வேறுபட்டிருந்தது. பூமி ஒரே ஒரு சூழல் மண்டலத்தை மட்டுமே கொண்டதாக இருக்கவில்லை. மாறாக, ஒன்றோடொன்று தளர்வாகப் பிணைக்கப்பட்டிருந்த பல சூழல் மண்டலங்களை உள்ளடக்கியதாகவே உலகம் இருந்தது. கண்டத்தட்டு நகர்வுகள் வட அமெரிக்காவையும் தென்னமெரிக்காவையும் இணைத்தபோது, தென்னமெரிக்காவில் இருந்த 'பைம்மாவினம்' என்று அழைக்கப்படுகின்ற, வயிற்றில் பையுடன்கூடிய பாலூட்டி இனங்களில் பெரும்பான்மை இனங்கள் அழிவதற்கு அது வழி வகுத்தது. ஆனால், ஆஸ்திரேலியக் கங்காருக்கள்மீது அவை எந்த மோசமான பாதிப்பையும் ஏற்படுத்தவில்லை. 20,000 ஆண்டுகளுக்கு முன்பு கடைசிப் பனியுகம் உச்சத்தை எட்டியபோது, பாரசீக வளைகுடாவில் இருந்த ஜெல்லிமீன்களும் டோக்கியோ வளைகுடாவில் இருந்த ஜெல்லிமீன்களும் புதிய தட்பவெப்பநிலைக்கு ஏற்பத் தம்மைத் தகவமைத்து கொள்ள வேண்டியிருந்தது. ஆனாலும், இவ்விரு

மீன்கூட்டங்களுக்கும் இடையே எந்தத் தொடர்பும் இருக்கவில்லை என்பதால், அவை ஒவ்வொன்றும் ஒரு வித்தியாசமான வழியில் எதிர்வினையாற்றி, தனித்துவமான விதங்களில் பரிணாம வளர்ச்சி அடைந்தன.

இதற்கு நேர்மாறாக, உலகத்தைத் தனித்தனிச் சூழலியல் பகுதிகளாகப் பிரித்திருந்த தடைகளை சேப்பியன்ஸ் இனம் தகர்த்தெறிந்தது. ஆந்த்ரபொஸீன் யுகத்தில், பூமி முதன்முறையாக ஒற்றைச் சூழல்தளமாக உருவெடுத்தது. ஆஸ்திரேலியா, ஐரோப்பா, அமெரிக்கா ஆகியவை தொடர்ந்து வெவ்வேறு தட்பவெப்பநிலைகளையும் நில அமைப்புகளையும் கொண்டிருந்தன. ஆனால் மனிதர்கள், உலகம் நெடுகிலுமுள்ள உயிரினங்கள் குறிப்பிட்டக் கால இடைவெளிகளில் ஒன்றுகூடும்படி செய்தனர். தூரத்தையும் புவியியலையும் பற்றி அவர்கள் கவலைப்படவில்லை. ஒருசில கட்டுமரங்களாகத் தொடங்கிய ஓர் இணைப்பு, பெரும் எண்ணிக்கையிலான விமானங்களாகவும், எண்ணெய்க் கப்பல்களாகவும், பெரிய சரக்குக் கப்பல்களாகவும் மாறி, அனைத்துப் பெருங்கடல்களையும் கடந்து சென்று, ஒவ்வொரு தீவையும் ஒவ்வொரு கண்டத்தையும் இணைத்துள்ளது. இதன் விளைவாக, எடுத்துக்காட்டாக, ஆஸ்திரேலியக் கடற்கரைகளிலும் பாலைவனங்களிலும் குவிகின்ற ஐரோப்பியப் பாலூட்டிகளையோ அல்லது அமெரிக்க நுண்ணியிரிகளையோ கணக்கில் எடுத்துக் கொள்ளாமல் ஆஸ்திரேலியாவின் சூழலியலை நம்மால் புரிந்து கொள்ள முடியாது. ஆஸ்திரேலியாவைப் பூர்விகமாகக் கொண்ட கங்காருக்களையும் கோலா கரடிகளையும்விட, கடந்த முந்நூறு ஆண்டுகளின்போது மனிதர்களால் ஆஸ்திரேலியாவுக்குக் கொண்டுவரப்பட்டச் செம்மறியாடுகளும் கோதுமையும் எலிகளும் சளிக்காய்ச்சல் நச்சுயிரிகளும் இன்று அதன் சூழலியல்மீது அதிகத் தாக்கம் விளைவிக்கின்றன.

ஆனால், ஆந்த்ரபொஸீன் கடந்த ஒருசில நூற்றாண்டுகளில் ஏற்பட்ட ஒரு புதிய கோட்பாடு என்று கூற முடியாது. ஏனெனில், பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே, நம்முடைய கற்கால மூதாதையர் கிழக்கு ஆப்பிரிக்காவிலிருந்து உலகின் நான்கு மூலைகளுக்கும் பரவியபோது, தாங்கள் குடியமர்ந்த ஒவ்வொரு கண்டம் மற்றும் ஒவ்வொரு தீவின் தாவர வளத்தையும் விலங்கு வளத்தையும் மாற்றினர். உலகின் பிற மனித இனங்களையும், ஆஸ்திரேலியாவின் பெருவிலங்குகளில் 90 சதவீதத்தையும், அமெரிக்காவின் பெருவிலங்குகளில் 75 சதவீதத்தையும், ஒட்டுமொத்த பூமியின் பெரிய

நிலம்வாழ் பாலூட்டிகளில் 50 சதவீதத்தையும் அவர்கள் முற்றிலுமாக அழித்து ஒழித்தனர். அவை அனைத்துமே, மனிதர்கள் தங்களுடைய முதல் கோதுமை வயலை நடுவதற்கும், முதல் உலோகக் கருவியை உருவாக்குவதற்கும், முதல் உரையை எழுதுவதற்கும், முதல் நாணயத்தை அடிப்பதற்கும் முன்பாகவே அழிக்கப்பட்டுவிட்டன.

பெருவிலங்குகள்தான் முக்கிய பலிகடாக்களாக இருந்தன. ஏனெனில், மற்ற விலங்குகளோடு ஒப்பிடுகையில், அவை மிகக் குறைவான எண்ணிக்கை கொண்டவையாகவும் மெதுவாக இனப்பெருக்கம் செய்பவையாகவும் இருந்தன. எடுத்துக்காட்டாக, முற்றிலும் அழிந்துவிட்ட மாமூத்துக்களை, தப்பிப் பிழைத்த முயல்களோடு ஒப்பிட்டுப் பாருங்கள். மாமூத்துக்கள் கூட்டம் ஒன்றில் ஒருசில டஜன் மாமூத்துக்கள் மட்டுமே இருக்கும். ஒவ்வோர் ஆண்டும் அக்கூட்டம் சுமார் இரண்டு குட்டிகளை மட்டுமே ஈன்றெடுக்கும். எனவே, ஒரு வேட்டையாடிக் கூட்டம் ஒவ்வோர் ஆண்டும் மூன்று மாமூத்துக்களை வேட்டையாடினால், அவற்றின் இறப்பு விகிதம் பிறப்பு விகிதத்தை விஞ்சிவிடும். ஒருசில தலைமுறைகளுக்குள் அனைத்து மாமூத்துக்களும் முற்றிலும் மறைந்துவிடும். இதற்கு நேர்மாறாக, முயல்கள் முயல்களைப்போல இனப்பெருக்கம் செய்தன. மனிதர்கள் ஒவ்வோர் ஆண்டும் நூற்றுக்கணக்கான முயல்களை வேட்டையாடியபோதும், அவற்றை இந்த பூமியிலிருந்து ஒழிக்க அது போதுமானதாக இருக்கவில்லை.

நம்முடைய மூதாதையர் வேண்டுமென்றே திட்டமிட்டு மாமூத்துக்களை அழிக்கவில்லை, ஆனால் தங்களுடைய செயல்களின் பின்விளைவுகளைப் பற்றிய விழிப்புணர்வு அவர்களுக்கு இருக்கவில்லை. மாமூத்துக்கள் மற்றும் பிற பெருவிலங்குகளின் அழிவானது பரிணாம வளர்ச்சியின் கண்ணோட்டத்தில் மிக வேகமாக நிகழ்ந்திருக்கக்கூடும், ஆனால் மனிதர்களின் கண்ணோட்டத்தில் அது மெதுவாகவும் படிப்படியாகவுமே நிகழ்ந்தது. ஏனெனில், மக்கள் எழுபது அல்லது எண்பது ஆண்டுகளுக்கு அதிகமாக வாழவில்லை, ஆனால் அப்பெருவிலங்குகளின் ஒட்டுமொத்த அழிவுக்குப் பல நூற்றாண்டுகள் ஆயின.

வருடாந்திர மாமூத்து வேட்டைக்கும் (ஆண்டொன்றுக்கு இரண்டு அல்லது மூன்று மாமூத்துக்கள்), அவற்றின் ஒட்டுமொத்த அழிவுக்கும் இடையேயான தொடர்பை சேப்பியன்ஸ் கவனிக்கத் தவறியிருக்கலாம். மிஞ்சிப் போனால், பழைய விஷயங்களை நினைவுகூரும் ஒரு முதியவர், சந்தேகப் பார்வை கொண்ட இளைஞர்களிடம் இப்படிக் கூறியிருக்கக்கூடும்: "மாமூத்துக்கள் இப்போது இருப்பதைவிட நான்

இளைஞனாக இருந்தபோது மிக அதிமாக இருந்தன. மேஸ்டோடான்களும் மிகப் பெரிய உருவத்தைக் கொண்ட காட்டுமான்களும்கூட இருந்தன. பழங்குடியினத் தலைவர்கள் நேர்மையானவர்களாக இருந்தனர். அவர்களுடைய குழந்தைகள் தங்களுடைய பெரியவர்களை மதித்தனர்."

## பாம்பின் வழித்தோன்றல்கள்

பண்டைய வேட்டையாடிகள் ஆன்மவாதிகளாக இருந்தனர் என்பதை மனிதவியல் ஆதாரங்களும் தொல்பொருள் ஆய்வியல் ஆதாரங்களும் சுட்டிக்காட்டுகின்றன. மனிதர்களையும் பிற விலங்குகளையும் பிரிக்கின்ற குறிப்பிடத்தக்க இடைவெளி எதுவும் இல்லை என்று அவர்கள் நம்பினர். அவர்களுடைய உலகமாக இருந்த உள்ளூர்ப் பள்ளத்தாக்கும் அதைச் சூழ்ந்திருந்த மலைத்தொடர்களும் அவ்வுலகில் வாழ்ந்த அனைத்து மக்களுக்கும் உரியவையாக இருந்தன. எல்லோரும் சில பொதுவான விதிமுறைகளைப் பின்பற்றினர். இவ்விதிமுறைகள், சம்பந்தப்பட்ட அனைத்து உயிரினங்களுக்கும் இடையேயான முடிவற்றப் பேச்சுவார்த்தையை உள்ளடக்கியிருந்தன. விலங்குகளோடும் மரங்களோடும் கற்களோடும் மட்டுமல்லாமல், தேவதைகள், அரக்கர்கள், பேய்கள் ஆகியவற்றோடும் மக்கள் பேசினர்.

உலகத்தைப் பற்றி ஆன்மவாதிகள் கொண்டிருந்த கண்ணோட்டம், எப்படியோ தப்பிப் பிழைத்து நவீன காலகட்டத்திற்குள் நுழைந்துவிட்ட சில வேட்டையாடிச் சமூகத்தினரை இன்றுகூட வழிநடத்துகிறது. தென்னிந்தியாவின் வெப்பமண்டலக் காடுகளில் வாழுகின்ற காட்டு நாயக்கர் சமூகத்தினர் அவர்களில் ஒரு குழுவினர் ஆவர். அச்சமூகத்தினரைப் பல ஆண்டுகளாக ஆய்வு செய்த மனிதவியலாளரான டேனி நவே இவ்வாறு கூறியுள்ளார்: "காட்டு நாயக்கர் சமூகத்தைச் சேர்ந்த ஒருவர் காட்டுக்குள் நடந்து சென்று கொண்டிருக்கும்போது, ஒரு புலி, பாம்பு, அல்லது யானை போன்ற ஆபத்தான ஒரு விலங்கை எதிர்கொண்டால், அவர் அந்த விலங்கைப் பார்த்து, 'நீ இக்காட்டில் வாழுகிறாய். நானும் இதே காட்டில்தான் வாழுகிறேன். நீ உணவு தேடி இங்கே வந்திருக்கிறாய். நானும் கிழங்குகளையும் வேர்க்காய்களையும் சேகரிக்க இங்கு வந்திருக்கிறேன். நான் உன்னைத் தாக்குவதற்காக வரவில்லை,' என்று கூறக்கூடும்."

ஒருமுறை, 'எப்போதும் தனியாகவே நடந்து செல்லும் யானை' என்று அவர்களால் அழைக்கப்பட்ட ஒரு யானை ஒரு காட்டு நாயக்கரைக் கொன்றுவிட்டது. ஆனால் அந்த யானையைப் பிடிப்பதற்கு இந்திய

வனத் துறையைச் சேர்ந்த அதிகாரிகளுக்கு உதவக் காட்டு நாயக்கர் இனத்தினர் மறுத்துவிட்டனர். அதற்கான காரணத்தை அவர்கள் டேனி நவேயிடம் இவ்வாறு விளக்கினர்: “இந்த ஆண் யானை இன்னோர் ஆண் யானையோடு மிகவும் நெருக்கமாக இருந்தது. இரண்டு யானைகளும் எப்போதும் ஒன்றாகச் சுற்றித் திரிந்தன. ஒருநாள், அந்த இரண்டாவது யானையை வனத் துறையினர் கைப்பற்றிவிட்டனர். அன்றிலிருந்து, ‘எப்போதும் தனியாகவே நடந்து செல்லும் யானை’ ஒரு கோபக்கார யானையாக மாறியிருந்தது. அது வன்முறையாகவும் நடந்து கொள்ளத் தொடங்கியிருந்தது. உங்கள் வாழ்க்கைத்துணைவர் கடத்திச் செல்லப்பட்டால், அது உங்களுக்குள் எத்தகைய உணர்வைத் தோற்றுவிக்கும்? இந்த யானைக்கும் அதே உணர்வுதான் ஏற்பட்டது. இந்த இரண்டு யானைகளும் சில சமயங்களில் இரவில் பிரிந்து தத்தம் சொந்தப் பாதைகளில் சென்றன, ஆனால் காலையில் அவை மீண்டும் சேர்ந்து நடந்தன. குறிப்பிட்ட அந்த நாளன்று, இந்த யானை தன்னுடைய சக யானை கீழே விழுந்து கிடந்ததைக் கண்டது. இரண்டு பேர் எப்போதும் சேர்ந்தே இருக்கிறார்கள் எனும் பட்சத்தில், அவர்களில் ஒருவரை நீங்கள் சுட்டுக் கொன்றால், மற்றவர் எவ்வாறு உணருவார்?”

இப்படிப்பட்ட ஓர் ஆன்மவாத மனப்போக்கு நகர்ப்புற மக்களுக்கு அந்நியமானதாகத் தோன்றுகிறது. விலங்குகள் வித்தியாசமானவை என்றும், அவை நம்மைவிடத் தாழ்ந்தவை என்றும் நம்மில் பலர் கருதுகிறோம். ஏனெனில், நம்முடைய மிகப் புராதனமான பாரம்பரியங்கள்கூட வேட்டையாடி யுகம் முடிந்து ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குப் பிறகுதான் உருவாக்கப்பட்டன. எடுத்துக்காட்டாக, பைபிளின் பழைய ஏற்பாடு கி.மு. முதலாம் ஆயிரமாண்டில் எழுதப்பட்டது. அதன் மிகப் பழமையான கதைகள் கி.மு. இரண்டாம் ஆயிரமாண்டின் யதார்த்தங்களைப் பிரதிபலிக்கின்றன. ஆனால், மத்தியக் கிழக்கில் வேட்டையாடிகளின் யுகம் 7,000 ஆண்டுகள் முன்னதாகவே முடிந்துவிட்டது. எனவே, ஆன்மவாத நம்பிக்கைகளை பைபிள் நிராகரிப்பதிலும், அதன் ஒரே ஆன்மவாதக் கதை துவக்கத்தில் ஓர் எச்சரிக்கையாக மட்டுமே இடம்பெற்றிருப்பதிலும் எந்த ஆச்சரியமும் இல்லை. பைபிள் ஒரு பெரிய நூல். அதிசயங்களும் அற்புதங்களும் ஆச்சரியங்களும் நிரம்பிய ஒன்று அது. ஆனாலும், ஒரு விலங்கு ஒரு மனிதனுடன் ஓர் உரையாடலைத் துவக்குகின்ற ஒரே நேரம், தடை செய்யப்பட்ட அறிவுக் கனியைச் சாப்பிடும்படி ஏவாளை ஒரு பாம்பு தூண்டுகின்ற நேரம் மட்டுமே (பலாமின் கழுதையும் அவனிடம் ஒருசில வார்த்தைகள் பேசுகிறது; ஆனால் அது வெறுமனே

கடவுளின் செய்தி ஒன்றை மட்டும் அவனிடம் தெரிவிக்கிறது).

ஈடன் தோட்டத்தில் ஆதாமும் ஏவாளும் வேட்டையாடிகளாக வாழ்ந்தனர். ஈடன் தோட்டத்திலிருந்து ஆதாம் வெளியேற்றப்பட்டது வேளாண் புரட்சியை வெகுவாக ஒத்திருக்கிறது. காட்டுக் கனிகளைத் தொடர்ந்து சேகரிப்பதற்கு ஆதாமை அனுமதிப்பதற்கு பதிலாக, கோபக்காரக் கடவுள் ஒருவர், 'நீ வியர்வை சிந்தி உழைத்துச் சாப்பிட வேண்டும்,' என்று அவனுக்குக் கட்டளையிட்டுவிடுகிறார். அப்படியானால், பைபிளில் இடம்பெற்றுள்ள விலங்குகள் வேளாண்மைக்கு முந்தைய காலகட்டத்தில்தான் மனிதர்களோடு பேசின என்பது நிச்சயமாக ஒரு தற்செயலான நிகழ்வாக இருக்க முடியாது. அந்த நிகழ்விலிருந்து பைபிள் என்ன படிப்பினையைத் தெரிவிக்கிறது? நீங்கள் பாம்புகள் கூறுவதைக் கேட்கக்கூடாது என்றும், விலங்குகளிடமும் தாவரங்களிடமும் பேசுவதைத் தவிர்ப்பது பொதுவாக நல்லது என்றும், நீங்கள் அவற்றோடு பேசுவது பேரழிவுக்கு மட்டுமே இட்டுச் செல்லும் என்றும் அது கூறுகிறது.



படம் **12:** **'**இழந்த சொர்க்கம்**'** சுவரோவியம் **(**சிஸ்டீன் தேவாலயம்**).** ஒரு மனித மேலுடலைக் கொண்ட ஒரு பாம்பு ஒட்டுமொத்தத் தொடர் நிகழ்வுகளைத் துவக்குகிறது**.** ஆதியாகமத்தின் முதல் இரண்டு அத்தியாயங்களிலும் தெய்விக ஓரங்கவுரைகள் ஆதிக்கம் செலுத்துகின்றன **('. . .**கடவுள் இவ்வாறு கூறினார் **. . .** கடவுள் இவ்வாறு கூறினார் **. . .** கடவுள் இவ்வாறு கூறினார் **. . .').** மூன்றாவது அத்தியாயத்தில் ஒருவழியாக ஏவாளுக்கும் அந்தப் பாம்புக்கும் இடையேயான உரையாடல் ஒன்றை நாம் பார்க்கிறோம் **(' . . .** இவ்வாறு அந்தப் பாம்பு அப்பெண்ணிடம் கூறியது **. . .** இவ்வாறு அப்பெண் அந்தப் பாம்பிடம் கூறினாள் **. . .').** ஒரு மனிதப் பிறவிக்கும் ஒரு விலங்கிற்கும் இடையேயான இந்தத் தனித்துவமான உரையாடல் மனிதகுலத்தின் வீழ்ச்சிக்கும் ஈடன் தோட்டத்திலிருந்து நாம் வெளியேற்றப்படுவதற்கும் வழி வகுக்கிறது**.**

ஆனால், அந்த பைபிள் கதை அதிக ஆழமான, அதிகப் புராதனமான

அர்த்தத்தைக் கொண்டுள்ளது. பெரும்பாலான செமித்திய மொழிகளில், ‘ஏவாள்’ என்பதற்குப் ‘பாம்பு’ அல்லது ‘பெண் பாம்பு’ என்று பொருள். ஏவாள் என்ற பெயரில் ஒரு பண்டைய ஆன்மவாதக் கட்டுக்கதை ஒளிந்துள்ளது. அதன்படி, நம்முடைய முன்னோர்கள்தான் நம்முடைய எதிரிகளே அன்றி, பாம்புகள் அல்ல. பாம்புகள் மற்றும் ஊர்ந்து செல்லும் பிற உயிரினங்கள் உள்ளிட்ட விலங்குகளின் பரம்பரையிலிருந்து மனிதர்கள் வந்ததாகப் பல ஆன்மவாதக் கலாச்சாரங்கள் நம்புகின்றன. ‘வானவில் பாம்பு’தான் உலகத்தைப் படைத்ததாக ஆஸ்திரேலியப் பழங்குடியினர் நம்புகின்றனர். தங்களுடைய பழங்குடிகள் மிகவும் பண்டைய பல்லிகள் அல்லது பாம்புகளிலிருந்து தோன்றியதாக அரான்டா மற்றும் தியாரி பழங்குடியினர் நம்புகின்றனர். உண்மையில், ஊர்வனவற்றிலிருந்து தாங்கள் தோன்றியதாக நவீன மேற்கத்தியர்களும் நினைக்கின்றனர். நம் ஒவ்வொருவருடைய மூளையும், ஊர்வனவற்றின் மூளையின் மூலத்திலிருந்தே கட்டமைக்கப்பட்டுள்ளது. நம்முடைய உடல்களின் கட்டமைப்புக்கூட ஊர்வனவற்றின் உடல்களில் இருக்கின்ற அதே கட்டமைப்புதான்.

‘ஆதியாகமம்’ என்ற நூலின் ஆசிரியர்கள் ஏவாளின் பெயரில் இருந்த பண்டைய ஆன்மவாத நம்பிக்கைகளின் எச்சங்களைப் பாதுகாத்து வைத்திருக்கக்கூடும், ஆனால் மற்ற அனைத்துத் தடயங்களையும் மறைக்க அவர்கள் பெரும் முயற்சி மேற்கொண்டனர். மனிதர்கள் பாம்புகளின் வழியே வருவதற்கு பதிலாக, உயிரற்றப் பருப்பொருளிலிருந்து அவர்கள் தெய்விகமான முறையில் உருவாக்கப்பட்டனர் என்றும், பாம்புகள் நம்முடைய மூதாதையர் அல்ல, மாறாக நம்முடைய பரமபிதாவுக்கு எதிராகக் கலகம் செய்வதற்கு அவை நம்மை மதிமயக்குகின்றன என்றும் ஆதியாகமம் கூறுகிறது. மனிதர்கள் என்போர் இன்னொரு வகையான விலங்குதான் என்பது ஆன்மவாதிகளின் கண்ணோட்டமாக இருந்த நேரத்தில், மனிதர்கள் ஒரு தனித்துவமான படைப்பு என்று பைபிள் வாதிடுகிறது. நமக்குள் இருக்கின்ற விலங்கை அங்கீகரிக்க மேற்கொள்ளப்படுகின்ற எந்தவொரு முயற்சியும் கடவுளின் சக்தியையும் அதிகாரத்தையும் மறுப்பதாக அர்த்தப்படும். உண்மையிலேயே தாங்கள் ஊர்வனவற்றிலிருந்து பரிணாம வளர்ச்சி அடைந்ததை நவீன மனிதர்கள் கண்டறிந்தபோது, அவர்கள் கடவுளுக்கு எதிராகத் திரும்பினர், அவர் கூறியதைக் காதுகொடுத்துக் கேட்பதை நிறுத்தினர். இன்னும் சொல்லப் போனால், கடவுளின் இருத்தலில் நம்பிக்கை கொள்ளுவதையும் அவர்கள் நிறுத்தினர்.

# மூதாதையரின் தேவைகள்

மனிதர்களுக்கும் விலங்குகளுக்கும் இடையேயான உறவுகளில் ஒரு புதிய அத்தியாயத்தைத் துவக்கிய வேளாண் புரட்சியின் ஒரு பக்கவிளைவாக உருவான பைபிள், மனிதகுலம் தனித்துவமானது எனும் நம்பிக்கையை உள்ளடக்கியிருந்தது. விவசாயத்தின் வரவு, ஏகப்பட்ட உயிரினங்கள் பூண்டோடு அழியக் காரணமாயிற்று. ஆனால் அதே நேரத்தில், ‘பண்ணைப்படுத்தப்பட்ட விலங்குகள்’ என்ற முற்றிலும் புதியதோர் உயிரினத்தை பூமியில் அது உருவாக்கியது. துவக்கத்தில் இந்த நிகழ்வு அவ்வளவு முக்கியமானதாக இருக்கவில்லை. ஏனெனில், இருபதுக்கும் குறைவான பாலூட்டியினங்களையும் பறவையினங்களையும் மட்டுமே மனிதர்களால் பண்ணைப்படுத்த முடிந்தது. ஆயிரக்கணக்கான இனங்கள் ‘காட்டு உயிரினங்களாகவே’ இருந்தன. ஆனால், நூற்றாண்டுகள் செல்லச் செல்ல, அப்புதிய உயிரினம் ஆதிக்கம் செலுத்தத் தொடங்கியது. இன்று அனைத்துப் பெரிய விலங்குகளில் 90 சதவீதம் பண்ணைப்படுத்தப்பட்டவையே.

ஆனால், பண்ணைப்படுத்தப்பட்ட இனங்கள் தம்முடைய ஈடு இணையற்றக் கூட்டு வெற்றிக்கு ஒரு மிகப் பெரிய விலையைக் கொடுத்தன. இதற்கு முன்பு எந்த உயிரினமும் அனுபவித்திராத துன்பங்களை அவை அனுபவித்தன. கோடிக்கணக்கான ஆண்டுகளாக விலங்கினங்கள் பல்வேறு வலிகளையும் துன்பங்களையும் அறிந்தும் அனுபவித்தும் வந்துள்ளபோதிலும், வேளாண் புரட்சி முற்றிலும் புதிய வகைகளிலான துன்பத்தை உருவாக்கியது. காலப்போக்கில் அத்துன்பம் மேலும் மோசமடையவே செய்தது.

மேலோட்டமாகப் பார்ப்பவர்களுக்கு, பண்ணைப்படுத்தப்பட்ட விலங்குகள் காட்டில் வாழும் தம்முடைய உறவினர்கள் மற்றும் மூதாதையரைவிட மேலான ஒரு நிலையில் இருப்பதுபோலத் தோன்றக்கூடும். காட்டுப் பன்றிகள் உணவையும் நீரையும் புகலிடத்தையும் தேடுவதில் தம்முடைய வாழ்நாளின் பெரும்பகுதியைக் கழிக்கின்றன. சிங்கங்கள், ஒட்டுண்ணிகள், வெள்ளப் பெருக்குகள் போன்றவற்றின் நிரந்த அச்சுறுத்தலுக்கு அவை ஆளாகியுள்ளன. இதற்கு நேர்மாறாக, பண்ணைப்படுத்தப்பட்டப் பன்றிகள் மனிதர்கள் கொடுக்கின்ற உணவையும் நீரையும் புகலிடத்தையும் மகிழ்ச்சியாக அனுபவிக்கின்றன. அவை நோய்வாய்ப்பட்டால் மனிதர்கள் அவற்றுக்குச் சிகிச்சையளிக்கின்றனர், கொன்றுண்ணிகளிடமிருந்தும் இயற்கைச் சீற்றங்களிலிருந்தும் அவற்றைப் பாதுகாக்கின்றனர். ஆனால் விரைவில், பெரும்பாலான பன்றிகள் இறைச்சிக் கொட்டிலுக்கு

அனுப்பி வைக்கப்படுகின்றன. ஆனாலும், அது அவற்றின் தலைவிதியைக் காட்டுப் பன்றிகளின் தலைவிதியைவிட அதிக மோசமானதாக ஆக்குகிறதா? ஒரு மனிதனால் வெட்டிக் கொல்லப்படுவதைவிட ஒரு சிங்கத்தால் கபளீகரம் செய்யப்படுவது சிறந்ததா? முதலைகளின் பற்களைவிட எஃகுத் தகடுகள் அதிகக் கொடூரமானவையா?

பண்ணைப்படுத்தப்பட்ட விலங்குகளின் தலைவிதியைக் கொடுமையானதாக ஆக்குவது அவை கொடூரமாக இறக்கின்ற விதம் மட்டும் அல்ல, மாறாக, அவை வாழுகின்ற விதமும்தான். ஒன்றுக்கொன்று போட்டியாக இருக்கின்ற இரண்டு காரணிகள் பண்டைய காலகட்டங்களிலிருந்து இன்றைய காலகட்டம்வரை பண்ணை விலங்குகளின் வாழும் சூழ்நிலையை வடிவமைத்து வந்துள்ளன. மனிதர்களின் விருப்பங்கள், விலங்குகளின் தேவைகள் ஆகியவைதான் அவை. இறைச்சிக்காக மக்கள் பன்றிகளை வளர்க்கின்றனர், ஆனால் அந்த இறைச்சி தொடர்ந்து கிடைத்துக் கொண்டே இருக்க வேண்டுமென்றால், அப்பன்றிகள் நீண்டகாலம் பிழைத்திருப்பதையும் இனப்பெருக்கம் செய்வதையும் அவர்கள் உறுதி செய்தாக வேண்டும். கோட்பாட்டுரீதியாகப் பார்க்கும்போது, இது அந்த விலங்குகள் மிகத் தீவிரமான சித்தரவதைகளுக்கு ஆளாவதிலிருந்து அவற்றைப் பாதுகாத்திருக்க வேண்டும். ஒரு விவசாயி தன்னுடைய பன்றிகளை ஒழுங்காக கவனித்துக் கொள்ளாவிட்டால், அவை குட்டிகள் எதையும் ஈன்றெடுக்காமல் விரைவில் இறந்துவிடும். பிறகு அந்த விவசாயி பட்டினி கிடக்க நேரிடும்.

துரதிர்ஷ்டவசமாக, பண்ணை விலங்குகள் பிழைத்திருப்பதையும் இனப்பெருக்கம் செய்வதையும் உறுதி செய்கின்ற மனிதர்கள், அதே நேரத்தில், அந்த விலங்குகளுக்குப் பல்வேறு வழிகளில் அளப்பரிய துன்பங்களையும் விளைவிக்கின்றனர். பண்ணைப்படுத்தப்பட்ட விலங்குகள், உடல்ரீதியான, உணர்ச்சிரீதியான, மற்றும் சமூகரீதியான தேவைகள் பலவற்றைத் தம்முடைய காட்டுவாழ் மூதாதையரிடமிருந்து சுவீகரித்திருப்பதுதான் இதிலுள்ள அடிப்படைப் பிரச்சனையாகும். ஏனெனில், அத்தேவைகள் பண்ணைகளில் வளர்க்கப்படுகின்ற விலங்குகளுக்குப் பொருத்தமற்றவையாக ஆகிவிடுகின்றன. விவசாயிகள் அத்தேவைகளை எப்போதும் உதாசீனப்படுத்துகின்றனர். அவர்கள் அவ்விலங்குகளைச் சிறிய கூண்டுகளில் அடைத்து வைக்கின்றனர், அவற்றின் கொம்புகளையும் வால்களையும் வெட்டிவிடுகின்றனர், குட்டிகளை அவற்றின் தாய்களிடமிருந்து பிரிக்கின்றனர், செயற்கைக் கருத்தரிப்புமுறைகளைப் பயன்படுத்தி

அவ்விலங்குகள் வீரியம் மிக்கக் குட்டிகளை ஈன்றெடுக்கும்படி செய்கின்றனர். அவ்விலங்குகள் பெரிதும் துன்புறுகின்றன, ஆனாலும் அவை உயிர்வாழ்ந்து பெருகுகின்றன.

இது இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறையின் அடிப்படைக் கொள்கைகளோடு முரண்படுகிறது, இல்லையா? பிழைத்திருத்தலுக்கும் இனப்பெருக்கத்திற்கும் சாதகமாக இருக்கும் விதத்திலேயே அனைத்து உள்ளுணர்வுகளும் உந்துதல்களும் உணர்ச்சிகளும் படிப்படியாக வளர்ந்துள்ளன என்று பரிணாம வளர்ச்சிக் கோட்பாடு கூறுகிறது. அதன்படி, பண்ணை விலங்குகளின் தொடர்ச்சியான இனப்பெருக்கம், அவற்றின் அடிப்படைத் தேவைகள் அனைத்தும் நிறைவேற்றப்பட்டுள்ளன என்பதை நிரூபிக்கிறது, இல்லையா? உயிர்பிழைத்திருப்பதற்கும் இனப்பெருக்கம் செய்வதற்கும் தேவைப்படாத உள்ளுணர்வுகளுக்கும் உந்துதல்களுக்கும் உணர்ச்சிகளுக்குமான ஒரு 'தேவை' எப்படி ஒரு பன்றிக்குத் தொடர்ந்து இருக்க முடியும்?

உயிர்பிழைத்திருத்தல், இனப்பெருக்கம் செய்தல் ஆகியவற்றின் பரிணாம வளர்ச்சி தொடர்பான அழுத்தங்களை சமாளிப்பதற்காகவே அனைத்து உள்ளுணர்வுகளும் உந்துதல்களும் உணர்ச்சிகளும் வளர்ச்சியடைந்தன என்பது நிச்சயமாக உண்மைதான். ஆனால் இந்த அழுத்தங்கள் திடீரென்று மறைந்துவிட்டால், அவற்றால் வடிவமைக்கப்பட்ட உள்ளுணர்வுகளும் உந்துதல்களும் உணர்ச்சிகளும் அவற்றோடு சேர்ந்து மறைந்துவிடுவதில்லை. குறைந்தபட்சம் உடனடியாக அவை மறைவதில்லை. ஒரு விலங்கு உயிர்பிழைத்திருப்பதற்கும் இனப்பெருக்கம் செய்வதற்கும் இனியும் அந்த மூன்றும் தேவையில்லை என்றாலும்கூட, அவை தொடர்ந்து அந்த விலங்கின் அகவயமான அனுபவங்களை வழிநடத்துகின்றன. வேளாண்மையானது விலங்குகளுக்கும் மனிதர்களுக்கும் பரிணாமத் தேர்ந்தெடுப்பு அழுத்தங்களை இரவோடு இரவாக மாற்றியது. ஆனால், அது அவர்களுடைய உடல்ரீதியான, உணர்ச்சிரீதியான, மற்றும் சமூகரீதியான தேவைகளை மாற்றவில்லை. பரிணாம வளர்ச்சி ஒருபோதும் ஸ்தம்பித்து நின்றுவிடுவதில்லை. வேளாண்மையின் வரவுக்குப் பிறகு 12,000 ஆண்டுகளாக அது தொடர்ந்து மனிதர்களையும் விலங்குகளையும் மாற்றியமைத்து வந்துள்ளது. எடுத்துக்காட்டாக, ஐரோப்பாவிலும் மேற்கு ஆசியாவிலும் இருந்த மனிதர்கள் பசுக்களின் பாலைச் செரிமானம் செய்வதற்கான திறனை வளர்த்துக் கொண்டனர். அதே நேரம், மனிதர்கள் குறித்த பயம் அந்தப் பசுக்களிடமிருந்து மறைந்துவிட்டது. இன்று அவை, காட்டில் வாழ்ந்த

தம்முடைய மூதாதையரைவிட அதிகமான பாலை உற்பத்தி செய்கின்றன. ஆனாலும் இவை மேலோட்டமான மாற்றங்களே. பசுக்கள், பன்றிகள், மற்றும் மனிதர்களின் ஆழமான உணர்வுக் கட்டமைப்புகளும் உணர்ச்சிக் கட்டமைப்புகளும் கற்காலத்திலிருந்து அவ்வளவாக மாறியிருக்கவில்லை.

நவீன சேப்பியன்ஸ் ஏன் இனிப்புகளை மிகவும் விரும்பிச் சாப்பிடுகின்றனர்? இருபத்தோராம் நூற்றாண்டில் நாம் உயிர்பிழைத்து இருப்பதற்கு ஐஸ்கிரீமையும் சாக்லேட்டுகளையும் நாம் அள்ளி அள்ளி விழுங்க வேண்டும் என்பது அதற்குக் காரணம் அல்ல. மாறாக, நம்முடைய கற்கால மூதாதையர் ஏதேனும் இனிப்பான பழத்தையோ அல்லது தேனையோ கண்டபோது, எவ்வளவு விரைவாக முடியுமோ அவ்வளவு விரைவாகவும் அவ்வளவு அதிகமாகவும் அவற்றை உட்கொள்ளுவதுதான் அவர்கள் செய்திருக்கக்கூடிய மிகவும் அறிவார்ந்த செயலாக இருந்ததுதான் அதற்குக் காரணம். இளைஞர்கள் ஏன் பொறுப்பின்றி அதிக வேகமாகக் காரோட்டுகின்றனர்? அவர்கள் ஏன் வன்முறையுடன்கூடிய வாக்குவாதங்களில் ஈடுபடுகின்றனர்? பொதுமக்களின் பார்வைக்கு வரக்கூடாத இணையத்தளங்களுக்குள் அவர்கள் ஏன் அத்துமீறி நுழைகின்றனர்? ஏனெனில், சுமார் 70,000 ஆண்டுகளுக்கு முன்பு பரிணாம வளர்ச்சிரீதியாகப் பயனுள்ளவையாக விளங்கிய, ஆனால் இன்று பயனற்றவையாகவும் வளர்ச்சிக்குப் பாதகமாகவும் இருக்கக்கூடிய, மரபியல்ரீதியான பண்டைய ஆணைகளை அவர்கள் இன்றும் பின்பற்றிக் கொண்டிருக்கின்றனர். தன் உயிரைப் பணயம் வைத்து ஒரு மாமூத்தைத் துரத்திச் சென்று தன்னுடைய சக போட்டியாளர்களைவிடத் திறமையாகச் செயல்பட்டு வெற்றி பெற்ற ஓர் இளம் வேட்டையாடி, உள்ளூர் அழகி ஒருத்தியை மனைவியாகப் பெற்றான். இப்போது அவனுடைய வீர மரபணுக்கள் நம்முள் இருந்து நம்மைப் பாடாய்ப்படுத்திக் கொண்டிருக்கின்றன.

இதே பரிணாம வளர்ச்சித் தருக்கவாதம்தான் மனிதர்களின் கட்டுப்பாட்டில் இருக்கின்ற பண்ணைகளில் உள்ள ஆண் பன்றிகள், பெண் பன்றிகள், மற்றும் பன்றிக்குட்டிகளின் வாழ்க்கையை வடிவமைக்கின்றன. பண்டைய பன்றிகள் காட்டில் உயிர்பிழைத்திருப்பதற்கும் இனப்பெருக்கம் செய்வதற்கும் பரந்து விரிந்த பகுதிகளில் சுற்றித் திரிய வேண்டியிருந்தது, தம்முடைய சுற்றுச்சூழலுக்குத் தம்மைப் பரிச்சயப்படுத்திக் கொள்ள வேண்டியிருந்தது, பொறிகள் மற்றும் கொன்றுண்ணிகள் குறித்து எச்சரிக்கையாக இருக்க வேண்டியிருந்தது. மேலும், தம்முடைய சக பன்றிகளோடு அவை கருத்துப் பரிமாற்றம் மேற்கொள்ளவும்

ஒத்துழைக்கவும் வேண்டியிருந்தது. முதிய மற்றும் அனுபவம் வாய்ந்த பெண் பன்றிகள் ஆதிக்கம் செலுத்திய சிக்கலான குழுக்களை அவை உருவாக்க வேண்டியிருந்தது. பரிணாம வளர்ச்சி சார்ந்த அழுத்தங்கள் காட்டுப் பன்றிகளை அதிக அறிவார்ந்த சமூக விலங்குகளாகவும், விஷயங்களைத் தெரிந்து கொள்ளுவதற்கான ஆர்வம் கொண்டவையாகவும் ஆக்கின. அதோடு, தம் இனத்தைச் சேர்ந்த மற்ற உறுப்பினர்களோடு கலந்து பழகி உறவாடி, அவற்றோடு விளையாடி, அங்குமிங்கும் சுற்றித் திரிந்து தம்முடைய சுற்றுச்சூழலை ஆய்வு செய்வதற்கான வலிமையான உந்துதல்களைக் கொண்டவையாகவும் அவற்றை ஆக்கின. ஏதோ அரியதொரு மரபுச்சிதைவு மாற்றத்துடன் பிறந்த ஒரு பெண் பன்றி, அக்குறையின் காரணமாகத் தன்னுடைய சுற்றுச்சூழல்மீதும் பிற பன்றிகள்மீதும் அக்கறையற்றுப் போகும்போது, அது பிழைத்திருப்பதற்கும் இனப்பெருக்கம் செய்வதற்குமான வாய்ப்பு மிகவும் குறைந்துவிடுகிறது.

காட்டுப் பன்றிகளின் சந்ததியான பண்ணைப்படுத்தப்பட்டப் பன்றிகள், அந்தக் காட்டுப் பன்றிகளின் அறிவையும் ஆர்வத்தையும் சமூகத் திறமைகளையும் சுவீகரித்துக் கொண்டன. காட்டுப் பன்றிகளைப்போலவே, பண்ணைகளில் வளர்க்கப்படுகின்ற பன்றிகளும் பல்வேறு வகைப்பட்ட வாய்வழிச் சமிக்கைகளையும் நாசிவழிச் சமிக்கைகளையும் பயன்படுத்தித் தமக்கிடையே கருத்துப் பரிமாற்றங்களில் ஈடுபடுகின்றன. பெண் பன்றிகள் தம்முடைய குட்டிகளின் தனித்துவமான கீச்சொலிகளை அடையாளம் கண்டுகொள்ளுகின்றன. அதேபோல, பிறந்து இரண்டு நாட்கள் மட்டுமே ஆன பன்றிக்குட்டிகளால்கூடத் தம்முடைய தாயின் அழைப்புகளை மற்றப் பெண் பன்றிகளின் அழைப்புகளிலிருந்து வேறுபடுத்த முடிகிறது. பென்சில்வேனியா மாநிலப் பல்கலைக்கழகப் பேராசிரியரான ஸ்டேன்லி கர்ட்டிஸ், ஒரு சிறப்பு ‘ஜாய்ஸ்டிக்’ கருவியைத் தம்முடைய நீள்மூக்குகளால் கட்டுப்படுத்துவதற்கு ஹேம்லெட், ஆம்லெட் ஆகிய இரண்டு பன்றிகளுக்குப் பயிற்சியளித்தார். அவை இரண்டும் விரைவில் எளிய கணினி விளையாட்டுக்களைக் கற்றுக் கொள்ளுவதிலும் விளையாடுவதிலும் முதனிகளுக்கு இணையாக ஆனதை அவர் கண்டார்.

இன்று பெரும் தொழிற்பண்ணைகளில் வளர்க்கப்படுகின்ற பெண் பன்றிகளில் பெரும்பாலானவை கணினி விளையாட்டுக்களை விளையாடுவதில்லை. அவற்றின் மனித முதலாளிகள் சிறிய கூண்டுகளுக்குள் அவற்றை அடைத்து வைத்துவிடுகின்றனர். அக்கூண்டுகள் பொதுவாக இரண்டு மீட்டர் நீளமும் அறுபது

சென்டிமீட்டர் அகலமும் கொண்டவையாக இருக்கின்றன. ஒரு கான்கிரீட் தரையையும் உலோகக் கம்பிகளையும் கொண்ட அக்கூண்டுகளில், கருவுற்றப் பெண் பன்றிகளால் திரும்பவோ அல்லது ஒருக்களித்துப் படுக்கவோகூட முடியாது. அவை அந்தக் கூண்டுகளில் நடப்பது பற்றிய பேச்சுக்கே இடமில்லை. மூன்றரை மாதங்கள் அப்படிப்பட்டச் சூழல்களில் வாழ்ந்த பிறகு, சற்றுப் பெரிய கூண்டுகளுக்கு அவை இடமாற்றம் செய்யப்படுகின்றன. அங்கு சில மாதங்களில் அவை தம்முடைய குட்டிகளை ஈன்று அவற்றுக்குப் பால் கொடுக்கின்றன. பன்றிக்குட்டிகள் இயற்கையாகப் பத்திலிருந்து இருபது வாரங்களுக்குத் தம்முடைய தாயிடம் பாலருந்தும். ஆனால் இந்தத் தொழிற்பண்ணைகளில் இரண்டிலிருந்து நான்கு வாரங்கள் மட்டுமே அவை தம் தாயிடம் பாலருந்த அனுமதிக்கப்படுகின்றன. பிறகு அவை தம்முடைய தாயிடமிருந்து பிரிக்கப்பட்டு, கொழுக்க வைக்கப்படுவதற்காகவும் பிறகு கொல்லப்படுவதற்காகவும் அனுப்பி வைக்கப்படுகின்றன. இப்போது அந்தத் தாய்ப் பன்றி மீண்டும் சினைப்படுத்தப்பட்டு, பழையபடி அச்சிறிய கூண்டுக்குள் அடைக்கப்படுகிறது. இப்போது இன்னொரு முழுச் சுழற்சி தொடங்குகிறது. ஒரு பெண் பன்றி ஐந்திலிருந்து பத்துச் சுழற்சிகளுக்கு உட்படுத்தப்பட்டு, பிறகு அதுவும் இறைச்சிக்காகக் கொல்லப்படுகிறது. சமீப காலங்களில், அக்கூண்டுகளைப் பயன்படுத்துவது ஐக்கிய ஐரோப்பாவிலிலும் அமெரிக்காவின் சில மாநிலங்களிலும் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. ஆனால், வேறு பல நாடுகளில் அக்கூண்டுகள் இன்னும் பரவலாகப் பயன்படுத்தப்பட்டுக் கொண்டிருக்கின்றன. சினைப்படுத்தப்பட்ட லட்சக்கணக்கான பன்றிகள் கிட்டத்தட்டத் தம்முடைய ஒட்டுமொத்த வாழ்க்கையையும் அக்கூண்டுகளில்தான் கழிக்கின்றன.

ஒரு பெண் பன்றி பிழைத்திருப்பதற்கும் குட்டிகளை ஈன்றெடுப்பதற்கும் தேவையான அனைத்தையும் மனித விவசாயிகள் கவனித்துக் கொள்ளுகின்றனர். அப்பன்றிக்குப் போதுமான உணவு வழங்கப்படுகிறது, நோய்களுக்கு எதிரான தடுப்பு மருந்துகள் அதற்குக் கொடுக்கப்படுகின்றன, இயற்கைப் பேரழிவுகளிலிருந்து அது பாதுகாக்கப்படுகிறது, செயற்கையான முறையில் அது சினைப்படுத்தப்படுகிறது. பாரபட்சமற்ற ஒரு கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, இந்தப் பெண் பன்றி தன்னுடைய சுற்றுச்சூழல்களை ஆய்வு செய்யவும், பிற பன்றிகளோடு கலந்துறவாடவும், தன்னுடைய குட்டிகளோடு ஒரு பிணைப்பை ஏற்படுத்திக் கொள்ளவும் வேண்டிய தேவை இல்லை. இன்னும் சொல்லப் போனால், அது நடப்பதற்கான

தேவைகூட இல்லை. ஆனால், அதன் அகவயமான ஒரு கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, மேற்குறிப்பிடப்பட்ட அனைத்து விஷயங்களையும் செய்வதற்கான வலிமையான உந்துதல்கள் அதனுள் எழுகின்றன. இந்த உந்துதல்கள் நிறைவேற்றப்படாவிட்டால் அப்பன்றி மிகவும் துன்புறும். சினைக் கூண்டுகளுக்குள் அடைக்கப்பட்டுள்ள பெண் பன்றிகள் தீவிர விரக்தியையும் பெரும் மனச்சோர்வையும் வெளிப்படுத்துகின்றன.



படம் **13:** கருவுற்றிருக்கும் காலத்தைக் கழிப்பதற்கான கூண்டுகளில் பெண் பன்றிகள் அடைக்கப்படுள்ளன**.** அறிவில் மிக உயர்ந்த இந்தச் சமூக விலங்குகள் தம் வாழ்வின் பெரும்பகுதியை இந்த நிலைமையில்தான் கழிக்கின்றன**.** ஏற்கனவே இறைச்சியாக ஆகிவிட்டதுபோல அவை கையாளப்படுகின்றன**.**

பரிணாம உளவியலின் அடிப்படைப் பாடம் இதுதான்: ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பு உருவாக்கப்பட்ட ஒரு தேவை, உயிரினங்கள் இன்று பிழைத்திருப்பதற்கும் இனப்பெருக்கம் செய்வதற்கும் இனியும் அவசியமின்றிப் போயுள்ளபோதிலும், உயிரினங்கள் அகரீதியாக அந்தத் தேவையைத் தொடர்ந்து உணருகின்றன. ஆனால், துரதிர்ஷ்டவசமாக, பண்ணைப்படுத்தப்பட்ட விலங்குகளின் அகரீதியான தேவைகளைப் புறக்கணிக்கின்ற அதே நேரத்தில், அவை பிழைத்திருப்பதையும் இனப்பெருக்கம் செய்வதையும் உறுதி செய்கின்ற சக்தியை வேளாண் புரட்சி மனிதர்களுக்குக் கொடுத்துள்ளது.

## உயிரினங்கள் படிமுறைத் தீர்வுகளே

தேவைகள், உணர்வுகள், மற்றும் உணர்ச்சிகளை உள்ளடக்கிய

அகவயமான ஓர் உலகம் பன்றிகள் போன்ற விலங்குகளுக்கு உண்மையிலேயே இருக்கிறது என்பதை நம்மால் எப்படி உறுதியாகத் தெரிந்து கொள்ள முடியும்? விலங்குகள் மனிதப் பண்புகளைக் கொண்டவைபோல நாம் ஏன் அவற்றைச் சித்தரிக்கிறோம்? அதாவது, பொம்மைகளால் அன்பையும் கோபத்தையும் உணர முடியும் என்று குழந்தைகள் நம்புவதைப்போல, மனிதப் பிறவிகள் அல்லாதவற்றுக்கு மனிதர்களுடைய பண்புகள் இருப்பதுபோல நாம் ஏன் நடந்து கொள்ளுகிறோம்?

உண்மையில், பன்றிகளுக்கு உணர்ச்சிகள் இருப்பதாகக் கருதுவது அவற்றை மனிதர்களாக ஆக்குவதில்லை. அது அவற்றைப் 'பாலூட்டிகளாக' ஆக்குகிறது. ஏனெனில், உணர்ச்சிகள் என்பவை மனிதர்களுக்கு மட்டுமே உரிய ஒரு தனித்துவமான பண்புநலன் அல்ல. அவை அனைத்துப் பாலூட்டிகளுக்கும் பொதுவானவை (அனைத்துப் பறவைகளுக்கும், சில ஊர்வனவற்றுக்கும், சில மீன்களுக்கும்கூட). பன்றிகளும் பாலூட்டிகள் என்பதால் அவற்றுக்கும் உணர்ச்சிகள் இருக்கின்றன என்ற ஓர் உறுதியான முடிவுக்கு நம்மால் வர முடியும்.

உணர்ச்சிகள் என்பவை வெறுமனே கவிதைகளை எழுதுவதற்கும் சிம்பொனி இசையை உருவாக்குவதற்கும் மட்டுமே பயன்படுகின்ற ஏதோ மர்மமான ஆன்மிகக் கொள்கை அல்ல; மாறாக, அனைத்துப் பாலூட்டிகளும் பிழைத்திருப்பதற்கும் இனப்பெருக்கம் செய்வதற்கும் இன்றியமையாத உயிர்வேதிப் படிமுறைத் தீர்வுகள்தான் அவை என்பதை சமீப காலங்களில் உயிரியலாளர்கள் விளக்கிக் காட்டியுள்ளனர். இதற்கு என்ன பொருள்? முதலில் படிமுறைத் தீர்வு என்றால் என்ன என்பதை விளக்குவதிலிருந்து நாம் துவக்கலாம். இது மிகவும் முக்கியமானது. ஏனெனில், இந்த முக்கியக் கோட்பாடு பின்வரும் அத்தியாயங்கள் பலவற்றில் மீண்டும் மீண்டும் வரும். அதோடு, இருபத்தோராம் நூற்றாண்டில் படிமுறைத் தீர்வுகள்தான் ஆதிக்கம் செலுத்தவிருக்கின்றன. படிமுறைத் தீர்வுதான் இவ்வுலகின் தனிப்பெரும் முக்கியக் கோட்பாடு என்று கூறலாம். நாம் நம்முடைய வாழ்க்கையையும் எதிர்காலத்தையும் புரிந்து கொள்ள விரும்பினால், ஒரு படிமுறைத் தீர்வு என்றால் என்ன என்பதையும், படிமுறைத் தீர்வுகள் எவ்வாறு உணர்ச்சிகளோடு தொடர்பு கொண்டுள்ளன என்பதையும் புரிந்து கொள்ள நம்மால் இயன்ற அனைத்து முயற்சிகளையும் நாம் மேற்கொண்டாக வேண்டும்.

ஒரு படிமுறைத் தீர்வு என்பது கணக்கீடு செய்வதற்கும், பிரச்சனைகளுக்குத் தீர்வு காணுவதற்கும், தீர்மானங்களை எட்டுவதற்கும் பயன்படுத்தப்படக்கூடிய, ஒழுங்குபடுத்தப்பட்ட,

வரிசையான பல நடவடிக்கைகளாகும். ஒரு படிமுறைத் தீர்வு என்பது ஒரு குறிப்பிட்டக் கணக்கீடு அல்ல, மாறாக, அந்தக் கணக்கீட்டை மேற்கொள்ளும்போது பின்பற்றப்படுகின்ற வழிமுறைதான் அது. எடுத்துக்காட்டாக, இரண்டு எண்களுக்கு இடையேயான சராசரியை நீங்கள் கணக்கிட விரும்பினால், எளியதொரு படிமுறைத் தீர்வை நீங்கள் பயன்படுத்தலாம். அது இவ்வாறு கூறுகிறது: ‘முதல் நடவடிக்கை: இரண்டு எண்களையும் கூட்டுங்கள். இரண்டாவது நடவடிக்கை: அந்தக் கூட்டுத் தொகையை இரண்டால் வகுத்துக் கொள்ளுங்கள்.’ 4, 8 ஆகிய எண்களை நீங்கள் உள்ளீடாகக் கொடுக்கும்போது, 6 என்ற விடை உங்களுக்குக் கிடைக்கும். 117, 231 ஆகிய எண்களை நீங்கள் கொடுக்கும்போது, 174 என்ற விடையை நீங்கள் பெறுவீர்கள்.

இன்னோர் எடுத்துக்காட்டைப் பார்க்கலாம். காய்கறி சூப் தயாரிப்பதற்கான ஒரு படிமுறைத் தீர்வு இப்படி அமைந்திருக்கும்:

1. ஒரு பாத்திரத்தில் அரை கப் எண்ணெயைச் சூடேற்றவும்.
2. நான்கு வெங்காயங்களைப் பொடியாக நறுக்கிக் கொள்ளவும்.
3. வெங்காயம் பொன்னிறமாக ஆகும்வரை அவற்றை வறுத்துக் கொள்ளவும்.
4. மூன்று உருளைக்கிழங்குகளைத் துண்டுகளாக்கி அந்த வெங்காயத்தோடு சேர்க்கவும்.
5. ஒரு முட்டைக்கோஸை நீளவாக்கில் மெல்லிய கீற்றுகளாக நறுக்கி அவற்றையும் சேர்க்கவும்.

இந்த அறிவுறுத்தல்கள் இப்படித் தொடரும். இதே படிமுறைத் தீர்வை நீங்கள் எத்தனை முறை வேண்டுமானாலும் பின்பற்றலாம். ஒவ்வொரு முறையும் நீங்கள் சற்று வித்தியாசமான காய்கறிகளைப் பயன்படுத்தலாம். அப்போது சற்று வித்தியாசமான சூப் உங்களுக்குக் கிடைக்கும். ஆனால் அந்தப் படிமுறைத் தீர்வில் எந்த மாற்றமும் இருக்காது.

ஒரு சமையற்குறிப்பால் தானாகவே அந்த சூப்பைத் தயாரிக்க முடியாது. அந்த சமையற்குறிப்பைப் படித்து, அதில் கூறப்பட்டுள்ள நடவடிக்கைகளைப் பின்பற்ற ஒரு நபர் தேவை. ஆனால், அந்தப் படிமுறைத் தீர்வை உள்வாங்கிக் கொண்டு, அதைத் தானாகவே பின்பற்றக்கூடிய ஓர் இயந்திரத்தை உங்களால் உருவாக்க முடியும். பிறகு நீங்கள் அந்த இயந்திரத்திற்கு வெறும் தண்ணீரும் மின்சாரமும் காய்கறிகளும் வழங்கினால் போதும், அது தானாகவே அந்த சூப்பைத் தயாரித்துவிடும். சூப் தயாரித்து வழங்கும் இயந்திரங்கள் அவ்வளவாக இல்லை, ஆனால் பல்வேறு வகையான பானங்களை விற்பனை

செய்கின்ற தானியங்கி விற்பனை இயந்திரங்களை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அப்படிப்பட்ட இயந்திரங்களில், நாணயங்களைப் போடுவதற்கு ஒரு துளை இருக்கும், கோப்பைகளுக்கான ஓர் இடம் இருக்கும், பல வரிசைகளில் பல்வேறு பொத்தான்கள் இருக்கும். முதல் வரிசையில் வழக்கமாக, காபி, தேநீர், கோகோ ஆகியவற்றுக்கான பொத்தான்கள் இருக்கும். இரண்டாவது வரிசையில் பின்வருமாறு எழுதப்பட்டிருக்கும்: சர்க்கரை இல்லாதது, ஒரு ஸ்பூன் சர்க்கரை, இரண்டு ஸ்பூன்கள் சர்க்கரை. மூன்றாவது வரிசையில், பால், சோயா பால், பாலற்றது ஆகியவற்றுக்கான பொத்தான்கள் இருக்கும். ஒரு மனிதன் அந்த இயந்திரத்தை அணுகி, ஒரு நாணயத்தை அதற்கான துளைக்குள் போட்டுவிட்டு, 'தேநீர்,' 'ஒரு ஸ்பூன் சர்க்கரை,' 'பால்' ஆகியவற்றுக்கான பொத்தான்களை ஒவ்வொன்றாக அழுத்துகிறான். உடனே அந்த இயந்திரம் செயல்படத் தொடங்குகிறது, முன்கூட்டியே தீர்மானிக்கப்பட்ட வரிசையில் அது ஒவ்வொரு நடவடிக்கையாக மேற்கொள்ளுகிறது. அதன்படி, தேநீர்த் தூள் அடங்கிய ஒரு சிறிய பையை ஒரு கோப்பைக்குள் போட்டு, கொதிக்கும் நீரை அதில் ஊற்றி, ஒரு ஸ்பூன் சர்க்கரையையும் பாலையும் அது சேர்க்கிறது. ஒரு கோப்பை சூடான தேநீர் தயாராகிவிடுகிறது! இது ஒரு படிமுறைத் தீர்வு.

அந்தப் பொத்தான்களை அழுத்தி அந்தத் தேநீரைப் பருகுபவரும்கூட ஒரு படிமுறைத் தீர்வுதான் என்று கடந்த சில ஆண்டுகளாக உயிரியலாளர்கள் ஓர் உறுதியான முடிவுக்கு வந்துள்ளனர். ஒரு தானியங்கி விற்பனை இயந்திரத்தைவிட அதிகச் சிக்கலான ஒரு படிமுறைத் தீர்வு அவர் என்பதில் ஐயமில்லை என்றாலும், அவரும் ஒரு படிமுறைத் தீர்வுதான். ஆனால், மனிதர்கள் தேநீர் தயாரிக்கின்ற படிமுறைத் தீர்வுகள் அல்லர், மாறாக, தங்களுடைய சொந்த நகல்களாவர் (நீங்கள் சரியான சேர்மானத்தில் பொத்தான்களை அழுத்தினால், ஒரு தானியங்கி விற்பனை இயந்திரம் தன்னைப் போன்ற இன்னோர் இயந்திரத்தை உற்பத்தி செய்வதைப் போன்றது இது).

தானியங்கி விற்பனை இயந்திரங்களைக் கட்டுப்படுத்துகின்ற படிமுறைத் தீர்வுகள் கியர்கள் மற்றும் மின்சுற்றுக்களின் வாயிலாகச் செயல்படுகின்றன. மனிதர்களைக் கட்டுப்படுத்துகின்ற படிமுறைத் தீர்வுகள் உணர்ச்சிகள், உணர்வுகள், மற்றும் எண்ணங்கள் மூலமாகச் செயல்படுகின்றன. துல்லியமாக இதே வகையான படிமுறைத் தீர்வுதான் பன்றிகளையும் பபூன்களையும் நீர்நாய்களையும் கோழிகளையும் கட்டுப்படுத்துகிறது. எடுத்துக்காட்டாக, பின்வரும் வாழ்வுப் பிரச்சனையைக் கருத்தில் கொள்ளுங்கள்: ஒரு மரத்தில் சில வாழைப்பழங்கள் தொங்கிக் கொண்டிருப்பதை ஒரு பபூன் பார்க்கிறது,

ஆனால் அருகே ஒரு சிங்கம் பதுங்கியிருப்பதையும் அது கவனிக்கிறது. அந்த வாழைப்பழங்களுக்காக அந்த பபூன் தன் உயிரைப் பணயம் வைக்க வேண்டுமா?

இது நிகழ்தகவைக் கணக்கிடுகின்ற ஒரு கணிதப் பிரச்சனையாக ஆகிறது. அந்த வாழைப்பழங்களை உட்கொள்ளாவிட்டால் பசியால் அந்த பபூன் இறந்துவிடுவதற்கான நிகழ்தகவையும், அந்தச் சிங்கம் அந்த பபூனைப் பிடித்துவிடுவதற்கான நிகழ்தகவையும் உள்ளடக்கிய பிரச்சனை இது. இப்பிரச்சனையைத் தீர்ப்பதற்கு அந்த பபூன் ஏகப்பட்டத் தகவல்களைக் கருத்தில் எடுத்துக் கொள்ள வேண்டும். “அந்த வாழைப்பழங்கள் என்னிடமிருந்து எவ்வளவு தொலைவில் இருக்கின்றன? அந்தச் சிங்கம் எவ்வளவு தொலைவில் இருக்கிறது? என்னால் எவ்வளவு வேகமாக ஓட முடியும்? அந்தச் சிங்கத்தால் எவ்வளவு வேகமாக ஓட முடியும்? அது விழித்துக் கொண்டிருக்கிறதா அல்லது தூங்கிக் கொண்டிருக்கிறதா? அது பசியோடு இருக்கிறதா அல்லது சாப்பிட்டு முடித்துத் திருப்தியாக இருக்கிறதா? அந்த மரத்தில் எத்தனை வாழைப்பழங்கள் இருக்கின்றன? அவை பெரிய வாழைப்பழங்களா அல்லது சிறியவையா? அவை காயாக இருக்கின்றனவா அல்லது கனிந்திருக்கின்றனவா?” இந்தப் புறவயமான தகவல்களோடு கூடவே, தன்னுடைய சொந்த உடலுக்குள் நிலவுகின்ற சூழ்நிலைகளைப் பற்றிய தகவல்களையும் அந்த பபூன் தன் கருத்தில் கொள்ள வேண்டும். அது பட்டினியாக இருந்தால், முடிவு என்னவாக இருந்தாலும், அது அந்த வாழைப்பழங்களுக்காக எல்லாவற்றையும் பணயம் வைப்பதில் அர்த்தம் இருக்கிறது. ஆனால் அது அப்போதுதான் சாப்பிட்டிருந்தால், அந்த வாழைப்பழங்களை உட்கொள்ள அது கொண்டிருக்கும் ஆசை வெறும் பேராசைதான். எனவே, அந்த வாழைப்பழங்களுக்காக அது தன் உயிரைப் பயணம் வைக்க வேண்டிய அவசியம் இல்லை.

இந்த அனைத்து மாறிகளையும் நிகழ்தகவுகளையும் சீர்தூக்கிப் பார்ப்பதற்கு, தானியங்கி விற்பனை இயந்திரங்களைக் கட்டுப்படுத்துகின்ற படிமுறைத் தீர்வுகளைவிட அதிகச் சிக்கலான படிமுறைத் தீர்வுகள் அந்த பபூன்களுக்குத் தேவை. சரியாகக் கணக்கிடுவதற்குக் கிடைக்கின்ற பரிசு அதற்கேற்பப் பெரியதாக இருக்கிறது. அந்த பபூன் உயிர்பிழைத்திருப்பதுதான் அதற்குக் கிடைக்கக்கூடிய மாபெரும் பரிசாக இருக்கிறது. ஆபத்துக்களை மிகையாக மதிப்பிட்டுவிடுகின்ற படிமுறைத் தீர்வுகளைக் கொண்ட ஒரு கோழை பபூன் பட்டினி கிடந்து இறந்துவிடும். இந்தக் கோழைத்தனமான படிமுறைத் தீர்வுகளை வடிவமைத்த மரபணுக்களும்

அந்த பபூனோடு சேர்ந்து அழிந்துவிடும். மறுபுறம், ஆபத்துக்களைக் குறைத்து மதிப்பிடுகின்ற படிமுறைத் தீர்வுகளைக் கொண்ட, மட்டுமீறிய துணிச்சலுடன்கூடிய ஒரு பபூன், அந்தச் சிங்கத்திற்கு இரையாகிவிடும். அதன் பொறுப்பற்ற மரபணுக்களும் அடுத்தத் தலைமுறையைச் சென்றடையத் தவறிவிடும். இந்தப் படிமுறைத் தீர்வுகள் இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறை மூலம் நிரந்தரமான தரக் கட்டுப்பாட்டிற்கு உள்ளாகின்றன. நிகழ்தகவுகளைச் சரியாகக் கணக்கிடுகின்ற விலங்குகளே வாரிசுகளை விட்டுச்செல்லுகின்றன.

ஒரு பபூன் எப்படி நிகழ்தகவுகளைத் துல்லியமாகக் கணக்கிடுகிறது? அது தன் காதுக்குப் பின்னாலிருந்து ஒரு பென்சிலை எடுத்து, தன்னுடைய பின்பாக்கெட்டிலிருந்து ஒரு சிறு நோட்டுப்புத்தகத்தை எடுத்து, ஓடும் வேகத்தையும் ஆற்றல் அளவுகளையும் ஒரு கணிப்பானைக் கொண்டு கணக்கிடுவதில்லை. மாறாக, அதன் ஒட்டுமொத்த உடல்தான் அதனுடைய கணிப்பானாகச் செயல்படுகிறது. நாம் உணர்வுகள் என்றும் உணர்ச்சிகள் என்றும் அழைக்கின்றவைதான் உண்மையில் படிமுறைத் தீர்வுகள். அந்த பபூன் பசியை உணருகிறது, பயத்தை உணருகிறது, சிங்கத்தைக் கண்டவுடன் நடுங்குகிறது, அந்த வாழைப்பழங்களைக் கண்டதும் தன் வாயில் உமிழ்நீர் ஊறுவதை உணருகிறது. ஒரு கணநேரத்தில் ஏகப்பட்ட உணர்வுகளையும் உணர்ச்சிகளையும் விருப்பங்களையும் அது அனுபவிக்கிறது. இதெல்லாம் கணிக்கீட்டுச் செயல்முறையே அன்றி வேறொன்றும் இல்லை. அவ்வாறு கணக்கிடுவதன் விளைவு ஓர் உணர்வின் வடிவில் தோன்றும்: தன்னுள் திடீரென்று உற்சாகம் ஊற்றெடுப்பதை அந்த பபூன் உணரும், அதன் உடலில் மயிர்க்கால்கள் அனைத்தும் குத்திட்டு நிற்கும், அதன் தசைகள் முறுக்கேறும், அதன் நெஞ்சு விரிவடையும், பிறகு அது ஒருமுறை ஆழமாக சுவாசித்துவிட்டு, “என்னால் முடியும்! வாழைப்பழங்களே என் இலக்கு!” என்று கூறிக் கொண்டு முன்னோக்கிச் செல்லும். இதற்கு நேரெதிராக, அது பயத்தால் ஆட்கொள்ளப்படக்கூடும், அதன் தோள்கள் துவளும், அதன் வயிற்றில் ஒரு கலக்கம் தோன்றும், அதன் கால்கள் நடுங்கும், பிறகு “ஐயோ! ஒரு சிங்கம் வருகிறது! என்னைக் காப்பாற்றுங்கள்!” என்று அது கூச்சலிட்டுவிட்டுப் பின்வாங்கும். சில சமயங்களில் நிகழ்தகவுகள் சம அளவில் இணையாக இருக்கும். அப்போது தீர்மானிப்பது கடினமாகிவிடும். இதுவும் ஓர் உணர்வாக வெளிப்படும். அந்த பபூன் குழப்பமடையும், தீர்மானம் மேற்கொள்ள முடியாமல் தவிக்கும். “ஆமாம் . . . இல்லை . . . ஆமாம் . . . இல்லை . . . அடக் கடவுளே! என்ன செய்வதென்று எனக்குத் தெரியவில்லையே!” என்று அது தனக்குள்

அரற்றும்.

மரபணுக்களை அடுத்தத் தலைமுறைக்கு அனுப்புவதற்கு, வெறுமனே உயிர்வாழ்வுப் பிரச்சனைகளுக்குத் தீர்வு கண்டால் மட்டும் போதாது. விலங்குகள் தம்முடைய இனப்பெருக்கப் பிரச்சனைகளுக்கும் தீர்வு காண வேண்டியது அவசியம். இது நிகழ்தகவுகளைக் கணக்கிடுவதைச் சார்ந்துள்ளது. ஒன்று இனப்பெருக்கத்திற்கு சாதகமாக இருக்கிறதா இல்லையா என்பதை மதிப்பீடு செய்வதற்கான விரைவான படிமுறைத் தீர்வுகளாகத்தான் இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறையானது ஆசையையும் வெறுப்பையும் வளர்த்தெடுத்தது. அழகு என்றால் 'வெற்றிகரமான வாரிசை உருவாக்குவதற்கான நல்ல வாய்ப்புகள்' என்று பொருள். ஒரு பெண்மயில் ஓர் ஆண்மயிலைப் பார்த்து, "அடேயப்பா! எப்பேற்பட்டதொரு தோகை!" என்று நினைக்கும்போதும், ஒரு பெண் ஓர் ஆடவனைப் பார்த்து, "ஆஹா! என்னவொரு வசீகரமான தோற்றம்!" என்று நினைக்கும்போதும், ஒரு தானியங்கி இயந்திரம் செய்வதைப் போன்ற ஒன்றை அவர்கள் செய்கின்றனர். அந்த ஆணின் உடலிலிருந்து பிரதிபலிக்கும் ஒளி அப்பெண்ணின் விழித்திரைகள்மீது படும்போது, கோடிக்கணக்கான ஆண்டுகாலப் பரிணாம வளர்ச்சியால் செறிவூட்டப்பட்ட மிகவும் சக்திவாய்ந்த படிமுறைத் தீர்வுகள் முடுக்கிவிடப்படுகின்றன. ஒரு வினாடிக்கும் குறைவான நேரத்தில், அந்தப் படிமுறைத் தீர்வுகள், அந்த ஆணின் புறத்தோற்றத்தில் உள்ள சின்னஞ்சிறு குறிப்புகளை இனப்பெருக்கத்திற்கான நிகழ்தகவுகளாக மாற்றி, பின்வரும் முடிவுக்கு வருகின்றன: "அற்புதமான மரபணுக்களையும் வாரிசுகளை உருவாக்கவல்ல திறனையும் கொண்ட, மிகவும் ஆரோக்கியமான ஓர் ஆண் இவன். நான் இவனோடு புணர்ந்தால், என்னுடைய வாரிசு சிறந்த ஆரோக்கியத்தை அனுபவிப்பதற்கும் அற்புதமான மரபணுக்களை சுவீகரிப்பதற்குமான சாத்தியக்கூறு அதிகம் உள்ளது." இந்த முடிவு, வார்த்தைகளிலோ அல்லது எண்களிலோ வெளிப்படுத்தப்படுவதில்லை, மாறாக, தீவிரமான பாலியல் ஈர்ப்பில் அது வெளிப்படுத்தப்படுகிறது. பெண்மயில்களும் பெரும்பாலான பெண்களும் இப்படிப்பட்டக் கணக்கீடுகளை ஒரு பேனாவையும் காகிதத்தையும் கணிப்பானையும் கொண்டு கணக்கிடுவதில்லை. அவர்கள் வெறுமனே அவற்றை உணருகின்றனர்.



படம் **14:** ஓர் ஆண்மயிலும் ஓர் ஆண்மகனும். நீங்கள் இப்படங்களைப் பார்க்கும்போது, அவற்றின் விகிதாச்சாரங்கள், வண்ணங்கள், அளவுகள் ஆகியவற்றைப் பற்றிய தகவல்கள் உங்களுடைய உயிர்வேதிப் படிமுறைத் தீர்வுகளால் கையாளப்படுகின்றன. இதன் விளைவாக, நீங்கள் இப்படங்கள் குறித்து ஈர்ப்பையோ, எதிர்ப்பையோ, அல்லது அக்கறையின்மையையோ உணருகிறீர்கள்.

பொருளாதாரத்தில் நோபல் பரிசு பெற்றவர்கள்கூடத் தங்களுடைய தீர்மானங்களில் ஒரு சிறு பகுதியை மட்டுமே ஒரு பேனாவையும் காகிதத்தையும் கணிப்பானையும் கொண்டு மேற்கொள்ளுகின்றனர். வாழ்க்கைத்துணைவர், தொழில்வாழ்க்கை, வசிப்பிடம் போன்ற மிக முக்கியமான வாழ்க்கைத் தேர்ந்தெடுப்புகள் உட்பட, நம்முடைய 99 சதவீதத் தீர்மானங்கள், நாம் உணர்வுகள், உணர்ச்சிகள், ஆழ்விருப்பங்கள் என்று அழைக்கின்ற, மிகவும் மெருகூட்டப்பட்டப் படிமுறைத் தீர்வுகளால்தான் மேற்கொள்ளப்படுகின்றன.

இந்தப் படிமுறைத் தீர்வுகள் அனைத்துப் பாலூட்டிகளின் வாழ்க்கையையும் அனைத்துப் பறவைகளின் வாழ்க்கையையும் (ஊர்ந்து செல்லும் விலங்குகள் மற்றும் மீன் வகைகள் சிலவற்றின் வாழ்க்கையையும்கூட) கட்டுப்படுத்துவதால், மனிதர்களும் பபூன்களும் பன்றிகளும் பயத்தை உணரும்போது, இவற்றின் மூளைகளில் அதே குறிப்பிட்டப் பகுதிகளில் அதே குறிப்பிட்ட நரம்பியல்சார் செயல்முறைகள் நிகழுகின்றன. எனவே, பயந்து போயுள்ள மனிதர்களும், பயந்து போயுள்ள பபூன்களும், பயந்து போயுள்ள பன்றிகளும் ஒரே மாதிரியான விஷயங்களை அனுபவிக்கின்றன.

இவற்றின் அனுபவங்களுக்கு இடையே வேறுபாடுகளும் இருக்கின்றன. ஹோமோ சேப்பியன்ஸுகளுக்கே உரிய

பண்புநலன்களான அதீதப் பரிவுணர்வையும் அதீதக் கொடுமையுணர்வையும் பன்றிகள் அனுபவிப்பதில்லைபோலத் தெரிகிறது. இரவில் விண்மீன்களால் நிரம்பிய ஒரு வானத்தைப் பார்க்கும்போது மனிதர்களை ஆட்கொள்ளுகின்ற வியப்புணர்வும் அவற்றுக்கு இல்லை. இதற்கு நேரெதிரான எடுத்துக்காட்டுகளும் இருக்கக்கூடும். மனிதர்களுக்குப் பரிச்சயமில்லாத, பன்றிகளுக்கே உரிய உணர்ச்சிகள் அவை. ஆனால், அனைத்துப் பாலூட்டிகளிடமும் உள்ள ஒரு பொதுவான மைய உணர்ச்சி 'தாய்-சேய் பிணைப்பு.' தம்முடைய குட்டிகளை மிகவும் நேசிக்கின்ற பாலூட்டிகள், அக்குட்டிகள் தம்மிடமிருந்து பாலைச் சுவைக்க அனுமதிக்கின்றன. மறுபுறம், குட்டிகள் தம்முடைய அன்னையரோடு ஒரு பிணைப்பை ஏற்படுத்திக் கொள்ளுவதற்குப் பேரார்வம் கொண்டிருப்பதால், அவை தம்முடைய அன்னையருக்கு அருகிலேயே இருக்கின்றன. காட்டில், தம்முடைய அன்னையருடன் தம்மைப் பிணைத்துக் கொள்ளத் தவறுகின்ற பன்றிக்குட்டிகளும் கன்றுக்குட்டிகளும் நாய்க்குட்டிகளும் அரிதாகவே நீண்டகாலம் உயிர்வாழ்கின்றன. சமீபகாலம்வரை இது மனிதக் குழந்தைகளின் விஷயத்திலும் உண்மையாக இருந்தது. இதற்குத் தலைகீழாக, ஏதோ அரிய மரபுச்சிதைவு மாற்றத்தின் காரணமாகத் தம்முடைய குட்டிகள்மீது அக்கறை காட்டாத ஒரு பெண் பன்றியோ, ஒரு பசுவோ, அல்லது ஒரு பெட்டை நாயோ ஒரு சௌகரியமான, நீண்ட வாழ்க்கையை வாழக்கூடும், ஆனால் அவற்றின் மரபணுக்கள் அடுத்தத் தலைமுறையைச் சென்றடையாது. இதே தருக்கவாதம் ஒட்டகச்சிவிங்கிகள், வௌவால்கள், திமிங்கலங்கள், முள்ளம்பன்றிகள் ஆகியவற்றுக்கும் பொருந்தும். நாம் பிற உணர்ச்சிகளைப் பற்றியும் விவாதிக்கலாம், ஆனால் தம்முடைய தாயின் அக்கறையுடன்கூடிய கவனிப்பு இல்லாமல் இளம் பாலூட்டிகளால் உயிர்வாழ முடியாது என்பதால், தாயின் அன்பும் ஒரு வலிமையான 'தாய்-சேய்' பிணைப்பும் அனைத்துப் பாலூட்டிகளிடமும் உள்ள முக்கியப் பண்புநலன்கள் என்பது வெளிப்படையாகத் தெரிகிறது.

இந்த உண்மையை அங்கீகரிப்பதற்கு அறிவியலறிஞர்களுக்குப் பல ஆண்டுகள் ஆயின. மனிதர்களிடையேகூடப் பெற்றோருக்கும் குழந்தைகளுக்கும் இடையேயான உணர்ச்சிரீதியான பிணைப்பின் முக்கியத்துவத்தை வெகுசில ஆண்டுகளுக்கு முன்புவரைகூட உளவியலாளர்கள் சந்தேகித்தனர். இருபதாம் நூற்றாண்டின் முதற்பாதியில், சிக்மன்டு ஃபிராய்டின் கோட்பாடுகள் மக்கள்மீது குறிப்பிடத்தக்கத் தாக்கம் ஏற்படுத்தியிருந்தும்கூட, பெற்றோருக்கும் குழந்தைகளுக்கும் இடையேயான உறவுகள் பௌதிகத் தேவைகளால்

வடிவமைக்கப்பட்டதாக நடத்தையியல் வல்லுநர்கள் வாதிட்டனர். குழந்தைகளுக்கு முக்கியமாக உணவும் உறைவிடமும் மருத்துவ கவனிப்பும் தேவையாக இருந்தது என்றும், இத்தேவைகளை அவர்களுடைய பெற்றோர்கள் நிறைவேற்றுவதால்தான் அக்குழந்தைகள் தங்களுடைய பெற்றோருடன் ஒரு பிணைப்பை உருவாக்கிக் கொண்டனர் என்றும் அந்த வல்லுநர்கள் கூறினர். அரவணைப்பையும் முத்தங்களையும் எதிர்பார்த்தக் குழந்தைகள் சரியாக வளர்க்கப்படவில்லை என்ற விமர்சனம் எழுந்தது. பெற்றோர்களிடமிருந்து அரவணைப்பையும் முத்தங்களையும் பெற்று வளரும் குழந்தைகள், அகங்காரம் கொண்டவர்களாகவும், பாதுகாப்புணர்வு இல்லாதவர்களாகவும், உணர்ச்சிரீதியான ஆதரவை எதிர்பார்ப்பவர்களாகவும் வளருவர் என்று குழந்தை வளர்ப்பு வல்லுநர்கள் எச்சரித்தனர்.

1920களில், குழந்தை வளர்ப்பு விஷயத்தில் ஒரு முன்னணி ஆய்வாளராகத் திகழ்ந்த ஜான் வாட்சன், பெற்றோர்களுக்கு இவ்வாறு கடுமையாக அறிவுறுத்தினார்: "உங்கள் குழந்தைகளை ஒருபோதும் கட்டிப் பிடித்து முத்தம் கொடுக்காதீர்கள். அவர்கள் உங்கள் மடியில் உட்கார ஒருபோதும் அனுமதிக்காதீர்கள். அவர்களுக்கு முத்தம் கொடுத்தே ஆக வேண்டும் என்றால், இரவில் அவர்கள் படுக்கப் போவதற்கு முன்பாக அவர்களுடைய நெற்றியில் ஒரே ஒரு முறை முத்தமிடுங்கள். காலையில் அவர்களோடு கை குலுக்குங்கள்." ஒழுங்கைக் கடைபிடிப்பதும் குழந்தைகளுக்குத் தேவையான பௌதிகப் பொருட்களை ஒரு தினசரி அட்டவணைப்படி அவர்களுக்குக் கொடுப்பதும்தான் குழந்தை வளர்ப்பின் ரகசியம் என்று 'இன்ஃபன்ட் கேர்' என்ற பிரபல பத்திரிகை கூறியது. 1929ம் ஆண்டில் அப்பத்திரிகையில் வெளிவந்த ஒரு கட்டுரையில் பெற்றோருக்கு இவ்வாறு அறிவுறுத்தப்பட்டிருந்தது: "ஒரு கைக்குழந்தை தனக்குரிய உணவு நேரத்திற்கு முன்பாகவே சாப்பாட்டிற்காக அழுதால், அவனுடைய அழுகையை நிறுத்துவதற்காக அவனைத் தூக்கி வைத்துக் கொள்ளாதீர்கள், உங்கள் தோள்மீது போட்டுத் தட்டிக் கொடுக்காதீர்கள். அவனுக்கு உணவூட்டுவதற்கான நேரம் வரும்வரை அவனுக்குத் தாய்ப்பால் கொடுக்காதீர்கள். அழுவது சின்னஞ்சிறு குழந்தைகள் உட்பட எந்தக் குழந்தைக்கும் எந்த விதத்திலும் தீங்கிழைக்காது."

இந்தக் கடுமையான நடத்தைக் கோட்பாடுகள் ஒட்டுமொத்தமாகக் கைவிடப்பட வேண்டும் என்றும், உணர்ச்சித் தேவைகளின் மைய முக்கியத்துவம் அங்கீகரிக்கப்பட வேண்டும் என்றும் 1950கள் மற்றும்

1960களில்தான் வல்லுநர்களிடையே கருத்து ஒற்றுமை அதிகரிக்கத் தொடங்கியது. உளவியலாளரான ஹாரி ஹார்லோ, குரங்குகளை வைத்துப் பல தொடர்ச்சியான பரிசோதனைகளை மேற்கொண்டார். அப்பரிசோதனைகள் பிரபலமடைந்தபோதிலும், அதிர்ச்சியூட்டும் அளவுக்கு அவை கொடுமையானவையாக இருந்தன. பிறந்து ஒருசில நாட்களே ஆன குரங்குக் குட்டிகளை அவர் அவற்றின் அன்னையரிடமிருந்து பிரித்து, சிறு கூண்டுகளில் அடைத்து வைத்தார். ஒவ்வொரு கூண்டிலும் இரண்டு பொம்மைக் குரங்குகள் வைக்கப்பட்டிருந்தன. ஒரு பொம்மை உலோகத்தால் ஆனது. ஆனால் அதனோடு ஒரு பால் பாட்டில் பொருத்தப்பட்டிருந்தது. இன்னொரு பொம்மை மரத்தால் செய்யப்பட்டு, ஒரு மென்மையான துணியால் மூடப்பட்டிருந்தது. அதனோடு பால் பாட்டில் எதுவும் பொருத்தப்படவில்லை. இவற்றில் எதை அந்தக் குரங்குக் குட்டிகள் தேர்ந்தெடுத்தன என்று அவர் ஆய்வு செய்தபோது, மென்மையான துணி போர்த்தப்பட்டிருந்த பொம்மையையே அவை இறுகப் பிடித்துக் கொண்டிருந்ததை அவர் கண்டார்.

ஜான் வாட்சனும் 'இன்ஃபன்ட் கேர்' பத்திரிகையின் வல்லுநர்களும் உணரத் தவறியிருந்த ஒரு விஷயத்தை அந்தக் குட்டிக் குரங்குகள் அறிந்திருந்தன: பாலூட்டிகள் உயிர்வாழுவதற்கு வெறும் உணவு மட்டும் போதாது. அவற்றுக்கு உணர்ச்சிமயமான பிணைப்புகளும் தேவை. அந்தப் பிணைப்புக்கான ஓர் ஆழ்விருப்பத்தைப் பல லட்சக்கணக்கான ஆண்டுகாலப் பரிணாம வளர்ச்சி அக்குரங்களுக்குள் பதிய வைத்திருந்தது. அதோடு, மென்மையான மற்றும் ரோமத்துடன்கூடிய

பொருட்களோடுதான் அத்தகைய பிணைப்புகள் உருவாக முடியும், உலோகத்தாலான கடினமான பொருட்களுடன் அல்ல என்ற அனுமானத்தையும் பரிணாம வளர்ச்சி அக்குரங்குகளுக்குள் ஆழமாகப் பதிய வைத்திருந்தது. (அதனால்தான் மனிதக் குழந்தைகள்கூடப் பாத்திரங்கள், கற்கள், அல்லது மரத்தாலான பொருட்களைவிட, மிருதுவான பொம்மைகள், போர்வைகள், அழுக்குத் துணிகள் ஆகியவற்றோடு அதிகப் பிணைப்புக் கொள்ளுகின்றனர்.) ஹார்லோவின் பரிசோதனைகளில் பயன்படுத்தப்பட்டக் குட்டிக் குரங்குகள், பால் கொடுத்த உலோக பொம்மையை உதாசீனப்படுத்திவிட்டு, அந்த உணர்ச்சிமயமான தேவையை நிறைவேற்றவல்லதுபோலத் தோன்றிய, துணியால் மூடப்பட்ட பொம்மையின்மீது கவனம் செலுத்தின. உணர்ச்சிமயமான பிணைப்புகளுக்கான தேவை அக்குட்டிகளிடம் அவ்வளவு வலிமையாக

இருந்தது. துணியால் மூடப்பட்ட பொம்மை அக்குட்டிகள் காட்டிய பாசத்திற்கு ஒருபோதும் செயல்விடை அளிக்காததால், அக்குட்டிகள் தீவிர உளவியல் பிரச்சனைகளாலும் சமூகப் பிரச்சனைகளாலும் துன்புற்றன. இறுதியில், அவை மனநோய்க்கு ஆளாகி, கூடி வாழ விருப்பமற்றவையாகவும் மற்றவர்களிடம் வெறுப்போடு நடந்து கொள்ளுபவையாகவும் வளர்ந்தன.

இருபதாம் நூற்றாண்டின் துவக்கத்தில் குழந்தை வளர்ப்பு தொடர்பாக வழங்கப்பட்ட அறிவுரையை இப்போது நாம் திரும்பிப் பார்க்கும்போது, அதை நம்மால் புரிந்து கொள்ள முடிவதில்லை. “குழந்தைகளுக்கு உணர்ச்சித் தேவைகள் உள்ளன என்பதை உணர்ந்து கொள்ள அந்த வல்லுநர்கள் எப்படித் தவறினர்? குழந்தைகளின் மன ஆரோக்கியமும் உடல் ஆரோக்கியமும் உணவையும் உறைவிடத்தையும் மருந்துகளையும் எந்த அளவுக்குச் சார்ந்திருக்கிறதோ, அந்த அளவுக்கு அது அவர்களுடைய உணர்ச்சித் தேவைகளையும் சார்ந்திருக்கிறது என்பதை அந்த வல்லுநர்கள் ஏன் புரிந்து கொள்ளவில்லை?” போன்ற கேள்விகள் நம்முள் எழுகின்றன. ஆனால், பிற பாலூட்டிகளின் விஷயத்தில் நாம் இதைத் தொடர்ந்து மறுக்கிறோம். ஜான் வாட்சனையும் இன்ஃபன்ட் கேர் வல்லுநர்களையும்போல, வரலாறு நெடுகிலும் விவசாயிகளும் பன்றிக்குட்டிகள், கன்றுக்குட்டிகள், குழந்தைகள் ஆகியோரின் அடிப்படை பௌதிகத் தேவைகளை நிறைவேற்றி வந்துள்ளபோதிலும் அவர்களுடைய உணர்ச்சித் தேவைகளை உதாசீனப்படுத்தினர். எனவே, இறைச்சித் தொழிற்துறையும் பால்பண்ணைத் தொழிற்துறையும், பாலூட்டிகளின் ராஜ்ஜியத்தில் உள்ள மிகவும் அடிப்படையான உணர்ச்சிமயமான பிணைப்பை அறுத்தெறிவதை வெகுவாகச் சார்ந்துள்ளன. விவசாயிகள் தங்களுடைய பெண் பன்றிகளையும் பசுக்களையும் மீண்டும் மீண்டும் சினைப்படுத்துகின்றனர். ஆனால், பன்றிக்குட்டிகளும் கன்றுக்குட்டிகளும் பிறந்து வெகுசில நாட்களில் தம்முடைய அன்னையரிடமிருந்து பிரிக்கப்பட்டுவிடுகின்றன. அவை ஒவ்வொரு நாளையும் தம்முடைய அன்னையரிடம் பால் குடிக்காமலும் அவற்றின் நாக்கு மற்றும் உடலின் கதகதப்பை உணராமலுமே கழிக்கின்றன. ஒருசில குரங்குக் குட்டிகளுக்கு ஹார்லோ எதைச் செய்தாரோ, அதை அந்த இறைச்சித் தொழிற்துறையும் பால்பண்ணைத் தொழிற்துறையும் ஒவ்வோர் ஆண்டும் கோடிக்கணக்கான விலங்குகளுக்குச் செய்கின்றன.

## வேளாண் ஒப்பந்தம்

விவசாயிகள் தங்களுடைய இந்த நடத்தையை எவ்வாறு நியாயப்படுத்தினர்? சூழல் மண்டலத்தின்மீது தாங்கள் ஏற்படுத்திக் கொண்டிருந்த பாதிப்பு நம்முடைய பண்டைய வேட்டையாடிகளுக்கு வேண்டுமானால் தெரியாமல் இருந்திருக்கலாம், ஆனால் தாங்கள் என்ன செய்து கொண்டிருந்தோம் என்பதை விவசாயிகள் நன்றாகவே அறிந்திருந்தனர். பண்ணை விலங்குகளைத் தாங்கள் தங்களுக்கு சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டிருந்தோம் என்பதையும், மனிதர்களுடைய ஆசைகளுக்கும் விருப்பங்களுக்கும் அவற்றை அடிபணிய வைத்துக் கொண்டிருந்தோம் என்பதையும் அவர்கள் அறிந்திருந்தனர். தங்களுடைய இந்த நடவடிக்கைகளை, வேளாண் புரட்சிக்குப் பிறகு தோன்றி உலகெங்கும் வேகமாகப் பரவிய புதிய ஆத்திகவாத மதங்களின் பெயரில் அவர்கள் நியாயப்படுத்தினர். பிரபஞ்சம் என்பது உயிரினங்களை உள்ளடக்கிய ஒரு பாராளுமன்றம் அல்ல என்றும், மாபெரும் கடவுளரோ அல்லது ஒரு தனிப்பெரும் கடவுளோ ஆண்ட ஒரு சமயச் சார்பு ஆட்சி அது என்றும் ஆத்திகவாத மதங்கள் வாதிடத் தொடங்கின. இந்த யோசனையை நாம் பொதுவாக வேளாண்மையோடு தொடர்புபடுத்துவதில்லை. ஆனால் துவக்கத்தில் இந்த ஆத்திக மதங்கள் அனைத்தும் ஒரு வேளாண் அமைப்பாகவே இருந்தன. யூத மதம், இந்து மதம், கிறித்தவ மதம் போன்ற மதங்களின் இறையியலும் தொன்மவியலும் பொது வழிபாடுகளும் துவக்கத்தில் மனிதர்களுக்கும் பண்ணை விலங்குகளுக்கும் இடையேயான உறவின்மீதுதான் மையம் கொண்டிருந்தன.

எடுத்துக்காட்டாக, பைபிள் சார்ந்த யூத மதம் விவசாயிகளுக்கும் இடையர்களுக்கும் சேவை செய்தது. அதன் பல கட்டளைகள் விவசாயம் மற்றும் கிராம வாழ்க்கை தொடர்புடையவையாக இருந்தன. அறுவடை விழாக்கள்தான் அந்த மதத்தின் முக்கிய விடுமுறைகளாக இருந்தன. ஜெரூசலம் நகரில் இருந்த பண்டைய கோவிலை ஒரு பெரிய யூதக்கோவில் என்றும், பனி போன்ற வெண்ணிற அங்கிகளை அணிந்து கொண்டு அங்கு வலம் வந்த குருமார்கள் மிகுந்த அர்ப்பணிப்புக் கொண்ட புனிதப் பயணியரை அக்கோவிலுக்குள் வரவேற்றனர் என்றும், இனிமையான பாடல் குழுவினர் இறைவனை வாழ்த்திப் பாடினர் என்றும், நறுமணப் பத்திகளின் மணம் காற்றை ஊடுருவிப் பரவியது என்றும் மக்கள் இன்று கற்பனை செய்கின்றனர். ஆனால் யதார்த்தத்தில், அது ஓர் இறைச்சிக்கூடமும் ஓர் அசைவ உணவகமும் சேர்ந்து பெற்றுக் கொண்ட ஒரு குழந்தைபோலத் தோன்றியது. புனிதப் பயணியர் வெறுங்கைகளோடு அங்கு வரவில்லை. செம்மறியாடுகள், ஆடுகள், கோழிகள், மற்றும் பிற விலங்குகளை அவர்கள் தொடர்ந்து

கொண்டுவந்து கொண்டே இருந்தனர். அவை இறைவனின் பலிபீடத்தில் பலி கொடுக்கப்பட்டன, பிறகு எல்லோரும் அவற்றைச் சமைத்து உட்கொண்டனர். அந்த ஆட்டுக்குட்டிகளின் கதறல்கள் மற்றும் குழந்தைகளின் அலறல் சத்தங்களில், அங்கிருந்த பாடற்குழுவினர் பாடிய இறைப்பாடல்கள் யாருடைய காதுகளிலும் விழவில்லை. ரத்தம் தோய்ந்த ஆடைகளை அணிந்திருந்த குருமார்கள், அந்த பலிகடாக்களின் கழுத்துக்களை வெட்டி, அவற்றிலிருந்து பீறிட்டு வெளிவந்த ரத்தத்தைக் குடுவைகளில் சேகரித்து, அந்த பலிபீடத்தின்மீது தெளித்தனர். ஊதுபத்திகளின் வாசனை, உறைந்து போன ரத்தம் மற்றும் வறுக்கப்பட்ட இறைச்சியின் வாசனைகளோடு கலந்தது. ஈக்கள் கூட்டங்கூட்டமாக எல்லா இடங்களிலும் பறந்து திரிந்தன. யூதக் கோவில் ஒன்றில் மறைநூல்களைப் படிப்பதில் நேரத்தைச் செலவிடுகின்ற ஒரு பாரம்பரியமான யூதக் குடும்பத்தைவிட, தங்கள் வீட்டின் முன்முற்றத்தில் திறந்த வெளியில் இறைச்சி உணவைச் சமைத்துக் கொண்டு வார இறுதி விடுமுறையைக் கொண்டாடுகின்ற ஒரு நவீன யூதக் குடும்பம் அதிக ஆழ்ந்த இறைநம்பிக்கை கொண்டதாக இருக்கிறது என்று கூறலாம்.

பைபிள் சார்ந்த யூதமதம் போன்ற ஆத்திகவாத மதங்கள் புதிய பிரபஞ்சக் கற்பனைக் கதைகள் மூலம் வேளாண் பொருளாதாரத்தை நியாயப்படுத்துகின்றன. முன்பு, பல்வேறு நிறங்களுடன்கூடிய எண்ணற்ற நடிகர்களைக் கொண்ட ஒரு பிரம்மாண்டமான சீன இசை நிகழ்ச்சியாக ஆன்மவாத மதங்கள் இப்பிரபஞ்சத்தைச் சித்தரித்திருந்தன. யானைகள் மற்றும் கருவாலி மரங்கள், முதலைகள் மற்றும் ஆறுகள், மலைகள் மற்றும் தவளைகள், பேய்கள் மற்றும் தேவதைகள், தேவதூதர்கள் மற்றும் அரக்கர்கள் என்று ஒவ்வொவரும் அந்தப் பிரபஞ்ச இசை நிகழ்ச்சியில் ஒரு குறிப்பிட்டப் பாத்திரத்தை வகித்தனர். ஆத்திக மதங்கள் அந்தக் கதையைத் திருத்தி எழுதி, கடவுள், மனிதன் ஆகிய இரண்டு முக்கியக் கதாபாத்திரங்களை மட்டுமே கொண்ட, மனச்சோர்வையும் சலிப்பையும் ஏற்படுத்தக்கூடிய வகையான ஒரு நாடகமாக இப்பிரஞ்சத்தை மாற்றின. இந்த மாற்றத்தை தேவதூதர்களும் அரக்கர்களும் எப்படியோ சமாளித்துவிட்டனர். பிறகு அவர்கள் மாபெரும் கடவுளரின் தூதர்களாகவும் சேவகர்களாகவும் ஆயினர். ஆனால், பிற ஆன்மவாதக் கதாபாத்திரங்கள் (விலங்குகள், தாவரங்கள், மற்றும் பிற இயற்கை நிகழ்வுகள்) ஊமை அலங்காரங்களாக மாற்றப்பட்டன. சில விலங்குகள் ஏதோ ஒரு குறிப்பிட்டக் கடவுளுக்குப் புனிதமானவையாகக் கருதப்பட்டன. பல கடவுளருக்கு விலங்குகளின் அம்சங்கள் இருந்தன. அனுபிஸ் என்ற

எகிப்தியக் கடவுள் ஒரு நரியின் தலையைக் கொண்டிருந்தார். ஏசு கிறிஸ்துகூடப் பல சமயங்களில் ஒரு செம்மறியாட்டுக் குட்டியாகச் சித்தரிக்கப்பட்டார். ஆனால், கோழிக்குஞ்சுகளை வேட்டையாடுவதற்காக ஏதேனும் ஒரு கிராமத்தினுள் நுழைகின்ற ஒரு சாதாரண நரிக்கும் அனுபிஸுக்கும் இடையேயான வேறுபாட்டை எகிப்தியர்களால் சுலபமாகக் கூற முடிந்தது. அதேபோல, எந்தவொரு கிறித்தவக் கசாப்புக்கடைக்காரரும் தன் வெட்டரிவாளின் கீழே கிடந்த செம்மறியாட்டை ஏசு கிறிஸ்து என்று தவறாகப் புரிந்து கொள்ளவில்லை.

ஆத்திக மதங்கள் மாபெரும் கடவுளரைப் புனிதர்களாக ஆக்கியதாக நாம் பொதுவாக நினைக்கிறோம். அவை மனிதர்களையும் புனிதர்களாக ஆக்கின என்பதை நாம் மறந்துவிடுகிறோம். இந்நேரம்வரை ஹோமோ சேப்பியன்ஸ் இனம் ஆயிரக்கணக்கான நடிகர்களில் ஒருவராக மட்டுமே இருந்து வந்திருந்தது. இப்புதிய ஆத்திக நாடகத்தில் சேப்பியன்ஸ் இனம் மையக் கதாநாயகனாக ஆகியது, ஒட்டுமொத்தப் பிரபஞ்சமும் அதைச் சுற்றி இயங்கத் தொடங்கியது.

இதற்கிடையே, ஒன்றுக்கொன்று தொடர்புடைய இரண்டு கதாபாத்திரங்களை ஏற்று நடிக்கும் வாய்ப்பு கடவுளருக்குக் கொடுக்கப்பட்டது. முதலில், சேப்பியன்ஸ் பற்றி அப்படி என்ன தனிச்சிறப்பு இருக்கிறது என்பதையும், மனிதர்கள் ஏன் மற்ற அனைத்து உயிரினங்கள்மீதும் ஆதிக்கம் செலுத்தி அவற்றைத் தங்களுடைய நலனுக்காகப் பயன்படுத்த வேண்டும் என்பதையும் அந்த மதங்கள் விளக்கின. எடுத்துக்காட்டாக, மனிதர்கள் ஏனைய படைப்புகள்மீது ஆதிக்கம் செலுத்துவதற்குக் காரணம், கடவுள் அவர்களுக்கு அந்த அதிகாரத்தைக் கொடுத்ததுதான் என்று கிறித்தவ மதம் கூறியது. மேலும், ஒரு நிரந்தரமான ஆன்மாவை மனிதர்களுக்கு மட்டுமே அவர் கொடுத்தார் என்றும் அது முழங்கியது. இந்த நிரந்தரமான ஆன்மாவின் தலையெழுத்துதான் ஒட்டுமொத்தக் கிறித்தவப் பிரபஞ்சத்தின் மையமாக இருப்பதாலும், விலங்குகளுக்கு ஆன்மா எதுவும் இல்லை என்பதாலும், அவை வெறும் உதிரிகளாக இருக்கின்றன. இவ்விதத்தில், மனிதர்கள் படைப்பின் உச்சமாக ஆயினர், பிற உயிரினங்கள் உதாசீனப்படுத்தப்பட்டன.

இரண்டாவதாக, கடவுளர் மனிதர்களுக்கும் சூழல் மண்டலத்திற்கும் இடையே பேச்சுவார்த்தை நடத்த வேண்டியிருந்தது. ஆன்மவாதப் பிரபஞ்சத்தில் ஒவ்வொருவரும் மற்றவருடன் நேரடியாகப் பேசினர். ரெயின்டீர் மான்கள், அத்தி மரங்கள், மேகங்கள் அல்லது பாறைகளிடமிருந்து உங்களுக்கு ஏதேனும் வேண்டியிருந்தபோது,

நீங்கள் அவற்றுடன் நேரடியாகப் பேசினீர்கள். ஆனால், ஆத்திகவாதப் பிரபஞ்சத்தில் மனிதர்கள் அல்லாத அனைத்தின் வாய்களும் கட்டிப் போடப்பட்டன. அதன் விளைவாக, மரங்களோடும் விலங்குகளோடும் உங்களால் பேச முடியவில்லை. அப்படியானால், மரங்கள் அதிகமான பழங்களைக் கொடுக்க வேண்டும் என்றோ, பசுக்கள் அதிகமாகப் பால் கொடுக்க வேண்டும் என்றோ, மேகங்கள் அதிகமான மழையைக் கொண்டுவர வேண்டும் என்றோ, அல்லது பெரிய வெட்டுக்கிளிகள் உங்களுடைய பயிர்களை நெருங்காமல் இருக்க வேண்டும் என்றோ நீங்கள் விரும்பியபோது நீங்கள் உங்கள் கைகளைப் பிசைந்து கொண்டிருந்தீர்கள். இங்குதான் கடவுளர் தலையிட்டனர். தாங்கள் உங்களுக்கு மழையையும் செழிப்பையும் பாதுகாப்பையும் வழங்குவதாக அவர்கள் வாக்குக் கொடுத்தனர். ஆனால், பதிலுக்கு மனிதர்களிடமிருந்து அவர்கள் ஏதோ ஒன்றை எதிர்பார்த்தனர். வேளாண் ஒப்பந்தத்தின் சாரம் இதுதான். கடவுளர் மனிதர்களுடைய பயிர்களையும் பண்ணைகளையும் பாதுகாத்து உற்பத்தியைப் பெருக்கினர். இதற்குக் கைமாறாக, மனிதர்கள் தாங்கள் உற்பத்தி செய்தவற்றைக் கடவுளருடன் பகிர்ந்து கொள்ள வேண்டியிருந்தது. இந்த ஒப்பந்தம் இருதரப்பினருக்கும் நன்மை பயத்தது. ஆனால் இதன் காரணமாக, ஏனைய சூழல் மண்டலம் பெரும் பாதிப்புக்கு உள்ளானது.

நேபாளத்தில் இன்று கதிமாயி என்ற பெண்கடவுளின் பக்தர்கள் அவருடைய திருவிழாவை ஐந்து ஆண்டுகளுக்கு ஒருமுறை பரியாபூர் என்ற கிராமத்தில் கொண்டாடுகின்றனர். 2009ல் 2,50,000 விலங்குகள் அக்கடவுளுக்கு பலி கொடுக்கப்பட்டு ஒரு 'சாதனை' நிகழ்த்தப்பட்டது. அங்கு வருகை தந்திருந்த ஆங்கிலேயப் பத்திரிகையாளர் ஒருவரிடம் உள்ளூர் வாடகைக் கார் ஓட்டுநர் ஒருவர், "நாம் ஏதேனும் ஒன்றை விரும்பியிருந்து, இங்கு வந்து இக்கடவுளுக்கு ஏதேனும் காணிக்கையைச் செலுத்தினால், ஐந்து ஆண்டுகளுக்குள் நம்முடைய விருப்பம் நிறைவேற்றப்படும்," என்று கூறினார்.

ஆத்திகத் தொன்மவியலின் பெரும்பகுதி இந்த ஒப்பந்தத்தின் நுண்ணிய விபரங்களை விளக்குகிறது. உலகை அழிப்பதற்காகக் கடவுளர் ஒரு மாபெரும் வெள்ளத்தை அனுப்பி வைத்தபோது, கிட்டத்தட்ட அனைத்து மனிதர்களும் விலங்குகளும் அழிந்து போனதை மெசபொட்டேமிய கில்காமெஷ் காப்பியம் நினைவுகூருகிறது. அந்த அழிவுக்குப் பிறகுதான், தங்களுக்குக் காணிக்கைகளைக் கொண்டுவந்து கொடுப்பதற்கு யாருமே எஞ்சவில்லை என்பதை அந்த அவசரக்காரக் கடவுளர் உணர்ந்தனர். பசியாலும் மனச்சோர்வாலும் அவர்களுடைய மனநிலை பாதிக்கப்பட்டது. அதிர்ஷ்டவசமாக, 'என்கி' என்ற கடவுளின்

முன்னோக்கிப் பார்க்கும் திறனால் ஒரே ஒரு மனிதக் குடும்பம் அந்த வெள்ளத்திலிருந்து தப்பியது. அக்குடும்பத்தைச் சேர்ந்த உத்னபிஷ்டிம் என்ற தன்னுடைய பக்தனுக்கு அக்கடவுள் இவ்வாறு அறிவுறுத்தினார்: "நீ உன்னுடைய உறவினர்களையும் விலங்குகளையும் அழைத்துக் கொண்டு, மரத்தாலான ஒரு பெரிய கப்பலில் தஞ்சம் புகுந்து கொள்." அந்தப் பெருவெள்ளம் வடிந்து, இந்த மெசபொட்டேமிய நோவா தன்னுடைய கப்பலைவிட்டு வெளியே வந்தபோது, அவன் முதலில் செய்த விஷயம், ஒருசில விலங்குகளைக் கடவுளருக்கு பலி கொடுத்ததுதான். அதைக் கேள்விப்பட்ட மாபெரும் கடவுளர் அந்த இடத்திற்கு விரைந்தனர். இந்தப் பெருவெள்ளத்தைப் பற்றி பைபிளில் எழுதப்பட்டுள்ள கதையில் (மெசபொட்டேமியர்கள் இந்நிகழ்வைப் பற்றி எழுதிய 1,000 ஆண்டுகளுக்குப் பிறகு பிரபலமடைந்த கதை) பின்வருமாறு கூறப்பட்டுள்ளது: "நோவா கடவுளுக்காக ஒரு பலிபீடத்தை உருவாக்கி, தன்னுடைய சுத்தமான விலங்குகள் மற்றும் பறவைகள் சிலவற்றை அங்கு கூட்டிச் சென்று, அவற்றை எரித்து, அதை அவர் அக்கடவுளுக்குக் காணிக்கையாக வழங்கினார். அந்த இனிய நறுமணத்தை முகர்ந்த கடவுள், 'மனிதர்களின் காரணமாக பூமியை இனி நான் ஒருபோதும் சபிக்கப் போவதில்லை,' என்று தன் இதயத்தினுள் கூறிக் கொண்டார்."

இந்தப் பெருவெள்ளக் கதைதான் வேளாண் உலகின் அடிப்படைக் கட்டுக்கதையாக மாறியது. ஒரு நவீனச் சுற்றுச்சூழல்வாதச் சாயத்தை நம்மால் அதன்மீது பூச முடியும். நம்முடைய நடவடிக்கைகள் இந்த ஒட்டுமொத்தச் சூழல் மண்டலத்தையும் சீரழித்துவிடக்கூடும் என்றும், ஏனைய படைப்புகளைப் பாதுகாக்கும் பொறுப்பு மனிதர்களிடம் தெய்விகமான வழியில் ஒப்படைக்கப்பட்டுள்ளது என்றும் அந்தப் பெருவெள்ளம் நமக்குக் கற்றுக் கொடுக்கிறது. ஆனால், பாரம்பரிய அர்த்தப்படுத்தல்களோ, மனிதர்கள்தான் மேன்மைத்துவம் வாய்ந்தவர்கள் என்பதற்கும் விலங்குகள் மதிப்பற்றவை என்பதற்குமான சாட்சியம்தான் இந்தப் பெருவெள்ளம் என்று கருதின. இந்த அர்த்தப்படுத்தல்களின்படி, ஒட்டுமொத்தச் சூழல் மண்டலத்தைக் காக்கும்படி நோவாவிற்கு அறிவுறுத்தப்பட்டது கடவுளர் மற்றும் மனிதர்களின் பொதுவான நலனுக்காகத்தானே அன்றி, விலங்குகளின் நலனுக்காக அல்ல. மேலும், மனிதர்கள் அல்லாத உயிரினங்களுக்கு உள்ளார்ந்த மதிப்பு எதுவும் இல்லை என்றும், அவை உயிரோடு இருப்பதே நமக்காகத்தான் என்றும் அவை வலியுறுத்தின.

"மனிதகுலத்தின் தீய குணம் மிகவும் தீவிரமடைந்ததைக் கடவுள் கண்டபோது, 'நான் உருவாக்கியுள்ள இந்த மனிதகுலத்தை இந்த

பூமியிலிருந்து ஒட்டுமொத்தமாகத் துடைத்தெறியப் போகிறேன். அவர்களோடு சேர்த்து, விலங்குகளையும் பறவைகளையும் நிலத்தின்மீது ஊர்ந்து செல்லுபவற்றையும் நான் பூண்டோடு அழிக்கப் போகிறேன். ஏனெனில், இந்த மனிதர்களைப் படைத்துள்ளது குறித்து நான் மிகவும் வருந்துகிறேன்,' என்று தனக்குத் தானே கூறிக் கொண்டார்," என்று பைபிளில் கூறப்பட்டுள்ளது. மனிதர்கள் முறைதவறி நடந்து கொண்டால் ஒட்டகச்சிவிங்கிகளும் கூழைக்கடாக்களும் வண்டுகளும் தம்முடைய வாழ்வின் நோக்கத்தை இழந்துவிடும் என்பதுபோல நினைக்கின்ற பைபிள், ஹோமோ சேப்பியன்ஸின் குற்றங்களுக்கான தண்டனையாக அனைத்து விலங்குகளையும் அழிப்பது சரிதான் என்று கருதுகிறது. ஆனால், ஹோமோ சேப்பியன்ஸைப் படைத்தது குறித்துப் பின்வருத்தம் கொண்டு, பாவிகளான இந்த மனிதக்குரங்கினத்தை இந்த பூமியிலிருந்து ஒட்டுமொத்தமாக அழித்துவிட்டு, பிறகு நெருப்புக்கோழிகள், கங்காருக்கள் மற்றும் பாண்டா கரடிகளின் சேட்டைகளைக் கண்டுகளித்தபடி கடவுள் தன் நேரத்தைக் கழிப்பது போன்ற ஒரு நிகழ்வோட்டத்தை ஏனோ பைபிளால் கற்பனை செய்ய முடியவில்லை.

ஆனாலும், விலங்குகளுக்கு நன்மை பயக்கும் வகையான சில நம்பிக்கைகளையும் இந்த ஆத்திகவாத மதங்கள் கொண்டுள்ளன. விலங்கு ராஜ்ஜியத்தின்மீது ஆதிக்கம் செலுத்துவதற்கான அதிகாரத்தைக் கடவுள் மனிதர்களுக்குக் கொடுத்தார் என்றும், ஆனால் இந்த அதிகாரத்தோடு சில பொறுப்புகளும் உடன் வந்தன என்றும் அம்மதங்கள் கூறின. எடுத்துக்காட்டாக, யூதர்களின் வாராந்திர ஓய்வு நாளான 'சபாத்' நாளன்று பண்ணை விலங்குகளுக்கு ஓய்வு கொடுக்கப்பட வேண்டும் என்றும், அவை தேவையற்றத் துன்பத்திற்கு ஆளாவது தவிர்க்கப்பட வேண்டும் என்றும் யூதர்களுக்குக் கட்டளையிடப்பட்டது. (ஆனால், மனித நலன்களுக்கும் விலங்குகளின் நலன்களுக்கும் இடையே ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டிய ஒரு சூழ்நிலை எழுந்தபோதெல்லாம், மனித நலன்களே எப்போதும் வெற்றி பெற்றன.)

யூத மறைநூலான தல்மூதில் இடம்பெற்றுள்ள கதை ஒன்று பின்வருமாறு நினைவுகூருகிறது: "ஒரு கசாப்புக்கடைக்கு அழைத்துச் செல்லப்பட்டுக் கொண்டிருந்த ஒரு கன்றுக்குட்டி எப்படியோ தப்பித்து, யூதகுரு சார்ந்த யூதமதத்தைத் தோற்றுவித்தவர்களில் ஒருவரான யெஹூதா ஹனாசி என்ற யூதகுருவின் வீட்டில் அடைக்கலம் புகுந்தது. அது அந்த யூதகுருவின் நீளமான அங்கிக்கு அடியில் தன்னுடைய

தலையை நுழைத்துக் கொண்டு அழத் தொடங்கியது. ஆனால் அவர் அதைத் தள்ளி விட்டுவிட்டு, ‘அந்த நோக்கத்திற்காகத்தான் நீ படைக்கப்பட்டிருக்கிறாய்,’ என்று கூறினார். அவர் இரக்கம் காட்டாததால் கடவுள் அவரை தண்டித்தார். வலியுடன்கூடிய நோய் ஒன்றினால் அந்த யூதகுரு பதின்மூன்று அண்டுகளாகத் துன்புற்றார். பிறகு ஒருநாள், அவருடைய வீட்டைச் சுத்தப்படுத்திக் கொண்டிருந்த ஒரு வேலைக்காரர், புதிதாகப் பிறந்திருந்த சில எலிக்குஞ்சுகளைக் கண்டார். அவர் அவற்றையும் சேர்த்துப் பெருக்கினார். ஆதரவற்ற அந்த எலிக்குஞ்சுகளைக் காப்பாற்றுவதற்கு யஹூதா விரைந்தார். அவற்றைத் தொந்தரவு செய்யாமல் விட்டுவிடும்படி அந்த வேலைக்காரருக்கு அவர் அறிவுறுத்தினார். ‘கடவுள் எல்லோரிடமும் நல்லவிதமாக நடந்து கொள்ளுகிறார். தான் படைத்துள்ள அனைத்து உயிரினங்கள்மீதும் அவர் பரிவு கொண்டுள்ளார்,’ என்று அவர் அதற்குக் காரணம் கற்பித்தார். அந்த யூதகுரு அந்த எலிகளிடம் பரிவு காட்டியதால், கடவுள் அவர்மீது பரிவு கொண்டு, அவருடைய நோயிலிருந்து அவரை குணப்படுத்தினார்.”

மற்ற மதங்கள், குறிப்பாக சமண மதம், புத்தமதம், இந்து மதம் போன்றவை, விலங்குகளிடத்தில் அதிக இரக்கத்தை வெளிப்படுத்தியுள்ளன. மனிதர்களுக்கும் ஏனைய சூழல் மண்டலத்திற்கும் இடையேயான தொடர்பை அவை வலியுறுத்துகின்றன. எந்தவோர் உயிரினத்தையும் கொல்லுவதைத் தவிர்ப்பதுதான் அவற்றின் தலையாய, அறநெறி சார்ந்த கட்டளையாக இருந்து வந்துள்ளது. மனிதர்கள் கொல்லப்படக்கூடாது என்று மட்டுமே பைபிளில் கூறப்பட்டுள்ளது, ஆனால் பண்டைய இந்தியக் கொள்கையான அகிம்சை ஒவ்வோர் உயிரினத்திற்கும் பொருந்துகிறது. இவ்விஷயத்தில் சமணத் துறவிகள் மிகவும் கவனமாக இருக்கின்றனர். அவர்கள் தங்கள் வாய்களை எப்போதும் ஒரு வெள்ளைத் துணியால் மூடிக் கொள்ளுகின்றனர். தவறுதலாக ஏதேனும் பூச்சியைத் தங்கள் சுவாசத்தின் மூலம் தாங்கள் உள்ளிழுத்துவிடக்கூடாது என்பதற்காக அவர்கள் அவ்வாறு செய்கின்றனர். அவர்கள் நடந்து செல்லும்போது, கையில் ஒரு துடப்பத்துடன் செல்லுகின்றனர். தங்களுடைய பாதையில் ஏதேனும் எறும்போ அல்லது வண்டோ கிடந்தால் அவற்றை அவர்கள் அந்தத் துடப்பத்தைக் கொண்டு மென்மையாக ஒதுக்கிவிட்டுத் தங்கள் நடையைத் தொடருகின்றனர்.

ஆனாலும், சமண மதம், புத்தமதம், இந்து மதம் ஆகியவை உட்பட, வேளாண்மை சார்ந்த மதங்கள் அனைத்தும், மனிதகுலம்தான் உயர்ந்தது என்பதையும் விலங்குகள் மனிதர்களுடைய

நலன்களுக்காகப் பயன்படுத்தப்படுவதையும் நியாயப்படுத்துவதற்கான வழிகளைக் கண்டுபிடித்தன. (விலங்குகள் அவற்றின் இறைச்சிக்காக வளர்க்கப்படாவிட்டால்கூட, அவற்றின் பாலுக்காகவும் தசை வலிமைக்காகவும் வளர்க்கப்பட்டன.) உயிரினங்களுக்கான ஓர் இயற்கை அடுக்கதிகாரமுறை, மனிதர்கள் பிற விலங்குகளைக் கட்டுப்படுத்துவதற்கும் பயன்படுத்துவதற்குமான உரிமையை அவர்களுக்குக் கொடுக்கிறது - குறிப்பிட்ட சில கட்டுப்பாடுகளை அவர்கள் கடைபிடிக்கும் பட்சத்தில் - என்று அந்த அனைத்து மதங்களும் கூறுகின்றன. எடுத்துக்காட்டாக, இந்து மதம் பசுக்களைப் புனிதமானவையாகக் கருதுகிறது, மனிதர்கள் மாட்டிறைச்சியை உட்கொள்ளுவதைத் தடை செய்கிறது. ஆனால், பண்ணைத் தொழிற்துறையை அது பெரிதும் நியாயப்படுத்தியுள்ளது. பசுக்கள் தாராள குணம் கொண்ட உயிரினங்கள் என்றும், அவை தம்முடைய பாலை மனிதகுலத்துடன் பகிர்ந்து கொள்ளுவதற்கு உண்மையிலேயே விரும்புகின்றன என்றும் இந்து மதம் கூறுகிறது.

இவ்வாறு மனிதர்கள் ஒரு வேளாண் ஒப்பந்தத்திற்குத் தங்களை அர்ப்பணித்துக் கொண்டனர். இந்த ஒப்பந்தத்தின்படி, பிற விலங்குகள்மீது ஆதிக்கம் செலுத்துவதற்கான உரிமையைப் பிரபஞ்ச சக்திகள் மனிதர்களுக்குக் கொடுத்தன. ஆனால், கடவுளர், இயற்கை, மற்றும் விலங்குகள் தொடர்பான சில கடமைகளை அவர்கள் நிறைவேற்றியாக வேண்டும் என்ற ஒரு நிபந்தனையை அவை விதித்தன. அப்படிப்பட்ட ஒரு பிரபஞ்ச ஏற்பாடு இருந்ததை நம்புவது சுலபமானதாக இருந்தது. ஏனெனில், விவசாய வாழ்க்கையின் வழக்கமான தினசரி நடவடிக்கைகளோடு அது கச்சிதமாகப் பொருந்திப் போனது.

வேட்டையாடிகள் தங்களை உயர்வானவர்களாகப் பார்க்கவில்லை. ஏனெனில், சூழல் மண்டலத்தின்மீது தாங்கள் ஏற்படுத்திக் கொண்டிருந்த தாக்கம் குறித்து அவர்கள் அவ்வளவாக அறியவில்லை. பொதுவாக ஒரு வேட்டையாடிகள் குழுவில் ஒருசில டஜன் உறுப்பினர்கள் இருந்தனர். அவர்கள் ஆயிரக்கணக்கான காட்டு விலங்குகளால் சூழப்பட்டிருந்தனர். அவர்கள் உயிர்பிழைத்து இருப்பது அவர்கள் அந்த விலங்குகளின் விருப்பங்களைப் புரிந்து கொள்ளுவதையும் மதிப்பதையும் சார்ந்திருந்தது. மான்கள் எதைப் பற்றிக் கனவு கண்டன, சிங்கங்கள் என்ன நினைத்தன என்று அவர்கள் தங்களைத் தாங்களே தொடர்ந்து கேட்டுக் கொள்ள வேண்டியிருந்தது. இல்லாவிட்டால், அவர்களால் அந்த மான்களை வேட்டையாட முடிந்திருக்காது, அந்தச் சிங்கங்களிடமிருந்து தப்பித்திருக்க முடியாது.

இதற்கு நேர்மாறாக, விவசாயிகள், மனிதக் கனவுகளாலும் எண்ணங்களாலும் கட்டுப்படுத்தப்பட்டு வடிவமைக்கப்பட்ட ஓர் உலகில் வாழ்ந்தனர். புயல்கள், நிலநடுக்கங்கள் போன்ற வலிமையான இயற்கை ஆற்றல்கள் மனிதர்களை இன்னும் தாக்கின என்றாலும், அவர்கள் பிற விலங்குகளின் விருப்பங்களை அவ்வளவாகச் சார்ந்திருக்கவில்லை. பண்ணைச் சிறுவன் ஒருவன் ஒரு குதிரையின்மீது சவாரி செய்யவும், ஒரு காளை மாட்டைக் கையாளவும், ஒரு பிடிவாதக்காரக் கழுதையைச் சாட்டையால் அடிக்கவும், செம்மறியாடுகளை மேய்ச்சல் நிலங்களுக்கு வழிநடத்திச் செல்லவும் மிகச் சிறிய வயதிலேயே கற்றுக் கொள்ளுகிறான். அத்தகைய அன்றாட நடவடிக்கைகள் இயற்கையின் ஒழுங்கையோ அல்லது கடவுளின் விருப்பத்தையோ பிரதிபலித்ததாக நம்புவது சுலபமானதாகவும் சபலமூட்டுவதாகவும் இருந்தது.

எனவே, வேளாண் புரட்சி ஒரு பொருளாதாரப் புரட்சியாக இருந்ததோடு மட்டுமல்லாமல் ஒரு சமயப் புரட்சியாகவும் இருந்தது. நாம் விலங்குகளைக் கொடூரமான முறையில் கையாண்டு அவற்றை நமக்கு சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளுவதை நியாயப்படுத்திய புதிய வகையான மத நம்பிக்கைகளுடன் சேர்ந்து புதிய வகையான பொருளாதார உறவுகளும் வளர்ந்தன. இந்தப் பண்டைய செயல்முறையை, கடைசியாக இப்போது எஞ்சியிருக்கும் வேட்டையாடிச் சமுதாயங்கள் விவசாயத்தை சுவீகரிக்கும்போது உங்களால் பார்க்க முடியும். சமீப ஆண்டுகளில், தென்னிந்தியாவைச் சேர்ந்த காட்டு நாயக்கர் என்ற வேட்டையாடிச் சமூகத்தினர், ஆடுமாடுகளை மேய்த்தல், கோழிகளை வளர்த்தல், தேயிலையைப் பயிரிடுதல் போன்ற வேளாண் நடவடிக்கைகளில் ஈடுபட்டு வந்துள்ளனர். அதன் விளைவாக, விலங்குகள் குறித்தப் புதிய மனப்போக்குகளையும் அவர்கள் தங்களிடம் வளர்த்துக் கொண்டுள்ளனர். காட்டில் வாழுகின்ற உயிரினங்கள் பற்றி வேறு கண்ணோட்டங்களையும், பண்ணைப்படுத்தப்பட்ட விலங்குகள் (மற்றும் தாவரங்கள்) குறித்து முற்றிலும் வேறுபட்டக் கண்ணோட்டங்களையும் அவர்கள் கொண்டுள்ளனர்.

காட்டு நாயக்கர் பழங்குடியினரின் மொழியில், ஒரு தனித்துவமான ஆளுமையைக் கொண்டுள்ள ஒவ்வோர் உயிரினமும் 'மனுசன்' என்று அழைக்கப்படுகிறது. மனிதவியலாளரான டேனி நவே மேலும் துருவிக் கேட்டபோது, அனைத்து யானைகளும்கூட 'மனுசன்'கள்தான் என்று காட்டு நாயக்கர் பழங்குடியின உறுப்பினர் ஒருவர் விளக்கினார்: "நாங்கள் காட்டில் வாழுகிறோம், அவையும் காட்டில் வாழுகின்றன.

நாங்கள் எல்லோரும் மனுசன்கள்தான். கரடிகள், மான்கள், புலிகள் ஆகியவை உட்பட, காட்டு விலங்குகள் அனைத்தும் மனுசன்கள்தான்." பசுக்கள் பற்றிக் கேட்கப்பட்டபோது, "பசுக்கள் மனுசன்கள் அல்ல. நீங்கள்தான் அவற்றை எல்லா இடங்களுக்கும் வழிநடத்திச் சென்றாக வேண்டும்," என்று பதிலளித்த அவர், கோழிகளைப் பற்றிப் பேசுகையில், "அவற்றைப் பற்றிச் சொல்ல ஒன்றுமில்லை. அவையும் மனுசன்கள் அல்ல," என்று கூறினார். காட்டு மரங்கள்? "அவை மனுசன்கள்தான். அவை மிக நீண்டகாலம் வாழுகின்றன." தேயிலைச் செடிகள்? "இவற்றை நான் பயிரிடுகிறேன். இவற்றின் இலைகளை விற்பனை செய்து, எனக்குத் தேவையான பொருட்களைக் கடையிலிருந்து என்னால் வாங்கிக் கொள்ள முடியும். இவை மனுசன்கள் அல்ல."

மரியாதைக்குரிய உயிரினங்களாக இருந்த விலங்குகள் படிப்படியாக மதிப்பிழந்து வெறும் சொத்துக்களாக ஆகியுள்ளது பசுக்கள் மற்றும் கோழிகளோடு நிற்கவில்லை. பெரும்பாலான வேளாண் சமுதாயங்கள் பல்வேறு வகுப்புகளைச் சேர்ந்த மக்களையும் சொத்துக்களைப்போல நடத்தத் தொடங்கின. பண்டைய எகிப்திலும், பைபிள் காலத்திய இஸ்ரேலிலும், இடைக்காலச் சீனாவிலும் மனிதர்களை அடிமைகளாக்கி, அவர்களைச் சித்தரவதை செய்து, அற்பமான குற்றங்களுக்குக்கூட அவர்களைக் கொலை செய்வது போன்றவை மிகப் பரவலாக இருந்தன. ஒரு பண்ணையை எப்படி நடத்த வேண்டும் என்று விவசாயிகள் தங்களுடைய பசுக்களிடமும் கோழிகளிடமும் கேட்கவில்லை. அதேபோல, ஆட்சியாளர்கள், ராஜ்ஜியத்தை எப்படி நடத்த வேண்டும் என்பது பற்றிய அபிப்பிராயங்களை விவசாயிகளிடம் கேட்கவில்லை. இனங்களுக்கு இடையே அல்லது மதரீதியான சமூகங்களுக்கு இடையே மோதல்கள் நிகழ்ந்தபோதெல்லாம், பரஸ்பரம் அடுத்தவருடைய மனிதத்தன்மையை அவர்கள் பறித்தனர். 'மற்றவர்களை' மனிதர்களைவிடத் தாழ்ந்த நிலையில் உள்ள விலங்குகளாகச் சித்தரிப்பது அவர்களை அப்படி நடத்துவதை நோக்கிய முதல் நடவடிக்கையாகும். இவ்விதத்தில், பண்ணைகள் புதிய சமுதாயங்களுக்கான மாதிரிகளாக ஆயின. கொழுத்த முதலாளிகள், சுரண்டப்படுவதற்குத் தகுதியாக இருந்த தாழ்ந்த இனத்தினர், கொல்லப்படுவதற்கு ஏற்ற நிலையில் இருந்த காட்டு விலங்குகள், இந்த ஒட்டுமொத்த ஏற்பாட்டிற்கு மேலேயிருந்து தன்னுடைய ஆசீர்வாதத்தைக் கொடுத்துக் கொண்டிருந்த ஒரு மாபெரும் கடவுள் என்று அந்தப் பண்ணைகள் ஒவ்வொன்றும் முழுமை பெற்று இருந்தன.

# ஐநூறு ஆண்டுகாலத் தனிமை

நவீன அறிவியல் மற்றும் தொழிற்துறையின் வளர்ச்சி மனிதர்களுக்கும் விலங்குகளுக்கும் இடையேயான உறவுகளில் அடுத்தப் புரட்சியைக் கொண்டுவந்தது. வேளாண் புரட்சியின்போது, மனிதகுலம் விலங்குகளின் வாய்களையும் தாவரங்களின் வாய்களையும் கட்டிப் போட்டுவிட்டு, பிரம்மாண்டமான ஆன்மவாத இசை நிகழ்ச்சியை மனிதனுக்கும் கடவுளுக்கும் இடையேயான ஓர் உரையாடலாக மாற்றியது. அறிவியல் புரட்சியின்போது, மனிதகுலம் கடவுளரின் வாய்களையும் கட்டிப் போட்டது. உலகம் இப்போது ஒரே ஓர் இனத்தின் கட்டுப்பாட்டின்கீழ் வந்தது. ஒரு காலியான மேடையின் நடுவே மனிதகுலம் தனியாக நின்றது. அது தனக்குத் தானே பேசிக் கொண்டிருந்தது, யாருடனும் பேச்சுவார்த்தை நடத்த இயலாததாக ஆனது. அது எந்தவொரு கடமையும் இல்லாமல் வெறுமனே அளப்பரிய சக்திகளைக் கைவசப்படுத்திக் கொண்டிருந்தது. இயற்பியல், வேதியியல் மற்றும் உயிரியலின் அடிப்படை விதிகளைப் புரிந்து கொண்டுவிட்ட மனிதகுலம், இப்போது அவற்றைத் தன் விருப்பம்போலப் பயன்படுத்துகிறது.

பண்டைய வேட்டையாடி ஒருவர் ஒரு காட்டுக்குள் சென்றபோது, காட்டெருதின் உதவியை அவர் கோரினார். பதிலுக்கு, அந்தக் காட்டெருது அவரிடமிருந்து ஏதோ ஒன்றைக் கேட்டது. பண்டைய விவசாயி ஒருவர் தன்னுடைய பசுக்கள் ஏராளமாகப் பால் உற்பத்தி செய்ய வேண்டும் என்று விரும்பியபோது, கடவுளிடம் உதவி கேட்டார். பதிலுக்கு, கடவுள் தன்னுடைய நிபந்தனைகளைப் பட்டியலிட்டார். நெஸ்லே ஆராய்ச்சி மற்றும் உருவாக்கத் துறையில் வெள்ளைச் சீருடை அணிந்த ஊழியர்கள் பால் உற்பத்தியை அதிகரிக்க விரும்பும்போது, அவர்கள் மரபியலைப் படிக்கின்றனர். ஆனால், பதிலுக்கு அந்த மரபணுக்கள் அவர்களிடமிருந்து எதையும் கேட்பதில்லை.

வேட்டையாடிகள் மற்றும் விவசாயிகளிடம் எப்படி அவர்களுக்கென்று கட்டுக்கதைகள் இருந்தனவோ, ஆராய்ச்சி மற்றும் உருவாக்கத் துறையில் உள்ள மக்களிடமும் சில கட்டுக்கதைகள் இருக்கின்றன. அவர்களுடைய மிகப் பிரபலமான கட்டுக்கதை, ஞான விருட்சம் மற்றும் ஈடன் தோட்டம் குறித்தக் கதைகளை வெட்கமின்றி அப்படியே நகலெடுக்கிறது. ஆனால், லிங்கன்ஷயரில் உள்ள, சர் ஐசக் நியூட்டனின் பூர்விக வீடான உல்ஸ்தார்ப் மேனரில் இருக்கும் தோட்டத்திற்கு அது நம்மை அழைத்துச் செல்லுகிறது. இந்தக் கட்டுக்கதையின்படி, ஐசக் நியூட்டன் ஒரு ஆப்பிள் மரத்தின்கீழ்

உட்கார்ந்து கொண்டிருந்தபோது, பழுத்த ஆப்பிள் ஒன்று மேலேயிருந்து அவருடைய தலையின்மீது விழுந்தது. அந்த ஆப்பிள் ஏன் பக்கவாட்டிலோ அல்லது மேல்நோக்கியோ போகாமல் நேராகக் கீழ்நோக்கி வந்து விழுந்தது என்று நியூட்டன் யோசிக்கத் தொடங்கினார். அது குறித்து அவர் மேற்கொண்ட ஆய்வு புவியீர்ப்பு விசையையும் இயக்க விதிகளையும் அவர் கண்டுபிடிக்க வழி வகுத்தன.

நியூட்டனின் கோட்பாடு ஞான விருட்சம் எனும் கட்டுக்கதையை அப்படியே தலைகீழாகப் புரட்டிப் போடுகிறது. ஈடன் தோட்டத்தில் ஒரு பாம்பு அந்த நாடகத்தைத் துவக்கி வைக்கிறது, பாவம் செய்ய மனிதர்களைத் தூண்டுகிறது, இதன் மூலமாகக் கடவுளின் கடுங்கோபத்திற்கு அவர்களை ஆளாக்குகிறது. ஆதாமும் ஏவாளும் அந்தப் பாம்பு மற்றும் கடவுளின் விளையாட்டுப் பொருட்களாக ஆயினர். இதற்கு நேர்மாறாக, உல்ஸ்தார்ப் தோட்டத்தில் மனிதன் மட்டுமே ஒரே கதாபாத்திரம். நியூட்டன் இயற்பியல் விதிகளைப் படிப்பதைவிட பைபிளைப் படிப்பதற்கு அதிக நேரத்தை அர்ப்பணித்த, மிகுந்த சமயப் பற்றுக் கொண்ட ஒரு கிறித்தவராக இருந்தபோதிலும், அவர் துவக்கி வைத்த அறிவியல் புரட்சியானது கடவுளையே ஓரமாக ஒதுக்கித் தள்ளியது. நியூட்டனுக்கு அடுத்து வந்த அறிவியலறிஞர்கள் தங்களுடைய கட்டுக்கதைகளை எழுதத் தொடங்கியபோது, அவர்களுக்குக் கடவுளும் தேவைப்படவில்லை, அந்தப் பாம்பும் தேவைப்படவில்லை. உல்ஸ்தார்ப் தோட்டம் இயற்கை விதிகளால் இயக்கப்படுகிறது. இந்த விதிகளைப் புரிந்து கொள்ளுவதற்கான முயற்சி மனிதர்கள் மட்டுமே மேற்கொள்ள வேண்டிய ஒன்று. நியூட்டனின் தலைமீது ஓர் ஆப்பிள் விழுந்ததிலிருந்து கதை தொடங்கக்கூடும், ஆனால் அந்த ஆப்பிள் வேண்டுமென்றே அவருடைய தலைமீது விழவில்லை.

ஈடன் தோட்டம் கட்டுக்கதையில், மனிதர்கள் தங்களுடைய ஆர்வத்துடிப்பிற்காகவும் அறிவைக் கைவசப்படுத்துவதற்கான தங்களுடைய பெருவிருப்பத்திற்காகவும் தண்டிக்கப்படுகின்றனர். கடவுள் அவர்களை சொர்க்கத்திலிருந்து வெளியேற்றுகிறார். உல்ஸ்தார்ப் தோட்டம் கட்டுக்கதையில், யாரும் நியூட்டனுக்கு தண்டனை கொடுக்கவில்லை. மாறாக, அதற்கு நேரெதிரானது நடந்தது. அவருடைய ஆர்வத்துடிப்பின் காரணமாக, பிரபஞ்சத்தைப் பற்றி மனிதகுலம் அதிகச் சிறப்பாகப் புரிந்து கொள்ளுகிறது, அதிக சக்திமிக்கதாக ஆகிறது, தொழில்நுட்ப சொர்க்கத்தை நோக்கி இன்னோர் அடி எடுத்து வைக்கிறது. உலகம் நெடுகிலும் எண்ணற்ற ஆசிரியர்கள் நியூட்டனின் கட்டுக்கதையை மீண்டும் மீண்டும்

நினைவுகூர்ந்து, மக்களிடையே ஆர்வத்துடிப்பை ஊக்குவிக்கின்றனர். இதன் மூலம், நம்மால் அறிவைக் கைவசப்படுத்த முடிந்தால் மட்டுமே பூமியில் ஒரு சொர்க்கத்தை நம்மால் உருவாக்க முடியும் என்று அவர்கள் வலியுறுத்துகின்றனர்.

உண்மையில், நியூட்டனின் கட்டுக்கதையில்கூடக் கடவுள் இருக்கிறார். நியூட்டன்தான் அதில் கடவுள். உயிர்தொழில்நுட்பம், நேனோதொழில்நுட்பம் ஆகியவையும் அறிவியலின் பிற பயன்களும் முழுமையடையும்போது, ஹோமோ சேப்பியன்ஸ் தெய்விக சக்திகளை அடைவர், ஒரு முழுச் சுற்று சுற்றி வந்து மீண்டும் பைபிள் சார்ந்த ஞான விருட்சத்திற்கு வந்து சேருவர். பண்டைய வேட்டையாடிகள் இன்னொரு விலங்கினம் மட்டுமே. விவசாயிகள் தங்களைப் படைப்பின் உச்சமாகப் பார்த்தனர். ஆனால், அறிவியலறிஞர்கள் நம்மைக் கடவுளராக உயர்த்துவர்.

***

வேளாண் புரட்சி ஆத்திகவாத மதங்கள் உருவாக வழி வகுத்ததுபோல, அறிவியல் புரட்சி மனிதவாத மதங்களுக்கு வழி வகுத்தது. இந்த மதங்களில் மனிதர்கள் கடவுளரின் இடத்தைப் பிடித்துக் கொண்டனர். ஹோமோ சேப்பியன்ஸிடம் உள்ள தனித்துவமான மற்றும் புனிதமான சாரம்தான் பிரபஞ்சத்தில் உள்ள அனைத்து அர்த்தங்களுக்கும் அதிகாரங்களுக்கும் காரணம் என்ற யோசனையின் அடிப்படையில்தான் தாராளவாதம், கம்யூனிசவாதம், நாஜியிசம் போன்ற மனிதவாத மதங்கள் உருவாயின. பிரபஞ்சத்தில் நிகழுகின்ற அனைத்தும் ஹோமோ சேப்பியன்ஸ்மீது அவை ஏற்படுத்துகின்ற தாக்கத்திற்கு ஏற்பவே நல்லவை என்றோ அல்லது மோசமானவை என்றோ எடை போடப்படுகின்றன.

ஆத்திகவாதம் கடவுளின் பெயரில் பாரம்பரிய வேளாண்மையை நியாயப்படுத்தியதுபோல, மனிதவாதம் மனிதனின் பெயரில் விலங்குகளை நவீனமான முறையில் பண்ணைப்படுத்துவதை நியாயப்படுத்தியுள்ளது. நவீனப் பண்ணைப்படுத்துதல் மனிதர்களுடைய தேவைகளையும் விருப்பங்களையும் ஆசைகளையும் புனிதப்படுத்துகிறது, மற்ற எல்லாவற்றையும் உதாசீனப்படுத்துகிறது. மனித இயல்பின் புனிதத்துவம் விலங்குகளுக்கு இல்லை என்பதால் நவீனப் பண்ணைப்படுத்துதல் செயல்முறைக்கு விலங்குகள்மீது எந்த உண்மையான ஆர்வமும் இல்லை. அதோடு, கடவுளுக்கும் அங்கு எந்த வேலையும் இல்லை. ஏனெனில், நவீன அறிவியலும் தொழில்நுட்பமும் பண்டைய கடவுளரிடம் இருக்கின்ற சக்திகளைவிட அதிகமான சக்திகளை மனிதர்களுக்குக் கொடுக்கின்றன. பசுக்களையும்

பன்றிகளையும் கோழிகளையும், பாரம்பரிய வேளாண் சமுதாயங்களில் நிலவிய சூழ்நிலைகளைவிட அதிகத் தீவிரமான சூழ்நிலைகளுக்கு உட்படுத்துவதற்கு நவீன நிறுவனங்களுக்கு அறிவியல் உதவுகிறது.

பண்டைய எகிப்திலும் ரோமாபுரிப் பேரரசிலும் இடைக்காலச் சீனாவிலும் உயிர்வேதியியல், மரபியல், விலங்கியல், கொள்ளை நோயியல் போன்றவற்றைப் பற்றிய அடிப்படை அறிவு மட்டுமே இருந்தது. அதன் விளைவாக, மற்றவர்களைத் தங்கள் விருப்பப்படி ஆட்டுவிப்பதற்கான அவர்களுடைய சக்தி மட்டுப்படுத்தப்பட்டிருந்த அந்நாட்களில், பன்றிகளும் பசுக்களும் கோழிகளும் வீடுகளுக்கிடையே சுதந்திரமாகச் சுற்றித் திரிந்தன, குப்பைக் குவியல்களிலும் அருகிலிருந்த காடுகளிலும் உணவைத் தேடின. லட்சியவாத விவசாயி ஒருவர் ஆயிரக்கணக்கான விலங்குகளை ஒரு கூட்டமான அடைப்பகத்தில் அடைத்து வைக்க முயற்சித்திருந்தால், ஒரு பயங்கரமான தொற்றுநோய் உருவாகி, அந்த அனைத்து விலங்குகளையும் அந்த கிராமத்துவாசிகள் பலரையும் அது அழித்து ஒழித்திருக்கும். எந்த மதகுருவாலும், ஷாமனாலும், அல்லது கடவுளாலும் அதைத் தடுத்திருக்க முடியாது.

ஆனால், தொற்றுநோய்கள், நோய்க்கிருமிகள், நுண்ணுயிர்க் கொல்லிகள் போன்றவற்றின் ரகசியங்களை நவீன அறிவியல் புரிந்து கொண்டபோது, பண்ணைத் தொழுவங்கள், பன்றிக் கொட்டில்கள், கோழிக் கூடுகள் ஆகியவை சாத்தியமாயின. நோய்த்தடுப்பு மருந்துகள், பிற ஊக்க மருந்துகள், ஹார்மோன்கள், பூச்சிக்கொல்லிகள், குளிரூட்டும் அமைப்புமுறைகள், தானியங்கி உணவூட்டிகள் ஆகியவற்றின் உதவியுடன், ஆயிரக்கணக்கான பன்றிகளை, பசுக்களை, அல்லது கோழிகளை மிகவும் கூட்டமான அடைப்பகங்களில் நேர்த்தியான வரிசைகளில் அடைத்து வைப்பதும், இறைச்சி, பால், மற்றும் முட்டைகளை இதுவரை இல்லாத செயற்திறத்துடன் உற்பத்தி செய்வதும் இப்போது சாத்தியமாகியுள்ளது.

சமீப ஆண்டுகளில், தங்களுக்கும் விலங்குகளுக்கும் இடையேயான உறவுகளைப் பற்றி மனிதர்கள் மீண்டும் சிந்திக்கத் தொடங்கியுள்ள நிலையில், இப்படிப்பட்ட நடைமுறை வழக்கங்கள் அதிக அளவில் விமர்சனத்திற்கு உள்ளாகி வருகின்றன. தாழ்ந்த நிலையில் உள்ள இந்த உயிரினங்களின் தலைவிதியின்மீது நாம் திடீரென்று அதிக ஆர்வம் காட்டிக் கொண்டிருக்கிறோம். நாமும் அவற்றில் ஒன்றாக ஆகவிருக்கிறோம் என்பது அதற்குக் காரணமாக இருக்கக்கூடும். கணினி நிரல்கள் மனித அறிவைவிட அதிக அறிவையும் முன்பு ஒருபோதும் இருந்திராத சக்தியையும் கைவசப்படுத்தும்போது, நாம் மனிதர்களை மதிப்பதைவிட இந்த நிரல்களை அதிகமாக மதிக்கத்

தொடங்க வேண்டுமா? எடுத்துக்காட்டாக, செயற்கை நுண்ணறிவு தன்னுடைய சொந்தத் தேவைகளுக்காகவும் விருப்பங்களுக்காகவும் மனிதர்களைச் சுரண்டுவதும் அவர்களைக் கொல்லுவதும் ஏற்றுக் கொள்ளத்தக்கதாக இருக்குமா? அது ஒருபோதும் அனுமதிக்கப்படக்கூடாது என்றால், பன்றிகளைவிட உயர்வான அறிவையும் சக்தியையும் பெற்றுள்ள மனிதர்கள் அப்பன்றிகளைச் சுரண்டுவதும் கொல்லுவதும் ஏன் நியாயப்படுத்தப்படுகிறது? உயர்வான அறிவு மற்றும் மாபெரும் சக்தியோடு கூடவே, பன்றிகள், கோழிகள், சிம்பன்சிகள், கணினி நிரல்கள் ஆகியவற்றிலிருந்து தங்களைத் தனித்துவப்படுத்துகின்ற ஏதேனும் மாயாஜாலமான தூண்டுதல் சக்தி மனிதர்களுக்கு இருக்கிறதா? ஆமாம் என்றால், அந்தத் தூண்டுதல் சக்தி எங்கிருந்து வந்தது? செயற்கை நுண்ணறிவால் அந்த சக்தியை ஒருபோதும் கைவசப்படுத்த முடியாது என்று நாம் எப்படி உறுதியாகக் கூறுகிறோம்? அப்படிப்பட்டத் தூண்டுதல் சக்தி எதுவும் நம்மிடம் இல்லை என்றால், அறிவிலும் சக்தியிலும் கணினிகள் மனிதர்களை விஞ்சிய பிறகும்கூட மனித வாழ்க்கைக்கு நாம் தொடர்ந்து சிறப்பு மதிப்பைக் கொடுத்து வருவதற்கு ஏதேனும் காரணம் இருக்க முடியுமா? இன்னும் சொல்லப் போனால், மனிதர்களைப் பற்றிய எந்த விஷயம் நம்மை இவ்வளவு அறிவு கொண்டவர்களாகவும் சக்திவாய்ந்தவர்களாகவும் ஆக்குகிறது? மனிதர்கள் அல்லாத உயிரினங்கள் நம்மோடு போட்டியிட்டு நம்மை விஞ்சுவதற்கான சாத்தியக்கூறு எவ்வளவு இருக்கிறது?

பிற விலங்குகளுடனான நம்முடைய உறவுகளை மேலும் புரிந்து கொள்ளுவதற்காக மட்டுமல்லாமல், எதிர்காலத்தில் நமக்காக எது காத்திருக்கிறதோ அதை மெச்சுவதற்காகவும், மனிதர்களுக்கும் அதிமனிதர்களுக்கும் இடையேயான உறவுகள் எப்படி இருக்கும் என்பதைத் தெரிந்து கொள்ளுவதற்காகவும் ஹோமோ சேப்பியன்ஸின் இயல்பையும் சக்தியையும் அடுத்த அத்தியாயத்தில் நாம் ஆய்வு செய்யவிருக்கிறோம்.

## அத்தியாயம் 3

# மனிதகுலத்தின் சிறப்பு அம்சம்

ஹோமோ சேப்பியன்ஸ்தான் உலகிலுள்ள மிகவும் சக்திவாய்ந்த இனம் என்பதில் எந்த சந்தேகமும் இல்லை. மற்ற உயிரினங்களைவிடத் தாங்கள் உயர்வான அந்தஸ்தும் தனிச்சிறப்பும் கொண்டவர்கள் என்றும், பன்றிகள், யானைகள் அல்லது ஓநாய்களின் உயிர்களைவிட மனித உயிர் அதிக மதிப்பு வாய்ந்தது என்றும் ஹோமோ சேப்பியன்ஸ் இனத்தினர் நினைக்கின்றனர். ஆனால், இது அப்படியொன்றும் வெளிப்படையாகத் தெரிவதில்லை. ஒருவன் வலிமையாக இருப்பதால் அவனுடைய நினைப்பு சரியென்று ஆகிவிடுமா? மனிதச் சமூகம் பன்றிகளின் சமூகத்தைவிட அதிக சக்தி வாய்ந்தது என்பதால் மட்டுமே மனித உயிர் ஒரு பன்றியின் உயிரைவிட அதிக விலைமதிப்புக் கொண்டதாக ஆகிவிடுகிறதா? ஆப்கானிஸ்தானைவிட அமெரிக்கா அதிக வலிமை கொண்டதாக இருக்கிறது; அப்படியானால், ஆப்கானியர்களின் உயிர்களைவிட அமெரிக்கர்களின் உயிர்கள் அதிக உள்ளார்ந்த மதிப்பு வாய்ந்தவை என்று அர்த்தமாகிவிடுமா?

யதார்த்தத்தில், அமெரிக்க உயிர்களுக்கு அதிக மதிப்புக் கொடுக்கப்படுகிறது. ஒரு சராசரி ஆப்கானியரின் கல்விக்கும் ஆரோக்கியத்திற்கும் பாதுகாப்பிற்கும் செலவிடப்படுகின்ற பணத்தைவிட மிக அதிகப் பணம் ஒரு சராசரி அமெரிக்கரின் கல்வியிலும் ஆரோக்கியத்திலும் பாதுகாப்பிலும் முதலீடு செய்யப்படுகிறது. ஆப்கானியர் ஒருவர் கொல்லப்படுவதைவிட, அமெரிக்கக் குடிமகன் ஒருவர் கொல்லப்படும்போது உலக அளவில் அது பெரிதும் கண்டிக்கப்படுகிறது. உலக அரங்கில் நாடுகளுக்கு இடையே நிலவும் அரசியல் சமச்சீரின்மையின் நியாயமற்ற விளைவுதான் இது என்பது பொதுவாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது. அமெரிக்காவைவிட ஆப்கானிஸ்தான் மிகக் குறைந்த செல்வாக்குக் கொண்ட நாடாக இருக்கக்கூடும், ஆனால் அமெரிக்காவின் பெவர்லி ஹில்ஸ் பகுதியில் வாழும் ஒரு குழந்தையின் உயிர் எந்த அளவு புனிதமானதோ, ஆப்கானிஸ்தானின் டோரா போரா மலைகளில் உள்ள ஒரு குழந்தையின் உயிரும் அதே அளவு புனிதமானதுதான்.

இதற்கு நேர்மாறாக, பன்றிக் குட்டிகளைவிட மனிதக் குழந்தைகளை உயர்வான நிலையில் நாம் வைக்கும்போது, அது சூழல்ரீதியான அதிகாரச் சமச்சீரின்மையைவிட அதிக ஆழமான எதையோ

பிரதிபலிப்பதாக நம்ப நாம் விரும்புகிறோம். மனித உயிர்கள் ஏதோ அடிப்படையான விதத்தில் உண்மையிலேயே உயர்வானவை என்று நம்ப நாம் விரும்புகிறோம். நம்மிடம் ஏதோ ஒரு மாயாஜாலமான பண்புநலன் உள்ளது என்றும், அது நம்முடைய அளப்பரிய சக்திக்குக் காரணமாக இருப்பதோடு கூடவே, நம்முடைய உயர்ந்த அந்தஸ்திற்கு நியாயம் கற்பிப்பதாகவும் இருக்கிறது என்றும் சேப்பியன்ஸாகிய நாம் நம்மிடம் கூறிக் கொள்ள விரும்புகிறோம். இந்தத் தனித்துவமான மனிதத் தீப்பொறி எது?

சேப்பியன்ஸ் மட்டுமே அழிவற்ற ஆன்மாவைக் கொண்டுள்ளனர் என்பது பாரம்பரிய ஓரிறைவாதத்தின் பதிலாகும். உடல் அழுகி மக்கிப் போய்விடுகிறது, ஆனால் ஆன்மா முக்தியை அல்லது நிரந்தர தண்டனையை நோக்கிப் பயணிக்கிறது. அது சொர்க்கத்தில் நிரந்தரமான மகிழ்ச்சியை அனுபவிக்கும் அல்லது நரகத்தில் என்றென்றும் துயரத்தில் உழலும். பன்றிகளுக்கும் பிற விலங்குகளுக்கும் ஆன்மா கிடையாது என்பதால், அவை இந்தப் பிரபஞ்ச நாடகத்தில் பங்கு கொள்ளுவதில்லை. அவை ஒருசில ஆண்டுகள் மட்டுமே உயிர்வாழுகின்றன, பிறகு மடிந்து மறைந்துவிடுகின்றன. எனவே, குறுகிய காலம் மட்டுமே வாழுகின்ற பன்றிகளைவிட அழிவற்ற மனித ஆன்மாக்கள்மீது நாம் அதிக அக்கறை செலுத்த வேண்டும் என்று ஓரிறைவாதம் விளக்குகிறது.

இது மழலையர் பள்ளியில் நமக்குக் கற்றுக் கொடுக்கப்படுகின்ற தேவதைக் கதை அல்ல; மாறாக, இருபத்தோராம் நூற்றாண்டின் துவக்கத்தில் கோடிக்கணக்கான மக்கள் மற்றும் விலங்குகளுடைய வாழ்க்கையைத் தொடர்ந்து செதுக்கிக் கொண்டிருக்கின்ற, மிகவும் சக்திவாய்ந்த ஒரு கட்டுக்கதை இது. மனிதர்கள் அழிவற்ற ஆன்மாக்களைக் கொண்டிருக்கின்றனர், ஆனால் விலங்குகள் என்பவை வெறும் நிலையற்ற உடல்கள் மட்டுமே என்ற நம்பிக்கை நம்முடைய சட்ட அமைப்புமுறை, அரசியல் அமைப்புமுறை, மற்றும் பொருளாதார அமைப்புமுறையின் மையத் தூணாகத் திகழுகிறது. எடுத்துக்காட்டாக, உணவுக்காகவோ அல்லது குதூகலத்திற்காகவோகூட மனிதர்கள் விலங்குகளைக் கொல்லுவது ஏன் தவறல்ல என்று அது விளக்குகிறது.

ஆனால், நம்முடைய சமீபத்திய அறிவியல் கண்டுபிடிப்புகள் இந்த ஓரிறைவாதக் கட்டுக்கதையோடு முற்றிலும் முரண்பட்டு நிற்கின்றன. விலங்குகளுக்கு ஆன்மாக்கள் இல்லை என்று ஓரிறைவாத மதம் கூறுவதை அறிவியல் பரிசோதனைகள் உறுதிப்படுத்துகின்றன. எனவே, அந்தக் கட்டுக்கதையின் ஒரு பகுதி உண்மை என்பது நிச்சயமாகியுள்ளது. பன்றிகள், எலிகள், ரீசஸ் குரங்குகள்

ஆகியவற்றைக் கொண்டு மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகள் மற்றும் பரிசோதனைகளால் அவ்விலங்குகளிடம் ஆன்மா எதையும் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆனால் அதே பரிசோதனைகள், அந்த ஓரிறைவாதக் கட்டுக்கதையின் அதிக முக்கியமான இரண்டாவது பகுதியை, அதாவது, மனிதர்களுக்கு ஓர் ஆன்மா இருக்கிறது என்பதை, பலவீனப்படுத்துகின்றன. அறிவியலறிஞர்கள் ஹோமோ சேப்பியன்ஸை ஆயிரக்கணக்கான விநோதமான பரிசோதனைகளுக்கு உட்படுத்தி, நம்முடைய இதயங்களிலும் மூளைகளிலும் அணுவணுவாகத் தேடியும்கூட ஆன்மா தொடர்பான எதையும் இதுவரை அவர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. அதாவது, பன்றிகள் விஷயத்திற்கு நேர்மாறாக சேப்பியன்ஸுக்கு ஆன்மாக்கள் இருக்கின்றன என்பதற்கு இப்போதைக்கு எந்த அறிவியல் ஆதாரமும் இல்லை.

விஷயம் இவ்வளவுதான் என்றால், அறிவியலறிஞர்கள் தொடர்ந்து தேட வேண்டும் என்றும், அவர்கள் இதுவரை எந்த ஆன்மாவையும் கண்டுபிடிக்காமல் இருப்பதற்குக் காரணம், போதிய அளவு கவனமாக அவர்கள் அதைத் தேடாததுதான் என்றும் நாம் வாதிடலாம். ஆனாலும், ஆன்மா என்ற ஒன்று இருக்கிறது என்ற யோசனையை உயிரியல் சந்தேகிக்கிறது. அந்த யோசனையை உறுதிப்படுத்தக்கூடிய சான்றுகள் எதுவும் இல்லாதது மட்டும் அந்த சந்தேகத்திற்குக் காரணமல்ல, மாறாக, ஆன்மா என்ற யோசனையே பரிணாம வளர்ச்சியின் மிக அடிப்படைக் கொள்கைகளோடு முரண்படுகிறது என்பதுதான் அதற்குக் காரணம். இந்த முரண்பாடுதான், பரிணாம வளர்ச்சிக் கோட்பாடு சமயப் பற்றுக் கொண்ட ஓரிறைவாதிகளிடையே கட்டுக்கடங்காத வெறுப்பைத் தூண்டுவதற்குக் காரணமாக இருக்கிறது.

## சார்லஸ் டார்வின் குறித்து யார் பயப்படுகிறார்கள்?

2012ல் கேலப் நிறுவனம் நடத்திய ஒரு கருத்துக் கணிப்பின் முடிவு பின்வருமாறு அமைந்திருந்தது: “எந்தவிதமான தெய்விகக் குறுக்கீடும் இல்லாமல் வெறும் இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறை மூலமாக மட்டுமே ஹோமோ சேப்பியன்ஸ் இனம் பரிணாம வளர்ச்சி அடைந்ததாக வெறும் 15 சதவீத மக்கள் மட்டுமே நினைக்கின்றனர்; கோடிக்கணக்கான ஆண்டுகளாக நீடித்த ஒரு செயல்முறையில் துவக்ககால உயிரினங்களிலிருந்து மனிதர்கள் தோன்றியிருக்கக்கூடும், ஆனால் இந்த ஒட்டுமொத்த நாடகத்தையும் கடவுள்தான்

அரங்கேற்றினார் என்று 32 சதவீத மக்கள் கூறுகின்றனர். பைபிளில் கூறப்பட்டுள்ளதைப்போல, கடந்த 10,000 ஆண்டுகளின்போது ஏதோ ஒரு காலகட்டத்தில், மனிதர்களுடைய இப்போதைய வடிவில் கடவுள் அவர்களைப் படைத்ததாக 46 சதவீத மக்கள் நம்புகின்றனர். கல்லூரிகளில் மூன்று ஆண்டுகளைக் கழிப்பது இந்தக் கண்ணோட்டங்கள்மீது எந்தத் தாக்கத்தையும் ஏற்படுத்துவதில்லை." அதே கருத்துக் கணிப்பு இன்னொரு கண்டுபிடிப்பையும் வெளியிட்டது: "இளங்கலைப் பட்டதாரிகளிடையே 46 சதவீதத்தினர் பைபிளில் கூறப்பட்டுள்ள படைப்புக் கதையை நம்புகின்றனர். ஆனால் வெறும் 14 சதவீதத்தினரே மனிதர்கள் எந்தவிதமான தெய்விகக் கண்காணிப்பும் இல்லாமல் பரிணாம வளர்ச்சி அடைந்தனர் என்று நம்புகின்றனர். முதுகலைப் பட்டம் மற்றும் முனைவர் பட்டம் பெற்றவர்களிடையேகூட, 25 சதவீதத்தினர் பைபிளை நம்புகின்றனர், ஆனால் 29 சதவீதத்தினரே இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறை மட்டும்தான் நம்முடைய இனம் உருவானதற்குக் காரணம் என்று கருதுகின்றனர்."

பரிணாம வளர்ச்சியைப் பற்றிக் கற்றுக் கொடுக்கும் திறன் பள்ளிகளுக்கு இல்லை என்பது வெளிப்படையாகத் தெரிந்தாலும், அது பற்றிக் கற்றுக் கொடுக்கப்படவே கூடாது என்று இன்றும் வலியுறுத்திக் கொண்டிருக்கின்ற மத வெறியர்கள், அதற்கு ஒரு மாற்றை முன்வைக்கின்றனர். அதாவது, குழந்தைகளுக்குப் பரிணாம வளர்ச்சியைப் பற்றிக் கற்றுக் கொடுப்பதோடு கூடவே, ஓர் உயர்வான அறிவுதான் (அதைக் கடவுள் என்று அழைக்கலாம்) அனைத்து உயிரினங்களையும் வடிவமைத்துப் படைத்தது என்று முழங்குகின்ற நுண்ணறிவுசார் வடிவமைப்புக் கோட்பாடும் அவர்களுக்குக் கற்றுக் கொடுக்கப்பட வேண்டும் என்று அவர்கள் கூறுகின்றனர். "குழந்தைகளுக்கு இரண்டு கோட்பாடுகளையும் கற்றுக் கொடுங்கள். இரண்டில் ஒன்றை அவர்களே தேர்ந்தெடுத்துக் கொள்ளட்டும்," என்று அந்த வெறியர்கள் கூறுகின்றனர்.

சார்புக் கோட்பாட்டைப் பற்றியும் குவாண்டம் விசையியலைப் பற்றியும் யாருக்கும் அக்கறை இருப்பதுபோலத் தெரியவில்லை, ஆனால் பரிணாம வளர்ச்சிக் கோட்பாட்டிற்கு மட்டும் ஏன் இவ்வளவு எதிர்ப்புகள் கிளம்புகின்றன? பருப்பொருள், ஆற்றல், விண்வெளி, காலம் ஆகியவற்றைப் பற்றிய மாற்றுக் கோட்பாடுகள் குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுக்கப்பட வேண்டும் என்று ஏன் எந்த அரசியல்வாதியும் குரலெழுப்புவதில்லை? டார்வினின் யோசனைகள் துவக்கத்தில் ஐன்ஸ்டீன் மற்றும் வெர்னர் ஹைசன்பர்க்கின் அதிர

வைக்கின்ற கண்டுபிடிப்புகளைவிட அதிகம் அச்சுறுத்துவதாக இருக்கவில்லை. பரிணாம வளர்ச்சிக் கோட்பாடு ‘வலியதே வெல்லும்’ என்ற தெளிவான, எளிய, மற்றும் சாதாரணக் கொள்கையின் அடிப்படையில் அமைந்துள்ளது. இதற்கு நேர்மாறாக, “காலத்தையும் வெளியையும் நம்மால் திரிக்க முடியும், ஒன்றுமில்லாத ஒன்றிலிருந்து ஏதோ ஒன்று தோன்றுவதற்கான சாத்தியம் உள்ளது, ஒரு பூனையால் ஒரே நேரத்தில் உயிரோடு இருக்கவும் முடியும், இறந்து போயிருக்கவும் முடியும்,” என்று சார்புக் கோட்பாடும் குவாண்டம் விசையியலும் வாதிடுகின்றன. இந்த முழக்கம் நம்முடைய பொது அறிவைக் கேலி செய்வதாக இருந்தும்கூட, அதிர்ச்சியூட்டும் இத்தகைய யோசனைகளிலிருந்து அப்பாவிப் பள்ளிக்குழந்தைகளைக் காப்பாற்ற வேண்டும் என்று யாரும் போர்க்கொடி உயர்த்துவதில்லை. அது ஏன்?

சார்புக் கோட்பாடு யாரையும் கோபப்படுத்துவதில்லை. ஏனெனில், நாம் பெரிதும் போற்றுகின்ற நம்பிக்கைகளுக்கு அது எந்த விதத்திலும் முரணாக இல்லை. காலமும் வெளியும் முழுமையானவையா அல்லது ஒப்பு நோக்கத்தக்கவையா என்பது பற்றிப் பெரும்பாலான மக்களுக்கு எள்ளளவுகூட அக்கறையில்லை. காலத்தையும் வெளியையும் வளைக்க முடியும் என்று நீங்கள் நினைத்தால், தாராளமாக அவற்றை வளையுங்கள். அதைப் பற்றி எனக்கு என்ன கவலை? ஆனால், இதற்கு நேரெதிராக, டார்வின் நம்மிடமிருந்து நம்முடைய ஆன்மாக்களைப் பறித்துள்ளார். பரிணாம வளர்ச்சிக் கோட்பாட்டை நீங்கள் உண்மையிலேயே புரிந்து கொண்டால், ஆன்மா என்ற ஒன்று இல்லை என்பதை நீங்கள் புரிந்து கொள்ளுவீர்கள். இது சமயப் பற்றுக் கொண்ட கிறித்தவர்களுக்கும் இஸ்லாமியர்களுக்கும் மட்டுமல்லாமல், மதரீதியான எந்தவொரு தெளிவான யோசனையும் இல்லாத சமயச்சார்பற்ற மக்கள் பலருக்கும்கூடத் திகிலூட்டுவதாக இருக்கிறது. ஆனாலும், வாழ்நாள் முழுவதும் நிலையாக இருக்கின்ற ஒரு நிரந்தரமான சுய மைய அம்சம் ஒவ்வொரு மனிதனிடமும் இருக்கிறது என்றும், மரணத்திற்குப் பிறகும் அது கட்டுக்குலையாமல் இருக்கிறது என்றும் அவர்கள் நம்ப விரும்புகின்றனர்.

கூறு போடப்பட முடியாத இந்த சுய மைய அம்சமானது எதையும் இழக்காமலும் எதையும் ஆட்கொள்ளாமலும் கணத்திற்குக் கணம் தொடர்ந்து நீடிக்கிறது. நரம்பணுக்கள், ஹார்மோன்கள், மற்றும் தசைகளின் செயல்பாட்டினால் என்னுடைய உடலும் மூளையும் ஒரு தொடர்ச்சியான மாற்றச் செயல்முறைக்கு உட்படுகின்றன. என்னுடைய ஆளுமையும் விருப்பங்களும் உறவுகளும் எப்போதும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை. காலப்போக்கில் அவை முற்றிலுமாக மாறக்கூடும்.

ஆனால் இவை எல்லாவற்றுக்கும் கீழே, பிறப்பிலிருந்து இறப்புவரை நான் அதே நபராகத்தான் இருக்கிறேன். மரணத்திற்குப் பிறகும் நான் அப்படியே இருப்பேன் என்று நான் நினைக்கிறேன்.

துரதிர்ஷ்டவசமாக, என்னுடைய உண்மையான சுயம் என்பது கூறுபோடப்பட முடியாத, மாற்றப்பட முடியாத, நிரந்தரமான ஒரு மைய அம்சம் என்ற யோசனையைப் பரிணாம வளர்ச்சிக் கோட்பாடு நிராகரிக்கிறது. யானைகளில் தொடங்கி, கருவாலி மரங்கள், உயிரணுக்கள், மற்றும் டிஎன்ஏ மூலக்கூறுகள்வரை, உயிரியல்ரீதியான அனைத்து அம்சங்களும், தொடர்ந்து ஒன்றோடொன்று சேர்ந்து கொண்டும் பிரிந்து கொண்டும் இருக்கின்ற சிறிய, எளிய பாகங்களால் ஆனவை என்று பரிணாம வளர்ச்சிக் கோட்பாடு கூறுகிறது. புதிய கூட்டுசேருதல்கள் மற்றும் பிரிதல்களின் விளைவாக யானைகளும் உயிரணுக்களும் படிப்படியாக வளர்ச்சியடைந்துள்ளன. கூறுபோடப்பட முடியாத மற்றும் மாற்றப்பட முடியாத ஒன்று இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறையின் வாயிலாக நிச்சயமாக உருவாக்கப்பட்டிருக்க முடியாது.

எடுத்துக்காட்டாக, மனிதக் கண் என்பது விழிவில்லைகள், கருவிழிப்படலம், விழித்திரை போன்ற எண்ணற்றச் சிறிய பாகங்களைக் கொண்ட மிகச் சிக்கலான ஓர் அமைப்புமுறையாகும். இத்தனை பாகங்களுடன் அது முழுமையாகத் திடீரென்று எங்கிருந்தோ முளைத்துவிடவில்லை. மாறாக, பல லட்சக்கணக்கான ஆண்டுகளின் ஊடாகப் படிப்படியாக மிக மெதுவாக அது பரிணாம வளர்ச்சி அடைந்தது. நம்முடைய கண் 10 லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த ஹோமோ எரெக்டஸின் கண்ணைப் பெரிதும் ஒத்துள்ளது. 50 லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த ஆஸ்திரேலோபித்தெகஸ் இனத்தின் கண்ணோடு நம்முடைய கண் லேசாக ஒத்திருக்கிறது.15 கோடி ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த டிரையோலெஸ்டஸின் கண்ணிலிருந்து அது மிகவும் வேறுபட்டுள்ளது. பல கோடிக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பாக நம்முடைய புவியில் வாழ்ந்த ஓரணு உயிரிகளுக்கும் அதற்கும் இடையே எந்தப் பொதுவான விஷயமும் இருப்பதுபோலத் தெரியவில்லை.

ஆனாலும், ஓரணு உயிரிகளுக்குக்கூட, இருட்டிலிருந்து வெளிச்சத்தை வேறுபடுத்திப் பார்ப்பதற்கும் ஒன்றை நோக்கி நகருவதற்கும் உதவுகின்ற நுண்ணிய உள்ளுறுப்புகள் இருக்கின்றன. அத்தகைய பண்டைய உணரிகளிலிருந்து மனிதக் கண்ணுக்கு இட்டு வந்துள்ள பாதை ஏகப்பட்ட நெளிவுசுளிவுகளைக் கொண்ட மிக நீளமான பாதையாகும். கண் என்பது பல்வேறு பாகங்களைக் கொண்ட

ஒன்று. ஒருசில தலைமுறைகளுக்கு ஒருமுறை, ஒரு சிறு மரபுச்சிதைவு மாற்றம் இந்த பாகங்களில் ஏதோ ஒன்றில் லேசான மாற்றங்களைச் செய்தால், எடுத்துக்காட்டாக, கருவிழிப்படலம் சற்று அதிகமாக வளைந்தால், பல கோடிக்கணக்கான தலைமுறைகளுக்குப் பிறகு அந்த மாற்றங்கள் ஒரு மனிதக் கண்ணாக உருவெடுக்கக்கூடும். கண் என்பது எந்த உள்ளுறுப்புகளும் அற்ற ஒரு முழுமையான அங்கமாக இருந்தால், இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறை மூலம் அதனால் ஒருபோதும் வளர்ச்சி அடைந்திருக்க முடியாது.

அதனால்தான், ஆன்மாக்கள் குறித்த யோசனையைப் பரிணாம வளர்ச்சிக் கோட்பாட்டினால் ஏற்றுக் கொள்ள முடிவதில்லை - குறிப்பாக, ஆன்மா என்பது கூறுபோட்டப்பட முடியாத, மாற்றமற்ற, நிரந்தரமான ஓர் அம்சம் என்று நாம் கூறும் பட்சத்தில்! அப்படிப்பட்ட ஓர் அம்சம் ஒரு படிப்படியான வளர்ச்சிச் செயல்முறையின் விளைவாக உருவாகியிருக்க முடியாது. இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறையால் ஒரு மனிதக் கண்ணை உருவாக்க முடியும். ஏனெனில், அந்தக் கண்களுக்குப் பல பாகங்கள் இருக்கின்றன. ஆனால் ஆன்மாவுக்கு பாகங்கள் எதுவும் இல்லை. சேப்பியன்ஸின் ஆன்மா எரெக்டஸின் ஆன்மாவிலிருந்து படிப்படியாக வளர்ச்சியடைந்தது என்றால், அந்தப் படிப்படியான நடவடிக்கைகள் எவை? ஆன்மாவின் ஏதோ ஒரு பகுதி எரெக்டஸில் இருப்பதைவிட சேப்பியன்ஸில் அதிகமாக வளர்ச்சியடைந்துள்ளதா? ஆனால் ஆன்மாவுக்குத்தான் எந்த பாகங்களும் கிடையாதே!

மனித ஆன்மாக்கள் பரிணாம வளர்ச்சி அடையவில்லை, மாறாக, ஓர் ஒளிமயமான நாளன்று அவை முழுமையாகத் தோன்றின என்று நீங்கள் வாதிடக்கூடும். ஆனால் துல்லியமாக எது அந்த ஒளிமயமான நாள்? மனிதகுலத்தின் பரிணாம வளர்ச்சியை நாம் கூர்ந்து நோக்கும்போது, அந்த ஒளிமயமான நாளைக் கண்டுபிடிப்பது நம்மை தர்மசங்கடத்தில் நெளிய வைக்கும் அளவுக்குக் கடினமானதாக இருக்கிறது. இவ்வுலகில் தோன்றி மறைந்த ஒவ்வொரு மனிதனும் ஆணின் விந்தணு ஒன்று ஒரு பெண் முட்டையைக் கருவூட்டியதன் விளைவாக உருவானவன்தான். ஆன்மாவைப் பெற்ற முதல் குழந்தையைப் பற்றி சிந்தித்துப் பாருங்கள். அக்குழந்தை தன்னுடைய தாயையும் தந்தையையும் ஒத்திருந்தான், ஆனால் இதில் ஒரே ஒரு வித்தியாசம் இருந்தது. அக்குழந்தைக்கு மட்டும் ஆன்மா இருந்தது, அவனுடைய பெற்றோருக்கு ஆன்மா இருக்கவில்லை. ஒரு குழந்தையின் கருவிழிப்படலம் அவனுடைய பெற்றோரின் கருவிழிப்படலங்களைவிட சற்றுக் கூடுதலாக வளைந்திருந்தால், நம்முடைய உயிரியல் அறிவைக் கொண்டு அதற்கு

உயிரியல்ரீதியான ஒரு விளக்கத்தை நம்மால் கொடுக்க முடியும். ஒரே ஓர் உயிரணுவில் ஏற்படக்கூடிய ஒரு லேசான மரபுச்சிதைவு மாற்றம் அதற்குக் காரணமாக இருக்கலாம். ஆனால், ஆன்மா எதுவும் இல்லாத பெற்றோருக்குப் பிறக்கின்ற ஒரு குழந்தைக்கு ஓர் ஆன்மா இருப்பதை உயிரியலால் விளக்க முடியாது. மாற்றங்களுக்கும் மரணத்திற்கும் எதிரான பாதுகாப்புடன்கூடிய ஒரு மைய அம்சம் என்று கூறப்படுகின்ற ஆன்மாவை ஒரு விலங்கிற்குக் கொடுப்பதற்கு ஒரே ஒரு மரபுச்சிதைவு மாற்றமோ அல்லது பல மரபுச்சிதைவு மாற்றங்களோ போதுமா?

எனவே, ஆன்மாக்களின் இருத்தலைப் பரிணாம வளர்ச்சிக் கோட்பாட்டுடன் ஒருபோதும் முடிச்சுப் போட முடியாது. பரிணாம வளர்ச்சி என்றால் மாற்றம் என்று பொருள். நிரந்தரமாக நீடிக்கின்ற விஷயங்களை உருவாக்கக்கூடிய திறன் அதற்கு இல்லை. ஒரு பரிணாம வளர்ச்சிக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, மனிதனின் மைய அம்சத்திற்கு மிக நெருக்கமாக இருக்கக்கூடிய ஒன்று உள்ளது என்றால் அது நம்முடைய டிஎன்ஏதான். ஆனால், டிஎன்ஏ மூலக்கூறு மரபுச்சிதைவு மாற்றத்தின் இருப்பிடமாக இருக்கிறதே அன்றி, நிலைபேறுடைமையின் இருப்பிடமாக அல்ல. இந்த உண்மை, தங்களுடைய ஆன்மாக்களை விட்டுக்கொடுப்பதைவிடப் பரிணாம வளர்ச்சிக் கோட்பாட்டை நிராகரிப்பதைத் தேர்ந்தெடுக்க விரும்புகின்ற ஏராளமான மக்களை அச்சுறுத்துவதாக உள்ளது.

## பங்குச் சந்தைக்கு ஏன் பிரக்ஞை இருப்பதில்லை?

புவியில் உள்ள அனைத்து விலங்குகளிலும் ஹோமோ சேப்பியன்ஸுக்கு மட்டுமே பிரக்ஞையுடன்கூடிய ஒரு மனம் இருக்கிறது என்பது, மனிதகுலம்தான் மிகவும் உயர்வானது என்ற கோட்பாட்டை நியாயப்படுத்துவதற்குப் பயன்படுத்தப்படுகின்ற இன்னொரு கட்டுக்கதையாகும். மனம் ஆன்மாவிலிருந்து மிகவும் வேறுபட்டது. மனம் ஏதோ மர்மமான, என்றென்றும் நீடித்து நிலைக்கின்ற ஒரு விஷயம் அல்ல. அது கண்ணைப்போலவோ அல்லது மூளையைப்போலவோ ஓர் உறுப்பும் அல்ல. மாறாக, மனம் என்பது வேதனை, இன்பம், கோபம், அன்பு போன்ற அகவயமான அனுபவங்களின் ஓர் ஓட்டமாகும். மனரீதியான இந்த அனுபவங்கள் ஒன்றுக்கொன்று தொடர்புபடுத்தப்பட்டுள்ள உணர்வுகளாலும் உணர்ச்சிகளாலும் எண்ணங்களாலும் ஆனவை. இவை கணநேரம் பளிச்சிட்டுவிட்டு உடனடியாக மறைந்துவிடுகின்றன. பிறகு வேறு சில அனுபவங்கள் ஒரு கணம் தோன்றி மறுகணம் மறைந்துவிடுகின்றன.

(இதைப் பற்றி நாம் நினைத்துப் பார்க்கும்போது, உணர்வுகள், உணர்ச்சிகள், எண்ணங்கள் என்று நம்முடைய அனுபவங்களை நாம் வகைப்படுத்துகிறோம் என்றாலும்கூட, உண்மையில் அவை அனைத்தும் ஒன்றாகப் பின்னிப் பிணைந்துள்ளன என்பதை நாம் உணருகிறோம்.) கட்டுப்படுத்தப்பட முடியாத இந்தத் தொடர்ச்சியான அனுபவங்கள்தான் பிரக்ஞையுடன்கூடிய எண்ண ஓட்டமாகும். அழிவற்ற ஆன்மாவைப் போலன்றி, மனத்திற்குப் பல பாகங்கள் உள்ளன. மனம் தொடர்ந்து மாறிக் கொண்டே இருக்கிறது. எனவே, அது நீடித்து நிலைக்கின்ற ஒன்று என்று எண்ணுவதற்கு எந்தக் காரணமும் இல்லை.

ஆன்மா என்பது சிலர் ஏற்றுக் கொள்ளுகின்ற, ஆனால் மற்றவர்கள் நிராகரிக்கின்ற ஒரு கட்டுக்கதை. இதற்கு நேர்மாறாக, பிரக்ஞையுடன்கூடிய எண்ண ஒட்டம் என்பது ஒரு திட்டவட்டமான யதார்த்தமாகும். அதை நாம் ஒவ்வொரு கணமும் நேரடியாக எதிர்கொள்ளுகிறோம். உலகிலுள்ள மிக நிச்சயமான விஷயம் அது. சந்தேகம் நம்மை ஆட்கொண்டு, "அகவயமான அனுபவங்கள் உண்மையிலேயே இருக்கின்றனவா?" என்று நம்மை நாமே கேட்டுக் கொள்ளும்போதுகூட, நாம் சந்தேகத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறோம் என்று நாம் உறுதியாகக் கூறலாம்.

மன ஓட்டத்தின் மையமாகத் திகழுகின்ற பிரக்ஞையுடன்கூடிய அனுபவங்கள் என்பவை உண்மையில் என்ன? அகவயமான ஒவ்வொரு அனுபவத்திற்கும் இரண்டு அடிப்படைப் பண்புநலன்கள் உள்ளன. உணர்வும் விருப்பமும்தான் அவை. ரோபாட்டுகளுக்கும் கணினிகளுக்கும் எந்தப் பிரக்ஞையும் இல்லை. ஏனெனில், பல்வேறு விஷயங்களைச் செய்யக்கூடிய திறன்கள் அவற்றுக்கு இருந்தும்கூட அவை எதையும் உணருவதுமில்லை, எதையும் விரும்புவதுமில்லை. ஒரு ரோபாட்டின் பேட்டரி ஆற்றல் காலியாகவிருக்கும்போது, அது பற்றி அந்த ரோபாட்டின் மையச் செயலகத்திற்குச் சமிக்கைகளை அனுப்புவதற்கான 'ஆற்றல் உணரி' ஒன்று அந்த ரோபாட்டில் இருக்கக்கூடும். அந்தச் சமிக்கைகள் அனுப்பப்பட்டவுடன், அந்த ரோபாட் ஒரு மின்காந்தசக்தி வாயை நோக்கிச் சென்று, அதில் தன்னைப் பொருத்திக் கொண்டு, தன்னுடைய பேட்டரிக்கு மீண்டும் ஆற்றல் ஏற்றிக் கொள்ளும். ஆனால், இந்த ஒட்டுமொத்தச் செயல்முறையின் எந்தவொரு கணத்திலும் அந்த ரோபாட் எந்த உணர்வையும் அனுபவிப்பதில்லை. இதற்கு நேரெதிராக, தன்னுடைய ஆற்றல் முழுவதும் வற்றிப் போயுள்ள ஒரு மனிதன் பசியை உணருகிறான், அந்த இனிமையற்ற உணர்வுக்கு அவன் ஒரு

முற்றுப்புள்ளி வைக்க விரும்புகிறான். அதனால்தான், மனிதர்கள் பிரக்ஞையுடன்கூடியவர்கள் என்றும் ரோபாட்டுகள் அப்படிப்பட்டவை அல்ல என்றும் நாம் கூறுகிறோம். அதனால்தான், மக்கள் பசியாலும் களைப்பாலும் துவண்டு விழும்வரை அவர்களை வேலை வாங்குவது ஒரு குற்றமாகக் கருதப்படுகிறது. ஆனால், ரோபாட்டுகளுடைய பேட்டரிகளின் சக்தி தீரும்வரை அவற்றை வேலை வாங்குவதில் எந்தத் தவறும் இல்லை.

விலங்குகளுக்கு இது பொருந்துமா? அவை பிரக்ஞையுடைய உயிரினங்களா? அவற்றுக்கு அகவயமான அனுபவங்கள் ஏற்படுகின்றனவா? ஒரு குதிரை முற்றிலுமாகக் களைத்து விழும்வரை அதைக் கட்டாயப்படுத்தி வேலை வாங்குவது சரிதானா? நாம் முன்பே பார்த்ததுபோல, அனைத்துப் பாலூட்டிகளும் பறவைகளும், ஊர்வனவற்றில் சிலவும், சில வகை மீன்களும் பல்வேறு உணர்வுகளையும் உணர்ச்சிகளையும் கொண்டுள்ளன என்று உயிரியல் தற்சமயம் வாதிடுகிறது. ஆனாலும், உணர்வுகளும் உணர்ச்சிகளும் 'உயிர்வேதித் தரவுச் செயலாக்கப் படிமுறைத் தீர்வுகள்' என்று மிகச் சமீபத்தியக் கோட்பாடுகள் கூறுகின்றன. ரோபாட்டுகளும் கணினிகளும் அகவயமான அனுபவங்கள் ஏதுமின்றித் தரவுச் செயலாக்கம் செய்கின்றன என்பதை நாம் அறிந்திருப்பதால், விலங்குகளின் விஷயத்திலும் இது உண்மையாக இருக்கக்கூடுமா? மனிதர்களில்கூட, மூளையிலுள்ள சில உணர்வுகள் மற்றும் உணர்ச்சிகள் தொடர்பான மின்சுற்றுகள் தகவல்களை உட்கிரகித்துக் கொண்டு எந்தப் பிரக்ஞையும் இன்றித் தன்னிச்சையான செயல்நடவடிக்கைகளை எடுக்கின்றன என்பதை நாம் அறிவோம். அப்படியானால், விலங்குகளுக்கு உரியவையாக நாம் கருதுகின்ற பசி, பயம், அன்பு, விசுவாசம் போன்ற உணர்வுகளுக்கும் உணர்ச்சிகளுக்கும் பின்னால் மறைந்திருப்பது அகவயமான அனுபவங்கள் அல்ல, மாறாக, பிரக்ஞையற்றப் படிமுறைத் தீர்வுகள்தான் என்று நாம் கருத வேண்டுமா?

நவீனத் தத்துவத்துவத்தின் தந்தை என்று கருதப்படுகின்ற ரெனே டேக்கார்ட் இக்கோட்பாட்டை உறுதிப்படுத்தினார். மனிதர்கள் மட்டுமே உணர்வுகளையும் விருப்பங்களையும் அனுபவிக்கின்றனர் என்றும், பிற விலங்குகள் அனைத்தும் (ரோபாட்டுகளையும் தானியங்கி விற்பனை இயந்திரங்களையும்போல) பிரக்ஞை ஏதுமின்றி இயந்திரத்தனமாகச் செயல்படுகின்றன என்றும் பதினேழாம் நூற்றாண்டில் அவர் கூறினார். ஒரு மனிதன் ஒரு நாயை எட்டி உதைக்கும்போது, அந்த நாய் எந்த உணர்வையும் அனுபவிப்பதில்லை.

காபி தயாரிக்கின்ற ஒரு தானியங்கி இயந்திரம் எப்படி எந்த உணர்வும் விருப்பமும் இன்றி வெறுமனே லேசான இரைச்சல் ஒலியோடு வேலை செய்கிறதோ, அதேபோல அந்த நாயும் தன்னிச்சையாக விலகி ஓடுகிறது, ஊளையிடுகிறது என்று அவர் கூறினார்.

டேக்கார்ட்டின் காலகட்டத்தில் இக்கோட்பாடு பரவலாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்த மருத்துவர்களும் அறிஞர்களும், உயிரோடு இருந்த நாய்களுக்கு மயக்க மருந்து எதுவும் கொடுக்காமலும் எந்தத் தயக்கமும் இல்லாமலும் அவற்றின் உடல்களை அறுத்து, அவற்றின் உள்ளுறுப்புகள் வேலை செய்த விதத்தைக் கண்காணித்தனர். இதில் தவறு எதுவும் இருந்ததாக அவர்கள் கருதவில்லை. ஒரு தானியங்கி விற்பனை இயந்திரத்தின் மேல்மூடியைத் திறந்து அதனுள் இருக்கின்ற கியர்களும் பிற பாகங்களும் எப்படி இயங்குகின்றன என்பதைப் பார்ப்பதில் எப்படி நாம் எந்தத் தவறையும் காணுவதில்லையோ, அதேபோல அவர்கள் நடந்து கொண்டனர். இருபத்தோராம் நூற்றாண்டின் துவக்கத்தில், விலங்குகளுக்கு எந்தப் பிரக்ஞையும் இல்லை என்றும், அப்படியே இருந்தாலும் அவை ஒரு வித்தியாசமான, மிகவும் தாழ்ந்த வகையான பிரக்ஞையைக் கொண்டிருப்பதாகவும் வாதிடுகின்ற ஏராளமான மக்கள் இன்னும் இருக்கின்றனர்.

விலங்குகள் நம்மைப்போலவே பிரக்ஞையுடன்கூடிய மனங்களைக் கொண்டுள்ளனவா என்பதைத் தீர்மானிப்பதற்கு, மனம் எப்படிச் செயல்படுகிறது என்பதையும், அது என்ன பங்காற்றுகிறது என்பதையும் நாம் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும். இவை மிகக் கடினமான கேள்விகள், ஆனால் இவற்றைப் பற்றி யோசிப்பதற்குச் சிறிது நேரத்தை அர்ப்பணிப்பது மதிப்பு வாய்ந்ததுதான். ஏனெனில், அடுத்து வரவிருக்கும் பல அத்தியாயங்களில் அதுதான் கதாநாயகனாக வலம் வரப் போகிறது. மனம் என்பது என்ன என்பது நமக்குத் தெரிந்திருக்காவிட்டால், செயற்கை நுண்ணறிவு போன்ற நவீனத் தொழில்நுட்பங்களின் முழுமையான தாக்கத்தை நம்மால் புரிந்து கொள்ள முடியாது. எனவே, விலங்குகளின் மனங்களைப் பற்றிய குறிப்பிட்டக் கேள்வியை இப்போதைக்கு ஒதுக்கி வைத்துவிட்டு, பொதுவாக மனத்தைப் பற்றியும் பிரக்ஞையைப் பற்றியும் அறிவியல் என்ன தெரிந்து வைத்திருக்கிறது என்பதை நாம் ஆய்வு செய்யலாம். மனிதப் பிரக்ஞையைப் பற்றிய ஆய்வுகளிலிருந்து பெறப்பட்டுள்ள எடுத்துக்காட்டுகள்மீது நாம் கவனம் செலுத்தலாம். இவை நமக்கு எளிதில் கிடைக்கின்றன. பிறகு நாம் விலங்குகளைப் பற்றிப் பார்த்துவிட்டு, மனிதர்களுடைய விஷயத்தில் உண்மையாக இருப்பவை

பிற விலங்குகளுடைய விஷயத்திலும் உண்மையாக இருக்கின்றனவா என்பதை நாம் ஆய்வு செய்யலாம்.

வெளிப்படையாகக் கூற வேண்டுமென்றால், மனத்தையும் பிரக்ஞையையும் பற்றி அறிவியலுக்கு மிகக் குறைவாகவே தெரியும் என்பது வியப்பூட்டும் ஒரு செய்தி. மூளையில் நிகழுகின்ற மின்வேதி எதிர்வினைகள்தான் பிரக்ஞையை உருவாக்குகின்றன என்றும், மனரீதியான அனுபவங்கள் சில இன்றியமையாத தரவுச் செயலாக்கச் செயல்பாடுகளை நிறைவேற்றுகின்றன என்றும் தற்போதைய கோட்பாடு கூறுகிறது. ஆனால், மூளையில் நிகழுகின்ற பல்வேறு உயிர்வேதி எதிர்வினைகளும் மின்னோட்டங்களும் சேர்ந்து எப்படி வேதனை, கோபம், அன்பு போன்ற அகவயமான அனுபவங்களை உருவாக்குகின்றன என்பது பற்றி யாருக்கும் எந்த யோசனையும் இல்லை. இன்னும் பத்து இருபது ஆண்டுகளில் இதற்கான ஒரு திட்டவட்டமான விளக்கம் நமக்குக் கிடைக்கக்கூடும். ஆனால் இன்று நம்மிடம் அத்தகைய விளக்கம் எதுவும் இல்லை. இவ்விஷயத்தை நாம் தெளிவாக அறிந்திருப்பது நல்லது.

'எம்ஆர்ஐ' ஸ்கேன் என்று அழைக்கப்படுகின்ற வினைசார் காந்த ஒத்ததிர்வு வரைவையும், மூளையில் பதிக்கப்படும் மின்முனைகளையும் பிற நவீனக் கருவிகளையும் பயன்படுத்தி, மூளையிலுள்ள மின்னோட்டங்களுக்கும் அகவயமான அனுபவங்கள் பலவற்றுக்கும் இடையேயான நிரந்தரமான தொடர்புகளையும் தற்செயலான தொடர்புகளையும்கூட அறிவியலறிஞர்கள் ஏற்கனவே கண்டுபிடித்துள்ளனர். மூளையில் நிகழுகின்ற நடவடிக்கைகளை வெறுமனே பார்ப்பதன் மூலம், நீங்கள் விழித்திருக்கிறீர்களா, கனவு கண்டு கொண்டிருக்கிறீர்களா, அல்லது ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கிறீர்களா என்பதை அறிவியலறிஞர்களால் தெரிந்து கொள்ள முடியும். ஒரு படத்தை உங்கள் கண்களுக்கு முன்னால் ஒரு கணம் காட்டிவிட்டு, அந்தப் படத்தைப் பற்றிய பிரக்ஞை உங்களுக்கு இருக்கிறதா இல்லையா என்பதை உங்களிடம் கேட்காமலேயே அவர்களால் கண்டுபிடித்துவிட முடியும். மூளையிலுள்ள குறிப்பிட்ட நரம்பணுக்களை, குறிப்பிட்ட மனக்காட்சியோடு அவர்களால் தொடர்புபடுத்த முடிந்துள்ளது. எடுத்துக்காட்டாக, ஒருவருடைய மூளையில் இருக்கின்ற ஒரு 'பில் கிளிண்டன்' நரம்பணுவையும், ஒரு 'அர்னால்டு ஸ்வார்ஷெனெகர்' நரம்பணுவையும் அவர்களால் கண்டுபிடிக்க முடியும். ஒருவருடைய மூளையில் 'பில் கிளிண்டன்' நரம்பணு இயங்கிக் கொண்டிருக்கும்போது, அமெரிக்காவின் 42வது அதிபரான பில் கிளிண்டனைப் பற்றி அந்நபர் சிந்தித்துக்

கொண்டிருக்கிறார் என்று அர்த்தம். அர்னால்டு ஸ்வார்ஷெனெகரின் படத்தை நீங்கள் அவரிடம் காட்டினால், அதற்குரிய நரம்பணு முடுக்கப்படும்.

மூளையின் ஒரு குறிப்பிட்டப் பகுதியில் ஒரு மின்புயல் உருவானால், நீங்கள் கோபமாக இருக்கிறீர்கள் என்பதை அறிவியலறிஞர்கள் அறிவர். இப்புயல் அடங்கி வேறொரு பகுதி முடுக்கப்படும்போது, நீங்கள் அன்பை அனுபவித்துக் கொண்டிருக்கிறீர்கள். மின்சக்தியைக் கொண்டு சரியான நரம்பணுக்களை முடுக்கிவிடுவதன் மூலம் கோப உணர்வையோ அல்லது அன்புணர்வையோ அறிவியலறிஞர்களால் உங்களுக்குள் தூண்டிவிட முடியும். ஆனால் எதிர்மின்னணுக்கள் ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்திற்கு நகருவது எப்படி பில் கிளிண்டன் என்ற அகவயமான உருவமாகவோ, அல்லது கோபம் அல்லது அன்பு போன்ற அகவயமான உணர்வாகவோ மாறுகிறது?

இதற்கான மிகப் பொதுவான விளக்கம் இப்படிச் சுட்டிக்காட்டுகிறது: மூளை என்பது மிகச் சிக்கலான ஓர் அமைப்புமுறையாகும். அதில் 8,000 கோடி நரம்பணுக்கள் எண்ணற்ற, சிக்கலான பிணையங்களாகப் பிணைக்கப்பட்டுள்ளன. கோடிக்கணக்கான நரம்பணுக்கள் கோடிக்கணக்கான மின்சமிக்கைகளை முன்னும் பின்னும் அனுப்பும்போது அகவயமான அனுபவங்கள் உருவாகின்றன. ஒவ்வொரு மின்சமிக்கை அனுப்பப்படுவதும் பெறப்படுவதும் ஓர் எளிய உயிர்வேதிச் செயல்முறை என்றாலும்கூட, இந்தச் சமிக்கைகளுக்கு இடையேயான உறவாடல் அதிகச் சிக்கலான ஒன்றை உருவாக்குகிறது. பிரக்ஞையுடன்கூடிய எண்ண ஓட்டம்தான் அது. இதே செயல்பாட்டை நாம் பிற துறைகளிலும் பார்க்கலாம். ஒரு கார் நகர்ந்து செல்லுவது ஒரு சாதாரணமான நடவடிக்கை, ஆனால் ஒரே நேரத்தில் லட்சக்கணக்கான கார்கள் நகர்ந்து கொண்டும் ஒரு காரின் நகர்வு இன்னொரு காரின்மீது தாக்கம் ஏற்படுத்திக் கொண்டும் இருக்கும்போது, போக்குவரத்து நெரிசல்கள் ஏற்படுகின்றன. பங்குச் சந்தையில் ஒரே ஒரு பங்கை வாங்குவதோ அல்லது விற்பதோ மிகவும் எளிது, ஆனால் லட்சக்கணக்கான தரகர்கள் லட்சக்கணக்கான பங்குகளை வாங்குவதும் விற்பதும் நிபுணர்களைக்கூடத் தடுமாறச் செய்யக்கூடிய பொருளாதார நெருக்கடிகளுக்கு வழி வகுத்துவிடும்.

ஆனால் இந்த விளக்கம் உண்மையில் எதையும் விளக்கவில்லை. பிரச்சனை சிக்கலானது என்பதை மட்டுமே அது உறுதிப்படுத்துகிறது, அவ்வளவுதான். எப்படி ஒரு நிகழ்வு (கோடிக்கணக்கான மின்சமிக்கைகள் ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்தை நோக்கிப் போவது) மிகவும் வித்தியாசமான இன்னொரு நிகழ்வை (கோபம்,

அன்பு போன்ற அகவயமான உணர்வுகள்) உருவாக்குகிறது என்பது பற்றிய எந்த உள்நோக்கையும் அது வழங்கவில்லை. போக்குவரத்து நெரிசல்கள், பொருளாதார நெருக்கடிகள் போன்ற பிற சிக்கலான செயல்முறைகளை ஒப்புமையாகக் கூறுவது சரியான விளக்கமல்ல. எது ஒரு போக்குவரத்து நெரிசலை உருவாக்குகிறது? நீங்கள் ஒரே ஒரு காரைப் பின்தொடர்ந்து சென்றால், அதை நீங்கள் ஒருபோதும் புரிந்து கொள்ள மாட்டீர்கள். பல கார்களுக்கு இடையே ஏற்படுகின்ற தாக்கம்தான் நெரிசலை உருவாக்குகிறது. 'ஏ' கார், 'பி' கார் செல்லும் விதத்தின்மீது தாக்கம் ஏற்படுத்துகிறது. 'பி' கார் 'சி' காரின் வழியைத் தடுத்துக் கொண்டிருக்கிறது. இப்படியே ஒவ்வொன்றும் இன்னொன்றின்மீது தாக்கம் ஏற்படுத்துகிறது. சம்பந்தப்பட்ட அனைத்துக் கார்களும் நகரும் விதத்தை நீங்கள் கவனமாக ஆய்வு செய்யும்போது, போக்குவரத்து நெரிசல் பற்றிய முழுமையான விபரம் உங்களுக்குக் கிடைக்கும். "ஆனால் இந்த நகர்வுகள் எப்படிப் போக்குவரத்து நெரிசலை உருவாக்குகின்றன?" என்று கேட்பது அர்த்தமற்றதாக இருக்கும். ஏனெனில், குறிப்பிட்ட இந்தக் கூட்டு நிகழ்வுக்கு மனிதர்களாகிய நாம் கொடுத்துள்ள பூடகமான வார்த்தைதான் 'போக்குவரத்து நெரிசல்.'

இதற்கு நேரெதிராக, 'கோபம்' என்பது நம்முடைய மூளையில் உருவாகின்ற கோடிக்கணக்கான மின்சமிக்கைகளை விவரிக்க நாம் பயன்படுத்தத் தீர்மானித்துள்ள ஒரு பூடகமான வார்த்தை அல்ல. கோபம் என்பது உறுதியான ஓர் அனுபவமாகும். மின்சக்தியைப் பற்றி அறிவதற்கு நெடுங்காலத்திற்கு முன்பே மக்களுக்குப் பரிச்சயமான விஷயம் அது. "நான் கோபமாக இருக்கிறேன்!" என்று நான் கூறும்போது, அனுபவபூர்வமாக உணரப்படக்கூடிய ஓர் உணர்வை நான் உணர்த்திக் கொண்டிருக்கிறேன் என்று பொருள். ஒரு நரம்பணுவில் ஏற்படும் வேதிவினை எப்படி ஒரு மின்சமிக்கையை உருவாக்குகிறது என்பதையும், இதே போன்ற கோடிக்கணக்கான வேதிவினைகள் எப்படிக் கோடிக்கணக்கான கூடுதல் சமிக்கைகளை உருவாக்குகின்றன என்பதையும் நீங்கள் விவரித்தால்கூட, "இந்தக் கோடிக்கணக்கான நிகழ்வுகள் அனைத்தும் சேர்ந்து எப்படி என்னுடைய கோபம் என்ற உறுதியான உணர்வை உருவாக்குகின்றன?" என்று கேட்பது இன்னும் மதிப்பு வாய்ந்ததாகத்தான் உள்ளது.

ஆயிரக்கணக்கான கார்கள் லண்டன் மாநகர் வழியாக மெதுவாக ஊர்ந்து செல்லும்போது, அதை நாம் ஒரு போக்குவரத்து நெரிசல் என்று அழைக்கிறோம். ஆனால், "நான் நெரிசலில் சிக்கிக் கொண்டிருக்கிறேன்!" என்று பிக்கடில்லி சாலைக்கு மேலே வெகு

உயரத்தில் பிரம்மாண்டமான லண்டன் பிரக்ஞை எதையும் அது உருவாக்குவதில்லை. லட்சக்கணக்கான மக்கள் கோடிக்கணக்கான பங்குகளை விற்கும்போது, நாம் அதை ஒரு பொருளாதார நெருக்கடி என்று அழைக்கிறோம். ஆனால், வால்ஸ்டிரீட் நபர் யாரும் "நான் ஒரு நெருக்கடிக்கு ஆளாகியிருக்கிறேன்!" என்று புலம்புவதில்லை. வானத்தில் கோடானுகோடி நீர் மூலக்கூறுகள் ஒருங்கிணையும்போது நாம் அதை ஒரு மேகம் என்று அழைக்கிறோம், ஆனால் மேகப் பிரக்ஞை எதுவும் முளைத்து, "நான் நீர் சொரியத் தயாராக இருக்கிறேன்!" என்று அறிவிப்பதில்லை. அப்படி இருக்கும்போது, என்னுடைய மூளையில் கோடிக்கணக்கான மின்சமிக்கைகள் நகர்ந்து கொண்டிருக்கும்போது, மனம் என்ற ஒன்று முளைத்து, "நான் கோபமாக இருக்கிறேன்!" என்று ஏன் கூறுகிறது? இந்நேரத்தில் அது பற்றி நமக்கு எந்த யோசனையும் இல்லை.

இந்த விவாதம் உங்களுக்குக் குழப்பத்தை ஏற்படுத்தியிருந்தால், இதில் நீங்கள் மட்டும் விதிவிலக்கு அல்ல என்பதை அறிந்திடுங்கள். தலைசிறந்த அறிவியலறிஞர்கள்கூட மனம் மற்றும் பிரக்ஞையின் புதிரைப் புரிந்து கொள்ளுவதிலிருந்து வெகுதூரத்தில் இருக்கின்றனர். அறிவியலறிஞர்களுக்கு ஏதேனும் தெரியவில்லை எனும்போது, அவர்கள் அனைத்து விதமான கோட்பாடுகளையும் கருத்தாக்கங்களையும் முயற்சி செய்து பார்த்துவிட்டு, இறுதியில் தங்களுடைய அறியாமையை ஒப்புக் கொண்டுவிடலாம் என்பது அறிவியலைப் பற்றிய அற்புதமான விஷயங்களில் ஒன்று.

## வாழ்வின் சமன்பாடு

மூளையில் சில மின்சமிக்கைகள் சேர்ந்து எப்படி அகவயமான அனுபவங்களை உருவாக்குகின்றன என்பது அறிவியலறிஞர்களுக்குத் தெரியாது. இன்னும் சொல்லப் போனால், அப்படிப்பட்ட ஒரு நிகழ்வால் பரிணாம வளர்ச்சிரீதியாக என்ன நன்மை விளையக்கூடும் என்பதும் அவர்களுக்குத் தெரியாது. வாழ்க்கையைப் பற்றிய நம்முடைய புரிதலில் உள்ள மிகப் பெரியதொரு குறை அது. மனிதர்களுக்குப் பாதங்கள் இருக்கின்றன. ஏனெனில், முயல்களைத் துரத்திச் செல்லுவதற்கும் சிங்கங்களிடமிருந்து தப்பிப்பதற்கும் லட்சக்கணக்கான தலைமுறைகளாக நம்முடைய மூதாதையருக்கு அப்பாதங்கள் உதவி வந்துள்ளன. மனிதர்களுக்குக் கண்கள் இருக்கின்றன. ஏனெனில், அந்த முயல்கள் எதை நோக்கிப் போய்க் கொண்டிருந்தன என்பதையும், சிங்கம் எப்போது வரும் என்பதையும் தெரிந்து கொள்ளுவதற்கு

ஆயிரமாயிரம் ஆண்டுகளாக நம்முடைய வேட்டையாடிகளுக்கு அக்கண்கள் உதவி வந்துள்ளன. ஆனால், பசி, பயம் போன்ற அகவயமான அனுபவங்கள் ஏன் மனிதர்களுக்கு ஏற்படுகின்றன?

சிறிது காலத்திற்கு முன்பு, உயிரியலாளர்கள் மிக எளிமையான ஒரு விடையைக் கொடுத்தனர். நாம் உயிர்பிழைத்திருப்பதற்கு அகவயமான அனுபவங்கள் இன்றியமையாதவை. ஏனெனில், நாம் பசியையோ அல்லது பயத்தையோ உணராவிட்டால், முயல்களைத் துரத்திச் செல்லவும் சிங்கங்களிடமிருந்து தப்பி ஓடவும் நாம் முயற்சித்திருக்க மாட்டோம். ஒரு சிங்கத்தைக் கண்டவுடன் ஒருவன் ஏன் ஓடினான்? அவனுக்கு பயம் ஏற்பட்டதால் அவன் ஓடினான். அகவயமான அனுபவங்கள் மனித நடவடிக்கைகளை விளக்கின. ஆனால் இன்று அறிவியலறிஞர்கள் அதற்கு ஒரு விரிவான விளக்கத்தைக் கொடுக்கின்றனர். ஒருவன் ஒரு சிங்கத்தைப் பார்க்கும்போது, மின்சமிக்கைகள் அவனுடைய கண்களிலிருந்து மூளைக்குச் செல்லுகின்றன. உள்வரும் சமிக்கைகள் சில நரம்பணுக்களைத் தூண்டுகின்றன. அவை இன்னும் அதிகமான சமிக்கைகளை உருவாக்குவதன் மூலம் எதிர்வினையாற்றுகின்றன. இச்சமிக்கைகள் மேலும் பிற நரம்பணுக்களைத் தூண்டுகின்றன. சரியான நரம்பணுக்கள் போதுமான எண்ணிக்கையில் போதுமான வேகத்தில் இயங்கினால், உடலை அட்ரினலினால் நிரம்புமாறு அட்ரினலின் சுரப்பிக்கும், வேகமாகத் துடிக்கும்படி இதயத்திற்கும் கட்டளைகள் அனுப்பப்படுகின்றன. இதற்கிடையே, இயக்க மையத்தில் உள்ள நரம்பணுக்கள் கால் தசைகளுக்குச் சமிக்கைகளை அனுப்புகின்றன. அப்போது அத்தசைகள் நீளவும் சுருங்கவும் தொடங்குகின்றன. எனவே, அவன் சிங்கத்திடமிருந்து தப்பி ஓடுகிறான்.

நாம் இச்செயல்முறையை எவ்வளவு அதிகச் சிறப்பாக விளக்குகிறோமோ, பிரக்ஞையுடன்கூடிய உணர்வுகளை விளக்குவது அவ்வளவு அதிகக் கடினமாகிறது. மூளையை நாம் எவ்வளவு சிறப்பாகப் புரிந்து கொள்ளுகிறோமோ, மனம் அவ்வளவு அதிகமாகத் தேவையற்றதாகத் தோன்றுகிறது. ஒட்டுமொத்தச் செயல்முறையும் மின்சமிக்கைகள் அங்குமிங்கும் பயணிப்பதால்தான் செயல்படுகிறது என்றால், நாம் ஏன் பயத்தை உணர வேண்டும்? தொடர்ச்சியான மின்வேதி வினைகள் கண்ணிலிருக்கும் நரம்பணுக்களில் தொடங்கி கால் தசைகளின் அசைவுகள்வரை முடுக்கிவிடுகின்றன என்றால், இச்செயல்முறையில் அகவயமான அனுபவங்களை ஏன் நாம் சேர்க்க வேண்டும்? அவை என்ன செய்கின்றன? அகவயமான அனுபவங்கள் எதுவும் இல்லாமலேயே எண்ணற்ற டாமினோ காய்களால் ஒன்றன்பின்

ஒன்றாகச் சாய்ந்து விழ முடியும். நரம்பணுக்கள் ஒன்றையொன்று தூண்டுவதற்கும் அட்ரினலினைச் சுரக்குமாறு அட்ரினலின் சுரப்பியிடம் கூறுவதற்கும் உணர்வுகள் ஏன் தேவை? தசைகள் அசைதல், ஹார்மோன்கள் சுரத்தல் ஆகியவை உட்பட, உடலின் 99 சதவீத நடவடிக்கைகள் பிரக்ஞையுடன்கூடிய உணர்வுகளின் அவசியமின்றித்தான் நிகழுகின்றன. அப்படியானால், மீதி 1 சதவீத நடவடிக்கைகளுக்கு நரம்பணுக்களுக்கும் தசைகளுக்கும் சுரப்பிகளுக்கும் அப்படிப்பட்ட உணர்வுகள் ஏன் தேவைப்படுகின்றன?

மனம் நம்முடைய நினைவுகளைச் சேகரித்து வைப்பதாலும், திட்டங்களை உருவாக்குவதாலும், தானாகவே புதிய காட்சிகளையும் யோசனைகளையும் தோற்றுவிப்பதாலும் நமக்கு ஒரு மனம் தேவை என்று நீங்கள் வாதிடக்கூடும். மனம் புறத்தூண்டல்களுக்குச் செயல்விடை அளிப்பதில்லை. எடுத்துக்காட்டாக, ஒருவன் ஒரு சிங்கத்தைப் பார்க்கும்போது, அந்தக் கொன்றுண்ணியைக் கண்ட உடனேயே தானாக அவன் எதிர்வினையாற்றுவதில்லை. ஓராண்டுக்கு முன்பு அச்சிங்கம் தன்னுடைய அத்தையைக் கொன்று தின்றது அவனுடைய நினைவுக்கு வருகிறது. ஒரு சிங்கம் தன்னை நார்நாராகக் கிழித்தால் தான் எவ்வாறு உணருவோம் என்று அவன் கற்பனை செய்கிறான். தன்னுடைய மரணத்திற்குப் பிறகு ஆதரவற்றத் தன்னுடைய குழந்தைகளின் தலைவிதி எப்படி இருக்கும் என்பதைப் பற்றி அவன் எண்ணிப் பார்க்கிறான். அதனால்தான் அவன் தப்பி ஓடுகிறான். புறத்தூண்டல்களைவிட அவனுடைய மனத்தின் சொந்த முயற்சிதான் தொடர்ச்சியான பல எதிர்வினைகளைத் தூண்டுகிறது. எனவே, சிங்கம் ஒருவரைத் தாக்கியது பற்றிய முந்தைய நினைவு ஒருவனுடைய மனத்தில் முளைக்கிறது. பிறகு, சிங்கங்களால் ஏற்படக்கூடிய ஆபத்துக்களைப் பற்றி அவன் நினைத்துப் பார்க்க அது வழி கோலுகிறது. பிறகு அவன் தன்னுடைய பழங்குடியின மக்கள் அனைவரையும் ஒன்றுதிரட்டுகிறான். சிங்கங்கள் பயந்தோடும்படி செய்வதற்கான புதிய வழிமுறைகளைப் பற்றி அவர்கள் அனைவருமாகக் கலந்தாலோசிக்கின்றனர்.

ஒரு நிமிடம் பொறுங்கள். இந்த நினைவுகள், கற்பனைகள், மற்றும் எண்ணங்களெல்லாம் என்ன? அவை எங்கே இருக்கின்றன? நம்முடைய தற்போதைய உயிரியல் கோட்பாடுகளின்படி, நம்முடைய நினைவுகளும் கற்பனைகளும் எண்ணங்களும் ஏதோ உயர்வான பருப்பொருளற்றத் தளத்தில் இல்லை. மாறாக, அவையும் கோடிக்கணக்கான நரம்பணுக்களால் உருவாக்கப்படுகின்ற எண்ணற்ற மின்சமிக்கைகளே. எனவே, நாம் நினைவுகளிலும் கற்பனைகளிலும்

எண்ணங்களிலும் மூழ்கினால்கூட, இன்னும் பல தொடர்ச்சியான மின்வேதி வினைகள் கோடிக்கணக்கான நரம்பணுக்களின் ஊடாகப் பயணித்து அட்ரினலின் சுரப்பியையும் கால் தசைகளையும் முடுக்கிவிடுகின்றன.

இந்த நீண்ட பயணத்தில் ஏதேனும் ஒரு கட்டத்திலாவது, ஒரு நரம்பணுவின் நடவடிக்கைக்கும் இன்னொரு நரம்பணுவின் எதிர்வினைக்கும் இடையே மனம் குறுக்கிட்டு, அந்த இரண்டாவது நரம்பணு முடுக்கப்பட வேண்டுமா இல்லையா என்பதைத் தீர்மானிக்கிறதா? வேறு ஏதோ ஒரு பொருளின் அசைவால் அல்லாமல், பயம் எனும் அகவயமான அனுபவத்தினால் ஒரே ஓர் எதிர்மின்னணுவாவது நகர்ந்திருக்கிறதா? அப்படிப்பட்ட நகர்வு எதுவும் இல்லை என்றால், நாம் ஏன் பயத்தை உணர வேண்டும்? இதற்கு எந்த விடையும் இல்லை.

இப்புதிரைத் தத்துவவியலாளர்கள் ஒரு தந்திரமான கேள்வியில் அடக்கியுள்ளனர்: மூளையில் நிகழாத எது மனத்தில் நிகழுகிறது? நம்முடைய பிரம்மாண்டமான நரம்பணுப் பிணையங்களில் நிகழுகின்ற விஷயங்களைத் தவிர வேறு எதுவும் மனத்தில் நிகழுவதில்லை என்றால், பிறகு நமக்கு அந்த மனம் ஏன் தேவை? நரம்பணுப் பிணையங்களில் ஏற்படுகின்றவற்றைத் தாண்டி வேறு எதுவோ மனத்தில் நிகழுகிறது என்றால், அது எங்கே நிகழுகிறது? கிளிண்டன் மற்றும் மோனிகா லெவின்ஸ்கி விவகாரத்தைப் பற்றி அர்னால்டு ஸ்வார்ஷெனெகர் என்ன நினைத்தார் என்று நான் உங்களிடம் கேட்பதாக வைத்துக் கொள்ளுவோம். நீங்கள் அந்த விவகாரத்தைப் பற்றி இதற்கு முன்பு ஒருபோதும் நினைத்துப் பார்த்திருக்காமல் இருந்திருக்கலாம். எனவே, ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத இரண்டு முந்தைய நினைவுகளை உங்கள் மனம் இப்போது ஒருங்கிணைத்தாக வேண்டும். "நான் அந்தப் பெண்ணுடன் பாலியல்ரீதியான உறவு எதுவும் கொள்ளவில்லை," என்று கிளிண்டன் பேசுவதை அர்னால்டு தன்னுடைய கையில் ஒரு மதுக்கோப்பையோடு கேட்டுக் கொண்டிருப்பது போன்ற ஒரு காட்சியை அது உருவாக்கியாக வேண்டும். இந்த ஒருங்கிணைப்பு எங்கே நிகழுகிறது?

பல நரம்பணுக்களுக்கு இடையேயான தாக்கத்தினால் உருவாக்கப்படுகின்ற 'உலகளாவிய பணியிடத்தில்' அது நிகழுவதாக மூளை அறிவியலறிஞர்கள் சிலர் வாதிடுகின்றனர். ஆனாலும், பணியிடம் என்பது இங்கே ஓர் உருவகம் மட்டுமே. அந்த உருவகத்திற்குப் பின்னால் இருக்கும் யதார்த்தம் என்ன? பல்வேறு தகவல்கள் உண்மையில் எங்கே சந்தித்துக் கொள்ளுகின்றன, எங்கே

ஒன்றிணைகின்றன? தற்போதைய கோட்பாடுகளின்படி, அது நிச்சயமாக ஏதோ புனிதமான ஓர் ஐந்தாவது பரிமாணத்தில் நிகழுவதில்லை. மாறாக, முன்பு இணைக்கப்பட்டிராத இரண்டு நரம்பணுக்கள் திடீரென்று ஒன்றுக்கொன்று சமிக்கைகளை அனுப்பத் தொடங்கும்போது அது நிகழுகிறது. பில் கிளிண்டன் நரம்பணுவுக்கும் அர்னால்டு நரம்பணுவுக்கும் இடையே ஒரு புதிய இணைப்பு உருவாகிறது. அப்படியானால், இரண்டு நரம்பணுக்கள் பிணைகின்ற பௌதிக நிகழ்வைத் தாண்டி, நினைவு என்கிற பிரக்ஞையுடன்கூடிய அனுபவம் நமக்கு ஏன் தேவை?

இதே புதிரை நாம் கணிதம் சார்ந்த வார்த்தைகளில் முன்வைக்கலாம். உயிரினங்கள் அனைத்தும் படிமுறைத் தீர்வுகள் என்றும், படிமுறைத் தீர்வுகளைக் கணிதச் சூத்திரங்களில் குறிப்பிட முடியும் என்றும் இன்றைய கோட்பாடு கூறுகிறது. ஒரு கோப்பை தேநீரைத் தயாரிப்பதற்கு ஒரு தானியங்கி விற்பனை இயந்திரம் மேற்கொள்ளுகின்ற நடவடிக்கைகளையும், ஒரு சிங்கத்தைக் கண்டவுடன் ஒரு மூளை மேற்கொள்ளுகின்ற நடவடிக்கைகளையும் வரிசையாக எழுதுவதற்கு எண்களையும் கணிதக் குறியீடுகளையும் நம்மால் பயன்படுத்த முடியும். அப்படியானால், பிரக்ஞையுடன்கூடிய அனுபவங்கள் ஏதோ முக்கியமான செயல்பாட்டை நிறைவேற்றுகின்றன என்றால், அவற்றைக் கணிதரீதியாக வெளிப்படுத்த முடிய வேண்டும். ஏனெனில், அவை படிமுறைத் தீர்வின் இன்றியமையாத ஒரு பகுதியாகும். நாம் பயத்திற்கான படிமுறைத் தீர்வை எழுதும்போது, 'பயத்தை'ப் பல தொடர்ச்சியான துல்லியமான கணக்கீடுகளாக நாம் கூறுபோட்டுக் கொள்ளும்போது, நம்மால் இப்படிச் சுட்டிக்காட்ட முடிய வேண்டும்: "கணக்கீட்டுச் செயல்முறையில் 93வது நடவடிக்கை இது. இதுதான் பயம் எனும் அகவயமான அனுபவம்!" ஆனால், கணிதம் எனும் பிரம்மாண்டமான தளத்தில் அகவயமான ஓர் அனுபவத்தை உள்ளடக்கிய ஏதேனும் படிமுறைத் தீர்வு இருக்கிறதா? அப்படிப்பட்ட எந்தப் படிமுறைத் தீர்வும் இதுவரை நமக்குத் தெரியாது. கணிதம், கணினி அறிவியல் ஆகிய துறைகளில் நாம் பரந்த அறிவைக் கைவசப்படுத்தியுள்ளபோதிலும், நாம் உருவாக்கியுள்ள தரவுச் செயலாக்க அமைப்புமுறைகளில் எதுவொன்றின் செயல்பாட்டிற்கும் அகவயமான அனுபவங்கள் எதுவும் தேவைப்படுவதில்லை. அவற்றில் எதுவும் வேதனையையோ, இன்பத்தையோ, கோபத்தையோ அல்லது அன்பையோ உணருவதில்லை.




ஒருவேளை, நம்மைப் பற்றி சிந்திப்பதற்கு நமக்கு அகவயமான அனுபவங்கள் தேவைப்படக்கூடுமோ? காட்டில் சுற்றித் திரிந்து கொண்டு, தான் உயிர்பிழைத்து இருப்பதற்கும் இனப்பெருக்கம் செய்வதற்குமான சாத்தியக்கூறு எவ்வளவு இருக்கிறது என்பதைக் கணக்கிட்டுக் கொண்டிருக்கும் ஒரு விலங்கு, தன்னுடைய சொந்த நடவடிக்கைகளையும் தீர்மானங்களையும் தனக்குத் தானே பிரதிநுதப்படுத்தியாக வேண்டும். சில சமயங்களில், அது பிற விலங்குகளுக்கும் அவற்றைப் பற்றி எடுத்துக்கூறியாக வேண்டும். மூளை தன்னுடைய சொந்தத் தீர்மானங்களின் ஒரு மாதிரியை உருவாக்க முயற்சிக்கும்போது, அது தொடர்ந்து ஒரு முடிவற்ற கவனச்சிதறல் சுழற்சிக்குள் சிக்கிக் கொள்ளுகிறது. இந்தச் சுழற்சியிலிருந்து பிரக்ஞை முளைக்கிறது.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு இது இயலக்கூடிய ஒன்றாக மட்டுமே தோன்றியிருக்கக்கூடும், ஆனால் இப்போது, கூகுள், டெஸ்லா போன்ற பெருநிறுவனங்கள் வடிவமைத்துள்ள தானியங்கிக் கார்கள் ஏற்கனவே நம்முடைய சாலைகளில் ஓடிக் கொண்டிருக்கின்றன. இத்தகைய தானியங்கிக் கார் ஒன்றைக் கட்டுப்படுத்துகின்ற படிமுறைத் தீர்வுகள், மற்றக் கார்களையும், பாதசாரிகளையும், போக்குவரத்து விளக்குகளையும், சாலைக்குழிகளையும் குறித்து ஒவ்வொரு கணமும் லட்சக்கணக்கான கணக்கீடுகளை மேற்கொள்ளுகின்றன. அந்தத் தானியங்கிக் கார் சிவப்பு விளக்கைக் கண்டவுடன் சரியாக நிற்கிறது, தடைகளைத் தவிர்க்கிறது, பிற வண்டிகளிடமிருந்து ஒரு பாதுகாப்பான தூரத்தில் பயணிக்கிறது. இவற்றைச் செய்யும்போது அது பயம் எதையும் உணருவதில்லை. அந்தக் கார் தன்னையும் கருத்தில் எடுத்துக்

கொண்டு, தன்னுடைய திட்டங்களையும் விருப்பங்களையும் தன்னைச் சுற்றியுள்ள மற்ற வண்டிகளுக்குத் தெரியப்படுத்த வேண்டும். ஏனெனில், அது வலப்பக்கமாக ஒடித்துச் செல்லத் தீர்மானித்தால், அது மற்ற வண்டிகள் நடந்து கொள்ளும் விதத்தின்மீது தாக்கம் ஏற்படுத்தும். அந்தக் கார் இவை அனைத்தையும் எந்தப் பிரச்சனையும் இன்றிச் செய்கிறது, எந்தப் பிரக்ஞையும் இன்றிச் செய்கிறது. அந்தத் தானியங்கிக் கார் அப்படியொன்றும் தனிச்சிறப்பு வாய்ந்தது அல்ல. வேறு பல கணினி நிரல்களும் தம்முடைய சொந்தச் செயல்களுக்கு இடம் கொடுக்கின்றன. ஆனாலும், அவற்றில் எதுவும் தம்முள் பிரக்ஞையை வளர்த்துக் கொள்ளவில்லை. அதோடு, அவை எதையும் உணருவதுமில்லை, எதையும் விரும்புவதுமில்லை.

***




படம் **15:** சாலையில் கூகுள் தானியங்கிக் கார்.

மனத்தை நம்மால் விளக்க முடியாவிட்டால், அது எந்தச் செயல்பாட்டை றைவேற்றுகிறது என்பது நமக்குத் தெரியாவிட்டால், அதை நாம் ஏன் விட்டுத்தள்ளக்கூடாது? கைவிடப்பட்டக் கோட்பாடுகளும் கொள்கைகளும் அறிவியலின் வரலாற்றில் அதிக எண்ணிக்கையில் இடம்பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாக, ஒளியின் நகர்வுக்குக் காரணம் கண்டுபிடிக்க முயன்ற நவீன அறிவியலறிஞர்கள், ஈத்தர் என்ற ஒரு பொருள் இருக்கிறது என்றும், அது இந்த ஒட்டுமொத்தப் பிரபஞ்சத்தையும் நிரப்புகிறது என்றும் ஒரு கோட்பாட்டை முன்வைத்தனர். ஈத்தர் அலைகள்தான் ஒளி என்று அவர்கள் நினைத்தனர். ஆனால், ஈத்தர் என்ற ஒன்று இருந்ததற்கான எந்தவொரு அனுபவபூர்வமான ஆதாரத்தையும் அவர்களால்

கண்டுபிடிக்க முடியவில்லை. மாறாக, ஒளி பற்றிய சிறப்பான மாற்றுக் கோட்பாடுகளை அவர்கள் முன்வைத்தனர். இதையடுத்து, ஈத்தரை அவர்கள் அறிவியல் குப்பைக்கூடைக்குள் தூக்கி எறிந்துவிட்டனர்.

அதேபோல, எண்ணற்ற இயற்கை நிகழ்வுகளை விளக்குவதற்கு ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மனிதர்கள் கடவுளைப் பயன்படுத்தினர். மின்னல் தாக்குவதற்கு எது காரணமாக இருக்கிறது? கடவுள். எது மழை பெய்யும்படி செய்கிறது? கடவுள். புவியில் உயிரினங்கள் எப்படித் தோன்றின? கடவுள் உருவாக்கினார். கடந்த ஒருசில நூற்றாண்டுகளுக்கும் மேலாக, கடவுளின் இருத்தலுக்கான அனுபவபூர்வமான ஆதாரம் எதையும் அறிவியலறிஞர்கள் கண்டுபிடிக்கவில்லை. ஆனால், மின்னல், மழை, வாழ்வின் துவக்கம் ஆகியவற்றுக்கு அவர்கள் அதிக விபரமான விளக்கங்களைக் கண்டுபிடித்தனர். அதையடுத்து, தத்துவம் போன்ற ஒருசில உட்துறைகள் தவிர, அறிவியல் பத்திரிகைகளில் எந்தவொரு கட்டுரையும் கடவுளின் இருத்தலைத் தீவிரமாக எடுத்துக் கொள்ளுவதில்லை. கடவுள் நேச நாடுகளின் பக்கம் இருந்ததால்தான் அவர்கள் இரண்டாம் உலகப் போரை வென்றனர் என்று வரலாற்றியலாளர்கள் வாதிடுவதில்லை. 1929ல் ஏற்பட்டப் பொருளாதார நெருக்கடிக்குப் பொருளாதார வல்லுனர்கள் கடவுளைக் குற்றப்படுத்துவதில்லை. கண்டத்தட்டுகளின் நகர்வுகளுக்குக் கடவுளின் விருப்பமே காரணம் என்று நிலவியலாளர்கள் கூறுவதில்லை.

ஆன்மாவுக்கும் இதே தலைவிதி ஏற்பட்டது. நம்முடைய நடவடிக்கைகளும் தீர்மானங்களும் நம்முடைய ஆன்மாக்களிலிருந்து முளைத்ததாக மக்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நம்பினர். ஆனால் அந்த நம்பிக்கைக்கு ஆதரவான ஆதாரங்கள் எதுவும் இல்லாததாலும், அதிக விபரமான மாற்றுக் கோட்பாடுகள் இருப்பதாலும், உயிரியலானது ஆன்மாவைக் குழிதோண்டிப் புதைத்துவிட்டது. தனிநபர்களும் பல உயிரியலாளர்களும் மருத்துவர்களும் தொடர்ந்து ஆன்மாவில் நம்பிக்கை கொள்ளக்கூடும். ஆனால் அறிவியல் பத்திரிகைகளில் அவர்கள் அதைப் பற்றி ஒருபோதும் எழுதுவதில்லை.

ஆன்மா, கடவுள், ஈத்தர் ஆகியவற்றோடு மனமும் அறிவியல் குப்பைத்தொட்டிக்குள் தஞ்சம் புக வேண்டுமோ என்னவோ! வேதனை அனுபவத்தையோ அல்லது அன்பு அனுபவத்தையோ ஒரு நுண்ணோக்கியால் யாரும் பார்த்ததில்லை. மேலும், வேதனைக்கும் அன்புக்குமான மிக விரிவான உயிர்வேதி விளக்கம் ஒன்று நம் வசம் இருக்கிறது. அகவயமான அனுபவங்களுக்கு அதில் இடமில்லை.

எனினும், மனத்திற்கும் ஆன்மாவுக்கும் இடையே (மனத்திற்கும் கடவுளுக்கும் இடையேகூட) ஒரு முக்கியமான வேறுபாடு உள்ளது. அழிவற்ற ஆன்மாக்களின் இருத்தல் வெறும் ஊகம் மட்டுமே, ஆனால் வேதனை அனுபவம் ஒரு நேரடியான, உறுதியான யதார்த்தமாகும். ஓர் ஆணி என் பாதத்தில் குத்தினால், நான் வலியை உணருகிறேன் என்று 100 சதவீதம் என்னால் உறுதியாகக் கூற முடியும் (அதற்கான அறிவியற்பூர்வமான விளக்கம் எனக்குத் தெரியாவிட்டால்கூட). இதற்கு நேர்மாறாக, என் காலில் ஏற்பட்டுள்ள காயத்தில் கிருமித் தொற்று ஏற்பட்டு, தசை அழுகி நான் இறந்தால், என் ஆன்மா தொடர்ந்து நிலைத்திருக்கும் என்று என்னால் உறுதியாகக் கூற முடியாது. அப்படி அது நிலைத்திருக்குமானால், அது மிக சுவாரசியமான மற்றும் ஆறுதலூட்டுகின்ற ஒரு கதையாக இருந்திருக்கும். அதை நான் மகிழ்ச்சியாக நம்புவேன். ஆனால், அக்கதை உண்மை என்பதற்கு நேரடியான எந்த ஆதாரமும் என்னிடம் இல்லை. வலி, சந்தேகம் போன்ற அகவயமான உணர்வுகளை அனைத்து அறிவியலறிஞர்களும் உணருகின்றனர் என்பதால், அவர்களால் அவற்றின் இருத்தலை மறுக்க முடியாது.

மனத்தையும் பிரக்ஞையையும் நிராகரிப்பதற்கான இன்னொரு வழி, அவற்றின் இருத்தலை மறுப்பதற்கு பதிலாக அவற்றின் பொருத்தத்தை மறுப்பது. எந்தவோர் அகவயமான அனுபவங்களிடமும் தஞ்சம் புகாமல் வெறுமனே மூளையின் நடவடிக்கைகளை ஆய்வு செய்வதன் மூலம் பொருத்தமான அனைத்துக் கேள்விகளுக்கும் விடையளிக்க முடியும் என்று டேனியல் டென்னெட், ஸ்டேனிஸ்லாஸ் டெஹானே போன்ற சில அறிவியலறிஞர்கள் வாதிடுகின்றனர். எனவே, மனம், பிரக்ஞை, அகவயமான அனுபவங்கள் போன்றவற்றை அறிவியலறிஞர்கள் தங்களுடைய அகராதியிலிருந்தும் கட்டுரைகளிலிருந்தும் பாதுகாப்பாக நீக்கிவிடலாம். ஆனால், இனிவரும் அத்தியாயங்களில் நீங்கள் பார்க்கவிருப்பதைப்போல, நவீன அரசியல் மற்றும் அறநெறி நம்பிக்கைகள் அகவயமான அனுபவங்களை அடித்தளமாகக் கொண்டே கட்டியெழுப்பப்பட்டுள்ளன. அறநெறிரீதியான ஒருசில இக்கட்டான சூழ்நிலைகளுக்கு மூளையின் நடவடிக்கைகளைக் கொண்டு தீர்வு காண முடியும். எடுத்துக்காட்டாக, சித்தரவதை மற்றும் வன்புணர்வில் என்ன தவறு இருக்கிறது? வெறுமனே ஒரு நரம்பியல்ரீதியான கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, ஒரு மனிதன் சித்தரவதை செய்யப்படும்போது அல்லது ஒரு பெண்மணி வன்புணர்வுக்கு உட்படுத்தப்படும்போது, குறிப்பிட்ட சில உயிர்வேதி வினைகள் மூளையில் நிகழுகின்றன, பல்வேறு மின்சமிக்கைகள் ஒரு நரம்பணுக்

குவியலிலிருந்து இன்னொரு நரம்பணுக் குவியலுக்கு நகருகின்றன. அதில் என்ன தவறு இருக்க முடியும்? நவீன மக்களில் பெரும்பாலானோர் சித்தரவதை மற்றும் வன்புணர்வு பற்றி அறநெறிரீதியாக அசௌகரியமாக உணருகின்றனர். அச்செயல்களில் உள்ளடங்கியுள்ள அகவயமான அனுபவங்கள்தான் அவர்களுடைய அசௌகரியத்திற்குக் காரணம். அகவயமான அனுபவங்களைப் பற்றி நினைப்பது இங்கு பொருத்தமற்றது என்று அறிவியலறிஞர்கள் வாதிட விரும்பினால், அகவயமான அனுபவங்களைக் கருத்தில் கொள்ளாமலேயே, சித்தரவதையும் வன்புணர்வும் ஏன் தவறானவை என்று அவர்கள் விளக்கியாக வேண்டும்.

இறுதியாக, பிரக்ஞை என்பது உண்மை என்றும், அது அறநெறிரீதியான மற்றும் அரசியல்ரீதியான மதிப்பைக் கொண்டிருக்கக்கூடும் என்றும், ஆனால் உயிரியல்ரீதியான எந்தவொரு செயல்பாட்டுடனும் அதற்கு எந்தத் தொடர்பும் இல்லை என்றும் சில அறிவியலறிஞர்கள் ஒப்புக் கொள்ளுகின்றனர். பிரக்ஞை என்பது மூளையின் சில குறிப்பிட்டச் செயல்முறைகளின் உயிரியல்ரீதியாகப் பயனற்ற உபபொருளாகும். ஜெட் எஞ்சின்கள் உரக்கச் சத்தமிடுகின்றன, ஆனால் அச்சத்தம் அந்த விமானத்தை முன்னோக்கித் தள்ளுவதில்லை. மனிதர்களுக்குக் கரியமில வாயு தேவையில்லை, ஆனால் ஒவ்வொரு சுவாசமும், காற்றில் அதிகமான கரியமில வாயுவை நிரப்புகிறது. அதேபோல, பிரக்ஞை என்பது சிக்கலான நரம்பியல் பிணையங்களின் நடவடிக்கைகளால் உருவாக்கப்படுகின்ற ஒரு வகையான மனரீதியான மாசுபாடாக இருக்கக்கூடும். அது எதுவும் செய்வதில்லை. அது வெறுமனே இருக்கிறது. இது உண்மையென்றால், கோடிக்கணக்கான ஆண்டுகளாகப் பல கோடிக்கணக்கான உயிரினங்கள் அனுபவித்த அனைத்து வேதனையும் இன்பமும் வெறும் மனரீதியான மாசுபாடுதான் என்று அர்த்தமாகும். இதைப் பற்றி சிந்திப்பது நிச்சயமாக மதிப்பு வாய்ந்ததாக இருக்கும், அது உண்மையல்ல என்றாலும்கூட. ஆனால் இப்போதைக்கு, பிரக்ஞை பற்றி நவீன அறிவியல் நமக்கு வழங்கக்கூடிய மிகச் சிறந்த கோட்பாடு இதுதான் என்பதை உணருவது அற்புதமானதாக இருக்கிறது.

***

ஒருவேளை, உயிரியலானது பிரச்சனையைத் தவறான கோணத்திலிருந்து பார்க்கிறதுபோலும். தரவுச் செயலாக்கத்தைப் பற்றியதே வாழ்க்கை என்றும், உயிரினங்கள் என்பவை கணக்குப் போடுவதற்கும் தீர்மானங்கள் மேற்கொள்ளுவதற்குமான இயந்திரங்களே என்றும் அது நம்புகிறது. ஆனால், உயிரினங்களுக்கும்

படிமுறைத் தீர்வுகளுக்கும் இடையேயான ஒப்புமை நம்மைத் தவறாக வழிநடத்தக்கூடும். பத்தொன்பதாம் நூற்றாண்டில், மூளைகளும் மனங்களும் நீராவி எஞ்சின்கள் என்பதுபோல அறிவியலறிஞர்கள் அவற்றை விவரித்தனர். ஏன் நீராவி எஞ்சின்? ஏனெனில், அன்றைய காலகட்டத்தில் அதுதான் முன்னணித் தொழில்நுட்பமாக இருந்தது. அது புகைவண்டிகளுக்கும் கப்பல்களுக்கும் தொழிற்சாலைகளுக்கும் இயக்க ஆற்றலைக் கொடுத்தது. எனவே, மனிதர்கள் வாழ்க்கையை விளக்க முற்பட்டபோது, அது அதே கோட்பாட்டின் அடிப்படையில்தான் இயங்கியாக வேண்டும் என்று அவர்கள் அனுமானித்தனர். மனமும் உடலும் குழாய்கள், உருளைகள், அடைப்பிதழ்கள், உந்துத் தண்டுகள் ஆகியவற்றால் ஆனவை என்றும், அவை அனைத்தும் சேர்ந்து அழுத்தத்தை உருவாக்கி அதை விடுவிக்கின்றன என்றும், அந்த அழுத்தம்தான் இயக்கங்களையும் செயல்களையும் தோற்றுவிக்கிறது என்றும் அவர்கள் நம்பினர். இந்த வகையான சிந்தனை சிக்மண்டு ஃபிராய்டின் உளவியல்மீதுகூட ஓர் ஆழமான தாக்கத்தை ஏற்படுத்தியது. அதனால்தான், உளவியலில் நாம் பயன்படுத்துகின்ற பிரத்யேகமான ஏகப்பட்ட வார்த்தைகளும் சொற்றொடர்களும் இயந்திரப் பொறியியலிலிருந்து கடன் வாங்கப்பட்டக் கோட்பாடுகளால் நிரம்பி வழிகின்றன.

எடுத்துக்காட்டாக, ஃபிராய்டின் பின்வரும் வாதத்தைப் பாருங்கள்: "சண்டையிடுவதற்கான ஆவேசத்தை வீரர்களிடம் தூண்டுவதற்கு ராணுவம் பாலியல் உந்துதலைப் பயன்படுத்துகிறது. இளைஞர்களுடைய பாலியல் உந்துதல் உச்சத்தில் இருக்கின்ற நேரத்தில் ராணுவம் அவர்களை வேலைக்கு எடுத்துக் கொள்ளுகிறது. ராணுவ வீரர்கள் பாலுறவு கொண்டு அந்த அழுத்தம் முழுவதையும் விடுவிப்பதற்கான வாய்ப்புகளை ராணுவம் மட்டுப்படுத்துகிறது. இதன் விளைவாக, அந்த அழுத்தம் அவர்களுக்குள் குவியத் தொடங்குகிறது. பிறகு, குவித்து வைக்கப்பட்டுள்ள இந்த அழுத்தத்தை அவர்கள் ஆவேசத்தின் வடிவத்தில் விடுவிப்பதற்கு அது வழி வகுக்கிறது." ஒரு நீராவி எஞ்சின் துல்லியமாக இப்படித்தான் வேலை செய்கிறது. கொதிக்கும் நீராவியை மூடப்பட்ட ஒரு கொள்கலனுக்குள் நீங்கள் அடைக்கிறீர்கள். அந்த நீராவி மேன்மேலும் அதிக அழுத்தத்தை உருவாக்குகிறது. திடீரென்று, நீங்கள் ஓர் அடைப்பிதழைத் திறந்து, நீங்கள் ஏற்கனவே திட்டமிட்டுள்ள திசையில் அந்த அழுத்தத்தை விடுவிக்கிறீர்கள். இந்த அழுத்தத்தை ஒரு புகைவண்டியையோ அல்லது தறியையோ முன்னோக்கி உந்தித் தள்ளுவதற்கு நீங்கள் பயன்படுத்துகிறீர்கள். ராணுவத்தில் மட்டுமல்லாமல்,

செயல்நடவடிக்கைகளை உள்ளடக்கிய அனைத்துத் துறைகளிலும், நமக்குள் அழுத்தம் அதிகரித்துக் கொண்டிருக்கிறது என்று நாம் அடிக்கடிக் குறை கூறுகிறோம், 'சிறிதளவு அழுத்தமாவது விடுவிக்கப்படாவிட்டால்' நாம் வெடித்துவிடுவோம் என்று நாம் பயப்படுகிறோம்.

மனித மனத்தை ஒரு நீராவி எஞ்சினோடு ஒப்பிடுவது இருபத்தோராம் நூற்றாண்டில் சிறுபிள்ளைத்தனமானதாகத் தோன்றுகிறது. இன்று 'கணினி' என்ற அதிநவீனத் தொழில்நுட்பம் ஒன்றை நாம் அறிந்திருக்கிறோம். எனவே, மனித மனத்தை அழுத்தத்தை முறைப்படுத்துகின்ற ஒரு நீராவி எஞ்சின்போலக் கருதுவதற்கு பதிலாக, தரவுச் செயலாக்கம் செய்கின்ற ஒரு கணினிபோலக் கருதி அதை விளக்குகிறோம். ஆனால் இப்புதிய ஒப்புமையும் அபத்தமானதாகவே இருக்கும். ஏனெனில், கணினிகளுக்கும் மனம் என்ற ஒன்று இல்லை. ஒரு கணினியில் ஏதேனும் சரியில்லாமல் போனால்கூட, அது எதற்காகவும் ஏங்குவதில்லை. எதேச்சாதிகார ஆட்சியாளர்கள் தங்களுடைய ஒட்டுமொத்த நாடுகளையும் இணையத்திலிருந்து துண்டிக்கும்போதுகூட, இணையம் எந்த வலியையும் உணருவதில்லை. அப்படியானால், மனத்தைப் புரிந்து கொள்ளுவதற்குக் கணினிகளை ஏன் ஓர் ஒப்புமையாக நாம் பயன்படுத்த வேண்டும்?

கணினிகளுக்கு உணர்வுகளோ அல்லது விருப்பங்களோ இல்லை என்று உண்மையிலேயே நமக்கு உறுதியாகத் தெரியுமா? தற்போது அவற்றுக்கு உணர்வுகளும் விருப்பங்களும் இல்லாவிட்டால்கூட, அவை போதுமான அளவு சிக்கலானவையாக ஆகும்போது, அவை பிரக்ஞையை வளர்த்துக் கொள்ளக்கூடுமா? அவ்வாறு நிகழ்ந்தால், அதை நாம் எவ்வாறு உறுதியாகத் தெரிந்து கொள்ளுவது? நம்முடைய பேருந்து ஓட்டுநர், ஆசிரியர் மற்றும் மருத்துவரின் இடங்களைக் கணினிகள் பிடித்துக் கொள்ளும்போது, அவற்றுக்கு உணர்வுகள் இருக்கின்றனவா அல்லது அவை வெறும் அர்த்தமற்றப் படிமுறைத் தீர்வுக் குவியல்கள் மட்டும்தானா என்பதை எவ்வாறு நம்மால் உறுதியாக அறிந்து கொள்ள முடியும்?

பிரக்ஞையுடன்கூடிய மன அனுபவங்களையும் பிரக்ஞையற்ற மூளை நடவடிக்கைகளையும் வேறுபடுத்திப் பார்ப்பதற்கான திறன் இன்று மனிதர்களுக்கு இருக்கிறது. பிரக்ஞையைப் பற்றிப் புரிந்து கொள்ளுவதற்கு நமக்கு இன்னும் வெகுகாலம் ஆகும் என்றாலும், அதன் சில மின்வேதிக் குறியீடுகளை அடையாளம் காணுவதில் அறிவியலறிஞர்கள் வெற்றி பெற்றுள்ளனர்.

இது, பக்கவாதத்தால் பாதிக்கப்பட்டுச் செயலிழந்து போயிருக்கும் ஒருவர் தன்னுடைய பிரக்ஞையை முற்றிலுமாக இழந்திருக்கிறாரா அல்லது தன்னுடைய உடலின் கட்டுப்பாட்டையும் பேச்சின் கட்டுப்பாட்டையும் மட்டும் இழந்திருக்கிறாரா என்பதைக் கண்டுபிடிக்க அறிவியலறிஞர்களுக்கு உதவுகிறது. பிரக்ஞைக்கான வெளிப்படையான குறியீடுகள் ஒரு நோயாளியின் மூளையில் தென்பட்டால், அவரால் அசையவோ அல்லது பேசவோ முடியாவிட்டால்கூட, அவர் பிரக்ஞையோடு இருக்கிறார் என்று அர்த்தம். சமீபத்தில், அப்படிப்பட்ட நோயாளிகளுடன் பேசுவதற்கு மருத்துவர்கள் ‘எம்ஆர்ஐ’ ஸ்கேனைப் பயன்படுத்தத் தொடங்கியுள்ளனர். ஆம்/இல்லை கேள்விகளை அவர்கள் அந்த நோயாளிகளிடம் கேட்கின்றனர். ஆம் என்பது பதிலாக இருந்தால், டென்னிஸ் விளையாடுவதுபோலக் கற்பனை செய்யும்படி அவர்கள் அந்த நோயாளிகளிடம் கூறுகின்றனர். இல்லை என்பது பதிலாக இருந்தால், அவர்களுடைய வீடு இருக்கும் இடத்தை மனத்தில் காட்சிப்படுத்தும்படி அந்த மருத்துவர்கள் கூறுகின்றனர். பிறகு, அந்த நோயாளிகள் டென்னிஸ் விளையாடுவதுபோலக் கற்பனை செய்யும்போது (’ஆம்’ என்று பொருள்), மூளையில் உள்ள ‘இயக்கப் புறணி’ என்ற பகுதி எப்படித் தூண்டப்படுகிறது என்பதை மருத்துவர்கள் கவனிக்கின்றனர்; இடம் சார்ந்த தகவல்களை நினைவில் வைத்திருப்பதற்குப் பொறுப்பான மூளைப் பகுதிகள் தூண்டப்படுவது ‘இல்லை’ என்ற பதிலை உணர்த்துகிறது.

மனிதர்களின் விஷயத்தில் இதெல்லாம் சரிதான், ஆனால் கணினிகளுக்கு? சிலிக்கானை அடிப்படையாகக் கொண்ட கணினிகளின் கட்டமைப்புகள் கரிமத்தை அடிப்படையாகக் கொண்ட மனித நரம்பியல் பிணையங்களின் கட்டமைப்புகளிலிருந்து மிகவும் வேறுபட்டிருப்பதால், மனிதப் பிரக்ஞைக்கான குறியீடுகள் கணினிகளுக்குப் பொருத்தமற்றவையாக இருக்கும். நாம் ஒரு முடிவற்றச் சுழற்சியில் சிக்கிக் கிடப்பதுபோலத் தெரிகிறது. தாங்கள் பிரக்ஞையோடு இருப்பதாக மனிதர்கள் கூறும்போது நாம் அதை நம்பலாம் என்ற அனுமானத்தில் துவக்கினால், மனிதப் பிரக்ஞைக்கான மூளைக் குறியீடுகளை நம்மால் அடையாளம் காண முடியும். பிறகு இந்தக் குறியீடுகளைப் பயன்படுத்தி மனிதர்கள் உண்மையிலேயே பிரக்ஞை கொண்டவர்கள்தான் என்று நம்மால் நிரூபிக்க முடியும். ஆனால், தான் பிரக்ஞையோடு இருப்பதாக ஒரு செயற்கை நுண்ணறிவு கூறும்போது, அதை நாம் வெறுமனே நம்ப வேண்டுமா?

இப்பிரச்சனைக்கு இக்கணம்வரை எந்தவொரு நல்ல தீர்வும் நம்மிடம்

இல்லை. தன்னைப்போலவே மற்றவர்களுக்கும் மனம் என்ற ஒன்று இருக்கிறது என்பதை ஆதாரபூர்வமாக நிரூபிப்பதற்கு எந்த வழியும் இல்லை என்பதை ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பாகவே தத்துவவியலாளர்கள் உணர்ந்திருந்தனர். யதார்த்தத்தில், பிற மனிதர்களின் விஷயத்தில்கூட, பிரக்ஞை என்ற ஒன்று அவர்களுக்கு இருப்பதாக நாம் வெறுமனே அனுமானிக்கிறோம். அது நமக்கு உறுயாகத் தெரியாது. ஒருவேளை, இந்த ஒட்டுமொத்தப் பிரபஞ்சத்தில் நான் ஒருவன் மட்டுமே எல்லாவற்றையும் உணருகின்ற ஒருவனாகவும், பிற அனைத்து மனிதர்களும் விலங்குகளும் அக்கறையற்ற ரோபாட்டுகளாகவும் இருக்கக்கூடுமோ? ஒருவேளை நான் கனவு கண்டுகொண்டிருக்கிறேனோ? நான் சந்திக்கின்ற ஒவ்வொருவரும் என்னுடைய கனவில் வரும் ஒரு கதாபாத்திரம்தானோ? நான் ஒரு மெய்நிகர் உலகிற்குள் சிக்கிக் கிடக்கிறேனோ? நான் பார்க்கின்ற அனைத்து உயிரினங்களும் வெறும் ஒப்புருவாக்கங்கள்தானோ?

தற்போதைய அறிவியல் கோட்பாடுகளின்படி, நான் அனுபவிக்கின்ற எல்லாமே என்னுடைய மூளையில் நடைபெறும் மின்நடவடிக்கைகளின் விளைவுதான் என்பதால், 'உண்மையான' உலகத்திலிருந்து என்னால் வேறுபடுத்திப் பார்க்க முடியாத ஓர் ஒட்டுமொத்த மெய்நிகர் உலகத்தை ஒப்புருவாக்குவது கோட்பாட்டுரீதியாகச் சாத்தியமானதாக இருந்தாக வேண்டும். இப்படிப்பட்ட விஷயங்களை எதிர்காலத்தில் நாம் உண்மையிலேயே செய்து கொண்டிருப்போம் என்று சில மூளை அறிவியலறிஞர்கள் நம்புகின்றனர். இது யதார்த்தமாவது சாத்தியம்தான் என்பதை நீங்கள் அங்கீகரிக்கும்போது, மிகவும் அச்சுறுத்துகின்ற ஒரு முடிவுக்குக் கணிதம் உங்களை அழைத்துச் செல்லுகிறது. அந்த முடிவு இதுதான்: ஒரே ஓர் உண்மையான உலகமும் எண்ணற்ற மெய்நிகர் உலகங்களும் இருப்பதால், நீங்கள் அந்த உண்மையான உலகில் வாழுவதற்கான சாத்தியக்கூறு கிட்டத்தட்டப் பூஜ்ஜியம்தான்.

'பிற மனங்களின் இருத்தல் குறித்தப் பிரச்சனை' என்ற பிரபலமான பிரச்சனையிலிருந்து மீளுவதற்கு நம்முடைய அறிவியல் கண்டுபிடிப்புகள் எதுவும் இதுவரை உதவவில்லை. 'டியூரிங் சோதனை' என்ற ஒன்றைத்தான் அறிஞர்கள் கண்டுபிடித்துள்ளனர். ஆனால் அது சமூக வழக்கங்களை மட்டுமே ஆய்வு செய்கிறது. இச்சோதனையின்படி, ஒரு கணினிக்கு ஒரு மனம் இருக்கிறதா என்பதைத் தீர்மானிப்பதற்கு, நீங்கள் ஒரே நேரத்தில் அந்தக் கணினியோடும் ஓர் உண்மையான நபரோடும் பேச வேண்டும். ஆனால் எது யார் என்பது உங்களுக்குத் தெரியக்கூடாது. உங்களுக்கு விருப்பமான எந்தவொரு கேள்வியையும் நீங்கள் கேட்கலாம், அவற்றோடு விளையாடலாம், வாதிடலாம்,

அவற்றைச் சீண்டலாம். எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள். பிறகு, எது கணினி, எது மனிதன் என்பதை நீங்கள் தீர்மானிக்க வேண்டும். உங்களால் தீர்மானிக்க முடியாவிட்டாலோ அல்லது நீங்கள் தவறான பதிலைக் கொடுத்தாலோ, டியூரிங் சோதனையில் கணினி வென்றுவிட்டதாகப் பொருள். எனவே, கணினிக்கு உண்மையிலேயே ஒரு மனம் இருப்பதுபோல நாம் அதனிடம் நடந்து கொள்ள வேண்டும். ஆனாலும், அது ஓர் ஆதாரமாக ஆகிவிடாது. பிற மனங்களின் இருத்தலை அங்கீகரிப்பது சமூகரீதியான மற்றும் சட்டரீதியான ஒரு வழக்கமாகும்.

டியூரிங் சோதனையை 1950ல் ஆங்கிலேயக் கணிதவியலாளரான ஆலன் டியூரிங் என்பவர் கண்டுபிடித்தார். கணினி யுகத்தின் முன்னோடிகளில் ஒருவர் அவர். பிரிட்டனில் ஓரினச்சேர்க்கை சட்டத்திற்குப் புறம்பானதாக இருந்த ஒரு காலகட்டத்தில் அவர் ஒரு தன்பால்புணர்சிக்காரராக இருந்தார். 1952ல் அவர் ஓரினச்சேர்க்கை நடவடிக்கைகளில் ஈடுபட்டதாகக் குற்றம் சாட்டபட்டு, வேதியியல் விரைநீக்கத்திற்கு உட்படுத்தப்பட்டார். இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு அவர் தற்கொலை செய்து கொண்டார். டியூரிங் சோதனை 1950களில் பிரிட்டனில் ஓரினச்சேர்க்கையாளர்கள் ஒவ்வொருவரும் அன்றாடம் உட்பட வேண்டியிருந்த ஒரு சோதனையின் பிரதியெடுப்புதான். "நீங்கள் இயல்பான பாலியல் நாட்டம் கொண்ட ஒருவர்தானா என்ற தேர்வில் உங்களால் வெற்றி பெற முடியுமா?" என்பதுதான் அச்சோதனை. நீங்கள் உண்மையிலேயே யார் என்பது முக்கியமல்ல, மற்றவர்கள் உங்களைப் பற்றி என்ன நினைத்தனர் என்பதுதான் முக்கியம் என்பதை டியூரிங் தன்னுடைய தனிப்பட்ட அனுபவங்களிலிருந்து அறிந்திருந்தார். 1950களில் ஓரினச்சேர்க்கையாளர்கள் எப்படி இருந்தனரோ, எதிர்காலத்தில் கணினிகள் அதேபோல இருக்கும் என்று அவர் கூறினார். அதாவது, கணினிகள் பிரக்ஞை கொண்டவையா இல்லையா என்பது முக்கியமாக இருக்காது. மாறாக, மக்கள் அதைப் பற்றி என்ன நினைத்தனர் என்பதுதான் முக்கியமாக இருக்கும்.

## சோதனைக்கூட எலிகளின் மனச்சோர்வூட்டும் வாழ்க்கை

மனம் என்றால் என்ன என்பதையும், அது குறித்து உண்மையில் நமக்கு எவ்வளவு குறைவாகத் தெரிந்திருக்கிறது என்பதையும் நாம் அறிந்துள்ள இந்நிலையில், பிற விலங்குகளுக்கு மனம் என்ற ஒன்று

இருக்கிறதா என்ற கேள்விக்குள் நாம் மீண்டும் செல்லலாம். நாய்கள் போன்ற சில விலங்குகள், டியூரிங் சோதனையின் திருத்தியமைக்கப்பட்ட ஒரு வடிவில் நிச்சயமாக வெற்றி பெற்றுவிடுகின்றன. ஒரு பொருள் பிரக்ஞையோடு இருக்கிறதா இல்லையா என்பதை மனிதர்கள் கண்டறிய முற்படும்போது, அப்பொருளின் கணிதத் திறனையோ அல்லது நினைவாற்றலையோ நாம் பார்க்க முனைவதில்லை. மாறாக, நம்மோடு உணர்ச்சிரீதியான உறவுகளை எற்படுத்திக் கொள்ளுவதற்கான திறன் அதனிடம் இருக்கிறதா என்பதைத்தான் நாம் தேடுகிறோம். மக்கள் சில சமயங்களில் ஆயுதங்கள், கார்கள், உள்ளாடைகள் போன்றவற்றிடம்கூட ஆழமான உணர்ச்சிரீதியான பற்றுக் கொள்ளுகின்றனர். ஆனால் பதிலுக்கு அப்பொருட்கள் அவர்களிடம் அபிமானம் கொள்ளுவதில்லை. எனவே, அத்தகைய பற்றுகள் ஒருபோதும் உறவுகளாக மாறுவதில்லை. நாய்களால் மனிதர்களுடன் உணர்ச்சிரீதியான உறவுகளை உருவாக்கிக் கொள்ள முடிகிறது என்ற உண்மை, நாய்கள் சிந்திக்கும் திறனற்றத் தானியங்கி இயந்திரங்கள் அல்ல என்று அவற்றின் உரிமையாளர்களை நம்ப வைக்கிறது.

ஆனால், சந்தேகவாதிகளை இது திருப்திப்படுத்தாது. ஏனெனில், உணர்ச்சிகள் என்பவை வெறும் படிமுறைத் தீர்வுகளே என்றும், நமக்குத் தெரிந்த எந்தவொரு படிமுறைத் தீர்வும் செயல்படுவதற்கு அதற்குப் பிரக்ஞை தேவைப்படுவதில்லை என்றும் அவர்கள் சுட்டிக்காட்டுகின்றனர். ஒரு விலங்கு சிக்கலான உணர்ச்சீரிதியான நடத்தையை வெளிப்படுத்தும்போதெல்லாம், அதிநவீனமான ஆனால் பிரக்ஞையற்ற ஏதோ படிமுறைத் தீர்வின் விளைவு அல்ல அது என்று நம்மால் நிரூபிக்க முடியாது. இந்த விவாதம் மனிதர்களுடைய விஷயத்திலும் பொருந்தும். ஒரு மனிதன் செய்கின்ற எல்லாமே, தான் பிரக்ஞையோடு இருப்பதாக அவன் கூறுவது உட்பட, கோட்பாட்டுரீதியாகப் பார்க்கும்போது, பிரக்ஞையற்றப் படிமுறைத் தீர்வுகளின் செயல்பாடுகளாக இருக்கக்கூடும்.

மனிதர்களின் விஷயத்தில், தான் பிரக்ஞையோடு இருப்பதாக ஒருவர் கூறும்போதெல்லாம், அது உண்மை என்று நாம் தாராளமாக நம்பலாம் என்று நாம் அனுமானிக்கிறோம். இந்தக் குறைந்தபட்ச அனுமானத்தின் அடிப்படையில், பிரக்ஞைக்கான மூளைக் குறியீடுகளை நம்மால் இன்று அடையாளம் காண முடிகிறது. அவற்றைக் கொண்டு மனிதர்களுடைய பிரக்ஞை நிலையையும் பிரக்ஞையற்ற நிலையையும் நம்மால் வேறுபடுத்திப் பார்க்க முடியும். விலங்குகளின் மூளைகளுக்கும் மனித மூளைகளுக்கும் இடையே பல பொதுவான அம்சங்கள் இருக்கின்றன

என்பதால், பிரக்ஞைக்கான குறியீடுகளைப் பற்றிய நம்முடைய புரிதல் ஆழமாகும்போது, பிற விலங்குகள் பிரக்ஞையோடு இருக்கின்றனவா என்பதையும், அவை எப்போது பிரக்ஞையோடு இருக்கின்றன என்பதையும் கண்டுபிடிக்க அக்குறியீடுகளை நம்மால் பயன்படுத்திக் கொள்ள முடியும். ஒரு நாயின் மூளை, பிரக்ஞையுடன்கூடிய ஒரு மனித மூளையில் இருக்கும் அதே குறியீடுகளை வெளிப்படுத்தினால், நாய்களும் பிரக்ஞை கொண்டவைதான் என்பதற்கான உறுதியான ஆதாரமாக இது விளங்கும்.

துவக்கத்தில் குரங்குகள் மற்றும் சுண்டெலிகளைக் கொண்டு நடத்தப்பட்டப் பரிசோதனைகள், அவற்றின் மூளைகளில் பிரக்ஞைக்கான குறியீடுகளை வெளிப்படுத்தின. ஆனால், விலங்குகளின் மூளைகளுக்கும் மனிதர்களின் மூளைகளுக்கும் இடையேயான வேறுபாடுகளையும், பிரக்ஞையின் ரகசியங்கள் அனைத்தையும் புரிந்து கொள்ளுவதிலிருந்து நாம் இன்னும் வெகுதூரத்தில் இருக்கிறோம் என்பதையும் வைத்துப் பார்க்கும்போது, சந்தேகவாதிகளைத் திருப்திப்படுத்தக்கூடிய தீர்மானமான சோதனைகளை உருவாக்குவதற்கு இன்னும் பலப்பல ஆண்டுகள் ஆகக்கூடும். இதற்கிடையே, ஆதாரத்திற்கான பொறுப்பு எனும் சுமையை யார் சுமப்பது? நாய்கள் பிரக்ஞை கொண்டவை என்பது நிரூபிக்கப்படும்வரை அவை சிந்தனையற்றத் தானியங்கி இயந்திரங்கள்தான் என்று நாம் கருத வேண்டுமா? அல்லது, நாய்கள் பிரக்ஞையற்றவை என்பதை நிரூபிக்கின்ற உறுதியான ஆதாரத்தை யாரேனும் கண்டுபிடிக்கும்வரை நாம் அவற்றைப் பிரக்ஞையுடன்கூடிய உயிரினங்களாக நடத்த வேண்டுமா?

2012ம் ஆண்டு ஜூலை 7ம் நாளன்று, நரம்பணுவியல் மற்றும் மூளை அறிவியல் துறைகளைச் சேர்ந்த முன்னணி வல்லுநர்கள் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் ஒன்றுகூடி, 'கேம்பிரிட்ஜ் பிரக்ஞைப் பிரகடனம்' என்ற ஒரு பிரகடனத்தில் கையெழுத்திட்டனர். பிரக்ஞையைத் தோற்றுவிக்கின்ற, மூளையில் இருக்கும் நரம்பணு தொடர்பான சில விஷயங்களைப் பெற்றிருப்பதில் மனிதர்கள் மட்டும் தனித்துவமானவர்கள் அல்லர் என்று அப்பிரகடனம் கூறியது. ஆனால், பிற விலங்குகளும் பிரக்ஞை கொண்டவைதான் என்று இப்பிரகடனம் வெளிப்படையாகக் கூறவில்லை. ஏனெனில், அதற்கான உறுதியான சான்று இன்னும் நம்மிடம் இல்லை. ஆனால், விலங்குகளுக்குப் பிரக்ஞை இல்லை என்பதை நிரூபிப்பதற்கான பொறுப்பை, அப்படி நினைக்கின்றவர்களுடைய தலையில் அது சுமத்திவிடுகிறது.

அறிவியல் சமூகத்தின் போக்கில் ஏற்பட்டுக் கொண்டிருந்த

மாற்றத்திற்குச் செயல்விடை அளிக்கும் விதமாக, 2015ம் ஆண்டு மே மாதத்தில், விலங்குகளை அறிவும் உணர்வுகளும் கொண்ட உயிரினங்களாக சட்டபூர்வமாக அங்கீகரித்த உலக நாடுகளில் முதல் நாடாக நியூசிலாந்து ஆனது. விலங்கு நலச் சட்டத் திருத்தம் நியூசிலாந்து நாடாளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்டது. விலங்குகள் அறிவும் உணர்வுகளும் கொண்ட உயிரினங்கள் என்று இனி அங்கீகரிக்கப்பட வேண்டியது கட்டாயமாக்கப்பட்டுள்ளது என்றும், எனவே கால்நடை வளர்ப்பு போன்ற விஷயங்களில் அவற்றின் நலன் முறையாகப் பாதுகாக்கப்பட வேண்டும் என்றும் அச்சட்டம் கூறுகிறது. மனிதர்களைவிட அதிகமான செம்மறியாடுகளைக் கொண்ட அந்த நாட்டில் (45 லட்சம் மனிதர்கள், 3 கோடி செம்மறியாடுகள்), அது மிகவும் குறிப்பிடத்தக்க ஓர் அறிக்கையாகும். கனடாவின் கியூபெக் பிராந்தியமும் இதே போன்ற ஒரு சட்டத்தை நிறைவேற்றியுள்ளது. பிற நாடுகளும் அதே வழியில் செயல்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

பல தொழில் நிறுவனங்களும் விலங்குகளை அறிவும் உணர்வுகளும் கொண்ட உயிரினங்களாக அங்கீகரிக்கின்றன. ஆனாலும், சோதனைக்கூடங்களில் அவை கொடூரமான சோதனைகளுக்கு உட்படுத்தப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, மருந்து நிறுவனங்கள் மனச்சோர்வுக்கான மருந்துகளை உருவாக்குவதில் வழக்கமாக எலிகளை வைத்துப் பரிசோதனைகளை மேற்கொள்ளுகின்றன. மிகப் பரவலாகப் பயன்படுத்தப்படுகின்ற ஒரு வழிமுறையில், நீங்கள் நூறு எலிகளை எடுத்து, அவை ஒவ்வொன்றையும் தண்ணீர் நிரப்பப்பட்டுள்ள ஒரு கண்ணாடிக் குழாயில் வைக்கிறீர்கள். அக்குழாய்களைவிட்டு வெளியே வருவதற்கு அந்த எலிகள் மீண்டும் மீண்டும் மேலே ஏறி வர முயற்சிக்கும். ஒரு பதினைந்து நிமிடப் போராட்டத்திற்குப் பிறகு அவற்றில் பெரும்பாலானவை தம்முடைய முயற்சியைக் கைவிட்டுவிட்டு, தம்முடைய அசைவை நிறுத்திவிடுகின்றன. அவை தம்முடைய சூழலைப் பற்றிய உணர்வு ஏதுமின்றி வெறுமனே அக்குழாய்களில் மிதக்கின்றன.

இப்போது நீங்கள் இன்னொரு நூறு எலிகளை எடுத்து, அவற்றையும் நீர் நிரம்பிய கண்ணாடிக் குழாய்களுக்குள் போட்டுவிட்டு, பதினான்கு நிமிடங்களுக்குப் பிறகு (அவை முற்றிலுமாகக் களைத்து விழவிருக்கும்போது) அவற்றை வெளியே எடுத்து, அவற்றின் ஈரத்தை உலர்த்தி, அவற்றுக்கு உணவளித்து, சிறிது நேரம் ஓய்வும் அளித்து, பிறகு மீண்டும் அவற்றை அக்குழாய்களுக்குள் நீங்கள் வீசுகிறீர்கள். இம்முறை, பெரும்பாலான எலிகள் இருபது நிமிடங்கள் போராடிவிட்டுத் தம்முடைய முயற்சியைக் கைவிடுகின்றன. கூடுதலாக

ஆறு நிமிடங்கள் அவை எப்படித் தாக்குப்பிடித்தன? ஏனெனில், முந்தைய வெற்றியின் நினைவு அவற்றின் மூளைகளில் ஏதோ ஓர் உயிர்வேதிப் பொருளை விடுவிக்கிறது. இது அந்த எலிகளுக்கு நம்பிக்கையைக் கொடுத்து, அவை சோர்வுறுவதைத் தாமதப்படுத்துகிறது. இந்த உயிர்வேதிப் பொருளை நம்மால் பிரித்தெடுக்க முடிந்தால், மனிதர்களுக்கான மனச்சோர்வுப் போக்கியாக அதை நாம் பயன்படுத்தக்கூடும். ஆனால் எந்தவொரு கணத்திலும் ஓர் எலியின் மூளையில் எண்ணற்ற வேதிப் பொருட்கள் நிரம்பியிருக்கின்றன. சரியான வேதிப்பொருளை நாம் எவ்வாறு கண்டுபிடிப்பது?

அதைக் கண்டுபிடிப்பதற்கு, இப்பரிசோதனையில் இதற்கு முன்பு கலந்து கொண்டிராத இன்னும் பல எலிகளை எடுத்து, நீங்கள் அவற்றைப் பல குழுக்களாகப் பிரித்து, ஒவ்வொரு குழுவுக்கும் ஒரு குறிப்பிட்ட வேதிப்பொருளை ஓர் ஊசி மூலம் உட்செலுத்துகிறீர்கள். (எந்த வேதிப்பொருட்கள் மனச்சோர்வுப் போக்கிகளாக இருக்கக்கூடும் என்று நம்பப்படுகின்றனவோ, அவை இப்பரிசோதனையில் பயன்படுத்தப்படுகின்றன.) பிறகு நீங்கள் அந்த எலிகளைத் தண்ணீருக்குள் வீசுகிறீர்கள். ‘ஏ’ வேதிப்பொருள் உட்செலுத்தப்பட்ட எலிகள் சோர்வுறுவதற்கு முன்பாக வெறும் பதினைந்து நிமிடங்கள் மட்டுமே போராடினால், அந்த வேதிப்பொருளை நீங்கள் உங்கள் பட்டியலிலிருந்து நீக்கிவிடலாம். ‘பி’ வேதிப்பொருள் உட்செலுத்தப்பட்ட எலிகள் இருபது நிமிடங்கள்வரை போராடினால், நீங்கள் சரியான தீர்வைக் கண்டுபிடித்துவிட்டதாக உங்கள் நிறுவனத் தலைவரிடமும் பங்குதாரர்களிடமும் உறுதியாகக் கூறலாம்.



படம் **16:** இடது படம்: கண்ணாடிக் குழாயிலிருந்து தப்பிக்க நம்பிக்கையோடு போராடிக் கொண்டிருக்கின்ற ஓர் எலி. வலது படம்: முற்றிலும் நம்பிக்கை இழந்த, எதிலும் அக்கறை இல்லாத ஓர் எலி அந்தக் கண்ணாடிக் குழாயில் மிதந்து கொண்டிருக்கிறது.

இந்த ஒட்டுமொத்த விவரிப்பும் எலிகளை மனிதத்தன்மை கொண்டவையாகத் தேவையின்றிச் சித்தரிப்பதாக சந்தேகவாதிகள் கூறக்கூடும். அவர்களைப் பொருத்தவரை, எலிகள் நம்பிக்கையையும் உணருவதில்லை, சோர்வையும் உணருவதில்லை. சில சமயங்களில் எலிகள் வேகமாக நகருகின்றன, சில சமயங்களில் அவை அசையாமல் நிற்கின்றன, ஆனால் அவை ஒருபோதும் எந்த உணர்வையும் அனுபவிப்பதில்லை. பிரக்ஞையற்றப் படிமுறைத் தீர்வுகளால் மட்டுமே அவை இயக்கப்படுகின்றன என்று அவர்கள் வாதிடுகின்றனர். இவையெல்லாம் உண்மை என்றால், இப்பரிசோதனைகளை மேற்கொள்ளுவதில் என்ன அர்த்தம் இருக்கிறது? மனநோய்களுக்கான மருந்துகள் மனித நடத்தையில் மட்டுமல்லாமல், மனித உணர்விலும் மாற்றங்களைத் தூண்டுவதை நோக்கமாகக் கொண்டே உருவாக்கப்படுகின்றன. ஒரு நோயாளி ஒரு மனநல மருத்துவரிடம் சென்று, “என்னை இந்த மனச்சோர்விலிருந்து மீட்டெடுக்கக்கூடிய எதையேனும் எனக்குக் கொடுங்கள்,” என்று கூறும்போது, தான் உள்ளூரச் சோர்வை அனுபவிக்கும்படியும், வெளியே மட்டும் கைகால்களை ஆட்டிக் கொண்டிருக்கும்படியும் செய்கின்ற ஒரு தூண்டுபொருளை அவர் கேட்கவில்லை. அவர் குதூகலத்தை உணர விரும்புகிறார். எலிகள் மனிதர்களைப் போன்ற உணர்ச்சிகளைக் கொண்டிருப்பதாகப் பெருநிறுவனங்கள் முன்னதாகவே ஊகித்தால்

மட்டுமே எலிகளைக் கொண்டு பரிசோதனைகளை நடத்துவது அந்நிறுவனங்களுக்கு அப்படிப்பட்ட ஒரு மாயாஜாலமான மாத்திரையை உருவாக்க உதவும். மனப் பரிசோதனைக்கூடங்களில் இது ஒரு பொதுவான முன்னூகமாக இருக்கிறது.

## சுயபிரக்ஞை கொண்ட சிம்பன்சி

மனிதர்கள்தாம் உயர்ந்தவர்கள் என்ற கருத்தைத் தூக்கிப் பிடிக்க மேற்கொள்ளப்படுகின்ற இன்னொரு முயற்சி, எலிகளுக்கும் நாய்களுக்கும் பிற விலங்குகளுக்கும் பிரக்ஞை இருக்கிறது என்பதை ஏற்றுக் கொள்ளுகின்றபோதிலும், மனிதர்களுக்கு இருப்பது போன்ற சுயபிரக்ஞை அவற்றுக்கு இல்லை என்று வாதிடுகிறது. மேலும், மனச்சோர்வு, மகிழ்ச்சி, பசி, மனநிறைவு போன்ற உணர்வுகளை அவை அனுபவிக்கக்கூடும், ஆனால் சுயம் என்ற யோசனை அவற்றுக்கு இல்லை என்றும், தாம் அனுபவிக்கின்ற மனச்சோர்வோ அல்லது பசியோ 'நான்' என்ற ஒரு தனித்துவமான அம்சத்திற்குச் சொந்தமானது என்ற விழிப்புணர்வும் அவற்றுக்கு இல்லை என்றும் அது கூறுகிறது.

இந்த யோசனை எவ்வளவு தெளிவற்றதாக இருக்கிறதோ, அதே அளவுக்கு இது பரவலற்றதாகவும் இருக்கிறது. ஒரு நாய்க்குப் பசி ஏற்படும்போது, அது தனக்காக ஒரு துண்டு இறைச்சியை எடுத்துக் கொள்ளுகிறதே தவிர இன்னொரு நாய்க்கு உணவு கொடுப்பதில்லை. அண்டை வீடுகளில் இருக்கும் நாய்கள் சிறுநீர் கழித்துவிட்டுச் சென்றுள்ள ஒரு மரத்தை ஒரு நாய் முகர்ந்து பார்க்கும்படி செய்தீர்கள் என்றால், அந்தச் சிறுநீர் தன்னுடையதா, அல்லது பக்கத்து வீட்டிலுள்ள அழகான லேப்ரடாரினுடையதா, அல்லது ஏதோ அந்நிய நாயினுடையதா என்பதை அந்த நாய் உடனடியாகத் தெரிந்து கொள்ளும். நாய்கள் தம்முடைய சொந்த வாசனைக்கு ஒரு விதமாகவும், தம்மோடு புணரக்கூடிய சாத்தியமுள்ள நாய்கள் மற்றும் எதிரி நாய்களின் வாசனைகளுக்கு வேறு விதமாகவும் எதிர்வினையாற்றுகின்றன. அப்படியானால், அவற்றுக்கு சுயபிரக்ஞை இல்லை என்பதற்கு என்ன பொருள்?

இந்த விவாதத்தின் மேம்பட்ட வடிவம் இப்படிக் கூறுகிறது: சுயபிரக்ஞையில் பல்வேறு நிலைகள் இருக்கின்றன. ஒரு கடந்தகாலத்தையும் ஓர் எதிர்காலத்தையும் கொண்ட, நெடுங்காலம் நீடிக்கின்ற ஒரு சுயம் தாங்கள் என்பதை மனிதர்கள் மட்டுமே புரிந்து கொள்ளுகின்றனர். ஏனெனில், அவர்களால் மட்டுமே தங்களுடைய கடந்தகால அனுபவங்களையும் எதிர்கால நடவடிக்கைகளையும் பற்றி

சிந்திப்பதற்கு மொழியைப் பயன்படுத்த முடியும். பிற விலங்குகள் ஒரு நிரந்தரமான நிகழ்காலத்தில் வாழுகின்றன. நிகழ்கணத்தில் ஏற்படும் தூண்டல்களுக்கும் கணநேர உந்துதல்களுக்கும் மட்டுமே அவை எதிர்வினையாற்றிக் கொண்டிருக்கின்றன. எடுத்துக்காட்டாக, குளிர்காலத்திற்காகத் தன்னுடைய உணவான கொட்டைகளை மறைத்து வைக்கின்ற ஓர் அணிலுக்கு, கடந்த குளிர்காலத்தில் தான் அனுபவித்தப் பசி நினைவிருப்பதில்லை, அது தன்னுடைய எதிர்காலத்தைப் பற்றியும் பேசுவதில்லை. மாறாக, அது ஒரு கணநேரத் தூண்டுதலைப் பின்தொடர்ந்து செல்லுகிறது. அந்தத் தூண்டுதலின் துவக்கத்தையும் நோக்கத்தையும் பற்றி அதற்கு எதுவும் தெரிவதில்லை. அதனால்தான், ஒரே ஒரு குளிர்காலத்தைக்கூட அனுபவித்திராத, அதனால் குளிர்காலம் பற்றி எதுவும் நினைவிருக்காத மிக இளம் அணில்கள்கூடக் கோடைக்காலத்தில் கொட்டைகளைச் சேகரிக்கின்றன.

ஆனாலும், கடந்தகால அல்லது எதிர்கால நிகழ்வுகளைப் பற்றிய விழிப்புணர்வுடன் இருப்பதற்கு மொழி ஏன் ஒரு கட்டாயத் தேவையாக இருக்க வேண்டும் என்பது பற்றிய தெளிவு இல்லை. மனிதர்கள் மொழியைப் பயன்படுத்துகின்றனர் என்ற உண்மையை ஒரு சான்றாக நம்மால் எடுத்துக் கொள்ள முடியாது. மனிதர்கள் தங்களுடைய அன்பையும் பயத்தையும் வெளிப்படுத்துவதற்கும் மொழியைப் பயன்படுத்துகின்றனர், ஆனால் பிற விலங்குகள் அதே அன்பையும் பயத்தையும் அனுபவிக்கின்றன, வார்த்தைகளற்ற ஒரு விதத்தில் அவற்றை வெளிப்படுத்தவும் செய்கின்றன. உண்மையில், மனிதர்கள்கூட வார்த்தைகளால் விவரிக்காமலேயே கடந்தகால நிகழ்வுகளையும் எதிர்கால நிகழ்வுகளையும் பற்றிய விழிப்புணர்வுடன் இருக்கின்றனர். குறிப்பாகக் கனவு நிலைகளில், வார்த்தைகள் ஏதுமற்ற அந்த ஒட்டுமொத்த நிகழ்வையும் நம்மால் உணர முடிகிறது. ஆனால் தூக்கத்திலிருந்து விழித்தவுடன் அக்கனவை வார்த்தைகளில் விவரிக்க நாம் போராடுகிறோம்.

கிளிகள், ஸ்க்ரப் ஜே போன்ற பறவைகள் உட்பட சில விலங்குகள் தனிப்பட்ட நிகழ்வுகளை நினைவில் வைத்திருக்கின்றன என்றும், எதிர்கால நிகழ்வுகளுக்கு அவை பிரக்ஞையோடு திட்டமிடுகின்றன என்றும் பல்வேறு பரிசோதனைகள் சுட்டிக்காட்டுகின்றன. ஆனாலும், இதை சந்தேகத்திற்கு இடமின்றி நிரூபிப்பது சாத்தியமில்லை. ஏனெனில், ஒரு விலங்கு வெளிப்படுத்தும் நடவடிக்கை எவ்வளவு உயர்நயமானதாக இருந்தாலும், அது அதன் மூளையில் உள்ள பிரக்ஞையற்றப் படிமுறைத் தீர்வுகளினால் விளைந்ததே அன்றி, அதன் மனத்திலுள்ள பிரக்ஞையுடன்கூடிய காட்சிகளிலிருந்து வரவில்லை என்று சந்தேகவாதிகள் கூறக்கூடும்.

இப்பிரச்சனையை விளக்குவதற்கு ஸ்வீடன் நாட்டிலுள்ள ஃபுருவிக் விலங்குக் காட்சி சாலையில் உள்ள சான்டினோ என்ற ஓர் ஆண் சிம்பன்சியின் கதையை எடுத்துக் கொள்ளலாம். மதிற்சுவருடன்கூடிய தன்னுடைய அடைப்பிடத்தில் தன்னுடைய சலிப்பைப் போக்கிக் கொள்ளுவதற்காக உற்சாகமூட்டும் ஒரு பொழுதுபோக்கை சான்டினோ உருவாக்கியது. அங்கு வருகை தந்த பார்வையாளர்கள்மீது கற்களை வீசுவதுதான் அந்தப் பொழுதுபோக்கு. இச்செயல் ஒன்றும் அவ்வளவு தனித்துவமானது அல்ல. கோபம் கொண்டுள்ள சிம்பன்சிகள் கற்களையும், குச்சிகளையும், சில சமயங்களில் தம்முடைய உடற்கழிவையும்கூட வீசியெறிவது வழக்கம்தான். ஆனால், சான்டினோ தன்னுடைய நடவடிக்கைகளை முன்கூட்டியே திட்டமிட்டுக் கொண்டிருந்தது. தினமும் அதிகாலை நேரத்தில், விலங்குக் காட்சி சாலை பார்வையாளர்களுக்காகத் திறந்துவிடப்படுவதற்கு வெகு முன்னதாகவே, சான்டினோ தன்னுடைய எறிபொருட்களைச் சேகரித்து ஓரிடத்தில் குவித்து வைத்தது. ஆனால் கோபத்திற்கான எந்த அறிகுறியையும் அது வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. சான்டினோவிடம் எச்சரிக்கையாக நடந்து கொள்ளுவதற்கு வழிகாட்டிகளும் பார்வையாளர்களும் விரைவிலேயே கற்றுக் கொண்டனர். குறிப்பாக, அது தன்னுடைய கற்குவியல்களுக்கு அருகே நின்று கொண்டிருந்தபோது, அவர்கள் அதிக எச்சரிக்கையாக இருந்தனர். இதனால், குறி வைத்துத் தாக்க ஆட்களைக் கண்டுபிடிப்பது சான்டினோவுக்குக் கடினமான காரியமாக ஆகியது.

இந்த நிலைமையைக் கையாளுவதற்கு 2010ம் ஆண்டு மே மாதத்தில் அது ஒரு புதிய உத்தியை உருவாக்கியது. அதிகாலையில் அது தன்னுடைய தூங்குமிடத்திலிருந்து வைக்கோலைக் கொண்டு வந்து மதிற்சுவருக்கு அருகே குவித்து வைத்தது. சிம்பன்சிகளைப் பார்ப்பதற்குப் பார்வையாளர்கள் வழக்கமாக வந்து நின்ற இடம் அது.

பிறகு சான்டினோ கற்களைச் சேகரித்து அவற்றை அந்த வைக்கோலுக்கு அடியில் மறைத்து வைத்தது. சுமார் ஒரு மணிநேரத்திற்குப் பிறகு, முதல் பார்வையாளர் அங்கு வந்தபோது, சான்டினோ அமைதியாக இருந்தது, அது எரிச்சலையோ அல்லது ஆக்ரோஷத்தையோ வெளிப்படுத்தவில்லை. அதன் பலிகடாக்கள் அதனுடைய தாக்கும் எல்லைக்குள் வந்தபோதுதான் சான்டினோ அந்த வைக்கோலுக்கு அடியிலிருந்து கற்களை எடுத்து அவர்கள்மீது சரமாரியாக வீசியது. இதைக் கண்டு பயந்து போன பார்வையாளர்கள் எல்லாத் திசைகளிலும் தலைதெறிக்க ஓடினர். 2012ம் ஆண்டின் கோடைக்காலத்தில், சான்டினோ தன்னுடைய உத்தியை மேலும் மேம்படுத்தியது. இப்போது அது தன்னுடைய கற்களை வைக்கோலுக்கு அடியில் மட்டுமல்லாமல், மரங்களுக்கு அடியிலும், கட்டடங்களிலும், பிற பொருத்தமான மறைவிடங்களிலும் ஒளித்து வைத்தது.

ஆனால் சான்டினோவால்கூட சந்தேகவாதிகளைத் திருப்திப்படுத்த முடியவில்லை. காலையில் ஏழு மணிக்கு அது கற்களைச் சேகரித்து மறைவான இடங்களில் ஒளித்து வைக்கும்போது, நண்பகலில் அங்கு வரும் பார்வையாளர்கள்மீது அவற்றை வீசி எறிவது எவ்வளவு குதூகலமூட்டுவதாக இருக்கும் என்று அது கற்பனை செய்து கொண்டிருப்பதாக எப்படி நம்மால் உறுதியாகக் கூற முடியும்? ஒருவேளை, குளிர்காலத்தை ஒருபோதும் அனுபவித்திராத ஓர் இளம் அணில் அந்தக் ‘குளிர்காலத்திற்காக’க் கொட்டைகளை ஒளித்து வைப்பதைப்போலவே, பிரக்ஞையற்ற ஏதோ படிமுறைத் தீர்வு சான்டினோவை உந்தித் தள்ளிக் கொண்டிருக்கக்கூடும்.

அதேபோல, சில வாரங்களுக்கு முன்பு தன்னைத் தாக்கிய ஓர் எதிரியைத் தாக்கிக் கொண்டிருக்கின்ற ஓர் ஆண் சிம்பன்சி உண்மையில் பழி வாங்கிக் கொண்டிருக்கவில்லை, மாறாக, கணநேரம் தோன்றிவிட்டு மறைகின்ற கோபத்திற்கு அது எதிர்வினையாற்றிக் கொண்டிருக்கிறது என்று சந்தேகவாதிகள் கூறுகின்றனர். தாய் யானை ஒன்று, தன்னுடைய குட்டியை ஒரு சிங்கம் அச்சுறுத்திக் கொண்டிருப்பதைப் பார்க்கும்போது, அது வேகமாக முன்னால் சென்று, தன்னுடைய உயிரைப் பணயம் வைக்கிறது. அதற்குக் காரணம், மாதக்கணக்கில் தான் சீராட்டி வளர்த்து வந்துள்ள தன்னுடைய அன்புக்குரிய குட்டி அது என்பது அந்தத் தாய் யானையின் நினைவுக்கு வருவது அல்ல, மாறாக, அந்தச் சிங்கத்தின்மீது அந்த யானைக்கு இருக்கின்ற இனம் புரியாத பகைமையுணர்வுதான் என்று அந்த சந்தேகவாதிகள் கருதுகின்றனர். ஒரு நாய் தன்னுடைய எஜமானைக் கண்டதும் உற்சாகத்தில் துள்ளிக் குதிக்கும்போது, தன்னுடைய

குழந்தைப்பருவம் முதலாகவே தனக்கு உணவளித்துத் தன்னை அன்போடு வளர்த்து வந்துள்ள நபரை அது அடையாளம் கண்டுகொண்டிருக்கவில்லை, மாறாக, விளக்கப்பட முடியாத ஒரு பேரானந்தத்தால் அது திக்குமுக்காடிப் போயுள்ளது, அவ்வளவுதான்.

மேற்கூறப்பட்ட எதையும் உண்மையென்றோ அல்லது பொய்யென்றோ நம்மால் நிரூபிக்க முடியாது. ஏனெனில், அவை 'பிற மனங்கள் குறித்தப் பிரச்சனை'யின் மாறுபாடுகளே. பிரக்ஞை தேவைப்படுகின்ற படிமுறைத் தீர்வு எதனுடனும் நமக்குப் பரிச்சயமில்லை என்பதால், ஒரு விலங்கு செய்கின்ற எந்தவொரு விஷயத்தையும், பிரக்ஞையுடன்கூடிய நினைவுகள் மற்றும் திட்டங்களின் விளைவு என்று பார்ப்பதற்கு பதிலாக, பிரக்ஞையற்றப் படிமுறைத் தீர்வுகளின் விளைவு என்று நம்மால் பார்க்க முடியும். எனவே, சான்டினோவின் நடத்தைக்கு என்ன விளக்கம் கொடுக்கலாம்? சான்டினோ தன்னுடைய எதிர்காலத்திற்குப் பிரக்ஞையோடு திட்டமிட்டுக் கொண்டிருப்பதாகவும், இக்கருத்துடன் ஒத்துப் போக மறுப்பவர்கள் இதற்கு எதிரான ஏதேனும் ஆதாரத்தைக் கொடுக்க வேண்டும் என்றும் நாம் அனுமானிக்கலாமா? அல்லது, அந்த சிம்பன்சி பிரக்ஞையற்ற ஏதோ ஒரு படிமுறைத் தீர்வால் இயக்கப்படுகிறது என்றும், அது பிரக்ஞையோடு உணருகின்ற ஒரே விஷயம் வைக்கோலுக்கு அடியில் கற்களை மறைத்து வைப்பதற்கு ஏற்படுகின்ற ஒரு மர்மமான தூண்டுதல் மட்டுமே என்றும் சிந்திப்பது நியாயமானதாக இருக்குமா?

சான்டினோவுக்குத் தன்னுடைய கடந்தகாலம் பற்றிய நினைவு இல்லாவிட்டாலும் அல்லது அது தன்னுடைய எதிர்காலம் குறித்துக் கற்பனை செய்யாவிட்டாலும்கூட, அந்த சிம்பன்சிக்கு சுயபிரக்ஞை இல்லை என்று அதற்கு அர்த்தமாகிவிடுமா? மனிதர்களுக்கு மட்டுமே சுயபிரக்ஞை இருப்பதாக நாம் கூறுகிறோம் - அவர்கள் தங்களுடைய கடந்தகாலத்தை நினைவுகூராமல் இருக்கும்போதும், தங்களுடைய எதிர்காலத்தைப் பற்றிக் கனவு காணாமல் இருக்கும்போதும்கூட! எடுத்துக்காட்டாக, ஒரு மனிதத் தாய், தன்னுடைய சின்னஞ்சிறு குழந்தை ஒரு பரபரப்பான சாலையில் சுற்றித் திரிந்து கொண்டிருப்பதைக் காணும்போது, அவள் தன்னுடைய கடந்தகாலத்தையோ அல்லது எதிர்காலத்தையோ பற்றி யோசிப்பதற்குத் தன் நேரத்தைச் செலவிடுவதில்லை. ஒரு சிங்கத்திடமிருந்து தன்னுடைய குட்டியைக் காப்பாற்றுவதற்காக ஓடி வந்த அந்தத் தாய் யானையைப்போலவே, இவளும் தன்னுடைய குழந்தையைக் காப்பாற்றுவதற்காக விரைகிறாள். எனவே, நாம்

யானைகளைப் பற்றிக் கூறுவதை ஏன் அப்படியே அவளுக்கும் கூறக்கூடாது? அதாவது, ஒரு யானை தன்னுடைய குட்டியை ஒரு சிங்கத்திடமிருந்து காப்பாற்றுவதற்காகத் தன் உயிரைப் பணயம் வைக்கத் துணிவது சுயபிரக்ஞையால் அல்ல, மாறாக, அது ஒரு கணநேரத் தூண்டுதலின் விளைவு என்று நாம் கூறுவது அந்த மனிதத் தாய்க்கு ஏன் பொருந்தாது?

அதேபோல, முதன்முதலாக ஒன்றாகச் சேர்ந்து வெளியே சென்று காதல் மேலிட முத்தமிட்டுக் கொண்டிருக்கின்ற இரண்டு காதலர்கள், காயப்பட்டுள்ள தன் சக வீரரைக் காப்பாற்றுவதற்காக எதிரிகளின் தாக்குதலைத் துணிந்து எதிர்கொண்டு அந்த வீரரை நோக்கி ஓடுகின்ற ஒரு ராணுவ வீரர், ஒரு தலைசிறந்த படைப்பை உருவாக்குவதில் முழுமூச்சாக ஈடுபட்டுள்ள ஓர் ஓவியக் கலைஞர் போன்றோரை எடுத்துக் கொள்ளலாம். இவர்களில் யாருமே தங்களுடைய கடந்தகாலத்தையோ அல்லது எதிர்காலத்தையோ பற்றி சிந்திப்பதற்காக நேரம் எடுத்துக் கொள்ளுவதில்லை. அப்படியானால், அவர்களுக்கு சுயபிரக்ஞை இல்லை என்று அர்த்தமா? அவர்களுடைய இருத்தல் நிலை, தன்னுடைய கடந்தகாலச் சாதனைகளையும் எதிர்காலத் திட்டங்களையும் பற்றி ஒரு தேர்தல் பிரச்சாரத்தில் பேசுகின்ற ஓர் அரசியல்வாதியைவிடத் தாழ்ந்ததா?

## கெட்டிக்காரக் குதிரை

2010ல், நெஞ்சை நெகிழ வைத்த, வழக்கத்திற்கு மாறான ஒரு பரிசோதனையை அறிவியலறிஞர்கள் சில எலிகளை வைத்து மேற்கொண்டனர். அவர்கள் ஓர் எலியை ஒரு சின்னஞ்சிறு கூண்டுக்குள் அடைத்தனர். அந்தக் கூண்டை, அதைவிட மிகப் பெரிய ஒரு சிற்றறைக்குள் அவர்கள் வைத்தனர். அந்த அறையில் இன்னோர் எலியை அவர்கள் சுதந்திரமாகச் சுற்றித் திரிய வைத்தனர். கூண்டுக்குள் அடைக்கப்பட்டிருந்த எலி வெளிப்படுத்திய துயரச் சமிக்கைகள், சுதந்திரமாகச் சுற்றித் திரிந்த எலியும் கவலை மற்றும் அழுத்தத்தின் அறிகுறிகளை வெளிப்படுத்தும்படி செய்தது. இப்பரிசோதனை பல முறை மேற்கொள்ளப்பட்டது. பெரும்பாலான சமயங்களில், சுதந்திரமாகச் சுற்றித் திரிந்த எலி, கூண்டுக்குள் அடைபட்டுக் கிடந்த தன்னுடைய நண்பனைக் காப்பாற்ற முற்பட்டது. பல முயற்சிகளுக்குப் பிறகு, அது அந்தக் கூண்டை வெற்றிகரமாகத் திறந்து அந்தக் கைதியை விடுவிடுத்தது. இதே பரிசோதனையை அந்த ஆராய்ச்சியாளர்கள் இப்போது வேறு விதமாகச் செய்தனர். அவர்கள் அந்தச் சிற்றறையில்

ஒரு சாக்லேட்டை வைத்தனர். சுதந்திரமாகச் சுற்றித் திரிந்த எலி இப்போது இரண்டு விஷயங்களில் ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டியிருந்தது. ஒன்று, அந்தக் கைதியை விடுவிக்கலாம், அல்லது அந்தச் சாக்லேட்டைத் தான் மட்டும் சுவைத்து மகிழலாம். பல எலிகள், முதலில் தம்முடைய தோழனை விடுவித்துவிட்டு, பிறகு அந்தச் சாக்லேட்டை அதனோடு பகிர்ந்து உண்ணுவதைத் தேர்ந்தெடுத்தன (ஒருசில எலிகள் சுயநலமாக நடந்து கொண்டன; சில எலிகள் மற்றவற்றைவிட அதிகப் பேராசை கொண்டவை என்பதை அவை நிரூபித்தன).

இந்த முடிவுகளையும் சந்தேகவாதிகள் நிராகரித்தனர். சுதந்திரமாகச் சுற்றித் திரிந்த எலி, கூண்டுக்குள் அடைபட்டுக் கிடந்த எலியை விடுவித்தது இரக்க உணர்வால் அல்ல, மாறாக, தனக்கு எரிச்சலூட்டிக் கொண்டிருந்த அந்தத் துயரச் சமிக்கைகளை நிறுத்துவதற்காகவே அது அவ்வாறு நடந்து கொண்டதாக அவர்கள் கூறினர். அதாவது, அந்தத் துயரச் சமிக்கைகளால் அவை அனுபவித்த இனிமையற்ற உணர்வுகள் அவற்றை உந்தித் தள்ளியதாகவும், இந்த உணர்வுகளுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைப்பதற்காகத்தான் அவை அந்தக் கைதிகளை விடுவித்தனவே அன்றி வேறு எந்த உன்னதமான நோக்கமும் அவற்றுக்கு இருக்கவில்லை என்றும் அவர்கள் கருதினர். அவர்கள் கூறுவது சரியாக இருக்கக்கூடும். ஆனால், மனிதர்களாகிய நம்முடைய விஷயத்திலும் நம்மால் இதே கருத்தைக் கூற முடியுமல்லவா? நான் ஒரு பிச்சைக்காரருக்குப் பணத்தை தானமாகக் கொடுக்கும்போது, அந்தப் பிச்சைக்காரர் அங்கு இருப்பது என்னுள் தோற்றுவிக்கின்ற இனிமையற்ற உணர்வுகளுக்கு நான் செயல்விடை அளித்துக் கொண்டிருக்கிறேன் என்று கூறலாம் அல்லவா? நான் அந்தப் பிச்சைக்காரர்மீது உண்மையிலேயே அக்கறை கொண்டிருக்கிறேனா அல்லது நான் சௌகரியமாக உணர வேண்டும் என்று நான் விரும்புகிறேனா?

மொத்தத்தில், எலிகள், நாய்கள், டால்பின்கள், சிம்பன்சிகள் ஆகியவற்றிடமிருந்து நாம் அவ்வளவாக வேறுபட்டவர்கள் அல்லர். அவர்களைப்போலவே நமக்கும் ஆன்மா எதுவும் இல்லை. நம்மைப்போலவே, அவற்றுக்கும் பிரக்ஞை இருக்கிறது, உணர்வுகளையும் உணர்ச்சிகளையும் உள்ளடக்கிய ஒரு சிக்கலான உலகம் இருக்கிறது. ஒவ்வொரு விலங்கிற்கும் தனித்துவமான பண்புநலன்களும் திறமைகளும் இருக்கின்றன. மனிதர்களுக்கும் தனிச்சிறப்பு வாய்ந்த திறமைகள் இருக்கின்றன. நாம் தேவையில்லாமல் விலங்குகளை மனிதர்களைப்போல நடத்த வேண்டியதில்லை. இது

மோசமான அறிவியல் மட்டுமல்ல, மாறாக, உள்ளது உள்ளபடியே பிற விலங்குகளை நாம் புரிந்து கொள்ளுவதிலிருந்தும் மதிப்பதிலிருந்தும் இது நம்மைத் தடுக்கிறது.

1900களின் துவக்கத்தில், ‘கிளெவர் ஹான்ஸ்’ என்ற குதிரை ஜெர்மனியில் பிரபலத்துவம் பெற்றது. ஜெர்மனியின் நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் சுற்றுப்பயணம் செய்த அக்குதிரை, ஜெர்மானிய மொழியில் தனக்கு இருந்த அறிவையும் கணிதத்தில் குறிப்பிடத்தக்கத் திறமையையும் வெளிப்படுத்தியது. “ஹான்ஸ், மூன்றை நான்கால் பெருக்கினால் என்ன வரும்?” என்று அதனிடம் கேட்கப்பட்டபோது, ஹான்ஸ் தன்னுடைய குளம்பால் பன்னிரண்டு முறை தரையில் தட்டியது. “இருபதிலிருந்து பதினொன்றைக் கழித்தால் எவ்வளவு?” என்று எழுதி அதை அதனிடம் காட்டியபோது, அது மிகத் துல்லியமாக ஒன்பது முறை தன் குளம்பால் தட்டியது.



படம் **17: 1904**ல் கிளெவர் ஹான்ஸ் ஒரு மேடைமீது நிற்கும் காட்சி.

1904ம் ஆண்டில், ஜெர்மானியக் கல்விக் குழுமம், இவ்விவகாரத்தை ஆய்வு செய்வதற்காக உளவியலாளர் ஒருவருடைய தலைமையின்கீழ் சிறப்பு அறிவியல் ஆணையம் ஒன்றை நியமித்தது. ஒரு சர்க்கஸ் மேலாளர், ஒரு கால்நடை மருத்துவர் உட்பட, அந்த ஆணையத்தின் பதின்மூன்று உறுப்பினர்களும் இவ்விவகாரம் ஒரு மோசடி என்று உறுதியாக நம்பினர். ஆனால், அவர்கள் எவ்வளவு கடினமாக முயற்சித்தபோதிலும், அதில் எந்த மோசடியையோ அல்லது ஏமாற்று வேலையையோ அவர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. ஹான்ஸை அதன் சொந்தக்காரரிடமிருந்து தனியாக அழைத்துச் சென்று

அந்நியர்கள் அதனிடம் கேள்விகள் கேட்டபோதுகூட, அது வெளிப்படுத்திய விடைகளில் பெரும்பாலானவை சரியாக இருந்தன.

1907ல் ஆஸ்கர் ஃபங்ஸ்ட் என்ற உளவியலாளர் துவக்கிய இன்னோர் ஆய்வுதான் இறுதியில் உண்மையை வெளிச்சத்திற்குக் கொண்டுவந்தது. தன்னிடம் கேள்விகளைக் கேட்டவருடைய உடல்மொழியையும் முகபாவங்களையும் கூர்ந்து கவனித்ததன் மூலம் அக்குதிரை சரியான விடைகளை வெளிப்படுத்தியதை அவர் கண்டறிந்தார். மூன்றை நான்கால் பெருக்கினால் என்ன வரும் என்று ஹான்ஸிடம் ஒருவர் கேட்டபோது, தான் ஒரு குறிப்பிட்ட முறை தன்னுடைய குளம்பால் தரையில் தட்ட வேண்டும் என்று அந்த மனிதர் எதிர்பார்த்தார் என்பதை ஹான்ஸ் தன்னுடைய கடந்தகால அனுபவங்களிலிருந்து அறிந்திருந்தது. எனவே, அது அந்நபரை உற்றுக் கண்காணித்தபடி தன் குளம்பால் தட்டத் தொடங்கியது. அது சரியான எண்ணிக்கையை நெருங்கியபோது, அந்நபர் மேன்மேலும் இறுக்கமடைந்தார். ஹான்ஸ் சரியான எண்ணைத் தட்டியபோது, அவருடைய இறுக்கம் உச்சத்தை எட்டியது. இதை ஒருவருடைய உடலின் தோரணையையும் முகபாவத்தையும் வைத்து எப்படி உணர்ந்து கொள்ள வேண்டும் என்பதை ஹான்ஸ் அறிந்திருந்தது. எனவே, அது தட்டுவதை நிறுத்திவிட்டு, அந்நபரின் முகத்தில் தென்பட்ட இறுக்கம் வியப்பாகவும் சிரிப்பாகவும் மாறியதைக் கண்டது. தான் சரியான விடையை வெளிப்படுத்தியிருந்தோம் என்பதை ஹான்ஸ் அறிந்திருந்தது.

விலங்குகள் மனிதப் பண்புகளைக் கொண்டவை என்பதுபோலவும், உண்மையிலேயே அவற்றுக்கு இருக்கும் திறன்களைவிட அதிக அற்புதமான திறன்கள் அவற்றுக்கு இருப்பதுபோலவும் மனிதர்கள் சித்தரிக்கும் விதத்திற்கான ஓர் எடுத்துக்காட்டாக ஹான்ஸ் அடிக்கடிக் குறிப்பிடப்படுகிறது. உண்மையில், இதிலிருந்து கிடைக்கும் படிப்பினை இதற்கு நேரெதிரானது. விலங்குகளுக்கு மனிதப் பண்புகள் இருப்பதுபோல அவற்றை நடத்துவதன் மூலம், விலங்குகளின் அறிவுத்திறனை நாம் பொதுவாகக் குறைவாக மதிப்பிட்டுவிடுகிறோம், அவற்றின் தனித்துவமான திறன்களை நாம் உதாசீனப்படுத்துகிறோம். கணிதத்தைப் பொருத்தவரை, ஹான்ஸ் ஒரு மேதை அல்ல. ஓர் எட்டு வயதுக் குழந்தை இதைவிடச் சிறப்பாகக் கணக்குப் போடுவான். ஆனால், உடல்மொழியிலிருந்து உணர்ச்சிகளையும் நோக்கங்களையும் கண்டுபிடிப்பதற்கான திறனில் ஹான்ஸ் நிச்சயமாக ஒரு மேதைதான். மூன்றை நான்கால் பெருக்கினால் எவ்வளவு என்று ஒரு சீனர் என்னிடம் சீன மொழியில் கேட்டால், அவருடைய உடல்மொழியையும்

முகபாவங்களையும் கூர்ந்து கவனித்தபடி சரியான தடவை என்னால் என் பாதத்தைத் தரையில் தட்ட முடியாது. குதிரைகள் வழக்கமாக ஒன்றோடொன்று தம்முடைய உடல்மொழியால்தான் கருத்துப் பரிமாற்றம் மேற்கொள்ளுகின்றன என்பதால் ஹான்ஸுக்கு இயல்பாகவே அத்திறமை இருந்தது. ஹான்ஸைப் பற்றிய குறிப்பிடத்தக்க விஷயம் என்னவென்றால், அது அத்திறமையைத் தன்னுடைய சக குதிரைகளின் உணர்ச்சிகளையும் நோக்கங்களையும் தெரிந்து கொள்ளுவதற்குப் பயன்படுத்தியதோடு கூடவே, தனக்குப் பரிச்சயமில்லாத மனிதர்களுடைய உணர்ச்சிகளையும் நோக்கங்களையும் புரிந்து கொள்ளுவதற்கும் அது பயன்படுத்தியது.

விலங்குகள் இவ்வளவு சாமர்த்தியமானவை என்றால், குதிரைகள் ஏன் மனிதர்களை வண்டிகளில் பூட்டுவதில்லை, எலிகள் ஏன் நம்மீது பரிசோதனைகளை மேற்கொள்ளுவதில்லை, டால்பின்கள் ஏன் வளையங்கள் வழியாக நம்மைக் குதிக்க வைப்பதில்லை? பிற விலங்குகள்மீது ஆதிக்கம் செலுத்துவதற்கான ஏதோ தனித்துவமான பண்புநலன் ஹோமோ சேப்பியன்ஸுக்கு நிச்சயமாக இருக்கிறது. ஆனால், ஹோமோ சேப்பியன்ஸ் மற்ற விலங்குகளிடமிருந்து முற்றிலும் மாறுபட்ட ஒரு தளத்தில் இருக்கின்றனர், ஆன்மா அல்லது பிரக்ஞை போன்ற ஏதோ தனித்துவமான அம்சம் மனிதர்களுக்கு இருக்கிறது ஆகிய, அளவுக்கதிகமாக மிகைப்படுத்தப்பட்டுப் பிரபலப்படுத்தப்பட்டக் கருத்துக்கள் சரியல்ல என்று நாம் நிரூபித்துள்ள நிலையில், இறுதியில் ஒருவழியாக நாம் யதார்த்த நிலைக்கு இறங்கி வந்து, நம்முடைய இனத்திற்கு அந்தக் கூடுதல் அனுகூலத்தைக் கொடுக்கின்ற அந்தக் குறிப்பிட்ட மனத்திறன்களையும் உடற்திறன்களையும் இப்போது ஆய்வு செய்யலாம்.

மனிதகுலத்தின் ஏற்றத்திற்கு முக்கியக் காரணம் கருவிகளின் உருவாக்கமும் அறிவும்தான் என்று பெரும்பாலான ஆய்வுகள் தெரிவிக்கின்றன. பிற விலங்குகளும் கருவிகளை உருவாக்குகின்றன என்றாலும், அந்தத் துறையில் மனிதர்கள் விலங்குகளை வெகுவாக விஞ்சியுள்ளனர் என்பதில் எந்த சந்தேகமும் இல்லை. ஆனால், அறிவு விஷயத்தில் அவ்வளவு தெளிவு இல்லை. அறிவை வரையறுப்பதற்கும் அளவிடுவதற்கும் ஓர் ஒட்டுமொத்தத் துறை அர்ப்பணிக்கப்பட்டுள்ளது என்றாலும், ஓர் உடன்பாட்டை எட்டுவதிலிருந்து அது வெகுதூரத்தில் இருக்கிறது. அதிர்ஷ்டவசமாக, கண்ணிவெடிகள் புதைக்கப்பட்டுள்ள அத்தளத்திற்குள் நாம் நுழைய வேண்டியதில்லை. ஏனெனில், அறிவை ஒருவர் எப்படி வரையறுத்தாலும் சரி, வெறும் அறிவும் கருவிகள் தயாரிப்பும் மட்டுமே சேப்பியன்ஸ் இவ்வுலகை வெற்றி கொண்டதற்குக்

காரணம் அல்ல என்பதில் இருவேறு கருத்துக்களுக்கு இடமில்லை. அறிவின் பெரும்பாலான வரையறைகளின்படி, பத்து லட்சம் ஆண்டுகளுக்கு முன்பே, விலங்கினங்களில் மனிதர்கள்தான் உலகிலேயே மிகவும் அறிவார்ந்தவர்களாக இருந்தனர், கருவிகளைத் தயாரிப்பதிலும் அவர்கள்தான் உலக சாம்பியன்களாகத் திகழ்ந்தனர். ஆனாலும், தங்களுடைய சூழல் மண்டலத்தின்மீது அவ்வளவாகத் தாக்கம் ஏற்படுத்தாத, முக்கியத்துவமற்ற உயிரினங்களாகவே அவர்கள் இருந்தனர். அப்படியானால், அறிவையும் கருவிகள் தயாரிப்பையும் தவிர வேறு ஏதோ ஒரு முக்கியமான அம்சம் அப்போது அவர்களிடம் இருக்கவில்லை என்பது வெளிப்படை.

இறுதியில் மனிதகுலம் இப்புவியின்மீது ஆதிக்கம் செலுத்தத் தொடங்கியதற்கு ஏதோ முக்கியமான மூன்றாவது அம்சம் காரணமில்லாமல் இருக்கலாம், மாறாக, பரிணாம வளர்ச்சியின் மூலமாக உருவான அதிக மேன்மையான அறிவும் கருவிகளைத் தயாரிப்பதற்கான அதிக் மேம்பட்டத் திறன்களும் காரணமாக இருக்கக்கூடுமா? அப்படித் தெரியவில்லை. ஏனெனில், வரலாற்றுப் பதிவுகளை நாம் ஆய்வு செய்யும்போது, தனிநபர்களுடைய அறிவுக்கும் கருவிகளைத் தயாரிக்கும் திறன்களுக்கும், நம்முடைய ஒட்டுமொத்த இனத்தின் சக்திக்கும் இடையே எந்தவொரு நேரடியான தொடர்பையும் நம்மால் காண முடிவதில்லை. இருபதாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு, சராசரி சேப்பியன்ஸ் ஒருவர், இன்றைய சராசரி சேப்பியன்ஸைவிட அதிக உயர்வான அறிவும் கருவிகளைத் தயாரிப்பதற்கான அதிகச் சிறப்பான திறமைகளும் அமையப் பெற்றிருந்திருக்கலாம். நவீனப் பள்ளிகளும் நிறுவனங்களும் நம்முடைய திறமைகளை அவ்வப்போது சோதிக்கக்கூடும். ஆனால் அத்தேர்வில் நாம் எவ்வளவு மோசமாகச் செய்தாலும், மக்கள் நல அரசு நம்முடைய அடிப்படைத் தேவைகளுக்கு எப்போதும் உத்தரவாதம் வழங்குகிறது. கற்காலத்தில், இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறை ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கணமும் உங்களை சோதித்தது. அதன் எண்ணற்றச் சோதனைகளில் ஏதேனும் ஒன்றில் நீங்கள் தோற்றால், நீங்கள் விரைவில் மரணமடைந்துவிடுவீர்கள். ஆனாலும், நம்முடைய கற்கால மூதாதையருடைய கருவிகள் தயாரிப்புத் திறன்கள் மேன்மையானவையாக இருந்தபோதிலும், அவர்களுடைய மனங்கள் எப்போதும் விழிப்பாகவும் துடிப்பாகவும் செயல்பட்டுக் கொண்டிருந்தபோதிலும், அவர்களுடைய புலன்கள் கூர்மையாக இருந்தபோதிலும், 20,000 ஆண்டுகளுக்கு முந்தைய மனிதகுலம் இன்றைய மனிதகுலத்தைவிட அதிக பலவீனமானதாக இருந்தது.

இந்த 20,000 ஆண்டுகளின் ஊடாக, கல்முனை ஈட்டிகளைக் கொண்டு மாமூத்துக்களை வேட்டையாடுவதிலிருந்து துவக்கி, விண்வெளிக்கப்பல்களைக் கொண்டு சூரிய மண்டலத்தை ஆய்வு செய்வதுவரை மனிதகுலம் பயணித்து வந்துள்ளது. பரிணாம வளர்ச்சியின் காரணமாக அதிகத் திறன் வாய்ந்த கைகள் அல்லது பெரிய மூளைகள் உருவாகி இந்தச் சாதனைகளுக்கு வழி வகுக்கவில்லை (ஒப்பிட்டுப் பார்க்கும்போது, நம்முடைய மூளைகள் இன்று உண்மையில் அளவில் சுருங்கியிருப்பதுபோலத்தான் தெரிகின்றன). மாறாக, பல மனிதர்களை ஒருவரோடு ஒருவர் பிணைப்பதற்கான நம்முடைய திறன்தான் உலகை நாம் வெற்றி கொண்டதிலுள்ள முக்கியக் காரணியாகும். மனிதர்கள் இன்று இப்புவியின்மீது முழு ஆதிக்கம் செலுத்துவது ஒரு தனிமனிதன் ஒரு தனி சிம்பன்சியைவிட அல்லது ஓநாயைவிட அதிக சாமர்த்தியமானவனாகவும் அதிகக் கைத்திறமை வாய்க்கப் பெற்றவனாகவும் இருக்கிறான் என்பதால் அல்ல, மாறாக, ஹோமோ சேப்பியன்ஸ் மட்டுமே இப்புவியில் மிக அதிக எண்ணிக்கையில் இணக்கமாகவும் வளைந்து கொடுத்தும் ஒத்துழைக்கும் திறன் வாய்க்கப் பெற்றதாக இருப்பதுதான் அதன் ஆதிக்கப் போக்கிற்குக் காரணம். அறிவும் கருவிகளைத் தயாரிப்பதற்கான திறனும் மிக முக்கியமானவையாக இருந்தன என்பது உண்மைதான், ஆனால் இணக்கமாகவும் வளைந்து கொடுத்தும் ஒருவரோடொருவர் ஒத்துழைக்க மனிதர்கள் கற்றுக் கொண்டிருக்காவிட்டால், நம்முடைய தந்திரக்கார மூளைகளும் திறன்மிக்கக் கைகளும் யுரேனிய அணுக்களைப் பிளப்பதற்கு பதிலாக இன்னும் தீக்கற்களைத்தான் உரசிக் கொண்டிருக்கும்.

ஒத்துழைப்புதான் முக்கியமான அம்சம் என்றால், நமக்குக் கோடிக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பாகவே பெருந்திரளாக ஒத்துழைக்கக் கற்றுக் கொண்ட எறும்புகளும் தேனீக்களும் ஏன் நமக்கு முன்பாக அணுகுண்டைக் கண்டுபிடிக்கவில்லை? ஏனெனில், அவற்றின் ஒத்துழைப்பில் வளைந்து கொடுத்துப் போகும் தன்மை இல்லை. தேனீக்கள் மிக நுண்ணிய வழிகளில் ஒத்துழைக்கின்றன, ஆனால் அவற்றால் இரவோடு இரவாகத் தம்முடைய சமூக அமைப்புமுறையை மீண்டும் புதிதாக உருவாக்கிக் கொள்ள முடியாது. ஒரு தேன்கூடு ஒரு புதிய அச்சுறுத்தலையோ அல்லது ஒரு புதிய வாய்ப்பையோ எதிர்கொள்ளுகிறது என்றால், அதிலுள்ள தேனீக்களால் உடனடியாகத் தம்முடைய அமைப்புமுறையை மாற்றிக் கொள்ள முடியாது. எடுத்துக்காட்டாக, அந்தத் தேனீக்களால் ராணித் தேனீயைக்

கொன்றுவிட்டு ஒரு குடியரசை நிறுவ முடியாது.

சமூக நடத்தையை வெளிப்படுத்துகின்ற யானைகள், சிம்பன்சிகள் போன்ற பாலூட்டிகள் தேனீக்களைவிட அதிக இணக்கமாகவும் அதிகமாக வளைந்து கொடுத்தும் ஒத்துழைக்கின்றன. ஆனால் அவை மிகச் சிறிய எண்ணிக்கையில், தம்முடைய நண்பர்கள் மற்றும் குடும்ப உறுப்பினர்களுடன் மட்டுமே அவ்வாறு ஒத்துழைக்கின்றன. அவற்றின் ஒத்துழைப்பு தனிப்பட்டப் பரிச்சயத்தின் அடிப்படையில் அமைந்துள்ளது. நான் ஒரு சிம்பன்சியாக இருந்து, நீங்களும் ஒரு சிம்பன்சியாக இருந்து, நான் உங்களுடன் ஒத்துழைக்க விரும்பினால், தனிப்பட்ட முறையில் உங்களை நான் அறிந்திருக்க வேண்டும்: நீங்கள் எப்படிப்பட்ட சிம்பன்சி? நீங்கள் ஓர் இனிமையான சிம்பன்சியா? நீங்கள் ஒரு தீய சிம்பன்சியா? உங்களை எனக்குத் தெரியாவிட்டால் என்னால் உங்களோடு எப்படி ஒத்துழைக்க முடியும்? நம்முடைய அறிவுக்கு எட்டியவரை, சேப்பியன்ஸால் மட்டுமே முன்பின் பரிச்சயமற்ற எண்ணற்ற அந்நியர்களோடு இணக்கமான வழிகளில் ஒத்துழைக்க முடியும். முடிவற்ற ஓர் ஆன்மாவையும் ஏதோ தனித்துவமான வகையான பிரக்ஞையையும்விட, இணக்கமாகவும் வளைந்து கொடுத்தும் ஒத்துழைப்பதற்கான திறன் இப்புவியின்மீது நாம் கொண்டுள்ள ஆதிக்கத்தை விளக்குகிறது.

## வாழ்க புரட்சி!

மிகப் பெரிய அளவிலான ஒத்துழைப்பின் முக்கியத்துவத்திற்கான போதுமான ஆதாரத்தை வரலாறு வழங்குகிறது. சேப்பியன்ஸுக்கும் பிற விலங்குகளுக்கும் இடையேயான போராட்டங்களிலும் சரி, வெவ்வேறு மனிதக் குழுக்களுக்கு இடையேயான சண்டைகளிலும் சரி, அதிகச் சிறப்பாக ஒத்துழைத்தவர்களுக்கே வெற்றி கிட்டியது. ரோமாபுரிப் பேரரசு கிரேக்க நாட்டை முற்றுகையிட்டு வெற்றி கொண்டதற்குக் காரணம் ரோமாபுரியினர் பெரிய மூளைகளையும் கருவிகளைத் தயாரிப்பதற்கான அதிகச் சிறப்பான உத்திகளையும் கொண்டிருந்தனர் என்பது அல்ல, மாறாக, அதிக ஆற்றல்மிக்க விதத்தில் அவர்களால் ஒத்துழைக்க முடிந்ததுதான் அவர்களுடைய வெற்றிக்குக் காரணம். வரலாறு நெடுகிலும், ஒழுங்குடன்கூடிய ராணுவப் படைகள் ஒழுங்கற்றக் கூட்டங்களை மிக சுலபமாக வெற்றி கொண்டன. ஒற்றுமையான மேட்டுக்குடியினர் ஒழுங்கற்ற சாதாரண மக்கள்மீது ஆதிக்கம் செலுத்தினர். எடுத்துக்காட்டாக, 1914ம் ஆண்டில், 30 லட்சம் ரஷ்ய மேட்டுக்குடியினரும் அதிகாரிகளும்

தொழிலதிபர்களும் 18 கோடி விவசாயிகள் மற்றும் தொழிலாளர்கள்மீது ஆதிக்கம் செலுத்தினர். தங்களுடைய பொதுவான நலனைத் தற்காத்துக் கொள்ளுவதற்காகத் தாங்கள் எப்படி ஒத்துழைக்க வேண்டும் என்பதை ரஷ்ய மேட்டுக்குடியினர் நன்றாக அறிந்திருந்தனர். ஆனால், அந்தப் பதினெட்டுக் கோடி சாமானியர்கள் கூட்டமாக ஒத்துழைக்கும் திறன் அற்றவர்களாக இருந்தனர். உண்மையில், அந்த மேட்டுக்குடியினரின் முயற்சிகளின் பெரும்பகுதி, கீழ்மட்டத்தில் இருந்த 18 கோடி மக்கள் ஒருபோதும் ஒத்துழைக்கக் கற்றுக் கொள்ளாமல் இருப்பதை உறுதி செய்வதன்மீதுதான் குவிந்திருந்தது.

ஒரு புரட்சியைத் தோற்றுவிப்பதற்கு எண்ணிக்கை ஒருபோதும் போதுமானதாக இருப்பதில்லை. கிளர்ச்சியாளர்களை உள்ளடக்கிய சிறிய தொடர்பு வலைகளால்தான் பொதுவாகப் புரட்சிகள் உருவாக்கப்படுகின்றனவே அன்றி, பெரும் கூட்டத்தினரால் அல்ல. நீங்கள் ஒரு புரட்சியைத் துவக்க விரும்பினால், “எத்தனைப் பேர் என்னுடைய யோசனைகளை ஆதரிக்கின்றனர்?” என்று நீங்கள் உங்களைக் கேட்டுக் கொள்ளாதீர்கள். மாறாக, “என்னுடைய ஆதரவாளர்களில் எத்தனைப் பேரால் சிறப்பாக ஒத்துழைக்க முடியும்?” என்று கேளுங்கள். ரஷ்யாவில் 18 கோடி மக்கள் ஜார் அரசருக்கு எதிராகக் கிளர்ந்து எழுந்தபோது ரஷ்யப் புரட்சி வெடிக்கவில்லை, மாறாக, ஒருசில கம்யூனிசவாதிகள் சரியான இடத்தில் சரியான நேரத்தில் தங்களை நிலைப்படுத்திக் கொண்டபோதுதான் அப்புரட்சி மலர்ந்தது. 1917ல் ரஷ்யாவின் நடுத்தர வகுப்பினர் மற்றும் மேற்தட்டு மக்களின் மொத்த எண்ணிக்கை சுமார் 30 லட்சமாக இருந்தது, ஆனால் கம்யூனிசவாதக் கட்சியில் வெறும் 23,000 உறுப்பினர்களே இருந்தனர். கம்யூனிசவாதிகள் தங்களைச் சிறப்பாக ஒருங்கிணைத்து நிர்வகித்துக் கொண்டதால்தான் அந்தப் பரந்த ரஷ்யப் பேரரசு அவர்களுடைய கட்டுப்பாட்டின்கீழ் வந்தது. ரஷ்யாவின் அதிகாரம் ஜார் மன்னரின் தளர்வான கைகளிலிருந்தும், சம அளவு தளர்வான கைகளைக் கொண்டிருந்த கெரென்ஸ்கியின் இடைக்கால அரசாங்கத்தின் கைகளிலிருந்தும் நழுவியபோது, கம்யூனிசவாதிகள் அந்த அதிகாரத்தைத் துரிதமாகக் கைப்பற்றினர்.

1980களின் பிற்பகுதிவரை கம்யூனிசவாதிகள் தங்களுடைய பிடியை விடவில்லை. மக்களை ஒருங்கிணைத்து நிர்வகிப்பதற்கான அவர்களுடைய திறன்தான் எண்பது ஆண்டுகாலம் அவர்களை ஆட்சியதிகாரத்தில் வைத்திருந்தது. பிறகு, நிர்வாகச் சீர்கேட்டால் இறுதியில் அவர்கள் வீழ்ந்தனர். 1989ம் ஆண்டு டிசம்பர் 21ம் நாளன்று, ருமேனியாவின் கம்யூனிசவாத சர்வாதிகாரியான நிக்கோலய்

சௌஸெஸ்கு, புக்காரெஸ்ட் நகரின் மையச் சதுக்கத்தில் ஒரு பெரிய ஆதரவுக் கூட்டத்தைத் திரட்டினார். அதற்கு முந்தைய சில மாதங்களின் ஊடாக, கிழக்கு ஐரோப்பியக் கம்யூனிசவாத ஆட்சிகளுக்கான தன்னுடைய ஆதரவை சோவியத் ஒன்றியம் திரும்பப் பெற்றிருந்தது; பெர்லின் சுவர் தகர்க்கப்பட்டிருந்தது; போலந்து, கிழக்கு ஜெர்மனி, ஹங்கேரி, பல்கேரியா, செக்கோஸ்லோவாக்கியா போன்ற நாடுகள் முழுவதிலும் புரட்சிகள் வெடித்திருந்தன. 1965ம் ஆண்டிலிருந்து ருமேனியாவை ஆட்சி செய்து வந்திருந்த நிக்கோலய், சுனாமி போன்ற அப்புரட்சியைத் தன்னால் சமாளித்துவிட முடியும் என்று நம்பினார். இத்தனைக்கும், அவருடைய ஆட்சிக்கு எதிராக டிசம்பர் 17ம் நாளன்று ருமேனிய நகரமான டிமிசோராவில் பல கலவரங்கள் மூண்டிருந்தன. இதற்கான எதிர்நடவடிக்கையாக, ருமேனிய மக்களில் பெரும்பான்மையினர் இன்னும் தன்னை நேசித்ததாக - குறைந்தபட்சம் தன்னைக் கண்டு பயந்ததாக - ருமேனியாவுக்கும் ஏனைய உலகிற்கும் நிரூபிப்பதற்காக புக்காரெஸ்ட்டில் அவர் அந்தப் பெரிய கூட்டத்தை ஏற்பாடு செய்திருந்தார். அரசு இயந்திரங்கள் 80,000 மக்களை புக்காரெஸ்ட்டின் மையப் பகுதியில் குவித்தன. எல்லா வேலைகளையும் அப்படியே போட்டுவிட்டு, வானொலிகளையும் தொலைக்காட்சிகளையும் முறையே கேட்கும்படியும் பார்க்கும்படியும் ருமேனியக் குடிமக்கள் அனைவருக்கும் அறிவுறுத்தப்பட்டது.



படம் **18:** ஓர் உலகம் நொறுங்கி விழுகின்ற கணம்**:** அதிர்ச்சியடைந்திருந்த நிக்கோலயால் தன் கண்களையும் காதுகளையும் நம்ப முடியவில்லை**.**

உற்சாகமாக இருந்ததுபோலத் தோன்றிய அக்கூட்டம் குழுமியிருந்த

அந்தச் சதுக்கத்திற்கு எதிரே இருந்த பால்கனியில், நிக்கோலய் முந்தைய பல ஆண்டுகளாக எண்ணற்ற முறை தோன்றியிருந்ததைப்போல இம்முறையும் தோன்றினார். தன்னுடைய மனைவி எலீனா, தன்னுடைய கட்சியின் முன்னணி அதிகாரிகள், மற்றும் தன்னுடைய பாதுகாவலர்கள் புடைசூழ, அவர் தன்னுடைய வழக்கமான சலிப்பூட்டும் உரைகளில் ஒன்றை வழங்கினார். எட்டு நிமிடங்களாக அவர் ருமேனிய சோசியலிசத்தின் பெருமைகளைப் புகழ்ந்தார். கூட்டத்தினர் இயந்திரத்தனமாகக் கைதட்டிக் கொண்டிருந்ததைக் கேட்டு அவர் தன்னைக் குறித்துப் பெருமிதம் கொண்டார். அப்போது அங்கு ஏதோ ஒரு குளறுபடி ஏற்பட்டது. அது என்ன என்பதை நீங்கள் நேரடியாக யூ-டியூபில் காணலாம்.

அவர் ஒரு நீளமான வாக்கியத்தைப் பேசத் தொடங்கி ஒருசில வார்த்தைகளை மட்டுமே கூறியிருந்த நேரத்தில், திடீரென்று அவர் தன்னுடைய பேச்சை நிறுத்தினார், அவருடைய கண்கள் அகலமாக விரிந்தன, தன் கண்முன்னே நிகழ்ந்து கொண்டிருந்தவற்றை நம்ப முடியாதவராக அவர் உறைந்து நின்றார். ஒட்டுமொத்த உலகமும் எப்படி நொறுங்கி விழுகிறது என்பதை அந்தக் கண நேரத்தில் உங்களால் பார்க்க முடியும். அங்கு கூடியிருந்தவர்களில் யாரோ ஒருவர் நிக்கோலய்க்கு எதிராகக் கோஷமிட்டார். முதலில் கோஷமிடத் துணிந்த அந்த நபர் யார் என்பது பற்றி மக்கள் இன்றுகூட வாதிடுகின்றனர். பிறகு இன்னொருவர் கோஷமிட்டார். பிறகு இன்னுமொருவர் அதைச் செய்தார். ஒருசில நொடிகளில் அங்கு குழுமியிருந்த அனைவரும் விசிலடிக்கத் தொடங்கினர், சத்தமாகப் பழித்துரைக்கத் தொடங்கினர், “டி-மி-சோ-ரா! டி-மி-சோ-ரா!” என்று கோஷமிடத் தொடங்கினர்.

இதெல்லாம் ருமேனியத் தொலைக்காட்சியில் நேரடியாக ஒளிபரப்பப்பட்டது. ருமேனியாவின் மக்கட்தொகையில் மூன்றில் ஒரு பகுதியினர் தொலைக்காட்சியைவிட்டுத் தங்கள் பார்வையை அகற்றாமல் ஆணியடித்தாற்போல அப்படியே உட்கார்ந்திருந்தனர். அவர்களுடைய இதயங்கள் படபடவெனத் துடித்தன. ஒளிபரப்பை உடனடியாக நிறுத்தும்படி ருமேனியாவின் பிரபல ‘மாநிலப் பாதுகாப்புத் துறை’ உத்தரவிட்டது, ஆனால் தொலைக்காட்சிக் குழுவினர் அதற்குக் கீழ்ப்படிய மறுத்தனர். பால்கனியில் கட்சித் தலைவர்களிடையே ஏற்பட்டிருந்த பீதியைப் பார்வையாளர்கள் பார்த்துவிடக்கூடாது என்பதற்காக, அந்தத் தொலைக்காட்சியின் ஒளிப்பதிவாளர் தன்னுடைய கேமராவை வானத்தை நோக்கித் திருப்பினார், ஆனால் அதன் ஒலிப்பதிவாளர் தொடர்ந்து ஒலிப்பதிவு செய்து கொண்டிருந்தார், தொழில்நுட்பக் கலைஞர்கள் அந்த ஒளிபரப்பு

எந்தத் தடையும் இன்றித் தொடர்ந்ததை உறுதி செய்தனர். நிக்கோலய் ஓர் ஒலிவாங்கியின் மூலம் “ஹலோ! ஹலோ! ஹலோ!” என்று கத்தியபோது, அங்கு கூடியிருந்த கூட்டம் அவருக்கு எதிராகக் கோஷமிட்டச் சத்தம் ஒட்டுமொத்த ருமேனியாவுக்கும் கேட்டது. நிக்கோலயின் மனைவி எலீனா, “அமைதியாக இருங்கள்! அமைதியாக இருங்கள்!” என்று கூட்டத்தினரைத் திட்டத் தொடங்கினார். இறுதியில், நிக்கோலய் அவரை நோக்கித் திரும்பிக் கோபத்தோடு, “நீ முதலில் அமைதியாக இரு!” என்று கத்தியபோதுதான் எலீனா தன் வாயை மூடினார். இந்நிகழ்வு தொலைக்காட்சியில் நேரடியாக ஒளிபரப்பாயிற்று. நிக்கோலய் பிறகு அக்கூட்டத்தினரைப் பார்த்து, “தோழர்களே! தோழர்களே! அமைதியாக இருங்கள், தோழர்களே!” என்று மன்றாடினார்.

ஆனால் அத்தோழர்கள் அமைதியாக இருக்கத் தயாராக இருக்கவில்லை. விலங்குகளின் ரோமத்தால் தயாரிக்கப்பட்டத் தொப்பியை அணிந்து கொண்டு பால்கனியில் நின்று கொண்டிருந்த அந்த முதியவரைவிடத் தாங்கள் அதிக வலிமையானவர்கள் என்பதை புக்காரெஸ்ட் நகரின் மையத்தில் கூடியிருந்த 80,000 மக்கள் உணர்ந்தபோது கம்யூனிசவாத ருமேனியா பொலபொலவென்று நொறுங்கியது. ஆனால், இங்கு உண்மையிலேயே ஆச்சரியமூட்டுவது இந்த அரசாங்கம் நிலைகுலைந்த கணம் அல்ல; மாறாக, அது இத்தனை ஆண்டுகளாக நீடித்து வந்திருந்தது என்ற உண்மைதான் ஆச்சரியமூட்டுகிறது. புரட்சிகள் ஏன் அரிதாகவே நிகழுகின்றன? ஒரு பால்கனியில் நின்று கொண்டு எல்லோருக்கும் கட்டளையிட்டுக் கொண்டிருக்கின்ற ஒரு நபர் கூறுகின்ற அனைத்தையும் செய்து கொண்டு, பொதுமக்கள் ஏன் ஆண்டுக்கணக்கில் கைதட்டி அவரை உற்சாகப்படுத்துகின்றனர்? குறிப்பாக, எந்தவொரு கணத்திலும் முன்னேறிச் சென்று அந்நபரை நார்நாராகக் கிழிக்கக்கூடிய சக்தி அவர்களுக்கு இருந்தும்கூட அவர்கள் ஏன் அடிபணிந்து போகின்றனர்?

நிக்கோலயும் அவருடைய அடிவருடிகளும் இரண்டு கோடி ருமேனியர்கள்மீது கால் நூற்றாண்டுக்கும் மேலாக ஆதிக்கம் செலுத்தினர். ஏனெனில், மூன்று முக்கியமான விஷயங்கள் ஒழுங்காக இருந்ததை அவர்கள் உறுதி செய்திருந்தனர். முதலில், ராணுவம், தொழிற்சங்கங்கள், விளையாட்டுச் சங்கங்கள் போன்ற, கூட்டுறவுக்கு வித்திடுகின்ற அனைத்திலும், விசுவாசம் கொண்ட கம்யூனிசவாத அதிகாரிகளைத் தலைமைப் பொறுப்புகளில் அவர்கள் அமர்த்தினர். அவை அனைத்தும் இந்த அதிகாரிகளின் நேரடிக் கட்டுப்பாட்டின்கீழ் இயங்கின. இரண்டாவதாக, கம்யூனிசவாதத்திற்கு எதிரான

ஒத்துழைப்பிற்கு அடித்தளமாக விளங்கக்கூடிய அரசியல்ரீதியான, பொருளாதாரரீதியான, மற்றும் சமூகரீதியான போட்டி அமைப்புகள் உருவாவதைத் தடுக்கும் விதமான நடவடிக்கைகளை அவர்கள் மேற்கொண்டனர். மூன்றாவதாக, சோவியத் ஒன்றியத்திலும் கிழக்கு ஐரோப்பாவிலும் இருந்த சக கம்யூனிசவாதக் கட்சிகளின் ஆதரவை அவர்கள் சார்ந்திருந்தனர். சில சமயங்களில் இக்குழுக்களுக்கு இடையே பிரச்சனைகள் முளைத்தபோதிலும், தேவைப்பட்ட நேரங்களில் அவை ஒன்றுக்கொன்று உதவிக் கொண்டன. குறைந்தபட்சம், வெளிநபர் யாரும் சோசியலிச சொர்க்கத்திற்குள் தன்னுடைய மூக்கை நுழைக்காமல் இருப்பதை அவர்கள் உறுதி செய்தனர். அங்கு நிலவிய சூழ்நிலை இவ்வாறு இருந்ததால், ஆளும் மேட்டுக்குடியினர் இரண்டு கோடி ருமேனியர்களைப் பெரும் இன்னல்களுக்கும் துன்பங்களுக்கும் ஆளாக்கியபோதிலும், பதிலுக்கு ஆற்றல்மிக்க ஒரு போட்டி அமைப்பை அந்த மக்களால் உருவாக்க முடியவில்லை.

இந்த மூன்று அம்சங்களும் தரைமட்டமாக்கப்பட்டபோதுதான் நிக்கோலயின் அதிகாரம் பறி போயிற்று. 1980களின் பிற்பகுதியில் சோவியத் ஒன்றியம் தன்னுடைய பாதுகாப்பை விலக்கிக் கொண்டதைத் தொடர்ந்து, கம்யூனிசவாத ஆட்சிகள் டாமினோக்களைப்போல ஒவ்வொன்றாகச் சரிந்து விழத் தொடங்கின. 1989ம் ஆண்டு டிசம்பர் மாதவாக்கில், ருமேனியாவிற்கு வெளியேயிருந்து நிக்கோலய்க்கு வந்து கொண்டிருந்த உதவி நின்றது. மாறாக, அண்டை நாடுகளில் நிகழ்ந்து கொண்டிருந்த புரட்சிகள் நிக்கோலய்க்கு உள்நாட்டில் கிளம்பியிருந்த எதிர்ப்புக்கு ஆதரவுக் கரம் நீட்டின. கம்யூனிசவாதக் கட்சியே பல கூறுகளாக உடையத் தொடங்கியது. காலம் கடப்பதற்குள் நிக்கோலயிடமிருந்து தங்களை விலக்கிக் கொண்டு சீர்திருத்த நடவடிக்கைகளைத் துவக்க மிதவாதிகள் விரும்பினர். புக்காரெஸ்ட் கூட்டத்தை ஏற்பாடு செய்து, தொலைக்காட்சியில் அதை நேரடியாக ஒளிபரப்பியதன் மூலம், புரட்சியாளர்கள் தங்களுடைய சக்தியை உணர்ந்து கொண்டு தனக்கு எதிராகப் போர்க்கொடி உயர்த்த நிக்கோலய் தானே அவர்களுக்கு ஒரு கச்சிதமான வாய்ப்பைக் கொடுத்தார். தொலைக்காட்சியில் காட்டுவதைவிட ஒரு புரட்சியைப் பரப்புவதற்கான அதிக விரைவான வழி வேறு எதுவும் உண்டா?

ஆனாலும், அந்த பால்கனியில் நின்று கொண்டிருந்தவருடைய கைகளிலிருந்து அதிகாரம் நழுவியபோது, கீழே நின்று கொண்டிருந்த கூட்டத்தினரின் கைகளை அது சென்றடையவில்லை. அவர்கள் மிக அதிக எண்ணிக்கையிலும் மிக உற்சாகமாகவும் இருந்தபோதிலும்,

தங்களை எவ்வாறு சிறப்பாக ஒருங்கிணைத்து நிர்வகிப்பது என்பதை அவர்கள் அறிந்திருக்கவில்லை. எனவே, 1917ல் ரஷ்யாவில் நிகழ்ந்ததைப்போல, அந்த அதிகாரம் ஒரு சிறு அரசியல் குழுவிடம் ஒப்படைக்கப்பட்டது. எல்லாவற்றையும் சிறப்பாக ஒழுங்கமைப்பதற்கான திறன் மட்டுமே அக்குழுவின் ஒரே சொத்தாக இருந்தது. தேசிய முக்தி முன்னணி என்ற ஒரு புதிய கட்சி ருமேனியப் புரட்சியைத் தனதாக்கிக் கொண்டது. அக்கட்சி உண்மையில் கம்யூனிசவாதக் கட்சியின் மிதவாதப் பிரிவுக்கான ஒரு தந்திர உத்தியே. அந்த முன்னணிக்கும் ஆர்ப்பாட்டத்தில் ஈடுபட்டுக் கொண்டிருந்த கூட்டத்தினருக்கும் இடையே உண்மையான எந்தத் தொடர்பும் இருக்கவில்லை. கம்யூனிசவாதக் கட்சியில் அவ்வளவாக முக்கியத்துவம் இல்லாத பதவிகளில் இருந்தவர்கள்தான் இந்த முன்னணியை நடத்திக் கொண்டிருந்தனர். இயான் இலியெஸ்கு அக்கட்சிக்குத் தலைமை வகித்தார். கம்யூனிசவாதக் கட்சியின் மைய ஆணையத்தின் முன்னாள் உறுப்பினராகவும், ஒருமுறை பிரச்சாரத் துறையின் தலைவராகவும் இருந்தவர் அவர். இலியெஸ்குவும் அவருடைய தோழர்களும் தேசிய முக்தி முன்னணியில் ஜனநாயக அரசியல்வாதிகளாகத் தங்களை வெளிக்காட்டிக் கொண்டனர். ஏதேனும் ஒலிவாங்கி அவர்கள் கண்களில் பட்டுவிட்டால், தாங்கள்தான் புரட்சியின் தலைவர்கள் என்று அவர்கள் அதன் மூலமாக எல்லோருக்கும் கேட்கும்படி முழங்கினர். பிறகு, அவர்கள் தங்களுடைய நீண்டகால அனுபவத்தையும் தங்களுடைய விசுவாசிகளையும் பயன்படுத்தி நாட்டைத் தங்கள் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவந்து அதன் வளங்களைச் சுரண்டினர்.

கம்யூனிசவாத ருமேனியாவில் கிட்டத்தட்ட எல்லாமே நாட்டிற்குச் சொந்தமானதாக இருந்தது. ஜனநாயக ருமேனியா விரைவில் தன்னுடைய உடமைகளைத் தனியார்மயமாக்கியது. மிகவும் அடிமாட்டு விலையில் முன்னாள் கம்யூனிசவாதிகளுக்கு அது அவற்றை விற்றது. என்ன நிகழ்ந்து கொண்டிருந்தது என்பதை இந்த முன்னாள் கம்யூனிசவாதிகள் மட்டுமே புரிந்து கொண்டனர். பிறகு, இரு தரப்பினரும் கூட்டு சேர்ந்து மக்களைச் சுரண்டினர். தேசியக் உட்கட்டமைப்புகளையும் இயற்கை வளங்களையும் கட்டுப்படுத்திய அரசு நிறுவனங்கள் தள்ளுபடியில் விலையில் முன்னாள் கம்யூனிசவாத அதிகாரிகளுக்கு விற்கப்பட்டன. ஆனால், கட்சியின் அடிமட்டத் தொண்டர்கள் சொற்பத் தொகைக்கு சாதாரணமான தனிவீடுகளையும் குடியிருப்பு வீடுகளையும் வாங்கினர்.

இயான் இலியெஸ்கு ருமேனியாவின் அதிபராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவருடைய சகாக்கள் அமைச்சர்களாகவும்

நாடாளுமன்ற உறுப்பினர்களாகவும் வங்கி இயக்குநர்களாகவும் கோடீஸ்வரர்களாகவும் ஆயினர். இன்றுவரை ருமேனியாவைக் கட்டுப்படுத்திக் கொண்டிருக்கின்ற புதிய ருமேனிய மேட்டுக்குடியினரில் பெரும்பாலானோர் முன்னாள் கம்யூனிசவாதிகளும் அவர்களுடைய குடும்பத்தினரும்தான். டிமிசோராவிலும் புக்காரெஸ்ட்டிலும் தங்களுடைய உயிரைப் பணயம் வைத்தப் பெருவாரியான சாமானியர்களோ, மீந்து போனவற்றைக் கொண்டு திருப்திப்பட்டுக் கொள்ள வேண்டியிருந்தது. ஏனெனில், எப்படி ஒத்துழைக்க வேண்டும் என்பதையும், தங்களுடைய சொந்த நலன்களைப் பாதுகாக்கக்கூடிய ஆற்றல்மிக்க அமைப்புகளை எவ்வாறு உருவாக்க வேண்டும் என்பதையும் அவர்கள் அறிந்திருக்கவில்லை.

2011ல் ஏற்பட்ட எகிப்தியப் புரட்சியும் இதே கதிக்கு உள்ளானது. 1989ல் தொலைக்காட்சி எதைச் செய்ததோ, 2011ல் அதை முகநூலும் டுவிட்டரும் செய்தன. இப்புதிய ஊடகங்கள், பெருந்திரளான மக்கள் தங்களுடைய நடவடிக்கைகளை ஒருங்கிணைக்க உதவின. இதன் மூலம், சரியான கணத்தில் ஆயிரக்கணக்கான மக்கள் தெருக்களிலும் சதுக்கங்களிலும் ஒன்றுதிரண்டு முபாரக்கின் ஆட்சியைக் கவிழ்த்தனர். ஒரு லட்சம் மக்களைத் தஹ்ரீர் சதுக்கத்திற்குக் கொண்டுவருதல் என்பது ஒரு பெரிய விஷயம்தான் என்றாலும், அரசியல் இயந்திரத்தைச் சரியாகப் புரிந்து கொண்டு, சரியான பின்னறைகளில் சரியான கைகளைக் குலுக்கி ஒரு நாட்டைத் திறமையாக நடத்துவது என்பது முற்றிலும் வேறுபட்ட ஒன்று. எகிப்தியப் புரட்சியின் விளைவாக முபாரக் பதவியிறங்கியபோது, ஆர்ப்பாட்டக்காரர்களால் அந்த வெற்றிடத்தை நிரப்ப முடியவில்லை. எகிப்தை ஆளுவதற்கு இரண்டு அமைப்புகள் மட்டுமே போதுமான அளவு சிறப்பான ஒழுங்கமைப்பைக் கொண்டிருந்தன. ராணுவமும் இஸ்லாமிய சகோதரத்துவ அமைப்பும்தான் அவை. எனவே, புரட்சியை முதலில் இஸ்லாமிய சகோதரத்துவ அமைப்பு கைப்பற்றியது, பிறகு ராணுவம் அதைத் தனதாக்கிக் கொண்டது.

ருமேனியாவின் முன்னாள் கம்யூனிசவாதிகளும் எகிப்திய ராணுவத் தளபதிகளும் புக்காரெஸ்ட்டிலும் கைரோவிலும் இருந்த பழைய சர்வாதிகாரிகளையும் ஆர்ப்பாட்டக்காரர்களையும்விட அதிக அறிவார்ந்தவர்களோ அல்லது அதிகச் சிறப்பான கைத்திறன் கொண்டவர்களோ அல்லர். இணக்கமாகவும் வளைந்து கொடுத்தும் ஒத்துழைக்கும் திறன் அவர்களிடம் இருந்ததுதான் அவர்களுக்கு அனுகூலமாக அமைந்தது. மக்கட்கூட்டத்தைவிட அவர்கள் அதிகச் சிறப்பாக ஒத்துழைத்தனர், பழமை விரும்பிகளான நிக்கோலய் மற்றும்

முபாரக்கைவிட அதிகமாக வளைந்து கொடுத்துப் போவதற்கு அவர்கள் தயாராக இருந்தனர்.

## பாலுறவுக்கும் வன்முறைக்கும் அப்பால்

நம்மால் மட்டுமே பெரும் எண்ணிக்கையில் வளைந்து கொடுத்து ஒத்துழைக்க முடிகிறது என்பதால்தான் சேப்பியன்ஸாகிய நாம் இவ்வுலகை ஆளுகிறோம் என்பது உண்மை என்றால், மனிதர்களின் புனிதத்துவத்தில் நாம் கொண்டுள்ள நம்பிக்கையை இது சிறுமைப்படுத்துகிறது. நாம் தனிச்சிறப்புக் கொண்டவர்கள் என்றும், அனைத்து விதமான சிறப்புச் சலுகைகளுக்கும் நாம் தகுதியானவர்கள் என்றும் நாம் நினைக்கிறோம். நாம் தனித்துவமானவர்கள் என்பதற்குச் சான்றாக நம்முடைய இனத்தின் அற்புதமான சாதனைகளை நாம் சுட்டிக்காட்டுகிறோம்: நாம் பிரமிடுகளையும் சீனப் பெருஞ்சுவரையும் கட்டியெழுப்பினோம்; அணுக்கள் மற்றும் டிஎன்ஏ மூலக்கூறுகளின் கட்டமைப்பை நாம் கண்டுபிடித்தோம்; தென் துருவத்திலும் நிலவிலும் நாம் காலூன்றியுள்ளோம். இச்சாதனைகள் அனைத்தும் ஒவ்வொரு தனிமனிதனிடமும் இருக்கின்ற ஏதோ தனித்துவமான அம்சத்தினால் (அழிவற்ற ஓர் ஆன்மா என்று வைத்துக் கொள்ளலாம்) விளைந்தன என்றால், பிறகு மனித வாழ்க்கையைப் புனிதமாகக் கருதுவதில் அர்த்தம் இருக்கிறது. ஆனால், இந்த வெற்றிகள் உண்மையில் பெருந்திரளான மக்களுடைய ஒத்துழைப்பினால் விளைந்தவையாக இருப்பதால், நாம் தனிமனிதர்களைப் போற்றுவதற்கு இவை ஏன் நம்மைத் தூண்ட வேண்டும் என்பது பற்றி அவ்வளவு தெளிவு இல்லை.

ஒரு வண்ணத்துப்பூச்சியைவிட ஒரு தேன்கூடு அதிக சக்தி வாய்ந்தது. ஆனால் அதற்காக, ஒரு வண்ணத்துப்பூச்சியைவிட ஒரு தேனீ அதிகப் புனிதமானது என்று அர்த்தமாகாது. ருமேனியக் கம்யூனிசவாதக் கட்சி, ஒழுங்கமைப்பற்ற ருமேனிய மக்கள்மீது வெற்றிகரமாக ஆதிக்கம் செலுத்தியது. ஆனால் அதற்காக, ஒரு சாதாரணக் குடிமகனின் உயிரைவிட ஒரு கட்சி உறுப்பினரின் உயிர் அதிகப் புனிதமானதாக ஆகிவிடுமா? சிம்பன்சிகளைவிட அதிக ஆற்றல்மிக்க விதத்தில் எப்படி ஒத்துழைக்க வேண்டும் என்பதை மனிதர்கள் அறிந்துள்ளனர். எனவேதான், மனிதர்கள் நிலவுக்கு விண்கலங்களை அனுப்புகின்றனர், ஆனால் சிம்பன்சிகள் தம்மைப் பார்ப்பதற்கு விலங்குக் காட்சி சாலைக்கு வருகை தருகின்ற பார்வையாளர்கள்மீது கற்களை வீசுகின்றன. அப்படியானால், மனிதர்கள் உயர்வான உயிரினங்கள் என்று அர்த்தமா?

ஒருவேளை அப்படி இருக்கலாம். எது மனிதர்களை இவ்வளவு சிறப்பாக ஒத்துழைக்க வைக்கிறது என்பதை அது சார்ந்துள்ளது. பெரிய, அதிநவீன சமூக அமைப்புமுறைகளை உருவாக்குவது மனிதர்களுக்கு மட்டுமே ஏன் சாத்தியப்படுகிறது? சமூக நடத்தையைப் பெரிதும் வெளிப்படுத்துகின்ற சிம்பன்சிகள், ஓநாய்கள், டால்பின்கள் போன்ற பாலூட்டிகளுக்கு இடையேயான சமூக ஒத்துழைப்பு அன்னியோன்னியமான பரிச்சயத்தைச் சார்ந்துள்ளது. சிம்பன்சிகளை எடுத்துக் கொண்டால், அவை சேர்ந்து வேட்டையாடப் போவதற்கு முன்பாக ஒன்றையொன்று நன்றாக அறிந்திருக்க வேண்டும், ஒரு சமூக அடுக்கதிகாரம் அங்கு நிலைப்படுத்தப்பட்டிருக்க வேண்டும். எனவே, சமூக உறவாடல்களிலும் அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கான சண்டைகளிலும் சிம்பன்சிகள் அதிக நேரத்தைச் செலவிடுகின்றன. முன்பின் பரிச்சயமற்ற சிம்பன்சிகள் சந்தித்துக் கொள்ளும்போது, பொதுவாக அவை ஒத்துழைப்பதில்லை. மாறாக, அவை பரஸ்பரம் ஒன்றைப் பார்த்து மற்றொன்று கத்திக் கூச்சலிடுகின்றன, ஒன்றோடொன்று சண்டையிடுகின்றன, அல்லது முடிந்த அளவு விரைவாக அங்கிருந்து தப்பி ஓடிவிடுகின்றன.

குள்ள சிம்பன்சிகளான பொனபோ சிம்பன்சிகளுக்கு இடையே விஷயங்கள் சற்று வித்தியாசமாக இருக்கின்றன. தமக்கு இடையேயான இறுக்கத்தைத் தளர்த்துவதற்கும் சமூகப் பிணைப்புகளை வலுப்படுத்துவதற்கும் பாலுறவை அவை அடிக்கடிப் பயன்படுத்துகின்றன. எனவே, தன்பால் புணர்ச்சி அவற்றுக்கிடையே மிகப் பரவலாக இருப்பதில் வியப்பேதும் இல்ல. பரிச்சயமற்ற இரண்டு பொனபோ குழுக்கள் ஒன்றையொன்று எதிர்கொள்ளும்போது, முதலில் அவை பயத்தையும் பகைமையையும் வெளிக்காட்டுகின்றன, அவற்றின் ஊளைகளும் அலறல்களும் அக்காட்டை ஆட்கொள்ளுகின்றன. விரைவில், ஒரு குழுவைச் சேர்ந்த பெண் சிம்பன்சிகள் இன்னொரு குழுவைச் சேர்ந்த அந்த அந்நியர்களுக்குச் சண்டைக்கான அழைப்பு விடுப்பதற்கு பதிலாக, பாலுறவு கொள்ளுவதற்கு அழைப்பு விடுக்கின்றன. பொதுவாக இந்த அழைப்பு ஏற்றுக் கொள்ளப்பட்டுவிடுகிறது. ஒருசில நிமிடங்களில், போர்க்களமாக ஆகியிருக்கக்கூடிய சாத்தியத்தைக் கொண்டிருக்கும் அந்த இடம், பாலுறவில் ஈடுபட்டுள்ள பொனபோக்களால் நிரம்பி வழிகிறது. அவை பல்வேறு விதங்களில் பாலுறவு கொள்ளுகின்றன. சில பொனபோக்கள் மரங்களிலிருந்து தலைகீழாகத் தொங்கியபடி பாலுறவில் ஈடுபடுகின்றன.

ஒத்துழைப்பிற்கான இத்தகைய தந்திரங்களை சேப்பியன்ஸ் நன்றாக

அறிவர். சிம்பன்சிகள் கொண்டிருக்கின்ற அடுக்கதிகார நிலைகளை சில சமயங்களில் சேப்பியன்ஸும் உருவாக்குகின்றனர். பிற சமயங்களில், பொனபோக்களைப்போலவே பாலுறவைக் கொண்டு சமூகப் பிணைப்புகளை ஏற்படுத்திக் கொள்ளுகின்றனர். ஆனால், தனிப்பட்டப் பரிச்சயம் - அது சண்டையை உள்ளடக்கியதாக இருந்தாலும் சரி அல்லது உடலுறவை உள்ளடக்கியதாக இருந்தாலும் சரி - பெரும் எண்ணிக்கையிலான ஒத்துழைப்பிற்கான அடித்தளமாக அமைவது சாத்தியமில்லை. கிரேக்க நாட்டின் கடன் பிரச்சனையைத் தீர்ப்பதற்கு கிரேக்க அரசியல்வாதிகளையும் ஜெர்மானிய வங்கியாளர்களையும் ஒரு பலப்பரீட்சைக்கோ அல்லது ஒரு சிற்றின்பக் களியாட்டத்திற்கோ அழைப்பதன் மூலம் அப்பிரச்சனையைத் தீர்க்க முடியாது. 150க்கும் குறைவான எண்ணிக்கையிலான மக்களுடன் மட்டுமே சேப்பியன்ஸால் நெருக்கமான உறவுகளை (மோகத்துடனோ அல்லது பகைமையுடனோ கூடிய உறவுகள்) வளர்த்துக் கொள்ள முடியும் என்று ஆராய்ச்சிகள் தெரிவிக்கின்றன. பெரும் எண்ணிக்கையிலான மனிதர்களிடையே ஒத்துழைப்பை வளர்த்தெடுப்பதற்கு மனிதர்களுக்கு எது உதவுகிறதோ இல்லையோ, நெருக்கமான உறவுகள் நிச்சயமாக உதவாது.

மனிதச் சமுதாயத்தை ஆய்வுக்கூடப் பரிசோதனைகள் வாயிலாகப் புரிந்து கொள்ள முயற்சிக்கின்ற உளவியலாளர்கள், சமூகவியலாளர்கள், மற்றும் பொருளாதார வல்லுநர்களுக்கு இது மோசமான செய்தியாகும். பொருளாதாரக் காரணங்களுக்காகவும் சரி அல்லது நிர்வாகக் காரணங்களுக்காகவும் சரி, பெரும்பான்மைப் பரிசோதனைகள் தனிநபர்கள்மீதோ அல்லது சிறு குழுக்கள்மீதோ நடத்தப்படுகின்றன. ஆனால், ஒரு சிறு குழு எவ்வாறு நடந்து கொள்ளுகிறதோ, அதேபோலத்தான் அதிக எண்ணிக்கையிலான மக்களைக் கொண்ட சமுதாயங்களும் நடந்து கொள்ளும் என்று அனுமானிப்பது ஆபத்தானது. 10 கோடி மக்களைக் கொண்ட ஒரு நாடு, நூறு தனிநபர்களைக் கொண்ட ஒரு குழு செயல்படுகின்ற விதத்திலிருந்து முற்றிலும் வித்தியாசமாகச் செயல்படுகிறது.

எடுத்துக்காட்டாக, ‘அல்ட்டிமேட்டம் கேம்’ என்ற ஒரு பிரபலமான பரிசோதனையைப் பார்க்கலாம். நடத்தைசார் பொருளியல் துறையில் மேற்கொள்ளப்படுகின்ற இப்பரிசோதனை வழக்கமாக இரண்டு நபர்கள்மீது நடத்தப்படுகிறது. அவர்களில் ஒருவருக்கு 100 டாலர்கள் பணம் கொடுக்கப்படுகிறது. அவர் அதைத் தனக்கும் தன்னுடைய சக பங்கேற்பாளருக்கும் இடையே தனக்கு விருப்பமான வழியில் பங்கிட்டுக் கொள்ள வேண்டும். அவர் அந்த நூறு டாலர்களையும் தானே வைத்துக் கொள்ளலாம், அல்லது சரிபாதியாகப் பங்கிட்டுக்

கொள்ளலாம், அல்லது சிறிது பணத்தைத் தனக்கு வைத்துக் கொண்டு பெரும்பகுதியை மற்றவருக்குக் கொடுத்துவிடலாம். பணத்தை எப்படிப் பங்கிட்டுக் கொள்ளலாம் என்று அவர் தன் சக பங்கேற்பாளரிடம் பரிந்துரைக்கிறாரோ, அது குறித்து அந்தப் பங்கேற்பாளர் பின்வரும் இரண்டு விஷயங்களில் ஒன்றைச் செய்யலாம்: முதல் பங்கேற்பாளர் கொடுக்கும் பரிந்துரையை ஏற்றுக் கொள்ளலாம் அல்லது அதை ஒட்டுமொத்தமாக நிராகரித்துவிடலாம். அவர் அந்தப் பரிந்துரையை நிராகரித்தால், இருவருக்குமே எதுவும் கிடைக்காது.

மனிதர்கள் அறிவுபூர்வமாகக் கணக்கிடுகின்ற இயந்திரங்கள் என்று தொன்மைப் பொருளியல் கோட்பாடுகள் கூறுகின்றன. பெரும்பாலான மக்கள் 99 டாலர்களைத் தங்களுக்கு வைத்துக் கொண்டு, மீதி 1 டாலரை மட்டுமே அடுத்தப் பங்கேற்பாளருக்குக் கொடுப்பர் என்றும், அந்த இரண்டாவது பங்கேற்பாளர் தனக்குக் கொடுக்கப்படுகின்ற பரிந்துரையை ஏற்றுக் கொள்ளுவார் என்றும் அக்கோட்பாடுகள் மேலும் கூறுகின்றன. அறிவார்ந்த ஒருவரிடம் 1 டாலர் பணம் கொடுக்கப்பட்டால், அவர் எப்போதும் அதை ஏற்றுக் கொள்ளுவார். அடுத்தவருக்கு 99 டாலர்கள் கிடைத்தால் அதைப் பற்றி இவருக்கு என்ன கவலை?

தொன்மைப் பொருளியல் வல்லுநர்கள் தங்களுடைய பரிசோதனைக்கூடங்களையும் சொற்பொழிவு அரங்கங்களையும்விட்டு வெளியே வந்து நிஜ உலகிற்குள் ஒருபோதும் அடியெடுத்து வைத்ததில்லைபோலும். அல்ட்டிமேட்டம் விளையாட்டில், மிகக் குறைவான பணம் ஒருவருக்குப் பங்கிட்டுக் கொடுக்கப்பட்டால், அந்தப் பிரிவினைப் பரிந்துரையை அவர் ஏற்றுக் கொள்ள மட்டார். ஏனெனில், அது 'நியாயமற்றது.' மற்றவர்களுடைய பார்வையில் தாங்கள் ஏமாளிகள்போலத் தோன்றுவதற்கு பதிலாக அந்த ஒரு டாலர் பணத்தை இழக்க அவர்கள் தயாராக இருக்கின்றனர். பெரும்பாலான மக்கள் அந்தப் பணத்தைச் சமமாகப் பங்கிட்டுக் கொள்ளுகின்றனர் அல்லது தங்களுக்கு சற்றுக் கூடுதலாக வைத்துக் கொண்டு, 30 அல்லது 40 டாலர்களை அடுத்தவருக்குக் கொடுக்கின்றனர்.

தொன்மப் பொருளியல் கோட்பாடுகளை முக்கியத்துவம் இழக்கச் செய்து, கடந்த பல ஆண்டுகளின் மிக முக்கியமான பொருளாதாரக் கண்டுபிடிப்பை நிலைப்படுத்தியதில் அல்ட்டிமேட்டம் கேம் ஒரு குறிப்பிடத்தக்கப் பங்களிப்பை வழங்கியது. அந்த மாபெரும் கண்டுபிடிப்பு இதுதான்: 'சேப்பியன்ஸ் ஒரு கணிதரீதியான தருக்கவாதத்திற்கு ஏற்ப நடந்து கொள்ளுவதில்லை. மாறாக, ஒரு சமூகரீதியான தருக்கவாதத்திற்கு ஏற்பவே அவர்களுடைய நடத்தை

அமைகிறது.’ நாம் உணர்ச்சிகளால் ஆளப்படுகிறோம். நாம் முன்பே பார்த்ததுபோல, இந்த உணர்ச்சிகள் உண்மையில் பண்டைய வேட்டையாடிக் குழுக்களின் சமூக வழிமுறைகளைப் பிரதிபலிக்கின்ற உயர்ந்த நயம் கொண்ட படிமுறைத் தீர்வுகளே. 30,000 ஆண்டுகளுக்கு முன்பு ஒரு காட்டுக் கோழியை நீங்கள் வேட்டையாட நான் உங்களுக்கு உதவியிருந்து, ஆனால் அந்தக் கோழியின் பெரும்பகுதியை நீங்கள் வைத்துக் கொண்டு, ஒரே ஒரு இறக்கைத் துண்டை மட்டும் நீங்கள் எனக்குக் கொடுத்தால், “எதுவுமே கிடைக்காமல் இருப்பதைவிட ஒரு இறக்கைத் துண்டு மேல்,” என்று நான் கூறியிருக்க மாட்டேன். மாறாக, என்னுடைய பரிணாம வளர்ச்சிரீதியான படிமுறைத் தீர்வுகள் முடுக்கிவிடப்பட்டிருக்கும், என்னுள் அட்ரினலினும் டெஸ்டாஸ்டெரோனும் பீறிட்டுப் புறப்பட்டிருக்கும், என் ரத்தம் கொதித்திருக்கும், நான் என் கால்களால் தரையில் ஓங்கி மிதித்து என் தொண்டை கிழியக் கத்தியிருப்பேன். குறுகியகால நோக்கில் நான் பட்டினி கிடக்க வேண்டியிருந்திருக்கலாம், ஓரிரு குத்துக்களைக்கூட நான் வாங்கியிருந்திருக்கலாம். ஆனால் நீண்டகால நோக்கில் அது எனக்குப் பெரும் வெகுமதி அளித்திருக்கும். ஏனெனில், என்னிடமிருந்து சுரண்டுவதற்கு முன்பாக ஒன்றுக்கு இரண்டு முறை நீங்கள் யோசிப்பீர்கள். நியாயமற்றப் பரிந்துரைகளை நாம் மறுத்துவிடுகிறோம். ஏனெனில், அவற்றை ஏற்றுக் கொண்ட மக்கள் கற்காலத்தில் நீண்டகாலம் வாழவில்லை.

நவீன வேட்டையாடிக் குழுக்களைப் பற்றிய ஆய்வுகள் இந்த யோசனைக்கு ஆதரவாக உள்ளன. பெரும்பான்மைக் குழுக்கள் சமத்துவப் போக்கைக் கொண்டிருக்கின்றன. ஒரு வேட்டையாடி ஒரு பருமனான மானைக் கொன்று தன்னுடைய முகாமிற்கு அதைக் கொண்டுவரும்போது, அக்குழுவில் உள்ள எல்லோருக்கும் அதில் ஒரு பங்கு கிடைக்கிறது. சிம்பன்சிகளின் விஷயத்திலும் இது உண்மையாக இருக்கிறது. ஒரு சிம்பன்சி ஒரு பன்றிக்குட்டியைக் கொல்லும்போது, அதன் குழுவில் உள்ள பிற உறுப்பினர்கள் அந்த சிம்பன்சியைச் சுற்றி நின்று கொண்டு தம்முடைய கைகளை நீட்டும். வழக்கமாக அவை ஒவ்வொன்றுக்கும் ஒரு துண்டு இறைச்சி கிடைத்துவிடும்.

முதனியியல் வல்லுநரான ஃபிரான்ஸ் டி வால் சமீபத்தில் மேற்கொண்ட ஒரு பரிசோதனையில், இரண்டு கபுசின் குரங்குகள் அடுத்தடுத்திருந்த இரண்டு கண்ணாடிக் கூண்டுகளில் அடைக்கப்பட்டன. ஒரு குரங்கு செய்வதையெல்லாம் இன்னொரு குரங்கால் பார்க்க முடிய வேண்டும் என்பதற்காக இந்த ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஃபிரான்ஸும் அவருடைய சகாக்களும் சில சிறிய

கற்களை ஒவ்வொரு கூண்டுக்குள்ளும் வைத்தனர். அக்குரங்குகள் அக்கற்களைத் தங்களிடம் கொடுப்பதற்கு அவர்கள் அக்குரங்குகளுக்குப் பயிற்சியளித்தனர். அவை ஒரு கல்லை எடுத்து அவர்களிடம் கொடுத்தபோதெல்லாம், பதிலுக்கு அவற்றுக்கு உணவு வழங்கப்பட்டது. முதலில், அவற்றுக்கு ஒரு துண்டு வெள்ளரிக்காய் வெகுமதியாக வழங்கப்பட்டது. இரண்டு குரங்குகளும் இது குறித்து மகிழ்ச்சியடைந்து, ஆனந்தமாகத் தம்முடைய வெள்ளரிக்காயை உட்கொண்டன. ஒருசில சுற்றுக்களுக்குப் பிறகு, ஃபிரான்ஸ் தன்னுடைய பரிசோதனையின் அடுத்தக் கட்டத்திற்கு நகர்ந்தார். இம்முறை, முதல் குரங்கு ஒரு கல்லை எடுத்துக் கொடுத்தபோது, அதற்கு ஒரு திராட்சைப்பழம் கொடுக்கப்பட்டது. வெள்ளரிக்காய்களைவிடத் திராட்சைப்பழங்கள் அதிகச் சுவை கொண்டவையல்லவா? இப்போது இரண்டாவது குரங்கு ஒரு கல்லைக் கொடுத்தபோது, அதற்கு மீண்டும் ஒரு வெள்ளரித்துண்டுதான் கொடுக்கப்பட்டது. முன்பு தன்னுடைய வெள்ளரித்துண்டை மகிழ்ச்சியாகச் சாப்பிட்ட அந்தக் குரங்கு, இப்போது கோபம் கொண்டது. அது அந்த வெள்ளரித்துண்டை எடுத்து, நம்ப முடியாமல் அதை ஒரு கணம் பார்த்துவிட்டு, அதை அந்த அறிவியலறிஞர்களை நோக்கி வீசி எறிந்துவிட்டு, கோபத்தில் கத்தியபடி மேலும் கீழும் குதிக்கத் தொடங்கியது. அது ஓர் இளித்தவாய்க் குரங்கு அல்ல.

நகைச்சுவையான இப்பரிசோதனையும் (இதையும் நீங்கள் யூ-டியூபில் காணலாம்) அல்ட்டிமேட்டம் விளையாட்டும் சேர்ந்து, முதனிகள் இயல்பாகவே ஒழுக்கநெறி கொண்டவை என்றும், சமத்துவம் என்பது காலத்தால் அழியாத ஓர் உலகளாவிய விழுமியம் என்றும், அதேபோல மக்கள் இயல்பாகவே சமத்துவப் போக்கைக் கொண்டவர்கள் என்றும், சமத்துவமற்றச் சமுதாயங்கள் கோபம் மற்றும் அதிருப்தி காரணமாக ஒருபோதும் சிறப்பாகச் செயல்படுவதில்லை என்றும் பலரை நம்ப வைத்துள்ளன.

ஆனால் இது உண்மையா? சிம்பன்சிகள், கபுசின் குரங்குகள், சிறு வேட்டையாடிக் குழுக்கள் ஆகியோரின் விஷயத்தில் வேண்டுமானால் இக்கோட்பாடுகள் சிறப்பாக வேலை செய்யக்கூடும். இவை பரிசோதனைக்கூடங்களில் பரிசோதனைக்கு உட்படுத்தப்படுகின்ற சிறு மனிதக் குழுக்களின் விஷயத்திலும் வேலை செய்யக்கூடும். ஆனால், பெருந்திரளான மக்களின் நடத்தையை நீங்கள் கவனிக்கும்போது, முற்றிலும் புதியதொரு யதார்த்தத்தை நீங்கள் கண்டறிவீர்கள். பெரும்பாலான மனித ராஜ்ஜியங்களும் சாம்ராஜ்ஜியங்களும் மிகவும் சமத்துவமற்றவையாக இருந்தன. ஆனாலும், அவற்றில் பல

நிலையாகவும் ஆற்றல்மிக்கவையாகவும் விளங்கின என்பது ஒரு வியப்பான விஷயம். பண்டைய எகிப்தில், ஃபாரோ மன்னர்கள் தங்கச் செருப்புகளையும் விலையுயர்ந்த கற்கள் பதிக்கப்பட்ட ஆடைகளையும் அணிந்து கொண்டு, பிரம்மாண்டமான, குளுகுளுப்பான மாளிகைகளில் மென்மையான படுக்கைகளில் படுத்துக் கொண்டு, அழகான பணிப்பெண்கள் ஊட்டிவிட்ட இனிய திராட்சைகளைச் சுவைத்துத் தின்று கொண்டு வசதியாக வாழ்ந்தனர். அதே நேரத்தில், விவசாயிகள் அழுக்கான ஆடைகளை அணிந்து கொண்டு, சுட்டெரித்த வெயிலில் நின்று முதுகொடிய வயல்களில் வேலை பார்த்ததை, திறந்திருந்த சன்னல்கள் வழியாக அந்த மன்னர்களால் பார்க்க முடிந்தது. நாளின் முடிவில் சாப்பிடுவதற்கு ஒரு வெள்ளரிக்காய் கிடைக்கப் பெற்ற ஒரு விவசாயி மிகவும் ஆசீர்வதிக்கப்பட்டவராகப் பார்க்கப்பட்ட ஒரு காலகட்டம் அது. ஆனால், இப்படிப்பட்டச் சூழ்நிலைகளில்கூட அந்த விவசாயிகள் ஆவேசத்துடன் வீறுகொண்டு எழுந்து எந்தப் புரட்சியும் செய்யவில்லை.

1740ல் பிரஷ்ய அரசரான இரண்டாம் ஃபிரெடரிக் சைலீஷியாவை வெற்றி கொண்டார். இதைத் தொடர்ந்து அவர் ஏகப்பட்டக் கொடுமையான போர்களைத் துவக்கினார். இது அவருக்கு ‘மாவீரர் ஃபிரெடரிக்’ என்ற பட்டப்பெயரைப் பெற்றுக் கொடுத்தது. பிரஷ்யாவை ஒரு மாபெரும் வல்லரசாக அவர் மாற்றினார். இப்போர்களின் விளைவாகப் பல்லாயிரக்கணக்கான மக்கள் இறந்தனர், எண்ணற்றோர் முடமாயினர், ஏராளமானோர் வறுமையில் வாடினர். ஃபிரெடரிக்கின் வீரர்களில் பெரும்பாலானோர் துரதிர்ஷ்டசாலிகளே. அவர்கள் கடுமையான ஒழுங்கிற்கும் காட்டுமிராண்டித்தனமான பயிற்சிகளுக்கும் உட்படுத்தப்பட்டனர். இதன் விளைவாக அவர்களுக்குத் தங்களுடைய அரசர்மீதான அன்பு சற்றுக் குறைந்ததில் வியப்பில்லை. ஒருமுறை, எதிரி நாட்டின்மீது படையெடுப்பதற்காகத் தன்னுடைய வீரர்கள் அணிவகுத்து நின்றதை அரசர் ஃபிரெடரிக் தன்னுடைய தளபதிகளுடன் சேர்ந்து பார்வையிட்டபோது, அவர்களில் ஒருவரிடம் அவர் இவ்வாறு கூறினார்: “இக்காட்சியைப் பற்றிய எந்த விஷயம் எனக்கு அதிக சுவாரசியமூட்டுகிறது தெரியுமா? நமக்கு முன்னே இருக்கும் நம்முடைய இந்த 60,000 வீரர்களைப் பார்த்தபடி நாம் இங்கே பாதுகாப்பாக நின்று கொண்டிருக்கிறோம். ஆயுத பலத்திலும் வலிமையிலும் இவர்களில் ஒருவன்கூட நமக்குச் சளைத்தவன் அல்லன் என்றாலும்கூட, நம் முன்னிலையில் இவர்கள் அனைவரும் பயத்தில் நடுங்குகின்றனர். ஆனால் இவர்களைக் கண்டு பயப்பட நமக்கு எந்தக் காரணமும்

இல்லை." தொடர்ந்து வந்த ஆண்டுகளின்போது, போர்களினால் ஏகப்பட்ட இன்னல்கள் ஏற்பட்டபோதுகூட, ஆயுதம் தாங்கிய இந்த 60,000 வீரர்கள் ஒருபோதும் அவரை எதிர்த்துக் கலகம் செய்யவில்லை. இன்னும் சொல்லப் போனால், அவர்களில் பலர் அசாதாரணமான துணிச்சலுடன் அவருக்கு சேவை செய்தனர். தேவைப்பட்டபோது, அவருக்காக அவர்கள் தங்கள் உயிரையும் தியாகம் செய்தனர்.

எகிப்திய விவசாயிகளும் பிரஷ்ய வீரர்களும் ஏன் அல்ட்டிமேட்டம் விளையாட்டு மற்றும் கபுசின் குரங்குகள் பரிசோதனையின் அடிப்படையில் அமைந்த நம்முடைய எதிர்பார்ப்பிலிருந்து வித்தியாசமாக நடந்து கொண்டனர்? ஏனெனில், பெரும் எண்ணிக்கையிலான மக்கள், சிறிய எண்ணிக்கையிலான மக்கள் நடந்து கொள்ளும் விதத்திலிருந்து அடிப்படையில் வித்தியாசமான ஒரு வழியில் நடந்து கொள்ளுகின்றனர். 10,000 கோடி டாலர்கள் பணத்தைத் தமக்கிடையே பங்கிட்டுக் கொள்ள வேண்டிய, தலா 10 லட்சம் மக்களைக் கொண்ட இரண்டு குழுக்கள்மீது அறிவியலறிஞர்கள் அல்ட்டிமேட்டம் விளையாட்டுப் பரிசோதனையை நடத்தியிருந்தால் அதன் விளைவு என்னவாக இருந்திருக்கும்?

அறிவியலறிஞர்கள் பல விநோதமான மற்றும் சுவாரசியமான நடத்தைகளைப் பார்த்திருக்கக்கூடும். எடுத்துக்காட்டாக, பத்து லட்சம் மக்களால் கூட்டாகத் தீர்மானங்கள் மேற்கொள்ள முடியாது. ஒரு குழு 9,000 கோடி டாலர்களைத் தான் வைத்துக் கொண்டு, இன்னொரு குழுவிற்கு வெறும் 1,000 கோடி டாலர்களை மட்டும் கொடுக்க விரும்பினால் என்னவாகும்? இரண்டாவது குழுவின் தலைவர்கள் அந்த நியாயமற்றப் பரிந்துரையை ஏற்றுக் கொள்ளக்கூடும், பிறகு அந்த 1,000 கோடி டாலர்களின் பெரும்பகுதியை சுவிட்சர்லாந்தில் அவர்கள் தங்களுடைய வங்கிக் கணக்குகளில் போட்டு வைக்கக்கூடும். இதற்கிடையே, தங்களுடைய குழுவில் உள்ள மற்றவர்கள் போர்க்கொடி உயர்த்தாமல் இருப்பதை உறுதி செய்யும் விதத்தில், எதிர்த்துக் குரல் கொடுப்பவர்களுக்குக் கடுமையான தண்டனைகள் வழங்கப்படும் என்று அத்தலைவர்கள் அச்சுறுத்தக்கூடும். அதே சமயத்தில், மறுமையில் வெகுமதிகள் கிடைக்கும் என்று பலவீனமானவர்களுக்கும் பொறுமை காப்பவர்களுக்கும் அவர்கள் வாக்குறுதி வழங்கக்கூடும். பண்டைய எகிப்திலும் பதினெட்டாம் நூற்றாண்டு காலகட்டத்தியப் பிரஷ்யாவிலும் இதுதான் நடந்தது. உலகம் நெடுகிலும் எண்ணற்ற நாடுகளில் விஷயங்கள் இன்றும் இப்படித்தான் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன.

இப்படிப்பட்ட அச்சுறுத்தல்களும் வாக்குறுதிகளும் பல சமயங்களில்

நிலையான மனித அடுக்கதிகார நிலைகளையும் பெரும் மனித ஒத்துழைப்புடன்கூடிய அமைப்புகளையும் உருவாக்குவதில் வெற்றி பெற்றுவிடுகின்றன. இந்த அடுக்கதிகார நிலைகளும் அமைப்புகளும் தவிர்க்கப்பட முடியாத இயற்கை விதிகள் அல்லது கடவுளின் தெய்விகக் கட்டளைகளே அன்றி மனிதர்களுடைய விருப்பங்கள் அல்ல என்று மக்கள் நம்பும்வரை, அந்த வெற்றி சாத்தியம்தான். பெரிய அளவிலான மனித ஒத்துழைப்பு அனைத்தும், இறுதியில், கற்பனையான ஒழுங்குமுறைகளின்மீது நாம் கொண்டுள்ள நம்பிக்கையின் அடிப்படையிலேயே அமைந்துள்ளது. இந்த ஒழுங்குமுறைகள் நம்முடைய கற்பனையில் மட்டுமே இடம்பெற்றுள்ள சில விதிமுறைகளே அன்றி வேறெதுவும் இல்லை. ஆனாலும், அவை புவியீர்ப்பைப்போல உண்மையானவை என்றும் மீறப்பட முடியாதவை என்றும் நாம் நம்புகிறோம்: “நீ பத்து எருதுகளை விண்கடவுளுக்கு பலி கொடுத்தால் மழை வரும்; நீ உன் பெற்றோர்களை மதித்தால் சொர்க்கத்திற்குப் போவாய்; நான் சொல்லுவதை நீ நம்பாவிட்டால் நீ நரகத்திற்குப் போவாய்.” ஒரு குறிப்பிட்ட இடத்தில் வாழ்ந்து கொண்டிருக்கின்ற சேப்பியன்ஸ் சில குறிப்பிட்டக் கதைகளை நம்பிக் கொண்டிருக்கும்வரை, அவர்கள் எல்லோரும் அதே விதிமுறைகளைத்தான் பின்பற்றுகின்றனர். இது அந்நியர்களுடைய நடத்தையைக் கணிப்பதையும் பெருந்திரளான மக்களை ஒத்துழைக்க வைப்பதையும் சுலபமாக்கிவிடுகிறது. “நீங்கள் என்னை நம்பலாம். நீங்கள் நம்புகின்ற அதே கதையை நானும் நம்புகிறேன்,” என்பதை உணர்த்துவதற்கு ஒரு தலைப்பாகை, ஒரு தாடி, ஒரு கோட்டு-சூட்டு போன்ற காட்சி சார்ந்த அடையாளங்களை சேப்பியன்ஸ் அடிக்கடிப் பயன்படுத்துகின்றனர். நம்முடைய உறவினர்களான சிம்பன்சிகளால் அத்தகைய கதைகளை உருவாக்கவோ அல்லது பரப்பவோ முடியாது. அதனால்தான் பெரிய எண்ணிக்கைகளில் அவற்றால் ஒத்துழைக்க முடிவதில்லை.

## அர்த்த வலை

‘கற்பனையான ஒழுங்குமுறைகள்’ என்ற யோசனையைப் புரிந்து கொள்ளுவதற்கு மக்கள் சிரமப்படுகின்றனர். ஏனெனில், புறவயமான யதார்த்தங்கள், அகவயமான யதார்த்தங்கள் என்ற இரண்டு வகையான யதார்த்தங்கள் மட்டுமே இருப்பதாக அவர்கள் அனுமானிக்கின்றனர். புறவயமான யதார்த்தத்தில், விஷயங்கள் நம்முடைய நம்பிக்கைகளையும் உணர்வுகளையும் சாராமல் சுதந்திரமாக

இருக்கின்றன. எடுத்துக்காட்டாக, புவியீர்ப்பு ஒரு புறவயமான யதார்த்தமாகும். நியூட்டனுக்கு நெடுங்காலத்திற்கு முன்பாகவே அது இருந்தது. அந்த யதார்த்தத்தை நம்புகின்றவர்கள்மீது அது எந்த அளவு தாக்கம் ஏற்படுத்துகிறதோ, அதை நம்பாதவர்கள்மீதும் அது அதே அளவு தாக்கம் ஏற்படுத்துகிறது.

அகவயமான யதார்த்தம் இதற்கு நேரெதிரானது. அது என்னுடைய தனிப்பட்ட நம்பிக்கைகளையும் உணர்வுகளையும் சார்ந்துள்ளது. எனவே, என் தலையில் ஒரு கடுமையான வலி ஏற்பட்டுள்ளதால் நான் ஒரு மருத்துவரிடம் போவதாக வைத்துக் கொள்ளுவோம். அவர் என்னை முழுமையாகப் பரிசோதிக்கிறார், ஆனால் என் உடலில் எந்தப் பிரச்சனையையும் அவரால் கண்டுபிடிக்க முடியவில்லை. எனவே, ஒரு ரத்தப் பரிசோதனை, சிறுநீர்ப் பரிசோதனை, டிஎன்ஏ பரிசோதனை, எக்ஸ்-ரே, ஈசிஜி, எம்ஆர்ஐ, மற்றும் பல பரிசோதனைகளை மேற்கொள்ளும்படி அவர் என்னிடம் கூறுகிறார். அப்பரிசோதனைகளின் முடிவுகள் வரும்போது, நான் கச்சிதமான ஆரோக்கியத்துடன் இருப்பதாகக் கூறி அவர் என்னை வீட்டிற்கு அனுப்பிவிடுகிறார். ஆனாலும் என் தலையில் ஒரு கடுமையான வலியை நான் உணருகிறேன். புறவயமான அனைத்துப் பரிசோதனைகளும் என்னிடம் எந்தப் பிரச்சனையையும் கண்டுபிடித்திருக்காதபோதும், என்னைத் தவிர வேறு யாரும் அத்தகைய வலியை உணரவில்லை என்றபோதும், என்னைப் பொருத்தவரை அந்த வலி 100 சதவீதம் உண்மையானது.

யதார்த்தம் அகவயமானதாகவோ அல்லது புறவயமானதாகவோ இருக்க வேண்டும், இதில் மூன்றாவது வகை எதுவும் இல்லை என்று பெரும்பாலான மக்கள் அனுமானிக்கின்றனர். எனவே, ஏதோ ஒன்று தங்களுடைய அகவயமான உணர்வு இல்லை என்று அவர்கள் உறுதியாக நம்பினால், அது நிச்சயமாகப் புறவயமான உணர்வாகத்தான் இருக்க வேண்டும் என்று அவர்கள் அவசர அவசரமாக முடிவு செய்துவிடுகின்றனர். கடவுள்மீதான நம்பிக்கை, பணம்தான் இவ்வுலகை ஆட்டுவிக்கிறது என்ற நம்பிக்கை, தேசியவாதம் போர்களைத் தோற்றுவித்துப் பேரரசுகளை உருவாக்குகிறது எனும் நம்பிக்கை போன்ற நம்பிக்கைகளை ஏராளமான மக்கள் கொண்டிருந்தால், அது என் ஒருவனுடைய அகவயமான நம்பிக்கையாக மட்டுமே இருக்க முடியாது. எனவே, கடவுள், பணம், தேசம் ஆகியவை நிச்சயமாகப் புறவயமான யதார்த்தங்களாகத்தான் இருக்க வேண்டும்.

ஆனாலும், ‘பரஸ்பரம் பொதுவான அகவயமான நிலை’ என்ற

மூன்றாவது யதார்த்த நிலை ஒன்றும் உள்ளது. இந்த நிலையில் உள்ள பொருட்கள் தனிநபர்களுடைய நம்பிக்கைகளையும் உணர்வுகளையும் சார்ந்திருப்பதற்கு பதிலாகப் பல மனிதர்களுக்கு இடையேயான கருத்துப் பரிமாற்றத்தைச் சார்ந்துள்ளன. வரலாற்றில் மிக முக்கியமான பல விஷயங்கள் இந்த மூன்றாம் நிலையைச் சேர்ந்தவையே. எடுத்துக்காட்டாக, பணத்திற்கு எந்தப் புறவயமான விலைமதிப்பும் கிடையாது. ஒரு பத்து ரூபாய் நோட்டை உண்ணவோ, பருகவோ அல்லது அணிந்து கொள்ளவோ உங்களால் முடியாது. ஆனால், கோடிக்கணக்கான மக்கள் அதன் விலைமதிப்பில் நம்பிக்கை கொண்டிருக்கும்வரை, அதைப் பயன்படுத்தி உணவையும் பானங்களையும் ஆடைகளையும் உங்களால் வாங்க முடியும். ஒரு கடைக்காரருக்கு ரூபாய் நோட்டின்மீதான நம்பிக்கை திடீரென்று மறைந்து போனதால், இந்த வண்ணக் காகிதத்தைப் பெற்றுக் கொண்டு ஒரு முழு ரொட்டியை எனக்குத் தர அவர் மறுக்கிறார் என்றால், அதனால் எந்தப் பிரச்சனையும் இல்லை. நான் இன்னும் சிறிது தூரம் நடந்து சென்று, அங்கிருக்கும் ஒரு பேரங்காடிக்குப் போகலாம். ஆனால், அங்குள்ள பணியாளர்களும் அந்தக் காகிதத் துண்டை வாங்க மறுத்துவிட்டால், அவர்களோடு சேர்ந்து அந்த வணிக வளாகத்திலுள்ள அத்தனை விற்பனையாளர்களும் அதை நிராகரித்துவிட்டால், பிறகு அந்த ரூபாய் நோட்டு தன் மதிப்பை இழந்துவிடும். அது தொடர்ந்து நீடித்திருக்கும், ஆனால் அது மதிப்பற்றதாக ஆகிவிடும்.

இப்படிப்பட்ட விஷயங்கள் அவ்வப்போது உண்மையில் நிகழத்தான் செய்கின்றன. 1985ம் ஆண்டு நவம்பர் 3ம் நாளன்று, இருபத்தைந்து கியாட், ஐம்பது கியாட் மற்றும் நூறு கியாட் நோட்டுக்கள் இனி செல்லாது என்று மியான்மர் அரசு திடீரென்று ஓர் அறிவிப்பை வெளியிட்டது. அந்த நோட்டுக்களை வங்கிகளில் மாற்றிக் கொள்ளுவதற்கு மக்களுக்கு எந்த வாய்ப்பும் கொடுக்கப்படவில்லை. வாழ்நாள் சேமிப்புகள் ஒரே கணத்தில் மதிப்பற்றக் காகிதக் குவியல்களாக மாறின. வழக்கொழிந்து போன நோட்டுக்களுக்கு மாற்றாக, புதிய எழுபத்தைந்து கியாட் நோட்டுக்கள் அறிமுகப்படுத்தப்பட்டன. மியான்மரின் சர்வாதிகாரியான ‘ஜெனரல் நீ வின்’னுடைய எழுபத்தைந்தாவது பிறந்தநாளை கௌரவிக்கும் விதமாக அப்புதிய நோட்டுக்கள் வெளியிடப்பட்டதாகக் கூறப்பட்டது. 1986ம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில், பதினைந்து கியாட் நோட்டுக்களும் முப்பத்தைந்து கியாட் நோட்டுக்களும் அச்சிடப்பட்டுப் புழக்கத்தில் விடப்பட்டன. எண் சோதிடத்தில் மிக வலிமையான நம்பிக்கை கொண்டிருந்த அந்த சர்வாதிகாரி, பதினைந்தும் முப்பத்தைந்தும்

தன்னுடைய அதிர்ஷ்ட எண்கள் என்று நம்பினார். ஆனால் அவை அவருடைய குடிமக்களுக்கு எந்த அதிர்ஷ்டத்தையும் கொண்டுவரவில்லை. 1987ம் ஆண்டு செப்டம்பர் 5ம் நாளன்று, அனைத்து முப்பத்தைந்து கியாட் நோட்டுக்களும் எழுபத்தைந்து கியாட் நோட்டுக்களும் இனி செல்லாது என்று அரசு திடீரென்று அறிவித்தது.

மக்கள் ஒன்றின்மீது நம்பிக்கை இழக்கும்போது, அதன் மதிப்பு நிர்மூலமாகிவிடுகிறது. இது பணத்திற்கு மட்டுமல்லாமல், சட்டங்கள், கடவுளர், மற்றும் ஒட்டுமொத்த சாம்ராஜ்ஜியங்களுக்கும்கூடப் பொருந்தும். ஒரு கணம் அவை இவ்வுலகைச் செதுக்கி வடிவமைத்துக் கொண்டிருக்கின்றன, மறுகணம் அவை காணாமல் போய்விடுகின்றன. மத்தியத் தரைக்கடல் வடிநிலத்தில் முன்பொரு காலத்தில் முக்கியமான சக்திகளாக விளங்கிய சியுஸ், ஹெரா ஆகிய கிரேக்கக் கடவுளர் இன்று எந்த அதிகாரமும் அற்றவர்களாக இருக்கின்றனர். ஏனெனில், இப்போது யாருக்கும் அவர்களிடத்தில் நம்பிக்கை இல்லை. சோவியத் ஒன்றியம் முன்பொரு காலத்தில் ஒட்டுமொத்த மனித இனத்தையும் அழிக்கும் திறன் கொண்டதாக இருந்தது. ஆனால், ஒரே ஒரு கையெழுத்தில் அது முற்றிலுமாக மறைந்துவிட்டது. 1991ம் ஆண்டு டிசம்பர் 8ம் நாளன்று மதியம் இரண்டு மணிக்கு, விஸ்குலி என்ற நகருக்கு அருகே அமைந்த அரசாங்க இல்லம் ஒன்றில், ரஷ்யா, உக்ரைன், பெலாரஸ் ஆகியவற்றின் தலைவர்கள் சேர்ந்து பெலவெசா ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டனர். அந்த ஒப்பந்தத்தில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டிருந்தது: “1922ம் ஆண்டில் ஒன்றிய ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டு சோவியத் ஒன்றியத்தைத் தோற்றுவித்த நாடுகளான பெலாரஸ் குடியரசு, ரஷ்யக் கூட்டமைப்பு, உக்ரைன் ஆகிய நாங்கள், சோவியத் ஒன்றியம் என்ற ஒன்று இனி இருக்காது என்று பிரகடனம் செய்கிறோம்.” அவ்வளவுதான். சோவியத் ஒன்றியம் அதன் பிறகு இல்லாமல் போயிற்று.



படம் **19:** பெலவெசா ஒப்பந்தத்தில் கையெழுத்திடுதல். ஒரு பேனா ஒரு காகிதத்தைத் தொடுகிறது - ஜீபூம்பா! சோவியத் ஒன்றியம் காணாமல் போய்விடுகிறது.

பணத்தைப் பரஸ்பரம் பொதுவான அகவயமான யதார்த்தமாக ஏற்றுக் கொள்ளுவது நமக்கு சுலபமானதாக இருக்கிறது. பண்டைய கிரேக்கக் கடவுளர், தீய பேரரசுகள், அந்நியக் கலாச்சார விழுமியங்கள் ஆகியவை கற்பனையில் மட்டுமே இடம்பெற்றுள்ளன என்று பெரும்பாலான மக்கள் மகிழ்ச்சியாக ஒப்புக் கொள்ளுகின்றனர். ஆனாலும், நம்முடைய கடவுள், நம்முடைய நாடு, நம்முடைய விழுமியங்கள் ஆகியவை வெறும் கற்பனைக் கதைகளே என்று ஒப்புக் கொள்ள நாம் விரும்புவதில்லை. ஏனெனில், இவைதான் நம்முடைய வாழ்க்கைக்கு அர்த்தத்தைக் கொடுக்கின்றன. நம்முடைய வாழ்க்கைக்கு ஏதோ புறவயமான அர்த்தம் இருக்கிறது என்றும், நம்முடைய தியாகங்கள் முக்கியத்துவம் வாய்ந்தவை என்றும் நம்ப நாம் விரும்புகிறோம். ஆனால் உண்மையில், பெரும்பாலான மக்களுடைய வாழ்க்கை அவர்கள் ஒருவருக்கொருவர் கூறிக் கொள்ளுகின்ற, ஒன்றுக்கொன்று தொடர்புபடுத்தப்பட்டுள்ள கதைகளுக்குள் மட்டுமே அர்த்தம் வாய்ந்ததாக இருக்கிறது.

பலர் சேர்ந்து ஒன்றுக்கொன்று தொடர்புபடுத்தப்பட்டுள்ள கதைகளைப் பின்னும்போது அர்த்தம் உருவாக்கப்படுகிறது. ஒரு தேவாலயத்தில் திருமணம் செய்து கொள்ளுவது, ரம்ஜான் நோன்பு இருப்பது, தேர்தல் நாளன்று ஓட்டுப் போடுவது போன்ற ஒரு குறிப்பிட்ட நடவடிக்கை ஏன் எனக்கு அர்த்தம் வாய்ந்ததாக இருக்கிறது? ஏனெனில், என்னுடைய பெற்றோர்களும், சகோதரர்களும், அக்கம்பக்கத்தாரும், அருகிலுள்ள நகரங்களில் வாழும் மக்களும், தொலைதூர நாடுகளில் வாழுகின்றவர்களும்கூட அது

அர்த்தம் வாய்ந்ததாக இருப்பதாக நினைக்கின்றனர். இவர்கள் அனைவரும் ஏன் அது அர்த்தம் வாய்ந்தது என்று நினைக்கின்றனர்? ஏனெனில், அவர்களுடைய நண்பர்களும் அண்டைவீட்டாரும் அதே கண்ணோட்டத்தைக் கொண்டிருக்கின்றனர். ஒரு சுயவலியுறுத்தல் சுற்று மூலம் மக்கள் தொடர்ந்து பரஸ்பரம் அடுத்தவருடைய நம்பிக்கைகளுக்கு வலுவூட்டிக் கொள்ளுகின்றனர். அவர்கள் ஒவ்வொரு முறை அவ்வாறு பரஸ்பரம் வலியுறுத்தும்போது, அர்த்த வலை மேலும் இறுக்கமடைகிறது. இது தொடர்ந்து நிகழும்போது, இறுதியில் எல்லோரும் நம்புகின்ற ஒன்றை நீங்களும் நம்புவதைத் தவிர உங்களுக்கு வேறு வழி இருப்பதில்லை.

ஆனாலும், பல நூற்றாண்டுகளின் ஊடாக அந்த அர்த்த வலை உருக்குலைந்து போகிறது, அதன் இடத்தில் ஒரு புதிய வலை பின்னப்படுகிறது. வரலாற்றை ஆய்வு செய்வது என்றால், இந்த வலைகள் பின்னப்படுவதையும் உருக்குலைவதையும் கூர்ந்து கவனித்து, வாழ்வில் ஒரு காலகட்டத்தில் மக்களுக்கு மிக முக்கியமானதாக இருந்த ஒரு விஷயம் அவர்களுடைய பிந்தைய தலைமுறையினருக்கு முற்றிலும் அர்த்தமற்றதாக ஆவதை உணருவதாகும்.

1187ம் ஆண்டில், ஹட்டின் எனும் இடத்தில் நடந்த போரில் சலாதீன் என்ற இஸ்லாமியப் பேரரசர் கிறித்தவ சிலுவைப் படைகளைத் தோற்கடித்து ஜெரூசலம் நகரைக் கைப்பற்றினார். இதற்கு பதிலடி கொடுக்கும் விதமாக, அப்புனித நகரத்தை சலாதீனிடமிருந்து மீண்டும் கைப்பற்றுவதற்குப் போப் மூன்றாவது சிலுவைப் போரைத் துவக்கினார். ஜான் என்ற ஆங்கிலேய மேட்டுக்குடி இளைஞன் ஒருவன் சலாதீனை எதிர்த்துச் சண்டையிடுவதற்காகத் தன்னுடைய நாட்டைவிட்டுப் புறப்பட்டுச் சென்றதைக் கற்பனை செய்யுங்கள். தன்னுடைய செயல்களுக்கு ஒரு புறவயமான அர்த்தம் இருந்ததாக ஜான் நம்பினான். தான் அந்த சிலுவைப் போரில் மடிந்தால், தன்னுடைய மரணத்திற்குப் பிறகு தன்னுடைய ஆன்மா சொர்க்கத்தைச் சென்றடையும் என்றும், அது அங்கே நிரந்தரமான விண்ணுலகப் பேரானந்தத்தை அனுபவிக்கும் என்றும் அவன் நம்பினான். ஆன்மாவும் சொர்க்கமும் மனிதர்களால் உருவாக்கப்பட்டக் கட்டுக்கதைகள்தான் என்பது தெரிந்தால் அவன் நிச்சயமாக அதிர்ச்சியடைந்திருப்பான். “நான் ஜெரூசலம் எனும் அந்தப் புனித பூமியைச் சென்றடைந்து, பெரிய மீசையுடன்கூடிய யாரோ ஓர் இஸ்லாமிய வீரர் தன்னுடைய கோடாலியைக் கொண்டு என்னுடைய தலையை வெட்டினால், தாங்க முடியாத வேதனையை நான் உணருவேன், என் காதுகள் ரீங்காரமிடும்,

என் கால்கள் நடுங்கி நான் கீழே விழுவேன், என்னைச் சுற்றி எல்லாம் எனக்கு இருட்டாகத் தெரியும் - ஆனால் துல்லியமாக அக்கணத்தில் என்னைச் சுற்றிலும் நான் பிரகாசமான ஒளியைப் பார்ப்பேன், யாழ்களின் இன்னிசை எனக்குக் கேட்கும், பிரகாசமான இறக்கைகளுடன் இருக்கும் தேவதைகள் ஒரு பிரம்மாண்டமான பொன்வாயில் வழியாக என்னை சொர்க்கத்திற்குள் அழைத்துச் செல்லும்," என்று அவன் முழுமனதாக நம்பினான்.

அவனுக்கு இவை அனைத்திலும் மிக வலிமையானதொரு விசுவாசம் இருந்தது. ஏனெனில், மிக அடர்த்தியான, மிக அதிக சக்திவாய்ந்த அர்த்த வலை ஒன்றுக்குள் அவன் சிக்கியிருந்தான். தன்னுடைய தாத்தாவான ஹென்ரியின் துருப்பிடித்த வாள் ஒன்று அவருடைய கோட்டையின் முக்கிய வரவேற்பறையில் தொங்கிக் கொண்டிருந்தது ஜானுக்கு நினைவிருந்தது. ஜான் ஒரு குழந்தையாக இருந்த காலத்திலிருந்தே, இரண்டாம் சிலுவைப் போரில் சண்டையிட்டு இறந்து போன தன்னுடைய தாத்தா ஹென்ரியைப் பற்றிய கதைகளைக் கேட்டு வந்திருந்தான். அவர் இப்போது சொர்க்கத்தில் தேவதைகளுடன் ஓய்வெடுத்துக் கொண்டிருந்ததாகவும், ஜானையும் அவனுடைய குடும்பத்தினரையும் அங்கிருந்து அவர் கண்காணித்துப் பாதுகாத்துக் கொண்டிருந்தார் என்றும் ஜானிடம் கூறப்பட்டது. நாடோடிப் பாடகர்கள் அந்தக் கோட்டைக்கு வருகை தந்தபோதெல்லாம், புனித பூமியில் சண்டையிட்டத் துணிச்சலான சிலுவை வீரர்களைப் பற்றிப் பாடுவதை அவர்கள் வழக்கமாகக் கொண்டிருந்தனர். ஜான் தன்னுடைய தேவாலயத்திற்குச் சென்றபோது, அங்கிருந்த அழகிய வேலைப்பாடுகளுடன்கூடிய வண்ணமயமான கண்ணாடி சன்னல்களை அவன் மிகவும் ரசித்துப் பார்த்தான். ஒரு கண்ணாடி சன்னலில், முதலாம் சிலுவைப் போரின் தலைவர்களில் ஒருவரான, பூயோன் நகரைச் சேர்ந்த காட்ஃப்ரீ, தீயவர்போலத் தோன்றிய ஓர் இஸ்லாமியரைத் தன்னுடைய குதிரைமீது அமர்ந்தபடி தன்னுடைய எறிவேலைக் கொண்டு குத்திக் கொண்டிருந்த காட்சி சித்தரிக்கப்பட்டிருந்தது. இன்னொரு சன்னலில், பாவிகளின் ஆன்மாக்கள் நரகத் தீயில் எரிந்து கொண்டிருந்தது சித்தரிக்கப்பட்டிருந்தது. அந்த தேவாலயத்தின் பாதிரியாருடைய பிரசங்கங்களை ஜான் உன்னிப்பாகக் கேட்டான். அவனுக்குத் தெரிந்த, மிகவும் கற்றறிந்த நபர் அவர்தான். கிட்டத்தட்ட ஒவ்வொரு ஞாயிறன்றும் உவமைக் கதைகளையும் நகைச்சுவையையும் கலந்து அவர் ஆற்றிய சொற்பொழிவுகளில் அவர் இவ்வாறு விளக்கினார்: "கத்தோலிக்க தேவாலயத்திற்கு வெளியே முக்தி எதுவும் இல்லை. ரோம் நகரில் உள்ள போப்பாண்டவர்தான் நம்முடைய திருத்தந்தை.

அவருடைய கட்டளைகளுக்கு நாம் எப்போதும் கீழ்ப்படிய வேண்டும். நாம் யாரையேனும் கொன்றாலோ அல்லது யாரிடமிருந்தாவது திருடினாலோ, கடவுள் நம்மை நரகத்திற்கு அனுப்பிவிடுவார். ஆனால், கிறித்தவ மதத்தை நம்பாத இஸ்லாமியர்களை நாம் கொன்றால், கடவுள் நம்மை சொர்க்கத்திற்குள் வரவேற்பார்."

ஜானுக்குப் பதினெட்டு வயது ஆகியிருந்த சமயத்தில் ஒருநாள், கலைந்த தலையுடனும் அலங்கோலமான ஆடைகளுடனும்கூடிய ஒரு வீரன் தன்னுடைய குதிரையில் ஜானின் கோட்டை வாசலுக்கு வந்து, தழுதழுப்பான ஒரு குரலில் அச்செய்தியைத் தெரிவித்தான்: "ஹட்டின் நகரில் சிலுவைப் படையை சலாதீன் அழித்துவிட்டார்! ஜெரூசலம் வீழ்ந்துவிட்டது! போப்பாண்டவர் ஒரு புதிய சிலுவைப் போரைப் பிரகடனம் செய்திருக்கிறார். அதில் இறக்கும் எவரொருவருக்கும் நிரந்தர விமோசனம் கிடைக்கும் என்று அவர் வாக்குறுதி வழங்கியிருக்கிறார்!" இதைக் கேட்டவுடன் அங்கிருந்த எல்லோரும் அதிர்ச்சியும் கவலையும் கொண்டனர். ஆனால் ஜானின் முகம் பிரகாசமடைந்தது. "கிறித்தவத்தை நம்பாத அந்த நாத்திகர்களை எதிர்த்துச் சண்டையிட்டு அந்தப் புனித பூமியை நான் அவர்களிடமிருந்து விடுவிக்கப் போகிறேன்!" என்று அவன் முழங்கினான். எல்லோரும் ஒரு கணம் மௌனமாக இருந்தனர். பிறகு அவர்களுடைய முகங்களில் புன்னகையும் கண்ணீரும் அரும்பின. ஜானின் தாயார் தன்னுடைய கண்களைத் துடைத்துவிட்டு, ஜானைக் கட்டித் தழுவி, தான் அவனைக் குறித்து மிகவும் பெருமிதம் கொண்டதாக அவனிடம் கூறினார். அவனுடைய தந்தை அவனுடைய முதுகைத் தட்டிக் கொடுத்துவிட்டு, "எனக்கு மட்டும் உன் வயதாக இருந்தால், நானும் உன்னோடு புறப்பட்டுவிடுவேன். நம்முடைய குடும்பத்தின் கௌரவப் பிரச்சனை இது. நீ எங்களுக்கு ஏமாற்றத்தைக் கொடுக்க மாட்டாய் என்று நான் நம்புகிறேன்!" என்று கூறினார். தாங்களும் அவனோடு வருவதாக அவனுடைய நண்பர்களில் இரண்டு பேர் அறிவித்தனர். ஜானின் பரம எதிரியான ஒரு செல்வந்தர்கூட அவனுக்கு வாழ்த்துத் தெரிவிப்பதற்காக ஆற்றின் மறுபக்கத்திலிருந்து அங்கு வந்தார்.

ஜான் தன்னுடைய கோட்டையைவிட்டுப் புறப்பட்டபோது, கிராம மக்கள் தங்களுடைய குடிசைகளுக்கு வெளியே வந்து அவனைப் பார்த்துக் கையசைத்தனர். அழகிய இளம்பெண்கள், கிறித்தவத்தை நம்பாதவர்களை எதிர்த்துச் சண்டையிடுவதற்காகச் சென்று கொண்டிருந்த அந்த மாவீரனை ஏக்கத்தோடு பார்த்தனர். அவன் இங்கிலாந்திலிருந்து கப்பலில் புறப்பட்டு நார்மன்டி, புரோவென்ஸ்,

சிசிலி போன்ற தொலைதூர அந்நிய நாடுகள் வழியாகப் பயணித்தபோது, அந்நிய வீரர்களும் பல குழுக்களாக அக்கப்பலில் ஏறி அவனோடு பயணித்தனர். எல்லோரும் அதே இடத்திற்குத்தான் போய்க் கொண்டிருந்தனர், எல்லோரும் அதே நம்பிக்கையைத்தான் கொண்டிருந்தனர். அவர்களுடைய படை அந்தப் புனித பூமியை அடைந்து, சலாதீனின் படையினரோடு சண்டையிட்டபோது, அந்தத் தீய இஸ்லாமியர்களும் தான் கொண்டிருந்த அதே நம்பிக்கைகளைக் கொண்டிருந்ததைக் கண்டு ஜான் வியந்தான். ஆனால் அவர்கள், கிறித்தவர்கள்தான் நாத்திகர்கள் என்றும், தாங்கள் கடவுளின் விருப்பங்களுக்குக் கீழ்ப்படிந்து நடந்து கொண்டிருந்தோம் என்றும் நினைத்து சற்றுக் குழப்பமடைந்திருந்ததாக ஜான் நினைத்தான். ஆனால், கடவுளுக்காகவும் ஜெரூசலம் நகருக்காகவும் சண்டையிடுபவர்கள் இறக்கும்போது நேராக சொர்க்கத்திற்குச் செல்லுவர் என்ற அடிப்படைக் கொள்கையை அவர்களும் ஏற்றுக் கொண்டிருந்ததை அவன் உணர்ந்தான்.

அப்படிப்பட்ட ஒரு வழியில், இடைக்கால நாகரிகம் தன்னுடைய அர்த்த வலையை ஒவ்வோர் இழையாகப் பின்னி, ஈக்களைப்போல ஜானையும் அவனுடைய சமகாலத்தவரையும் அதில் சிறைப்படுத்தியது. இக்கதைகள் யாவும் கற்பனையில் உதித்தவை என்பதை ஜானால் நினைத்துப் பார்க்கக்கூட முடியவில்லை. ஒருவேளை தன்னுடைய பெற்றோரும் உறவினர்களும் விஷயங்களைத் தவறாகப் புரிந்து கொண்டிருக்கக்கூடும் என்று அவன் நினைத்தான். ஆனால், அவனுடைய கோட்டைக்கு வந்து பாடிய பாடகர்கள், அவனுடைய நண்பர்கள், கிராமத்து இளம்பெண்கள், கற்றறிந்த அந்தப் பாதிரியார், ஆற்றின் மறுபக்கத்திலிருந்த அந்தச் செல்வந்தர், ரோம் நகரில் இருந்த போப்பாண்டவர், புரோவென்ஸ் நாட்டு வீரர்கள், சிசிலி நாட்டு வீரர்கள், அந்த இஸ்லாமியர்கள் ஆகிய எல்லோருமே ஏதோ மாயையில் சிக்கியிருந்திருக்கக்கூடுமோ?

ஆண்டுகள் உருண்டோடுகின்றன. தொடர்ந்து ஒவ்வொரு அர்த்த வலையும் உருக்குலைவதையும், அதற்கு பதிலாக இன்னொரு வலை பின்னப்படுவதையும் வரலாற்றியலாளர்கள் கவனித்துக் கொண்டே வருகின்றனர். ஜானின் பெற்றோர் இறக்கின்றனர், பிறகு அவனுடைய உடன்பிறந்தோரும் நண்பர்களும் இறக்கின்றனர். பாடகர்கள் சிலுவைப் போர்களைப் பற்றிப் பாடுவது நின்று போய், அதற்கு பதிலாக, துயரமான காதல் விவகாரங்களைப் பற்றிய மேடை நாடகங்கள் அரங்கேற்றப்படுகின்றன. அவை நவீனப் பாணியாக ஆகின்றன. ஜானின் கோட்டை எரிந்து மண்ணோடு மண்ணாகிறது. அது மீண்டும்

கட்டப்படும்போது, அவனுடைய தாத்தா ஹென்ரியின் வாளுக்கான எந்தச் சுவடும் அங்கு காணப்படவில்லை. ஒரு குளிர்காலத்தில் ஏற்பட்டக் கடும்புயலால் தேவாலயத்தின் சன்னல்கள் உடைந்து நொறுங்கின. புதிதாகப் பொருத்தப்பட்டக் கண்ணாடி சன்னல்களில் பூவோன் நகரத்து காட்ஃப்ரீயோ அல்லது நரகத்தில் எரிந்து கொண்டிருந்த பாவிகளோ சித்தரிக்கப்படவில்லை. மாறாக, இங்கிலாந்து அரசர் பிரான்ஸ் நாட்டு அரசரை வெற்றி கொண்ட நிகழ்வு அதில் சித்தரிக்கப்பட்டுள்ளது. போப்பாண்டவரை 'நம்முடைய திருத்தந்தை' என்று அழைப்பதை உள்ளூர்ப் பாதிரியார் நிறுத்திவிட்டார். இப்போது போப்பாண்டவர் 'ரோம் நகரில் உள்ள சாத்தான்' என்று அழைக்கப்படுகிறார். அருகிலுள்ள பல்கலைக்கழகத்து அறிஞர்கள் பண்டைய கிரேக்கச் சுவடிகளை ஆய்வு செய்கின்றனர், சடலங்களைக் கூறுபோடுகின்றனர், ஆன்மா என்ற ஒன்று இல்லைபோலும் என்று மூடிய கதவுகளுக்குப் பின்னால் ரகசியமாகக் கிசுகிசுக்கின்றனர்.

காலம் தொடர்ந்து சுழலுகிறது. முன்பு அக்கோட்டை இருந்த இடத்தில் இப்போது ஒரு வணிக வளாகம் நிலை கொண்டுள்ளது. யாருமில்லாத ஒரு தேவாலயத்தில், சலிப்போடு இருந்த ஒரு பாதிரியார், இரண்டு ஜப்பானிய சுற்றுலாப் பயணியரைக் கண்டு பெருமகிழ்ச்சி கொள்ளுகிறார். அங்கிருக்கும் கண்ணாடி சன்னல்களில் உள்ள காட்சிகளைப் பற்றி அவர் அவர்களிடம் விலாவாரியாக விளக்குகிறார். அவர்களுக்கு எதுவும் புரியவில்லை என்றபோதிலும், அவர்கள் பணிவாகத் தலையசைத்துப் புன்னகைத்தபடி அந்த விளக்கத்தைக் கேட்கின்றனர். தேவாலயத்திற்கு வெளியே இருக்கும் படிக்கட்டுகளில் பதின்பருவ இளைஞர்கள் தங்கள் ஐ-போன்களில் விளையாடிக் கொண்டிருக்கின்றனர், யூ-டியூபில் ஜான் லெனனின் 'இமேஜின்' பாடலின் மறுபதிப்பைக் கேட்கின்றனர். "சொர்க்கம் எதுவும் இல்லை என்று கற்பனை செய்யுங்கள். நீங்கள் முயற்சித்தால் அது சுலபம்தான்," என்று லெனன் பாடுகிறார். சாலைத் துப்புரவுப் பணியாளராக வேலை செய்கின்ற ஒரு பாகிஸ்தானி, நடைபாதையைப் பெருக்கிக் கொண்டிருக்கிறார். அருகே ஒரு வானொலியில் சிரியாவில் படுகொலைகள் தொடருவதாகவும், ஐக்கிய நாடுகள் சபையின் பாதுகாப்பு ஆணையத்தின் சந்திப்புக்கூட்டம் எந்தத் தீர்மானமும் நிறைவேற்றப்படாமல் முடிந்துவிட்டதாகவும் செய்திகள் அறிவிக்கப்படுகின்றன. திடீரென்று, காலத்தில் ஒரு துளை திறக்கிறது, மர்மமான ஒளிக்கீற்று ஒன்று அங்கிருக்கும் பதின்பருவ இளைஞர்களில் ஒருவனுடைய முகத்தை ஒளிரச் செய்கிறது. அவன், "நான்

நாத்திகர்களை எதிர்த்துச் சண்டையிட்டுப் புனித பூமியை மீட்கப் போகிறேன்!" என்று அறிவிக்கிறான்.

நாத்திகர்களா? புனித பூமியா? இன்றைய இங்கிலாந்தில் இந்த வார்த்தைகள் பெரும்பாலான மக்களுக்கு அர்த்தமற்றவையாக ஆகியுள்ளன. மேற்குறிப்பிடப்பட்ட அந்த இளைஞனுக்கு புத்தி பேதலித்துவிட்டதாக அந்தப் பாதிரியாரேகூட நினைக்கக்கூடும். இதற்கு நேரெதிராக, ஆங்கிலேய இளைஞன் ஒருவன் 'ஆம்னெஸ்டி இன்டர்நேஷனல்' அமைப்பில் சேர்ந்து, சிரியாவுக்குச் சென்று அகதிகளின் மனித உரிமைகளைப் பாதுகாக்கப் போவதாகத் தீர்மானித்தால், அவன் ஒரு கதாநாயகனாகப் பார்க்கப்படுவான். இடைக்காலத்தில் அவன் இப்படிக் கூறியிருந்தால், அவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டிருந்ததாக அவர்கள் நினைத்திருப்பார்கள். பன்னிரண்டாம் நூற்றாண்டு காலகட்டத்திய இங்கிலாந்தில் மனித உரிமைகள் என்றால் என்ன என்பதை யாரும் அறிந்திருக்கவில்லை. நீங்கள் மத்தியக் கிழக்கு நாடுகளுக்குப் பயணம் செய்து உங்கள் உயிரைப் பணயம் வைக்க விரும்புவது இஸ்லாமியர்களைக் கொல்லுவதற்கு அல்ல, மாறாக, ஓர் இஸ்லாமியக் குழுவினரை இன்னோர் இஸ்லாமியக் குழுவினரிடமிருந்து பாதுகாப்பதற்காக என்றால், உங்களுக்கு புத்தி தடுமாறிவிட்டது என்று முடிவு கட்டப்பட்டிருக்கும்.

வரலாறு இப்படித்தான் விரிகிறது. மக்கள் ஒரு அர்த்த வலையைப் பின்னுகின்றனர், அதில் அவர்கள் இதயபூர்வமான நம்பிக்கை கொள்ளுகின்றனர். ஆனால் விரைவில், அந்த வலை இழை இழையாகப் பிரிந்து உருக்குலைந்துவிடுகிறது. இப்போது நாம் அதைத் திரும்பிப் பார்க்கும்போது, மக்கள் எப்படி அந்த வலையை அவ்வளவு தூரம் நம்பினர் என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடிவதில்லை. சொர்க்கத்தை அடையும் நம்பிக்கையில் சிலுவைப் போரில் கலந்து கொண்டது முட்டாள்தனமானதாக இப்போது நமக்குத் தோன்றுகிறது. அமெரிக்காவுக்கும் ரஷ்யாவுக்கும் இடையே நடைபெற்றப் பனிப்போர் அதைவிட அதிக முட்டாள்தனமானதாகத் தெரிகிறது. முப்பது ஆண்டுகளுக்கு முன்பு ஒரு கம்யூனிசவாத சொர்க்கத்தில் தாங்கள் கொண்டிருந்த நம்பிக்கையால் மக்கள் எப்படி அணுவாயுதப் போருக்குக்கூடத் துணிந்தனர்? இதேபோலத்தான், ஜனநாயகத்தின்மீதும் மனித உரிமைகள்மீதும் நாம் கொண்டுள்ள நம்பிக்கை இன்றிலிருந்து நூறு ஆண்டுகளுக்குப் பிறகு நம்முடைய பிந்தைய தலைமுறையினருக்குப் புரியாத புதிராக இருக்கும்.

# கனவு நேரம்

நம்முடைய பொதுவான கற்பனையில் மட்டுமே நிலை கொண்டுள்ள சட்டங்கள், படைகள், பொருட்கள், இடங்கள் ஆகியவற்றை உள்ளடக்கிய ஒரு வலையைப் பின்னி அதற்கு ஒரு அர்த்தத்தை நம்மால் கொடுக்க முடிவதால்தான் சேப்பியன்ஸாகிய நாம் இவ்வுலகை ஆளுகிறோம். இந்த வலை, சிலுவைப் போர்களையும் சோசியலிசப் புரட்சிகளையும் மனித உரிமை இயக்கங்களையும் ஏற்பாடு செய்ய மனிதர்களுக்கு மட்டும் வழி வகுக்கிறது.

பிற விலங்குகளும் பல்வேறு விஷயங்களைக் கற்பனை செய்யக்கூடும். ஓர் எலியின்மீது திடீர்த் தாக்குதல் நடத்துவதற்காகப் பதுங்கியிருக்கின்ற ஒரு பூனையால் அந்த எலியைப் பார்க்க முடியாமல் இருக்கலாம், ஆனால் அந்த எலியின் வடிவத்தையும் சுவையையும்கூட அதனால் கற்பனை செய்ய முடியும். இருந்தாலும், நம்முடைய அறிவுக்கு எட்டியவரை, எலிகள் போன்ற, இவ்வுலகில் நிஜத்தில் இருக்கின்றவற்றைப் பற்றி மட்டுமே பூனைகளால் கற்பனை செய்ய முடிகிறது. தாம் பார்த்திராத, முகர்ந்திராத, அல்லது சுவைத்திராத எதையும் அவற்றால் கற்பனை செய்ய முடியாது. எடுத்துக்காட்டாக, அமெரிக்க டாலர், கூகுள் நிறுவனம், ஐரோப்பிய ஒன்றியம் போன்றவற்றை அவற்றால் கற்பனை செய்ய முடியாது. சேப்பியன்ஸால் மட்டுமே அத்தகைய யதார்த்தமற்ற யோசனைகளைக் கற்பனை செய்ய முடியும்.

அதனால்தான், பூனைகளும் பிற விலங்குகளும் தம்முடைய புறவயமான தளத்தில் மட்டுமே இயங்கி, யதார்த்தத்தை விவரிப்பதற்கு மட்டுமே தம்முடைய கருத்துப் பரிமாற்ற அமைப்புமுறையைப் பயன்படுத்திக் கொண்டிருக்கும்போது, சேப்பியன்ஸ் மட்டும் முற்றிலும் புதிய யதார்த்தங்களை உருவாக்குவதற்கு மொழியைப் பயன்படுத்திக் கொண்டிருக்கின்றனர். சேப்பியன்ஸ் கண்டுபிடித்த, பரஸ்பரம் பொதுவான அகவயமான யதார்த்தங்கள், கடந்த 70,000 ஆண்டுகளின்போது அதிக சக்தி வாய்ந்தவையாக ஆயின. எனவே, இன்றும் அவை இவ்வுலகில் ஆதிக்கம் செலுத்துகின்றன. சிம்பன்சிகளும் யானைகளும் அமேசான் மழைக்காடுகளும் ஆர்க்டிக் பனியாறுகளும் இருபத்தோராம் நூற்றாண்டு முழுவதும் பிழைத்திருக்குமா? நம்முடைய பொதுவான கற்பனையில் மட்டுமே இருக்கின்ற ஐரோப்பிய ஒன்றியம், உலக வங்கி போன்ற பரஸ்பரம் பொதுவான அகவயமான யதார்த்தங்களின் விருப்பங்களையும் தீர்மானங்களையும் சார்ந்தது அது.

எந்தவொரு விலங்காலும் நம்மை எதிர்த்து நிற்க முடியாது. அதற்குக் காரணம், அவற்றுக்கு ஓர் ஆன்மாவோ அல்லது ஒரு மனமோ இல்லை என்பது அல்ல. மாறாக, தேவையான கற்பனை அவற்றிடம் இல்லை என்பதுதான். சிங்கங்களால் ஓடவும் குதிக்கவும் பிறாண்டவும் கடிக்கவும் முடியும். ஆனால் அவற்றால் ஒரு வங்கிக் கணக்கைத் துவக்கவோ அல்லது ஒரு வழக்கைத் தொடரவோ முடியாது. இருபத்தோராம் நூற்றாண்டில், எவ்வாறு ஒரு வழக்கைத் தொடருவது என்பதை அறிந்துள்ள ஒரு வங்கியாளர், காட்டில் திரியும் ஒரு ஆக்ரோஷமான சிங்கத்தைவிட அதிக சக்தி வாய்ந்தவராக இருக்கிறார்.

பரஸ்பரம் பொதுவான அகவயமான யதார்த்தங்களை உருவாக்குவதற்கான திறன் எப்படி மனிதர்களைப் பிற விலங்குகளிடமிருந்து பிரிக்கிறதோ, அதேபோல, அது மனிதவியலை உயிரியலிடமிருந்து பிரிக்கிறது. கடவுளர், நாடுகள் போன்ற பரஸ்பரம் பொதுவான அகவயமான விஷயங்கள் உருவான விதத்தைப் புரிந்து கொள்ள வரலாற்றியலாளர்கள் முயற்சிக்கின்றனர். ஆனால் உயிரியலாளர்கள் இப்படிப்பட்ட விஷயங்களின் இருத்தலை அரிதாகவே அங்கீகரிக்கின்றனர். மரபுக் குறியீட்டைக் கண்டுபிடித்து, மூளையிலுள்ள ஒவ்வொரு நரம்பணுவுடனும் அதைத் தொடர்புபடுத்தினால் மனிதகுலத்தின் அனைத்து ரகசியங்களையும் நம்மால் அறிந்து கொள்ள முடியும் என்று சிலர் நம்புகின்றனர். மனிதர்களுக்கு ஆன்மா எதுவும் இல்லை என்றால், எண்ணங்களும் உணர்ச்சிகளும் உணர்வுகளும் வெறும் உயிர்வேதிப் படிமுறைத் தீர்வுகள்தான் என்றால், மனிதச் சமுதாயங்களின் விசித்திரங்கள் அனைத்திற்குமான காரணத்தை உயிரியலால் ஏன் கண்டுபிடிக்க முடியாது? இந்தக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, சிலுவைப் போர்கள் என்பவை பரிணாமரீதியான அழுத்தங்களால் உருவாக்கப்பட்ட எல்லைத் தகராறுகளே; புனித பூமியில் சலாதீனை எதிர்த்துச் சண்டையிடச் சென்ற ஆங்கிலேய வீரர்கள், இன்னொரு ஓநாய்க் கூட்டத்தின் எல்லையைத் தம்முடையதாக ஆக்கிக் கொள்ள முயற்சிக்கின்ற ஓநாய்களிடமிருந்து அவ்வளவு வேறுபட்டவர்கள் அல்லர்.

மனிதவியல், இதற்கு நேர்மாறாக, பரஸ்பரம் பொதுவான அகவயமான பொருட்களின் முக்கியத்துவத்தை வலியுறுத்துகிறது (அவற்றை நரம்பணுக்களாகவும் ஹார்மோன்களாகவும் குறுக்கிவிட முடியாது). வரலாற்றுரீதியாக சிந்திப்பது என்றால், நம்முடைய கற்பனைக் கதைகளின் கருப்பொருட்கள் உண்மையிலேயே சக்தி வாய்ந்தவை என்று சிந்திப்பதாக அர்த்தமாகும். தட்பவெப்பநிலை

மாற்றங்கள், மரபுச்சிதைவு மாற்றங்கள் போன்ற புறக்காரணிகளை வரலாற்றியலாளர்கள் உதாசீனப்படுத்துவதில்லை, ஆனால் மக்கள் கண்டுபிடித்து நம்புகின்ற கதைகளுக்கு அவர்கள் அதிக முக்கியத்துவம் கொடுக்கின்றனர், அவ்வளவுதான். வடகொரியாவும் தென்கொரியாவும் ஒன்றிலிருந்து மற்றொன்று முற்றிலும் வேறுபட்டுள்ளன. அதற்குக் காரணம், பியாங்யேங் நகர மக்களின் மரபணுக்கள் சியோல் நகரிலுள்ள மக்களுடைய மரபணுக்களிடமிருந்து வேறுபட்டிருக்கின்றன என்பதல்ல. வடக்கு அதிகக் குளிராகவும் அதிக மலைகளைக் கொண்டதாகவும் இருப்பதும் அதற்குக் காரணம் அல்ல. வடகொரியா மிகவும் வேறுபட்டக் கற்பனைக் கதைகளின் ஆதிக்கத்தில் இருக்கிறது என்பதுதான் அதற்குக் காரணம்.

நரம்பணுவியலில் ஏற்படக்கூடிய முக்கியமான கண்டுபிடிப்புகள் என்றேனும் ஒருநாள் கம்யூனிசவாதத்தையும் சிலுவைப் போர்களையும் முழுக்க முழுக்க உயிர்வேதி வார்த்தைகளில் விளக்க நமக்கு உதவக்கூடும். ஆனாலும் அந்த நாள் இன்னும் வெகுதூரத்தில் இருக்கிறது. இருபத்தோராம் நூற்றாண்டில் வரலாற்றுக்கும் உயிரியலுக்கும் இடையேயான எல்லை மறைவதற்கான சாத்தியம் அதிகமாக உள்ளது. அதற்குக் காரணம், வரலாற்று நிகழ்வுகளுக்கு உயிரியல்ரீதியான விளக்கங்களை நாம் கண்டுபிடிப்போம் என்பது அல்ல; மாறாக, கொள்கை சார்ந்த கற்பனைக் கதைகள் டிஎன்ஏ இழைகளை மாற்றி எழுதும் என்பதும், அரசியல் மற்றும் பொருளாதார நோக்கங்கள் தட்பவெப்பநிலையை மறுவடிவமைப்பு செய்யும் என்பதும், மலைகளையும் ஆறுகளையும் உள்ளடக்கிய புவியியல் இணையவெளிக்கு வழிவிடும் என்பதும்தான். மனிதக் கற்பனைக் கதைகள் மரபுக் குறியீடுகளாகவும் மின்னணுக் குறியீடுகளாகவும் மாற்றப்பட்டுக் கொண்டிருக்கின்ற இவ்வேளையில், பரஸ்பரம் பொதுவான அகவயமான யதார்த்தம் புறவயமான யதார்த்தத்தை விழுங்கிவிடும், உயிரியல் வரலாற்றுடன் ஒன்றுகலந்துவிடும். இதனால், இருபத்தோராம் நூற்றாண்டுக் கற்பனைக் கதைகள், இப்புவியின் மிக அதிக வலிமை வாய்ந்த ஆற்றலாக ஆகக்கூடும். இவற்றின் ஆற்றல் சிறுகோள்கள் மற்றும் இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறையின் ஆற்றல்களைவிட மிக அதிக சக்தி வாய்ந்ததாக இருக்கக்கூடும். எனவே, நாம் நம்முடைய எதிர்காலத்தைப் புரிந்து கொள்ள விரும்பினால், மரபணுத் தொகுதிகளைக் கண்டறிவதும் எண்களைக் கொண்டு கணக்கிடுவதும் மட்டும் போதாது. உலகிற்கு அர்த்தத்தைக் கொடுக்கின்ற கற்பனைக் கதைகளையும் நாம் புரிந்து கொண்டாக வேண்டும்.

பகுதி இரண்டு

# சேப்பியன்ஸ் இவ்வுலகிற்கு அர்த்தத்தைக் கொடுக்கின்றனர்

**மனிதர்கள் எத்தகைய உலகத்தை உருவாக்கினர்?**

**தாங்கள் இவ்வுலகத்தைக் கட்டுப்படுத்துவதாக மட்டுமல்லாமல், அதற்கு அர்த்தத்தையும் கொடுப்பதாக மனிதர்கள் எவ்வாறு உறுதியாக நம்பலாயினர்?**

**மனிதவாதம், அதாவது, மனிதகுல வழிபாடு, எப்படி அனைத்து மதங்களிலும் மிக முக்கியமானதாக ஆனது?**



படம் **20:** படைப்பாளி**:** ஜேக்சன் பாலக் ஓவியம் தீட்டும் காட்சி**.**

அத்தியாயம் 4

# கதைசொல்லிகள்

ஓநாய்கள், சிம்பன்சிகள் போன்ற விலங்குகள் ஓர் இருமை யதார்த்தத்தில் வாழுகின்றன. ஒரு புறம், மரங்கள், பாறைகள், ஆறுகள் போன்ற, தமக்கு வெளியே உள்ள புறவயமான பொருட்கள் குறித்து அவை பரிச்சயம் கொண்டுள்ளன. மறுபுறம், பயம், மகிழ்ச்சி, விருப்பம் போன்ற, தமக்குள் இருக்கின்ற அகவயமான அனுபவங்கள் பற்றியும் அவை அறிந்திருக்கின்றன. சேப்பியன்ஸ், இதற்கு நேரெதிராக, மூன்று நிலைகளைக் கொண்ட ஒரு யதார்த்தத்தில் வாழுகின்றனர். மரங்கள், ஆறுகள், பயங்கள், விருப்பங்கள் ஆகியவற்றோடு கூடவே, சேப்பியன்ஸின் உலகத்தில் பணம், கடவுளர், நாடுகள், பெருநிறுவனங்கள் ஆகியவற்றைப் பற்றிய கதைகளும் அடங்கியுள்ளன. வரலாறு மெல்ல மெல்ல விரிந்தபோது, கடவுளரும் நாடுகளும் பெருநிறுவனங்களும் ஏற்படுத்திய தாக்கங்கள் அதிகரித்தன. ஆனால், ஆறுகளும் பயங்களும் விருப்பங்களும் அதற்கு பலிகடாக்களாக ஆயின. உலகில் இன்றும் பல ஆறுகள் இருக்கின்றன, மக்கள் தங்களுடைய பயங்களாலும் விருப்பங்களாலும் தூண்டப்படுகின்றனர். ஆறுகளின் குறுக்கே அணைகளைக் கட்டி அவற்றின் சக்தியை அறுவடை செய்வதில் தொடங்கி, நம்முடைய கவலைகள் மற்றும் ஏக்கங்களுக்குக் குறுக்கே பார்வைக்குப் புலப்படாத அணைகளைக் கட்டி அந்தக் கவலைகள் மற்றும் ஏக்கங்களின் போக்கைத் தங்கள் விருப்பம்போல வளைப்பதுவரை பல காரியங்கள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. ஏசு கிறிஸ்து, பிரான்ஸ் நாடு, ஆப்பிள் நிறுவனம் போன்றவை அவ்வாறு செய்வதில் முன்னணியில் இருக்கின்றன.

இருபத்தோராம் நூற்றாண்டின் புதிய தொழில்நுட்பங்கள் இப்படிப்பட்டக் கற்பனைக் கதைகளை இன்னும் அதிக சக்தி வாய்ந்தவையாக ஆக்கவிருப்பதால், நாம் நம்முடைய எதிர்காலத்தைப் புரிந்து கொள்ளுவதற்கு, ஏசு கிறிஸ்து, பிரான்ஸ், ஆப்பிள் நிறுவனம் ஆகியவற்றைப் பற்றிய கதைகள் எப்படி இவ்வளவு சக்தியைப் பெற்றன என்பதை நாம் புரிந்து கொண்டாக வேண்டும். தாங்கள் வரலாற்றைப் படைப்பதாக மனிதர்கள் நினைக்கின்றனர், ஆனால் வரலாறு உண்மையில் கதைகளின் வலையைச் சுற்றியே நிகழுகிறது. மனிதர்களின் அடிப்படைத் திறன்கள் கற்காலத்திற்குப் பிறகு

அவ்வளவாக மாறவில்லை. ஆனால், கதைகளின் வலை மேன்மேலும் வலிமையடைந்து வந்துள்ளது. இது வரலாற்றைக் கற்காலத்திலிருந்து சிலிக்கான் காலத்திற்குத் தள்ளியுள்ளது.

இதெல்லாம் சுமார் 70,000 ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கியது. தங்களுடைய சொந்தக் கற்பனையில் மட்டுமே இடம்பெற்றிருந்த விஷயங்களைப் பற்றிப் பேசத் தொடங்குவதற்கு அறிவுப் புரட்சி சேப்பியன்ஸுக்கு சக்தியளித்திருந்த காலகட்டம் அது. அதைத் தொடர்ந்து வந்த 60,000 ஆண்டுகளில் சேப்பியன்ஸ் பல கற்பனையான வலைகளைப் பின்னினர், ஆனால் இந்த வலைகள் சிறியவையாகவும் உள்ளூர் தொடர்பானவையாகவும் இருந்தன. ஒரு குறிப்பிட்டப் பழங்குடி இனத்தவரால் வழிபடப்பட்ட, மரியாதைக்குரிய ஒரு மூதாதையரின் ஆவியை அவர்களுடைய அண்டை இனத்தவர் அறியவில்லை. ஒரு குறிப்பிட்டப் பகுதியில் விலைமதிப்புக் கொண்டவையாக இருந்த கடற்சிப்பிகள், நீங்கள் அங்கிருந்த மலைத்தொடரைத் தாண்டி அடுத்தப் பகுதிக்குச் சென்றுவிட்டால் மதிப்பற்றவையாக ஆயின. மூதாதையரின் ஆவிகள், உயர்ந்த விலைமதிப்புக் கொண்ட கடற்சிப்பிகள் போன்றவற்றைப் பற்றிய கதைகள் சேப்பியன்ஸுக்கு இன்னமும் ஒரு பெரிய அனுகூலத்தைக் கொடுத்தன. ஏனெனில், சேப்பியன்ஸ் நூற்றுக்கணக்கிலும் ஆயிரக்கணக்கிலும் திறம்பட ஒத்துழைப்பதற்கு அவை உதவின. நியாண்டர்தால்கள் மற்றும் சிம்பன்சிகளால் இந்த எண்ணிக்கையில் ஒருபோதும் ஒத்துழைக்க முடியாது. இருந்தாலும், சேப்பியன்ஸ் வெறும் வேட்டையாடிகளாக இருந்தவரை, உண்மையிலேயே மிகப் பெரிய அளவில் அவர்களால் ஒத்துழைக்க முடியவில்லை. ஏனெனில், ஒரு நகரத்திற்கோ அல்லது ஒரு ராஜ்ஜியத்திற்கோ வெறுமனே விலங்குகளையும் பறவைகளையும் வேட்டையாடியும், காய்கனிகள், கொட்டைகள், மற்றும் கிழங்குகளைச் சேகரித்தும் உணவளிப்பது சாத்தியமற்றதாக இருந்தது. அதன் விளைவாக, கற்காலத்து ஆவிகள், தேவதைகள், அரக்கர்கள் ஆகியோர் பலவீனமான அம்சங்களாக இருந்தனர்.

சுமார் 12,000 ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கிய வேளாண் புரட்சி, பரஸ்பரம் பொதுவான அகவயமான பிணையங்களை விரிவுபடுத்துவதற்கும் வலிமைப்படுத்துவதற்கும் தேவையான பௌதிக அடித்தளத்தை வழங்கியது. கூட்டமான நகரங்களில் வாழ்ந்த ஆயிரக்கணக்கான மக்களுக்கும் ராணுவத்தில் பணியாற்றிய ஆயிரக்கணக்கான வீரர்களுக்கும் உணவளிப்பதை விவசாயம் சாத்தியமாக்கியது. ஆனாலும், பரஸ்பரம் பொதுவான அகவயமான

பிணையங்கள் ஒரு புதிய தடையை எதிர்கொண்டன. கூட்டுக் கட்டுக்கதைகளைப் பராமரிப்பதற்கும் பெருந்திரளான மக்கள் ஒத்துழைக்கும்படி செய்வதற்கும், ஆரம்பகால விவசாயிகள் மனித மூளையின் தரவுச் செயலாக்கத் திறன்களைச் சார்ந்திருந்தனர். ஆனால் அத்திறன்கள் மிகவும் மட்டுப்படுத்தப்பட்டிருந்தன.

பெரிய கடவுளரைப் பற்றிய கதைகளை விவசாயிகள் நம்பினர். அவர்கள் தங்களுக்கு மிகவும் விருப்பமான கடவுளுக்குக் கோவில்களைக் கட்டினர், அவருக்கு மரியாதை செலுத்தும் விதமாகத் திருவிழாக்களை நடத்தினர், பலவற்றை அவருக்கு பலி கொடுத்தனர், நிலங்கள், நன்கொடைகள், மற்றும் பரிசுகளை அவர்கள் அவருக்குக் கொடுத்தனர். சுமார் 6,000 ஆண்டுகளுக்கு முன்பு, பண்டைய சுமேரின் முதல் நகரங்களில் கோவில்கள் வெறுமனே வழிபாட்டு மையங்களாக மட்டும் விளங்கவில்லை. மாறாக, மிக முக்கியமான அரசியல் மற்றும் பொருளாதார மையங்களாகவும் அவை விளங்கின. நவீனப் பெருநிறுவனங்களும் வணிகச்சின்னங்களும் செய்வது போன்ற ஒரு வேலையை சுமேரியக் கடவுளர் நிறைவேற்றினர். இன்று, பெருநிறுவனங்கள் என்பவை சொந்தமாக நிலங்களைக் கொண்டுள்ள, பணத்தைக் கடன் கொடுக்கின்ற, ஊழியர்களை நியமிக்கின்ற, பொருளாதார அமைப்புகளைத் தோற்றுவிக்கின்ற, கற்பனையான சட்டபூர்வமான விஷயங்களாக இருக்கின்றன. உருக், லேகாஷ், ஷுருப்பாக் ஆகிய பண்டைய நகரங்களில், வயல்களையும் அடிமைகளையும் சொந்தமாக வைத்திருக்கக்கூடிய, கடன் கொடுக்கவும் பெறவும்கூடிய, சம்பளம் கொடுக்கக்கூடிய, அணைகளையும் கால்வாய்களையும் கட்டக்கூடிய சட்டபூர்வமான அம்சங்களாகக் கடவுளர் செயல்பட்டனர்.

கடவுளர் ஒருபோதும் இறக்கவில்லை என்பதாலும், அவர்களுடைய சொத்துக்கள் குறித்துச் சண்டையிட்டுக் கொள்ளுவதற்கு அவர்களுக்குக் குழந்தைகள் யாரும் இல்லாததாலும், அவர்கள் மேன்மேலும் அதிகச் சொத்துக்களையும் அதிகாரத்தையும் கைவசப்படுத்தினர். அதிக எண்ணிக்கையிலான சுமேரியர்கள் கடவுளிடம் வேலை செய்தனர், அவர்களிடமிருந்து கடன் வாங்கினர், கடவுளருடைய நிலங்களை உழுதனர், அவர்களுக்கு வரிகளையும் நன்கொடைகளையும் செலுத்தினர். இன்று ஓர் இளைஞர் கூகுள் நிறுவனத்திலும் இன்னோர் இளைஞர் மைக்ரோசாஃப்ட் நிறுவனத்திலும் வேலை செய்வதுபோல, அன்று பண்டைய உருக்கில் ஒருவர் ‘என்கி’ என்ற ஆண்கடவுளிடமும் அவருடைய அண்டைவீட்டுக்காரர் ‘இனானா’ என்ற பெண்கடவுளிடமும் வேலை செய்தனர். இவ்விரு கடவுளருடைய

கோவில்களும் உருக் நகரில் விண்ணளவு உயர்ந்து நின்றன. அவர்களுடைய தெய்விக முத்திரைகள் கட்டடங்களிலும் பொருட்களிலும் ஆடைகளிலும் இடம்பெற்றன. நமக்கு எப்படி கூகுளும் மைக்ரோசாஃப்ட்டும் நிஜமானவையோ, அதேபோல சுமேரியர்களுக்கு என்கியும் இனானாவும் நிஜமானவர்களாக இருந்தனர். அக்கடவுளருக்கு முன்பு ஆதிக்கம் செலுத்திய கற்காலப் பேய்களுடனும் ஆவிகளுடனும் ஒப்பிடுகையில் சுமேரியக் கடவுளர் மிகவும் சக்தி வாய்ந்த அம்சங்களாகத் திகழ்ந்தனர்.

கடவுளர் உண்மையில் தங்களுடைய தொழில் சாம்ராஜ்ஜியங்களைத் தாங்களாக நடத்தவில்லை என்பது வெளிப்படை. ஏனெனில், அவர்கள் மனிதக் கற்பனையில் தவிர வேறு எங்கும் இருக்கவில்லை. அன்றாட நடவடிக்கைகளைக் கோவில் பூசாரிகள் கவனித்துக் கொண்டனர் (கூகுளும் மைக்ரோசாஃப்ட்டும் தம்முடைய விவகாரங்களைக் கையாளுவதற்கு ரத்தமும் சதையும் கொண்ட மனிதர்களை வேலைக்கு எடுப்பதைப்போல). ஆனாலும், கடவுளர் மேன்மேலும் அதிகமான சொத்துக்களையும் அதிகாரத்தையும் கைவசப்படுத்தியதால், அந்தப் பூசாரிகளால் சமாளிக்க முடியவில்லை. விண் கடவுளான என்கியையும் பூமிக் கடவுளான இனானாவையும் அவர்கள் பிரதிநுதப்படுத்தி இருந்திருக்கலாம், ஆனால் அவர்கள் தவறு செய்யக்கூடிய சாதாரண மனிதர்கள்தானே? எந்த வீடுகளும் தோட்டங்களும் வயல்களும் இனானாவுக்குச் சொந்தமானவை, அக்கடவுளின் ஊழியர்களுக்கு ஏற்கனவே சம்பளம் கொடுக்கப்பட்டிருந்ததா இல்லையா, அவருடைய வாடகைதாரர்களில் யார் இன்னும் தங்கள் வாடகையைச் செலுத்தியிருக்கவில்லை, எந்த வட்டிக்கு அவர் கடன் கொடுத்திருந்தார் போன்றவற்றை நினைவில் வைத்துக் கொள்ளுவது அந்தப் பூசாரிகளுக்குக் கடினமாக இருந்தது. வேளாண் புரட்சி ஏற்பட்டுப் பல ஆண்டுகளுக்குப் பிறகும்கூட உலகின் பிற இடங்களைப்போலவே சுமேரிலும் மனித ஒத்துழைப்புப் பிணையங்கள் குறிப்பிடத்தக்க அளவு விரிவடையாமல் போனதற்கான முக்கியக் காரணங்களில் இதுவும் ஒன்று. அங்கு பெரிய ராஜ்ஜியங்களோ, விரிவான வர்த்தகப் பிணையங்களோ, அல்லது உலகளாவிய மதங்களோ இருக்கவில்லை.

சுமார் 5,000 ஆண்டுகளுக்கு முன்பு சுமேரியர்கள் எழுத்துமுறையையும் பணத்தையும் கண்டுபிடித்தபோது இந்த முட்டுக்கட்டை ஒருவழியாக அகற்றப்பட்டது. ஒரே நேரத்தில் ஒரே இடத்தில் ஒரே பெற்றோருக்குப் பிறந்த இந்த இரட்டைக் குழந்தைகள் மனித மூளையின் தரவுச் செயலாக்கக் குறைபாடுகளைக் களைந்தன. ஆயிரக்கணக்கான மக்களிடமிருந்து வரிகளை வசூலிக்கத்

தொடங்குவதையும், சிக்கலான நிர்வாகக் கட்டுப்பாடுகளை உருவாக்குவதையும், பரந்த ராஜ்ஜியங்களைத் தோற்றுவிப்பதையும் எழுத்துமுறையும் பணமும் சாத்தியமாக்கின. சுமேரில் இந்த ராஜ்ஜியங்கள் கடவுளரின் பெயரால் மனிதப் பூசாரி - அரசர்களால் நிர்வகிக்கப்பட்டன. அருகிலிருந்த நைல் பள்ளத்தாக்கில் மக்கள் இன்னும் ஒரு படி மேலே போய், பூசாரி - அரசரைக் கடவுளோடு இணைத்து, வாழும் தெய்வம் ஒன்றை - ஃபாரோ மன்னரை - உருவாக்கினர்.

ஃபாரோவைக் கடவுளுடைய பிரதிநிதியாகப் பார்ப்பதற்கு பதிலாக அவரை ஓர் உண்மையான கடவுளாக எகிப்தியர்கள் கருதினர். ஒட்டுமொத்த எகிப்தும் அந்தக் கடவுளுக்குச் சொந்தமாயிற்று. மக்கள் எல்லோரும் அவருடைய கட்டளைகளுக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டியிருந்தது, அவர் விதித்த வரிகளைச் செலுத்த வேண்டியிருந்தது. சுமேரியக் கோவில்களில் இருந்ததைப்போலவே, ஃபாரோக்கள் ஆண்ட எகிப்திலும் கடவுள் தன்னுடைய தொழில் சாம்ராஜ்ஜியத்தைத் தானாக நிர்வகிக்கவில்லை. சில ஃபாரோக்கள் ஓர் இரும்புக் கை கொண்டு ஆட்சி செய்தனர். மற்றவர்கள், கேளிக்கை விருந்துகளிலும் கொண்டாட்டங்களிலும் தங்களுடைய நாட்களைக் கழித்தனர். ஆனால் இவ்விரு வகையான ஆட்சியாளர்களுடைய ஆட்சியிலும், கற்றறிந்த ஆயிரக்கணக்கான அதிகாரிகள்தான் எகிப்தின் நிர்வாகப் பணிகளை கவனித்துக் கொண்டனர். பிற எந்தவொரு மனிதனையும்போலவே, ஃபாரோவுக்கும் உயிரியல்ரீதியான ஓர் உடல் இருந்தது, அதற்கு உயிரியல்ரீதியான தேவைகளும் விருப்பங்களும் உணர்ச்சிகளும் இருந்தன. ஆனால் அந்த உயிரியல்ரீதியான ஃபாரோவுக்கு அவ்வளவு முக்கியத்துவம் இருக்கவில்லை. நைல் பள்ளத்தாக்கின் உண்மையான ஆட்சியாளர் ஒரு கற்பனையான ஃபாரோதான். எகிப்தியர்கள் பரஸ்பரம் ஒருவருக்கொருவர் கூறிக் கொண்ட லட்சக்கணக்கான கதைகளில் மட்டுமே அவர் இடம்பெற்றார்.

எகிப்தின் தலைநகரமாக விளங்கிய மெம்ஃபிஸ் நகரில் இருந்தபடி, அந்த ஃபாரோ, தன் அரண்மனையில் திராட்சைகளைச் சாப்பிட்டுக் கொண்டும், தன்னுடைய மனைவியரோடும் அந்தப்புரப் பெண்களோடும் சரசமாடிக் கொண்டும் இருந்தபோது, அவருடைய அதிகாரிகள் மத்தியத் தரைக்கடல் கரையோரத்திலிருந்து நூபியன் பாலைவனம்வரை அவருடைய ராஜ்ஜியம் நெடுகிலும் பயணித்தனர். ஒவ்வொரு கிராமமும் செலுத்த வேண்டியிருந்த வரிகளை அவர்கள் கணக்கிட்டு, நீளமான பப்பைரஸ் சுருள்களில் அவற்றைப் பதிவு செய்து, அச்சுருள்களை மெம்ஃபிஸ் நகருக்கு அனுப்பி வைத்தனர்.

அரசப் படைக்கு வீரர்களை நியமிக்கும்படியோ அல்லது ஏதோ கட்டுமானப் பணித்திட்டத்திற்காகக் கூலியாட்களை ஏற்பாடு செய்யும்படியோ எழுத்துபூர்வமான ஓர் உத்தரவு மெம்ஃபிஸ் நகரிலிருந்து வந்தபோது, தேவையான ஆட்களை அந்த அதிகாரிகள் ஒன்றுதிரட்டினர். அரசாங்கத்தின் தானியக்களஞ்சியங்களில் எவ்வளவு கோதுமை இருந்தது, கால்வாய்களைத் தூய்மைப்படுத்துவதற்கு எத்தனை நாட்கள் தேவைப்படும், ஃபாரோவின் அந்தப்புர அழகிகள் உண்டு மகிழுவதற்காக மெம்ஃபிஸ் நகருக்கு எத்தனை வாத்துக்களும் பன்றிகளும் அனுப்பி வைக்கப்பட வேண்டும் போன்றவற்றை அந்த அதிகாரிகள் கணக்கிட்டனர். வாழும் தெய்வமான அந்த ஃபாரோ இறந்த பிறகு அவருடைய உடல் பதப்படுத்தப்பட்டு, மிகவும் ஆடம்பரமான ஓர் இறுதிச் சடங்கு நடத்தப்பட்டு, மெம்ஃபிஸ் நகருக்கு வெளியே இருந்த அரசப் பிரமிடு தொகுதிக்கு அந்த உடல் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டபோதும், அதிகாரிகள் தொடர்ந்து செயல்பட்டனர். அவர்கள் வரிகளை வசூலித்தனர், பப்பைரஸ் சுருள்களில் எழுதினர், கட்டளைகளை அனுப்பினர், மொத்தத்தில் ஃபாரோவின் ஆட்சி ஒழுங்காக நடைபெற்றதை அவர்கள் உறுதி செய்தனர்.

சுமேரியக் கடவுளர் இன்றைய நிறுவனங்களின் வணிகச்சின்னங்களை நமக்கு நினைவுபடுத்துகின்றனர் என்றால், வாழும் கடவுளராக விளங்கிய ஃபாரோக்களை, எல்விஸ் பிரெஸ்லி, மடோனா, ஜஸ்டின் பீபர் போன்ற நவீனத் தனிப்பட்ட வணிகச்சின்னங்களோடு நாம் ஒப்பிடலாம். எல்விஸுக்கும் உயிரியல்ரீதியான ஓர் உடல் இருந்தது, அவருக்கும் உயிரியல்ரீதியான தேவைகளும் விருப்பங்களும் உணர்ச்சிகளும் இருந்தன. அவர் மற்ற எவரொருவரையும்போலவே சாப்பிடவும் மதுவருந்தவும் தூங்கவும் செய்தார். ஆனால் அவர் வெறுமனே ஓர் உயிரியல்ரீதியான உடல் மட்டுமல்ல, மாறாக, அதைவிட மேலான ஒன்றாக அவர் இருந்தார். ஃபாரோவைப்போலவே, எல்விஸ் ஒரு கதையாகவும், ஒரு வெற்றுப் புனைவாகவும், ஒரு வணிகச்சின்னமாகவும் விளங்கினார். அவருடைய விஷயத்தில் அவருடைய உயிரியல்ரீதியான உடலைவிட அவருடைய வணிகச்சின்னம் அதிக முக்கியமானதாக இருந்தது. எல்விஸின் வாழ்நாளின்போது அவருடைய வணிகச்சின்னம் இசைத்தட்டுகளையும் நுழைவுச்சீட்டுகளையும் உருவப்படங்களையும் உரிமைகளையும் விற்பனை செய்ததன் மூலம் கோடிக்கணக்கான டாலர்கள் பணத்தை ஈட்டியது. ஆனால், செய்யப்பட வேண்டியிருந்த வேலையில் ஒரு சிறு சதவீதத்தை மட்டுமே எல்விஸ் செய்தார். அந்த வேலையின்

பெரும்பகுதியை அவருடைய முகவர்கள், வழக்கறிஞர்கள், தயாரிப்பாளர்கள், செயலாளர்கள் ஆகியோர் செய்து முடித்தனர். இதனால், உயிரியல்ரீதியான எல்விஸ் இறந்தபோது, அவருடைய வணிகச்சின்னத்தைப் பொருத்தவரை, அது தொடர்ந்து விற்பனையாகிக் கொண்டிருந்தது. இன்றுகூட அவருடைய ரசிகர்கள் அவருடைய உருவப்படங்களையும் இசைத்தட்டுகளையும் வாங்குகின்றனர்; வானொலி நிலையங்கள் இன்னும் அவருக்கு ராயல்டி செலுத்திக் கொண்டிருக்கின்றன; டென்னிஸி மாநிலத்தின் மெம்ஃபிஸ் நகரில் அமைந்துள்ள கிரேஸ்லேன்ட் மாளிகைக்கு ஐந்து லட்சத்திற்கும் அதிகமான மக்கள் ஒவ்வோர் ஆண்டும் பயணம் மேற்கொள்ளுகின்றனர். பிரெஸ்லியின் கல்லறை அமைந்துள்ள இடம் அது.



படம் **21:** வணிகச்சின்னங்கள் ஒரு நவீனக் கண்டுபிடிப்பு அல்ல. எல்விஸ் பிரெஸ்லியைப்போலவே, ஃபாரோவும் ஒரு சாதாரணமான உயிரினமாக இருப்பதற்கு பதிலாக ஒரு வணிகச்சின்னமாகத் திகழ்ந்தார். அவரைப் பின்பற்றிய கோடிக்கணக்கான மக்களுக்கு அவருடைய உருவச்சிலை அவருடைய உண்மையான உடலைவிட அதிக அர்த்தம் வாய்ந்ததாக இருந்தது. அவர் இறந்து நீண்டகாலம் ஆன பிறகும்கூட அவர்கள் அவரைத் தொடர்ந்து வழிபட்டனர்.

எழுத்துமுறை கண்டுபிடிக்கப்படுவதற்கு முந்தைய காலகட்டங்களில், கதைகள் வெறுமனே மனித மூளையின் மட்டுப்படுத்தப்பட்டத் திறனுக்கு உட்பட்டவையாகவே இருந்தன. மக்களால் நினைவில் வைத்துக் கொள்ள முடியாத அளவுக்கு அதிகச் சிக்கலான கதைகளை யாரும் உருவாக்கவில்லை. ஆனால் எழுத்துமுறை

கண்டுபிடிக்கப்பட்டபோது, திடீரென்று, நீளமான மற்றும் அதிகச் சிக்கலான கதைகளை உருவாக்க முடிந்தது. அவை மனித மூளைகளில் சேமித்து வைக்கப்படுவதற்கு பதிலாக, பப்பைரஸ் சுருள்களிலும் களிமண் பலகைகளிலும் எழுதி வைக்கப்பட்டன. பண்டைய எகிப்தியர் யாரும் ஃபாரோக்களின் அனைத்து நிலங்களையும் வரிகளையும் நன்கொடைகளையும் நினைவில் வைத்திருக்கவில்லை; தன்னுடைய பெயரில் செய்யப்பட்ட ஒப்பந்தங்கள் அனைத்தையும் எல்விஸ் பிரெஸ்லி ஒருபோதும் படிக்கவில்லை; இவ்வுலகில் வாழும் ஒருவருக்குக்கூட ஐரோப்பிய ஒன்றியத்தின் அனைத்துச் சட்டதிட்டங்களும் விதிமுறைகளும் தெரியாது; எந்தவொரு வங்கியாளரும் அல்லது எந்தவொரு சிஐஏ உறுப்பினரும் உலகிலுள்ள ஒவ்வொரு டாலர் பணத்தின் மூலத்தையும் கண்டுபிடிக்க முயற்சிப்பதில்லை. ஆனாலும் இந்த விபரங்கள் அனைத்தும் எங்கோ எழுதி வைக்கப்பட்டுள்ளன. சம்பந்தப்பட்ட ஆவணங்களை ஒழுங்கமைத்துச் சேகரித்து வைக்கும் விதம்தான் ஃபாரோ, எல்விஸ், ஐரோப்பிய ஒன்றியம் மற்றும் டாலரின் அடையாளத்தையும் சக்தியையும் வரையறுக்கின்றன.

இவ்வாறு, ஒட்டுமொத்தச் சமுதாயங்களையும் ஒரு படிமுறைத் தீர்வின் பாணியில் ஒழுங்கமைப்பதற்கு எழுத்துமுறை மனிதர்களுக்கு உதவியுள்ளது. உணர்ச்சிகள் என்றால் என்ன என்பதையும், மூளைகள் எப்படி இயங்குகின்றன என்பதையும் நாம் புரிந்து கொள்ள முயற்சித்தபோது ‘படிமுறைத் தீர்வு’ என்ற சொற்றொடரை நாம் எதிர்கொண்டோம். கணக்குப் போடுவதற்கும், பிரச்சனைகளுக்குத் தீர்வு காணுவதற்கும், தீர்மானங்களை எட்டுவதற்கும் பயன்படுத்தப்படக்கூடிய, ஒரு குறிப்பிட்ட வரிசைக்கிரமத்தில் மேற்கொள்ளப்பட வேண்டிய பல நடவடிக்கைகளின் தொகுப்பு அது என்று நாம் அதை வரையறுத்தோம். கல்வியறிவு இல்லாத சமுதாயங்களில், மக்கள் எல்லாக் கணக்குகளையும் தீர்மானங்களையும் தங்கள் தலைகளைக் கொண்டு மேற்கொள்ளுகின்றனர். கற்றறிந்த சமுதாயங்களில், மக்கள் பல பிணையங்களாக ஒழுங்கமைக்கப்பட்டுள்ளனர். அவ்விதத்தில், ஒவ்வொரு நபரும் ஒரு பெரிய படிமுறைத் தீர்வில் ஒரு சிறிய ‘நடவடிக்கையாக’ ஆகிறார். இந்தப் படிமுறைத் தீர்வு ஒட்டுமொத்தமாகச் சேர்ந்துதான் முக்கியமான தீர்மானங்களை மேற்கொள்ளுகிறது. அதிகாரத்துவத்தின் சாரம் இதுதான்.

எடுத்துக்காட்டாக, ஒரு நவீன மருத்துவமனையைப் பற்றி நினைத்துப் பாருங்கள். நீங்கள் அந்த மருத்துவமனைக்குள்

நுழைந்தவுடன், அதன் வரவேற்பாளர், முன்கூட்டியே தயாரிக்கப்பட்ட சில கேள்விகளை உள்ளடக்கிய ஒரு படிவத்தை உங்களிடம் கொடுத்து, அதை நிரப்பும்படி உங்களிடம் கூறுகிறார். உங்களுடைய விடைகள் ஒரு செவிலியிடம் அனுப்பி வைக்கப்படுகின்றன. அவர் அதை அந்த மருத்துவமனையின் சட்டதிட்டங்களோடு ஒப்பிட்டுவிட்டு, உங்களுக்கு எத்தகைய பரிசோதனைகள் மேற்கொள்ளப்பட வேண்டும் என்பதைத் தீர்மானிக்கிறார். பிறகு, அவர் உங்களுடைய ரத்த அழுத்தத்தையும் இதயத் துடிப்பையும் அளவிடுகிறார். அதைத் தொடர்ந்து, அவர் உங்களிடமிருந்து சிறிதளவு ரத்தத்தையும் எடுக்கிறார். அன்று அச்சமயத்தில் பணியில் இருக்கும் மருத்துவர் இந்தத் துவக்கப் பரிசோதனை முடிவுகளை ஆய்வு செய்துவிட்டு, மருத்துவமனையின் சட்டதிட்டங்களின்படி அங்கு எந்தக் கூடத்தில் உங்களை அனுமதிக்க வேண்டும் என்று தீர்மானிக்கிறார். அந்தக் கூடத்தில், தடிமனான மருத்துவக் கையேடுகளில் குறிப்பிடப்பட்டுள்ளபடி, எக்ஸ்-ரே, எம்ஆர்ஐ ஸ்கேன் போன்ற இன்னும் சில பரிசோதனைகளுக்கு நீங்கள் உட்படுத்தப்படுகிறீர்கள். பிறகு, சிறப்பு மருத்துவர்கள் பிரபலமான புள்ளியியல் விபரங்களின் அடிப்படையில் அந்தப் பரிசோதனை முடிவுகளை ஆய்வு செய்துவிட்டு, உங்களுக்கு எந்த மருந்துகளைக் கொடுக்க வேண்டும் அல்லது இன்னும் வேறு என்னென்ன பரிசோதனைகளை மேற்கொள்ள வேண்டும் என்று தீர்மானிக்கின்றனர்.

இந்தப் படிமுறைத் தீர்வு அமைப்புமுறையில் உள்ள அனுகூலம் என்னவென்றால், ஒரு குறிப்பிட்ட நேரத்தில் அந்த மருத்துவமனையில் யார் வரவேற்பாளராக இருக்கிறார், யார் செவிலியாக இருக்கிறார், பணியில் அப்போது எந்த மருத்துவர் இருக்கிறார் போன்றவை ஒரு பொருட்டே அல்ல. அவர்களுடைய ஆளுமை வகை, அவர்களுடைய அரசியல் அபிப்பிராயங்கள், அவர்களுடைய அப்போதைய மனநிலை ஆகியவையும் இங்கு முக்கியமற்றவையாக ஆகின்றன. அந்த மருத்துவமனையின் சட்டதிட்டங்களையும் விதிமுறைகளையும் அவர்கள் பின்பற்றும்வரை, அவர்கள் உங்களை குணப்படுத்திவிடுவதற்கான நல்ல வாய்ப்பு இருக்கிறது. படிமுறைத் தீர்வுக் கொள்கைப்படி, உங்களுடைய தலைவிதி 'அமைப்புமுறையின்' கையில் உள்ளதே அன்றி, ஒரு குறிப்பிட்டப் பதவியில் இருக்கின்ற, ரத்தமும் சதையும் கொண்ட ஒரு சாதாரண மனிதனுடைய கைகளில் அல்ல.

மருத்துவமனைகளின் விஷயத்தில் எது உண்மையோ, ராணுவப் படைகள், சிறைச்சாலைகள், பள்ளிக்கூடங்கள், பெருநிறுவனங்கள்

மற்றும் பண்டைய பேரரசுகளின் விஷயத்திலும் அது உண்மையாக இருக்கிறது. தொழில்நுட்பரீதியாகப் பார்க்கும்போது, ஒரு நவீன மருத்துவமனையைவிடப் பண்டைய எகிப்து அவ்வளவு உயர்நயம் கொண்டது அல்ல என்றாலும்கூட, படிமுறைத் தீர்வுக் கொள்கை ஒரே மாதிரிதான் இருந்தது. பண்டைய எகிப்திலும், பெரும்பாலான தீர்மானங்கள் அறிவார்ந்த ஒரே ஒரு நபரால் மேற்கொள்ளப்படவில்லை; மாறாக, பப்பைரஸ் சுருள்கள் மற்றும் கல்வெட்டுப் பதிவுகள் மூலமாக ஒன்றிணைக்கப்பட்டிருந்த அதிகாரிகள் அடங்கிய ஒரு பிணையத்தால்தான் தீர்மானங்கள் மேற்கொள்ளப்பட்டன. வாழும் தெய்வமாகக் கருதப்பட்ட ஃபாரோவின் பெயரில் செயல்பட்ட அப்பிணையம், மனிதச் சமுதாயத்தின் கட்டமைப்பை மாற்றியமைத்ததோடு, இயற்கையுலகையும் மாற்றியமைத்தது. எடுத்துக்காட்டாக, கி.மு. 1878ம் ஆண்டிலிருந்து கி.மு. 1814ம் ஆண்டுவரை எகிப்தை ஆண்ட ஃபாரோக்களான மூன்றாம் செனஸ்ரெட்டும் அவருடைய மகனான மூன்றாம் அமீனம்ஹட்டும் நைல் நதியை ஃபேயும் பள்ளத்தாக்கின் சதுப்பு நிலங்களோடு இணைத்து ஒரு மாபெரும் கால்வாயை வெட்டினர். அணைகள், நீர்த்தேக்கங்கள், துணைக் கால்வாய்கள் ஆகியவற்றை உள்ளடக்கிய கடுஞ்சிக்கலான ஓர் அமைப்புமுறை, நைல் நதியின் நீரை ஃபேயும் பள்ளத்தாக்கை நோக்கித் திருப்பிவிட்டது. இதன் மூலம், 5,000 கோடி கியூபிக் மீட்டர் நீரை உள்ளடக்கிய ஒரு மாபெரும் செயற்கை ஏரி உருவாக்கப்பட்டது. இதனோடு ஒப்பிடுகையில், அமெரிக்காவில் ஹூவர் அணையைக் கொண்டு மனிதனால் கட்டப்பட்ட மிகப் பெரிய நீர்த்தேக்கமான மீடு ஏரியின் கொள்ளளவு அதிகபட்சம் 3,500 கோடி கியூபிக் மீட்டர் மட்டுமே.

ஃபேயும் பொறியியல் பணித்திட்டம் நைல் நதியை முறைப்படுத்துவதற்கும், கடுமையான வெள்ளங்களைத் தடுப்பதற்கும், வறட்சிக் காலங்களில் மக்களுக்கு நீர் நிவாரணம் வழங்குவதற்குமான சக்தியை ஃபாரோவுக்குக் கொடுத்தது. அதோடு, வெற்றுப் பாலைவனத்தால் சூழப்பட்ட, முதலைகள் நிரம்பிய ஒரு சதுப்பு நிலமாக இருந்த ஃபேயும் பள்ளத்தாக்கை எகிப்தின் தானியக்களஞ்சியமாக அது மாற்றியது. இப்புதிய செயற்கை ஏரியின் கரையில் ஷெடெட் என்ற ஒரு புதிய நகரம் அமைக்கப்பட்டது. கிரேக்கர்கள் அதை ‘முதலைகளின் நகரம்’ என்று அழைத்தனர். முதலைக் கடவுளான ஸோபெக்கின் கோவில் அந்நகரின்மீது ஆதிக்கம் செலுத்தியது. ஸோபெக்கை மக்கள் ஃபாரோக்களுடன் அடையாளப்படுத்தினர். (நவீனச் சிலைகள் சில சமயங்களில் ஒரு முதலைத் தலையுடன்கூடிய ஃபாரோக்களைக்

காட்டுகின்றன). அக்கோவிலில் ‘பெட்ஸுசோஸ்’ என்ற ஒரு புனித முதலை வளர்க்கப்பட்டது. ஸோபெக்கின் மறுபிறப்பாக அது கருதப்பட்டது. வாழும் தெய்வமான ஃபாரோவைப்போலவே, வாழும் தெய்வமான பெட்ஸுசோஸையும் பூசாரிகள் சிறப்பாகப் பேணிப் பராமரித்தனர், அதற்கு ஆடம்பரமான உணவை வழங்கினர், அதற்கு விளையாட்டுப் பொருட்களைக்கூடக் கொடுத்தனர். தங்க மேலங்கிகளாலும் நவரத்தினங்கள் பதிக்கப்பட்டக் கிரீடங்களாலும் அவர்கள் அதை அலங்கரித்தனர். என்ன இருந்தாலும், பெட்ஸுசோஸ் அந்தப் பூசாரிகளின் வணிகச்சின்னமல்லவா? அவர்களுடைய அதிகாரமும் பிழைப்பும் அதைச் சார்ந்தே இருந்தது. பெட்ஸுசோஸ் இறந்தபோது, அதன் இடத்தை நிரப்புவதற்கு உடனடியாக இன்னொரு புதிய முதலை தேர்ந்தெடுக்கப்பட்டது. இறந்து போன முதலை கவனமாகப் பதப்படுத்தப்பட்டுப் பாதுகாப்பாக வைக்கப்பட்டது.

மூன்றாம் செனஸ்ரெட் மற்றும் மூன்றாம் அமீனம்ஹட்டின் காலகட்டங்களில், எகிப்தியர்களிடம் புல்டோசர் இயந்திரங்களோ அல்லது டைனமைட்டுகளோ இருக்கவில்லை. அவர்களிடம் இரும்புக் கருவிகளோ, வேலைகளைச் செய்யக்கூடிய குதிரைகளோ, சக்கரங்களோகூட இருக்கவில்லை (கி.மு. 1500ம் ஆண்டுவரை எகிப்தில் சக்கரங்கள் அவ்வளவு பரவலாகப் புழக்கத்திற்குள் வரவில்லை). வெண்கலக் கருவிகள் மிக உயர்ந்த தொழில்நுட்பமாகக் கருதப்பட்டன. ஆனால் அவை மிக அதிக விலை கொண்டவையாகவும் அரிதானவையாகவும் இருந்தன. எனவே, கற்கள் மற்றும் மரத்தால் ஆன கருவிகளின் உதவியுடன் எகிப்தியர்கள் தங்கள் தசை வலிமையைப் பயன்படுத்திப் பெரும்பாலான கட்டுமானப் பணிகளை மேற்கொண்டனர். பண்டைய எகிப்தின் மாபெரும் கட்டுமானப் பணித்திட்டங்களான அணைகள், நீர்த்தேக்கங்கள், பிரமிடுகள் ஆகியவை வேற்றுக் கிரகத்தினரைக் கொண்டு கட்டப்பட்டதாகப் பலர் வாதிடுகின்றனர்.

ஆனால் உண்மை முற்றிலும் வித்தியாசமானது. ஃபேயும் ஏரியையும் பிரமிடுகளையும் எகிப்தியர்கள் வேற்றுக் கிரகத்தினரைக் கொண்டு உருவாக்கவில்லை, மாறாக, அவர்கள் தங்களுடைய நிர்வாகத் திறமையைக் கொண்டே அவற்றைக் கட்டியெழுப்பினர். கற்றறிந்த ஆயிரக்கணக்கான அதிகாரிகளை நம்பி ஃபாரோ மன்னர் பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்களை நியமித்தார், பலப்பல ஆண்டுகள் அவர்களைப் பராமரிக்கப் போதுமான உணவுக்கும் ஏற்பாடு செய்தார். ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் பலப்பல ஆண்டுகளாகத் தொடர்ந்து ஒத்துழைக்கும்போது, வெறும் கற்கருவிகளைக் கொண்டே

ஒரு செயற்கையான ஏரியையோ அல்லது ஒரு பிரமிடையோ உருவாக்கிவிட முடியும்.

ஃபாரோ இப்பணித்திட்டங்களில் உதவுவதற்குத் தன் சுட்டுவிரலைக்கூட உயர்த்தவில்லை. அவர் நடையாய் நடந்து வரிகளை வசூலிக்கவில்லை, தானாகத் திட்டங்கள் எதையும் உருவாக்கவில்லை, நிச்சயமாக ஒரு மண்வெட்டியைக்கூடத் தூக்கவில்லை. ஆனால், வாழும் தெய்வமான ஃபாரோவிடமும் விண்ணுலகிலுள்ள அவருடைய காவல் தெய்வமான ஸோபெக்கிடமும் பிரார்த்தனை செய்வது மட்டுமே கடும் வெள்ளங்களிலிருந்தும் வறட்சிகளிலிருந்தும் நைல் பள்ளத்தாக்கைப் பாதுகாக்கும் என்று எகிப்தியர்கள் நம்பினர். அவர்களுடைய நினைப்பு சரிதான். கற்பனையான விஷயங்களான ஃபாரோவும் ஸோபெக்கும் நைல் நதியின் நீரளவை உயர்த்தவோ அல்லது குறைக்கவோ எதுவும் செய்யவில்லை என்றபோதிலும், அவர்கள் இருவர்மீதும் கோடிக்கணக்கான மக்கள் நம்பிக்கை வைத்து, அணைகளைக் கட்டுவதிலும் கால்வாய்களைத் தோண்டுவதிலும் முழுமையாக ஒத்துழைத்ததால், வெள்ளங்களும் வறட்சிகளும் அரிதாகவே ஏற்பட்டன. சுமேரியக் கடவுளரோடும் கற்கால ஆவிகளோடும் ஒப்பிடுகையில், பண்டைய எகிப்தின் கடவுளர் உண்மையிலேயே அதிக சக்திவாய்ந்தவர்களாக இருந்தனர். அவர்கள் நகரங்களைத் தோற்றுவித்தனர், ராணுவப் படைகளைத் திரட்டினர், லட்சக்கணக்கான மனிதர்கள், பசுக்கள், மற்றும் முதலைகளின் வாழ்க்கையைக் கட்டுப்படுத்தினர்.

கற்பனையான விஷயங்கள் இவற்றைச் செய்ததாகக் கூறுவது கேட்பதற்கு விநோதமானதாக இருக்கலாம். ஆனால், இன்றைய காலகட்டத்தில், முதல் அணுகுண்டை அமெரிக்கா தயாரித்தது என்றும், சீனா 'மூன்று ஆழ்பள்ளத்தாக்கு அணை'யைக் கட்டியது என்றும், கூகுள் ஒரு தானியங்கிக் காரை உருவாக்கிக் கொண்டிருக்கிறது என்றும் நாம் சர்வசாதாரணமாகக் கூறுகிறோம். அப்படியானால், ஃபாரோ ஒரு நீர்த்தேக்கத்தைக் கட்டினார் என்றும் ஸோபெக் ஒரு கால்வாயைத் தோண்டினார் என்றும் நாம் ஏன் கூறக்கூடாது?

## காகிதத்தில் வாழ்க்கை

லட்சக்கணக்கான மக்களை நிர்வகித்து, ஆறுகள், சதுப்பு நிலங்கள், முதலைகள் ஆகியவற்றின் யதார்த்தத்தை மாற்றியமைத்த, சக்திவாய்ந்த கற்பனையான விஷயங்கள் தோன்றுவதை எழுத்துமுறை

சாத்தியமாக்கியது. அதே நேரத்தில், அப்படிப்பட்டக் கற்பனையான விஷயங்கள் உண்மையிலேயே இருந்ததாக மனிதர்கள் நம்புவதையும் அது சுலபமாக்கியது. ஏனெனில், அருவமான குறியீடுகளின் ஊடாக யதார்த்தத்தை அனுபவிப்பதை அது பழக்கப்படுத்தியது.

வேட்டையாடிகள் மரங்கள்மீது ஏறுவதிலும், காளான்களைத் தேடுவதிலும், காட்டுப் பன்றிகளையும் முயல்களையும் துரத்திச் செல்லுவதிலும் தங்கள் நாட்களைச் செலவிட்டனர். மரங்கள், காளான்கள், காட்டுப் பன்றிகள், முயல்கள் ஆகியவைதான் அவர்களுடைய அன்றாட யதார்த்தமாக இருந்தன. விவசாயிகள் நாள் முழுவதும் வயல்களில் வேலை செய்தனர். உழுதல், அறுவடை செய்தல், மக்காச்சோளத்தை அரைத்தல், பண்ணை விலங்குகளைப் பராமரித்தல் போன்ற வேலைகளை அவர்கள் செய்தனர். வெற்றுப் பாதங்களுக்குக் கீழே இருந்த மண்ணையும், ஏர்களை இழுத்துச் சென்ற எருதுகளின் வாசனையையும், அடுப்பிலிருந்து சூடாக வெளிவந்த ரொட்டியின் சுவையையும் உணருவதுதான் அவர்களுடைய தினசரி யதார்த்தமாக இருந்தது. இதற்கு நேர்மாறாக, பண்டைய எகிப்தில், படிப்பதிலும் எழுதுவதிலும் கணக்கிடுவதிலும் எழுத்தர்கள் தங்கள் நேரத்தின் பெரும்பகுதியைச் செலவிட்டனர். பப்பைரஸ் சுருள்கள்மீது இருந்த மை அடையாளங்கள்தான் அவர்களுடைய தினசரி யதார்த்தமாக இருந்தன. யாருக்கு எந்த வயல் சொந்தமாக இருந்தது, ஓர் எருது என்ன விலையில் விற்பனையாகியது, விவசாயிகள் ஆண்டுதோறும் எவ்வளவு வரிகளைச் செலுத்த வேண்டியிருந்தது போன்ற அனைத்தையும் அந்தப் பப்பைரஸ் சுருள்கள்தான் தீர்மானித்தன. தன்னுடைய எழுதுகோலின் முனையைக் கொண்டு ஓர் ஒட்டுமொத்த கிராமத்தின் தலையெழுத்தை நிர்ணயிக்கக்கூடிய சக்தி ஓர் எழுத்தருக்கு இருந்தது.

நவீன காலகட்டம்வரை பெரும்பான்மை மக்கள் கல்வியறிவு இல்லாதவர்களாகவே இருந்தனர், ஆனால் முக்கியமான நிர்வாகிகள் எழுத்துபூர்வமான உரைகள் எனும் ஊடகம் வாயிலாக யதார்த்தத்தைப் பார்ப்பது அதிகரித்தது. பண்டைய எகிப்திலும் சரி, இருபதாம் நூற்றாண்டு ஐரோப்பாவிலும் சரி, கற்றறிந்த இந்த மேட்டுக்குடியினரைப் பொருத்தவரை, மரங்களும் எருதுகளும் மனிதர்களும் எவ்வளவு நிஜமோ, ஒரு காகிதத்தில் எழுதப்பட்ட எதுவொன்றும் அதே அளவு நிஜமானதாக இருந்தது.

1940களின் வசந்தகாலத்தில், நாஜிப் படையினர் வடக்கிலிருந்து பிரான்ஸை ஆக்கிரமித்தபோது, அங்கு வாழ்ந்த யூதர்களில் ஏராளமானோர் தெற்கு நோக்கிச் சென்று அந்நாட்டிலிருந்து தப்பிச் செல்ல முயன்றனர். எல்லையைக் கடப்பதற்கு ஸ்பெயின் மற்றும்

போர்ச்சுகல் நாடுகளுக்கு அவர்களுக்கு நுழைவுரிமை தேவைப்பட்டது. உயிர்காக்கும் அந்தத் துண்டுக் காகிதத்தைப் பெறும் முயற்சியில், பரிதவிப்பு மேலிட, எண்ணற்றப் பிற அகதிகளோடு சேர்ந்து பல்லாயிரக்கணக்கான யூதர்கள் பொர்தோ நகரிலிருந்த போர்ச்சுகீசியத் தூதரகத்தை முற்றுகையிட்டனர். வெளியுறவு அமைச்சகத்தின் முன்னனுமதி இல்லாமல் யாருக்கும் நுழைவுரிமை வழங்கக்கூடாது என்று பிரான்ஸில் இருந்த தன்னுடைய தூதரகத்திற்குப் போர்ச்சுகீசிய அரசாங்கம் உத்தரவு பிறப்பித்தது. ஆனால், பொர்தோவில் இருந்த அயல்நாட்டுத் தூதரான அரிஸ்டீடிஸ் டிஸூஸா மெண்டிஸ் அந்த ஆணையை உதாசீனப்படுத்தியதன் மூலம், தன்னுடைய முப்பதாண்டுகாலத் தொழில்வாழ்க்கையைக் காற்றில் வீசி எறிந்தார். நாஜிக்களின் பீரங்கிகள் பொர்தோவை நெருங்கிக் கொண்டிருந்தபோது, மெண்டிஸூம் அவருடைய குழுவினரும் தொடர்ந்து பத்து நாட்கள் இரவுபகலாக வேலை செய்து நுழைவுரிமைகளை வழங்கினர். அந்தப் பத்து நாட்களும் அவர்கள் அரிதாகவே தூங்கினர். இதனால் ஏற்பட்ட அதீதக் களைப்பினால் மெண்டிஸ் நிலைகுலைந்து விழுந்தபோது, அவர் ஏற்கனவே ஆயிரக்கணக்கானோருக்கு நுழைவுரிமைகளை வழங்கியிருந்தார்.

இந்த அகதிகளை ஏற்றுக் கொள்ள விரும்பாத போர்ச்சுகீசிய அரசாங்கம், தன்னுடைய ஆணையை மீறிய மெண்டிஸைப் போர்ச்சுகலுக்குத் திரும்ப அழைத்து வருவதற்கு அதிகாரிகளை அனுப்பி வைத்தது, அவருடைய அயல்நாட்டுப் பணியிலிருந்து அவரை நீக்கியது. ஆனாலும், பொதுவாக மனிதர்களின் பரிதாப நிலைமையைப் பற்றி அவ்வளவு அக்கறை கொள்ளாத எல்லை அதிகாரிகள், ஆவணங்கள்மீது உண்மையிலேயே ஆழ்ந்த மரியாதை கொண்டிருந்தனர். எனவே, போர்ச்சுகீசிய அரசாங்கத்தின் ஆணைக்கு எதிராக மெண்டிஸ் விநியோகித்த நுழைவுரிமைச் சீட்டுகளை பிரெஞ்சு அதிகாரிகளும் ஸ்பானிய அதிகாரிகளும் போர்ச்சுகீசிய அதிகாரிகளும் மதித்து அங்கீகரித்தனர். இதன் மூலம், நாஜிக்களின் மரணப் பிடியிலிருந்து சுமார் முப்பதாயிரம் மக்களை அவர்கள் காப்பாற்றினர். வெறும் ஒரு ரப்பர் முத்திரையைக் கொண்டு செயல்பட்ட மெண்டிஸ், நாஜிக்களின் கொடுங்கோல் ஆட்சியின்போது ஒரு தனிநபராக மிக அதிக எண்ணிக்கையிலான அகதிகளைக் காப்பாற்றியிருந்தார்.



படம் **22:** அரிஸ்டீடிஸ் டிஸூஸா மென்டிஸ்**,** ஒரு ரப்பர் ஸ்டாம்புடன் வந்த தேவதூதர்**.**



20

Wixy-Visas Nº 435

Censor Lazare et ses cinq enfants

Bon pour un séjour de trente jours à Port au Prince à partir du jour de l'arrivée - voyage vers l'amérique centrale assuré

BORDEAUX 17 JUIN 1940

Le Consul d'Haïti

21

Valido trinta dias Somente em transito

Wixy-Visas

Visto neste Consulado de Portugal em Bordéus, aos 17 de Junho 1940

Válido para uma só viagem para Portugal

O Consul,

ARISTIDES DE SOUSA MENDES

SERVIÇO CONSULAR 110$00

1$00 SERVIÇO CONSULAR

1$00 SERVIÇO CONSULAR

1$00 SERVIÇO CONSULAR

Pagou ao câmbio de 160 a quantia Frs: 180,80

o número 12 a 32 da Tabela ficando importância lançada no livro de receita sob número 1902

Consulado de Portugal em Bordéus, aos 17 de Junho de 1940

படம் **23: 1940**ம் ஆண்டு ஜுன் மாதத்தில் அரிஸ்டீடிஸ் டிஸூஸா மென்டிஸ் கையெழுத்திட்ட ஆயிரக்கணக்கான நுழைவுரிமைச் சீட்டுகளில் ஒன்று **(1940**ம் ஆண்டு ஜூன் **17**ம் நாளன்று லஸார் சென்ஸாருக்கும் அவருடைய குடும்பத்தினருக்கும் வழங்கப்பட்ட நுழைவுரிமை எண்**: 1902).**

எழுத்துபூர்வமான ஆவணங்களின் புனிதத்துவம் பெரும்பாலும் மிகக் குறைவான நேர்மறை விளைவுகளையே ஏற்படுத்தியிருந்தது. சீனாவை வேகமாக ஒரு வல்லரசாக மாற்ற மாசேதுங் விரும்பியதைத் தொடர்ந்து, 1958ம் ஆண்டிலிருந்து 1961ம் ஆண்டுவரை கம்யூனிசவாத சீனா ‘மாபெரும் முற்போக்குப் பாய்ச்சல்’ என்ற ஒரு சமூகப் பொருளாதாரத் திட்டத்தைச் செயல்படுத்தியது. உபரி தானியங்களைத் தொழிற்பணித்திட்டங்களுக்கும் ராணுவப் பணித்திட்டங்களுக்கும் பயன்படுத்தும் நோக்கத்துடன், வேளாண் உற்பத்தியை இருமடங்காகவும் மும்மடங்காகவும் அதிகரிக்கும்படி மாசேதுங் ஆணையிட்டார். அவருடைய சாத்தியமற்ற எதிர்பார்ப்புகள் பீஜிங் நகரில் இருந்த அரசு அலுவலகங்களிலிருந்து அதிகாரத்துவ ஏணி வழியாகக் கீழ் நோக்கிப் பயணித்து, பிராந்திய நிர்வாகிகள் வாயிலாக கிராமத் தலைவர்களைச் சென்றடைந்தன. விமர்சிக்க பயந்து கொண்டு, தங்களுடைய மேலதிகாரிகளிடம் நற்பெயர் வாங்கித் தங்களுடைய காரியங்களை சாதித்துக் கொள்ள விரும்பிய உள்ளூர் அதிகாரிகள், வேளாண் உற்பத்தி அளவை அதிகமாகக் காட்டிப் பொய்யான அறிக்கைகளைத் தயாரித்து, அவற்றை அந்த அடுக்கதிகார ஏணி வழியாக மீண்டும் மேல்நோக்கி அனுப்பினர். ஒவ்வொரு நிலையிலும், அந்தந்த அதிகாரிகள் வேளாண் உற்பத்தி அளவை மேலும் அதிகமாகக் காட்டும் விதத்தில் அந்த அறிக்கைகளில் தங்கள் பங்கிற்கு

மாற்றங்களைச் செய்தனர். இவ்வாறு, அந்த அறிக்கைகள் மாசேதுங்கைச் சென்றடைந்தபோது, வேளாண் உற்பத்தி அபரிமிதமாக இருந்ததாக அவை அவரை நம்ப வைத்தன.

இதன் விளைவாக, 1958ம் ஆண்டில், வருடாந்திர தானிய உற்பத்தி உண்மையில் எவ்வளவு இருந்ததோ, அதைவிட 50 சதவீதம் அதிகமாக இருந்ததாகச் சீன அரசாங்கத்திற்குத் தெரிவிக்கப்பட்டது. தில்லுமுல்லு செய்யப்பட்ட அந்த அறிக்கைகளை நம்பி, தன்னுடைய குடிமக்களின் பசியைப் போக்கத் தேவையான அளவு தானியங்கள் தங்கள் வசம் இருந்ததாக அனுமானித்துக் கொண்டு, சீன அரசாங்கம் லட்சக்கணக்கான டன்கள் தானியங்களை அந்நிய நாடுகளுக்கு விற்பனை செய்து, அதற்கு பதிலாக ஆயுதங்களையும் கனரக இயந்திரங்களையும் வாங்கியது. இதைத் தொடர்ந்து, சீனாவில் வரலாறு காணாத மிக மோசமான பஞ்சம் ஏற்பட்டுக் கோடிக்கணக்கான மக்கள் மடிந்தனர்.

இதற்கிடையே, சீனாவின் வேளாண் அதிசயம் பற்றிய அறிக்கைகள், உலகம் நெடுகிலும் இருந்த மக்களைச் சென்றடைந்தன. சீனாவின் இந்த வெற்றி, கொள்கைப் பிடிப்புக் கொண்ட தான்சானிய அதிபரான ஜூலியஸ் நிய்ரேரியைப் பெரிதும் கவர்ந்தது. தான்சானிய வேளாண்மையை நவீனப்படுத்துவதற்காகச் சீனாவின் பாணியில் கூட்டுப் பண்ணைகளை உருவாக்க ஜூலியஸ் உறுதி பூண்டார். விவசாயிகள் இத்திட்டத்திற்கு எதிர்ப்புத் தெரிவித்தபோது, அவர் ராணுவத்தையும் காவல்துறையையும் அனுப்பி வைத்து, பாரம்பரிய கிராமங்களை அழித்து, ஆயிரக்கணக்கான விவசாயிகளை வலுக்கட்டாயமாகக் கூட்டுப் பண்ணைகளுக்கு இடம்பெயர்த்தார்.

அரசாங்கப் பிரச்சாரங்கள் பண்ணைகளைச் சிறிய சொர்க்கங்களாகச் சித்தரித்தன, ஆனால் அவற்றில் பல சொர்க்கங்கள் அரசு ஆவணங்களில் மட்டுமே இடம்பெற்றிருந்தன. இன்னின்ன கிராமங்களைச் சேர்ந்த இன்னின்ன மக்கள் இன்னின்ன தேதிகளில் இன்னின்ன பண்ணைகளுக்கு இடம்பெயர்க்கப்பட்டுக் குடியமர்த்தப்பட்டதாகத் தலைநகர் தாரெஸ்ஸலாமில் எழுதப்பட்ட அறிக்கைகளில் கூறப்பட்டிருந்தன. ஆனால் யதார்த்தத்தில், கிராம மக்கள் தங்களுக்கு ஒதுக்கப்பட்ட இடங்களைச் சென்றடைந்தபோது, அங்கு எதுவுமே இல்லாததைக் கண்டனர். வீடுகள் இல்லை, வயல்கள் இல்லை, கருவிகளும் இல்லை. ஆனாலும், திட்டம் மாபெரும் வெற்றி பெற்றிருந்ததாக அதிகாரிகள் தங்களுக்கிடையே கூறிக் கொண்டு, அதே கருத்தை அதிபர் ஜூலியஸிடமும் தெரிவித்தனர். உண்மையில், அந்நாள்வரை ஆப்பிரிக்காவிலேயே மிகப் பெரிய அளவில் உணவு

ஏற்றுமதி செய்து வந்திருந்த தான்சானியா, பத்து ஆண்டுகளுக்குள், வெளிப்புற உதவி இல்லாமல் தன்னுடைய குடிமக்களுக்கு உணவு வழங்க முடியாத நிலையை எட்டி, உணவை இறக்குமதி செய்த ஒரு நாடாக மாறியது. 1979ல் தான்சானியாவின் 90 சதவீத விவசாயிகள் கூட்டுப் பண்ணைகளில் வாழ்ந்தனர், ஆனால் நாட்டின் மொத்த வேளாண் உற்பத்தியில் வெறும் 5 சதவீதத்தை மட்டுமே அவர்கள் உற்பத்தி செய்தனர்.

கையெழுத்துக்கள் பல்லாயிரக்கணக்கானோரின் தலையெழுத்தை மாற்றிய இது போன்ற துயரச் சம்பவங்கள் வரலாறு நெடுகிலும் பரவிக் கிடக்கின்றன என்றாலும், அதன் மூலம் கிடைத்தப் பலன், அதனால் ஏற்பட்டத் தீய விளைவுகளைவிட அதிகமாக இருந்ததாக அரசாங்கங்கள் கருதின. ஒரு கையெழுத்தின் மூலம் யதார்த்தத்தை மாற்றுவதற்கு எழக்கூடிய சபலத்தை எந்தவோர் ஆட்சியாளராலும் அடக்க முடியவில்லை. ஏதேனும் பேரழிவு நிகழ்ந்தால், அதற்கான தீர்வாக இன்னும் அதிகமான கட்டளைகள்தான் பிறப்பிக்கப்பட்டன.

எழுத்துபூர்வமான மொழியானது யதார்த்தத்தை விவரிப்பதற்கான ஒரு நல்ல வழியாக இருக்கும் என்ற யோசனையில் உருவாக்கப்பட்டு இருந்திருக்கலாம், ஆனால் அது மெல்ல மெல்ல யதார்த்தத்தை மாற்றியமைப்பதற்கான சக்தி வாய்ந்த ஒரு வழியாக ஆகியுள்ளது. அதிகாரபூர்வமான அறிக்கைகள் புறவயமான யதார்த்தத்துடன் முரண்பட்டு நின்றபோது, பெரும்பான்மை நேரங்களில் யதார்த்தம்தான் வழிவிட்டு ஒதுங்கிக் கொள்ள வேண்டியிருந்தது. வரி அதிகாரிகள், கல்வி அமைப்புமுறை, மற்றும் பிற சிக்கலான அதிகாரத்துவத்தை எதிர்கொள்ள நேரிட்ட எவரொருவரும் உண்மை முக்கியமல்ல என்பதையும், உங்களுடைய படிவத்தில் என்ன எழுதப்பட்டிருக்கிறது என்பதுதான் அதிக முக்கியமானது என்பதையும் நன்றாக அறிவர்.

## புனித மறைநூல்கள்

எழுத்துபூர்வமான உரையும் யதார்த்தமும் முரண்படும்போது சில சமயங்களில் யதார்த்தம் விட்டுக்கொடுக்க வேண்டியிருக்கிறது என்பது உண்மைதானா? அதிகாரத்துவ அமைப்புமுறைகள் குறித்தப் பொதுவான, ஆனால் மிகைப்படுத்தப்பட்ட ஓர் அவதூறுதானே இது? ஃபாரோவாக இருந்தாலும் சரி அல்லது மாசேதுங்காக இருந்தாலும் சரி, அவர்களின்கீழ் பணியாற்றிய பெரும்பாலான அதிகாரிகள் விதிகளை முறையாகப் பின்பற்றுபவர்களாக இருந்தனர். அவர்கள் நிச்சயமாகப் பின்வரும் வாதத்தை முன்வைத்திருப்பர்: “வயல்கள், கால்வாய்கள்,

தானியக்களஞ்சியங்கள் ஆகியவற்றின் யதார்த்தத்தை விவரிப்பதற்கு நாங்கள் எழுத்துமுறையைப் பயன்படுத்துகிறோம். அந்த விவரிப்பு மிகத் துல்லியமானதாக இருந்தால், நாங்கள் யதார்த்தமான தீர்மானங்களை மேற்கொள்ளுகிறோம். அந்த விவரிப்பு அவ்வளவு துல்லியமானதாக இல்லாவிட்டால், அது பஞ்சங்களையும் கலகங்களையும்கூட விளைவிக்கிறது. பிறகு, நாங்களோ அல்லது எங்களுக்குப் பின்னால் வரவிருக்கும் நிர்வாகிகளோ, அந்தத் தவறுகளிலிருந்து பாடம் கற்றுக் கொண்டு, அதிக உண்மையான விவரிப்புகளை உருவாக்கக் கடுமையாக முயற்சிக்கிறோம். எனவே, காலப்போக்கில் எங்களுடைய ஆவணங்கள் நிச்சயமாக அதிகத் துல்லியமானவையாக ஆகத்தான் போகின்றன."

இது ஓரளவுக்கு உண்மைதான், ஆனால் இது ஒரு நேர்மாறான வரலாற்றுப் போக்கை கவனிக்கத் தவறிவிடுகிறது. அதிகாரத்துவ அமைப்புகள் அதிக அதிகாரத்தைக் கைவசப்படுத்தும்போது, அவை தம்முடைய சொந்தத் தவறுகளைக் கண்டுகொள்ளாமல் இருந்துவிடுகின்றன. யதார்த்தத்திற்கு ஏற்றபடி இருக்குமாறு தம்முடைய கதைகளை மாற்றுவதற்கு பதிலாக, தம்முடைய கதைகளுக்கு ஏற்றபடி யதார்த்தத்தை மாற்ற அவர்கள் முயற்சிக்கின்றனர். இறுதியில், புறவயமான யதார்த்தம் அவர்களுடைய அதிகாரத்துவக் கற்பனைகளை ஒத்தமைகிறது, ஆனால் அப்படி நடந்து கொள்ளும்படி யதார்த்தத்தை அவர்கள் கட்டாயப்படுத்தியதால்தான் அது தன்னை அவர்களுடைய கதைகளோடு பொருத்திக் கொள்ளுகிறது. எடுத்துக்காட்டாக, பல ஆப்பிரிக்க நாடுகளின் எல்லைகள் ஆறுகளின் ஓட்டப்பாதைகளையும் மலைத்தொடர்களையும் வர்த்தகத் தடங்களையும் கணக்கில் எடுத்துக் கொள்ளுவதில்லை; அவை வரலாற்று மண்டலங்களையும் பொருளாதார மண்டலங்களையும் தேவையின்றிப் பிரிக்கின்றன; உள்ளூர்ப் பாரம்பரிய அடையாளங்களையும் மத அடையாளங்களையும் அவை கண்டுகொள்ளுவதில்லை. ஒரு பழங்குடி இனம் பல்வேறு நாடுகளுக்கு இடையே பிரிக்கப்படக்கூடும். அதேபோல, ஒரு நாட்டில் ஒன்றுக்கொன்று எதிரான பல்வேறு பழங்குடி இனங்கள் இடம்பெற்றிருக்கக்கூடும். இத்தகைய பிரச்சனைகள் உலகம் நெடுகிலும் அனைத்து நாடுகளிலும் பெரும் தொல்லைகளை ஏற்படுத்துகின்றன. ஆனால் ஆப்பிரிக்காவில் அவை குறிப்பாகத் தீவிரமாக இருக்கின்றன. ஏனெனில், நவீன ஆப்பிரிக்க எல்லைகள் ஆப்பிரிக்க நாடுகளின் விருப்பங்களையும் பிரச்சனைகளையும் பிரதிபலிப்பதில்லை. ஏனெனில், ஆப்பிரிக்காவில் ஒருபோதும் கால் பதித்திராத ஐரோப்பிய அதிகாரிகளால் வரையப்பட்டக் கோடுகள்

அவை.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், சக்தி வாய்ந்த பல ஐரோப்பிய நாடுகள் ஆப்பிரிக்கப் பகுதிகளைச் சொந்தம் கொண்டாடின. இதில் தமக்கிடையே ஏற்படக்கூடிய முரண்பாடுகள் ஒரு முழுநீள ஐரோப்பியப் போருக்கு வழி வகுக்கக்கூடும் என்ற பயத்தில், சம்பந்தப்பட்ட நாடுகள் 1884ல் பெர்லின் நகரில் ஒன்றுகூடி, ஆப்பிரிக்காவை ஏதோ ஒரு தின்பண்டம்போலத் தமக்கிடையே பிரித்துக் கொண்டன. அந்தக் காலகட்டத்தில் ஆப்பிரிக்காவின் உட்பகுதியின் பெரும்பகுதி ஐரோப்பியர்களுக்குப் பரிச்சயமற்றதாக இருந்தது. ஆப்பிரிக்காவின் கடற்கரையோரப் பகுதிகளின் துல்லியமான வரைபடங்கள் ஆங்கிலேயர்களிடமும் பிரெஞ்சுக்காரர்களிடமும் ஜெர்மானியர்களிடமும் இருந்தன. நைஜர், காங்கோ, ஜாம்பேசி ஆகிய ஆறுகள் எந்த இடத்தில் கடலுடன் சேர்ந்தன என்பதை அவர்கள் துல்லியமாக அறிந்திருந்தனர். ஆனால், இந்த ஆறுகள் உள்நாடுகளில் எந்தப் பாதையில் ஓடின என்பதைப் பற்றியும், ராஜ்ஜியங்களைப் பற்றியும், அந்த ஆற்றங்கரைகளின் ஓரமாக வாழ்ந்த பழங்குடியினரைப் பற்றியும், உள்ளூர் மதம், வரலாறு மற்றும் புவியியலைப் பற்றியும் அவர்கள் அவ்வளவாக அறிந்திருக்கவில்லை. ஐரோப்பியத் தூதர்கள் இவற்றைப் பற்றிக் கவலைப்படவில்லை. அவர்கள் பாதி நிரப்பப்பட்ட ஆப்பிரிக்க வரைபடம் ஒன்றை எடுத்து, பளபளப்பான பெர்லின் மேசை ஒன்றின்மீது அதை விரித்து, அங்கொன்றும் இங்கொன்றுமாக ஒருசில கோடுகளை வரைந்து, அந்தக் கண்டத்தைத் தங்களுக்கிடையே பிரித்துக் கொண்டனர்.

இறுதியில் ஐரோப்பியர்கள் தாங்கள் ஒப்புக் கொண்ட வரைபடங்களோடு ஆப்பிரிக்காவின் உட்பகுதிகளுக்குள் நுழைந்தபோது, பெர்லின் நகரில் தாங்கள் வரைந்த எல்லைகளில் பல, ஆப்பிரிக்காவின் புவியியல்ரீதியான, பொருளாதாரரீதியான, மற்றும் இனரீதியான யதார்த்தத்துடன் பொருந்தாமல் இருந்ததைக் கண்டறிந்தனர். ஆனாலும், புதிய மோதல்களைத் தவிர்ப்பதற்காக, முற்றுகையாளர்கள் தங்களுடைய வரைபடங்களின்படி இயங்கினர். இதனால், அந்தக் கற்பனைக் கோடுகள் ஐரோப்பியக் காலனிகளின் உண்மையான எல்லைகளாக ஆயின. இருபதாம் நூற்றாண்டின் இரண்டாம் பாதியின்போது, ஐரோப்பியப் பேரரசுகள் நொறுங்கி அவர்களுடைய காலனிகள் விடுதலையடைந்தபோது, புதிய நாடுகள் அந்தக் காலனித்துவ எல்லைகளை ஏற்றுக் கொண்டன. ஏனெனில், அதற்கான மாற்று, முடிவற்றப் போர்களுக்கும் சச்சரவுகளுக்கும் மட்டுமே வழி வகுக்கும் என்று அவர்கள் பயந்தனர். இன்றைய

ஆப்பிரிக்க நாடுகள் எதிர்கொண்டுள்ள பிரச்சனைகளில் பலவற்றுக்கான மூலகாரணம், அவற்றின் எல்லைகள் அர்த்தமற்றவையாக இருப்பதுதான். ஐரோப்பிய அதிகார அமைப்புகளின் எழுத்துபூர்வமான கற்பனைக் கதைகள் ஆப்பிரிக்க யதார்த்தத்தை எதிர்கொண்டபோது, யதார்த்தம் அக்கதைகளிடம் அடிபணிய வேண்டிய கட்டாயத்திற்கு ஆளானது.




படம் **24:** பத்தொன்பதாம் நூற்றாண்டின் மத்தியில் ஐரோப்பியர்கள் தயாரித்த ஆப்பிரிக்க வரைபடம்**.** ஆப்பிரிக்காவின் உட்பகுதிகளைப் பற்றி ஐரோப்பியர்கள் மிகக் குறைவாகவே அறிந்திருந்தனர்**,** ஆனால் அக்கண்டத்தைத் தங்களுக்கிடையே கூறு போட்டுக் கொண்டு**,** அதன் எல்லைகளை வரைவதற்கு அது அவர்களுக்கு ஒரு தடையாக இருக்கவில்லை**.**

யதார்த்தம் எழுத்துபூர்வமான ஆவணங்களுக்கு அடிபணிவதற்கான எண்ணற்றப் பிற எடுத்துக்காட்டுகளை நம்முடைய நவீனக் கல்வி அமைப்புமுறைகள் வழங்குகின்றன. என்னுடைய மேசையை அளவிடுவதற்கு நான் பயன்படுத்திக் கொண்டிருக்கின்ற அளவுகோல் அவ்வளவு முக்கியமானது அல்ல. அந்த மேசையின் அகலம் 200 சென்டிமீட்டர் என்றோ அல்லது 78.74 அங்குலம் என்றோ நான் கூறினாலும், அதன் அகலம் தொடர்ந்து அப்படியேதான் இருக்கும். அது மாறப் போவதில்லை. ஆனால், அதிகார அமைப்புமுறைகள் மக்களை அளவிடும்போது, அவர்கள் தேர்ந்தெடுக்கின்ற அளவுகோல் அனைத்து வித்தியாசங்களையும் ஏற்படுத்துகிறது. துல்லியமான எண்சார்ந்த மதிப்பெண்களைக் கொண்டு பள்ளிகள் மக்களை மதிப்பிடத் தொடங்கியபோது, லட்சக்கணக்கான மாணவர்களின் வாழ்க்கையும்

ஆசிரியர்களின் வாழ்க்கையும் பெருமளவு மாறின. ஒப்பிட்டுப் பார்க்கும்போது, மதிப்பெண்கள் ஒரு புதிய கண்டுபிடிப்புதான். வேட்டையாடிகள் செய்த சாதனைகளுக்காக அவர்களுக்கு ஒருபோதும் மதிப்பெண்கள் வழங்கப்படவில்லை. வேளாண் புரட்சி ஏற்பட்டுப் பல ஆண்டுகளுக்குப் பிறகும்கூட, வெகுசில கல்வி நிறுவனங்களே துல்லியமான மதிப்பெண்களைப் பயன்படுத்தின. இடைக்காலத்தில், செருப்புத் தைக்கும் தொழிலைக் கற்றுக் கொண்ட ஒருவருக்கு, அவருடைய பயிற்சி முடிந்தவுடன், செருப்பின் வார் தயாரிப்பில் அவருடைய மதிப்பெண் இவ்வளவு என்றும், அதன் அடிப்பாகத்தைத் தயாரிப்பதில் அவர் இவ்வளவு மதிப்பெண் பெற்றார் என்றும் குறிப்பிட்டு எழுத்துபூர்வமான சான்றிதழ் எதுவும் வழங்கப்படவில்லை. ஷேக்ஸ்பியரின் காலகட்டத்தில் ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் இளநிலைப் பட்டப்படிப்புப் பயின்ற ஒரு மாணவன், அப்படிப்பு முடிந்தபோது, ஒன்று, ஒரு பட்டத்துடன் வெளியேறுவான் அல்லது பட்டம் எதுவும் பெறாமல் வெளியேறுவான். இறுதி மதிப்பெண்ணாக ஒரு மாணவனுக்கு 74 மதிப்பெண்களையும், இன்னொரு மாணவனுக்கு 88 மதிப்பெண்களையும் கொடுப்பதைப் பற்றி யாரும் அப்போது நினைத்துக்கூடப் பார்க்கவில்லை.

தொழில் யுகத்தின் கல்வி அமைப்புமுறைகள்தான் துல்லியமான மதிப்பெண்களை வழக்கமாகப் பயன்படுத்தத் தொடங்கின. தொழிற்சாலைகளும் அரசு அமைச்சகங்களும் எண்களின் மொழியில் சிந்திக்கப் பழகிக் கொண்டபோது, பள்ளிகளும் அதே முறையைப் பின்பற்றின. ஒவ்வொரு மாணவரின் மதிப்பையும் அவருடைய சராசரி மதிப்பெண்களின் அடிப்படையில் அவை அளவிடத் தொடங்கின. ஆனால் ஒவ்வோர் ஆசிரியரின் மதிப்பும் ஒவ்வொரு தலைமையாசிரியரின் மதிப்பும் பள்ளியின் ஒட்டுமொத்த சராசரி மதிப்பெண்ணுக்கு ஏற்ப எடைபோடப்பட்டன. அதிகாரிகள் இந்த அளவுகோலைப் பயன்படுத்தத் தொடங்கியவுடன் யதார்த்தம் முழுமையாக மாற்றப்பட்டது.

துவக்கத்தில், மாணவர்களுக்கு அறிவைப் புகட்டுவதன்மீதும் பாடங்களைக் கற்பிப்பதன்மீதும் மட்டுமே கவனம் செலுத்த வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டிருந்தது. மதிப்பெண்கள் வெறுமனே வெற்றியை அளவிடுவதற்கான ஒரு வழியாக மட்டுமே இருந்தன. ஆனால் இயல்பாக, அதிக மதிப்பெண்களைப் பெறுவதன்மீது பள்ளிகள் கவனம் செலுத்தத் தொடங்கின. ஒரு தேர்வில் உயர்வான மதிப்பெண்களைப் பெறுவதற்குத் தேவையான திறமைகள், இலக்கியத்தையோ, உயிரியலையோ, அல்லது கணிதத்தையோ

உண்மையிலேயே புரிந்து கொள்ளத் தேவையான திறமைகளில் இருந்து வேறுபட்டவை என்பதை ஒவ்வொரு குழந்தையும், ஒவ்வோர் ஆசிரியரும், ஒவ்வொரு சரிபார்ப்பு ஆய்வாளரும் அறிவர். இவ்விரண்டுக்கும் இடையே ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டிய கட்டாயத்திற்கு உட்படுத்தப்படும்போது, பெரும்பாலான பள்ளிகள் மதிப்பெண்களைத்தான் தேர்ந்தெடுக்கும் என்பதையும் அவர்கள் அறிவர்.

புனித மறைநூல்கள் தோன்றியபோது எழுத்துபூர்வமான ஆவணங்களின் சக்தி அதன் உச்சத்தை எட்டியது. பண்டைய நாகரிகங்களைச் சேர்ந்த பூசாரிகளும் எழுத்தர்களும் ஆவணங்களை யதார்த்தத்திற்கான வழிகாட்டிக் கையேடுகளாகப் பார்க்கப் பழகிக் கொண்டனர். துவக்கத்தில், வரிகள், வயல்கள், நெற்களஞ்சியங்கள் ஆகியவற்றின் யதார்த்தத்தைப் பற்றி மட்டுமே அந்த உரைகள் எடுத்துரைத்தன. ஆனால், அதிகாரத்துவம் அதிக அதிகாரத்தைக் கைவசப்படுத்தியபோது, அந்த உரைகள் அதிகாரத்தைப் பெற்றன. இதைத் தொடர்ந்து, கடவுளின் சொத்துக்களை மட்டுமல்லாமல், கடவுளின் செயல்கள், கட்டளைகள், ரகசியங்கள் ஆகியவற்றையும் பூசாரிகள் எழுத்துபூர்வமாகப் பதிவு செய்தனர். இதன் விளைவாக உருவான மறைநூல்கள் யதார்த்தத்தை முழுமையாக விவரிப்பதுபோலப் பாசாங்கு செய்தன. எனவே, பல தலைமுறைகளைச் சேர்ந்த அறிஞர்கள் எல்லா விடைகளையும் பைபிள், குரான், வேதங்கள் ஆகியவற்றின் பக்கங்களில் தேடப் பழகிவிட்டனர்.

கோட்பாட்டுரீதியாகப் பார்க்கும்போது, புனித நூல்கள் யதார்த்தத்தைத் திரித்துக் கூறினால், அந்நூல்களைப் படித்துப் பின்பற்றுபவர்கள் என்றேனும் ஒருநாள் அந்த உண்மையைக் கண்டுபிடித்துவிடுவர். இதனால், அந்த உரையின் உண்மைத்தன்மை வெகுவாக பாதிக்கப்படும். எல்லோரையும் எல்லா நேரத்திலும் ஏமாற்ற முடியாது என்று ஆபிரகாம் லிங்கன் கூறினார். அது வெறும் பகற்கனவுதான். ஆனால் நடைமுறையில், மனித ஒத்துழைப்புப் பிணையங்களின் சக்தி, உண்மைக்கும் கற்பனைக்கும் இடையேயான ஒரு நுண்ணிய சமநிலையைச் சார்ந்துள்ளது. யதார்த்தத்தை அளவுக்கதிகமாக நீங்கள் திரித்தால், அது உங்களை பலவீனப்படுத்திவிடும், தெளிவாகப் பார்க்கக்கூடிய உங்களுடைய எதிரிகளுடன் உங்களால் போட்டியிட முடியாமல் போய்விடும். மறுபுறம், ஏதோ சில கற்பனையான கட்டுக்கதைகளைச் சார்ந்திருக்காமல், பெருந்திரளான மக்களை ஆற்றல்மிக்க விதத்தில் ஒருங்கிணைத்து நிர்வகிக்க முடியாது. எனவே, கற்பனையான

கட்டுக்கதைகள் எதையும் சேர்க்காமல் யதார்த்தத்தை உள்ளது உள்ளபடியே நீங்கள் எடுத்துரைத்தால், வெகுசிலரே உங்களைப் பின்பற்றுவர்.

கால இயந்திரம் ஒன்றைப் பயன்படுத்தி ஒரு நவீன அறிவியலறிஞரைப் பண்டைய எகிப்திற்கு நீங்கள் அனுப்பி வைத்தால், உள்ளூர்ச் சாமியார்களுடைய கட்டுக்கதைகளைத் தோலுரித்துக் காட்டுவதன் மூலமாகவும், பரிணாம வளர்ச்சி, ஒப்புமைக் கோட்பாடு, குவாண்டம் இயற்பியல் போன்றவை குறித்து விவசாயிகளுக்குச் சொற்பொழிவாற்றுவதன் மூலமாகவும் அதிகாரத்தை அவரால் கைப்பற்ற முடியாது. மாறாக, அவர் தன்னுடைய அறிவைப் பயன்படுத்தி ஒருசில துப்பாக்கிகளையும் பீரங்கிகளையும் உருவாக்கினால், ஃபாரோவையும் முதலைக் கடவுளான ஸோபெக்கையும்விட அதிக அனுகூலமான நிலையில் அவர் இருப்பார். ஆனால், அவர் இரும்புத் தாதுவை அகழ்ந்தெடுக்கவும், ஊது உலைகளை உருவாக்கி வெடிமருந்துகளைத் தயாரிக்கவும் விரும்பினால், கடினமாக உழைக்கத் தயாராக இருக்கின்ற ஏராளமான தொழிலாளர்கள் அவருக்குத் தேவைப்படுவர். அவர்களை அப்பணியில் ஈடுபடுத்துவதற்கு இயற்பியல் கோட்பாடு ஒன்றை விளக்குவதன் மூலம் அவரால் அவர்களுக்கு உத்வேகமூட்ட முடியுமா? முடியும் என்று நீங்கள் நினைத்தால், இன்றைய ஆப்கானிஸ்தானுக்கோ அல்லது சிரியாவுக்கோ சென்று அங்கு உங்களுடைய அதிர்ஷ்டத்தை நீங்கள் தாராளமாக சோதித்துப் பார்க்கலாம்.

ஃபாரோக்கள் ஆண்ட எகிப்து, ஐரோப்பியப் பேரரசுகள், நவீனக் கல்வி அமைப்புமுறை போன்ற, உண்மையிலேயே சக்தி வாய்ந்த மனித அமைப்புகள், தெளிவான கண்ணோட்டத்தைக் கொண்டிருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. அவற்றின் சக்தியின் பெருமளவு, அடிபணிந்து போகும் போக்கைக் கொண்ட ஒரு யதார்த்தத்தின்மீது தம்முடைய கற்பனையான நம்பிக்கைகளை வலுக்கட்டாயமாகத் திணிப்பதற்கான அவற்றின் திறனைச் சார்ந்துள்ளது. பணம் இதற்கான சிறந்த எடுத்துக்காட்டு. அரசாங்கம் மதிப்பற்றக் காகிதத் துண்டுகளை அச்சிட்டு, அவை மதிப்பு வாய்ந்தவை என்று அறிவித்துவிட்டு, பிறகு மற்ற அனைத்தினுடைய மதிப்பையும் கணக்கிடுவதற்கு அவற்றைப் பயன்படுத்துகிறது. இந்தக் காகிதத் துண்டுகளைப் பயன்படுத்தி வரிகளைச் செலுத்துவதற்குக் குடிமக்களைக் கட்டாயப்படுத்தக்கூடிய சக்தி அரசாங்கத்திற்கு இருக்கிறது. எனவே, சிறிதளவாவது அவற்றைக் கைவசப்படுத்த வேண்டிய கட்டாயத்திற்குக் குடிமக்கள் ஆளாகின்றனர். இதைத் தொடர்ந்து, இந்தக் காகிதத் துண்டுகள் உண்மையிலேயே

மதிப்பு வாய்ந்தவையாக ஆகிவிடுகின்றன, அரசாங்க அதிகாரிகளுடைய நம்பிக்கைகள் சரி என்று நிரூபிக்கப்படுகின்றன. காகிதப் பணத்தை விநியோகிப்பது அரசாங்கத்தின் கட்டுப்பாட்டில் இருப்பதால், அதன் சக்தி அதிகரிக்கிறது. "இவையெல்லாம் எந்த விலைமதிப்பும் இல்லாத காகிதத் துண்டுகள்!" என்று கூறி யாரேனும் எதிர்ப்புத் தெரிவித்து, அவற்றை வெறும் காகிதத் துண்டுகளாகவே நினைத்துச் செயல்பட்டால், அவரால் தன் வாழ்வில் வெகுதூரம் பயணிக்க முடியாது.

மெட்ரிகுலேஷன் தேர்வுகள்தான் மாணவர்களை மதிப்பீடு செய்வதற்கான சிறந்த வழிமுறை என்று கல்வி அமைப்புமுறை முழங்கும்போதும் இதேதான் நிகழுகிறது. கல்லூரிகளில் படிக்க அனுமதிக்கப்படுவதற்கும் அரசாங்க நிறுவனங்களிலும் தனியார் நிறுவனங்களிலும் பணிநியமனம் செய்யப்படுவதற்குமான தரங்களை மதிப்பெண்களின் அடிப்படையில் நிர்ணயிப்பதன்மீது தாக்கம் ஏற்படுத்தும் அளவுக்குக் கல்வி அமைப்புமுறை போதிய அதிகாரம் கொண்டதாக இருக்கிறது. எனவே, மாணவர்கள் நல்ல மதிப்பெண்களைப் பெறுவதன்மீது தங்களுடைய முயற்சிகள் அனைத்தையும் முதலீடு செய்கின்றனர். எல்லோரும் அடையத் துடிக்கின்ற சிறந்த பதவிகள் உயர்வான மதிப்பெண்களைப் பெறுகின்றவர்களுக்கே கிடைக்கின்றன. எனவே, அத்தகையோர், எந்த அமைப்புமுறை தங்களை அந்தப் பதவியில் அமர்த்தியதோ அதே அமைப்புமுறையை ஆதரிப்பதில் எந்த வியப்பும் இல்லை. முக்கியமான தேர்வுகளைக் கல்வி அமைப்புமுறைதான் கட்டுப்படுத்திக் கொண்டிருக்கிறது என்பதால், அது அந்த அமைப்புமுறைக்கு அதிக அதிகாரத்தைக் கொடுக்கிறது. கல்லூரிகள், அரசாங்க அலுவலகங்கள், மற்றும் வேலைச் சந்தையின்மீது கல்வி அமைப்புமுறை ஏற்படுத்துகின்ற தாக்கத்தையும் அது அதிகரிக்கிறது. 'பட்டச் சான்றிதழ் வெறும் ஒரு காகிதத் துண்டு!' என்று கூறி யாரேனும் அதை எதிர்த்து அதற்கேற்ப நடந்து கொண்டால், அவராலும் தன் வாழ்வில் வெகுதூரம் செல்ல முடியாது.

புனித மறைநூல்களும் இதே வழியில்தான் செயல்படுகின்றன. நம்முடைய அனைத்துக் கேள்விகளுக்குமான விடைகள் நம்முடைய புனித நூல்களில் இருப்பதாக நம்முடைய மதங்கள் முழங்குகின்றன. அதே நேரத்தில், அந்த மறைநூல்கள் கூறுகின்றபடி நடக்குமாறு நீதிமன்றங்களையும் அரசாங்கங்களையும் தொழில் நிறுவனங்களையும் அவை கட்டாயப்படுத்துகின்றன. ஓர் அறிவார்ந்த நபர் அந்த மறைநூல்களைப் படித்துவிட்டு உலகத்தைப் பார்க்கும்போது,

இரண்டுக்கும் ஒரு நல்ல பொருத்தம் இருப்பதை அவர் காணுகிறார். ‘கடவுளுக்கு நீங்கள் பணம் செலுத்த வேண்டும் என்று மறைநூல்கள் கூறுகின்றன - யதார்த்தத்தை உற்று நோக்குங்கள், அங்கு எல்லோரும் அதன்படி பணம் செலுத்துகின்றனர். பெண்கள் ஆண்களைவிடத் தாழ்ந்தவர்கள் என்றும், அவர்கள் நீதிபதிகளாகப் பணியாற்றக்கூடாது என்றும், நீதிமன்றத்தில் சாட்சியம்கூடக் கூறக்கூடாது என்றும் மறைநூல்கள் கூறுகின்றன - யதார்த்தத்தை உற்று நோக்குங்கள், பெண் நீதிபதிகள் இல்லை, பெண்களின் சாட்சியங்களையும் நீதிமன்றம் நிராகரித்துவிடுகிறது. கடவுளின் வார்த்தைகளைப் படிப்பவர்கள் வாழ்வில் வெற்றி பெறுவார்கள் என்று மறைநூல்கள் கூறுகின்றன - யதார்த்தத்தை உற்று நோக்குங்கள், நல்ல வேலைகள் அனைத்தையும் புனித நூல்களை மனப்பாடமாகத் தெரிந்து வைத்திருக்கின்ற மக்களே கைவசப்படுத்தியுள்ளனர்.’

எனவே, அப்படிப்பட்ட ஓர் அறிவார்ந்த நபர் புனித நூல்களைப் படிக்கத் தொடங்குகிறார். அவர் அறிவார்ந்தவராக இருப்பதால், அவர் அவற்றில் ஒரு பண்டிதராக ஆகிவிடுவார், அவர் ஒரு நீதிபதியாகவும் நியமிக்கப்படக்கூடும். அவர் ஒரு நீதிபதியாக ஆகும்போது, நீதிமன்றத்தில் பெண்கள் சாட்சி கூற அவர் அனுமதிக்க மாட்டார். தனக்குப் பிறகு தன்னுடைய இடத்தை நிரப்புவதற்கு அவர் ஒருவரைத் தேர்ந்தெடுக்கும்போது, மறைநூல்களை நன்றாக அறிந்து வைத்துள்ள ஒருவரையே அவர் தேர்ந்தெடுப்பார். “இந்நூல்கள் வெறும் காகிதங்கள்தான்!” என்று யாரேனும் எதிர்த்துக் குரல் கொடுத்து, அதன்படி நடந்தால், அப்படிப்பட்ட நாத்திகவாதி தன் வாழ்வில் வெகுதூரம் பயணிக்க மாட்டார்.

யதார்த்தத்தின் உண்மையான இயல்பைப் பற்றிப் புனித நூல்கள் மக்களைத் தவறாக வழிநடத்தும்போது, அவற்றால் தம்முடைய அதிகாரத்தை ஆயிரக்கணக்கான ஆண்டுகாலம் நிலை நிறுத்திக் கொள்ள முடியும். எடுத்துக்காட்டாக, வரலாறு குறித்து பைபிள் கொண்டுள்ள கண்ணோட்டம் அடிப்படையிலேயே குறைபாடு கொண்டதாக இருக்கிறது. ஆனாலும், அது எப்படியோ உலகம் நெடுகிலும் பரவியது, கோடிக்கணக்கான மக்கள் இன்னும் அதில் நம்பிக்கை கொண்டுள்ளனர். வரலாறு பற்றிய ஓரிறைவாதக் கோட்பாடு ஒன்றை பைபிள் பிரபலப்படுத்தியது. அதன்படி, சர்வ வல்லமை படைத்தத் தனியொரு கடவுள்தான் உலகை ஆளுவதாகவும், அவர் மற்ற எல்லாவற்றையும்விட என்னைப் பற்றியும் நான் செய்கின்ற காரியங்கள் பற்றியும் அதிக அக்கறை கொண்டுள்ளார் என்றும் அது கூறுகிறது. அதன்படி, எனக்கு ஏதேனும் நல்லது நிகழ்ந்தால், அது என்னுடைய

நற்காரியங்களுக்குக் கிடைத்த ஒரு வெகுமதியாக இருக்கும். எனக்கு ஏதேனும் மோசமான விஷயம் நடந்தால், அது என்னுடைய பாவங்களுக்கான தண்டனை என்று நான் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

தாங்கள் வறட்சியால் துன்புற்றாலோ, அல்லது பாபிலோனிய அரசரான நெபுகட் நெசார், ஜூடியாவை வெற்றி கொண்டு அதன் மக்களை நாடு கடத்தினாலோ, இவை நிச்சயமாகத் தங்களுடைய சொந்தப் பாவங்களுக்கான தண்டனைகள்தான் என்று பண்டைய யூதர்கள் நம்பினர். பாரசீக அரசரான சைரஸ் பாபிலோனியர்களைத் தோற்கடித்து, நாடு கடத்தப்பட்ட யூதர்கள் தங்கள் தாயகத்திற்குத் திரும்பி வந்து ஜெரூசலம் நகரை மீண்டும் கட்டியெழுப்ப அவர்களுக்கு அனுமதி வழங்கினால், தாங்கள் தங்களுடைய பாவங்களுக்காக வருந்தி இறைவனைக் குறித்துச் செய்த பிரார்த்தனை அவருடைய காதுகளில் விழுந்திருக்க வேண்டும் என்று அந்த யூதர்கள் கருதினர். பிலிப்பைன்ஸில் ஏற்பட்ட ஓர் எரிமலை வெடிப்பால் அந்த வறட்சி ஏற்பட்டிருப்பதற்கான சாத்தியக்கூற்றையும், பாபிலோனின் வர்த்த நலனுக்காக நெபுகட் நெசார் ஜூடியாவைக் கைப்பற்றியிருப்பதற்கான சாத்தியக்கூற்றையும், அரசர் சைரஸ் தன்னுடைய சொந்த அரசியல் காரணங்களுக்காக யூதர்களுக்கு சாதகமாக நடந்து கொண்டிருப்பதற்கான சாத்தியக்கூற்றையும் பைபிள் அங்கீகரிப்பதில்லை. எனவே, உலகச் சூழலியல், பாபிலோனியப் பொருளாதாரம், பாரசீக அரசியல் அமைப்புமுறை போன்றவற்றைப் புரிந்து கொள்ளுவதில் பைபிள் எந்த ஆர்வமும் காட்டுவதில்லை.

அனைத்து மனிதர்களும் தங்களுடைய குழந்தைப்பருவத்தில் தங்களுடைய சொந்த எண்ணங்களிலும் நடவடிக்கைகளிலும் நலன்களிலும் மட்டுமே மூழ்கிக் கிடக்கும் போக்கைக் கொண்டவர்களாக இருக்கின்றனர். அனைத்து மதங்களையும் கலாச்சாரங்களையும் சேர்ந்த குழந்தைகள், தாங்கள்தான் இவ்வுலகின் மையம் என்று நினைக்கின்றனர். எனவே, மற்றவர்களுடைய நிலைமை மற்றும் உணர்வுகள் குறித்து அவர்கள் அவ்வளவாக உண்மையான அக்கறையை வெளிப்படுத்துவதில்லை. அதனால்தான் தங்களுடைய தாய்-தந்தையரின் விவாகரத்து அவர்களுக்குப் பெரும் வேதனையூட்டுவதாக இருக்கிறது. விவாகரத்து என்ற ஒரு முக்கியமான விஷயம் நிகழ்ந்து கொண்டிருப்பதையும், தான் அதற்குக் காரணமல்ல என்பதையும் ஓர் ஐந்து வயதுச் சிறுவனால் புரிந்து கொள்ள முடியாது. தாங்கள் இருவரும் தனித்தனி நபர்கள் என்றும், தங்களுக்கென்று பிரச்சனைகளும் விருப்பங்களும் இருக்கின்றன என்றும், தாங்கள் விவாகரத்து செய்து கொண்டதற்குக் காரணம் அவனல்ல என்றும்

எத்தனை முறை அவனுடைய பெற்றோர் அவனிடம் கூறினாலும், அக்குழந்தையால் அதனை உள்வாங்கிக் கொள்ள முடியாது. எல்லாமே தன்னால்தான் நிகழ்ந்து கொண்டிருப்பதாக அவன் உறுதியாக நம்புகிறான். இந்தக் குழந்தைப்பருவ மாயையிலிருந்து பெரும்பாலான மக்கள் மீண்டுவிடுகின்றனர். ஆனால், ஓரிறைவாத மக்கள் தங்கள் மரணம்வரை அதை உடும்புபோலப் பற்றிக் கொள்ளுகின்றனர். தன்னால்தான் தன்னுடைய தாயும் தந்தையும் தங்களுக்கிடையே சண்டை போட்டுக் கொள்ளுகின்றனர் என்று நினைக்கின்ற ஒரு குழந்தையைப்போல, தன்னால்தான் பாரசீகர்கள் பாபிலோனியர்களை எதிர்த்துச் சண்டையிட்டுக் கொண்டிருப்பதாக ஓரிறைவாதி ஒருவர் நினைக்கிறார்.

பைபிள் காலங்களில் ஏற்கனவே சில கலாச்சாரங்கள் வரலாற்றைப் பற்றிய அதிகத் துல்லியமான ஒரு கண்ணோட்டத்தைக் கொண்டிருந்தன. உலகம் ஓர் ஒற்றைக் கடவுளின் விளையாட்டுத் திடல் என்று பார்ப்பதற்கு பதிலாக, எண்ணற்ற வெவ்வேறு சக்திகளின் விளையாட்டுத் திடல் அது என்று ஆன்மவாத மதங்களும் பல்லிறைவாத மதங்களும் உலகைச் சித்தரித்தன. அதனால், பல நிகழ்வுகள் எனக்கும் எனக்குப் பிடித்தமான தெய்வத்திற்கும் சற்றும் தொடர்பில்லாதவை என்றும், அவை என்னுடைய பாவங்களுக்கான தண்டனைகளோ அல்லது என்னுடைய நற்செயல்களுக்கான வெகுமதிகளோ அல்ல என்றும் ஏற்றுக் கொள்ளுவது ஆன்மவாதிகளுக்கும் பல்லிறைவாதிகளுக்கும் சுலபமானதாக இருந்தது. ஹெராடடஸ், தியூசிடிடீஸ் போன்ற கிரேக்க வரலாற்றியலாளர்களும், சிமா சியான் போன்ற சீன வரலாற்றியலாளர்களும் வரலாறு பற்றிய உயர்நயமான கோட்பாடுகளை உருவாக்கினர். அவை நம்முடைய நவீனக் கண்ணோட்டங்களை ஒத்திருக்கின்றன. பல வகைப்பட்ட அரசியல் காரணிகள், சமூகக் காரணிகள், மற்றும் பொருளாதாரக் காரணிகளால்தான் போர்களும் புரட்சிகளும் வெடிப்பதாக அவர்கள் விளக்கினர். மக்கள் ஒரு போருக்கு பலியாகக்கூடும், அதில் அவர்களுடைய தவறு எதுவும் இருக்காது. பாரசீக அரசியலைப் பற்றிப் புரிந்து கொள்ளுவதில் ஹெராடடஸ் பேரார்வம் காட்டினார். ஆனால் சிமா சியானோ, ஸ்டெப்பி என்று அழைக்கப்படுகின்ற யுரேசியப் புல்வெளிகளைச் சேர்ந்த காட்டுமிராண்டி மக்களுடைய கலாச்சாரத்தின்மீதும் மதத்தின்மீதும் அதிக அக்கறை கொண்டிருந்தார்.

இன்றைய அறிஞர்கள் பைபிளைவிட ஹெராடடஸுடனும் சிமா சியானுடனும் அதிகமாக ஒத்துப் போகின்றனர். அதனால்தான் நவீன நாடுகள் அனைத்தும் பிற நாடுகளைப் பற்றிய தகவல்களைச்

சேகரிப்பதிலும், உலகளாவிய சூழலியல் போக்குகளையும் அரசியல் போக்குகளையும் பொருளாதாரப் போக்குகளையும் ஆய்வு செய்வதிலும் பெரும் முயற்சியை முதலீடு செய்கின்றன. அமெரிக்கப் பொருளாதாரம் பிரச்சனைக்கு உள்ளாகும்போது, சில சமயங்களில், கிறித்தவத்தைத் தீவிரமாகக் கடைபிடிக்கின்ற அரசியல்வாதிகள்கூடத் தங்களுடைய சொந்தப் பாவங்களைக் காரணம் காட்டுவதற்கு பதிலாகச் சீனாவைக் குறை கூறுகின்றனர்.

பைபிளை எழுதியவர்களைவிட ஹெராடடஸும் தியூசிடிடீஸும் யதார்த்தத்தை அதிகச் சிறப்பாகப் புரிந்திருந்தும்கூட, உலகைப் பற்றிய இரண்டு கண்ணோட்டங்களும் மோதிக் கொண்டபோது, பைபிள் அமோக வெற்றி பெற்றது. வரலாறு குறித்து யூதர்கள் கொண்டிருந்த கண்ணோட்டத்தை கிரேக்கர்கள் ஏற்றுக் கொண்டனர். ஏதோ ஒரு காட்டுமிராண்டிக் கும்பல் தங்களை முற்றுகையிட்டு வென்றது என்றால், அது தங்களுடைய பாவங்களுக்குக் கடவுள் கொடுத்த தண்டனைதான் என்று தியூசிடிடீஸுக்கு ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு கிரேக்கர்கள் உறுதியாக நம்பலாயினர். உலகைப் பற்றிய பைபிளின் கண்ணோட்டம் எவ்வளவு தவறானதாக இருந்தாலும், மனிதர்கள் பெரும் எண்ணிக்கையில் ஒத்துழைப்பதற்கான ஒரு சிறந்த அடித்தளத்தை அது வழங்கியது.

இன்றுகூட அமெரிக்க அதிபர்கள் பதவியேற்கும்போது, அவர்கள் தங்கள் கையை ஒரு பைபிள்மீது வைத்து சத்தியம் செய்துவிட்டுத்தான் பதவியேற்கின்றனர். அதேபோல, அமெரிக்கா மற்றும் பிரிட்டன் உட்பட உலகிலுள்ள பல நாடுகளில், நீதிமன்றங்களில் சாட்சிக்காரர்கள் தங்களுடைய கையை ஒரு பைபிள்மீது வைத்து, தாங்கள் கூறுவது 'உண்மை, முற்றிலும் உண்மை, உண்மையைத் தவிர வேறில்லை' என்று சத்தியம் செய்கின்றனர். பல கட்டுக்கதைகளும் கற்பனைக் கதைகளும் தவறுகளும் நிரம்பி வழிகின்ற ஒரு புத்தகத்தின்மீது அவர்கள் சத்தியப் பிரமாணம் மேற்கொள்ளுவது வேடிக்கையாக இருக்கிறது.

## ஆனால் அது பலனளிக்கிறது!

நாம் அதிகச் சிறப்பாக ஒத்துழைப்பதற்குக் கற்பனைக் கதைகள் உதவுகின்றன. இதே கற்பனைக் கதைகள்தான் நம்முடைய ஒத்துழைப்பின் இலக்குகளையும் தீர்மானிக்கின்றன என்பது இதற்கு நாம் கொடுக்கும் விலையாகும். எனவே, ஒத்துழைப்பிற்கான மிகவும் விலாவாரியான அமைப்புமுறைகள் நம்மிடம் இருக்கக்கூடும், ஆனால் அவை கற்பனையான இலக்குகளையும் நலன்களையும் அடைய

மட்டுமே பயன்படுத்தப்படுகின்றன. எனவே, அந்த அமைப்புமுறை சிறப்பாகப் பலனளித்துக் கொண்டிருப்பதுபோலத் தோன்றக்கூடும், ஆனால் நாம் அதன் சொந்த நோக்கத்தை ஏற்றுக் கொண்டால் மட்டுமே அவ்வாறு பலனளிக்கும். எடுத்துக்காட்டாக, இஸ்லாமிய முல்லா ஒருவர், "நம்முடைய அமைப்புமுறை சிறப்பாகப் பலனளிக்கிறது. இப்போது உலகம் நெடுகிலும் 150 கோடி இஸ்லாமியர்கள் இருக்கின்றனர். முன்பு எப்போதையும்விட இப்போது அதிக எண்ணிக்கையிலான மக்கள் குரானைப் படித்து, அல்லாவின் விருப்பத்திற்கு அடிபணிகின்றனர்," என்று கூறக்கூடும். ஆனால், வெற்றியை அளவிடுவதற்கான சரியான அளவுகோல் இதுதானா என்பதுதான் இங்கு முக்கியமான கேள்வி. ஒரு பள்ளியின் தலைமையாசிரியர், "நம்முடைய அமைப்புமுறை சிறப்பாகப் பலனளிக்கிறது. கடந்த ஐந்து ஆண்டுகளில், தேர்வு முடிவுகள் 7.3 சதவீதம் உயர்ந்துள்ளன," என்று கூறக்கூடும். ஆனால் ஒரு பள்ளியைச் சீர்தூக்கிப் பார்ப்பதற்கு இதுதான் சிறந்த வழியா? பண்டைய எகிப்தில் ஓர் அதிகாரி, "நம்முடைய அமைப்புமுறை சிறப்பாகப் பலனளிக்கிறது. உலகில் உள்ள எவரொருவரையும்விட நாம் அதிகமான வரிகளை வசூலிக்கிறோம், அதிகமான கால்வாய்களைத் தோண்டுகிறோம், பெரிய பிரமிடுகளைக் கட்டுகிறோம்," என்று கூறக்கூடும். உண்மைதான், ஃபாரோக்கள் ஆண்ட எகிப்துதான் வரி விதிப்பிலும் நீர்ப்பாசனத்திலும் பிரமிடுகளை உருவாக்குவதிலும் உலகில் முன்னணி வகித்தது. ஆனால் அதுதான் உண்மையிலேயே முக்கியமானதா?

லௌகிகரீதியான, சமூகரீதியான, மற்றும் உளவியல்ரீதியான பல தேவைகள் மக்களுக்கு இருக்கக்கூடும். பண்டைய எகிப்தில் விவசாயிகள் தங்களுடைய வேட்டையாடி மூதாதையரைவிட அதிக அன்பையும் அதிகச் சிறப்பான சமூக உறவுகளையும் அனுபவித்தனர் என்பதில் அவ்வளவு தெளிவு இல்லை. ஊட்டச்சத்து, ஆரோக்கியம், குழந்தை இறப்பு விகிதம் ஆகிய விஷயங்களில் அவர்களுடைய வாழ்க்கை உண்மையில் மோசமாக இருந்ததாகவே தெரிகிறது. ஃபேயும் ஏரியை உருவாக்கிய ஃபாரோவான மூன்றாம் அமீனம்ஹட்டின் ஆட்சியின்போது, கி.மு. 1850ம் ஆண்டையொட்டி உருவாக்கப்பட்ட ஓர் ஆவணத்தில், துவாகேட்டி என்ற ஒரு செல்வந்தரைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. தன் மகன் பெப்பி ஒரு கணக்கராக ஆகத் தேவையானவற்றைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்ற நோக்கத்தில் அவர் அவனை அவனுடைய பள்ளிக்கூடத்திற்கு அழைத்துச் சென்றார். படிப்பதற்காக அவன் தன் ஆற்றல் முழுவதையும் அர்ப்பணிக்கவும், அதன் மூலம், பெரும்பாலான மனிதர்கள் தங்கள் வாழ்வில்

அனுபவிக்கின்ற துன்பங்களிலிருந்து அவன் தப்பித்துக் கொள்ளவும் அவனை ஊக்குவிப்பதற்காக, அவனைப் பள்ளிக்கு அழைத்துச் சென்ற வழியில், விவசாயிகள், தொழிலாளர்கள், ராணுவ வீரர்கள், கைவினைக் கலைஞர்கள் ஆகியோருடைய துயரமான வாழ்க்கையை அவர் அவனுக்கு எடுத்துரைத்தார்.

துவாகேட்டியின் விவரிப்பின்படி, தனக்கென்று சொந்தமாக நிலம் எதுவும் இல்லாத, வயல்களில் கூலி வேலை செய்கின்ற ஒருவனுடைய வாழ்க்கை இன்னல்களும் துயரமும் நிரம்பியதாக இருக்கிறது. கந்தல் ஆடைகளுடன் அவன் நாள் முழுவதும் வேலை பார்த்ததில் அவனுடைய விரல்கள் புண்ணாகின்றன. பிறகு ஃபாரோவின் அதிகாரிகள் அங்கு வந்து, கட்டாய வேலை செய்வதற்காக அவனைக் கூட்டிச் செல்லுகின்றனர். தன்னுடைய கடின உழைப்புக்கான வெகுமதியாக நோயை மட்டுமே அவன் பெறுகிறான். அவன் உயிரோடு வீடு திரும்பினால்கூட, அவன் முற்றிலுமாகக் களைத்தும் சீரழிந்தும் இருக்கிறான். தனக்குச் சொந்தமாக ஏதேனும் நிலத்தை வைத்திருக்கின்ற ஒரு விவசாயியின் தலைவிதியும் அவ்வளவு சிறப்பாக இல்லை. தன்னுடைய வயலுக்கு ஆற்றிலிருந்து வாளிகளில் நீரை நிரப்பிக் கொண்டுவருவதில் அவன் தன் நாள் முழுவதையும் செலவிடுகிறான். நீர் நிரம்பிய அந்த வாளிகளின் பாரத்தைத் தாங்க முடியாமல் அவனுடைய தோள்கள் வளைகின்றன, அவனுடைய கழுத்தைச் சுற்றிலும் கொப்பளங்கள் ஏற்படுகின்றன. காலையில் வெங்காயச் செடிகளுக்கும், மதியம் தன்னுடைய ஈச்ச மரங்களுக்கும், மாலையில் தன்னுடைய கொத்துமல்லி வயலுக்கும் அவன் நீர் பாய்ச்சியாக வேண்டும். இறுதியில் அவன் நிலை குலைந்து கீழே விழுந்து இறந்துவிடுகிறான். துவாகேட்டியின் உரை இவற்றையெல்லாம் வேண்டுமென்றே மிகைப்படுத்தியிருக்கக்கூடும், ஆனால் அது நிச்சயமாக மிக அதிகமாக மிகைப்படுத்தியிருக்க வாய்ப்பில்லை. ஃபாரோக்கள் ஆண்ட எகிப்து அந்தக் காலகட்டங்களில் மிகவும் சக்தி வாய்ந்த ஒரு பேரரசாக இருந்தது. ஆனால் ஒரு சாதாரண விவசாயி ஏகப்பட்ட வரிகளைச் செலுத்த வேண்டியிருந்தது, கட்டாய வேலைக்கு உட்பட வேண்டியிருந்தது. மருத்துவமனை வசதிகளோ அல்லது சமூகப் பாதுகாப்புச் சேவைகளோ அவனுக்குக் கிடைக்கவில்லை.

இது எகிப்தில் மட்டுமே இருந்த குறைபாடு அல்ல. சீன அரச மரபுகள், இஸ்லாமியப் பேரரசுகள், ஐரோப்பியப் பேரரசுகள் ஆகியவை அளப்பரிய சாதனைகளை நிகழ்த்தியிருந்தபோதிலும், கி.பி. 1850ம் ஆண்டில்கூட, ஒரு சராசரி நபரின் வாழ்க்கை, பண்டைய

வேட்டையாடிகளின் வாழ்க்கையைவிட அவ்வளவு சிறப்பானதாக இருக்கவில்லை. உண்மையில், அதைவிட மோசமாக இருந்திருக்கக்கூடும். 1850ம் ஆண்டில், சீன விவசாயிகளும் மேன்செஸ்டர் தொழிற்சாலையில் வேலை செய்த தொழிலாளர்களும் தங்களுடைய வேட்டையாடி மூதாதையரைவிடக் கூடுதலான நேரம் வேலை செய்தனர். அவர்களுடைய வேலைகள் உடல்ரீதியாக அதிகக் கடினமானவையாகவும் மனரீதியாக அவ்வளவு நிறைவளிக்காதவையாகவும் இருந்தன. சரிவிகித உணவு அவர்களுக்குக் கிடைக்கவில்லை. சுகாதார நிலையும் ஒப்பிடப்பட முடியாத அளவுக்கு மிக மோசமாக இருந்தது. தொற்றுநோய்கள் பரவலாக இருந்தன.

பின்வரும் இரண்டு வெவ்வேறு வகையான விடுமுறைகளில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கும்படி உங்களிடம் கூறப்படுவதாக வைத்துக் கொள்ளுவோம்:

**கற்கால விடுமுறை:** முதல் நாளன்று நாம் ஒரு சுத்தமான, புத்துணர்ச்சியூட்டும் காட்டில் பத்து மணிநேரம் நடப்போம். அன்றிரவு, ஓர் ஆற்றின் அருகே உள்ள ஒரு வெட்டவெளியில் நாம் முகாமிடுவோம். இரண்டாம் நாளன்று, ஆற்றில் கீழ்நோக்கிப் பத்து மணிநேரம் படகில் செல்லுவோம். அன்றிரவு, ஒரு சிறிய ஏரியின் கரையில் முகாமிடுவோம். மூன்றாம் நாளன்று, அந்த ஏரியில் எப்படி மீன் பிடிப்பது என்பதையும், அருகிலுள்ள காட்டில் காளான்களை எப்படிக் கண்டுபிடிப்பது என்பதையும் உள்ளூர் மக்களிடமிருந்து நாம் கற்றுக் கொள்ளுவோம்.

**நவீனப் பாட்டாளிகள் காலத்திய விடுமுறை:** முதல் நாளன்று, மாசுபாட்டுடன்கூடிய ஒரு நெசவுத் தொழிற்சாலையில் பத்து மணிநேரம் நாம் வேலை செய்வோம். ஒன்றன்மீது ஒன்றாக அடுக்கப்பட்டுள்ளதுபோல இருக்கும் சிறிய அடுக்குமாடிக் குடியிருப்புகளில் நாம் அன்றிரவைக் கழிப்போம். இரண்டாம் நாளன்று, உள்ளூர் அங்காடியில் காசாளராகப் பத்து மணிநேரம் நாம் வேலை செய்வோம். அன்றிரவு அதே வீட்டில் நாம் தங்குவோம். மூன்றாம் நாளன்று, ஒரு வங்கியில் நம் பெயரில் எப்படி ஒரு கணக்கைத் துவக்குவது என்பதையும், தவணைப் படிவங்களை எப்படி நிரப்புவது என்பதையும் உள்ளூர் மக்களிடமிருந்து நாம் கற்றுக் கொள்ளுவோம்.

இவ்விரண்டு விடுமுறைகளில் நீங்கள் எதைத் தேர்ந்தெடுப்பீர்கள்?

எனவே, மனித ஒத்துழைப்புப் பிணையங்களை நாம் மதிப்பீடு செய்யும்போது, அது நாம் பயன்படுத்துகின்ற அளவுகோல்களையும் நாம் கொண்டிருக்கின்ற கண்ணோட்டங்களையும் சார்ந்ததாக இருக்கிறது. ஃபாரோக்கள் காலகட்டத்திய எகிப்தை நாம் எதன்

அடிப்படையில் எடைபோடுகிறோம் - உற்பத்தியா, ஊட்டச்சத்தா, அல்லது சமூக இணக்கமா? நாம் யார்மீது கவனம் செலுத்துகிறோம் - மேட்டுக்குடியினர்மீதா, எளிய விவசாயிகள்மீதா, அல்லது பன்றிகள் மற்றும் முதலைகள்மீதா? வரலாறு என்பது ஓர் ஒற்றை விவரிப்பு அல்ல, மாறாக, ஆயிரக்கணக்கான மாற்று விவரிப்புகளை உள்ளடக்கியது அது. நாம் ஒன்றைச் சொல்லத் தேர்ந்தெடுக்கும்போது, மற்றவற்றின் வாய்களைக் கட்டிப் போடுவதையும் நாம் தேர்ந்தெடுக்கிறோம்.

மனித ஒத்துழைப்புப் பிணையங்கள் தாம் சொந்தமாகக் கண்டுபிடித்த அளவுகோல்களால் தம்மைத் தாமே எடைபோட்டுக் கொள்ளுகின்றன. அவை வழக்கமாக மிக உயர்வான மதிப்பெண்களைத் தமக்குத் தாமே கொடுத்துக் கொள்ளுகின்றன. குறிப்பாக, கடவுளர், நாடுகள், பெருநிறுவனங்கள் போன்ற கற்பனையான விஷயங்களின் பெயரில் உருவாக்கப்பட்டுள்ள மனிதப் பிணையங்கள் பொதுவாக அந்தக் கற்பனையான விஷயங்களின் கண்ணோட்டத்திலிருந்தே தம்முடைய வெற்றியைச் சீர்தூக்கிப் பார்க்கின்றன. ஒரு மதம் தெய்விகக் கட்டளைகளை இம்மி பிசகாமல் பின்பற்றும்போது அது வெற்றிகரமானதாகத் திகழுகிறது. ஒரு நாடு தேசிய நலன்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து அவற்றை ஊக்குவித்தால் அது புகழ்மிக்கதாக இருக்கும். ஒரு பெருநிறுவனம் ஏராளமான பணத்தை ஈட்டினால் அது செழிப்புறும்.

எந்தவொரு மனிதப் பிணையத்தின் வரலாற்றையும் ஆய்வு செய்யும்போது, அவ்வப்போது சற்று நிதானித்து, விஷயங்களை ஏதேனும் நிஜமான, தொட்டுணரப்படக்கூடிய ஒன்றின் கண்ணோட்டத்திலிருந்து பார்ப்பது நல்லது. ஒன்று நிஜம் என்பதை எப்படிக் கண்டுபிடிப்பது? அது மிக எளிது. “அதனால் துன்புற முடியுமா?” என்று உங்களை நீங்களே கேட்டுக் கொள்ளுங்கள். ‘சூஸ்’ கடவுளின் கோவிலை மக்கள் எரித்துச் சாம்பலாக்கும்போது, சூஸ் துன்புறுவதில்லை. யூரோ தன் பணமதிப்பை இழக்கும்போது, யூரோ துன்புறுவதில்லை. ஒரு வங்கி திவாலாகும்போது, அந்த வங்கி துன்புறுவதில்லை. ஒரு நாடு ஒரு போரில் தோல்வியுறும்போது, உண்மையில் அந்த நாடு துன்புறுவதில்லை. அது வெறுமனே ஓர் உருவகம்தான். இதற்கு நேர்மாறாக, ஒரு போரில் ஒரு வீரர் காயமுற்றால், அவர் உண்மையிலேயே துன்புறுகிறார். பட்டினியால் வாடும் ஒரு விவசாயி உண்ணுவதற்கு எதுவும் இல்லை என்றால், அவர் துன்புறுகிறார். ஒரு பசு தனக்குப் புதிதாகப் பிறந்திருக்கும் கன்றிடமிருந்து பிரிக்கப்படும்போது, அந்தப் பசு துன்புறுகிறது. இதுதான் யதார்த்தம்.

கற்பனைக் கதைகளில் நாம் கொண்டுள்ள நம்பிக்கையாலும்கூட நான் துன்புறுகிறோம் என்பது உண்மைதான். எடுத்துக்காட்டாக, நாடு மற்றும் மதம் தொடர்பான கட்டுக்கதைகள் ஒரு போர் ஏற்படக் காரணமாக அமையக்கூடும். அதில் லட்சக்கணக்கானோர் தங்களுடைய வீடுகளையும், தங்களுடைய கைகால்களையும், தங்களுடைய உயிரையும்கூட இழப்பர். போருக்கான காரணம் கற்பனையானது, ஆனால் துன்பம் 100 சதவீதம் நிஜமானது. இதனால்தான், யதார்த்தத்திலிருந்து கற்பனைக் கதையைத் தனித்துவப்படுத்த நாம் கடுமையாக முயற்சிக்க வேண்டியது முக்கியமாகிறது.

அதே நேரம், கற்பனைக் கதை மோசமானதல்ல. அது இன்றியமையாதது. பணம், நாடுகள், பெருநிறுவனங்கள் போன்ற விஷயங்களைப் பற்றிய, பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ள கதைகள் இல்லாமல், சிக்கலான எந்தவொரு மனிதச் சமுதாயமும் இயங்குவது சாத்தியமில்லை. மனிதனால் உருவாக்கப்பட்டக் கால்பந்து விளையாட்டு விதிகளில் எல்லோரும் நம்பிக்கை கொள்ளாவிட்டால் நம்மால் கால்பந்து விளையாட முடியாது. சந்தைகள் மற்றும் நீதிமன்றங்கள் பற்றிய கற்பனைக் கதைகளை நம்பாமல் அவற்றின் பலன்களை நம்மால் அனுபவிக்க முடியாது. ஆனால் கதைகள் வெறும் கருவிகள்தான். அவை நம்முடைய இலக்குகளாகவோ அல்லது அளவுகோல்களாகவோ ஆகிவிடக்கூடாது. அவை கற்பனையானவை என்பதை நாம் மறக்கும்போது, யதார்த்தத்துடனான நம்முடைய தொடர்பை நாம் இழக்கிறோம். பிறகு, 'பெருநிறுவனங்களுக்கு ஏராளமான பணத்தை ஈட்டிக் கொடுப்பதற்காகவும்,' 'நாட்டு நலனைப் பாதுகாப்பதற்காகவும்' நாம் போர்களைத் துவக்குகிறோம். பெருநிறுவனங்களும் பணமும் நாடுகளும் நம்முடைய கற்பனையில் மட்டுமே இடம்பெற்றுள்ளன. நமக்குப் பணிவிடைகள் செய்வதற்காக நாம் அவற்றைக் கண்டுபிடித்தோம், ஆனால் நாம் ஏன் அவற்றுக்கு சேவை செய்வதில் நம் வாழ்க்கையைத் தியாகம் செய்து கொண்டிருக்கிறோம்?

முந்தைய எந்தவொரு யுகத்திலும் இருந்ததைவிட இருபத்தோராம் நூற்றாண்டில் இன்னும் அதிக சக்தி வாய்ந்த கற்பனைக் கதைகளையும் அதிக எதேச்சாதிகாரப் போக்கைக் கொண்ட மதங்களையும் நாம் உருவாக்குவோம். உயிர்தொழில்நுட்பம் மற்றும் கணினிப் படிமுறைத் தீர்வுகளின் உதவியோடு இந்த மதங்கள் நம்முடைய வாழ்வின் ஒவ்வொரு கணத்தையும் கட்டுப்படுத்தும் என்பதோடு மட்டுமல்லாமல், நம்முடைய உடல்களையும் மூளைகளையும் மனங்களையும்கூட அவற்றால் மாற்றியமைக்க முடியும், நரகங்களுடனும்

சொர்க்கங்களுடனும்கூடிய முற்றிலும் கற்பனையான உலகங்களை அவற்றால் உருவாக்க முடியும். யதார்த்தத்திலிருந்து கற்பனைக் கதைகளையும், அறிவியலிலிருந்து மதத்தையும் வேறுபடுத்திப் பார்ப்பது முன்பு எப்போதையும்விட அதிகக் கடினமானதாக ஆகும், அதிக முக்கியமானதாகவும் ஆகும்.

## அத்தியாயம் 5

# விநோதமான ஜோடி

கதைகள் மனிதச் சமுதாயங்களின் அடித்தளங்களாகவும் தூண்களாகவும் செயல்படுகின்றன. வரலாறு மலர மலர, கடவுளரையும் நாடுகளையும் பெருநிறுவனங்களையும் பற்றிய கதைகள் அதிக சக்தி வாய்ந்தவையாக உருவாகி நம்முடைய புறவயமான யதார்த்தத்தின்மீது ஆதிக்கம் செலுத்தத் தொடங்கின. மாபெரும் கடவுளான ஸோபெக், பைபிளின் ஆணைகள் ஆகியவற்றில் மக்கள் நம்பிக்கை கொண்டிருந்தது, ஃபேயும் ஏரியையும் சீனப் பெருஞ்சுவரையும் ஷாத்ர நகரப் பேராலயத்தையும் கட்டியெழுப்ப உதவியது. துரதிர்ஷ்டவசமாக, மக்களுக்கு இக்கதைகள்மீது இருந்த கண்மூடித்தனமான நம்பிக்கையின் காரணமாக, அவர்களுடைய முயற்சிகள், அறிவு படைத்த நிஜ உயிரினங்களின் வாழ்க்கையை மேம்படுத்துவதற்கு பதிலாக, கடவுளர், நாடுகள் போன்ற கற்பனையானவற்றின் புகழை அதிகரிப்பதன்மீதே பெரும்பாலும் செலவிடப்பட்டன.

இந்த ஆய்வு இன்றளவும் உண்மையானதாக இருக்கிறதா? மேலோட்டமாகப் பார்க்கும்போது, நவீனச் சமுதாயம் பண்டைய எகிப்தியப் பேரரசுகளிடமிருந்தும் இடைக்காலச் சீனப் பேரரசுகளிடமிருந்தும் மிகவும் வேறுபட்டு இருப்பதுபோலத் தோன்றுகிறது. நவீன அறிவியலின் வளர்ச்சி மனித விளையாட்டின் அடிப்படை விதிகளை மாற்றியிருக்கிறதல்லவா? பாரம்பரியக் கட்டுக்கதைகள் இன்று தொடர்ந்து முக்கியத்துவம் வாய்ந்தவையாக இருந்து வருகின்றபோதிலும், நவீனச் சமுதாய அமைப்புமுறைகள், பண்டைய எகிப்திலும் இடைக்காலச் சீனாவிலும் இடம்பெற்றிராத பரிணாம வளர்ச்சிக் கோட்பாடு போன்ற புறவயமான அறிவியல் கோட்பாடுகளை அதிகம் சார்ந்திருக்கின்றன என்று நம்மால் கூற முடியும்தானே?

அறிவியல் கோட்பாடுகள் ஒரு புதிய வகையான கட்டுக்கதைகள் என்றும், அறிவியலில் நமக்கு இருக்கும் நம்பிக்கையானது பண்டைய எகிப்தியர்களுக்கு ஸோபெக் கடவுள்மீது இருந்த நம்பிக்கையிலிருந்து எந்த விதத்திலும் வேறுபட்டதல்ல என்றும் நம்மால் வாதிட முடியும்தான். ஆனால், இந்த ஒப்பீடு செல்லுபடியாகாது. ஸோபெக் தன்னுடைய பக்தர்களின் கூட்டுக் கற்பனையில் மட்டுமே இடம்பெற்றிருந்தார். அவர்கள் அவரைக் குறித்துப் பிரார்த்தனை

செய்தது எகிப்தியச் சமுதாய அமைப்புமுறையை வலுப்படுத்துவதற்கு உதவியது என்பதும், வெள்ளங்களையும் வறட்சிகளையும் தவிர்க்க உதவிய அணைகளையும் கால்வாய்களையும் உருவாக்குவதற்கு உதவியது என்பதும் உண்மைதான். ஆனாலும், இப்பிரார்த்தனைகள் தாமாகவே நைல் நதியின் நீரளவை உயர்த்தவோ அல்லது குறைக்கவோ இல்லை. யார் தங்களுக்குத் தாங்களே உதவிக் கொள்ளுகிறார்களோ, அவர்களுக்குக் கடவுள் உதவுவார் என்ற பிரபலமான கூற்றை நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். கடவுள் என்ற ஒருவர் கிடையாது என்பதைத்தான் இது சுற்றி வளைத்துக் கூறுகிறது. ஆனால் அவர்மீது நாம் கொண்டுள்ள நம்பிக்கை நமக்கு நாமே எதையேனும் செய்து கொள்ள நமக்கு உத்வேகமூட்டுகிறது. அதாவது, அது நமக்கு உதவுகிறது என்று பொருள். கடவுளைப் போலன்றி, நுண்ணுயிர்க்கொல்லிகள் போன்ற மருந்துகள், தங்களுக்குத் தாங்களே உதவிக் கொள்ளாத மக்களுக்குக்கூட உதவுகின்றன. நீங்கள் அந்த மருந்துகள்மீது நம்பிக்கை கொண்டிருக்கிறீர்களோ இல்லையோ, தொற்றுநோய்களை அவை குணப்படுத்துகின்றன.

எனவே, நவீன உலகம் இதற்கு முந்தைய உலகத்திடமிருந்து பெரிதும் வேறுபட்டுள்ளது. பல ஆயிரமாண்டுகாலம் முயற்சி செய்தும் பஞ்சம், தொற்றுநோய், போர் போன்றவற்றை வெற்றி கொள்ள எகிப்திய ஃபாரோக்களும் சீனப் பேரரசர்களும் தவறிவிட்டனர். நவீனச் சமுதாயங்கள் ஒருசில நூற்றாண்டுகளில் அதை சாதித்துவிட்டன. பரஸ்பரம் பொதுவான அகவயமான கட்டுக்கதைகளை ஒதுக்கிவிட்டுப் பாரபட்சமற்ற அறிவியல் அறிவை ஏற்றுக் கொண்டதன் பலன்தானே இது? இச்செயல்முறை இனிவரும் நூற்றாண்டுகளில் வேகம் பிடிக்கும் என்று நாம் எதிர்பார்க்கலாம் அல்லவா? மனிதர்களை அடுத்த உயர்ந்த நிலைக்கு மேம்படுத்தவும், முதுமையிலிருந்து மீளவும், மகிழ்ச்சிக்கான திறவுகோலைக் கண்டுபிடிக்கவும் தொழில்நுட்பம் உதவுவதால், கற்பனையான கடவுளரையும் நாடுகளையும் பெருநிறுவனங்களையும் குறித்து அக்கறை கொள்ளுவதை விட்டுவிட்டு, பௌதிக யதார்த்தத்தையும் உயிரியல் யதார்த்தத்தையும் புரிந்து கொள்ளுவதன்மீது மக்கள் கவனம் செலுத்துவார்கள்தானே?

அது அப்படித் தோன்றக்கூடும், ஆனால் உண்மையில் விஷயங்கள் அதிகச் சிக்கலானவையாக இருக்கின்றன. மனிதகுலப் போக்கின் விதிமுறைகளை நவீன அறிவியல் மாற்றியிருக்கிறது என்பது உண்மைதான், ஆனால் அது வெறுமனே கட்டுக்கதைகளை அகற்றிவிட்டு அவற்றின் இடத்தில் உண்மைத் தகவல்களை நிலைப்படுத்தவில்லை. கட்டுக்கதைகள் மனிதகுலத்தின்மீது இன்னமும்

ஆதிக்கம் செலுத்திக் கொண்டுதான் இருக்கின்றன. அறிவியல் இந்தக் கட்டுக்கதைகளுக்கு மேலும் வலுவூட்ட மட்டுமே செய்கிறது. பரஸ்பரம் பொதுவான அகவயமான யதார்த்தத்தை அழிப்பதற்கு பதிலாக, அகவயமான மற்றும் புறவயமான யதார்த்தங்களை முன்பைவிட அதிக முழுமையாகக் கட்டுப்படுத்துவதற்கு அறிவியல் அதற்கு உதவும். கணினிகள் மற்றும் உயிர்பொறியியலின் காரணமாக, கற்பனைக்கும் யதார்த்தத்திற்கும் இடையேயான வேறுபாடு மங்கும். ஏனெனில், யதார்த்தம் தங்களுடைய மனங்கவர்ந்த கற்பனைக் கதைகளை ஒத்து இருக்கும்படியாக மக்கள் அந்த யதார்த்தத்தை மாற்றியமைப்பார்கள்.

ஸோபெக் கோவில் பூசாரிகள் தெய்விக முதலைகள் இருந்ததாகக் கற்பனை செய்தனர், ஆனால் ஃபாரோக்கள் இறவாநிலையைப் பற்றிக் கனவு கண்டனர். யதார்த்தத்தில், அந்தப் புனித முதலை ஒரு சாதாரணமான சதுப்புநில முதலைதான். பொன்னாடைகள் அணிவிக்கப்பட்டு அது அழகுபடுத்தப்பட்டிருந்தது. அதேபோல, அந்த ஃபாரோவும் ஓர் ஏழை விவசாயியைப்போல, என்றேனும் ஒருநாள் மடியக்கூடிய ஒரு சாமானியர்தான். மரணத்திற்குப் பிறகு அவருடைய உடல் பல வேதிப்பொருட்களைக் கொண்டும் வாசனைத் திரவியங்களைக் கொண்டும் பதப்படுத்தப்பட்டது. ஆனாலும், அது உயிரற்ற ஒன்றாகவே இருந்தது. இதற்கு நேர்மாறாக, இருபத்தோராம் நூற்றாண்டின் அறிவியலறிஞர்களால் உண்மையான அதிமுதலைகளை உருவாக்க முடியக்கூடும்; மனித மேட்டுக்குடியினர் இப்புவியில் என்றென்றும் இளமையாக இருப்பதற்குத் தேவையானவற்றை அவர்களால் கண்டுபிடிக்க முடியக்கூடும்.

எனவே, அறிவியலின் வளர்ச்சி சில கட்டுக்கதைகளையும் மதங்களையும் முன்பைவிட அதிக வலிமையானவையாக ஆக்கக்கூடும். இதற்கான காரணத்தைப் புரிந்து கொள்ளுவதற்கும், இருபத்தோராம் நூற்றாண்டின் சவால்களை எதிர்கொள்ளுவதற்கும், இருப்பதிலேயே மிகவும் விரக்தியளிக்கக்கூடிய பின்வரும் கேள்வியை நமக்கு நாமே மீண்டும் கேட்டுக் கொண்டாக வேண்டும்: நவீன அறிவியலானது மதத்தோடு எந்த விதத்தில் தொடர்பு கொண்டதாக இருக்கிறது? இக்கேள்வி குறித்து என்னவெல்லாம் கூறப்பட முடியுமோ, மக்கள் அவற்றையெல்லாம் ஏற்கனவே எண்ணற்ற முறை கூறிவிட்டனர். ஆனால் நடைமுறையில், அறிவியலும் மதமும், 500 ஆண்டுகாலம் திருமண ஆலோசனை பெற்றப் பிறகும்கூட ஒருவரையொருவர் புரிந்து கொண்டிராத ஒரு தம்பதியரைப் போன்றவையாகும். அக்கணவன் சின்ட்ரெல்லாவைப் பற்றிக் கனவு காணுகிறான், அவனுடைய மனைவியோ தன்னுடைய ராஜகுமாரனுக்காகக் காத்திருக்கிறாள்.

இவற்றுக்கிடையே, குப்பையை யார் வெளியே கொண்டு கொட்டுவது என்பது குறித்து அவர்களுக்கு இடையே வாக்குவாதம் முளைக்கிறது.

## கிருமிகளும் சாத்தான்களும்

அறிவியல் மற்றும் மதம் தொடர்பான தவறான புரிதல்களில் பெரும்பாலானவை மதத்தைப் பற்றிய தவறான வரையறைகளிலிருந்துதான் முளைக்கின்றன. பல சமயங்களில், மதம் மூடநம்பிக்கைகளுடனும், ஆன்மிகத்துடனும், புலனுக்கு அப்பாற்பட்ட சக்திகள்மீதான நம்பிக்கையுடனும், கடவுள்மீதான நம்பிக்கையுடனும் குழப்பிக் கொள்ளப்படுகிறது. மதம் இவற்றில் எதுவும் இல்லை. மதத்தை மூடநம்பிக்கைகளோடு சமன்படுத்த முடியாது. ஏனெனில், பெரும்பாலான மக்கள், தாங்கள் பெரிதும் போற்றி மதிக்கின்ற தங்களுடைய ஆழமான நம்பிக்கைகளை 'மூடநம்பிக்கைகள்' என்று அழைக்க மாட்டார்கள். நம்மைப் பொருத்தவரை, நாம் மட்டுமே எப்போதும் 'உண்மை'யின்மீது நம்பிக்கை கொண்டிருக்கிறோம்; மற்றவர்கள்தான் மூடநம்பிக்கைகளைக் கொண்டிருக்கின்றனர்.

அதேபோல, வெகுசிலரே புலனுக்கு அப்பாற்பட்ட சக்திகளை நம்புகின்றனர். சாத்தான்கள், ஆவிகள், தேவதைகள் ஆகியவற்றில் நம்பிக்கை கொண்டுள்ளவர்களுக்கு அவை புலனுக்கு அப்பாற்பட்ட சக்திகள் அல்ல. முள்ளம்பன்றிகள், தேள்கள், கிருமிகள் ஆகியவற்றைப்போலவே இவையும் இயற்கையின் இன்றியமையாத ஒரு பகுதி என்று அவர்கள் கருதுகின்றனர். கண்களுக்குப் புலப்படாத கிருமிகள்தான் நோய்களுக்குக் காரணம் என்று நவீன மருத்துவர்கள் கிருமிகளைக் குறை கூறுகின்றனர். ஆனால், கண்களுக்குப் புலப்படாத ஆவிகள்தான் நோய்களுக்குக் காரணம் என்று மாந்திரீகர்கள் கூறுகின்றனர். அவர்களைப் பொருத்தவரை, ஆவிகள் புலனுக்கு அப்பாற்றபட்டவை என்று கூறுவதற்கு எதுவுமில்லை. நீங்கள் ஏதோ ஓர் ஆவியைக் கோபப்படுத்தினால், அந்த ஆவி உங்கள் உடலுக்குள் நுழைந்து உங்களுக்கு வலியை உண்டாக்குகிறது. இதைவிட இயற்கையான விஷயம் வேறு என்ன இருக்க முடியும்? ஆவிகளை நம்பாதவர்கள்தான் அவை இயற்கைக்கு அப்பாற்பட்டவை என்று நினைக்கின்றனர் என்று அந்த மாந்திரீகர்கள் கூறுகின்றனர்.

புலன்களுக்கு அப்பாற்பட்ட சக்திகளில் வைக்கப்படும் நம்பிக்கையை மதத்தோடு சமன்படுத்துவது, இயற்கை நிகழ்வுகள் அனைத்தையும் மதம் என்ற ஒன்று இல்லாமலேயே உங்களால் புரிந்து கொள்ள முடியும் என்றும், மதம் ஒரு கட்டாயமல்ல, நீங்கள் விரும்பினால் அதைப்

பின்பற்றலாம் என்றும் அர்த்தமாகிறது. இயற்கையை முழுமையாகவும் கச்சிதமாகவும் அறிந்துள்ள நீங்கள், 'புலன்களுக்கு அப்பாற்பட்ட' மதக் கோட்பாடுகள் சிலவற்றைச் சேர்த்துக் கொள்ளலாமா வேண்டாமா என்பதைத் தீர்மானித்துக் கொள்ளலாம். ஆனால், தம்மை ஒதுக்கிவிட்டு இவ்வுலகை உங்களால் புரிந்து கொள்ள முடியாது என்று பெரும்பாலான மதங்கள் வாதிடுகின்றன. அதாவது, அவற்றின் கொள்கைகளை நீங்கள் கருத்தில் கொள்ளாவிட்டால், நோய்கள், வறட்சிகள், நிலநடுக்கங்கள் ஆகியவற்றுக்கான காரணங்களை உங்களால் ஒருபோதும் புரிந்து கொள்ள முடியாது என்பது அதன் பொருள்.

மதத்தைக் 'கடவுள்மீதான நம்பிக்கை' என்று வரையறுப்பதும் பிரச்சனையான ஒன்றுதான். ஒரு கிறித்தவர் கடவுள்மீது நம்பிக்கை கொண்டிருப்பதால் அவர் சமயப் பற்றுக் கொண்டவர் என்று நாம் கூறுகிறோம். ஆனால், கம்யூனிசவாதத்தில் கடவுள் யாரும் கிடையாது என்பதால் ஒரு தீவிரமான கம்யூனிசவாதியை சமயப் பற்றுக் கொண்டவராக நாம் கருதுவதில்லை. ஆனால், மதம் என்பது மனிதர்களால் படைக்கப்பட்டதே அன்றி, கடவுளரால் அல்ல. அதன் சமுதாயச் செயல்பாடுகளால் அது வரையறுக்கப்படுகிறதே அன்றி, கடவுளரின் உருவச்சிலைகளால் அல்ல. மனித விதிமுறைகள், சட்டதிட்டங்கள், மற்றும் விழுமியங்களுக்கு உச்சபட்ச நியாயம் கற்பிக்கின்ற, எல்லாவற்றையும் உள்ளடக்கிய ஒரு கதைதான் மதமாகும்.

மனிதர்களாகிய நம்மால் கண்டுபிடிக்கப்படாத சில அறநெறி விதிகளுக்கு நாம் உட்பட்டிருக்கிறோம் என்றும், அவ்விதிகளை நம்மால் மாற்ற முடியாது என்றும் மதங்கள் வலியுறுத்துகின்றன. இந்த அறநெறி விதிகளைக் கடவுள் உருவாக்கினார் என்றும், யூத பைபிளில் அவை வெளிப்படுத்தப்பட்டுள்ளன என்றும் தீவிர சமயப் பற்றுக் கொண்ட ஒரு யூதர் கூறுவார். பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகியோர் அந்த விதிகளை உருவாக்கினர் என்றும், வேதங்களின் வழியாக அவை நமக்கு வெளிப்படுத்தப்பட்டுள்ளன என்றும் ஓர் இந்து கூறுவார். இவையெல்லாம் வெறும் இயற்கை விதிகள் என்றும், எந்தக் கடவுளும் இவற்றைப் படைக்கவில்லை என்றும் புத்தமதம், தாவோயிசம், கம்யூனிசவாதம், நாஜியிசம், தாராளவாதம் ஆகிய பிற மதங்கள் வாதிடுகின்றன. புத்தரில் தொடங்கி லாவோசி, கார்ல் மார்க்ஸ், மற்றும் ஹிட்லர்வரை பல்வேறு தீர்க்கதரிசிகளால் கண்டுபிடிக்கப்பட்டு வெளிப்படுத்தப்பட்டப் பல்வேறு இயற்கை விதிகளில் பலதரப்பட்ட மக்கள் நம்பிக்கை கொண்டுள்ளனர்.

யூதச் சிறுவன் ஒருவன் தன் தந்தையிடம் சென்று, "அப்பா, நாம் ஏன் பன்றி இறைச்சியை உண்ணக்கூடாது?" என்று கேட்கிறான். அவனுடைய தந்தை தன்னுடைய சுருட்டையான தாடியைத் தடவியபடி சில கணங்கள் சிந்தித்துவிட்டு, "ஏனெனில், உலகம் அப்படித்தான் செயல்படுகிறது. இதைப் புரிந்து கொள்ள உனக்கு வயது போதாது. ஆனால், நாம் பன்றிக்கறியைச் சாப்பிட்டால் கடவுள் நமக்கு தண்டனை வழங்குவார். நமக்கு ஒரு மோசமான முடிவு ஏற்படும். இது என்னுடைய கருத்து அல்ல. இது நம்முடைய யூதகுருவின் கருத்தும் அல்ல. நம்முடைய யூதகுரு இவ்வுலகைப் படைத்திருந்தால், பன்றிக்கறி சாப்பிடுவதில் எந்தத் தவறும் இல்லை என்று கருதுகின்ற ஓர் உலகை அவர் உருவாக்கியிருந்திருப்பார். ஆனால் அவர் இவ்வுலகை உருவாக்கவில்லை, மாறாக, கடவுள் இதைப் படைத்துள்ளார். நாம் பன்றிக்கறி சாப்பிடக்கூடாது என்று கடவுள் கூறியுள்ளார். அதற்கான காரணம் எனக்குத் தெரியாது. ஆனால் கடவுள் கூறியிருப்பதால் நாம் அதைச் சாப்பிடக்கூடாது, புரிகிறதா?" என்று பதிலளிக்கிறார்.

1943ல் ஜெர்மானியச் சிறுவன் ஒருவன், நாஜிப் படையில் ஒரு மூத்த அதிகாரியாகப் பணியாற்றும் தன் தந்தையிடம் சென்று, "அப்பா, நாம் ஏன் யூதர்களைக் கொன்று கொண்டிருக்கிறோம்?" என்று கேட்கிறான். அவர் தன்னுடைய பளபளப்பான ஷூக்களை அணிந்தபடி இவ்வாறு விளக்குகிறார்: "உலகம் இப்படித்தான் செயல்படுகிறது. இதைப் புரிந்து கொள்ள உனக்கு வயது போதாது. ஆனால், யூதர்கள் வாழ நாம் அனுமதித்தால், அவர்கள் மனிதகுலத்தைச் சீரழித்து முற்றிலுமாக அழித்துவிடுவார்கள். இது என்னுடைய கருத்து அல்ல. இது நம்முடைய தலைவரான ஹிட்லரின் கருத்தும் அல்ல. ஹிட்லர் இவ்வுலகை உருவாக்கியிருந்தால், இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறை விதிகள் பொருத்தமற்றவையாக இருக்கின்ற ஓர் உலகத்தைப் படைத்திருந்திருப்பார். அவ்வுலகில் ஆரியர்களாலும் யூதர்களாலும் கச்சிதமான இணக்கத்துடன் சேர்ந்து வாழ்ந்திருக்க முடியும். ஆனால் ஹிட்லர் இவ்வுலகைப் படைக்கவில்லை. அவர் எப்படியோ இயற்கை விதிகளைப் புரிந்து கொண்டு, அவற்றுக்கு இசைவாக எவ்வாறு நாம் வாழ வேண்டும் என்று மட்டுமே நமக்கு அறிவுறுத்தியிருக்கிறார். நாம் இவ்விதிகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்காவிட்டால், நமக்கு ஒரு மோசமான முடிவு ஏற்படும். நான் கூறுவது உனக்குப் புரிகிறதா?"

இன்று ஓர் ஆங்கிலேயச் சிறுவன், தாராளவாதக் கட்சியைச் சேர்ந்த ஒரு நாடாளுமன்ற உறுப்பினரான தன் தந்தையிடம் சென்று, "அப்பா, மத்தியக் கிழக்கு நாடுகளில் உள்ள இஸ்லாமியர்களின் மனித உரிமைகள் குறித்து நாம் ஏன் அக்கறை காட்ட வேண்டும்?" என்று

கேட்கிறான். அந்தத் தந்தை தன்னுடைய தேநீர்க் கோப்பையைக் கீழே வைத்துவிட்டு, ஒரு கணம் சிந்தித்துவிட்டு, “உலகம் அப்படித்தான் செயல்படுகிறது. அதைப் புரிந்து கொள்ள உனக்கு வயது போதாது. ஆனால், மத்தியக் கிழக்கு நாடுகளில் உள்ள இஸ்லாமியர்கள் உட்பட அனைத்து மனிதர்களும் ஒரே இயல்பைத்தான் கொண்டுள்ளனர். எனவே, எல்லோரும் ஒரே மாதிரியான உரிமைகளைத்தான் அனுபவிக்கின்றனர். இது என்னுடைய கருத்து அல்ல. இது நம்முடைய நாடாளுமன்றத்தின் ஒரு தீர்மானமும் அல்ல. நாடாளுமன்றம் இந்த உலகத்தைப் படைத்திருந்தால், பரிசீலனை என்று பெயரில் குவாண்டம் இயற்பியல் போன்ற விஷயங்களோடு சேர்த்து உலகளாவிய மனித உரிமைகளும் ஏதோ ஒரு துணைக்குழுவில் புதைக்கப்பட்டிருக்கும். ஆனால், நாடாளுமன்றம் இவ்வுலகை உருவாக்கவில்லை. அது இவ்வுலகைப் புரிந்து கொள்ள முயற்சிக்கிறது, அவ்வளவுதான். மத்தியக் கிழக்கில் உள்ள இஸ்லாமியர்களின் இயல்பான உரிமைகள் உட்பட எல்லோருடைய இயல்பான உரிமைகளையும் நாம் மதிக்க வேண்டும். இல்லாவிட்டால், நம்முடைய சொந்த உரிமைகள் மீறப்படக்கூடும். நம் எல்லோருக்கும் அது ஒரு மோசமான முடிவைக் கொண்டுவந்துவிடும். இப்போது நீ போகலாம்,” என்று கூறுகிறார்.

தாராளவாதிகளும் கம்யூனிசவாதிகளும் பிற நவீனக் கொள்கைகளைப் பின்பற்றுபவர்களும் தங்களுடைய அமைப்புமுறையை ஒரு ‘மதம்’ என்று விவரிக்க விரும்புவதில்லை. ஏனெனில், மதங்களை மூடநம்பிக்கைகளோடும் புலன்களுக்கு அப்பாற்பட்ட சக்திகளோடும் அவர்கள் அடையாளப்படுத்துகின்றனர். நீங்கள் தாராளவாதிகளிடமோ அல்லது கம்யூனிசவாதிகளிடமோ சென்று, அவர்கள் சமயப் பற்றுக் கொண்டவர்கள் என்று அவர்களிடம் கூறினால், பலனளிக்காத ஏதோ கொள்கைகளைத் தாங்கள் கண்மூடித்தனமாகப் பின்பற்றிக் கொண்டிருப்பதாக நீங்கள் தங்களைக் குறைகூறுவதாக அவர்கள் நினைத்துக் கொள்ளுவர். உண்மையில், மனிதர்களால் கண்டுபிடிக்கப்படாத, ஆனால் அவர்கள் கட்டாயமாகக் கீழ்ப்படிந்தாக வேண்டிய ஏதோ அறநெறி விதிகளில் அவர்கள் நம்பிக்கை கொண்டிருக்கின்றனர் என்று அது அர்த்தமாகும். நமக்குத் தெரிந்தவரை, மனிதச் சமுதாயங்கள் அனைத்தும் இதை நம்புகின்றன. மனிதர்களால் கண்டுபிடிக்கப்படாத சில அறநெறி விதிகள் இருக்கின்றன, அவற்றை மீறுவது பெரும் அழிவுக்கு வழி வகுக்கும் என்று ஒவ்வொரு சமுதாயமும் தன்னுடைய உறுப்பினர்களிடம் கூறுகிறது.

மதங்கள் தம்முடைய கதைகளின் விபரங்களிலும், தம்முடைய

திட்டவட்டமான ஆணைகளிலும், தாம் வழங்கும் வெகுமதிகள் மற்றும் தண்டனைகளிலும் வேறுபடுகின்றன. எனவே, இடைக்கால ஐரோப்பாவில், கடவுள் பணக்காரர்களை விரும்புவதில்லை என்று கத்தோலிக்க தேவாலயங்கள் முழங்கின. ஒரு பணக்காரன் சொர்க்கத்தின் கதவுகள் வழியாகச் செல்லுவதைவிட, ஓர் ஊசியின் துளை வழியாக ஓர் ஒட்டகத்தால் சுலபமாக நுழைந்துவிட முடியும் என்று ஏசு கிறிஸ்து கூறினார். கடவுளின் ராஜ்ஜியத்திற்குள் பணக்காரர்கள் நுழைய அவர்களுக்கு உதவுவதற்கு, ஏராளமான தர்மங்கள் செய்யும்படி தேவாலயங்கள் அவர்களை ஊக்குவித்தன. கருமிகள் நரகத் தீயில் எரிவார்கள் என்று அவை அச்சுறுத்தின. நவீனக் கம்யூனிசவாதமும் பணக்காரர்களை வெறுக்கிறது. ஆனால், இறப்புக்குப் பிறகு அவர்கள் நரகத் தீயில் தள்ளப்படுவார்கள் என்று கூறுவதற்கு பதிலாக, அவர்கள் இங்கேயே இப்போதே வர்க்க முரண்பாட்டில் சிக்கித் தவிர்ப்பார்கள் என்று அது அச்சுறுத்துகிறது.

வரலாறு பற்றிய கம்யூனிசவாத விதிகள் கிறித்தவக் கடவுளின் கட்டளைகளை ஒத்திருக்கின்றன. மனிதர்கள் தங்கள் விருப்பம்போல மாற்ற முடியாத அதீத சக்திகள் அவை. மனிதர்கள் நாளை காலையில் கால்பந்து விளையாட்டின் விதிமுறைகளில் ஒன்றை மாற்றத் தீர்மானிக்கலாம். ஏனெனில், நாம்தான் அந்த விதிமுறையைக் கண்டுபிடித்தோம். எனவே, அதை நாம் தாராளமாக மாற்றலாம். ஆனால், வரலாற்றின் விதிகளை நம்மால் மாற்ற முடியாது என்று கார்ல் மார்க்ஸ் கூறுகிறார். பெருமுதலாளிகள் என்ன செய்தாலும் சரி, அவர்கள் தொடர்ந்து தனிப்பட்டச் சொத்துக்களைக் குவிக்கும்வரை, வகுப்புவாதச் சச்சரவுகளை அவர்கள் உருவாக்கிக் கொண்டே இருப்பார்கள் என்றும், இறுதியில் பாட்டாளி வர்க்கத்தால் அவர்கள் தோற்கடிக்கப்படுவார்கள் என்றும் மார்க்ஸ் கூறுகிறார்.

நீங்கள் ஒரு கம்யூனிசவாதியாக இருந்தால், "கம்யூனிசவாதமும் கிறித்தவமும் மிகவும் வேறுபட்டவை. ஏனெனில், கம்யூனிசவாதம் சரியானது, கிறித்தவம் தவறானது," என்று நீங்கள் வாதிடக்கூடும். வகுப்புவாதச் சச்சரவுகள் முதலாளித்துவ அமைப்புமுறையின் உள்ளார்ந்த அம்சமாக இருப்பது உண்மைதான், ஆனால் பணக்காரர்கள் தங்கள் மரணத்திற்குப் பிறகு நரகத்தில் நிரந்தரச் சித்தரவதைகளை அனுபவிப்பதில்லை. அது உண்மையாக இருந்தாலும், கம்யூனிசவாதம் ஒரு மதம் அல்ல என்று அது அர்த்தமாகாது. மாறாக, கம்யூனிசவாதம்தான் ஒரே உண்மையான மதம் என்பதுதான் அதன் பொருளாகும். தங்கள் மதம் மட்டுமே உண்மையானது என்று ஒவ்வொரு மதத்தின் விசுவாசிகளும் உறுதியாக

நம்புகின்றனர்.

## நீங்கள் புத்தரை சந்தித்தால்

மதம் என்பது சமூக ஒழுங்கைப் பராமரிப்பதற்கும் மிகப் பெரிய அளவில் ஒத்துழைப்பிற்கு ஏற்பாடு செய்வதற்குமான ஒரு கருவி என்ற வலியுறுத்தல், மதம் முதலில் ஓர் ஆன்மிகப் பாதையைத்தான் பிரதிநுதப்படுத்துகிறது என்று நம்புகிறவர்களுக்கு எரிச்சல் ஊட்டக்கூடும். ஆனாலும், மதத்திற்கும் அறிவியலுக்கும் இடையேயான இடைவெளி நாம் நினைப்பதைவிட மிகவும் குறுகியதாக இருப்பதைப்போலவே, மதத்திற்கும் ஆன்மிகத்திற்கும் இடையேயான இடைவெளி நாம் நினைப்பதைவிட மிகவும் அதிகமாக இருக்கிறது. மதம் என்பது ஓர் ஒப்பந்தம், ஆனால் ஆன்மிகம் என்பது ஒரு பயணம்.

மதம் இவ்வுலகத்தைப் பற்றிய ஒரு முழுமையான விவரிப்பைக் கொடுக்கிறது. முன்கூட்டியே தீர்மானிக்கப்பட்ட இலக்குகளுடன்கூடிய, சிறப்பாக வரையறுக்கப்பட்ட ஓர் ஒப்பந்தத்தை அது நமக்கு வழங்குகிறது. "கடவுள் இருக்கிறார். குறிப்பிட்ட சில வழிகளில் நாம் நடந்து கொள்ள வேண்டும் என்று அவர் நம்மிடம் கூறியுள்ளார். நீங்கள் கடவுளுக்குக் கீழ்ப்படிந்து நடந்தால் சொர்க்கத்தைச் சென்றடைவீர்கள். நீங்கள் அவருடைய கட்டளைகளை மீறினால் நரகத் தீயில் வெந்து கொண்டிருப்பீர்கள்." இந்த ஒப்பந்தத்தின் தெளிவு, மனித நடத்தையை முறைப்படுத்துகின்ற பொதுவான விதிமுறைகளையும் விழுமியங்களையும் சமூகம் வரையறுப்பதற்கு உதவுகிறது.

ஆன்மிகப் பயணங்கள் வேறு விதமானவை. அவை பொதுவாக மர்மமான வழிகளில், தெரியாத இடங்களை நோக்கி மக்களை அழைத்துச் செல்லுகின்றன. மக்களுடைய தேடல் வழக்கமாக, "நான் யார்? வாழ்வின் பொருள் என்ன? எது நல்லது?" போன்ற ஆழமான கேள்விகளுடன்தான் தொடங்குகிறது. அதிகாரத்தில் இருப்பவர்கள் கூறுகின்ற, முன்கூட்டியே தயாரிக்கப்பட்ட பதில்களைப் பெரும்பாலான மக்கள் ஏற்றுக் கொள்ளுகின்றனர். ஆனால் ஆன்மிகவாதிகள் அவ்வளவு சுலபமாகத் திருப்தியடைவதில்லை. அவர்கள் அந்த ஆழமான கேள்விகளைப் பின்தொடர்ந்து செல்லுவதில் உறுதியாக இருக்கின்றனர். அது தங்களை எங்கே அழைத்துச் செல்லும் என்பதைப் பற்றி அவர்கள் கவலைப்படுவதில்லை. ஏனெனில், தங்களுக்குப் பரிச்சயமான அல்லது தாங்கள் போக விரும்புகின்ற இடங்களுக்குத்தான் அவை தங்களைக் கூட்டிச் செல்ல வேண்டும் என்று அவர்கள் நினைப்பதில்லை. எனவே, பெரும்பாலான மக்களுக்கு,

ஓர் ஆன்மிகப் பயணத்தைவிட முறைசார் கல்வி ஒரு சிறந்த ஏற்பாடாக இருக்கிறது. ஏனெனில், நம்முடைய பெரியவர்களும் அரசாங்கங்களும் வங்கிகளும் ஏற்றுக் கொண்டுள்ள, முன்கூட்டியே தீர்மானிக்கப்பட்ட ஓர் இலக்கிற்கு அது நம்மைக் கூட்டிச் செல்லுகிறது: "நான் மூன்று ஆண்டுகள் படித்து, அனைத்துப் பரீட்சைகளிலும் தேர்ச்சி பெற்று, என்னுடைய இளங்கலைப் பட்டத்திற்கான சான்றிதழைப் பெற்றுக் கொண்டு, நல்ல சம்பளத்துடன்கூடிய ஒரு வேலையில் சேருவேன்." முறைசார் கல்வி ஓர் ஆன்மிகப் பயணமாக மாறக்கூடும். எப்படியென்றால், வழியில் நீங்கள் எதிர்கொள்ளுகின்ற ஆழமான கேள்விகள், துவக்கத்தில் நீங்கள் நினைத்துப் பார்த்திராத, நீங்கள் எதிர்பார்த்திராத இடங்களுக்கு உங்களைத் திருப்பிவிடும்போது, அது ஓர் ஆன்மிகப் பயணமாக மாறுகிறது. எடுத்துக்காட்டாக, அமெரிக்காவில் வால்ஸ்டிரீட்டில் உள்ள ஒரு பெருநிறுவனத்தில் ஒரு வேலையில் சேரும் நோக்கத்துடன் ஒரு மாணவர் பொருளியலைப் படிக்கக்கூடும். ஆனால், அவர் கற்ற விஷயங்கள் எப்படியோ அவரை ஓர் இந்து ஆசிரமத்திற்கோ அல்லது ஜிம்பாப்வேயில் எய்ட்ஸ் நோயாளிகளுக்கு உதவுவதற்கோ இட்டுச் சென்றால், அதை ஓர் ஆன்மிகப் பயணம் என்று நாம் அழைக்கலாம்.

அப்படிப்பட்ட ஒரு பயணத்தை நாம் ஏன் 'ஆன்மிகப் பயணம்' என்று அழைக்க வேண்டும்? இது நம்முடைய பண்டைய இருமைவாத மதங்கள் விட்டுச் சென்றுள்ள ஒரு சீதனமாகும். ஒரு நல்ல கடவுள், ஒரு தீய கடவுள் என்று இரண்டு கடவுளர் இருந்ததாக நம்பிய மதங்கள் அவை. இருமைவாத மதங்களின்படி, நல்ல கடவுள், ஓர் ஆனந்தமான ஆவியுலகில் வாழ்ந்த தூய்மையான மற்றும் நிரந்தரமான ஆன்மாக்களைப் படைத்தார். ஆனால், சில சமயங்களில் சாத்தான் என்று அழைக்கப்படுகின்ற தீய கடவுள், பருப்பொருளால் ஆன இன்னோர் உலகத்தைப் படைத்தார். தன்னுடைய படைப்பு தொடர்ந்து நீடித்து நிலைத்திருக்கும்படி செய்வதற்கு என்ன செய்யப்பட வேண்டும் என்பது சாத்தானுக்குத் தெரியவில்லை. எனவே, பருப்பொருள் உலகில் எல்லாமே அழுகிச் சிதைந்து போகிறது. குறை கொண்ட தன்னுடைய படைப்பிற்கு உயிர் கொடுப்பதற்காக, தூய்மையான ஆவியுலகில் இருந்த ஆன்மாக்களுக்கு அந்தச் சாத்தான் சபலத்தை உண்டாக்கி, அவர்களை பௌதிக உடல்களுக்குள் அடைத்தார். அதுதான் மனிதன் - ஒரு தீய பௌதிக உடலுக்குள் சிக்கியிருக்கின்ற ஒரு நல்ல ஆன்மிக ஆன்மா. ஆன்மாவின் சிறையான உடல் அழுகி இறுதியில் இறந்துவிடுவதால், உடல்ரீதியான இன்பங்களைக் கொண்டு, குறிப்பாக உணவு, பாலுறவு, மற்றும் அதிகாரத்தைக் கொண்டு,

சாத்தான் ஆன்மாவிற்குத் தொடர்ந்து சபலமூட்டுகிறார். உடல் சிதைவுறும்போது, மீண்டும் ஆவியுலகிற்குத் தப்பிச் செல்லுவதற்கான வாய்ப்பு ஆன்மாவுக்குக் கிடைக்கும்போது, உடல்ரீதியான இன்பங்கள் குறித்த அதனுடைய ஆசை அதை மீண்டும் வேறொரு புதிய பௌதிக உடலுக்குள் இழுத்துச் சென்றுவிடுகிறது. இவ்வாறு அந்த ஆன்மா ஓர் உடலிலிருந்து இன்னொர் உடலுக்குத் தாவுகிறது. உணவையும் பாலுறவையும் அதிகாரத்தையும் தேடி அது தன்னுடைய அத்தனை நாட்களையும் வீணாக்குகிறது.

இந்த பௌதிகச் சங்கிலிகளைத் தகர்த்து மீண்டும் ஆவியுலகிற்குத் திரும்பிச் செல்லும்படி இருமைவாதம் மக்களுக்கு அறிவுறுத்துகிறது. அந்த ஆவியுலகம் நமக்கு முற்றிலும் பரிச்சயமற்றது, ஆனால் அதுதான் நம்முடைய உண்மையான வீடு. இந்தத் தேடலின்போது, அனைத்து லௌகிக சபலங்களையும் ஒப்பந்தங்களையும் நாம் விட்டுத்தள்ள வேண்டும். இந்த இருமைவாத சீதனத்தினால், சலிப்பூட்டும் உலகின் மரபுகள் மற்றும் ஒப்பந்தங்களை சந்தேகித்து, தெரியாத ஓர் இடத்தை நோக்கி அடியெடுத்து வைத்து நாம் மேற்கொள்ளுகின்ற ஒவ்வொரு பயணமும் ஓர் 'ஆன்மிகப் பயணம்' என்று அழைக்கப்படுகிறது.

இத்தகைய பயணங்கள் மதங்களிலிருந்து அடிப்படையில் வேறுபட்டுள்ளன. ஏனெனில், மதங்கள் உலக ஒழுங்கை வலுப்படுத்த முயற்சிக்கின்றன, ஆனால் ஆன்மிகம் அதிலிருந்து விடுபட முயற்சிக்கிறது. ஆதிக்கம் செலுத்துகின்ற மதங்களின் நம்பிக்கைகளையும் சட்டதிட்டங்களையும் எதிர்த்துக் கேள்வி கேட்பது ஆன்மிகவாதிகளுக்குரிய மிக முக்கியமான கடமைகளில் ஒன்று. "சாலையில் நீங்கள் புத்தரைப் பார்த்தால், அவரைக் கொன்றுவிடுங்கள்," என்று ஜென் புத்தமதத்தில் கூறப்பட்டுள்ளது. அதாவது, நீங்கள் ஆன்மிகப் பாதையில் பயணித்துக் கொண்டிருக்கும்போது, நிறுவனமயமாக்கப்பட்ட புத்தமதத்தின் வளைந்து கொடுக்காத யோசனைகளையும் சட்டதிட்டங்களையும் நீங்கள் எதிர்கொள்ள நேரிட்டால், நீங்கள் அவற்றிலிருந்து விடுபட வேண்டும் என்று அர்த்தம்.

மதங்களைப் பொருத்தவரை, ஆன்மிகம் மிகவும் ஆபத்தான ஓர் அச்சுறுத்தலாகும். மதங்கள் தம்மைப் பின்பற்றுகின்றவர்களுடைய ஆன்மிகத் தேடல்களை மட்டுப்படுத்தக் கடுமையாக முயற்சிக்கின்றன. பல்வேறு மத அமைப்புமுறைகளுக்கு, உணவிலும் பாலுறவிலும் அதிகாரத்திலும் திளைத்திருக்கின்ற சாதாரண மக்களிடமிருந்து எதிர்ப்பு வருவதில்லை, மாறாக ஆன்மிக உண்மைகளை நாடிச் செல்லுகின்ற, வழக்கமான விஷயங்களைவிட மிக அதிகமாக எதிர்பார்க்கின்ற

ஆன்மிகவாதிகளே மதங்களுக்கு சவால்விடுகின்றனர். புராட்டஸ்டன்ட் பிரிவினர் கத்தோலிக்க தேவாலயத்தின் அதிகாரத்திற்கு எதிராக மேற்கொண்ட கலகம் இன்பத்தை நாடிய நாத்திகவாதிகளால் தூண்டப்படவில்லை, மாறாக, சமயப் பற்றுக் கொண்ட துறவியான மார்ட்டின் லூதர் என்பவர்தான் அந்தக் கலகத்திற்குக் காரணமாக இருந்தார். வாழ்வின் இருத்தல் குறித்தக் கேள்விகளுக்கான விடைகளை மார்ட்டின் தேடினார். தேவாலயங்கள் வழங்கிய சடங்குகள், சம்பிரதாயங்கள், ஒப்பந்தங்கள் ஆகியவற்றை அவர் ஏற்றுக் கொள்ள மறுத்தார்.

மார்ட்டின் லூதரின் காலகட்டத்தில், தேவாலயங்கள் தம்மைப் பின்பற்றியவர்களுக்கு சில வசீகரமான விஷயங்கள் கிடைக்கும் என்று உறுதியளித்தன. நீங்கள் பாவம் செய்து, மரணத்திற்குப் பிந்தைய வாழ்க்கையில் நீங்கள் என்றென்றும் நரகத்தில் உழலுவீர்கள் என்று நீங்கள் பயந்தால், நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் உங்கள் பர்ஸைத் திறந்து, ‘பாவ விமோசனச் சான்றிதழ்’ ஒன்றை விலை கொடுத்து வாங்க வேண்டியது மட்டும்தான். பதினாறாம் நூற்றாண்டின் துவக்கத்தில், தொழில்முறை ‘பாவ விமோசன விற்பனையாளர்களை’ தேவாலயங்கள் பணிநியமனம் செய்தன. இவர்கள் ஐரோப்பாவின் நகரங்களிலும் கிராமங்களிலும் சுற்றித் திரிந்து, குறிப்பிட்ட விலைகளில் பாவ விமோசனச் சான்றிதழ்களை விற்றனர். நீங்கள் சொர்க்கத்திற்குப் போக விரும்புகிறீர்களா? பத்துப் பொற்காசுகள் கொடுங்கள். இறந்து போன உங்கள் தாத்தாவும் பாட்டியும் அங்கு உங்களோடு வந்து சேர்ந்து கொள்ள வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களா? கவலை வேண்டாம், ஆனால் நீங்கள் அதற்கு முப்பது பொற்காசுகள் கொடுத்தாக வேண்டும். இந்த விற்பனையாளர்களில் மிகவும் பிரபலமாக விளங்கிய, டாமினிக்கன் சபையைச் சேர்ந்த ஜொஹானஸ் டெட்ஸெல் இவ்வாறு முழங்கியதாகக் கூறப்படுகிறது: “உங்கள் பொற்காசுகள் பணப் பெட்டகத்தில் போய் விழும் கணத்தில், ஆன்மா நரகத் தண்டனைக்கூடத்திலிருந்து நேராக சொர்க்கத்திற்குச் சென்றுவிடும்.”

மார்ட்டின் லூதர் இதைப் பற்றி எவ்வளவு அதிகமாக சிந்தித்தாரோ, அவ்வளவு அதிகமாக இந்தப் பரிவர்த்தனையையும் அதை வழங்கிய தேவாலயத்தையும் அவர் சந்தேகித்தார். விமோசனத்தை விலை கொடுத்து வாங்க முடியாது என்று அவர் நம்பினார். மக்கள் செய்த பாவங்களுக்காக அவர்களை மன்னித்து, சொர்க்கத்தின் கதவுகளைத் திறந்துவிடுவதற்கான அதிகாரம் போப்பாண்டவருக்கு இருக்க வாய்ப்பில்லை என்று அவர் கருதினார். புராட்டஸ்டன்ட்

பாரம்பரியத்தின்படி, 1517ம் ஆண்டு அக்டோபர் 31ம் நாளன்று, விட்டன்பர்க் நகரில் அமைந்த ‘ஆல் செயின்ட்ஸ்’ தேவாலயத்திற்கு லூதர் சென்றார். ஒரு நீளமான ஆவணத்தையும் ஒரு சுத்தியலையும் சில ஆணிகளையும் அவர் தன்னுடன் எடுத்துச் சென்றார். பாப விமோசனச் சான்றிதழ்களின் விற்பனை உட்பட, அக்காலகட்டத்தில் நடைமுறையில் இருந்த சமய வழக்கங்களுக்கு எதிராக 95 விஷயங்களை அவர் அந்த ஆவணத்தில் பட்டியலிட்டிருந்தார். அவர் அந்த ஆவணத்தை அந்த தேவாலயத்தின் கதவில் ஆணியடித்து மாட்டினார். இது புராட்டஸ்டன்ட் இயக்கத்தைத் தோற்றுவித்தது. பாவ விமோசனம் குறித்து அக்கறை கொண்டிருந்த எந்தவொரு கிறித்தவரும் போப்பாண்டவரின் அதிகாரத்திற்கு எதிராகக் கிளர்ந்தெழ வேண்டும் என்றும், சொர்க்கத்திற்குச் செல்லுவதற்கு மாற்று வழிகளைத் தேட வேண்டும் என்றும் அந்த ஆவணம் அறைகூவல் விடுத்தது.



படம் **25:** போப்பாண்டவர் பணத்திற்காகப் பாவ விமோசனச் சான்றிதழ்களை விற்றுக் கொண்டிருக்கிறார் **(**ஒரு புராட்டஸ்டன்ட் துண்டுப் பிரசுரத்திலிருந்து**)**

ஒரு வரலாற்றுக் கண்ணோட்டத்திருந்து பார்க்கும்போது, ஆன்மிகப் பயணம் எப்போதும் துயரம் நிரம்பியதாகவே இருக்கிறது. ஏனெனில், இது தனிநபர்களுக்கு மட்டுமே பொருத்தமான ஒரு தனிமையான பாதையாக இருக்கிறது. ஒட்டுமொத்தச் சமுதாயங்களுக்கு இப்பாதை சரிப்பட்டு வருவதில்லை. மனித ஒத்துழைப்பிற்கு உறுதியான விடைகள் தேவைப்படுகின்றனவே அன்றி வெறும் கேள்விகள் அல்ல. முட்டாள்தனமான சமய அமைப்புமுறைகளுக்கு எதிராகக் கோபம் கொள்ளுகின்றவர்கள், பல சமயங்களில், அவற்றுக்கு பதிலாகப் புதிய அமைப்புமுறைகளை உருவாக்குகின்றனர். இருமைவாதிகளின் விஷயத்தில் இது நிகழ்ந்தது. இவர்களுடைய ஆன்மிகப் பயணங்கள் சமய அமைப்புகளாக ஆயின. மார்ட்டின் லூதரின் விஷயத்திலும் இது நடந்தது. கத்தோலிக்க தேவாலயத்தின் சட்டதிட்டங்களையும் நிறுவனங்களையும் சம்பிரதாயங்களையும் குறித்துக் கேள்வி எழுப்பிய அவர், புதிய சட்டப் புத்தகங்களை எழுதினார், புதிய நிறுவனங்களைத் தோற்றுவித்தார், புதிய விழாக்களை உருவாக்கினார். புத்தர் மற்றும் ஏசு கிறிஸ்துவின் விஷயத்திலும் இது நடந்தது. அவ்விருவரும் உண்மை குறித்தத் தங்களுடைய தேடலில், பாரம்பரிய இந்துமதம் மற்றும் யூதமதத்தின் சட்டதிட்டங்களையும் சம்பிரதாயங்களையும் அமைப்புமுறைகளையும் தூக்கியெறிந்தனர். ஆனால் இறுதியில், வரலாற்றில் வேறு யாருடைய பெயரிலும் இல்லாத அளவுக்கு இவர்கள் இருவருடைய பெயர்களிலும் அதிகமான சட்டதிட்டங்களும் அதிகமான சம்பிரதாயங்களும் அதிகமான அமைப்புமுறைகளும் உருவாக்கப்பட்டன.

## கடவுளைப் போலியாக நகலெடுத்தல்

மதத்தைப் பற்றிய ஒரு சிறந்த புரிதல் நமக்கு இப்போது கிடைத்துள்ள நிலையில், மதத்திற்கும் அறிவியலுக்கும் இடையேயான உறவை நாம் மீண்டும் ஆய்வு செய்யலாம். இந்த உறவு பற்றிய, ஒன்றுக்கொன்று வேறுபட்ட இரண்டு கண்ணோட்டங்கள் இருக்கின்றன. அறிவியலும் மதமும் பரம எதிரிகள் என்றும், மதரீதியான மூடநம்பிக்கைகளுக்கு எதிரான அறிவியலறிவின் வாழ்வா-சாவா போராட்டம்தான் நவீன வரலாற்றை வடிவமைத்தது என்றும் முதல் கண்ணோட்டம் கூறுகிறது. காலப்போக்கில், அறிவியல் ஒளியானது மதம் எனும் இருளைப் போக்கியது. உலகம் அதிக அளவில் மதச்சார்பற்றதாகவும், அதிக அறிவார்ந்ததாகவும், அதிகச் செழிப்பானதாகவும் ஆகியது. அதே சமயம், சில அறிவியல் கண்டுபிடிப்புகள் நிச்சயமாக சமயக்

கொள்கைகளை பலவீனப்படுத்தினாலும், சில நேரங்களில் அவை அவற்றுக்கு வலு சேர்க்கவும் செய்தன. எடுத்துக்காட்டாக, ஏழாம் நூற்றாண்டு அரேபியாவில் முகமது நபிகள் இஸ்லாம் மதத்தைத் தோற்றுவித்ததாக இஸ்லாமிய சமயக் கொள்கை கூறுகிறது. இதற்கு ஆதரவாகப் போதுமான அறிவியல் ஆதாரங்கள் இருக்கின்றன.

மிக முக்கியமாக, நிலைத்திருக்கக்கூடிய மனித அமைப்புகளை உருவாக்குவதற்கு அறிவியலுக்கு மதத்தின் உதவி எப்போதும் தேவைப்படுகிறது. உலகம் எப்படிச் செயல்படுகிறது என்பதை அறிவியலறிஞர்கள் ஆய்வு செய்கின்றனர், ஆனால் மனிதர்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதைத் தீர்மானிப்பதற்கான அறிவியல் வழிமுறை எதுவும் இல்லை. ஆக்சிஜன் இல்லாமல் மனிதர்களால் உயிர்வாழ முடியாது என்று அறிவியல் கூறுகிறது, ஆனால் குற்றவாளிகளை மூச்சுத் திணறடித்துக் கொல்லுவது எந்த விதத்தில் நியாயம்? இப்படிப்பட்ட ஒரு கேள்விக்கு எப்படி விடையளிக்க வேண்டும் என்பது அறிவியலுக்குத் தெரியாது. இத்தகைய விஷயங்களில் மதங்கள் மட்டுமே தேவையான வழிகாட்டுதலை நமக்குக் கொடுக்கின்றன.

எனவே, அறிவியலறிஞர்கள் மேற்கொள்ளுகின்ற நடைமுறைப் பணித்திட்டம் ஒவ்வொன்றும் மதரீதியான உள்நோக்குகளையும் சார்ந்துள்ளது. எடுத்துக்காட்டாக, யாங்சி ஆற்றின்மீது கட்டப்பட்டுள்ள 'மூன்று ஆழ்பள்ளத்தாக்கு அணை'யை எடுத்துக் கொள்ளுங்கள். அந்த அணையைக் கட்டுவதென்று 1992ல் சீன அரசாங்கம் தீர்மானித்தபோது, அந்த அணை எவ்வளவு அழுத்தங்களைத் தாக்குப்பிடிக்க வேண்டியிருக்கும் என்பதை இயற்பியலாளர்களால் தீர்மானிக்க முடிந்தது, அந்த அணையைக் கட்டுவதற்கு எவ்வளவு செலவாகும் என்று பொருளாதார வல்லுநர்களால் முன்கூட்டியே கணிக்க முடிந்தது, அந்த அணை எவ்வளவு மின்சாரத்தை உற்பத்தி செய்யும் என்று மின்பொறியாளர்களால் கணிக்க முடிந்தது. ஆனால் சில கூடுதல் காரணிகளையும் சீன அரசாங்கம் கருத்தில் எடுத்துக் கொள்ள வேண்டியிருந்தது. அந்த அணையைக் கட்டியதால் 600 சதுரக் கிலோமீட்டர்களை உள்ளடக்கிய பகுதி நீரில் மூழ்கியது. பல கிராமங்களும், நகரங்களும், தொல்பொருள் ஆய்விடங்களும், தனித்துவமான நிலப்பரப்புகளும் வாழ்விடங்களும் உள்ளடங்கிய பகுதி அது. 10 லட்சத்திற்கும் அதிகமான மக்கள் இடம்பெயர்க்கப்பட்டனர், நூற்றுக்கணக்கான உயிரினங்கள் அழியும் ஆபத்திற்கு உள்ளாயின. சீன ஆற்று டால்பின்கள் முற்றிலுமாக அழிந்து போனதற்கு அந்த அணை நேரடிக் காரணமாக அமைந்தது. அந்த அணையைப் பற்றித்

தனிப்பட்ட முறையில் நீங்கள் என்ன நினைத்தாலும் சரி, அதன் கட்டுமானம் அறநெறி தொடர்பான ஒரு விவகாரமே அன்றி, முழுக்க முழுக்க அறிவியல் தொடர்பான ஒரு விவகாரம் அல்ல. ஒரு பண்டைய அடுக்குத் தூபியை அல்லது சீன ஆற்று டால்பினைக் காப்பாற்றுவதைவிட, ஆயிரக்கணக்கான மெகாவாட் மின்சாரத்தைத் தயாரிப்பதும் கோடிக்கணக்கான யுவான்களைச் சம்பாதிப்பதும் அதிக மதிப்பு வாய்ந்ததா என்பதை எந்தவோர் இயற்பியல் பரிசோதனையாலும், எந்தவொரு பொருளாதார மாதிரியாலும், எந்தவொரு கணிதச் சமன்பாட்டினாலும் தீர்மானிக்க முடியாது. எனவே, வெறும் அறிவியல் கோட்பாடுகளின் அடிப்படையில் மட்டுமே சீனாவால் செயல்பட முடியாது. அதற்கு ஏதோ ஒரு மதமோ அல்லது வேறு ஏதேனும் ஒரு சித்தாந்தமோ தேவைப்படுகிறது.

சிலர், இதற்கு முற்றிலும் நேர்மாறான கண்ணோட்டத்திற்குத் தாவுகின்றனர். அறிவியலும் மதமும் முற்றிலும் வெவ்வேறு சாம்ராஜ்ஜியங்கள் என்று அவர்கள் கூறுகின்றனர். அறிவியலானது உண்மைத் தகவல்களை ஆய்வு செய்கிறது, மதம் விழுமியங்களைப் பற்றிப் பேசுகிறது. இவை இரண்டும் ஒருபோதும் சந்தித்துக் கொள்ள மாட்டா. மதத்தால் அறிவியலுண்மைகளைப் பற்றி எதுவும் கூற முடியாது. அதேபோல, சமய நம்பிக்கைகள் தொடர்பான விஷயங்களில் அறிவியல் தன் வாயை மூடிக் கொள்ள வேண்டும். மனித வாழ்க்கை புனிதமானது என்று போப்பாண்டவர் கருதினால், கருக்கலைப்பு ஒரு பாவம்தான். இக்கருத்தை உயிரியலாளர்களால் நிரூபிக்கவும் முடியாது மறுக்கவும் முடியாது. ஒரு தனிநபர் என்ற முறையில், ஒவ்வோர் உயிரியலாளரும் போப்பாண்டவருடன் தனிப்பட்ட முறையில் தாராளமாக விவாதிக்கலாம். ஆனால் ஓர் அறிவியலறிஞர் என்ற முறையில், அந்த உயிரியலாளரால் அந்த விவாதத்திற்குள் நுழைய முடியாது.

இந்த அணுகுமுறை அறிவார்ந்ததாகத் தோன்றக்கூடும், ஆனால் இது மதத்தைத் தவறாகப் புரிந்து கொள்ளுகிறது. அறிவியல் எப்போதும் உண்மைத் தகவல்களை மட்டுமே கையாளுகிறது என்றாலும்கூட, மதம் ஒருபோதும் அறநெறிசார் தீர்ப்புகளோடு மட்டும் தன்னை மட்டுப்படுத்திக் கொள்ளுவதில்லை. தான் உண்மை என்று கருதுகின்ற சில விஷயங்களைப் பற்றிப் பேசாமல் எந்தவிதமான நடைமுறை வழிகாட்டுதல்களையும் மதத்தால் நமக்குக் கொடுக்க முடியாது. இங்கு அது அறிவியலோடு மோதக்கூடும். சமயக் கோட்பாடுகள் பலவற்றின் மிக முக்கியமான அம்சங்கள் அவற்றின் அறநெறிக் கொள்கைகள் அல்ல. மாறாக, ‘கடவுள் இருக்கிறார்,’ ‘ஆன்மா அதன் பாவங்களுக்காக

மரணத்திற்குப் பிந்தைய வாழ்வில் தண்டிக்கப்படுகிறது,' 'பைபிளை எழுதியது ஒரு கடவுளே அன்றி மனிதர்கள் அல்ல,' 'போப்பாண்டவர் கூறும் எதுவும் ஒருபோதும் தவறாக இருக்காது,' போன்ற பிரகடனங்கள்தான் அவற்றின் முக்கிய அம்சங்களாக இருக்கின்றன. மிகத் தீவிரமான மதரீதியான விவாதங்களில் பலவும், அறிவியலுக்கும் மதத்திற்கும் இடையேயான சச்சரவுகளில் பலவும் இத்தகைய பிரகடனங்களை உள்ளடக்கியவைதானே தவிர, அறநெறிசார் தீர்ப்புகளை உள்ளடக்கியவை அல்ல.

எடுத்துக்காட்டாக, கருக்கலைப்பை எடுத்துக் கொள்ளுங்கள். சமயப் பிடிப்புக் கொண்ட கிறித்தவர்கள் கருக்கலைப்பைப் பெரும்பாலும் எதிர்க்கின்றனர். ஆனால், தாராளவாதிகள் அதை ஆதரிக்கின்றனர். இங்கு விவாதத்திற்குரிய விஷயமாக இருப்பது உண்மை தொடர்பானதே அன்றி, அறநெறி தொடர்பானது அல்ல. மனித வாழ்வு புனிதமானது என்றும், கொலை ஒரு கொடிய குற்றம் என்றும் கிறித்தவர்களும் தாராளவாதிகளும் நம்புகின்றனர். ஆனால், சில உயிரியல்ரீதியான உண்மைகள் குறித்து அவர்கள் முரண்படுகின்றனர்: மனித வாழ்க்கை ஒரு கரு உருவாக்கும் நேரத்தில் தொடங்குகிறதா, அல்லது ஒரு குழந்தை பிறக்கும்போது தொடங்குகிறதா அல்லது இவை இரண்டுக்கும் இடைப்பட்ட ஒரு கணத்தில் தொடங்குகிறதா? பிறப்பின்போதுகூட வாழ்க்கை தொடங்குவதில்லை என்று சில மனிதக் கலாச்சாரங்கள் நம்புகின்றன. ஒரு குழந்தைக்குப் பெயர் வைக்கப்பட்டப் பிறகே மனித வாழ்க்கை தொடங்குவதாகக் கலஹாரி பாலைவனத்தில் இருக்கும் 'குங்' இன மக்களும் ஆர்க்டிக் பகுதியில் வாழும் பல்வேறு இனுவிட் குழுவினரும் கருதுகின்றனர். ஒரு குழந்தை பிறந்தவுடன், அதற்குப் பெயரிடுவதற்கு அதன் குடும்பத்தினர் சிறிது காலம் காத்திருக்கின்றனர். அக்குழந்தையை வைத்துக் கொள்ள வேண்டாம் என்று அவர்கள் தீர்மானித்தால் (அக்குழந்தை ஏதேனும் உடற்குறைபாட்டினால் துன்புற்றாலோ அல்லது பொருளாதாரக் கஷ்டம் காரணமாகவோ), அவர்கள் அக்குழந்தையைக் கொன்றுவிடுகின்றனர். ஒரு குழந்தைக்குப் பெயரிடப்படுவதற்கு முன்பாக அவர்கள் அவ்வாறு செய்தால், அது ஒரு கொலையாகக் கருதப்படுவதில்லை. அப்படிப்பட்டக் கலாச்சாரங்களிலிருந்து வரும் மக்கள், மனித வாழ்க்கை புனிதமானது என்பதிலும், கொலை ஒரு கொடூரமான குற்றம் என்பதிலும் தாராளவாதிகளுடனும் கிறித்தவர்களோடும் ஒத்துப் போகக்கூடும், ஆனாலும், சிசுக் கொலையை அவர்கள் ஏற்றுக் கொள்ளுகின்றனர்.

மதங்கள் தம்மை விளம்பரப்படுத்திக் கொள்ளும்போது, அவை

தம்முடைய அழகான விழுமியங்களை வலியுறுத்துகின்றன. ஆனால் கடவுள் மட்டும் பல சமயங்களில், தெளிவற்ற வார்த்தைகளில் எழுதப்பட்டிருக்கின்ற, உண்மை குறித்தத் தகவல்களின் பின்னால் ஒளிந்து கொள்ளுகிறார். உலகளாவிய அன்பும் இரக்கமும்தான் தன்னுடைய மைய அம்சங்கள் என்று கத்தோலிக்க மதம் தன்னை விளம்பரப்படுத்திக் கொள்ளுகிறது. இது நிச்சயமாக ஓர் அற்புதமான விஷயம்தான் என்பதை யாரும் மறுப்பதற்கில்லை. ஆனால், அன்பும் இரக்கமும்தான் அதன் மைய அம்சங்கள் என்றால், ஏன் எல்லா மனிதர்களும் கத்தோலிக்கர்களாக இல்லை? ஏனெனில், சற்று முன்பு நாம் பார்த்த அந்த தெளிவற்ற வார்த்தைகள் வெளிப்படுத்துகின்ற உண்மையில், 'ஒருபோதும் தவறிழைக்காத' ஒரு போப்பாண்டவரிடம் மக்கள் கண்மூடித்தனமான கீழ்ப்படிதலைக் கொண்டிருக்க வேண்டும் என்று கத்தோலிக்க மதம் கட்டாயப்படுத்துகிறது என்பதை நீங்கள் கண்டறிவீர்கள். சிலுவைப் போர்களில் கலந்து கொண்டு, மதத்தை நம்பாதவர்களை ஒரு கம்பத்தில் கட்டி வைத்துத் தீயிட்டுக் கொளுத்தும்படி தன்னைப் பின்பற்றுபவர்களுக்குப் போப்பாண்டவர் உத்தரவிடும்போதுகூட, அவர் தவறிழைக்காதவர்தான்! இப்படிப்பட்ட நடைமுறை அறிவுறுத்தல்கள் வெறும் அறநெறிசார் தீர்ப்புகளிலிருந்து பெறப்படுவதில்லை, மாறாக, அறநெறிசார் தீர்ப்புகளைப் பிரகடனங்களோடு ஒன்றிணைப்பதிலிருந்து அவை முளைத்தெழுகின்றன.

புலன் கடந்த தத்துவரீதியான தளத்திலிருந்து இறங்கி வந்து வரலாற்றுரீதியான யதார்த்தங்களை நாம் கவனிக்கும்போது, மதரீதியான கதைகளில் மூன்று பகுதிகள் எப்போதும் உள்ளடங்கியிருப்பதை நாம் காணலாம்:

1. 'மனித வாழ்க்கை புனிதமானது' என்பது போன்ற அறநெறிசார் தீர்ப்புகள்.

2. 'ஒரு கரு உண்டாகும் கணத்தில் மனித வாழ்க்கை தொடங்குகிறது' என்பது போன்ற பிரகடனங்கள்.

3. அறநெறிசார் தீர்ப்புகளைப் பிரகடனங்களோடு இணைத்தல். இது, "ஒரு கரு உருவாகி ஒரே ஒருநாள் மட்டுமே ஆகியிருந்தாலும், அக்கருவைக் கலைப்பதற்கு நீங்கள் ஒருபோதும் அனுமதிக்கக்கூடாது' என்பது போன்ற நடைமுறை அறிவுறுத்தல்களில் போய் முடிகிறது.

மதங்கள் மேற்கொள்ளுகின்ற அறநெறிசார் தீர்ப்புகளை மறுப்பதற்கு அல்லது உறுதிப்படுத்துவதற்கான திறன் அறிவியலுக்கு இல்லை. ஆனால் மதரீதியான பிரகடனங்கள் பற்றிக் கூறுவதற்கு அறிவியலறிஞர்களிடம் ஏராளமான விஷயங்கள் உள்ளன. 'ஒரு மனிதக்

கரு உருவாகி ஒரு வாரத்திற்குப் பிறகு அதற்கு ஒரு நரம்பு மண்டலம் இருக்கிறதா? அக்கருவால் வலியை உணர முடியுமா?' போன்ற கேள்விகளுக்கு விடையளிப்பதற்குப் பாதிரியார்களைவிட உயிரியலாளர்கள் அதிகத் தகுதி வாய்ந்தவர்களாக இருக்கின்றனர்.

விஷயங்களைத் தெளிவுபடுத்துவதற்கு, ஓர் உண்மையான வரலாற்று எடுத்துக்காட்டை நாம் ஆழமாக ஆய்வு செய்யலாம். மதரீதியான விளம்பரங்களில் இதைப் பற்றி நீங்கள் அரிதாகவே கேள்விப்படுவீர்கள் என்றாலும், குறிப்பிட்ட அந்நிகழ்வு அதனுடைய காலத்தில் ஒரு மிகப் பெரிய சமூகத் தாக்கத்தையும் அரசியல் தாக்கத்தையும் ஏற்படுத்தியது. இடைக்கால ஐரோப்பாவில் போப்பாண்டவர்கள் அளப்பரிய அரசியல் அதிகாரத்தைக் கொண்டிருந்தனர். ஐரோப்பாவில் எங்கேனும் ஒரு சச்சரவு முளைத்தபோதெல்லாம், சம்பந்தப்பட்ட விவகாரம் குறித்துத் தீர்மானம் மேற்கொள்ளுவதற்கான அதிகாரம் தங்களுக்கு இருந்ததாக அவர்கள் முழங்கினர். தங்களுக்கு அந்த அதிகாரம் இருந்ததை நிரூபிப்பதற்கு, 'கான்ஸ்டன்டைனின் நன்கொடை' என்ற எழுத்துபூர்வமான ஓர் அரசாணையை அவர்கள் ஐரோப்பியர்களுக்குத் தொடர்ந்து நினைவுபடுத்தினர். அக்கதையின்படி, கி.பி. 315ம் ஆண்டு மார்ச் 30ம் நாளன்று, ரோமாபுரிப் பேரரசரான கான்ஸ்டன்டைன், ரோமாபுரிப் பேரரசின் மேற்குப் பகுதியை நிரந்தரமாகக் கட்டுப்படுத்துவதற்கான உரிமையை அப்போதைய போப்பாண்டவரான முதலாம் சில்வெஸ்டருக்கும் அவருடைய வாரிசுகளுக்கும் வழங்கி, அது தொடர்பான அதிகாரபூர்வமான அரசாணை ஒன்றில் கையெழுத்திட்டார். பெரும் மதிப்பு வாய்ந்த இந்த ஆவணத்தைப் போப்பாண்டவர்கள் தங்களுடைய ஆவணக் கிடங்கில் பாதுகாப்பாக வைத்தனர். லட்சியவாத இளவரசர்கள், முரண்டு பிடித்த நகரங்கள், கலகக்கார விவசாயிகள் ஆகியோரிடமிருந்து அவர்களுக்குக் கடுமையான எதிர்ப்பு வந்தபோதெல்லாம், போப்பாண்டவர்கள் அந்த ஆவணத்தை ஒரு சக்தி வாய்ந்த பிரச்சாரக் கருவியாகப் பயன்படுத்தினர்.

இடைக்கால ஐரோப்பியர்கள் பண்டைய அரசாணைகளைப் பெரிதும் மதித்தனர். ஓர் ஆவணம் எவ்வளவு பழமை வாய்ந்ததாக இருந்ததோ, அது அவ்வளவு அதிக அதிகாரத்தைக் கொண்டிருந்ததாக அவர்கள் நம்பினர். மேலும், அரசர்களும் பேரரசர்களும் கடவுளின் பிரதிநிதிகள் என்றும் அவர்கள் உறுதியாக நம்பினர். குறிப்பாக, கான்ஸ்டன்டைன் மிக உயர்வாக மதிக்கப்பட்டார். ஏனெனில், காலங்காலமாகப் பேகன் மதத்தைத் தழுவி வந்திருந்த ரோமாபுரி சாம்ராஜ்ஜியத்தை ஒரு கிறித்தவப் பேரரசாக அவர் மாற்றினார்.

தற்போதைய நகர சபை ஒன்றின் விருப்பங்களுக்கும் பேரரசர் கான்ஸ்டன்டைன் நிறைவேற்றிய ஓர் அரசாணைக்கும் இடையே ஏதேனும் முரண்பாடு இருந்தால், அந்தப் பண்டைய ஆவணத்திற்குத்தான் தாங்கள் கீழ்ப்படிய வேண்டும் என்பதை இடைக்கால ஐரோப்பியர்கள் தெளிவாக அறிந்திருந்தனர். எனவே, போப்பாண்டவர் அரசியல் எதிர்ப்பை எதிர்கொள்ள நேரிட்டபோதெல்லாம், அவர் கான்ஸட்ன்டைனின் அரசாணையை எடுத்துக் காட்டி, எல்லோரும் அதற்குக் கீழ்ப்படிய வேண்டும் என்று வலியுறுத்தினார். அது எல்லா நேரத்திலும் பலனளிக்கவில்லை என்றாலும், போப்பாண்டவரின் பிரச்சாரங்களிலும் இடைக்கால அரசியல் ஒழுங்குமுறையிலும் அந்த ஆவணம் ஒரு முக்கிய அடித்தளமாகத் திகழ்ந்தது.

'கான்ஸ்டன்டைனின் நன்கொடையை' உன்னிப்பாக ஆய்வு செய்யும்போது, அக்கதை மூன்று தனித்தனிப் பகுதிகளைக் கொண்டிருப்பதை நீங்கள் காணுவீர்கள்:

| அறநெறிசார் தீர்ப்பு | பிரகடனம் | நடைமுறை அறிவுறுத்தல் |
|---|---|---|
| *தற்போதைய பிரபலமான அபிப்பிராயங்களைவிடப் பண்டைய அரசாணைகளை மக்கள் அதிகமாக மதிக்க வேண்டும்.* | *கி.பி. 315ம் ஆண்டு மார்ச் 30ம் நாளன்று, ஐரோப்பாவின்மீது ஆதிக்கம் செலுத்துவதற்கான அதிகாரத்தைப் பேரரசர் கான்ஸ்டன்டைன் போப்பாண்டவருக்கு வழங்கினார்.* | *1315ம் ஆண்டில் வாழும் ஐரோப்பியர்கள் போப்பாண்டவரின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும்.* |

பண்டைய அரசாணைகளின் அறநெறி தொடர்பான அதிகாரம் அவ்வளவு வெளிப்படையானது அல்ல. இருபத்தோராம் நூற்றாண்டைச் சேர்ந்த ஐரோப்பியர்களில் பெரும்பாலானோர், இன்றைய குடிமக்களின் விருப்பங்கள் நெடுங்காலத்திற்கு முன்பு இறந்துவிட்டப் பேரரசர்களின் ஆணைகளைவிட அதிக முக்கியமானவை என்று நினைக்கின்றனர். ஆனால், அறநெறி தொடர்பான இந்த விவாதத்திற்குள் அறிவியலால் நுழைய முடியாது. ஏனெனில், எந்தவொரு பரிசோதனையாலும் அல்லது சமன்பாட்டினாலும் இந்த விவகாரத்தைத் தீர்மானிக்க முடியாது. நவீனகால அறிவியலறிஞர் ஒருவர் காலச்சக்கரத்தில் 700 ஆண்டுகள் பின்னோக்கிப் பயணித்தால், பண்டைய அரசாணைகள் நவீன அரசியல் தகராறுகளுக்குப் பொருத்தமற்றவையாக இருப்பதாக இடைக்கால ஐரோப்பியர்களுக்கு அவரால் நிரூபித்திருக்க முடியாது.

ஆனாலும், 'கான்ஸ்டன்டைனின் நன்கொடை' வெறும் அறநெறிசார் தீர்ப்புகளின் அடிப்படையில் அமையவில்லை. உறுதியான பிரகடனங்கள் சிலவற்றையும் அது உள்ளடக்கியிருந்தது. இவற்றை உறுதிப்படுத்துவதற்கு அல்லது பொய்யென்று நிரூபிப்பதற்கு அறிவியல் மிக உயர்ந்த தகுதி பெற்றுள்ளது. 1441ம் ஆண்டில், ஒரு கத்தோலிக்கப் பாதிரியாரும் பன்மொழி வல்லுனருமான லொரென்சோ வல்லா, 'கான்ஸ்டன்டைனின் நன்கொடை' ஒரு போலி ஆவணம் என்றும், அதில் இடம்பெற்றிருந்தது ஒரு போலிக் கையெழுத்து என்றும் நிருபித்து ஓர் அறிவியல் கட்டுரையை வெளியிட்டார். அவர் அந்த ஆவணத்தின் பாணியையும், இலக்கணத்தையும், அதில் உள்ளடங்கியிருந்த பல்வேறு வார்த்தைகளையும் சொற்றொடர்களையும் ஆய்வு செய்தார். நான்காவது நூற்றாண்டில் புழக்கத்தில் இருந்த லத்தீன் மொழியில் இல்லாத வார்த்தைகள் அந்த ஆவணத்தில் இடம்பெற்றிருந்ததை வெளிப்படுத்திய அவர், கான்ஸ்டன்டைன் இறந்து சுமார் 400 ஆண்டுகளுக்குப் பிறகு அந்த ஆவணம் போலியாகத் தயாரிக்கப்பட்டிருக்கக்கூடும் என்று முடிவு தெரிவித்தார். மேலும், அந்த ஆவணத்தில் இடம்பெற்றிருந்த தேதி குறித்து அவர் கேள்வி எழுப்பினார். அச்சமயத்தில் ரோமாபுரிப் பேரரசின் அனைத்து ஆவணங்களிலும் இரண்டு நீதிபதிகள் கையெழுத்திட்டிருக்க வேண்டும். 'கான்ஸ்டன்டைனின் நன்கொடை' ஆவணத்தில் கான்ஸ்டன்டைனும் கல்லிகேனஸ் என்ற இன்னொரு நீதிபதியும் கையெழுத்திட்டிருந்தனர். ரோமாபுரிப் பேரரசில் ஒவ்வோர் ஆண்டும் இரண்டு தலைமை நீதிபதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவர்கள் தயாரித்த ஆவணங்கள் அனைத்திலும் அவர்கள் நீதிபதிகளாக இருந்த காலகட்டம் குறிப்பிடப்பட்டிருந்தது. கான்ஸ்டன்டைன் நான்காவது முறையாகத் தலைமை நீதிபதியாகப் பணியாற்றியது கி.பி. 315ம் ஆண்டில். ஆனால் கி.பி. 317ம் ஆண்டில்தான் கல்லிகேனஸ் முதன்முறையாகத் தலைமை நீதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்த முக்கியமான ஆவணம் கான்ஸ்டன்டைனின் காலகட்டத்தில்தான் தயாரிக்கப்பட்டது என்றால், இவ்வளவு பெரிய தவறு அதில் இடம்பெற்றிருந்திருக்காது. தாமஸ் ஜெஃபர்சனும் அவருடைய சகாக்களும் அமெரிக்க சுதந்திரப் பிரகடனத்தில் 1776ம் ஆண்டு ஜூலை 34ம் நாள் என்று குறிப்பிட்டிருந்திருந்தால் எப்படி இருந்திருக்குமோ, இது அப்படி இருந்தது.

'கான்ஸ்டன்டைனின் நன்கொடை' ஆவணம் எட்டாம் நூற்றாண்டில் ஏதோ ஒரு காலகட்டத்தில் போப்பாண்டவரின் அவையில் போலியாகத் தயாரிக்கப்பட்டிருக்கக்கூடும் என்று இன்றைய வரலாற்றியலாளர்கள்

அனைவரும் ஒப்புக் கொள்ளுகின்றனர். பண்டைய அரசாணைகளின் அதிகாரத்தை வல்லா ஒருபோதும் மறுக்கவில்லை என்றாலும், அவருடைய அறிவியல் ஆய்வு, ஐரோப்பியர்கள் போப்பாண்டவருக்குக் கீழ்ப்படிந்து நடந்தாக வேண்டும் என்ற நடைமுறை அறிவுறுத்தலை பலவீனப்படுத்தியது.

2013ம் ஆண்டு டிசம்பர் 20ம் நாளன்று, உகாண்டா நாடாளுமன்றம் ஓரினச்சேர்க்கைக்கு எதிரான ஒரு சட்டத்தை நிறைவேற்றியது. அது ஓரினச்சேர்க்கை நடவடிக்கைகளைக் குற்றப்படுத்தி, சில நடவடிக்கைகளுக்கு ஆயுள் தண்டனையும் விதித்தது. கடவுள் ஓரினச்சேர்க்கைக்குத் தடை விதித்துள்ளதாக முழங்குகின்ற கிறித்தவக் குழுவினர் அச்சட்டம் நிறைவேற்றப்படுவதற்கு மூலகாரணமாகவும் அதன் ஆதரவாளர்களாகவும் இருந்தனர். கடவுள் ஓரினச்சேர்க்கைக்குத் தடை விதித்துள்ளார் என்பதற்கு ஆதாரமாக, லெவிட்டிகஸ் 18:22 ('ஒரு பெண்ணோடு பாலுறவு கொள்ளுவதைப்போல ஓர் ஆணோடு உறவு கொள்ளாதீர்கள்; அது வெறுக்கத்தக்கது') மற்றும் லெவிட்டிகஸ் 20:13 ('ஓர் ஆடவன் ஒரு பெண்ணுடன் பாலுறவு வைத்துக் கொள்ளுவதைப்போல ஓர் ஆணுடன் வைத்துக் கொண்டால், அவர்கள் இருவருமே ஒரு வெறுக்கத்தக்கச் செயலைச் செய்துள்ளனர் என்று பொருள். அவர்களுக்கு மரண தண்டனை விதிக்கப்பட வேண்டும்') ஆகியவற்றை அவர்கள் மேற்கோள் காட்டுகின்றனர். முந்தைய நூற்றாண்டுகளில், மதரீதியான இதே கதை உலகம் நெடுகிலும் லட்சக்கணக்கான மக்களைக் கொடுமைப்படுத்தி அவர்களுக்குப் பெரும் துயரத்தைக் கொடுத்தது. இக்கதையைச்

| அறநெறிசார் தீர்ப்பு | பிரகடனம் | நடைமுறை அறிவுறுத்தல் |
|---|---|---|
| *மனிதர்கள் கடவுளின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும்.* | *சுமார் 3,000 ஆண்டுகளுக்கு முன்பு, ஓரினச்சேர்க்கை நடவடிக்கைகளில் ஈடுபடாமல் இருக்கும்படி மனிதர்களுக்குக் கடவுள் ஆணையிட்டார்.* | *ஓரினச்சேர்க்கை நடவடிக்கைகளை மக்கள் தவிர்க்க வேண்டும்.* |

இக்கதை உண்மையானதா? மனிதர்கள் கடவுளின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும் என்ற தீர்ப்புடன் அறிவியலறிஞர்களால் வாதிட முடியாது. தனிப்பட்ட முறையில் அது குறித்து நீங்கள் விவாதிக்கலாம். தெய்விக அதிகாரத்தைவிட மனித உரிமைகள் முக்கியமானவை என்றும், மனித உரிமைகளை மீறும்படி

கடவுள் நமக்குக் கட்டளையிட்டால், நாம் அவர் கூறுவதைச் செவிமடுக்கக்கூடாது என்றும் நீங்கள் நம்பலாம். ஆனாலும் இந்த விவகாரத்தில் ஒரு தீர்மானத்தை எட்டுவதற்கு எந்தவோர் அறிவியல் பரிசோதனையும் இல்லை.

இதற்கு நேர்மாறாக, ஆண்கள் ஒருவரோடு ஒருவர் புணர்ச்சி நடவடிக்கைகளில் ஈடுபடக்கூடாது என்று ஹோமோ சேப்பியன்ஸ் இனத்திற்கு இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்தவர் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கட்டளையிட்டார் என்ற பிரகடனத்தைப் பற்றி அறிவியலறிஞர்கள் அலசுவதற்கு ஏராளமான விஷயங்கள் இருக்கின்றன. இக்கூற்று உண்மையா இல்லையா என்று நாம் எப்படித் தெரிந்து கொள்ளுவது? இது தொடர்பான நூல்களை ஆய்வு செய்யும்போது ஒரு விஷயம் நமக்குத் தெரிய வருகிறது: இக்கூற்று லட்சக்கணக்கான புத்தகங்களிலும் கட்டுரைகளிலும் வலைத்தளங்களிலும் மீண்டும் மீண்டும் வெளியிடப்பட்டாலும்கூட, அவர்கள் அதற்கு ஒரே ஒரு மூலாதாரத்தைத்தான் சார்ந்துள்ளனர். பைபிள்தான் அது. அப்படியானால், யார் அந்த பைபிளைத் தொகுத்தது, எப்போது அது தொகுக்கப்பட்டது என்று ஓர் அறிவியலறிஞர் கேட்பார். இது உண்மை தொடர்பான கேள்வியே அன்றி, விழுமியங்கள் தொடர்பானது அல்ல. தத்தம் மதங்கள்மீது மிகுந்த அர்ப்பணிப்புக் கொண்ட யூதர்களும் கிறித்தவர்களும், லெவிட்டிகஸ் உரைகள் சினாய் மலையின்மீது மோசஸுக்குக் கடவுள் அருளியவை என்றும், அதன் பிறகு அந்த உரைகளில் ஓர் எழுத்துக்கூடச் சேர்க்கப்படவோ அல்லது நீக்கப்படவோ இல்லை என்றும் உறுதியாகக் கூறுகின்றனர். “ஆனால், அதை எப்படி நம்மால் உறுதிப்படுத்த முடியும்? என்ன இருந்தாலும், கான்ஸ்டன்டைனின் அரசாணையைக் கான்ஸ்டன்டைன் இறந்து 400 ஆண்டுகளுக்குப் பிறகு போப்பாண்டவர் தன்னுடைய சொந்த அதிகாரிகளை வைத்துப் போலியாக உருவாக்கிவிட்டு, அது நான்காம் நூற்றாண்டில் கான்ஸ்டன்டைனால் இயற்றப்பட்டது என்று வாதிட்டார் அல்லவா?” என்று அந்த அறிவியலறிஞர் வலியுறுத்தக்கூடும்.

பைபிளை யார், எப்போது இயற்றினார்கள் என்பதைத் தீர்மானிப்பதற்கான திறன் வாய்ந்த ஏராளமான அறிவியல் வழிமுறைகளை இப்போது நம்மால் பயன்படுத்த முடியும். ஒரு நூற்றாண்டுக்கும் மேலாக அறிவியலறிஞர்கள் துல்லியமாக அதைத்தான் செய்து வந்துள்ளனர். நீங்கள் விரும்பினால், அவர்கள் கண்டுபிடித்த விஷயங்களை உள்ளடக்கிய புத்தகங்களைப் படிக்கலாம். சுருக்கமாகக் கூற வேண்டுமென்றால், சக அறிஞர்களால் ஆய்வு செய்யப்பட்டப் பெரும்பாலான அறிவியல் ஆய்வுகள் பின்வரும்

கருத்தைத் தெரிவிக்கின்றன: 'பைபிள் என்பது பல்வேறு மனிதர்களால் இயற்றப்பட்டப் பல்வேறு உரைகளின் ஒரு தொகுப்புதான். நிகழ்ந்ததாக அவர்கள் கூறுகின்ற சம்பவங்கள் நிகழ்ந்து பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு உருவாக்கப்பட்ட நூல் இது. இந்த உரைகள் பைபிள் காலம் என்று வரையறுக்கப்பட்டுள்ள காலகட்டத்திற்கு நெடுங்காலத்திற்குப் பிறகுதான் ஒரே புத்தகமாகத் தொகுக்கப்பட்டன.' எடுத்துக்காட்டாக, டேவிட் அரசர் கி.மு. 1000ம் ஆண்டையொட்டி வாழ்ந்திருக்கக்கூடும், ஆனால் 'இணைச் சட்டம்' புத்தகம் கி.மு. 620ம் ஆண்டையொட்டி, ஜூடாவின் அரசரான ஜோசையாவின் அரசவையில் இயற்றப்பட்டது. அந்த அரசரின் அதிகாரத்திற்கு வலுவூட்டுவதை நோக்கமாகக் கொண்ட ஒரு பிரச்சாரத்தின் ஒரு பகுதியாக உருவாக்கப்பட்டப் புத்தகம் அது. அதற்குப் பல ஆண்டுகளுக்குப் பிறகு கி.மு. 500ம் ஆண்டியொட்டித்தான் லெவிட்டிகஸ் நூல் இயற்றப்பட்டது.

பைபிள் உரையில் எதையும் சேர்க்காமலும் அதிலிருந்து எதையும் நீக்காமலும் அந்நூலை யூதர்கள் பத்திரமாகப் பாதுகாத்தனர் என்ற யோசனையைப் பொருத்தவரை, பாரம்பரிய யூதமதம் ஒரு மறைநூலை அடிப்படையாகக் கொண்ட மதம் அல்ல என்று அறிவியலறிஞர்கள் சுட்டிக்காட்டுகின்றனர். இரும்புக் காலத்தைச் சேர்ந்த ஒரு வழிபாட்டு மரபு அது என்று அவர்கள் கூறுகின்றனர். அதில் யூதக் கோவில்கள், யேஷிவா அமைப்புகள், யூதகுருமார்கள் ஆகிய எதுவும் கிடையாது. அந்த மரபில் ஒரு பைபிள்கூடக் கிடையாது. மாறாக, விலாவாரியான கோவில் சடங்குகள் பலவற்றை அது உள்ளடக்கியிருந்தது. பருவமழையும் ராணுவ வெற்றிகளும் வேண்டி வான்கடவுள் ஒருவருக்கு விலங்குகளைப் பலி கொடுக்கும் சம்பிரதாயமும் அதில் இடம்பெற்றிருந்தது. அந்த மரபில் பூசாரிகள்தான் மேட்டுக்குடியினராகக் கருதப்பட்டனர். பிறப்பால் இவர்கள் மேட்டுக்குடியினராகத் திகழ்ந்தனரே அன்றி, அறிவால் அல்ல. பெரும்பாலும் கல்வியறிவு அற்றவர்களாக இருந்த அவர்கள், கோவில் விழாக்களைக் கையாளுவதில் மும்முரமாக இருந்தனர். மறைநூல்களை எழுதுவதற்கோ அல்லது படிப்பதற்கோ இவர்களுக்கு நேரம் இருக்கவில்லை.

'இரண்டாம் கோவில்' காலகட்டத்தின்போது, போட்டி மேட்டுக்குடிக் குழு ஒன்று மெல்ல மெல்ல உருவாகியது. பாரசீகம் மற்றும் கிரேக்கத் தாக்கங்களால் ஆட்கொள்ளப்பட்டு, உரைகளை எழுதி அவற்றுக்கு அர்த்தம் கற்பித்த யூத அறிஞர்களின் முக்கியத்துவம் அதிகரித்தது. இறுதியில் இந்த அறிஞர்கள் யூதகுருக்கள் ('ராபை') என்று அழைக்கப்படலாயினர். அவர்கள் தொகுத்த உரைகள் 'பைபிள்' என்று

அழைக்கப்பட்டன. ஒரு யூதகுருவின் அதிகாரம் அவருடைய அறிவுத் திறனைச் சார்ந்திருந்ததே அன்றி, அவருடைய பிறப்பை அல்ல. கல்வியறிவு வாய்க்கப் பெற்றிருந்த இப்புதிய மேட்டுக்குடியினருக்கும் பழைய பூசாரிக் குடும்பங்களுக்கும் இடையே மோதல் ஏற்பட்டது. கி.பி. 70ம் ஆண்டில் ரோமாபுரியினர் ஜெரூசலம் நகரையும் அதன் கோவிலையும் எரித்து, மாபெரும் யூதப் புரட்சியை அடக்கி ஒடுக்கினர். கோவில் சீரழிந்து போனதால், பூசாரிகள் குடும்பத்தினர் தம்முடைய மத அதிகாரத்தையும், பொருளாதார அடித்தளத்தையும், தங்கள் சொந்த இருத்தலுக்கான முக்கியக் காரணத்தையும் ஒருசேர இழந்துவிட்டனர். கோவில்கள், பூசாரிகள், எதற்கும் அஞ்சாத வீரர்கள் ஆகியோரை உள்ளடக்கிய பாரம்பரிய யூதமதம் காணாமல் போயிற்று. அதன் இடத்தில், மறைநூல்கள், ராபைகள், அறிஞர்கள் ஆகியோரை உள்ளடக்கிய ஒரு புதிய யூத மதம் முளைத்தது. அர்த்தப்படுத்துதல்தான் அந்த அறிஞர்களின் முக்கியத் திறமையாக இருந்தது. சர்வ வல்லமை வாய்ந்த கடவுள் எப்படித் தன்னுடைய கோவில் அழிக்கப்பட அனுமதித்தார் என்பதை விளக்குவதற்கு மட்டுமல்லாமல், பைபிள் கதைகளில் விவரிக்கப்பட்டுள்ள பழைய யூதமதத்திற்கும் தாங்கள் உருவாக்கிய வித்தியாசமான யூதமதத்திற்கும் இடையேயான இடைவெளிகளை நிரப்பவும் அவர்கள் அத்திறனைப் பயன்படுத்தினர்.

எனவே, நம்முடைய சிறந்த அறிவியல் அறிவின்படி, ஓரினச்சேர்க்கைக்கு எதிராக லெவிட்டிகஸ் புத்தகத்தில் இடம்பெற்றுள்ள தடையாணைகள், பண்டைய ஜெரூசலம் நகரில் வாழ்ந்த ஒருசில பூசாரிகள் மற்றும் அறிஞர்கள் கொண்டிருந்த பாரபட்சமான கருத்துக்களே. கடவுளின் கட்டளைகளுக்கு மக்கள் கீழ்ப்படிந்து நடக்க வேண்டுமா அல்லது கூடாதா என்பதை அறிவியலால் தீர்மானிக்க முடியாது என்றாலும், பைபிளின் தோற்றத்தைப் பற்றிக் கூறுவதற்குப் பல பொருத்தமான விஷயங்கள் அதனிடம் உள்ளன. பிரபஞ்சத்தையும் விண்மீன் மண்டலங்களையும் கருந்துளைகளையும் படைத்த சக்தி, ஹோமோ சேப்பியன்ஸ் இனத்தைச் சேர்ந்த ஆடவர் இருவர் இணைந்து சிறிது குதூகலமாக இருந்தால் பெரிதும் வருந்தும் என்று உகாண்டாவின் அரசியல்வாதிகள் நினைத்தால், அவர்களுடைய இந்தத் தவறான யோசனையைப் போக்குவதற்கு அறிவியலால் அவர்களுக்கு உதவ முடியும்.

## கேள்விக்கு உட்படுத்தப்பட முடியாத புனிதக் கோட்பாடுகள்

யதார்த்தத்தில், அறநெறிசார் தீர்ப்புகளை மதரீதியான பிரகடனங்களிலிருந்து பிரிப்பது ஒருபோதும் சுலபமானதாக இருப்பதில்லை. பிரகடனங்களை அறநெறித் தீர்ப்புகளாக மாற்றும் போக்கை மதங்கள் கொண்டிருக்கின்றன. இதன் மூலம், அவை தீவிரக் குழப்பத்தை உண்டாக்கி, எளிய விவாதங்களாக இருந்திருக்க வேண்டியவற்றைத் தெளிவற்றவையாக ஆக்குகின்றன. 'கடவுள் பைபிளை எழுதினார்' என்ற பிரகடனம், 'பைபிளை எழுதிய கடவுளை நீங்கள் நம்ப வேண்டும்' என்ற அறநெறிசார் தீர்ப்புக்குள் இப்படித்தான் தன்னை நுழைத்துக் கொண்டுவிடுகிறது. இப்பிரகடனம் குறித்துக் கேள்வி எதுவும் எழுப்பாமல் அதை அப்படியே நம்புவது ஒரு நற்பண்பு என்றும், அதை சந்தேகிப்பது ஒரு கொடிய பாவம் என்றும் மதம் வலியுறுத்துகிறது.

இதற்கு நேர்மாறாக, அறநெறிசார் தீர்ப்புகள் பல சமயங்களில் உண்மைக் கூற்றுக்களைத் தம்முள் ஒளித்து வைத்துக் கொள்ளுகின்றன. ஏனெனில், அக்கூற்றுக்களை முன்மொழிந்தவர்கள், அவை சந்தேகத்திற்கு இடமின்றி நிரூபிக்கப்பட்டுள்ளதாகக் கருதுவதால், அவர்கள் அவற்றைக் குறிப்பிடாமல் விட்டுவிடுகின்றனர். இவ்வாறு, 'மனித வாழ்க்கை புனிதமானது' என்ற அறநெறிசார் தீர்ப்பு (இதை அறிவியலால் சோதிக்க முடியாது), 'ஒவ்வொரு மனிதனும் என்றென்றும் நிலைத்திருக்கின்ற ஓர் ஆன்மாவைக் கொண்டுள்ளான்' (இது அறிவியல்ரீதியான விவாதத்திற்கு உரியது) என்ற பிரகடனத்தை மறைத்துவிடுகிறது. அதேபோல, 'அமெரிக்க நாடு புனிதமானது' என்று அமெரிக்க தேசியவாதிகள் முழங்கும்போது, அறநெறிசார் தீர்ப்பைப்போலத் தோன்றுகின்ற இந்த முழக்கம் உண்மையில், 'கடந்த ஒருசில நூற்றாண்டுகளில் நிகழ்ந்துள்ள நன்னெறிரீதியான, அறிவியல்ரீதியான, மற்றும் பொருளாதாரரீதியான முன்னேற்றங்களில் பெரும்பாலானவை அமெரிக்காவின் தலைமையில்தான் நிகழ்ந்துள்ளன' போன்ற பிரகடனங்களின் அடிப்படையில் அமைந்துள்ளது. அமெரிக்கா புனிதமானது என்ற முழக்கத்தை அறிவியற்பூர்வமாகக் கூர்ந்து ஆய்வு செய்வது சாத்தியமற்றது. ஆனால், நாம் இந்தத் தீர்ப்பின் அம்சங்களை கவனமாக ஆய்வு செய்தால், அமெரிக்கா உண்மையிலேயே நன்னெறிரீதியான, அறிவியல்ரீதியான, மற்றும் பொருளாதாரரீதியான முன்னேற்றங்களில் பெரும்பான்மையானவற்றுக்குக் காரணமாக இருந்துள்ளதா என்பதை அறிவியற்பூர்வமாக நம்மால் விரிவாக அலச முடியும்.

இது, சாம் ஹாரிஸ் போன்ற சில தத்துவவியலாளர்கள் பின்வருமாறு வாதிட வழி வகுத்துள்ளது: "அறநெறி தொடர்பான இக்கட்டான

விஷயங்களுக்கு அறிவியலால் எப்போதும் தீர்வு காண முடியும். ஏனெனில், மனித விழுமியங்கள் எப்போதும் தம்முள் சில உண்மைக் கூற்றுக்களை ஒளித்து வைத்திருக்கின்றன." துயரத்தைக் குறைப்பதும் மகிழ்ச்சியை அதிகரிப்பதும்தான் அனைத்து மனிதர்களிடமும் இருக்கின்ற பொதுவான உச்சகட்ட விழுமியம் என்பதால், அறநெறி தொடர்பான விவாதங்கள் அனைத்தும் மகிழ்ச்சியை உச்சபட்சமாக அதிகரிப்பதற்கான மிகவும் ஆற்றல்மிக்க வழியைப் பற்றியவையே என்று ஹாரிஸ் நினைக்கிறார். மகிழ்ச்சியாக இருப்பதற்கு இஸ்லாமிய அடிப்படைவாதிகள் சொர்க்கத்திற்குச் செல்ல விரும்புகின்றனர்; மனித சுதந்திரத்தை அதிகரிப்பது மகிழ்ச்சியை உச்சபட்சமாக அதிகரிக்கிறது என்று தாராளவாதிகள் நம்புகின்றனர்; பெர்லின் நகரம் இப்புவியின்மீது ஆட்சி செலுத்த அனுமதிக்கப்பட்டால் எல்லோரும் சிறப்பாக வாழுவர் என்று ஜெர்மானிய தேசியவாதிகள் கருதுகின்றனர். ஹாரிஸைப் பொருத்தவரை, இஸ்லாமியர்கள், தாராளவாதிகள், தேசியவாதிகள் ஆகியோருக்கிடையே அறநெறி தொடர்பான எந்த முரண்பாடும் இல்லை; தங்கள் அனைவருக்குமான பொதுவான இலக்கை அடைவதற்கான சிறந்த வழி குறித்த, உண்மை தொடர்பான கருத்து வேறுபாடுதான் உள்ளது.

ஹாரிஸின் கருத்து சரியாக இருந்தாலும், அனைத்து மனிதர்களும் மகிழ்ச்சியை விரும்பினாலும், அறநெறி தொடர்பான பூசல்களைத் தீர்மானிப்பதற்கு இந்த உள்நோக்கைப் பயன்படுத்துவது நடைமுறையில் மிகக் கடினமாக இருக்கும். ஏனெனில், மகிழ்ச்சி குறித்த எந்தவோர் அறிவியல் வரையறையோ அல்லது அளவீடோ நம்மிடம் இல்லை. 'மூன்று ஆழ்பள்ளத்தாக்கு அணை' விவகாரத்தை நாம் மீண்டும் பார்க்கலாம். உலகத்தை அதிக மகிழ்ச்சியான ஓர் இடமாக மாற்றுவதுதான் அந்த அணைப் பணித்திட்டத்தின் உச்சகட்ட இலக்கு என்று நாம் ஒப்புக் கொண்டாலும், பாரம்பரிய வாழ்க்கைமுறையைப் பாதுகாப்பதையும் சீன ஆற்றின் அரிய டால்பின்களைக் காப்பாற்றுவதையும்விட மின்சாரத்தை மிகக் குறைந்த செலவில் தயாரிப்பது உலகளாவிய மகிழ்ச்சிக்கு அதிகமாகப் பங்களிக்கும் என்று எப்படி நம்மால் உறுதியாகக் கூற முடியும்? பிரக்ஞை பற்றிய மர்மங்களை நாம் புரிந்து கொள்ளாதவரை, மகிழ்ச்சியையும் துயரத்தையும் அளவிடுவதற்கான ஓர் உலகளாவிய அளவீட்டை நம்மால் உருவாக்க முடியாது. மேலும், வெவ்வேறு தனிநபர்களின் மகிழ்ச்சியையும் துயரத்தையும் எப்படி ஒப்பிடுவது என்பதும் நமக்குத் தெரியாது. 100 கோடி சீனர்கள் மலிவான விலையில் மின்சாரத்தைப் பயன்படுத்துவது எத்தனை அலகுகள் மகிழ்ச்சியை உற்பத்தி செய்யும்?

ஓர் ஒட்டுமொத்த டால்பின் இனமும் பூண்டோடு அழிக்கப்படும்போது எத்தனை அலகுகள் துயரம் உற்பத்தி செய்யப்படுகிறது? மகிழ்ச்சியும் துயரமும் கூட்டலுக்கும் கழித்தலுக்கும் உட்படுத்தப்படக்கூடிய கணித அம்சங்கள்தானா? ஐஸ்கிரீம் சாப்பிடுவது ஓர் இனிமையான அனுபவம்; உண்மையான காதலைக் கண்டுகொள்ளுவது அதிக இனிமையான அனுபவம்; நீங்கள் போதிய அளவு ஐஸ்கிரீமை உட்கொண்டால், அந்தக் கூட்டு இனிமை உண்மையான காதலினால் உண்டாகும் குதூகலத்திற்கு ஈடாகுமா?

ஆகவே, அறநெறி தொடர்பான விவகாரங்களில் பங்களிப்பதற்கு அறிவியல் நாம் பொதுவாக நினைப்பதைவிட அதிகமான விஷயங்களைத் தன் வசம் வைத்துள்ளது என்றாலும், அது தாண்டக்கூடாத எல்லைக்கோடு ஒன்று இருக்கிறது. ஏதேனும் ஒரு மதத்தின் வழிகாட்டுதல் இல்லாமல் பெரிய அளவில் சமூக ஒழுங்குமுறையைப் பராமரிப்பது இயலாத காரியம். பல்கலைக்கழகங்களுக்கும் பரிசோதனைக்கூடங்களுக்கும்கூட மதத்தின் ஆதரவு தேவைப்படுகிறது. மதமானது அறிவியல் ஆராய்ச்சிகளை அறநெறிரீதியாக நியாயப்படுத்துகிறது. இதற்கு பதிலீடாக, அறிவியல்ரீதியான நோக்கங்கள்மீதும் அறிவியல் கண்டுபிடிப்புகளின் பயன்கள்மீதும் அது தாக்கம் செலுத்துகிறது. எனவே, மத நம்பிக்கைகளைக் கருத்தில் எடுத்துக் கொள்ளாமல் அறிவியலின் வரலாற்றை உங்களால் புரிந்து கொள்ள முடியாது. அறிவியலறிஞர்கள் அரிதாகவே இந்த உண்மையின்மீது கவனம் செலுத்துகின்றனர், ஆனால் வரலாற்றிலேயே, தன்னுடைய கருத்துக்கள்தான் சரி என்று மிகவும் பிடிவாதமாக இருந்த, எள்ளளவும் சகிப்புத்தன்மை இல்லாத, தீவிர மத நம்பிக்கை கொண்டிருந்த சமூகங்களில் ஒன்றில்தான் அறிவியல் புரட்சியே உருவானது.

## வெறித்தனமான வேட்டை

மதச்சார்பின்மை, சகிப்புத்தன்மை ஆகிய விழுமியங்களோடு அறிவியலை நாம் தொடர்புபடுத்துகிறோம். அப்படியானால், நவீன காலகட்டத்தின் துவக்ககாலத்திய ஐரோப்பாவில் ஓர் அறிவியல் புரட்சி வெடிக்கும் என்று நீங்கள் உங்கள் கனவில்கூட நினைத்துப் பார்த்திருக்க மாட்டீர்கள். கொலம்பஸ், கோப்பர்நிகஸ், நியூட்டன் ஆகியோர் வாழ்ந்த காலத்திய ஐரோப்பா, உலகிலேயே மிக அதிகமான மத வெறியர்களையும் மிகக் குறைந்த அளவு சகிப்புத்தன்மையையும் கொண்ட ஓர் இடமாக இருந்தது. அறிவியல் புரட்சியில் ஈடுபட்டிருந்த

அறிஞர்கள், யூதர்களையும் இஸ்லாமியர்களையும் நாடு கடத்திய, கடவுளை நம்பாதவர்களை ஒட்டுமொத்தமாகத் தீயிட்டுக் கொளுத்திய, பூனைகளை விரும்பிய மூதாட்டிகள் ஒவ்வொருவரையும் ஒரு மந்திரவாதினியாகப் பார்த்த, ஒவ்வொரு பௌர்ணமியின்போதும் ஒரு புதிய மதப் போரைத் துவக்கிய ஒரு சமுதாயத்தில் வாழ்ந்து வந்தனர்.

1600ம் ஆண்டையொட்டி நீங்கள் கைரோவுக்கோ அல்லது இஸ்தான்புல் நகருக்கோ பயணித்திருந்தால், சுன்னி இஸ்லாமியர்கள், ஷியா இஸ்லாமியர்கள், பாரம்பரியக் கிறித்தவர்கள், கத்தோலிக்கர்கள், அர்மீனியர்கள், கோப்துக்கள், யூதர்கள், சில இந்துக்கள் உட்பட, பல்வேறு கலாச்சாரங்களைச் சேர்ந்த மக்கள் ஒன்றாகச் சேர்ந்து இணக்கமாக வாழ்ந்த, சகிப்புத்தன்மை கொண்ட ஒரு நகரத்தை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அவர்களுக்கிடையே அவ்வப்போது உடன்பாடின்மைகளும் கலவரங்களும் ஏற்பட்டபோதிலும், ஒட்டோமான் பேரரசு மதத்தின் அடிப்படையில் மக்களைப் பாரபட்சமாக நடத்தியபோதிலும், ஐரோப்பாவுடன் ஒப்பிடுகையில் அது ஒரு சுதந்திரமான சொர்க்கமாக இருந்தது. அங்கிருந்து நீங்கள் ஒரு கப்பலில் அதே காலகட்டத்திய லண்டனுக்கோ அல்லது பாரீஸுக்கோ பயணித்திருந்தால், அந்நகரங்கள் மதத் தீவிரவாதங்களால் ஆட்கொள்ளப்பட்டிருந்ததை நீங்கள் பார்த்திருப்பீர்கள். எந்த மதம் அங்கு ஆதிக்கமானதாக விளங்கியதோ, அதன் உறுப்பினர்களால் மட்டுமே அங்கு வாழ முடிந்தது. லண்டனில் கத்தோலிக்கர்கள் கொல்லப்பட்டனர், பாரீஸில் புராட்டஸ்டன்ட்டுகள் கொல்லப்பட்டனர், நெடுங்காலத்திற்கு முன்பே யூதர்கள் அனைவரும் அந்நகரங்களைவிட்டுத் துரத்தியடிக்கப்பட்டிருந்தனர். இஸ்லாமியர்கள் அந்நகரங்களுக்குள் அனுமதிக்கப்படவே இல்லை. இருந்தாலும், அறிவியல் புரட்சி கைரோவிலும் இஸ்தான்புல்லிலும் தொடங்கவில்லை, மாறாக, லண்டனிலும் பாரீஸிலும்தான் அது தொடங்கியது.

நவீனத்துவத்தின் வரலாற்றை அறிவியலுக்கும் மதத்திற்கும் இடையேயான ஒரு போராட்டமாகச் சித்தரிப்பது வழக்கமாக இருக்கிறது. கோட்பாட்டுரீதியாக, அறிவியலும் மதமும் எல்லாவற்றையும்விட மேலாக உண்மையின்மீது அதிக ஆர்வம் கொண்டுள்ளன. ஆனால், அவை ஒவ்வொன்றும் ஒரு வித்தியாசமான உண்மையைத் தூக்கிப் பிடிப்பதால், அவ்விரண்டுக்கும் இடையே மோதல் ஏற்படுவது தவிர்க்கப்பட முடியாதது என்று கருதப்பட வாய்ப்புள்ளது. ஆனால் யதார்த்தத்தில், அறிவியலுக்கும் மதத்திற்கும் உண்மையைப் பற்றி எந்தக் கவலையும் இல்லை. எனவே, அவற்றால்

மிக சுலபமாக ஒன்றுக்கொன்று விட்டுக்கொடுக்கவும், ஒன்றோடொன்று இணக்கமாக வாழவும், ஒத்துழைக்கவும்கூட முடியும்.

எல்லாவற்றையும்விட மேலாக சமூக ஒழுங்கின்மீது மட்டுமே மதம் ஆர்வம் கொண்டுள்ளது. ஒரு சமூகக் கட்டமைப்பை உருவாக்கி அதைப் பராமரிப்பது அதன் நோக்கமாக இருக்கிறது. நோய்களை குணப்படுத்துவதற்கும், போர்களில் சண்டையிடுவதற்கும், உணவை உற்பத்தி செய்வதற்குமான சக்தியை ஆராய்ச்சி மூலம் கைவசப்படுத்துவது அதன் இலக்காக இருக்கிறது. அறிவியலறிஞர்களும் மதகுருக்களும் உண்மைக்கு அளப்பரிய முக்கியத்துவம் கொடுக்கக்கூடும்; ஆனால் மக்கட்கூட்டங்களால் ஆன அமைப்புகள் என்ற முறையில், அறிவியலும் மதமும் உண்மையைவிட ஒழுங்கையும் அதிகாரத்தையும் மட்டுமே அதிகமாக விரும்புகின்றன. எனவே, அவை ஒன்றோடொன்று நெருக்கமாக இருக்கின்றன. உண்மை குறித்த விடாப்பிடியான தேடல் ஓர் ஆன்மிகப் பயணமாக இருப்பதால், அதை மத அமைப்புகளுக்குள்ளும் அறிவியல் அமைப்புகளுக்குள்ளும் அடக்க முடியாது.

எனவே, நவீன வரலாற்றை, மனிதவாதம் என்ற ஒரு குறிப்பிட்ட மதத்திற்கும் அறிவியலுக்கும் இடையேயான ஓர் உடன்படிக்கையை உருவாக்குகின்ற ஒரு செயல்முறையாகப் பார்ப்பது அதிகத் துல்லியமானதாக இருக்கும். எதிர்த்துக் கேள்வி கேட்கப்பட முடியாத மனிதவாதக் கொள்கைகளை நவீனச் சமுதாயம் நம்புகிறது. அது இக்கொள்கைகள் குறித்துக் கேள்வி கேட்பதற்கு பதிலாக, அவற்றை நடைமுறையில் செயல்படுத்துவதற்காக அறிவியலைப் பயன்படுத்துகிறது. இருபத்தோராம் நூற்றாண்டில் மனிதவாதக் கொள்கைகளின் இடத்தை அறிவியல் கோட்பாடுகளால் ஒருபோதும் அபகரிக்க முடியாது. ஆனால், அறிவியலையும் மனிதவாதத்தையும் இணைக்கின்ற உடன்படிக்கை சுக்குநூறாக நொறுங்கி, அறிவியலுக்கும் வேறு ஏதோ புதிய, மனிதவாதத்திற்குப் பிந்தைய மதத்திற்கும் இடையே ஒரு வித்தியாசமான வகையான உடன்படிக்கை ஏற்பட அது வழி வகுக்கக்கூடும். அறிவியலுக்கும் மனிதவாதத்திற்கும் இடையேயான நவீன உடன்படிக்கையைப் புரிந்து கொள்ளுவதற்கு அடுத்த இரண்டு அத்தியாயங்களையும் நாம் அர்ப்பணிக்கலாம். இந்த உடன்படிக்கை ஏன் தவிடுபொடியாகிக் கொண்டிருக்கிறது என்பதையும், அதன் இடத்தை வேறு எந்தப் புதிய உடன்படிக்கை எடுத்துக் கொள்ளும் என்பதையும் இப்புத்தகத்தின் இறுதிப் பகுதி உங்களுக்கு விளக்கும்.

## அத்தியாயம் 6

# நவீன உடன்படிக்கை

நவீனத்துவம் என்பது ஓர் உடன்படிக்கையாகும். நாம் இந்த பூமியில் பிறக்கின்ற நாளன்று நாம் ஒவ்வொருவரும் இந்த உடன்படிக்கையில் கையெழுத்திடுகிறோம். அது நாம் இறக்கும் நாள்வரை நம்முடைய வாழ்க்கையை முறைப்படுத்துகிறது. நம்மில் வெகுசிலரால் மட்டுமே இந்த உடன்படிக்கையை ரத்து செய்யவோ அல்லது அதைக் கடந்து மேலே செல்லவோ முடியும். அது நம்முடைய உணவையும் வேலையையும் கனவுகளையும் வடிவமைக்கிறது. நாம் எங்கே வாழுகிறோம், நாம் யாரை நேசிக்கிறோம், நாம் எப்படி இறப்போம் ஆகியவற்றையும் அதுதான் தீர்மானிக்கிறது.

முதல் பார்வையில், நவீனத்துவம் மிகச் சிக்கலான ஓர் உடன்படிக்கைபோலத் தோன்றுகிறது. எனவே, தாங்கள் எந்த உடன்படிக்கையில் கையெழுத்திட்டுள்ளோம் என்பதை வெகுசிலரே புரிந்து கொள்ள முயற்சி செய்கின்றனர். நீங்கள் ஏதேனும் மென்பொருளை இணையத்தளத்திலிருந்து தரவிறக்கம் செய்யும்போது, அதனோடு சேர்த்து, எராளமான பக்கங்களை உள்ளடக்கிய ஓர் உடன்படிக்கையில் நீங்கள் கையெழுத்திட வேண்டும் என்று உங்களிடம் கேட்டுக் கொள்ளப்படுகிறது. நீங்கள் அந்த உடன்படிக்கையை ஒரு கணம் பார்த்துவிட்டு, கடைசிப் பக்கத்திற்குச் சென்று, 'நான் உடன்படுகிறேன்' என்ற வாசகத்திற்கு அருகே இருக்கும் ஒரு சிறிய சதுரத்திற்குள் உங்கள் ஒப்புதலைத் தெரிவித்துவிட்டு, பிறகு அதைப் பற்றி மறந்துவிடுவதைப் போன்றது இது. ஆனாலும், நவீனத்துவம் ஓர் எளிய உடன்படிக்கையாக இருப்பது ஆச்சரியமான விஷயமாகும். அந்த ஒட்டுமொத்த உடன்படிக்கையையும் ஒரே ஒரு சொற்றொடரில் தொகுத்துக் கூறிவிடலாம்: 'சக்திக்காக அர்த்தத்தை விட்டுக்கொடுக்க மக்கள் ஒப்புக் கொள்ளுகின்றனர்.'

நவீன காலகட்டம்வரை, மனிதர்கள் ஏதோ பெரிய பிரபஞ்சத்திட்டத்தில் ஒரு பங்கு வகிக்கின்றனர் என்று பெரும்பாலான கலாச்சாரங்கள் நம்பின. சர்வ வல்லமை படைத்தக் கடவுளராலோ அல்லது என்றென்றும் நீடித்து நிலைத்திருக்கும் இயற்கை விதிகளாலோ வகுக்கப்பட்டத் திட்டம் அது என்பதால் மனிதகுலத்தால் அதை மாற்ற முடியாது என்று அக்கலாச்சாரங்கள் கருதின. அந்தப் பிரபஞ்சத் திட்டம் மனித வாழ்க்கைக்கு அர்த்தத்தைக் கொடுத்தது, ஆனால் மனித சக்தியை

அது மட்டுப்படுத்தியது. மனிதர்கள் ஒரு நாடக மேடையின்மீது இருக்கும் நடிகர்கள்போல இருந்தனர். அந்த நாடகத்தின் திரைக்கதை அவர்களுடைய ஒவ்வொரு வார்த்தைக்கும் கண்ணீருக்கும் தோரணைக்கும் அர்த்தத்தைக் கொடுத்தது, ஆனால் அவர்கள் நடிக்கும் விதத்தின்மீது அது பெரும் கட்டுப்பாடுகளை விதித்தது. எடுத்துக்காட்டாக, நாடகத்தின் முதல் காட்சியில் ஹேம்லெட் கிளாடியஸைக் கொல்லக்கூடாது, அல்லது டென்மார்க்கைவிட்டு வெளியேறி இந்தியாவில் ஏதேனும் ஆசிரமத்திற்குப் போகக்கூடாது. ஷேக்ஸ்பியர் அதை அனுமதிக்க மாட்டார். அதேபோல, மனிதர்களால் நிரந்தரமாக வாழ முடியாது, அனைத்து நோய்களிலிருந்தும் அவர்களால் தப்பிக்க முடியாது, தங்கள் விருப்பம்போல அவர்களால் செயல்பட முடியாது. ஏனெனில், இவையெல்லாம் திரைக்கதையில் இல்லை.

தாங்கள் தங்களுடைய சக்தியை விட்டுக்கொடுத்ததற்கு பதிலீடாக, தங்களுடைய வாழ்க்கைக்கு அர்த்தம் கிடைத்திருந்ததாக நவீன காலத்திற்கு முந்தைய மனிதர்கள் நம்பினர். போர்களில் தாங்கள் துணிச்சலாகச் சண்டையிட்டோமா, சட்டபூர்வமான அரசரைத் தாங்கள் ஆதரித்தோமா, சாப்பிடக்கூடாதவற்றைத் தாங்கள் சாப்பிட்டோமா, அடுத்த வீட்டு நபருடன் தாங்கள் கள்ளத்தனமான உறவு வைத்திருந்தோமா போன்ற விஷயங்கள் அவர்களுக்கு உண்மையிலேயே முக்கியமானவையாக இருந்தன. இது சில அசௌகரியங்களை ஏற்படுத்தியது உண்மைதான் என்றாலும், பேரழிவுகளுக்கு எதிரான உளவியல்ரீதியான பாதுகாப்பை இது மனிதர்களுக்குக் கொடுத்தது. போர், தொற்றுநோய், வறட்சி போன்ற ஏதேனும் கொடூரமான விஷயம் நிகழ்ந்தபோது, "கடவுளராலோ அல்லது இயற்கை விதிகளாலோ உருவாக்கப்பட்டுள்ள ஏதோ மிகப் பெரிய பிரபஞ்ச நாடகம் ஒன்றில் நாம் எல்லோரும் ஒரு பங்கு வகிக்கிறோம். அதன் திரைக்கதை நமக்குத் தெரியாது என்றாலும், நிகழுகின்ற எல்லாம் ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காகவே நிகழுகிறது என்று நாம் உறுதியாக நம்பலாம். இந்தக் கொடூரமான போரும் தொற்றுநோயும் வறட்சியும்கூட இந்த பிரம்மாண்டமான பிரபஞ்ச நாடகத்தில் ஏதோ ஒரு விதத்தில் பங்கு வகிக்கின்றன. மேலும், இந்நாடகத்தின் ஆசிரியர் இக்கதைக்கு ஒரு நல்ல, அர்த்தமுள்ள முடிவைக் கொடுப்பார் என்று நாம் தாராளமாக நம்பலாம். எனவே, இந்தப் போரும் தொற்றுநோயும் வறட்சியும்கூட நன்மையிலேயே முடியும். இப்போதே இக்கணமே அது நிகழாவிட்டால்கூட, நிச்சயமாக மரணத்திற்குப் பிந்தைய வாழ்க்கையில் ஒரு நல்ல விளைவு ஏற்படும்," என்று கூறி மக்கள் தங்களுக்குத் தாங்களே ஆறுதல் கூறிக்

கொண்டனர்.

ஒரு மாபெரும் பிரபஞ்சத் திட்டம் என்ற யோசனையை நவீனக் கலாச்சாரம் நிராகரிக்கிறது. நாம் எந்தவொரு பெரிய நாடகத்திலும் நடித்துக் கொண்டிருக்கின்ற நடிகர்கள் அல்லர்; வாழ்க்கைக்கு எந்தத் திரைக்கதையும் இல்லை, எந்த நாடக ஆசிரியரும் இல்லை, எந்த இயக்குநரும் இல்லை, எந்தத் தயாரிப்பாளரும் இல்லை; முக்கியமாக, வாழ்க்கைக்கு எந்த அர்த்தமும் இல்லை என்று அது நம்புகிறது. நமக்கு இருக்கும் அறிவியல்ரீதியான புரிதலின்படி, பிரபஞ்சம் என்பது சத்தமும் கொந்தளிப்பும் நிரம்பிய, எந்த நோக்கமும் இல்லாத, முக்கியமான எதையும் பிரதிநுதப்படுத்தாத ஒரு குருட்டுத்தனமான செயல்முறையாகும். இந்த அகண்டப் பிரபஞ்சத்தின் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது ஒரு சின்னஞ்சிறு புள்ளியின் அளவே இருக்கின்ற இந்த பூமியில் நாம் இருக்கப் போகின்ற மிகச் சொற்ப காலத்தில் நாம் அளவுக்கதிகமாக அலட்டிக் கொள்ளுகிறோம், ஆரவாரம் செய்கிறோம். பிறகு திடீரென்று ஒருநாள் நாம் காணாமல் போய்விடுகிறோம்.

வாழ்க்கைக்கு எந்தத் திரைக்கதையும் இல்லாததாலும், மனிதர்கள் எந்தவொரு பெரிய நாடகத்திலும் எந்தப் பங்கும் வகிக்கவில்லை என்பதாலும், பயங்கரமான விஷயங்கள் நமக்கு நிகழக்கூடும், நம்மைக் காப்பாற்றவோ அல்லது நம்முடைய துன்பத்திற்கு அர்த்தத்தைக் கொடுக்கவோ எந்த சக்தியும் வரப் போவதில்லை. ஒரு சுபமுடிவோ அல்லது ஒரு மோசமான முடிவோ இருக்கப் போவதில்லை. எந்தவொரு முடிவும் இல்லாமலும் போகக்கூடும். விஷயங்கள் அடுத்தடுத்து ஒவ்வொன்றாக வெறுமனே நிகழுகின்றன, அவ்வளவுதான். நவீன உலகத்திற்கு நோக்கத்தில் நம்பிக்கை இல்லை, அது காரணத்தை மட்டுமே நம்புகிறது. நவீனத்துவத்திற்கு ஒரு குறிக்கோள் உரை இருக்கிறது என்றால், அது இதுதான்: “நடப்பது நடந்தே தீரும்.”

மறுபுறம், எந்தவொரு திரைக்கதையும் அல்லது நோக்கமும் இன்றி, நடப்பது நடந்தே தீரும் என்றால், முன்கூட்டியே தீர்மானிக்கப்பட்ட ஏதோ ஒரு பாத்திரத்தை மட்டுமே நாம் வகிக்க வேண்டும் என்ற கட்டாயம் மனிதர்களுக்கு இல்லாமல் போய்விடுகிறது. நாம் விரும்பும் எதையும் நம்மால் செய்ய முடியும் - நாம் அதற்கான ஒரு வழியைக் கண்டுபிடிக்கும்பட்சத்தில்! நம்முடைய சொந்த அறியாமையைத் தவிர வேறு எதுவும் நம்மை மட்டுப்படுத்துவதில்லை. தொற்றுநோய்களுக்கும் வறட்சிகளுக்கும் பிரபஞ்சரீதியான எந்தவொரு அர்த்தமும் இல்லை, ஆனால் அவற்றை நம்மால் ஒழித்துக்கட்ட முடியும். ஒரு சிறந்த எதிர்காலத்தை உருவாக்குவதற்குப் போர்கள் ஒரு தீய வழி என்று

ஒட்டுமொத்தமாகக் கூறிவிட முடியாது, ஆனால் நம்மால் சமாதானத்தை உருவாக்க முடியும். நம்முடைய மரணத்திற்குப் பிறகு, நம்மை வரவேற்க எந்த சொர்க்கமும் நமக்காகத் தன்னுடைய கதவுகளைத் திறந்து வைத்துக் காத்திருப்பதில்லை. மாறாக, பூமியில் நம்மால் ஒரு சொர்க்கத்தை உருவாக்க முடியும், என்றென்றும் அதில் நம்மால் வாழ முடியும் - நாம் சில தொழில்நுட்பப் பிரச்சனைகளை சமாளித்து அவற்றிலிருந்து மீண்டும்விடும் பட்சத்தில்!

நாம் ஆராய்ச்சியில் பணத்தை முதலீடு செய்தால், பிறகு புதுமையான அறிவியல் கண்டுபிடிப்புகள் தொழில்நுட்பரீதியான முன்னேற்றத்தைத் துரிதப்படுத்தும். புதிய தொழில்நுட்பங்கள் பொருளாதார வளர்ச்சியின் வேகத்தை அதிகரிக்கும். வளர்ந்து கொண்டிருக்கும் ஒரு பொருளாதாரம் இன்னும் அதிகப் பணத்தை ஆராய்ச்சிக்கு அர்ப்பணிக்கும். ஆண்டுகள் செல்லச் செல்ல, அதிகமான உணவையும், வேகமான வண்டிகளையும், சிறப்பான மருந்துகளையும் நாம் பெற்றிருப்போம். எதிர்காலத்தில் ஒருநாள், நிரந்தர இளமைக்கான அமுதத்தையும், உண்மையான மகிழ்ச்சிக்கான அமுதத்தையும், நாம் விரும்புகின்ற வேறு எந்தவோர் அமுதத்தையும் காய்ச்சி வடித்தெடுக்கக்கூடிய அளவுக்கு நம்முடைய அறிவு பெரிதும் விசாலமடைந்திருக்கும், தொழில்நுட்பம் வெகுவாக முன்னேறியிருக்கும். நம்மை எந்தவொரு கடவுளாலும் தடுத்து நிறுத்த முடியாது.

நவீன உடன்பாடு ஒரு மாபெரும் சபலத்திற்கு மனிதர்களை உட்படுத்துகிறது. கூடவே, ஒரு மாபெரும் அச்சுறுத்தலையும் அது அவர்களுக்கு விடுக்கிறது. சர்வ வல்லமை நம் முன்னே இருக்கிறது, அது கிட்டத்தட்ட நம் கைவசமாகும் தூரத்தில் இருக்கிறது, ஆனால் சூனியம் எனும் படுபாதாளம் நமக்குக் கீழே கொட்டாவி விட்டுக் கொண்டிருக்கிறது. நடைமுறைரீதியாகப் பார்க்கும்போது, நவீன வாழ்க்கையானது, அர்த்தம் ஏதுமற்ற ஒரு பிரபஞ்சத்திற்குள் நடைபெறுகின்ற தொடர்ச்சியான, சக்திக்கான தேடலை உள்ளடக்கியதாக இருக்கிறது. நவீனக் கலாச்சாரம்தான் வரலாற்றிலேயே மிக அதிக சக்தி வாய்ந்ததாக இருக்கிறது. அது இடையறாது ஆராய்ச்சி செய்து கொண்டும், புதிய விஷயங்களைக் கண்டுபிடித்துக் கொண்டும், தொடர்ந்து வளர்ந்து கொண்டும் இருக்கிறது. அதே நேரத்தில், முந்தைய எந்தவொரு கலாச்சாரத்தைவிடவும், நவீனக் கலாச்சாரம்தான் இருத்தல் குறித்தக் கவலையாலும் பயத்தாலும் அதிகமாகப் பீடிக்கப்பட்டுள்ளது.

நவீன காலத்தில் நிகழும் சக்தி குறித்தத் தேடலைப் பற்றி இந்த அத்தியாயம் விவாதித்துக் கொண்டிருக்கிறது. அதிகரித்துக்

கொண்டிருக்கும் தன்னுடைய சக்தியைப் பயன்படுத்தி மனிதகுலம் எப்படி ஓசையின்றிப் பிரபஞ்சத்தின் முடிவற்ற சூனியத்திற்குள் மீண்டும் அர்த்தத்தைப் புகுத்தியுள்ளது என்பதை அடுத்த அத்தியாயத்தில் நாம் ஆய்வு செய்யவிருக்கிறோம். நவீன மக்களாகிய நாம், அர்த்தத்தை விட்டுக்கொடுத்து சக்தியைக் கைவசப்படுத்துவதாக வாக்குக் கொடுத்திருக்கிறோம், ஆனால் நாம் நம்முடைய வாக்குறுதியைக் காப்பாற்றுவதை உறுதி செய்வதற்கு அங்கே யாரும் இல்லை. நவீன உடன்படிக்கைக்குக் கொடுக்கப்பட வேண்டிய விலையைக் கொடுக்காமல் வெறுமனே அதன் முழுப் பலன்களை மட்டும் அனுபவிக்கக்கூடிய அளவுக்கு நாம் சாமர்த்தியசாலிகள் என்று நாம் நினைக்கிறோம்.

## வங்கியாளர்கள் ஏன் ரத்தக்காட்டேரிகளிடமிருந்து வேறுபட்டிருக்கின்றனர்

சக்தி குறித்த நவீனத் தேடல் அறிவியல் முன்னேற்றத்திற்கும் பொருளாதார வளர்ச்சிக்கும் இடையேயான கூட்டால் துரிதப்படுத்தப்படுகிறது. வரலாற்றில் வெகுகாலம் அறிவியல் ஒரு நத்தை வேகத்தில்தான் முன்னேறியது, பொருளாதாரம் முற்றிலுமாக உறைந்து போயிருந்தது. படிப்படியான மக்கட்தொகை அதிகரிப்பு உற்பத்தி அதிகரிப்பதற்கு வழி வகுத்தது. ஆங்காங்கே நிகழ்ந்த புதிய கண்டுபிடிப்புகள், சில சமயங்களில், தனிநபர் சராசரி வருமானம் உயரக் காரணமாக இருந்தன. ஆனால் இது ஒரு மெதுவான செயல்முறையாகும்.

கி.பி. 1000ம் ஆண்டில் கிராம மக்கள் 100 பேர் சேர்ந்து 100 டன்கள் கோதுமையை உற்பத்தி செய்திருந்து, கி.பி. 1100ம் ஆண்டில் 105 பேர் சேர்ந்து 107 டன்கள் கோதுமையை விளைவித்திருந்தால், இந்த சாதாரண வளர்ச்சியானது வாழ்வின் ஓட்ட வேகத்தையோ அல்லது சமூக அரசியல் ஒழுங்குமுறையையோ பெரிதாக மாற்றியிருக்காது. ஆனால் இன்று எல்லோரும் வளர்ச்சி குறித்து மிகத் தீவிரமாக இருக்கின்றனர். நவீன காலகட்டத்திற்கு முந்தைய காலகட்டதைச் சேர்ந்த மக்கள் வளர்ச்சியைப் பற்றிக் கவலைப்படவில்லை. மனித உற்பத்தி கிட்டத்தட்ட நிலையானதாக இருந்ததாகவும், ஒருவர் இன்னொருவரிடமிருந்து திருடித்தான் தன்னை வளப்படுத்திக் கொள்ள முடியும் என்றும், தங்களுடைய பேரக்குழந்தைகள் அவ்வளவு தரமான வாழ்க்கைமுறையை அனுபவிப்பதற்கான சாத்தியம் இல்லை என்றும் இளவரசர்களும் மதகுருக்களும் விவசாயிகளும் அனுமானித்தனர்.

புதிய பணித்திட்டங்களில் முதலீடு செய்வதில் இருந்த பொருளாதாரப் பிரச்சனைகள்தான் இந்தத் தேக்கத்திற்குப் பெருமளவு காரணமாக இருந்தன. போதுமான நிதியுதவி இல்லாததால், சதுப்புநிலங்களில் நீரை வடித்தெடுப்பதும், பாலங்களைக் கட்டுவதும், துறைமுகங்களை உருவாக்குவதும், புதிய கோதுமை வகைகளை உருவாக்குவதும், புதிய ஆற்றல் வளங்களைக் கண்டுபிடிப்பதும், புதிய வர்த்தக வழிகளைத் திறந்துவிடுவதும் அவ்வளவு சுலபமான காரியங்களாக இருக்கவில்லை. பணம் பற்றாக்குறையாக இருந்ததற்குக் காரணம் அந்தக் காலகட்டத்தில் கடன் மிகக் குறைவாக இருந்ததுதான். கடன் அவ்வளவு குறைவாக இருந்ததற்குக் காரணம் மக்களுக்கு வளர்ச்சியில் நம்பிக்கை இல்லாததுதான். மக்களுக்கு வளர்ச்சியில் நம்பிக்கை இல்லாததற்குக் காரணம் பொருளாதாரத் தேக்கம்தான். இவ்வாறு, தேக்கம் தானாகவே தன்னைத் தொடர்ந்து நிலை நிறுத்திக் கொண்டது.

ஆண்டுதோறும் சீதபேதி நோய் பரவுவதால் துன்புறுகின்ற ஓர் இடைக்கால நகரத்தில் நீங்கள் வாழுவதாக வைத்துக் கொள்ளுவோம். நீங்கள் இந்நோய்க்கு ஒரு தீர்வு காண உறுதி பூணுகிறீர்கள். ஒரு பணிமனையை நிறுவவும், மருத்துவ மூலிகைகளையும் சிறப்பு வேதிப்பொருட்களையும் வாங்கவும், உதவியாளர்களுக்குச் சம்பளம் கொடுக்கவும், பிரபலமான மருத்துவர்களுடன் கலந்தாலோசிப்பதற்குப் பல இடங்களுக்குப் பயணம் செய்யவும் உங்களுக்கு நிதியுதவி தேவைப்படுகிறது. நீங்கள் உங்கள் ஆராய்ச்சியில் மும்முரமாக ஈடுபட்டிருக்கும்போது நீங்களும் உங்கள் குடும்பத்தினரும் சாப்பிடுவதற்கும் பணம் வேண்டும். ஆனால் உங்களிடம் போதுமான பணம் இல்லை. உள்ளூர் பேக்கரிக்காரர், கொல்லர், அல்லது ஆலை உரிமையாளரை நீங்கள் அணுகி, ஒருசில ஆண்டுகளுக்கு உங்களுடைய அனைத்துத் தேவைகளையும் நிறைவேற்றிக் கொடுக்கும்படி அவர்களிடம் கேட்கலாம். நீங்கள் இறுதியில் சீதபேதி நோய்க்கான மருந்தைக் கண்டுபிடித்து, அதன் மூலம் நீங்கள் ஒரு பணக்காரராக ஆகும்போது, அவர்களிடம் நீங்கள் வாங்கியுள்ள கடன்களைத் திருப்பிச் செலுத்திவிடுவதாக அவர்களிடம் கூறுங்கள்.

துரதிர்ஷ்டவசமாக, அவர்கள் யாரும் உங்களுடைய கோரிக்கைக்கு ஒப்புதல் வழங்க மாட்டார்கள். அவர்களும் இன்று தங்களுடைய குடும்பத்திற்கு உணவளித்தாக வேண்டும். மேலும், அதிசய மருந்துகளில் அவர்களுக்கு நம்பிக்கை இல்லை. ஏனெனில், ஒரு பயங்கரமான நோய்க்கு ஒரு புதிய மருந்தை ஒருவர் கண்டுபிடித்ததாக அவர்கள் ஒருபோதும் கேள்விப்பட்டதில்லை. உங்களுக்கு மளிகைப்

பொருட்கள் வேண்டும் என்றால், அதற்கு நீங்கள் பணம் கொடுத்தாக வேண்டும். ஆனால், மருந்தை இன்னும் நீங்கள் கண்டுபிடிக்கவில்லை எனும்போது, பணம் உங்களுக்கு எங்கிருந்து கிடைக்கும்? உங்கள் நேரம் முழுவதையும் உங்கள் ஆராய்ச்சி எடுத்துக் கொண்டுவிடுகிறதே? வேறு வழியின்றி, நீங்கள் மீண்டும் உங்கள் வயலை உழப் போய்விடுகிறீர்கள். சீதபேதி நோய் தொடர்ந்து உங்கள் நகரத்து மக்களை வதைக்கிறது. புதிய மருந்துகளை உருவாக்க யாரும் முயற்சிப்பதில்லை. ஒரு பொற்காசுகூடக் கை மாறுவதில்லை. பொருளாதாரம் இப்படித்தான் தேக்கமடைந்தது, அறிவியலும் வளராமல் அப்படியே நின்று போனது.

இச்சுழற்சி நவீன காலகட்டத்தில் ஒருவழியாக முறிக்கப்பட்டது. எதிர்காலத்தின்மீது மக்களுக்கு ஏற்பட்ட அதிக நம்பிக்கையும், அதன் விளைவாக உருவான கடனும்தான் அதற்குக் காரணம். கடன்தான் நம்பிக்கையின் பொருளாதார வடிவமாகும். இன்று நான் ஒரு புதிய மருந்தைக் கண்டுபிடிக்க விரும்புகிறேன், ஆனால் என்னிடம் போதிய பணம் இல்லை என்றால், ஒரு வங்கியிலிருந்து என்னால் கடன் வாங்க முடியும் அல்லது தனிப்பட்ட முதலீட்டாளர்களை என்னால் அணுக முடியும். 2014ம் ஆண்டின் கோடைக்காலத்தில் மேற்கு ஆப்பிரிக்காவில் எபோலா நச்சுயிரி நோய் தோன்றியபோது, அந்த நச்சுயிரிக்கு எதிரான மருந்துகளைக் கண்டுபிடிப்பதில் மும்முரமாக ஈடுபட்டுக் கொண்டிருந்த மருந்து நிறுவனங்களின் பங்குகளின் விலை விண்ணைத் தொட்டன. டெக்மிரா மருந்து நிறுவனத்தின் பங்குகளின் விலை 50 சதவீதம் உயர்ந்தது. பயோகிரிஸ்ட் நிறுவனத்தின் பங்குகளின் விலை 90 சதவீதம் அதிகரித்தது. மத்தியக் காலகட்டங்களில் ஏதேனும் தொற்றுநோய் ஏற்பட்டபோது, மக்கள் விண்ணை நோக்கித் தங்கள் கண்களை உயர்த்தி, தங்கள் பாவங்கள் குறித்துத் தங்களை மன்னித்துவிடும்படி இறைவனிடம் பிரார்த்தனை செய்தனர். ஆனால் இன்று, ஏதேனும் புதிய தொற்றுநோய் பற்றி மக்கள் கேள்விப்படும்போது, அவர்கள் தங்களுடைய அலைபேசிகளை எடுத்துத் தங்களுடைய பங்குத் தரகர்களுக்கு அழைப்பு விடுக்கின்றனர். பங்குச் சந்தையைப் பொருத்தவரை, ஒரு தொற்றுநோய்கூட வியாபாரத்திற்கான ஒரு வாய்ப்புதான்.

போதிய எண்ணிக்கையில் புதிய முயற்சிகள் வெற்றி பெறும்போது, எதிர்காலத்தின்மீது மக்கள் கொண்டுள்ள நம்பிக்கை அதிகரிக்கிறது, கடன் விரிவடைகிறது, வட்டி விகிதம் குறைகிறது, தொழில்முனைவோரால் சுலபமாகப் பணம் திரட்ட முடிகிறது, பொருளாதாரம் வளருகிறது. இதன் விளைவாக, எதிர்காலத்தின்மீது

மக்களுக்கு இன்னும் அதிக நம்பிக்கை உருவாகிறது, பொருளாதாரம் தொடர்ந்து வளருகிறது, அதோடு சேர்ந்து அறிவியலும் முன்னேறுகிறது.

கோட்பாட்டுரீதியாக இது சுலபமானதாகத் தோன்றுகிறது. பிறகு ஏன் பொருளாதார வளர்ச்சி வேகம் பெறுவதற்கு மனிதகுலம் நவீன காலகட்டம்வரை காத்திருக்க வேண்டியிருந்தது? எதிர்கால வளர்ச்சியின்மீது ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மக்களுக்கு நம்பிக்கை இல்லாமல் இருந்ததற்குக் காரணம் அவர்கள் முட்டாள்கள் என்பதல்ல. மாறாக, அது நம்முடைய உள்ளுணர்வுகளுக்கும், நம்முடைய பரிணாமப் பாரம்பரியத்திற்கும், உலகம் இயங்கும் விதத்திற்கும் முரணாக இருப்பதுதான் அதற்குக் காரணம். பெரும்பாலான இயற்கை அமைப்புமுறைகள் சமநிலையில் இருக்கின்றன. பெரும்பாலான வாழ்க்கைப் போராட்டங்களில், ஒருவரைக் கீழே தள்ளிவிட்டுத்தான் மற்றவர் செழிப்புறுகிறார்.

எடுத்துக்காட்டாக, ஒவ்வோர் ஆண்டும் ஒரு குறிப்பிட்டப் பள்ளத்தாக்கில் ஒரே அளவிலான புல்தான் வளருகிறது. அந்தப் புல் சுமார் 10,000 முயல்களுக்கு உணவளிக்கிறது. இவற்றில் சில மந்தமான, துரதிர்ஷ்டக்கார முயல்கள் 100 நரிகளுக்கு இரையாக அமைகின்றன. ஒரு நரி குறிப்பாக அதிபுத்திசாலியாகவும் அதிகக் கடினமாக உழைப்பதாகவும் இருந்து, ஒரு சராசரி நரியைவிட அதிகமான முயல்களை வேட்டையாடி உட்கொண்டால், பிறகு மற்ற நரிகள் பட்டினியால் வாடும். ஆனால், ஒரே நேரத்தில் எல்லா நரிகளும் எப்படியோ அதிகமான முயல்களைப் பிடித்துவிட்டால், முயல்களின் எண்ணிக்கை அதளபாதாளத்தை எட்டிவிடும். அடுத்த ஆண்டு இன்னும் அதிகமான நரிகள் பட்டினி கிடக்க நேரிடும். முயல்களின் எண்ணிக்கையில் எப்போதேனும் ஏற்ற இறக்கங்கள் இருந்தாலும்கூட, நீண்டகால நோக்கில், தாம் ஒவ்வோர் ஆண்டும் முந்தைய ஆண்டைவிட 3 சதவீதம் அதிகமான முயல்களை வேட்டையாடுவோம் என்று அந்த நரிகளால் எதிர்பார்க்க முடியாது.

சில சூழலியல் யதார்த்தங்கள் அதிகச் சிக்கலானவையாக இருக்கின்றன. வாழ்வா-சாவா போராட்டங்கள் அனைத்தும் ஒருவரை அடித்து மற்றவர் பிழைக்கும் நிலையைக் கொண்டவையாக இருப்பதில்லை. பலனளிக்கும் விதத்தில் பல விலங்குகள் ஒன்றோடொன்று ஒத்துழைக்கின்றன. ஒருசில விலங்குகள் கடன்கூடக் கொடுத்துக் கொள்ளுகின்றன. இயற்கையில் கடன் கொடுப்பதில் பிரபலமாக இருப்பவை குருதியுண்ணும் வௌவால்கள். அவை குகைகளுக்குள் ஆயிரக்கணக்கில் ஒன்றுகூடுகின்றன. ஒவ்வோர்

இரவிலும் அவை இரை தேடி வெளியே பறந்து செல்லுகின்றன. தூங்கிக் கொண்டிருக்கின்ற ஒரு பறவையையோ அல்லது கவனக்குறைவாக இருக்கின்ற ஒரு பாலூட்டியையோ அவை காணும்போது, அப்பறவையின் அல்லது அந்தப் பாலூட்டியின் தோலில் அவை ஒரு சிறு துளையிட்டு, அதன் ரத்தத்தை உறிஞ்சுகின்றன. ஆனால், அனைத்து வெளவால்களுக்கும் இரவில் இரை கிடைப்பதில்லை. இந்த நிச்சயமின்மை நிலையைக் கையாளுவதற்கு, அவை ஒன்றுக்கொன்று ரத்தத்தைக் கடன் கொடுத்துக் கொள்ளுகின்றன. இரை எதையும் கண்டுபிடிக்க முடியாமல் வீடு திரும்புகின்ற ஒரு வெளவால், தன்னுடைய அதிர்ஷ்டக்கார நண்பன் ஒன்றிடம், அது திருடிய ரத்தத்திலிருந்து சிறிதளவை எதுக்களிப்பு செய்து தனக்குக் கொடுக்கும்படி கேட்கும். தாம் யாருக்கு ரத்தத்தைக் கடன் கொடுத்தோம் என்பதை இந்த வெளவால்கள் நன்றாக நினைவில் வைத்திருக்கின்றன. எனவே, கடன் கொடுத்த ஒரு வெளவால் என்றேனும் ஒருநாள் பசியோடு திரும்பி வந்தால், தான் யாருக்குக் கடன் கொடுத்துள்ளோமோ, அதனிடம் சென்று கைமாறு கேட்கும்.

ஆயினும், மனித வங்கியாளர்களைப் போலன்றி, குருதியுண்ணும் வெளவால்கள் ஒருபோதும் வட்டி விதிப்பதில்லை. 'ஏ' என்ற ஒரு வெளவால், 'பி' என்ற இன்னொரு வெளவாலுக்குப் பத்து சென்டிலிட்டர் ரத்தத்தைக் கடனாகக் கொடுத்தால், 'பி' வெளவால் அதே அளவு ரத்தத்தைத் திருப்பிக் கொடுக்கும். இந்த வெளவால்கள் புதிய வியாபாரங்களைத் துவக்குவதற்கோ அல்லது ரத்தம்-உறிஞ்சும் சந்தையின் வளர்ச்சியை ஊக்குவிப்பதற்கோ கடன் வாங்குவதில்லை. அவற்றுக்கு உணவாக அமைகின்ற ரத்தம் பிற விலங்குகளால் உற்பத்தி செய்யப்படுவதால், அந்த உற்பத்தியை அதிகரிப்பதற்கு இந்த வெளவால்களுக்கு எந்த வழியும் இல்லை. ரத்தச் சந்தையில் ஏற்ற இறக்கங்கள் ஏற்பட்டாலும்கூட, 2016ல் இருந்ததைவிட 3 சதவீதம் அதிக ரத்தம் 2017ல் இருக்கும் என்றும், 2018ல் அந்த ரத்தச் சந்தை மீண்டும் 3 சதவீதம் வளர்ச்சி காணும் என்றும் அவற்றால் அனுமானிக்க முடியாது. அதன் விளைவாக, வளர்ச்சியில் அவை நம்பிக்கை கொள்ளுவதில்லை. பல கோடிக்கணக்கான ஆண்டுகள் பரிணாம வளர்ச்சியின்போது, குருதியுண்ணும் வெளவால்கள், நரிகள், முயல்கள் ஆகியவை எந்தச் சூழ்நிலைகளில் வாழ்ந்தனவோ, அதே சூழ்நிலைகளில் மனிதர்களும் வாழ்ந்தனர். எனவே, வளர்ச்சியில் நம்பிக்கை கொள்ளுவது அவர்களுக்குக் கடினமானதாக இருக்கிறது.

## அதிசய பீட்சா

அளவில் மாற்றம் இல்லாத ஒரு பீட்சாவாக உலகத்தைப் பார்ப்பதற்குப் பரிணாம அழுத்தங்கள் மனிதர்களைப் பழக்கப்படுத்தியுள்ளன. அந்தப் பீட்சாவில் யாருக்கேனும் ஒரு பெரிய துண்டு கிடைத்தால், வேறொருவருக்கு ஒரு சிறிய துண்டு பீட்சாதான் கிடைக்கும். இது தவிர்க்கப்பட முடியாதது. குறிப்பிட்ட ஒரு குடும்பமோ அல்லது நகரமோ செழிப்புறக்கூடும், ஆனால் மனிதகுலம் ஒட்டுமொத்தமாக இன்று எவ்வளவு உற்பத்தி செய்து கொண்டிருக்கிறதோ, அதைவிட அதிகமாக அது ஒருபோதும் உற்பத்தி செய்யப் போவதில்லை. இருக்கின்ற பீட்சாவை வேறு விதமாக விநியோகித்ததன் மூலமாகவோ அல்லது விண்ணுலகில் ஒரு பீட்சா இருந்ததாக உறுதியளித்ததன் மூலமாகவோ தற்போதைய வளவசதிகளைக் கொண்டு மனிதகுலத்தின் பிரச்சனைகளைத் தீர்ப்பதற்கான வழிகளைக் கிறித்தவமும் இஸ்லாமும் தேடின.

இதற்கு நேரெதிராக, பொருளாதார வளர்ச்சி சாத்தியம் என்பதோடு மட்டுமல்லாமல், அது முற்றிலும் இன்றியமையாததும்கூட என்ற உறுதியான நம்பிக்கையின் அடிப்படையில் நவீனத்துவம் அமைந்துள்ளது. பிரார்த்தனைகள், நற்செயல்கள், தியானம் ஆகியவை ஆறுதலும் உத்வேகமும் அளிக்கக்கூடும், ஆனால் பஞ்சம், தொற்றுநோய், போர் போன்றவற்றுக்கு வளர்ச்சியின் மூலமாக மட்டுமே தீர்வு காண முடியும். இந்த அடிப்படைக் கோட்பாட்டை ஓரே ஓர் எளிய யோசனையில் தொகுத்துக் கூறிவிடலாம்: ‘உங்களுக்கு ஒரு பிரச்சனை இருந்தால், ஒருவேளை உங்களுக்கு அதிகமான பொருட்கள் தேவைப்படக்கூடும்; அதிகமானவற்றைப் பெற்றிருப்பதற்கு, நீங்கள் அவற்றை அதிகமாக உற்பத்தி செய்ய வேண்டும்.’

மூன்று முக்கியக் காரணங்களுக்காக வளர்ச்சி இன்றியமையாதது என்று நவீன அரசியல்வாதிகளும் பொருளாதார வல்லுநர்களும் வலியுறுத்துகின்றனர். முதலாவதாக, நாம் அதிகமாக உற்பத்தி செய்யும்போது, நம்மால் அதிகமாக நுகர முடியும், நம்முடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக் கொள்ள முடியும், அதிக மகிழ்ச்சியான ஒரு வாழ்க்கையை அனுபவிக்க முடியும். இரண்டாவதாக, மனிதகுலம் பெருகிக் கொண்டே இருக்கும்வரை, பொருளாதாரரீதியாக நாம் இருக்கும் இடத்தில் தொடர்ந்து இருப்பதற்குக்கூடப் பொருளாதார வளர்ச்சி தேவையாக இருக்கிறது. எடுத்துக்காட்டாக, இந்தியாவில் ஆண்டுதோறும் மக்கட்தொகை 1.2 சதவீதம் அதிகரிக்கிறது. அப்படியானால், இந்தியப் பொருளாதாரம் ஒவ்வோர் ஆண்டும் குறைந்தபட்சம் 1.2 சதவீதமாவது விரிவடையாவிட்டால், வேலையின்மைப் பிரச்சனை அதிகரிக்கும், சம்பள அளவு குறையும்,

சராசரி வாழ்க்கைத் தரம் தாழ்ந்து போகும். மூன்றாவதாக, இந்தியர்கள் பெருகுவது நின்றாலும், இந்திய நடுத்தரத்தட்டு மக்கள் தங்களுடைய தற்போதைய வாழ்க்கைத் தரத்தில் திருப்தியடைந்து இருந்தாலும், வறுமையில் சிக்கித் தவிக்கின்ற பல கோடிக்கணக்கான குடிமக்களுக்கு இந்திய அரசாங்கம் என்ன செய்தாக வேண்டும்? பொருளாதாரம் வளரவில்லை என்றால், பீட்சா அதே அளவுதான் இருக்கும். அது மாறாது. எனவே, பணக்காரர்களிடமிருந்து சிறிதளவு பீட்சாவை எடுத்துத்தான் ஏழைகளுக்கு உங்களால் கொடுக்க முடியும். இது நீங்கள் சில கடினமான தேர்ந்தெடுப்புகளை மேற்கொள்ளும் கட்டாயத்திற்கு உங்களைத் தள்ளும், ஏகப்பட்டக் கோபத்திற்கும் வன்முறைக்கும்கூட வழிவகுக்கும். கடினமான தேர்ந்தெடுப்புகளை மேற்கொள்ளுவதையும் கோபத்தையும் வன்முறையையும் நீங்கள் தவிர்க்க விரும்பினால், பெரிய அளவிலான பீட்சா உங்களுக்குத் தேவை.

மத அடிப்படைவாதத்தில் தொடங்கி, மூன்றாம் உலக நாடுகளில் நிலவும் எதேச்சாதிகாரம் உட்பட, தோல்வியில் முடியும் திருமண வாழ்க்கைவரை, அனைத்துப் பொதுப் பிரச்சனைகளுக்கும் தனிப்பட்டப் பிரச்சனைகளுக்கும் 'அதிகப் பொருட்களை' ஒரு தீர்வாக நவீனத்துவம் வழங்குகிறது. அதன்படி, பாகிஸ்தான், எகிப்து போன்ற நாடுகள் மட்டும் ஓர் ஆரோக்கியமான வளர்ச்சி விகிதத்தைத் தக்கவைத்துக் கொள்ளுமேயானால், தனிப்பட்டக் கார்கள், மிகப் பெரிய குளிர்சாதனப் பெட்டிகள் போன்ற வசதிகளை அவற்றின் குடிமக்களால் அனுபவிக்க முடியும், அவர்கள் அடிப்படைவாத கும்பல்களைப் பின்தொடர்ந்து செல்லுவதற்கு பதிலாக லௌகிகச் செழிப்பு எனும் பாதையை அவர்களால் பின்தொடர்ந்து செல்ல முடியும். அதேபோல, காங்கோ, மியான்மர் போன்ற நாடுகளில் பொருளாதார வளர்ச்சி ஏற்படும்பட்சத்தில், தாராளவாத ஜனநாயகத்தின் அடித்தளமாக இருக்கின்ற ஒரு செழிப்பான நடுத்தர வர்க்கத்தை அது உருவாக்கும். மகிழ்ச்சியற்றத் தம்பதியரின் விஷயத்தை எடுத்துக் கொண்டால், அவர்கள் ஒரு பெரிய வீட்டை வாங்குவதும் (இடப்பற்றாக்குறைப் பிரச்சனையைத் தவிர்க்கலாம்), பாத்திரம் கழுவுவதற்கு ஒரு பெரிய இயந்திரத்தை வாங்குவதும் (இன்று யார் பாத்திரம் கழுவ வேண்டும் என்ற விவாதத்தைத் தவிர்க்கலாம்), அதிகப் பணம் செலவழித்து வாரத்திற்கு இரண்டு முறை தொழில்முறை வல்லுநர்களிடம் மணவாழ்க்கை தொடர்பான ஆலோசனையைப் பெறுவதும் மட்டுமே அவர்களுடைய திருமண உறவு தொடர்ந்து நீடிக்க உதவும்.

இவ்வாறு, அனைத்து நவீன மதங்களும் கொள்கைகளும் இயக்கங்களும் சந்தித்துக் கொள்ளுகின்ற ஓர் இன்றியமையாத

சந்திப்புக்கூடமாகப் பொருளாதார வளர்ச்சி ஆகியுள்ளது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் அமெரிக்காவில் கோலோச்சிய, நீதி நியாயங்கள் பற்றிக் கவலைப்படாமல் பணத்தை மட்டுமே குறியாகக் கொண்டு செல்வந்தர்களாக ஆன தொழிலதிபர்கள் வளர்ச்சியின்மீது எந்த அளவு வெறித்தனமான பற்றுக் கொண்டிருந்தனரோ, சோவியத் ஒன்றியம் தன்னுடைய பிரம்மாண்டமான ஐந்தாண்டுத் திட்டங்களுடன் வளர்ச்சியின்மீது அதே அளவு வெறித்தனமான பிடிப்புக் கொண்டிருந்தது. அனைத்துக் கிறித்தவர்களும் இஸ்லாமியர்களும் சொர்க்கத்தில் நம்பிக்கை கொண்டுள்ளனர், ஆனால் அங்கு எப்படிச் சென்றடைவது என்பதில் மட்டுமே அவர்களுக்கு இடையே முரண்பாடு இருக்கிறது. அதேபோல, பனிப்போரின்போது பெருமுதலாளிகளும் கம்யூனிசவாதிகளும் பொருளாதார வளர்ச்சியின் மூலம் பூமியிலேயே சொர்க்கத்தைப் படைத்துவிடலாம் என்று நம்பினர். அதற்கான வழிமுறையில் மட்டுமே அவர்களுக்கிடையே கருத்து வேறுபாடு இருந்தது.

இன்று இந்து சீர்திருத்த இயக்கத்தைச் சேர்ந்தவர்கள், சமயப் பற்றுக் கொண்ட இஸ்லாமியர்கள், ஜப்பானிய தேசியவாதிகள், சீனக் கம்யூனிசவாதிகள் ஆகியோர் தங்களுடைய வேறுபட்ட விழுமியங்களையும் இலக்குகளையும் தீவிரமாகக் கடைபிடிப்பதாகக் கூறிக் கொண்டாலும், பொருளாதார வளர்ச்சி அந்த இலக்குகளை அடைவதற்கு இன்றியமையாத தனிப்பெரும் காரணி என்று அவர்கள் எல்லோருமே நம்புகின்றனர். இதனால்தான், இந்து சமயத்தின்மீது தீவிரப் பற்றுக் கொண்ட நரேந்திர மோடி 2014ல் இந்தியாவின் பிரதமராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவருடைய சொந்த மாநிலமான குஜராத்தில் பொருளாதார வளர்ச்சியை அதிகரிப்பதில் அவர் கண்ட வெற்றியும், மந்தமாக இருந்த தேசியப் பொருளாதாரத்திற்கு அவரால் மட்டுமே புத்துயிர் அளிக்க முடியும் என்று பரவலாக நிலவிய கண்ணோட்டமும் அதற்குப் பெருமளவு காரணமாக இருந்தன. இதே கண்ணோட்டங்கள்தான், இஸ்லாமிய அடிப்படைவாதத்தின் ஆதரவாளரான ரிஜெப் தய்யிப் எர்தோகனைத் துருக்கியில் 2003ம் ஆண்டிலிருந்து பதவியில் நிலைப்படுத்தியுள்ளன. 'நீதி மற்றும் வளர்ச்சிக் கட்சி' என்ற அவருடைய கட்சியின் பெயர், பொருளாதார வளர்ச்சியின்மீது அக்கட்சி கொண்டுள்ள அர்ப்பணிப்பைச் சுட்டிக்காடுகிறது. எர்தோகனின் அரசாங்கம் சுமார் பத்து ஆண்டுகளுக்கு மேலாக மெச்சத்தக்க வளர்ச்சி விகிதத்தைத் தக்கவைத்து வந்துள்ளது.

ஜப்பானியப் பிரதமரும் தேசியவாதியுமான ஷின்சோ அபே, இருபது

ஆண்டுகளாகத் தேங்கிக் கிடந்த ஜப்பானியப் பொருளாதாரத்தை மீட்டெடுக்கப் போவதாகக் கூறி 2012ல் ஆட்சிக்கு வந்தார். இதை சாதிப்பதற்கு மிகத் தீவிரமான, வழக்கத்திற்கு மாறான நடவடிக்கைகளை அவர் மேற்கொண்டார். இதற்கிடையே, அண்டை நாடான சீனாவில் உள்ள கம்யூனிசவாதக் கட்சி, மார்க்ஸ் மற்றும் லெனினின் பாரம்பரியக் கொள்கைகளை வெறும் உதட்டளவில் மட்டுமே இன்று கடைபிடிக்கிறது. ஆனால் நடைமுறையில், 'வளர்ச்சி மட்டுமே ஒரே கசப்பான உண்மை,' 'ஒரு பூனை கருப்பா அல்லது வெள்ளையா என்பது பிரச்சனையல்ல - அப்பூனையால் எலிகளைப் பிடிக்க முடியும்பட்சத்தில்!' போன்ற, டெங் ஜியாவோபிங்கின் பிரபலமான பிரகடனங்களால் மட்டுமே அக்கட்சி வழிநடத்தப்படுகிறது. இப்பிரகடனங்கள் உண்மையிலேயே என்ன கூறுகின்றன? பொருளாதார வளர்ச்சியை ஊக்குவிப்பதற்கு என்னவெல்லாம் செய்யப்பட வேண்டுமோ அதையெல்லாம் செய்ய வேண்டும் - மார்க்ஸும் லெனினும் அது குறித்து வருத்தம் கொள்ளக்கூடும் என்றாலும்கூட!

அறிவார்ந்த மற்றும் யதார்த்தமான நகர-நாடான சிங்கப்பூரில், இதே ரீதியான சிந்தனையை அவர்கள் இன்னும் ஒரு படி மேலே எடுத்துச் சென்று, அமைச்சர்களின் சம்பளங்களை மொத்த உள்நாட்டு உற்பத்தியோடு முடிச்சுப் போடுகின்றனர். அதன்படி, சிங்கப்பூரின் பொருளாதாரம் வளரும்போது, அரசாங்க அமைச்சர்களின் சம்பளம் உயர்த்தப்படும் - அதுதான் அவர்களுடைய வேலைப் பொறுப்பு என்பதுபோல!

வளர்ச்சிமீதான இந்த வெறித்தனமான பற்றுக்கு மேலும் எந்த விளக்கமும் தேவையில்லை என்பதுபோலத் தோன்றக்கூடும். ஆனால் அதற்கான ஒரே காரணம், நாம் நவீன உலகில் வாழுகிறோம் என்பதுதான். கடந்தகாலத்தில் நிலைமை இப்படி இருக்கவில்லை. இந்திய மகாராஜாக்கள், ஒட்டோமான் சுல்தான்கள், காமகுரா ஷோகன்கள், ஹான் பேரரசர்கள் போன்றோர் பொருளாதார வளர்ச்சியை உறுதி செய்வதற்காகத் தங்களுடைய அரசியல் வாழ்க்கையைப் பணயம் வைத்தனர். மோடி, எர்தோகன், அபே, சீன அதிபர் ஜீ ஜின்பிங் ஆகிய அனைவரும் பொருளாதார வளர்ச்சிக்காகத் தங்கள் தொழில்வாழ்க்கையைப் பணயம் வைத்தனர் என்பது உலகம் நெடுகிலும் வளர்ச்சி எப்படி மதங்களுக்கு இணையான ஓர் அந்தஸ்தைப் பெற்றுள்ளது என்பதற்குச் சாட்சியம் பகருகிறது. பொருளாதார வளர்ச்சியில் வைக்கப்படும் நம்பிக்கையை ஒரு மதம் என்று கூறுவதில் எந்தத் தவறும் இல்லை. ஏனெனில், நம்முடைய அறநெறிரீதியான

இக்கட்டான நிலைமைகளில் பலவற்றுக்கான தீர்வு தன்னிடம் இருப்பதாக அது முழங்குகிறது. பொருளாதார வளர்ச்சிதான் அனைத்து நல்ல விஷயங்களுக்குமான மூலாதாரமாக இருப்பதாக நம்பப்படுவதால், அறநெறிசார் கருத்து வேறுபாடுகளைக் குழி தோண்டிப் புதைத்துவிட்டு, நீண்டகால வளர்ச்சியை உச்சபட்சமாக அதிகரிக்கக்கூடிய அனைத்து நடவடிக்கைகளையும் மேற்கொள்ளும்படி மக்களை அது ஊக்குவிக்கிறது. இங்ஙனம், இன்றைய இந்தியாவில் உள்ள ஆயிரக்கணக்கான கட்சிகள், இயக்கங்கள், மதபோதகர்கள் ஆகியோருடைய உச்சகட்ட இலக்குகள் பரஸ்பரம் வேறுபட்டிருக்கக்கூடும், ஆனால் அவர்கள் எல்லோரும் பொருளாதார வளர்ச்சி எனும் அதே நெரிசல் வழியாகத்தான் கடந்து செல்ல வேண்டும் என்றால், ஏன் எல்லோரும் தற்சமயத்திற்காகவாவது ஒன்றுசேரக்கூடாது?

எனவே, ‘அதிகப் பொருட்கள்’ எனும் நம்பிக்கை வாசகமானது, சமூக சமத்துவத்தைப் பராமரித்தல், சூழலியல்ரீதியான சமச்சீர்மையை உறுதி செய்தல், ஒருவருடைய பெற்றோரை மதித்தல் போன்ற, பொருளாதார வளர்ச்சிக்கு முட்டுக்கட்டையாக இருக்கக்கூடிய எதுவொன்றையும் தூக்கியெறியும்படி தனிநபர்களையும் நிறுவனங்களையும் அரசாங்கங்களையும் தூண்டுகிறது. சோவியத் ஒன்றியத்தில், கம்யூனிசவாதம்தான் வேகமாக வளருவதற்கான ஒரே வழி என்று அதன் தலைமைத்துவம் நினைத்தது. எனவே, கூட்டுப் பண்ணைத் திட்டத்திற்குக் குறுக்கே நின்ற லட்சக்கணக்கான ‘குலக்’ இனத்தவரையும், கருத்து சுதந்திரத்தையும், ஏரல் கடலையும், இன்னும் பலவற்றையும் அது தகர்த்தெறிந்தது. இன்று, முதலாளித்துவத்தின் ‘கட்டுப்பாடற்றச் சந்தைமுறை’ நீண்டகால வளர்ச்சியை உறுதி செய்வதற்கான ஆற்றல்மிக்க ஒரு வழி என்று பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. எனவே, கருத்து சுதந்திரமும் பேராசைக்காரத் தொழிலதிபர்களும் பணக்கார விவசாயிகளும் பாதுகாக்கப்படுகின்றனர், ஆனால் கட்டுப்பாடற்றச் சந்தைமுறைக்குக் குறுக்கே நிற்கின்ற சூழலியல்சார் வாழ்விடங்களும் சமூகக் கட்டமைப்புகளும் பாரம்பரிய விழுமியங்களும் தகர்க்கப்பட்டு அழிக்கப்படுகின்றன.

எடுத்துக்காட்டாக, ஏதோ ஒரு பெரிய தொழில்நுட்ப நிறுவனத்தில் ஒரு மணிநேரத்திற்கு 100 டாலர்கள் சம்பளத்தில் ஒரு மென்பொறியாளராக வேலை செய்கின்ற ஒரு பெண்ணின் தந்தைக்குத் திடீரென்று பக்கவாதம் ஏற்படுகிறது. கடைக்குப் போய்வருவதற்கும் சமைப்பதற்கும் குளிப்பதற்கும்கூட இப்போது அந்த முதியவருக்கு

உதவி தேவைப்படுகிறது. அப்பெண் தன் தந்தையைத் தன்னுடைய வீட்டிற்கு அழைத்துச் சென்று, காலையில் சற்றுத் தாமதமாக வேலைக்குச் சென்றுவிட்டு, மாலையில் சற்று முன்னதாகவே திரும்பி வந்து, தனிப்பட்ட முறையில் அவரை கவனித்துக் கொள்ளலாம். இதனால் அவளுடைய வருமானமும் அவளுடைய நிறுவனத்தின் உற்பத்தியும் பாதிக்கப்படும், ஆனால் அவளுடைய தந்தை ஒரு மரியாதையான, அன்பான மகளின் கவனிப்பில் மகிழ்ச்சியாக இருப்பார். இதற்கு பதிலாக, அவரை கவனித்துக் கொள்ளுவதற்கு ஒரு மணிநேரத்திற்கு 100 டாலர்கள் சம்பளத்தில் அவள் யாரையேனும் வேலைக்கு அமர்த்தலாம். அந்நபர் அவளுடைய தந்தையோடு தங்கி அவருடைய அனைத்துத் தேவைகளையும் கவனித்துக் கொள்ளுவார். இதன் மூலம், அப்பெண் வழக்கம்போலத் தன் வேலைக்குச் செல்லலாம், அவளுடைய நிறுவனத்தின் உற்பத்தித் திறன் குறையாது, அவளுடைய தந்தையை கவனித்துக் கொள்ளுகின்றவரும் நன்மை பெறுவார். இப்போது அப்பொறியாளர் என்ன செய்ய வேண்டும்?

கட்டுப்பாடற்றச் சந்தைமுறை இதற்கு ஓர் உறுதியான பதிலை வைத்திருக்கிறது. பொருளாதார வளர்ச்சிக்காக நாம் நம்முடைய குடும்பப் பிணைப்புகளைத் தளர்த்திக் கொள்ள வேண்டும் என்பது அவசியம் என்றால், தங்களுடைய பெற்றோரிடமிருந்து வெகு தூரம் தள்ளி இருக்கும்படியும், முதியோரை கவனித்துக் கொள்ளுகின்ற பராமரிப்பாளர்களை உலகின் மறுபுறத்திலிருந்து இறக்குமதி செய்யும்படியும் மக்களை ஊக்குவிக்க வேண்டும். ஆனால், இந்த விடை ஓர் அறநெறிசார் தீர்ப்பை உள்ளடக்கியுள்ளதே அன்றி, ஓர் உண்மைக் கூற்றை அல்ல. சிலர் மென்பொறியியலில் நிபுணத்துவம் பெறும் நேரத்தில், மற்றவர்கள் முதியவர்களை கவனித்துக் கொள்ளுவதற்குத் தங்கள் நேரத்தை அர்ப்பணிக்கின்றனர் என்றால், நம்மால் அதிகமான மென்பொருட்களைத் தயாரிக்க முடியும், முதியவர்களுக்குத் தொழில்முறைரீதியான மிகச் சிறப்பான கவனிப்பைக் கொடுக்க முடியும். ஆனால், குடும்பப் பிணைப்புகளைவிடப் பொருளாதார வளர்ச்சி அதிக முக்கியமானதா? இப்படிப்பட்ட அறநெறிசார் தீர்ப்புகளை வழங்குவதன் மூலம், முதலாளித்துவத்தின் கட்டுப்பாடற்றச் சந்தைமுறையானது, அறிவியலுலகின் எல்லையைக் கடந்து மதத்தின் எல்லைக்குள் நுழைந்துள்ளது.

மதம் என்ற அடையாளத்தைப் பெரும்பாலான பெருமுதலாளிகள் விரும்புவதில்லை, ஆனால் மதத்தோடு ஒப்பிடுகையில், முதலாளித்துவம் நிச்சயமாகப் பெருமிதம் கொள்ளலாம். விண்ணுலகில் ஒரு பீட்சா இருக்கிறது என்று வாக்குக் கொடுக்கின்ற பிற மதங்களைப்

போலன்றி, பூமியிலேயே அதிசயங்களை நிகழ்த்தலாம் என்று முதலாளித்துவம் வாக்குறுதி அளிக்கிறது. சில சமயங்களில் அது தன் வாக்குறுதியைக் காப்பாற்றவும் செய்கிறது. பஞ்சங்கள் மற்றும் தொற்றுநோய்களிலிருந்து நாம் மீண்டதற்கான முக்கியக் காரணம், வளர்ச்சியின்மீது முதலாளித்துவம் கொண்டிருந்த அசைக்க முடியாத நம்பிக்கைதான். மனித வன்முறை குறைந்துள்ளதற்கும் சகிப்புத்தன்மையும் ஒத்துழைப்பும் அதிகரித்திருப்பதற்கும்கூட முதலாளித்துவம் ஒரு முக்கியக் காரணமாக இருந்துள்ளது. இன்னும் சில காரணிகளும் இங்கு பங்காற்றியுள்ளன என்றாலும், நாம் அடுத்த அத்தியாயத்தில் பார்க்கவிருப்பதைப்போல, உலகளாவிய பொருளாதாரத்திற்கு முதலாளித்துவம் ஒரு முக்கியப் பங்களிப்பை வழங்கியுள்ளது. பொருளாதாரம் என்பது 'ஒருவருடைய இழப்பு இன்னொருவருடைய லாபம்' என்ற போக்கைக் கொண்டது என்ற கண்ணோட்டத்தை விட்டுவிட்டு, உங்களுடைய லாபம் என்னுடைய லாபமும்கூட என்ற நிலைமையை உள்ளடக்கிய 'உனக்கும் வெற்றி, எனக்கு வெற்றி' என்ற போக்கைக் கொண்டதுதான் பொருளாதாரம் என்று பார்க்க மக்களை அது ஊக்குவிக்கிறது. இந்தப் 'பரஸ்பர நன்மை' அணுகுமுறை, கிறித்தவ மதம் பல நூற்றாண்டுகளாக போதித்து வந்துள்ள 'அண்டைவீட்டாரையும் நேசித்தல்,' 'மறுகன்னத்தைக் காட்டுதல்' போன்ற போதனைகளைவிட மிக அதிகமாக உலகளாவிய இணக்கத்திற்கு உதவியுள்ளது.

***

வளர்ச்சி எனும் உச்சகட்ட விழுமியத்தின்மீது தான் கொண்டுள்ள நம்பிக்கையிலிருந்து முதலாளித்துவம் தன்னுடைய முதல் கட்டளையை உருவாக்குகிறது: வளர்ச்சியை அதிகரிப்பதற்கு உங்களுடைய லாபங்களை மீண்டும் முதலீடு செய்ய வேண்டும். வரலாற்றின் பெரும்பகுதியில், இளவரசர்களும் மதபோதகர்களும் தங்களுடைய லாபங்களை படாடோபமான திருவிழாக்களிலும் ஆடம்பரமான மாளிகைகளிலும் தேவையற்றப் போர்களிலும் விரயம் செய்தனர். அல்லது, தங்களுடைய பொற்காசுகளை இரும்புப் பெட்டிகளில் வைத்துப் பூட்டிப் பாதாள அறைகளில் அவற்றைப் புதைத்து வைத்தனர். இன்று, முதலாளித்துவத்தின்மீது அதீதப் பற்றுக் கொண்ட பெருமுதலாளிகள், புதிய ஊழியர்களை நியமிப்பதற்கோ, தங்களுடைய தொழிற்சாலையை விரிவுபடுத்துவதற்கோ, அல்லது ஒரு புதிய பொருளை உருவாக்குவதற்கோ தங்களுடைய லாபங்களைப் பயன்படுத்துகின்றனர்.

இவற்றை எப்படிச் செய்வது என்பது அவர்களுக்குத்

தெரியாவிட்டால், வங்கியாளர்கள் அல்லது துணிகர முதலீட்டாளர்கள் போன்ற, அவ்வேலைகளைச் செய்யத் தெரிந்தவர்களிடம் அவர்கள் தங்கள் பணத்தைக் கொடுத்து அவற்றைச் செய்து காட்டுகின்றனர். துணிகர முதலீட்டாளர்கள் பல்வேறு தொழில்முனைவோருக்குப் பணத்தைக் கடன் கொடுக்கின்றனர். விவசாயிகள் புதிய கோதுமை வயல்களை உருவாக்குவதற்கும், கட்டட ஒப்பந்தக்காரர்கள் புதிய வீடுகளைக் கட்டியெழுப்பவும், ஆற்றல் உற்பத்தி நிறுவனங்கள் புதிய எண்ணெய்க் கிணறுகளை அகழ்வதற்கும், ஆயுத உற்பத்தித் தொழிற்சாலைகள் புதிய ஆயுதங்களை உற்பத்தி செய்வதற்கும் கடன் வாங்குகின்றன. இவற்றிலிருந்து கிடைக்கும் லாபங்கள், தாங்கள் வாங்கிய கடன்களை வட்டியோடு திருப்பிச் செலுத்துவதற்கு அந்தத் தொழில்முனைவோருக்கு உதவுகின்றன. இப்போது நம்மிடம் அதிகமான கோதுமையும், வீடுகளும், எண்ணெயும், ஆயுதங்களும் மட்டுமல்லாமல், அதிகமான பணமும் இருக்கிறது. இந்தப் பணத்தை வங்கிகளும் நிதி நிறுவனங்களும் மீண்டும் கடனாகக் கொடுக்கலாம். இந்தச் சக்கரம் தன் ஓட்டத்தை ஒருபோதும் நிறுத்தாது. குறைந்தபட்சம், முதலாளித்துவத்தைப் பொருத்தவரை இது உண்மை. "வளர்ச்சி போதும். இனி நாம் ஆசுவாசமாக இருக்கலாம்," என்று முதலாளித்துவம் சொல்லுகின்ற ஒரு கணத்தை நாம் ஒருபோதும் எட்ட மாட்டோம். இந்த முதலாளித்துவச் சக்கரம் ஏன் ஒருபோதும் நிற்காது என்பதை நீங்கள் தெரிந்து கொள்ள விரும்பினால், தான் குவித்து வைத்துள்ள 1 லட்சம் டாலர்கள் பணத்தைக் கொண்டு என்ன செய்வது என்று யோசித்துக் கொண்டிருக்கின்ற உங்கள் நண்பர் ஒருவரிடம் ஒரு மணிநேரம் பேசிப் பாருங்கள்.

"வங்கிகள் கொடுக்கும் வட்டி விகிதம் மிகக் குறைவாக இருக்கிறது," என்று அவர் குறை கூறுவார். பிறகு, "ஆண்டொன்றுக்கு வெறும் 0.5 சதவீத வட்டி மட்டுமே கொடுக்கக்கூடிய ஒரு சேமிப்புக் கணக்கில் நான் என் பணத்தைப் போட்டு வைக்க விரும்பவில்லை. அரசுப் பத்திரங்களில் 2 சதவீத வட்டி எனக்குக் கிடைக்கும். என் உறவினர் ஒருவர் கடந்த ஆண்டில் சியாட்டில் நகரில் ஒரு குடியிருப்பு வீட்டை வாங்கினார். அந்த முதலீட்டின் மூலமாக அவர் ஏற்கனவே 20 சதவீதம் சம்பாதித்துவிட்டார். நானும் வீடுமனைகளில் முதலீடு செய்ய வேண்டுமோ என்னவோ. ஆனால் வீடுமனை வாங்கல்/விற்றல் சந்தை மீண்டும் பிரச்சனைக்கு உள்ளாகவிருப்பதாக எல்லோரும் கூறுகின்றனர். பங்குச் சந்தையைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? பொருளாதாரரீதியாக வேகமாக வளர்ந்து வருகின்ற பிரேசில், சீனா போன்ற நாடுகளைப் பின்தொடருகின்ற பங்குப்

பரிவர்த்தனையக வர்த்தக நிதியில் முதலீடு செய்வது இன்றைய காலகட்டத்தில் நல்லது என்று என் நண்பர் ஒருவர் என்னிடம் கூறினார்," என்று கூறிவிட்டு அவர் ஒரு கணம் நிதானிக்கும்போது, நீங்கள் அவரிடம், "உங்களிடம் இருக்கும் 1 லட்சம் டாலர்கள் பணத்தோடு நீங்கள் திருப்தி அடைந்தால் என்ன?" என்று கேளுங்கள். முதலாளித்துவம் ஏன் தன் ஓட்டத்தை ஒருபோதும் நிறுத்தாது என்பதை என்னைவிடச் சிறப்பாக அவர் உங்களுக்கு விளக்குவார்.

இந்தப் படிப்பினை, முதலாளித்துவத்தை மையக் கருவாகக் கொண்டு உருவாக்கப்பட்டுள்ள உலகளாவிய விளையாட்டுக்களின் வாயிலாகச் சிறு குழந்தைகள் மற்றும் பதின்பருவத்தினரின் மனங்களில் ஆழமாகப் பதிய வைக்கப்பட்டுள்ளது. சதுரங்கம் போன்ற, நவீன காலத்திற்கு முந்தைய காலகட்டத்தைச் சேர்ந்த விளையாட்டுக்கள், தேக்கமடைந்திருந்த ஒரு பொருளாதாரத்தை அனுமானித்தன. நீங்கள் பதினாறு காய்களுடன் துவக்கும் ஒரு சதுரங்க விளையாட்டு நிறைவடையும்போது, அதே பதினாறு காய்களோடுதான் நீங்கள் அந்த விளையாட்டை முடிப்பீர்கள், கூடுதல் காய்கள் எதுவும் உங்களிடம் இருக்காது. சில அரிய சமயங்களில், ஒரு 'சிப்பாய்' ஒரு 'ராணியாக' மாறக்கூடும். ஆனால் புதிய சிப்பாய்களை உங்களால் உருவாக்க முடியாது, உங்களுடைய குதிரைப்படை வீரர்களை பீரங்கிகளாக உங்களால் மாற்ற முடியாது. எனவே, சதுரங்க விளையாட்டுக்காரர்கள் முதலீட்டைப் பற்றி ஒருபோதும் யோசிக்க வேண்டியிருக்கவில்லை. இதற்கு நேர்மாறாக, பலகை சார்ந்த நவீன விளையாட்டுக்களும் கணினி விளையாட்டுக்களும் முதலீட்டின்மீதும் வளர்ச்சியின்மீதும் கவனம் செலுத்துகின்றன.

குறிப்பாக, 'மைன்கிராஃப்ட்', 'த செட்லர்ஸ் ஆஃப் கட்டான்', 'சிவிலைசேஷன்' போன்ற விளையாட்டுக்களைக் கூறலாம். இவை மத்தியக் காலகட்டத்திலோ, கற்காலத்திலோ, அல்லது ஏதோ கற்பனையான உலகத்திலோ நடப்பதுபோல அமைக்கப்பட்டிருக்கும், ஆனால் அவற்றின் கொள்கைகள் எப்போதும் ஒன்றுதான். அவை எப்போதுமே முதலாளித்துவக் கொள்கைகள்தான். ஒரு நகரத்தையோ, ஒரு ராஜ்ஜியத்தையோ, அல்லது ஓர் ஒட்டுமொத்த நாகரிகத்தையோ நிறுவுவதுதான் அந்த விளையாட்டுக்களில் உங்கள் இலக்காக இருக்கும். ஒரு சாதாரணமான கிராமம் மற்றும் அதன் அருகிலுள்ள வயல்வெளிகளை உருவாக்குவதிலிருந்து நீங்கள் துவக்குவீர்கள். துவக்கத்தில் உங்கள் சொத்துக்கள் கோதுமை, மரக்கட்டைகள், இரும்பு, அல்லது தங்கம் போன்ற வருவாயைக் கொடுக்கும். பிறகு நீங்கள் இந்த வருவாயை அறிவார்ந்த விதத்தில் முதலீடு செய்ய வேண்டும். பின்வரும்

இரண்டு விஷயங்களில் ஒன்றில் நீங்கள் முதலீடு செய்யலாம்: (1) ஆக்கபூர்வமற்ற, ஆனால் இன்னும் தேவைப்படுகின்ற படைவீரர்கள் போன்ற கருவிகள்; (2) அதிகமான கிராமங்கள், வயல்வெளிகள், சுரங்கங்கள் போன்ற ஆக்கபூர்வமான சொத்துக்கள். ஆக்கபூர்வமற்ற, ஆனால் இன்றியமையாத விஷயங்களில் மிகக் குறைவான பணத்தை முதலீடு செய்வதும், ஆக்கபூர்வமான சொத்துக்களை உச்சபட்சமாக அதிகரிப்பதும்தான் வெற்றிக்கான பொதுவான உத்தியாக இருக்கிறது. நீங்கள் கூடுதல் கிராமங்களை நிர்மாணித்தால், அடுத்த முறை உங்களுக்கு மிக அதிக வருவாய் கிடைக்கும். அதைக் கொண்டு, தேவையானால் அதிகமான வீரர்களை நீங்கள் வாங்கலாம். அதோடு, உற்பத்தியில் நீங்கள் அதிகமாக முதலீடு செய்வதற்கும் அந்த வருவாய் உங்களுக்கு உதவும். விரைவில், நீங்கள் உங்களுடைய கிராமங்களை நகரங்களாக உயர்த்தலாம், பல்கலைக்கழகங்களைக் கட்டலாம், துறைமுகங்கள் மற்றும் தொழிற்சாலைகளை உருவாக்கலாம், ஆழ்கடல்களை ஆய்வு செய்யலாம். இவற்றின் மூலம் உங்களுடைய நாகரிகத்தை நிர்மாணித்து நீங்கள் அந்த விளையாட்டில் வெற்றி பெறலாம்.

## ‘நோவா படகு’ நோய்க்குறி

பொருளாதாரம் தொடர்ந்து வளர்ந்து கொண்டே இருப்பது உண்மையில் சாத்தியம்தானா? இறுதியில் என்றேனும் ஒருநாள் அனைத்து வளவசதிகளும் தீர்ந்து போய், அதன் விளைவாகப் பொருளாதார வளர்ச்சி நின்றுவிடாதா? தொடர்ச்சியான வளர்ச்சியை உறுதி செய்வதற்கு, வற்றாத வளங்களின் களஞ்சியத்தை நாம் எப்படியாவது கண்டுபிடித்தாக வேண்டும்.

புதிய நிலங்களை ஆய்வு செய்து அவற்றை வெற்றி கொள்ளுவது இதற்கான ஒரு தீர்வாக அமையக்கூடும். பல நூற்றாண்டுகளாக ஐரோப்பியப் பொருளாதாரத்தின் வளர்ச்சியும் முதலாளித்துவ அமைப்புமுறையின் விரிவாக்கமும், கடல் கடந்து சென்று பேரரசுகளை முற்றுகையிட்டு வெற்றி கொள்ளுவதைப் பெரிதும் சார்ந்திருந்தன. எனினும், பூமியில் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையிலான தீவுகளும் கண்டங்களும்தானே இருக்கின்றன? என்றேனும் ஒருநாள் புதிய கோள்களையும் புதிய விண்மீன் மண்டலங்களையும்கூட நம்மால் அடைய முடியும் என்று சில தொழில்முனைவோர் நம்புகின்றனர். ஆனால் இதற்கிடையே, நவீனப் பொருளாதாரம், விரிவாக்கத்திற்கான ஒரு சிறந்த வழியைக் கண்டுபிடித்தாக வேண்டும்.

அறிவியல்தான் நவீனத்துவத்திற்கு இதற்கான தீர்வைக் கொடுத்துள்ளது. நரிப் பொருளாதாரம் வளருவது சாத்தியமில்லை. ஏனெனில், அதிகமான முயல்களை எப்படி உற்பத்தி செய்ய வேண்டும் என்பது நரிகளுக்குத் தெரியாது. முயல் பொருளாதாரம் தேக்கமடைவதற்குக் காரணம், அவற்றால் புல்லை வேகமாக வளர வைக்க முடியாது. ஆனால், புதிய கச்சாப் பொருட்களையும் ஆற்றலுக்கான புதிய மூலாதாரங்களையும் மனிதர்களால் கண்டுபிடிக்க முடியும் என்பதால் மனிதப் பொருளாதாரத்தால் வளர முடியும்.

உலகம் என்பது ஒரு குறிப்பிட்ட அளவைக் கொண்ட ஒரு பீட்சா என்ற பாரம்பரியக் கண்ணோட்டமானது, கச்சாப் பொருட்கள், ஆற்றல் ஆகிய இரண்டு வகையான வளங்கள் மட்டுமே இருப்பதாக அனுமானிக்கிறது. ஆனால் உண்மையில், மூன்று வகையான வளங்கள் இருக்கின்றன: கச்சாப் பொருட்கள், ஆற்றல், மற்றும் அறிவு. கச்சாப் பொருட்களும் ஆற்றலும் வற்றக்கூடியவை. நீங்கள் அவற்றை எவ்வளவு அதிகமாகப் பயன்படுத்துகிறீர்களோ, அவ்வளவு குறைவாக அவை உங்களிடம் இருக்கும். இதற்கு நேர்மாறாக, அறிவு ஒரு வளரும் வளமாக இருக்கிறது. நீங்கள் அதை எவ்வளவு அதிகமாகப் பயன்படுத்துகிறீர்களோ, அது அவ்வளவு அதிகமாக உங்களிடம் இருக்கும். நீங்கள் உங்கள் அறிவுச் சொத்தை அதிகரிக்கும்போது, அந்த அறிவால் உங்களுக்கு அதிகக் கச்சாப் பொருட்களையும் ஆற்றலையும் பெற்றுக் கொடுக்க முடியும். அலாஸ்காவில் எண்ணெயைத் தேடி நான் 10 கோடி டாலர்கள் பணத்தை முதலீடு செய்து அந்த எண்ணெயைக் கண்டுபிடித்துவிட்டால், இப்போது என்னிடம் அதிக எண்ணெய் இருக்கும், ஆனால் என் பேரக்குழந்தைகளுக்கு எண்ணெய் குறைவாக இருக்கும். இதற்கு நேரெதிராக, சூரிய ஆற்றலைப் பற்றிய ஆராய்ச்சியில் நான் 10 கோடி டாலர்கள் பணத்தை முதலீடு செய்து, அந்த ஆற்றலைப் பயன்படுத்துவதற்கு உதவக்கூடிய அதிகப் பலனளிக்கும் ஒரு புதிய வழியை நான் கண்டுபிடித்தால், நானும் என் பேரக்குழந்தைகளும் அந்த ஆற்றலை அதிக அளவில் பெற்றிருப்போம்.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக, வளர்ச்சிக்கான அறிவியல் பாதை தடுக்கப்பட்டிருந்தது. ஏனெனில், உலகிலுள்ள அனைத்து அறிவையும் புனித மறைநூல்களும் பண்டைய பாரம்பரியங்களும் ஏற்கனவே தம்முள் அடக்கியிருந்ததாக மக்கள் நம்பினர். உலகிலுள்ள அனைத்து எண்ணெய்க் கிணறுகளும் கண்டுபிடிக்கப்பட்டுவிட்டதாக நம்புகின்ற ஒரு பெருநிறுவனம் எண்ணெயைத் தேடுவதில் நேரத்தையும் பணத்தையும் வீணாக்காது. அதேபோல, தனக்குத் தெரிந்திருக்க வேண்டிய அனைத்தும் தனக்கு ஏற்கனவே தெரியும் என்று நம்புகின்ற

ஒரு மனிதக் கலாச்சாரம் புதிய அறிவைத் தேடுவதில் அக்கறை காட்டாது. நவீன காலகட்டத்திற்கு முந்தைய காலகட்டத்தைச் சேர்ந்த மனித நாகரிகங்களின் நிலை இப்படித்தான் இருந்தது. ஆனாலும், அப்பாவித்தனமான இந்த உறுதியான நம்பிக்கையிலிருந்து அறிவியல் புரட்சிதான் மனிதகுலத்தை விடுவித்தது. அறியாமை குறித்த விழிப்புணர்வுதான் இருப்பதிலேயே மிகப் பெரிய அறிவியல் கண்டுபிடிப்பாகும். உலகத்தைப் பற்றித் தங்களுக்கு உண்மையிலேயே அவ்வளவாக எதுவும் தெரியாது என்பதை மனிதர்கள் உணர்ந்து கொண்டபோது, புதிய அறிவைத் தேடிச் செல்லுவதற்கு அவர்களுக்குத் திடீரென்று ஒரு நல்ல காரணம் கிடைத்தது. இது முன்னேற்றத்திற்கான அறிவியல் பாதையைத் திறந்துவிட்டது.

தலைமுறைகள் கடக்கக் கடக்க, புதிய ஆற்றல் வளங்களையும், புதிய வகையான கச்சாப் பொருட்களையும், அதிகச் சிறப்பான இயந்திரங்களையும், புதுமையான உற்பத்தி வழிமுறைகளையும் கண்டுபிடிக்க அறிவியல் உதவியது. இதன் விளைவாக, மனிதகுலம் முன்பு எப்போதையும்விட இப்போது மிக அதிக ஆற்றலையும் கச்சாப் பொருட்களையும் பயன்படுத்துகிறது. இதனால் உற்பத்தி விண்ணைத் தொடுகிறது. நீராவிப் பொறி, உள்ளெரிப் பொறி, கணினி போன்ற கண்டுபிடிப்புகள் முற்றிலும் புதிய தொழிற்துறைகளை உருவாக்கியுள்ளன. நாம் எதிர்காலத்திற்குள் இருபது ஆண்டுகள் முன்னோக்கிப் பார்க்கும்போது, நம்முடைய இன்றைய உற்பத்தியையும் நுகர்ச்சியையும்விட, 2040ம் ஆண்டுவாக்கில் நாம் அதிகமாக உற்பத்தி செய்வோம், அதிகமாக நுகருவோம் என்று நாம் உறுதியாகக் கூறலாம். நேனோதொழில்நுட்பம், மரபுப் பொறியியல், செயற்கை நுண்ணறிவு போன்ற தொழில்நுட்பங்கள் உற்பத்தியில் மீண்டும் புரட்சிகரமான மாற்றங்களை ஏற்படுத்தும் என்றும், தொடர்ந்து விரிவடைந்து கொண்டிருக்கும் நம்முடைய பேரங்காடிகளில் அவை மேலும் புதிய பொருட்களைக் கொண்டுவந்து கொலுவேற்றும் என்றும் நாம் நம்புகிறோம்.

***

எனவே, வளப் பற்றாக்குறைப் பிரச்சனையிலிருந்து மீளுவதற்கு நமக்கு ஒரு நல்ல வாய்ப்பு இருக்கிறது. நவீனப் பொருளாதாரத்தின் உண்மையான, மிக வலிமையான எதிரி சுற்றுச்சூழல் நிலைகுலைவுதான். அறிவியல் முன்னேற்றமும் பொருளாதார வளர்ச்சியும் எளிதில் நொறுங்கிவிடக்கூடிய ஓர் உயிர்க்கோளத்தில் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. அவை வேகம் பிடிக்கும்போது, அதனால் ஏற்படும் அதிர்ச்சியலைகள் சுற்றுச்சூழலை நிலைகுலையச்

செய்துவிடும். செழிப்பான அமெரிக்கர்களுக்கு வாய்த்திருக்கின்ற அதே வாழ்க்கைத் தரத்தை இவ்வுலகிலுள்ள ஒவ்வொருவருக்கும் கொடுப்பதற்கு நமக்கு இன்னும் ஒருசில கூடுதல் கோள்கள் தேவை. ஆனால் நமக்கு இந்த ஒரே ஒரு கோள்தான் இருக்கிறது. முன்னேற்றமும் வளர்ச்சியும் சூழல் மண்டலத்தை அழித்துவிட்டால், அதனால் பாதிக்கப்படப் போவது குருதியுண்ணும் வௌவால்களும் நரிகளும் முயல்களும் மட்டுமல்ல, சேப்பியன்ஸும்தான். சூழல் மண்டலச் சீரழிவானது பொருளாதாரத்தைச் சீர்குலைக்கும், அரசியல் கொந்தளிப்பை உருவாக்கும், மனிதர்களுடைய வாழ்க்கைத் தரத்தை வெகுவாகத் தாழ்த்திவிடும். மனித நாகரிகத்தின் இருத்தலுக்கே அது ஓர் அச்சுறுத்தலாக அமையக்கூடும்.

முன்னேற்றம் மற்றும் வளர்ச்சியின் வேகத்தைக் குறைப்பதன் மூலம் ஆபத்தை நம்மால் குறைக்க முடியும். இந்த ஆண்டின் முதலீட்டாளர்கள் தங்களுடைய முதலீடுகளிலிருந்து 6 சதவீத பதிலீட்டை எதிர்பார்த்தால், பத்து ஆண்டுகளில் வெறும் 3 சதவீத பதிலீட்டைக் கொண்டு திருப்தியடைய அவர்கள் பழகிக் கொள்ள வேண்டியிருக்கும், இருபது ஆண்டுகளில் வெறும் 1 சதவீத பதிலீட்டுடன் அவர்கள் மனநிறைவு கொள்ள வேண்டியிருக்கும். முப்பது ஆண்டுகளில் பொருளாதார வளர்ச்சி முற்றிலுமாக நின்றுவிடும். அப்போது, நம்மிடம் ஏற்கனவே இருப்பதைக் கொண்டு நாம் மகிழ்ச்சியாக இருக்க வேண்டியிருக்கும். ஆனாலும், வளர்ச்சிக் கோட்பாடு இப்படிப்பட்ட முரணான யோசனையை உறுதியாக எதிர்க்கிறது. மாறாக, நாம் இன்னும் அதிக வேகமாக ஓட வேண்டும் என்று அது பரிந்துரைக்கிறது. நம்முடைய கண்டுபிடிப்புகள் நம்முடைய சூழல் மண்டலத்தை நிலைகுலையச் செய்து மனிதகுலத்தை அச்சுறுத்தினால், நம்மைப் பாதுகாத்துக் கொள்ளுவதற்கு அப்போது நாம் எதையாவது புதிதாகக் கண்டுபிடித்தாக வேண்டும். ஓசோன் படலம் சுருங்கி, நமக்குத் தோல் புற்றுநோய் ஏற்படுவதற்கான ஆபத்தை உருவாக்கினால், இப்போது இருப்பதைவிட அதிகச் சிறப்பான சன்ஸ்கிரீன் களிம்புகளையும் அதிகச் சிறப்பான புற்றுநோய் சிகிச்சைகளையும் நாம் கண்டுபிடிக்க வேண்டும். புதிய தொழிற்சாலைகள் அனைத்தும் வளிமண்டலத்தையும் பெருங்கடல்களையும் மாசுபடுத்தி உலகின் வெப்பத்தை அதிகரித்து உயிரினங்களைக் கூட்டங்கூட்டமாக அழித்தால், வாழ்வில் உள்ள அனைத்து நல்ல விஷயங்களையும் நமக்கு வழங்கக்கூடிய மெய்நிகர் உலகங்களையும் உயர்தொழில்நுட்பச் சரணாலயங்களையும் நமக்காக நாம் உருவாக்கிக் கொள்ள வேண்டும். பிறகு இப்புவி எவ்வளவு சூடானாலும், எவ்வளவு மாசுபட்டாலும், எவ்வளவு சீரழிந்தாலும் நாம்

அது பற்றிக் கவலைப்பட வேண்டியிருக்காது.

வெளியே போவதைத் தவிர்க்கும் அளவுக்கு பீஜிங் நகரம் ஏற்கனவே மிகவும் மாசுபட்டுவிட்டது. பணக்காரச் சீனர்கள் தங்களுடைய வீடுகளுக்குள்ளும் அலுவலகங்களுக்குள்ளும் காற்றைத் தூய்மைப்படுத்துவதற்கான கருவிகளை ஆயிரக்கணக்கான டாலர்கள் விலை கொடுத்து வாங்கிப் பொருத்தியுள்ளனர். மாபெரும் செல்வந்தர்கள் தங்கள் முற்றம் முழுவதையும் மூடுகின்ற பாதுகாப்பு அம்சங்களில் முதலீடு செய்து வருகின்றனர். வெளிநாட்டுத் தூதரகங்களில் பணியாற்றும் அந்நிய அதிகாரிகளின் குழந்தைகளுக்காகவும் மேற்தட்டுச் சீனர்களின் குழந்தைகளுக்காகவும் இயங்கிக் கொண்டிருக்கின்ற பீஜிங் சர்வதேசப் பள்ளி, இன்னும் ஒரு படி மேலே போய், 2013ல் 50 லட்சம் டாலர்கள் செலவு செய்து தன்னுடைய ஆறு டென்னிஸ் மைதானங்களுக்கும் பிற விளையாட்டு மைதானங்களுக்கும் மேலாக ஒரு பிரம்மாண்டமான குவிமாடத்தை அமைத்தது. பிற பள்ளிகளும் இப்போது இதைப் பின்பற்றத் தொடங்கியுள்ளன. காற்றைத் தூய்மைப்படுத்தும் கருவிகளுக்கான சந்தை இப்போது சீனாவில் கொழித்துக் கொண்டிருக்கிறது. பீஜிங் நகரில் வசிப்பவர்களில் பெரும்பாலானோருக்கு, தங்களுடைய வீடுகளில் இத்தகைய ஆடம்பர வசதிகளை அமைத்துக் கொள்ளுவதும், தங்களுடைய குழந்தைகளை அந்த சர்வதேசப் பள்ளிக்கு அனுப்பிப் படிக்க வைப்பதும் கட்டுப்படியாகாது.

மனிதகுலம் ஓர் இரட்டைப் பந்தயத்தில் தன்னைத் தானே சிக்க வைத்துள்ளது. ஒருபுறம், அறிவியல் முன்னேற்றத்தையும் பொருளாதார வளர்ச்சியையும் துரிதப்படுத்த வேண்டிய கட்டாயத்தில் நாம் இருக்கிறோம். கோடிக்கணக்கான சீனர்களும் கோடிக்கணக்கான இந்தியர்களும் அமெரிக்க நடுத்தட்டு மக்களைப்போல வாழ விரும்புகின்றனர். அமெரிக்கர்கள் தங்களுடைய பெரிய கார்களையும் வணிக வளாகங்களையும் விட்டுக்கொடுக்கத் தயாராக இல்லாதபோது, தாங்கள் மட்டும் ஏன் தங்கள் கனவுகளைத் தள்ளிப்போட வேண்டும் என்று அவர்கள் நினைக்கின்றனர். மறுபுறம், சுற்றுச்சூழல் பேரழிவுடனான நம்முடைய பந்தயத்தில் நாம் ஒரு சுற்று முன்னால் இருக்க வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறோம். இந்த இரட்டைப் பந்தயத்தை சமாளிப்பது ஒவ்வோர் ஆண்டும் அதிகக் கடினமானதாக ஆகி வருகிறது. எனேனில், தில்லியின் குடிசைவாழ் மக்களை அமெரிக்கக் கனவுக்கு அருகே அழைத்து வர மேற்கொள்ளப்படுகின்ற ஒவ்வொரு முயற்சியும், இப்புவியை அழிவின் எல்லைக்கு மிக அருகே கொண்டுவருகிறது.

ஆனால், சூழல் மண்டல பாதிப்புகளுக்கு பலியாகாமல் மனிதகுலம் பல நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக ஒரு வளரும் பொருளாதாரத்தை அனுபவித்து வந்துள்ளது என்பது நல்ல செய்தியாகும். அதே காலகட்டங்களில், பொருளாதார வளர்ச்சியின் காரணமாகப் பிற இனங்களில் பல அழிந்தன. மனிதர்களும் எண்ணற்றப் பொருளாதார நெருக்கடிகளையும் சூழல் மண்டலச் சீரழிவுகளையும் எதிர்கொண்டுள்ளனர். ஆனால், இதுவரை எல்லா நேரங்களிலும் நாம் எப்படியோ சமாளித்து வந்துள்ளோம். ஆனால் எதிர்கால வெற்றிக்கு எந்தவோர் இயற்கை விதியாலும் உத்தரவாதம் வழங்க முடியாது. ஒரே நேரத்தில் பொருளாதாரம் உறைந்து போவதையும் சூழலியல் கொதித்துப் போவதையும் அறிவியலால் எப்போதும் தடுக்க முடியுமா என்பதை யார் அறிவார்? வேகம் தொடர்ந்து அதிகரித்துக் கொண்டே இருப்பதால், நாம் லேசாகக்கூடத் தவறிழைத்துவிடக்கூடாத நிலை உருவாகியுள்ளது. முன்பெல்லாம் நூற்றாண்டுக்கு ஒரு முறை ஏதேனும் அற்புதமான விஷயத்தைப் புதிதாகக் கண்டுபிடித்தால் போதுமானதாக இருந்தது, ஆனால் இன்று இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை நாம் ஏதேனும் ஓர் அதிசயத்தை நிகழ்த்தியாக வேண்டியுள்ளது.

சூழல் மண்டலம் நிலைகுலையும்போது, அது பல்வேறு தட்டு மக்களுக்குப் பல்வேறு பின்விளைவுகளை ஏற்படுத்தும் என்பது குறித்தும் நாம் அக்கறை கொள்ள வேண்டும். வரலாற்றில் நீதி நியாயங்கள் எதுவும் கிடையாது. பேரழிவு தாக்கும்போது, பணக்காரர்களைவிட ஏழைகள்தான் எப்போதும் அதிகமாகத் துன்புறுகின்றனர், அந்தப் பணக்காரர்கள்தான் அப்பேரழிவுக்கு முழுமுதல் காரணம் என்றாலும்கூட! உலகம் வெப்பமயமானதாக ஆகிக் கொண்டிருப்பது, மேற்கத்தியத்தியர்களின் செழிப்பான வாழ்க்கையைவிட வறண்ட ஆப்பிரிக்க நாடுகளில் உள்ள ஏழை மக்களின் வாழ்க்கையை ஏற்கனவே அதிகமாக பாதித்துக் கொண்டிருக்கிறது. இந்த ஆபத்தை அறிவியலின் சக்தியே அதிகரிக்கக்கூடும் என்பது இதிலுள்ள முரண்பாடான விஷயமாகும். ஏனெனில், அது பணக்காரர்கள் அக்கறையற்றும் மெத்தனமாகவும் இருக்கும்படி செய்கிறது.

பைங்குடில் வாயுக்களின் உமிழ்வை எடுத்துக் கொள்ளுங்கள். உலகம் வெப்பமயமாவதையும் அதனால் ஏற்படக்கூடிய ஆபத்தின் வீச்சையும் பெரும்பாலான அறிஞர்களும் அதிக எண்ணிக்கையிலான அரசியல்வாதிகளும் உணருகின்றனர். இந்த அரசியல்வாதிகளின் எண்ணிக்கை தொடர்ந்து அதிகரித்துக் கொண்டிருக்கிறது. ஆனால் இப்பிரச்சனையை உணர்ந்தும்கூட, குறிப்பிடத்தக்க வழிகளில்

நம்முடைய நடத்தையை மாற்றிக் கொள்ள நாம் இன்னமும் தவறிக் கொண்டிருக்கிறோம். உலக வெப்பமயமாதலைப் பற்றி நாம் ஏராளமாகப் பேசுகிறோம், ஆனால் நடைமுறையில், இந்தப் பேரழிவைத் தடுத்து நிறுத்துவதற்குத் தேவையான தீவிரமான பொருளாதாரரீதியான, சமுதாயரீதியான, மற்றும் அரசியல்ரீதியான தியாகங்களைச் செய்வதற்கு மனிதகுலம் தயாராக இல்லை. 2000ம் ஆண்டுக்கும் 2010ம் ஆண்டுக்கும் இடையே இந்தப் பைங்குடில் வாயுக்களின் உமிழ்வுகள் குறையவே இல்லை. அவை ஆண்டொன்றுக்கு 2.2 சதவீதம் அதிகரித்து வந்துள்ளன. இதற்கு நேர்மாறாக, 1970ம் ஆண்டுக்கும் 2000ம் ஆண்டுக்கும் இடையே அவை ஆண்டுதோறும் 1.3 சதவீதம் அதிகரித்தன. இந்த வாயுக்களின் உமிழ்வைக் குறைப்பதற்காக 1997ல் நிறைவேற்றப்பட்ட கியோட்டோ சர்வதேச உடன்படிக்கை, உலகம் வெப்பமயமாகின்ற வேகத்தைக் குறைப்பதை மட்டுமே நோக்கமாகக் கொண்டிருந்ததே அன்றி, அதைத் தடுத்து நிறுத்துவதைப் பற்றி அது யோசிக்கவில்லை. ஆனாலும், உலகை மாசுபடுத்துவதில் முதலிடம் வகிக்கின்ற அமெரிக்கா, தன்னுடைய பொருளாதார வளர்ச்சி பாதிக்கப்படும் என்ற பயத்தில் இந்த உடன்படிக்கைக்கு ஒப்புதல் வழங்கவுமில்லை, தன்னுடைய பைங்குடில் வாயுக்களின் உமிழ்வைக் குறைப்பதற்குக் குறிப்பிடத்தக்க எந்த முயற்சியும் எடுக்கவும் இல்லை.

2015ம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் பாரீஸ் நகரில் நிறைவேற்றப்பட்ட உடன்படிக்கையில் மாபெரும் இலக்குகள் நிர்ணயிக்கப்பட்டன. சராசரி வெப்பநிலை அதிகரிப்பைத் தொழிற்புரட்சிக்கு முன்பு இருந்ததைவிட 1.5 டிகிரி மட்டுப்படுத்த அறைகூவல் விடுக்கப்பட்டது. ஆனால், இந்த இலக்கை அடைய மேற்கொள்ளப்பட வேண்டிய கடினமான நடவடிக்கைகள் 2030ம் ஆண்டுக்குப் பிறகுவரை வசதியாகத் தள்ளிப் போடப்பட்டுள்ளன. இது மேலும் இருபத்தோராம் நூற்றாண்டின் பிற்பகுதிக்குக்கூடத் தள்ளிப் போடப்படக்கூடும். அப்படிச் செய்யப்பட்டால், பிரச்சனை அடுத்தத் தலைமுறையினருடையதாக ஆகிவிடும். தற்போதைய நிர்வாகிகளால் உடனடி அரசியல் ஆதாயங்களைப் பெற முடிகிறது, ஆனால் பைங்குடில் வாயுக்களின் உமிழ்வைக் குறைப்பதற்குக் (வளர்ச்சியின் வேகத்தைக் குறைப்பதற்கு) கொடுக்கப்பட வேண்டிய மிகப் பெரிய அரசியல் விலை எதிர்கால நிர்வாகிகளின் தலையில் கட்டப்பட்டுவிட்டது. ஆனாலும், இப்புத்தகம் எழுதப்பட்டுக் கொண்டிருக்கும் நேரத்தில்கூட (ஜனவரி 2016), அமெரிக்காவும், மாசுபாட்டை உருவாக்குவதில் முன்னணி வகிக்கும் பிற நாடுகளும் பாரீஸ் ஒப்பந்தத்தில் இன்னும்

கையெழுத்திட்டிருக்கவில்லை. பொருளாதாரம் வளர்ந்து கொண்டிருக்கும்வரை, அறிவியலறிஞர்களாலும் பொறியாளர்களாலும் பேரழிவிலிருந்து எப்படியும் நம்மைக் காப்பாற்றிவிட முடியும் என்று அதிக எண்ணிக்கையிலான அரசியல்வாதிகளும் வாக்காளர்களும் நம்புகின்றனர். தட்பவெப்பநிலை மாற்றம் என்று வரும்போது, வளர்ச்சியில் உண்மையிலேயே நம்பிக்கை கொண்டுள்ள பலர், அதிசயங்கள் நிகழும் என்று வெறுமனே எதிர்பார்ப்பதோடு கூடவே, அதிசயங்கள் எப்படியும் நிகழ்ந்தே தீரும் என்று உறுதியாக நம்பவும் செய்கின்றனர்.

**உலகளாவிய கரியமில வாயு உமிழ்வுகள், 1970-2013**




படம் **26:** உலக வெப்பமயமாக்கம் தொடர்பான அனைத்துக் கருத்தரங்குகளும் உடன்படிக்கைகளும் உலக அளவில் பைங்குடில் வாயுக்களின் உமிழ்வைக் கட்டுப்படுத்த இதுவரை தவறிவிட்டுள்ளன**.** பொருளாதார நெருக்கடிகள் ஏற்படுகின்ற காலகட்டங்களில் மட்டுமே உமிழ்வுகளின் அளவு குறைகிறது**. 2008-2009**ல் இந்த உமிழ்வுகள் லேசாகக் குறைந்ததற்கு உலகளாவிய பொருளாதார நெருக்கடிதான் காரணமே அன்றி**,** கோப்பன்ஹேகன் உடன்படிக்கை கையெழுத்திடப்பட்டது அல்ல**.** உலக வெப்பமயமாக்கத்தைத் தடுத்து நிறுத்துவதற்கான ஒரே வழி பொருளாதார வளர்ச்சியைத் தடுப்பதுதான்**.** ஆனால் இதை எந்த அரசாங்கமும் செய்யத் தயாராக இல்லை**.**

பூமியைப் பாதுகாக்கக்கூடிய புதிய கண்டுபிடிப்புகளை எதிர்கால அறிவியலறிஞர்கள் நிகழ்த்துவர் என்ற அனுமானத்தின்மீது மனிதகுலத்தின் எதிர்காலத்தைப் பணயம் வைப்பது எந்த அளவுக்கு அறிவுபூர்வமானது? உலகை ஆண்டு கொண்டிருக்கின்ற அதிபர்கள், அமைச்சர்கள், அதிகாரிகள் ஆகியோரில் பெரும்பாலானோர் மிகவும் அறிவார்ந்தவர்கள். அப்படிப்பட்டவர்கள் இப்படிப்பட்ட ஒரு சூதாட்டத்தில் ஏன் ஈடுபட விரும்புகின்றனர்? ஒருவேளை, தாங்கள்

தங்களுடைய சொந்தத் தனிப்பட்ட எதிர்காலத்தை வைத்து சூதாடிக் கொண்டிருக்கிறோம் என்ற நினைப்பு அவர்களுக்கு இல்லாதது அதற்குக் காரணமாக இருக்கலாம். நிலைமை மேலும் மோசமடைந்து, அறிவியலால் பெருவெள்ளத்தைத் தடுத்து நிறுத்த முடியாமல் போனால்கூட, மேற்தட்டு மக்களுக்காக உயர்தொழில்நுட்பத்துடன்கூடிய நோவா படகு ஒன்றைப் பொறியாளர்களால் உருவாக்க முடியும். ஏனைய கோடிக்கணக்கான மக்கள் அந்த வெள்ளத்தில் மூழ்கிப் போவர். இந்த உயர்தொழில்நுட்பக் கப்பல்மீதான நம்பிக்கை, தற்போது மனிதகுலத்தின் எதிர்காலத்திற்கும் இந்த ஒட்டுமொத்தச் சூழல் மண்டலத்தின் எதிர்காலத்திற்குமான மாபெரும் அச்சுறுத்தல்களில் ஒன்றாக விளங்குகிறது. மரணத்திற்குப் பிறகு ஒரு சொர்க்க வாழ்க்கை அமையும் என்று நம்புகின்ற மக்களின் கைகளில் எப்படி அணுவாயுதங்கள் ஒப்படைக்கப்படக்கூடாதோ, அதேபோல, இந்த உயர்தொழில்நுட்பக் கப்பலில் நம்பிக்கை கொள்ளுகின்ற மக்கள் உலகளாவிய சூழலியலுக்கான பொறுப்பாளர்களாக நியமிக்கப்படக்கூடாது.

ஏழை மக்களின் நிலைமை என்னவாகும்? அவர்கள் ஏன் எதிர்ப்பை வெளிப்படுத்துவதில்லை? ஒருவேளை அந்தப் பெருவெள்ளம் வந்தால், அவர்கள்தானே அதற்கான மொத்த விலையையும் கொடுத்தாக வேண்டும்? அவர்கள்தான் பொருளாதாரத் தேக்கத்திற்கான விலையையும் முதலில் கொடுக்க வேண்டியிருக்கும். ஒரு முதலாளித்துவ உலகில், பொருளாதாரம் வளரும்போது மட்டுமே ஏழைகளின் வாழ்க்கை மேம்படும். எனவே, இன்றைய பொருளாதார வளர்ச்சியைத் தாமதப்படுத்துவதன் அடிப்படையில் அமைந்துள்ள, எதிர்காலத்தில் சூழல் மண்டலத்திற்கு ஏற்படக்கூடிய பாதிப்புகளைக் குறைப்பதற்கு மேற்கொள்ளப்படுகின்ற எந்தவொரு நடவடிக்கையையும் அவர்கள் ஒருபோதும் ஆதரிக்க மாட்டார்கள். சுற்றுச்சூழலைப் பாதுகாப்பது ஒரு நல்ல யோசனைதான், ஆனால் தங்களுடைய வீட்டு வாடகையைக் கொடுக்க முடியாத மக்கள், உருகிக் கொண்டிருக்கும் பனிப்படுக்கைகளைப் பற்றிக் கவலைப்படுவதைவிடத் தங்கள் வங்கிக் கணக்கில் பணம் இல்லாமல் போய்விடுமோ என்றே அதிகமாகக் கவலைப்படுகின்றனர்.

## கண்மூடித்தனமான ஒரு போட்டி

நாம் போதுமான அளவு வேகமாக ஓடினாலும், பொருளாதார நிலைகுலைவையும் சூழல் மண்டலச் சீரழிவையும் நாம் தடுத்து

நிறுத்தினாலும்கூட, இந்தப் பந்தயம் தன்னந்தனியாகவே பெரிய பிரச்சனைகளை விளைவிக்கிறது. தனிநபர்களுக்கு அது மன அழுத்தத்தையும் பரிதவிப்பையும் ஏற்படுத்துகிறது. பல நூற்றாண்டுகாலப் பொருளாதார வளர்ச்சிக்கும் அறிவியல் முன்னேற்றத்திற்கும் பிறகு வாழ்க்கை அமைதியானதாக ஆகியிருக்க வேண்டும். குறைந்தபட்சம், மிகவும் வளர்ந்த நாடுகளிலாவது வாழ்க்கை அமைதி நிரம்பியதாக மாறியிருந்திருக்க வேண்டும். நம்முடைய கட்டுப்பாட்டின்கீழ் இருக்கின்ற கருவிகளையும் வளவசதிகளையும் நம் முன்னோர்கள் அறிந்திருந்தால், நாம் எள்ளளவும் கவலையற்ற, மிக அமைதியான வாழ்க்கையை அனுபவித்துக் கொண்டிருக்கிறோம் என்று அவர்கள் அனுமானித்திருப்பர். ஆனால் உண்மை முற்றிலும் வித்தியாசப்பட்டு இருக்கிறது. நாம் அளப்பரிய சாதனைகளை நிகழ்த்தியிருந்தும்கூட, இன்னும் அதிகமாகச் செய்வதற்கும் இன்னும் அதிகமாக உற்பத்தி செய்வதற்குமான ஒரு நிரந்தர அழுத்தத்தை நாம் தொடர்ந்து அனுபவித்துக் கொண்டிருக்கிறோம்.

நாம் நம்மையும், நம்முடைய மேலதிகாரியையும், வங்கிக்குச் செலுத்த வேண்டிய தவணைத் தொகையையும், அரசாங்கத்தையும், கல்வி அமைப்புமுறையையும் குறை கூறுகிறோம். ஆனால் உண்மையில் இது அவர்களுடைய தவறு அல்ல. நாம் என்றைக்கு இந்த பூமியில் பிறந்தோமோ, அன்றைக்கு நாம் எல்லோரும் செய்து கொண்ட நவீன உடன்படிக்கைதான் நம்முடைய இன்றைய மன அழுத்தத்திற்கான காரணம். நவீன காலத்திற்கு முந்தைய காலத்து மக்களை, ஒரு சோசியலிச அதிகாரத்துவத்தில் பணியாற்றுகின்ற கீழ்மட்டக் கணக்கர்களோடு ஒப்பிடலாம். அவர்கள் தினமும் தொழிற்சாலைக்குள் வந்து கடினமாக வேலை செய்து கொண்டு, தங்களுடைய பிரச்சனையை வேறு யாராவது தீர்த்து வைப்பார்கள் என்று நம்பிக் கொண்டிருந்தனர். நவீன உலகில், மனிதர்களாகிய நாம்தான் எல்லாவற்றையும் இயக்கிக் கொண்டிருப்பதால், இரவும் பகலும் நாம்தான் தொடர்ந்து அழுத்தத்திற்கு ஆளாகியுள்ளோம்.

ஒட்டுமொத்தமாகப் பார்க்கும்போது, அர்த்தமற்ற இப்பந்தயம் முடிவற்றக் குழப்பங்களின் வடிவில் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளுகிறது. முன்பு சமூக அமைப்புமுறைகளும் அரசியல் அமைப்புமுறைகளும் பல நூற்றாண்டுகள் தாக்குப்பிடித்தன, ஆனால் இன்று ஒவ்வொரு தலைமுறையும் பழைய உலகத்தை அழித்துவிட்டு, அதனிடத்தில் ஒரு புதிய உலகத்தை உருவாக்குகிறது. கார்ல் மார்க்ஸும் ஃபிரெட்ரிக் எங்கெல்ஸும் சேர்ந்து உருவாக்கிய ‘பொதுவுடமை அறிக்கை’ மிக அழகாகக் கூறியுள்ளதைப்போல, நிச்சயமின்மையும்

கொந்தளிப்பும் இந்த நவீன உலகத்திற்கு நிச்சயமாகத் தேவைதான். அனைத்து நிலையான உறவுகளும் பண்டைய பாரபட்சமான யோசனைகளும் தூக்கியெறியப்படுகின்றன, புதிய கட்டமைப்புகள் வலிமையாகக் காலூன்றுவதற்கு முன்பாகவே பழைய பாணியாக ஆகிவிடுகின்றன. திடமான அனைத்தும் காற்றுக்குள் உருகிவிடுகின்றன. இப்படிப்பட்ட ஒரு குழப்பமான உலகத்தில் வாழுவது அவ்வளவு சுலபமானதல்ல. அதை ஆட்சி செய்வது அதைவிடக் கடினம்.

எனவே, இப்பந்தயம் எவ்வளவு அழுத்தத்தையும் குழப்பத்தையும் விளைவித்தாலும் தனிமனிதர்களும் மனிதர்குழாமும் இப்பந்தயத்திலிருந்து ஓய்வு பெற்றுவிடாமல் இருப்பதை உறுதி செய்வதற்கு நவீனத்துவம் மிகக் கடினமாக உழைத்தாக வேண்டும். இந்த நோக்கத்திற்காக வளர்ச்சியை ஓர் உச்சகட்ட விழுமியமாக நவீனத்துவம் தூக்கிப் பிடிக்கிறது. இந்த வளர்ச்சிக்காக நாம் அனைத்து வகையான தியாகங்களையும் செய்ய வேண்டும் என்றும், எந்தவோர் ஆபத்தையும் எதிர்கொள்ள வேண்டும் என்றும் அது கூறுகிறது. அரசாங்கங்களும் நிறுவனங்களும் அமைப்புகளும் தம்முடைய வெற்றியை வளர்ச்சியின் அடிப்படையில் அளவிட வேண்டும் என்றும், சமத்துவத்தைக் கண்டு பயப்பட வேண்டும் என்றும் ஊக்குவிக்கப்படுகின்றன. தனிநபர் நிலையில், தொடர்ந்து நம்முடைய வருவாயை அதிகரித்துக் கொள்ளவும் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக் கொள்ளவும் நாம் உத்வேகம் பெறுகிறோம். உங்களுடைய தற்போதைய சூழ்நிலை குறித்து நீங்கள் ஓரளவுக்குத் திருப்தியாக இருக்கிறீர்கள் என்றாலும்கூட, நீங்கள் இன்னும் அதிகமானவற்றைக் கைவசப்படுத்தக் கடினமாக முயற்சிக்க வேண்டும் என்று நவீனத்துவம் வலியுறுத்துகிறது. நேற்றைய ஆடம்பரங்கள் இன்றைய தேவைகளாக ஆகின்றன. ஒரு காலத்தில் மூன்று படுக்கையறைகளைக் கொண்ட ஒரு வீட்டில், ஒற்றைக் காருடனும் ஒரே ஒரு கணினியுடனும் உங்களால் வாழ முடிந்தது, ஆனால் இன்று, ஐந்து படுக்கையறைகளைக் கொண்ட ஒரு வீடும், இரண்டு கார்களும், ஏகப்பட்ட ஐ-பாடுகளும், டேப்லெட்டுகளும், ஸ்மார்ட்போன்களும் உங்களுக்குத் தேவைப்படுகின்றன.

அதிகமானவற்றுக்கு ஆசைப்படும்படி மக்களைத் தூண்டுவது அவ்வளவு கடினமானதாக இருக்கவில்லை. மனிதர்களுக்குப் பேராசை வெகு சுலபமாக வந்துவிடுகிறது. இப்புதிய கொள்கையை சுவீகரித்துக் கொள்ள நாடுகள், தேவாலயங்கள் போன்ற கூட்டு அமைப்புகளை ஒப்புக் கொள்ள வைப்பதுதான் மிக பெரிய பிரச்சனையாக இருந்தது.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக, தனிமனித ஆசைகளைக் கட்டுப்படுத்தி அவர்களை ஒருவிதமான சமநிலைக்குக் கொண்டுவருவதற்குச் சமுதாயங்கள் கடுமையாக முயற்சித்தன. மக்கள் தங்களுக்கென்று மேன்மேலும் அதிகமாகப் பெற்றுக் கொள்ள விரும்பினர். ஆனால் பீட்சாவின் அளவு மாறவில்லை என்பதால், சமூக இணக்கம், மனிதர்கள் தங்கள் ஆசையைக் கட்டுப்படுத்திக் கொள்ளுவதைச் சார்ந்திருந்தது. பேராசை மோசமானதாக இருந்தது. ஆனால் நவீனத்துவம் இவ்வுலகைத் தலைகீழாகப் புரட்டிப் போட்டது. குழப்பத்தைவிட சமநிலை அதிக ஆபத்தானது என்றும், பேராசை வளர்ச்சியைத் துரிதப்படுத்துவதால் அது ஒரு நல்ல ஆற்றல் என்றும் நவீனத்துவம் மனிதர்களை நம்ப வைத்தது. இதன் விளைவாக, அதிகமானவற்றைக் கைவசப்படுத்துவதற்கான விருப்பத்தை மனிதர்களிடத்தில் அது தோற்றுவித்து அவர்களுக்கு உத்வேகமூட்டியது, பேராசையைக் கட்டுப்படுத்திய பண்டைய ஒழுங்குகளை அது உடைத்து நொறுக்கியது.

இதனால் உருவான கவலைகளைக் கட்டுப்பாடற்றச் சந்தைமுறை முதலாளித்துவம் குறைத்தது. குறிப்பிட்ட இக்கொள்கை மக்களிடையே இவ்வளவு பிரபலமாக ஆகியுள்ளதற்கு இதுவும் ஒரு காரணம். முதலாளித்துவச் சிந்தனையாளர்கள் தொடர்ந்து இவ்வாறு நம்மை அமைதிப்படுத்துகின்றனர்: "கவலைப்படாதீர்கள், எல்லாம் சரியாகிவிடும். பொருளாதாரம் வளரும் பட்சத்தில், சந்தையின் மாயக் கை மற்ற எல்லாவற்றையும் பார்த்துக் கொள்ளும்." கட்டுப்பாடின்றிப் பன்மடங்கு வளர்ந்து கொண்டிருக்கின்ற குழப்பமான ஓர் அமைப்புமுறையை முதலாளித்துவம் இவ்வாறு புனிதப்படுத்தியுள்ளது. ஆனால் இந்த அமைப்புமுறையில், என்ன நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதும், நாம் இவ்வளவு வேகமாக எங்கே ஓடிக் கொண்டிருக்கிறோம் என்பதும் யாருக்குமே புரியவில்லை. (கம்யூனிசவாதமும் வளர்ச்சியில் நம்பிக்கை கொண்டிருந்தது. ஆனால், மையத் திட்டமிடுதல் வாயிலாகக் குழப்பத்தைத் தவிர்த்து வளர்ச்சியைத் தோற்றுவிக்க முடியும் என்று அது நினைத்தது. துவக்கத்தில் அதற்கு வெற்றி கிடைத்தபோதிலும், இறுதியில், குழப்பமூட்டும் கட்டுப்பாடற்றச் சந்தைக்குப் பின்னே அது வெகுதூரம் பின்தங்கிவிட்டது.)

முதலாளித்துவத்தின் கட்டுப்பாடற்றச் சந்தைமுறையை இழித்துரைப்பது இன்று அறிவார்ந்தவர்களுடைய குறிக்கோள்களில் தலையாயதாக இருக்கிறது. முதலாளித்துவம் நம் உலகின்மீது ஆதிக்கம் செலுத்துவதால், அது பேரழிவுகளை ஏற்படுத்துவதற்கு முன்பாக அதன் குறைபாடுகளைப் புரிந்து கொள்ள நாம் அனைத்து முயற்சிகளையும்

மேற்கொள்ள வேண்டும். ஆனாலும், முதலாளித்துவத்தை விமர்சிப்பது அதன் அனுகூலங்களையும் சாதனைகளையும் நம்மால் பார்க்க முடியாதபடி நம்முடைய பார்வையை மறைத்துவிடக்கூடாது. முதலாளித்துவத்தால் எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய சூழல் மண்டல பாதிப்புகளை நீங்கள் கண்டுகொள்ளவில்லை என்றால், உற்பத்தியையும் வளர்ச்சியையும் மட்டுமே அளவுகோல்களாகக் கொண்டு வெற்றியை நீங்கள் அளவிட்டால், முதலாளித்துவம் இதுவரை அற்புதமான வெற்றியைப் பெற்று வந்துள்ளது என்றுதான் கூற வேண்டும். அழுத்தம் நிறைந்த, குழப்பமான ஓர் உலகில் இன்று நாம் வாழ்ந்து கொண்டிருக்கக்கூடும். ஆனால் நிலைகுலைவு, சீரழிவு போன்ற மோசமான தீர்க்கதரிசனங்கள் நனவாகவில்லை. மாறாக, நிரந்தரமான வளர்ச்சி, உலகளாவிய ஒத்துழைப்பு ஆகிய சர்ச்சைக்குரிய வாக்குறுதிகள் நிறைவேற்றப்பட்டுள்ளன. நாம் எப்போதேனும் பொருளாதார நெருக்கடிகளையும் சர்வதேசப் போர்களையும் அனுபவித்தாலும், நீண்டகால நோக்கில் முதலாளித்துவம் தொடர்ந்து தாக்குப்பிடித்து வந்துள்ளதோடு மட்டுமல்லாமல், பஞ்சம், தொற்றுநோய், போர் ஆகியவற்றைக் கட்டுப்படுத்தியும் வந்துள்ளது. பஞ்சம், தொற்றுநோய், போர் ஆகியவற்றை மனிதர்களால் தங்கள் சொந்த முயற்சிகளைக் கொண்டு கட்டுப்படுத்த முடியாது என்று கிறித்தவ மதபோதகர்களும் யூதகுருமார்களும் முஃப்திக்களும் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக விளக்கி வந்திருந்தனர். பிறகு வந்த வங்கியாளர்களும் முதலீட்டாளர்களும் தொழிலதிபர்களும் 200 ஆண்டுகளில் அவற்றைக் கட்டுப்படுத்திக் காட்டினர்.

எனவே, முன்பு ஒருபோதும் இருந்திராத சக்தி நமக்குக் கிடைக்கும் என்று நவீன உடன்படிக்கை நமக்கு வாக்குக் கொடுத்திருந்தது. அந்த வாக்கை அது காப்பாற்றியுள்ளது. ஆனால், அதற்கு என்ன விலை கொடுக்கப்பட்டுள்ளது? சக்திக்கு பதிலீடாக, வாழ்வின் அர்த்தத்தை நாம் விட்டுக்கொடுக்க வேண்டும் என்று நவீன உடன்பாடு எதிர்பார்க்கிறது. அதிர்ச்சியூட்டும் இந்த எதிர்பார்ப்பை மனிதர்கள் எப்படிக் கையாண்டனர்? இந்த எதிர்பார்ப்பிற்கு நாம் இசைவு தெரிவித்திருந்தால், அறநெறிகளோ, மனிதாபிமானமோ, அல்லது அழகியலோ இல்லாத ஓர் இருண்ட உலகம் வெகு சுலபமாகத் தோற்றுவிக்கப்பட்டிருக்கும். ஆனால், முன்பு எப்போதையும்விட இப்போது மனிதகுலம் அதிக சக்திவாய்ந்ததாகவும் அதிக அமைதியானதாகவும் இருக்கிறது. அது அதிக ஒத்துழைப்பை உள்ளடக்கியதாகவும் இருக்கிறது. மனிதர்கள் எப்படி இதை சாதித்தனர்? கடவுளரும் சொர்க்கமும் நரகமும் இல்லாத ஓர் உலகில்

எப்படி ஒழுக்கமும் அழகும் மனிதாபிமானமும் தப்பிப் பிழைத்துச் செழித்தன?

சந்தையின் மாயக் கைதான் இதற்குக் காரணம் என்று பெருமுதலாளிகள் பெருமையோடு கூறிக் கொள்ளுகின்றனர். ஆனால் அந்த மாயக் கை நம் கண்களுக்குத் தெரிவதில்லை என்பதோடு மட்டுமல்லாமல், அதுவே குருடாகவும் இருக்கிறது. மனிதச் சமுதாயத்தைத் தானாக அதனால் ஒருபோதும் காப்பாற்றியிருக்க முடியாது. உண்மையில், ஒரு கிராமத்துத் திருவிழாவால்கூட ஏதோ கடவுளுடைய, அரசருடைய, அல்லது தேவாலயத்தினுடைய உதவிக் கரம் இல்லாமல் தன்னைப் பராமரித்துக் கொள்ள முடியாது. நீதிமன்றங்கள், காவல்துறை உட்பட அனைத்துமே விற்பனைக்கு உள்ளன என்றால், அங்கு நம்பிக்கை மறைந்துவிடுகிறது, கடன் காணாமல் போய்விடுகிறது. வியாபாரம் படுத்துவிடுகிறது. அப்படியானால், நவீனச் சமுதாயத்தை எது நிலைகுலைவிலிருந்து மீட்டெடுத்தது? தேவை மற்றும் விநியோக விதி மனிதகுலத்தை அழிவிலிருந்து காக்கவில்லை, மாறாக, மனிதவாதம் என்ற ஒரு புதிய, புரட்சிகரமான மதத்தின் எழுச்சிதான் அதற்குக் காரணமாக அமைந்தது.

## அத்தியாயம் 7

# மனிதவாதப் புரட்சி

வாழ்க்கைக்கு அர்த்தத்தைக் கொடுக்கின்ற ஒரு மாபெரும் பிரபஞ்சத் திட்டம் இருக்கிறது என்று நாம் கொண்டிருக்கின்ற நம்பிக்கையை நாம் துறக்கும் பட்சத்தில் நமக்கு சக்தியைக் கொடுக்க நவீன உடன்படிக்கை தயாராக உள்ளது. ஆனால், அந்த உடன்படிக்கையை நீங்கள் சற்றுக் கூர்ந்து ஆய்வு செய்தீர்களேயானால், அந்த உடன்படிக்கையை மீறாமல் அதிலிருந்து விடுபடுவதற்கு அனுமதிக்கின்ற ஒரு தந்திரமான 'விடுவிப்பு ஷரத்து' அதில் இருப்பதை நீங்கள் காணுவீர்கள். ஒரு மாபெரும் பிரபஞ்சத் திட்டத்தின் அடிப்படையில் அமையாதபடி மனிதர்கள் எப்படியோ அர்த்தத்தைக் கண்டுபிடித்தால், அது அந்த உடன்படிக்கையை மீறுவதாக ஆகாது.

இந்த 'விடுவிப்பு ஷரத்து' நவீனச் சமுதாயத்திற்கு ஒரு விமோசனமாக அமைந்து வந்துள்ளது. ஏனெனில், அர்த்தம் இல்லாமல் ஒழுங்கைப் பராமரிப்பது சாத்தியமற்றது. ஏதோ மாபெரும் பிரபஞ்சத் திட்டத்தின் அடிப்படையில் அமையாத ஓர் அர்த்தத்தைக் கண்டுபிடிப்பதுதான் நவீனத்துவத்தின் அரசியல்ரீதியான, கலைரீதியான, மற்றும் மதரீதியான பணித்திட்டமாக இருந்து வந்துள்ளது. நாம் ஒரு தெய்விக நாடகத்தில் நடிக்கும் நடிகர்கள் அல்லர், நம்மைப் பற்றியும் நம்முடைய செயல்களைப் பற்றியும் யாருக்கும் அக்கறை இல்லை, யாரும் நம்முடைய சக்திக்கு எல்லைகளை நிர்ணயிப்பதில்லை. ஆனாலும், நம் வாழ்க்கைக்கு ஓர் அர்த்தம் இருப்பதாக நாம் இன்னும் உறுதியாக நம்புகிறோம்.

தற்போதுவரை மனிதகுலம் இவ்விரண்டு விஷயங்களையும் பெற்று வந்துள்ளது. முன்பைவிட அதிக சக்தி நம் வசமாகியுள்ளதோடு கூடவே, எல்லா எதிர்பார்ப்புகளுக்கும் எதிராக, கடவுளின் மரணம் சமுதாய நிலைகுலைவிற்கு வழி வகுக்கவில்லை. மனிதர்கள் ஒரு மாபெரும் பிரபஞ்சத் திட்டத்தில் நம்பிக்கை கொள்ளுவதை நிறுத்திவிட்டால், அனைத்துச் சட்ட ஒழுங்குகளும் மறைந்துவிடும் என்று தீர்க்கதரிசிகளும் தத்துவவியலாளர்களும் வரலாறு நெடுகிலும் வாதிட்டு வந்துள்ளனர். ஆனால் இன்று, கடவுளையும், எல்லாவற்றையும் உள்ளடக்கிய அவருடைய திட்டங்களையும் தொடர்ந்து நம்புகின்ற மக்கள்தான் உலகளாவிய சட்டம் மற்றும் ஒழுங்கிற்கான மிகப் பெரிய அச்சுறுத்தலாக இருக்கின்றனர். கடவுள்மீது பயம் கொண்டுள்ள சிரியா,

மதச்சார்பற்ற நெதர்லாந்தைவிட அதிக வன்முறையான ஓர் இடமாக இருக்கிறது.

எந்தவொரு பிரபஞ்சத் திட்டமும் இல்லை என்றால், நாம் எந்தவிதமான தெய்விக விதிகளுக்கும் இயற்கை விதிகளுக்கும் கட்டுப்பட்டவர்கள் அல்லர் என்றால், சமுதாய நிலைகுலைவை எது தடுக்கிறது? அடிமைகளை வாங்கி விற்கின்ற நபர்களால் நீங்கள் கடத்திச் செல்லப்படாமலும், கயவர்களால் அபகரிக்கப்படாமலும், சண்டையிட்டுக் கொண்டிருக்கும் வெவ்வேறு பழங்குடியின மக்களால் கொல்லப்படாமலும் ஆம்ஸ்டர்டாமிலிருந்து புக்காரெஸ்ட்டுக்கோ, அல்லது நியூ ஆர்லீன்ஸிலிருந்து மன்ட்ரியாலுக்கோ ஆயிரக்கணக்கான கிலோமீட்டர் தூரம் எப்படி உங்களால் பயணம் செய்ய முடிகிறது?

## பார்வையை அகம் நோக்கித் திருப்புங்கள்

அர்த்தமற்ற மற்றும் சட்ட ஒழுங்கற்ற இருத்தலுக்கான முறிமருந்தை மனிதவாதம் வழங்கியது. கடந்த ஒருசில நூற்றாண்டுகளின்போது உலகை வெற்றி கொண்ட புரட்சிகரமான புதிய மதம் அது. மனிதவாத மதம் மனிதகுலத்தை வழிபடுகிறது. கிறித்தவத்திலும் இஸ்லாமிலும் கடவுள் வகித்தப் பாத்திரத்தையும், புத்தமதத்திலும் தாவோயிசத்திலும் இயற்கை விதிகள் வகித்தப் பாத்திரத்தையும் மனிதகுலம் வகிக்க வேண்டும் என்று அது எதிர்பார்க்கிறது. பாரம்பரியமாக, மாபெரும் பிரபஞ்சத் திட்டம் மனித வாழ்க்கைக்கு அர்த்தத்தைக் கொடுத்தது, ஆனால் மனிதவாதம் அந்தப் பாத்திரங்களைத் தலைகீழாக மாற்றியமைத்து, மனிதர்களுடைய அனுபவங்கள் பிரபஞ்சத்திற்கு ஓர் அர்த்தத்தைக் கொடுக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறது. மனிதவாதத்தைப் பொருத்தவரை, மனிதர்கள் தங்களுடைய உள்ளார்ந்த அனுபவங்களிலிருந்து தங்கள் சொந்த வாழ்க்கைக்கான அர்த்தத்தைக் கண்டுபிடிக்க வேண்டும் என்பதோடு, ஒட்டுமொத்தப் பிரபஞ்சத்திற்கான அர்த்தத்தையும் கண்டுபிடித்தாக வேண்டும். ‘அர்த்தமற்ற ஒரு வாழ்க்கைக்கு அர்த்தத்தை உருவாக்குங்கள்!’ என்பதுதான் மனிதவாதம் நமக்குக் கொடுத்துள்ள முதன்மைக் கட்டளையாகும்.

அதன்படி, நவீனத்துவத்தின் மைய மதரீதியான புரட்சி, கடவுள்மீதான விசுவாசத்தை இழப்பது அல்ல; மாறாக, மனிதகுலத்தின்மீதான விசுவாசத்தை அதிகரிப்பதுதான். இதற்குப் பல நூற்றாண்டுகாலக் கடின உழைப்பு தேவைப்பட்டது. சிந்தனையாளர்கள் துண்டுப் பிரசுரங்களை எழுதினர், கலைஞர்கள்

கவிதைகளையும் சிம்பொனி இசையையும் படைத்தனர், அரசியல்வாதிகள் ஒப்பந்தங்களை உருவாக்கினர் - இவர்கள் எல்லோருமாகச் சேர்ந்து, மனிதகுலத்தால் பிரபஞ்சத்திற்கு அர்த்தத்தைக் கொடுக்க முடியும் என்று மக்களை நம்ப வைத்தனர். மனிதவாதப் புரட்சியின் ஆழத்தையும் பின்விளைவுகளையும் புரிந்து கொள்ளுவதற்கு, நவீன ஐரோப்பியக் கலாச்சாரம் எப்படி இடைக்கால ஐரோப்பியக் கலாச்சாரத்திலிருந்து வேறுபட்டுள்ளது என்பதை நினைத்துப் பாருங்கள். எது நல்லது - எது தீயது, எது சரி - எது தவறு, எது அழகானது - எது அலங்கோலமானது போன்றவற்றை மனிதர்களால் தாங்களாகவே தீர்மானிக்க முடியாது என்றும், கடவுளால் மட்டுமே நல்லவற்றையும் சரியானவற்றையும் அழகானவற்றையும் படைக்க முடியும் என்றும் 1300ம் ஆண்டில் லண்டன், பாரீஸ், டொலேடோ ஆகிய நகரங்களில் வாழ்ந்த மக்கள் நம்பினர்.

மனிதர்கள் தனித்துவமான திறன்களையும் வாய்ப்புகளையும் அனுபவிக்கின்றனர் என்பது பரவலாக ஒப்புக் கொள்ளப்பட்டபோதும்கூட, அவர்கள் அறியாமை மிக்கவர்களாகவும், நேர்மையின்றி நடக்க எளிதில் தூண்டப்படக்கூடியவர்களாகவும் பார்க்கப்பட்டனர். மேலும், புறவயமான கண்காணிப்பும் வழிகாட்டுதலும் இல்லாமல் மாறா உண்மையை ஒருபோதும் புரிந்து கொள்ள முடியாதவர்களாகவும், அதே நேரத்தில், கணநேரமே நீடிக்கக்கூடிய புலன்சார் இன்பங்களாலும் லௌகிக மாயைகளாலும் எளிதில் கவரப்படக்கூடியவர்களாகவும் அவர்கள் இருந்தனர் என்றும் கருதப்பட்டது. அது மட்டுமல்லாமல், மனிதர்கள் என்றேனும் ஒருநாள் மடியக்கூடியவர்கள், அவர்களுடைய அபிப்பிராயங்களும் உணர்வுகளும் காற்றைப்போலக் கணத்திற்குக் கணம் மாறுபவை என்று இடைக்காலச் சிந்தனையாளர்கள் சுட்டிக்காட்டினர். இன்று நான் ஏதேனும் ஒன்றை என் இதயபூர்வமாக விரும்புகிறேன், ஆனால் நாளைக்கு அது எனக்கு வெறுப்பூட்டுகிறது, அடுத்த வாரம் நான் இறந்து போய் புதைக்கப்பட்டுவிடுகிறேன். எனவே, மனித அபிப்பிராயத்தைச் சார்ந்துள்ள எந்தவொரு அர்த்தமும் எளிதில் சிதைந்துவிடக்கூடியதாகவும் மேலோட்டமானதாகவுமே இருக்கிறது. அதனால், முழுமையான உண்மைகளும், வாழ்வின் அர்த்தமும், பிரபஞ்சத்தின் அர்த்தமும் மனித சக்திக்கு அப்பாற்பட்ட ஒரு மூலாதாரத்திலிருந்து உதயமாகின்ற ஏதோ நிரந்தர விதியின் அடிப்படையில் அமைந்தாக வேண்டும்.

இந்தக் கண்ணோட்டம், அர்த்தத்திற்கு மட்டுமல்லாமல் அதிகாரத்திற்கும் கடவுள்தான் உச்சகட்ட மூலாதாரம் என்று பார்த்தது.

அர்த்தமும் அதிகாரமும் எப்போதும் கைகோர்த்துச் செல்லுகின்றன. நம்முடைய நடவடிக்கைகள் நல்லவையோ அல்லது தீயவையோ, சரியானவையோ அல்லது தவறானவையோ, அழகானவையோ அல்லது அழகற்றவையோ, அவற்றுக்கான அர்த்தத்தை யார் தீர்மானிக்கிறார்களோ, அவர்கள்தான், நாம் என்ன சிந்திக்க வேண்டும், எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று கூறுவதற்கான அதிகாரத்தையும் பெறுகின்றனர்.

அர்த்தத்திற்கும் அதிகாரத்திற்குமான மூலாதாரம் கடவுள்தான் என்பது வெறும் தத்துவரீதியான ஒரு கோட்பாடாக மட்டும் இருக்கவில்லை. அது வாழ்வின் ஒவ்வோர் அம்சத்தையும் பாதித்தது. 1300ல், ஏதோ சிறிய ஆங்கிலேய நகரம் ஒன்றில், திருமணமான ஒரு பெண் தன்னுடைய பக்கத்து வீட்டு ஆடவன்மீது மோகம் கொண்டு அவனோடு உடலுறவு கொண்டுவிட்டாள் என்று வைத்துக் கொள்ளுவோம். அவள் தன்னுடைய புன்னகையை மறைத்துக் கொண்டும் தன்னுடைய ஆடையைச் சரிசெய்து கொண்டும் பதுங்கிப் பதுங்கித் தன் வீட்டிற்குத் திரும்பி வரும்போது அவளுடைய மனம் வேகமாக ஓடத் தொடங்குகிறது: “நான் என்ன நினைத்துக் கொண்டிருந்தேன்? நான் ஏன் அதைச் செய்தேன்? அது நல்லதா அல்லது கெட்டதா? அது என்னைப் பற்றி என்ன சொல்லும்? நான் மீண்டும் அதைச் செய்யலாமா?” இப்படிப்பட்டக் கேள்விகளுக்கு விடையளிப்பதற்கு அப்பெண் உள்ளூர்ப் பாதிரியாரிடம் சென்று பாவமன்னிப்புக் கேட்டுவிட்டு, புனிதத் தந்தையிடம் வழிகாட்டுதலைக் கோர வேண்டியிருந்தது. அப்பாதிரியார் மறைநூல்களில் புலமை பெற்றிருந்ததால், திருமணத்திற்கு வெளியே கள்ளத்தனமான உறவைப் பற்றிக் கடவுள் என்ன நினைத்தார் என்பதை அப்புனித உரைகள் துல்லியமாக அவருக்கு வெளிப்படுத்தும். அப்பெண் ஒரு மிகப் பெரிய பாவத்தைச் செய்திருந்ததாக, கடவுளின் வார்த்தையின் அடிப்படையில், சந்தேகமின்றி அப்பாதிரியாரால் தீர்மானிக்க முடியும். அவள் தன் பாவத்திற்குப் பரிகாரம் செய்து கொள்ளாவிட்டால், அவர் நரகத்திற்குத்தான் போக வேண்டியிருக்கும். எனவே, அவள் உடனடியாகத் தன் பாவத்தை நினைத்து வருந்தி, வரவிருந்த சிலுவைப் போருக்குப் பத்துப் பொற்காசுகள் தானம் கொடுக்க வேண்டியிருந்தது, அடுத்த ஆறு மாதங்களுக்கு இறைச்சி உட்கொள்ளாமல் இருக்க வேண்டியிருந்தது, கேன்டர்புரி நகரில் உள்ள புனித தாமஸின் சமாதிக்கு ஒரு புனிதப் பயணம் மேற்கொள்ள வேண்டியிருந்தது. பிறகு, அவள் இனி ஒருபோதும் அந்தக் கொடிய பாவத்தைச் செய்யாமல் இருக்க வேண்டும்.

இன்று விஷயங்கள் மிகவும் வித்தியாசமாக இருக்கின்றன. அர்த்தத்திற்கான உச்சகட்ட மூலாதாரம் நாம்தான் என்றும், நம்முடைய விருப்பம்தான் மிக உயர்ந்தது என்றும் பல நூற்றாண்டுகளாக மனிதவாதம் நம்மை நம்ப வைத்து வந்துள்ளது. எது சரி எது தவறு என்றெல்லாம் வெளியிலிருந்து யாரோ ஒருவர் நமக்குச் சொல்லுவதற்காக நாம் காத்துக் கொண்டிருப்பதற்கு பதிலாக, நாம் நம்முடைய சொந்த உணர்வுகளையும் விருப்பங்களையும் சார்ந்திருக்க வேண்டும் என்று அது கூறுகிறது. குழந்தைப்பருவத்திலிருந்தே ஏராளமான மனிதவாதப் பிரச்சாரங்கள் நமக்கு அறிவுறுத்தப்பட்டு வந்துள்ளன: "உன் மனம் கூறுவதைக் காதுகொடுத்துக் கேள், உன்னிடம் உண்மையாக நடந்து கொள், உன் இதயத்தைப் பின்தொடர்ந்து செல், எது உனக்கு நல்லவிதமான உணர்வைக் கொடுக்கிறதோ அதைச் செய்." இவை அனைத்தையும் 'எமிலி' என்ற தன்னுடைய நூலில் ஜான் ஜாக் அழகாகத் தொகுத்துரைத்துள்ளார். பதினெட்டாம் நூற்றாண்டில் வெளியான அந்நூலில் இவ்வாறு கூறப்பட்டுள்ளது: "வாழ்வின் ஒழுக்க நெறிகளை நான் தேடியபோது, என் இதயத்தின் ஆழத்தில் அவற்றை நான் கண்டேன். நான் என்ன செய்ய விரும்புகிறேன் என்பது பற்றி என்னை மட்டுமே நான் கலந்தாலோசிக்க வேண்டும். எது நல்லது என்று நான் உணருகிறேனோ, அது நல்லது. எது மோசமானது என்று நான் உணருகிறேனோ, அது மோசமானது."

அதன்படி, ஒரு நவீனப் பெண், தான் கொண்டிருக்கின்ற கள்ளத்தனமான உறவின் அர்த்தத்தைப் பற்றிப் புரிந்து கொள்ள விரும்பும்போது, ஒரு பாதிரியாருடைய அல்லது ஒரு பண்டைய நூலினுடைய தீர்ப்புகளை அவள் கண்மூடித்தனமாக ஏற்றுக் கொள்ளுவதற்கான வாய்ப்பு மிகவும் குறைவுதான். அதற்கு பதிலாக, அவள் தன்னுடைய உணர்வுகளை கவனமாக ஆய்வு செய்வாள். அவளுடைய உணர்வுகள் தெளிவாக இல்லாவிட்டால், அவள் தன்னுடைய நெருங்கிய தோழியைத் தொலைபேசியில் அழைப்பாள். பிறகு இருவரும் சந்தித்துக் கொள்ளுவர். அப்போது அவள் தன் தோழியிடம் தன் மனத்தில் உள்ள எல்லாவற்றையும் ஒன்றுவிடாமல் கூறுவாள். விஷயங்கள் இன்னும் தெளிவாக இல்லாவிட்டால், அவள் தன்னுடைய மனநல ஆலோசகரிடம் சென்று, அதைப் பற்றி அவரிடம் பேசுவாள். கோட்பாட்டுரீதியாகப் பார்க்கும்போது, அந்த நவீன மனநல ஆலோசகர் இடைக்காலத்துப் பாதிரியாரின் இடத்தை எடுத்துக் கொண்டுள்ளார் என்று கூறலாம். இவ்விரு தொழில்களையும் ஒப்பிடுவது ஒரு நகைமுரண்தான். ஆனாலும் நடைமுறையில் இவ்விரு

தொழில்களுக்கும் இடையே ஒரு மிகப் பெரிய இடைவெளி இருக்கிறது. நல்லவற்றையும் தீயவற்றையும் வரையறுக்கின்ற ஒரு புனித நூல் அந்த ஆலோசகரிடம் இல்லை. அப்பெண் அவரிடம் தன் கதையைக் கூறி முடிக்கும்போது, அவர் அவளைப் பார்த்து, "கேடுகெட்டவளே! நீ ஒரு மாபெரும் பாவத்தைச் செய்திருக்கிறாய்!" என்று கத்த மாட்டார். அதே சமயம், "அற்புதம்! நீ ஒரு நல்ல காரியம் செய்துள்ளாய்!" என்றும் அவர் கூற மாட்டார். மாறாக, அப்பெண் என்ன செய்திருந்தாலும் சரி, அவள் அவரிடம் என்ன கூறியிருந்தாலும் சரி, அந்த ஆலோசனையாளர் அக்கறையான ஒரு குரலில், "நடந்துள்ள விஷயத்தைப் பற்றி நீங்கள் எப்படி உணருகிறீர்கள்?" என்று மட்டும் கேட்பார்.

அந்த ஆலோசகரின் புத்தக அலமாரி, சிக்மன்டு ஃபிராய்டு மற்றும் கார்ல் யுங்கின் நூல்கள் மற்றும் 1,000 பக்கங்களைக் கொண்ட 'டயக்னாஸ்டிக் அன்ட் ஸ்டேட்டிஸ்டிக்கல் மேனுவல் ஆஃப் மென்ட்டல் டிஸ்ஸார்டர்ஸ் (டிஎஸ்எம்)' நூல் ஆகியவற்றின் பாரம் தாங்காமல் லேசாக வளைந்து போயிருக்கும் என்பது நிச்சயம். ஆனால் இவை எதுவும் புனித மறைநூல்கள் அல்ல. டிஎஸ்எம் நூல் வாழ்வின் நோய்களைக் கண்டுபிடிக்கிறதே தவிர, வாழ்வின் அர்த்தத்தை அல்ல. மனித உணர்வுகள் மட்டுமே மனித நடவடிக்கைகளுக்கான உண்மையான அர்த்தத்தைத் தீர்மானிப்பதற்கான அதிகாரத்தைக் கொண்டுள்ளதாகப் பெரும்பாலான உளவியலாளர்கள் நம்புகின்றனர். ஆனால் அந்த மனநல ஆலோசகர் தன்னுடைய நோயாளியின் கள்ள உறவைப் பற்றி என்ன நினைத்தாலும் சரி, ஃபிராய்டும் யுங்கும் டிஎஸ்எம்மும் கள்ள உறவுகளைப் பற்றிப் பொதுவாக என்ன நினைத்தாலும் சரி, அந்த ஆலோசகர் தன்னுடைய சொந்தக் கண்ணோட்டங்களைத் தன்னுடைய நோயாளியின்மீது திணிக்கக்கூடாது. மாறாக, அவளுடைய இதயத்தின் ரகசிய அறைகளில் இருக்கின்ற விஷயங்களை அவள் ஆய்வு செய்வதற்கு அவர் அவளுக்கு உதவ வேண்டும். அங்கு மட்டுமே தன்னுடைய கேள்விகளுக்கான விடைகளை அவளால் கண்டுபிடிக்க முடியும். இடைக்காலப் பாதிரியார்களுக்குக் கடவுளுடன் பேசுவதற்கு ஒரு நேரடித் தொடர்பு இருந்தது, இதனால் நல்லவற்றையும் தீயவற்றையும் அவர்களால் வேறுபடுத்திப் பார்க்க முடிந்தது; ஆனால் நவீன ஆலோசகர்கள் நாம் நம்முடைய சொந்த உணர்வுகளுடன் தொடர்பு கொள்ள நமக்கு உதவுகின்றனர்.

திருமணம் என்ற அமைப்பு மாறிக் கொண்டிருப்பதற்கான காரணத்தை இது ஓரளவுக்கு விளக்குகிறது. இடைக்காலத்தில், திருமணம் என்பது கடவுளால் விதிக்கப்பட்ட ஒரு புனிதமான

சடங்காகக் கருதப்பட்டது. ஒரு தந்தை தன் விருப்பம்போலத் தன் குழந்தைகளுக்குத் திருமணம் செய்து வைப்பதற்கான அதிகாரத்தைக் கடவுள் அவருக்குக் கொடுத்திருந்தார். இதனால், திருமணத்திற்கு வெளியேயான கள்ள உறவு என்பது கடவுளின் அதிகாரத்திற்கும் பெற்றோரின் அதிகாரத்திற்கும் எதிரான ஒரு வெட்கக்கேடான எதிர்ப்பாகப் பார்க்கப்பட்டது. சம்பந்தப்பட்ட நபர்கள் இருவரும் அந்த உறவைப் பற்றி என்ன நினைத்தாலும் சரி, எவ்வாறு உணர்ந்தாலும் சரி, அது ஒரு மாபெரும் பாவமாகக் கருதப்பட்டது. இன்று மக்கள் அன்புக்காகத் திருமணம் செய்து கொள்ளுகின்றனர். அவர்களுடைய தனிப்பட்ட உணர்வுகள்தான் இந்தப் பிணைப்பிற்கு மதிப்பைக் கொடுக்கின்றன. எனவே, எந்த உணர்வுகள் உங்களை ஓர் ஆடவனை நோக்கி ஈர்த்தனவோ, அதே உணர்வுகள் இப்போது இன்னோர் ஆடவனை நோக்கி உங்களைக் கவர்ந்திழுத்தால், அதில் என்ன தவறு இருக்கிறது? இருபதாண்டுகாலமாக நீங்கள் எந்த வாழ்க்கைத்துணைவருடன் குடும்பம் நடத்தி வந்திருக்கிறீர்களோ அவர் மூலமாக உங்களுடைய உணர்ச்சிரீதியான மற்றும் பாலியல்ரீதியான விருப்பங்கள் நிறைவேறாமல் போகும்போது, திருமணத்திற்கு வெளியே ஓர் உறவு உங்களுக்கு அவற்றுக்கான ஒரு வடிகாலைக் கொடுக்கிறது என்றால், உங்களுடைய புதிய காதலர் அன்பும் காதலும் கொண்டவராகவும், உங்கள் தேவைகள் குறித்துப் புரிந்துணர்வு கொண்டவராகவும் இருந்தால், அந்த உறவை நீங்கள் ஏன் மகிழ்ச்சியாக அனுபவிக்கக்கூடாது?

இங்கு நீங்கள் இப்படிக் கூறக்கூடும்: "அந்த விவகாரத்தில் சம்பந்தப்பட்டுள்ள மற்ற இரண்டு பேருடைய உணர்வுகளையும் நம்மால் புறக்கணிக்க முடியாதே? அப்பெண்ணும் அவளுடைய புதிய காதலனும் ஒருவரோடு ஒருவர் மகிழ்ச்சியாக இருக்கக்கூடும், ஆனால் அவர்களுடைய வாழ்க்கைத்துணைவர்கள் அவர்களுடைய கள்ள உறவைக் கண்டுபிடித்தால், சிறிது காலம் எல்லோருமே மனத்தளவில் மிகவும் துன்புறுவர். இது விவாகரத்துக்கு வழி வகுத்தால், அவர்களுடைய குழந்தைகள் அந்த உணர்ச்சிரீதியான தழும்புகளைப் பலப்பல ஆண்டுகள் சுமந்து திரியக்கூடும். அந்தக் கள்ள உறவு ஒருபோதும் கண்டுபிடிக்கப்படாவிட்டாலும்கூட, அதை மறைப்பது ஏகப்பட்ட மன இறுக்கத்தை உருவாக்கி, தனிமையுணர்வையும் கோபத்தையும் ஏற்படுத்தக்கூடும்."

மனிதவாத அறநெறிகள் குறித்த மிக சுவாரசியமான விவாதங்கள், மனித உணர்வுகளுக்கு இடையே மோதல்கள் நிகழுகின்ற, திருமணத்திற்கு வெளியேயான கள்ள உறவு போன்ற சூழ்நிலைகளைப்

பற்றியவையே. குறிப்பிட்ட ஒரு செயல், ஒருவரை நல்லவிதமாக உணரச் செய்வதும் இன்னொருவருக்கு வருத்தத்தை ஏற்படுத்துவதும் ஏன்? இவ்விரு உணர்வுகளையும் நாம் எப்படி சீர்தூக்கிப் பார்ப்பது? இவ்விரு காதலர்களுடைய நல்ல உணர்வுகள், அவர்களுடைய வாழ்க்கைத் துணைவர்கள் மற்றும் குழந்தைகளிடம் தலைதூக்கியுள்ள மோசமான உணர்வுகளைவிட அதிக வலிமையானவையா?

குறிப்பிட்ட இந்தக் கேள்வியைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்பது ஒரு பொருட்டல்ல. இரண்டு தரப்புகளிலிருந்தும் வரக்கூடிய வாதங்களைப் புரிந்து கொள்ளுவதுதான் அதிக முக்கியமானது. திருமணத்திற்கு வெளியே கள்ள உறவு வைத்துக் கொள்ளுவதைப் பற்றி நவீன மக்கள் வெவ்வேறு கருத்துக்களைக் கொண்டுள்ளனர். ஆனால் அவர்களுடைய நிலைப்பாடு எதுவாக இருந்தாலும், மனித உணர்வுகளின் பெயரில்தான் அவர்கள் தங்கள் கருத்துக்களை நியாயப்படுத்துகின்றனரே அன்றி, புனித மறைநூல்கள் மற்றும் தெய்விகக் கட்டளைகளின் பெயரில் அல்ல. யாருக்கேனும் மோசமான உணர்வை ஏற்படுத்துகின்ற விஷயங்கள் மட்டுமே மோசமானவை என்று மனிதவாதம் நமக்குக் கற்றுக் கொடுத்துள்ளது. கொலை ஒரு தவறான செயல் என்பதற்குக் காரணம் 'நீங்கள் யாரையும் கொலை செய்யக்கூடாது' என்று கடவுள் எப்போதோ கூறினார் என்பது அல்ல. மாறாக, கொலைக்கு பலியாகின்ற நபருக்கும், அவருடைய குடும்பத்தினருக்கும், அவருடைய நண்பர்களுக்கும், அவருக்குப் பரிச்சயமானவர்களுக்கும் அது கொடூரமான துயரத்தை விளைவிக்கிறது என்பதால் கொலை ஒரு தவறான காரியமாகிறது. திருட்டு ஒரு தவறான செயல் என்பதற்குக் காரணம் 'நீங்கள் திருடக்கூடாது' என்று ஏதோ ஒரு பண்டைய உரை கூறியுள்ளது என்பது அல்ல. மாறாக, நீங்கள் உங்கள் சொத்தை இழக்கும்போது, நீங்கள் அது குறித்து மோசமாக உணருகிறீர்கள் என்பதால் திருட்டு ஒரு தவறான காரியமாகிறது. ஒரு செயல் இன்னொருவரிடம் எந்த வருத்த உணர்வையும் ஏற்படுத்தவில்லை என்றால், அச்செயலில் எந்தத் தவறும் இருக்க முடியாது. அதே பண்டைய உரை, மனிதர்கள் மற்றும் விலங்குகளின் உருவச் சிலைகளை நாம் உருவாக்கக்கூடாது என்று கடவுள் கட்டளையிட்டிருப்பதாகக் கூறுவதாக வைத்துக் கொள்ளுவோம். ஆனால் அப்படிப்பட்டச் சிலைகளை வடிப்பது எனக்குப் பிடித்திருந்து, அவ்வேலையின் மூலமாக நான் யாருக்கும் தீங்கு விளைவிக்கவில்லை என்றால், பிறகு நான் அச்சிலைகளை உருவாக்குவதில் என்ன தவறு இருந்துவிட முடியும்?

இதே தருக்கவாதம், ஓரினச்சேர்க்கை பற்றிய தற்போதைய விவாதங்கள்மீது ஆதிக்கம் செலுத்துகிறது. இரண்டு ஆண்கள் ஒருவரோடு ஒருவர் உறவு கொள்ளுவதை விரும்பியிருந்து, அவர்களுடைய அச்செயல் வேறு யாருக்கும் தீங்கு விளைவிக்கவில்லை என்றால், அச்செயல் ஏன் தவறானதாகக் கருதப்பட வேண்டும்? அது சட்டத்திற்குப் புறம்பானது என்று நாம் ஏன் கூற வேண்டும்? அது அவ்விரு ஆண்களுக்கு இடையேயான ஒரு தனிப்பட்ட விவகாரமாகும். அவர்கள் இருவரும் தங்களுடைய சொந்த உணர்வுகளின் அடிப்படையில் அது குறித்துத் தீர்மானிப்பதற்கான சுதந்திரம் அவர்களுக்கு இருக்கிறது. இடைக்காலத்தில், தாங்கள் ஒருவரையொருவர் நேசிப்பதாகவும், தாங்கள் இதுபோல ஒருபோதும் மகிழ்ச்சியாக இருந்ததில்லை என்றும் இரண்டு ஆண்கள் ஒரு பாதிரியாரிடம் கூறினால், அவர்களுடைய மகிழ்ச்சியுணர்வு அந்தப் பாதிரியாரின் குற்றத் தீர்ப்பை மாற்றியிருக்காது. அந்த ஆண்கள் இருவரும் தங்களுடைய உறவு குறித்துக் குற்றவுணர்வு கொள்ளாமல் இருந்தது அவர்களுடைய சூழ்நிலையை மேலும் அதிக மோசமானதாக ஆக்கியிருக்கும். ஆனால் இன்று, இதற்கு நேரெதிராக, தாங்கள் ஒருவரையொருவர் நேசிப்பதாக இரண்டு ஆண்கள் கூறினால், "நீங்கள் அது குறித்து மகிழ்ச்சியை உணர்ந்தால், தாராளமாகச் செய்யுங்கள்! எந்தப் பாதிரியாரும் உங்கள் மனத்தைக் குழப்ப அனுமதிக்காதீர்கள். உங்களுடைய இதயத்தைப் பின்தொடர்ந்து செல்லுங்கள். உங்களுக்கு எது நல்லது என்று உங்களுக்குத் தெரியும்," என்று அவர்களிடம் கூறப்படும்.

இன்று பொதுமக்களுடைய அபிப்பிராயத்தின்மீது தாக்கம் ஏற்படுத்துவதற்கு மத வெறியர்கள்கூட இந்த மனிதவாதப் பிரசங்கத்தைப் பயன்படுத்துகின்றனர் என்பது சுவாரசியமான விஷயம். எடுத்துக்காட்டாக, இஸ்ரேல் நாட்டு 'எல்ஜிபிடி' சமூகத்தினர், கடந்த பத்து ஆண்டுகளாக ஒவ்வோர் ஆண்டும் ஜெரூசலம் நகர வீதிகளில் வானவில் பேரணி ஒன்றை நடத்தி வந்துள்ளனர். சண்டைகளும் சர்ச்சைகளும் நிரம்பிய இந்த நகரத்தில் இது ஒரு தனித்துவமான நல்லிணக்க நாளாகும். ஏனெனில், இந்த ஒரு தருணத்தில்தான் சமயப் பற்றுக் கொண்ட யூதர்களும் இஸ்லாமியர்களும் கிறித்தவர்களும் தங்களுக்கிடையே திடீரென்று ஒரு பொதுவான காரணத்தைக் கண்டறிகின்றனர் - வானவில் பேரணிக்கு எதிராக அவர்கள் எல்லோரும் இணக்கத்துடன் கோபத்தில் குமுறுகின்றனர். அவர்கள் பயன்படுத்துகின்ற வாதம்தான் உண்மையிலேயே சுவாரசியமான விஷயமாகும். "ஓரினச்சேர்க்கைக்குக் கடவுள் தடை விதித்துள்ளதால்

இந்தப் பாவிகள் இந்த வானவில் பேரணியை நடத்தக்கூடாது," என்று அவர்கள் கூறுவதில்லை. மாறாக, அந்த பேரணி நிகழ்வைப் பதிவு செய்வதற்காக அங்கு கூடியிருக்கும் ஊடகங்களுடைய மைக்ரோபோன்கள் மூலமாகவும் தொலைக்காட்சிக் கேமராக்கள் வாயிலாகவும் அவர்கள் இவ்வாறு கூறுகின்றனர்: "புனித நகரமான ஜெரூசலம் வழியாக வானவில் பேரணி ஒன்று கடந்து செல்லுவதைப் பார்ப்பது எங்கள் உணர்வுகளைக் காயப்படுத்துகிறது. நாங்கள் அவர்களுடைய உணர்வுகளை மதிக்க வேண்டும் என்று அச்சமூகத்தினர் விரும்புவதைப்போல, அவர்கள் எங்களுடைய உணர்வுகளை மதிக்க வேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம்."

'சார்லி ஹெப்டோ' என்ற பிரெஞ்சுப் பத்திரிகை, தீர்க்கதரிசியான முகமது நபிகளின் கேலிச்சித்திர உருவங்களைப் பிரசுரித்திருந்ததால், இஸ்லாமிய வெறியர்கள் 2015ம் ஆண்டு ஜனவரி 7ம் நாளன்று அதன் ஏராளமான உறுப்பினர்களைப் படுகொலை செய்தனர். அதைத் தொடர்ந்து வந்த நாட்களில், பல இஸ்லாமிய அமைப்புகள் அந்தத் தாக்குதலுக்குக் கண்டனம் தெரிவித்தன. ஆனாலும் சில அமைப்புகளால், 'ஆனால்' என்ற ஒரு ஷரத்தைச் சேர்த்துக் கொள்ளுவதைத் தவிர்க்க முடியவில்லை. எடுத்துக்காட்டாக, எகிப்தியப் பத்திரிகையாளர்கள் சங்கம், தீவிரவாதிகளின் வன்முறைத் தாக்குதலைத் தீவிரமாகக் கண்டித்த அதே நேரத்தில், 'உலகம் நெடுகிலும் உள்ள கோடிக்கணக்கான இஸ்லாமியர்களின் உணர்வுகளைக் காயப்படுத்தியதற்காக' அந்த பிரெஞ்சுப் பத்திரிகைக்கும் கண்டனம் தெரிவித்தது. ஆனால், கடவுளின் விருப்பத்திற்குக் கீழ்ப்படியாததற்காக அச்சங்கம் அப்பத்திரிகையைக் குறை கூறவில்லை என்பதை நீங்கள் கவனிக்க வேண்டும். அதைத்தான் நாம் முன்னேற்றம் என்று அழைக்கிறோம்.

***

நம்முடைய உணர்வுகள் நம்முடைய தனிப்பட்ட வாழ்க்கைக்கு மட்டும் அர்த்தத்தைக் கொடுப்பதில்லை, மாறாக, சமூகரீதியான மற்றும் அரசியல்ரீதியான செயல்முறைகளுக்கும் அர்த்தத்தைக் கொடுக்கின்றன. நாட்டை யார் ஆள வேண்டும், எத்தகைய வெளியுறவுக் கொள்கைகள் கடைபிடிக்கப்பட வேண்டும், என்னென்னப் பொருளாதார நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டும் போன்றவற்றை நாம் தெரிந்து கொள்ள விரும்பும்போது, அவற்றுக்கான விடைகளை மறைநூல்களில் நாம் தேடுவதில்லை. அது குறித்துக் கத்தோலிக்கப் போப்பின் கட்டளைகளுக்கோ அல்லது நோபல் பரிசு பெற்றோருக்கான அமைப்பின் கட்டளைகளுக்கோ நாம்

கீழ்ப்படிவதில்லை. மாறாக, பெரும்பான்மை நாடுகளில், நாம் ஒரு ஜனநாயகமான முறையில் தேர்தல்களை நடத்துகிறோம், கையிலுள்ள விவகாரம் குறித்து மக்கள் என்ன நினைக்கின்றனர் என்று நாம் அவர்களிடம் கேட்கிறோம். எது சிறந்தது என்பதை வாக்காளர்கள் அறிவர் என்றும், தனிநபர்களுடைய சுதந்திரமான தேர்ந்தெடுப்புகள்தான் உச்சகட்ட அரசியல் அதிகாரம் என்றும் நாம் நம்புகிறோம்.

ஆனால், எதைத் தேர்ந்தெடுப்பது என்பது ஒரு வாக்காளருக்கு எப்படித் தெரியும்? கோட்பாட்டுரீதியாகப் பார்க்கும்போது, அவர் தன்னுடைய உள்ளார்ந்த உணர்வுகளோடு கலந்தாய்வு செய்து, அவற்றின் வழிகாட்டுதலின்படி நடக்க வேண்டும். ஆனால் அது எப்போதும் அவ்வளவு சுலபமானதாக இருப்பதில்லை. நான் என்னுடைய உணர்வுகளோடு தொடர்பு கொள்ள விரும்பினால், வெற்றுப் பிரச்சார முழக்கங்களையும், ஈவு இரக்கமற்றக் கடுமையான அரசியல்வாதிகளின் முடிவற்றப் பொய்களையும், அரசியல் கட்சிகளின் சார்பில் நிகழ்வுகளை அவர்களுக்குச் சாதகமாகத் திரித்துக் கூறுகின்ற செய்தித் தொடர்பாளர்கள் உருவாக்குகின்ற, என்னுடைய கவனத்தைச் சிதறடிக்கின்ற இரைச்சலையும், இந்த அரசியல்வாதிகளால் நியமிக்கப்படுகின்ற நிபுணர்களின் அபிப்பிராயங்களையும் நான் வடிகட்டித் தூக்கியெறிந்தாக வேண்டும். இந்தக் களேபரங்கள் அனைத்தையும் உதாசீனப்படுத்திவிட்டு, என்னுடைய உட்குரல்மீது மட்டுமே நான் கவனம் செலுத்த வேண்டும். அப்போது என்னுடைய உட்குரல், 'கேமரனுக்கு ஓட்டுப் போடு,' 'கிளிண்டனுக்கு ஓட்டுப் போடு,' என்றோ, அல்லது வேறு எவருக்கேனும் ஓட்டுப் போடும்படியோ என் காதில் கிசுகிசுக்கிறது. வாக்குச் சீட்டில் நான் அந்நபருக்கு என் வாக்கை அளிக்கிறேன். நாட்டை யார் ஆள வேண்டும் என்பதை இப்படித்தான் நாம் அறிந்து கொள்ளுகிறோம்.

இடைக்காலத்தில் இது முட்டாள்தனத்தின் உச்சமாகக் கருதப்பட்டிருக்கும். அறியாமைமிக்கப் பொதுமக்களுடைய கணநேர உணர்வுகள், முக்கியமான அரசியல் தீர்மானங்களுக்கான ஒரு வலிமையான அடித்தளமாக இருக்க முடியாது. இங்கிலாந்தில் நிகழ்ந்த 'ரோசாப்பூப் போர்களால்' இங்கிலாந்து சின்னாபின்னமாகியபோது, தேசிய அளவில் ஒரு வாக்கெடுப்பு நடத்தி அச்சண்டைகளை முடிவுக்குக் கொண்டுவருவதைப் பற்றி யாரும் நினைக்கவில்லை. அது நடத்தப்பட்டிருந்தால், இங்கிலாந்தில் வாழ்ந்த ஒவ்வொரு குடிமகனும் யார்க் அணியினருக்கோ அல்லது லேன்கேஸ்டர் அணியினருக்கோ ஓட்டுப் போட்டிருந்திருப்பான். அதேபோல, போப் இரண்டாம் அர்பன்

1095ல் முதலாம் சிலுவைப் போரைத் துவக்கி வைத்தபோது, அது மக்களின் விருப்பம் என்று அவர் கூறவில்லை. அது கடவுளின் விருப்பம் என்றே அவர் முழங்கினார். அரசியல் அதிகாரம் சொர்க்கத்திலிருந்து வந்ததே அன்றி, நிலையற்ற வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருந்த மனிதர்களின் இதயங்களிலிருந்தும் மனங்களிலிருந்தும் அது மேலெழவில்லை.



படம் **27:** பிராங்க் பேரரரசைத் தோற்றுவித்த அரசர் குளோவிஸின் திருமுழுக்கிற்கு**,** ஒரு புறாவின் வடிவில் இருக்கும் புனித ஆவி**,** ஒரு குடுவை நிறையப் புனித எண்ணெயை வழங்குகிறது**.** பிரான்ஸில் நிலவும் ஒரு கட்டுக்கதையின்படி**,** அந்தத் திருமுழுக்கிற்குப் பிறகு அக்குடுவை நிரந்தரமாக ரைம்ஸ் தேவாலயத்தில் வைக்கப்பட்டது**.** அரசர் குளோவிஸுக்குப் பிறகு வந்த பிரெஞ்சு அரசர்கள் ஒவ்வொருவரும் பதவி ஏற்றபோது இந்தப் புனித எண்ணெய் அவர்கள்மீது பூசப்பட்டது**.** ஒவ்வொரு பதவிப் பிரமாணமும் ஓர் அதிசயத்தை உள்ளடக்கியிருந்தது**.** ஏனெனில்**,** அந்தக் குடுவையில் ஒவ்வொரு முறையும் தானாகவே அந்தப் புனித எண்ணெய் நிரம்பியது**.** கடவுளே அரசரைத் தேர்ந்தெடுத்து அவருக்குத் தன்னுடைய ஆசீர்வாதத்தை வழங்கியதை இது உணர்த்தியது**. 9**ம் லூயியிலோ**, 14**ம் லூயியோ அல்லது **16**ம் லூயியோ அரசராக இருக்கக்கூடாது என்று கடவுள் விரும்பியிருந்தால்**,** அந்தக் குடுவையில் மீண்டும் எண்ணெய் நிரம்பியிருக்காது**.**

நெறிமுறைகள் மற்றும் அரசியலைப் பொருத்தவரை எது உண்மையோ, அழகியலைப் பொருத்தவரையும் அது உண்மைதான். இடைக்காலங்களில் கலைகள் பாரபட்சமற்ற அளவுகோல்களைக்

கொண்டு மதிப்பிடப்பட்டன. அழகியல் தரங்கள் மனிதர்களுடைய விருப்பங்களைப் பிரதிபலிக்கவில்லை. மாறாக, மனிதனின் விருப்பங்கள் மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட ஒன்றின் கட்டளைகளுக்குக் கட்டுப்பட்டு இருக்க வேண்டியிருந்தது. கலை என்பது மனித உணர்வுகளால் அன்றி, மனிதனுடைய புலன்களுக்கு அப்பாற்பட்ட ஆற்றல்களால் உத்வேகம் பெற்றதாக மக்கள் நம்பிய ஒரு காலகட்டத்தில் இது அர்த்தம் வாய்ந்ததாக இருந்தது. ஓவியர்கள், கவிஞர்கள், இசையமைப்பாளர்கள், கட்டடக் கலை வல்லுநர்கள் ஆகியோருடைய கைகளை தேவதைகளும் புனித ஆவியும் இயக்கியதாக அவர்கள் நம்பினர். ஓர் இசையமைப்பாளர் ஒரு பக்திப் பாடலை இசையமைத்தபோது, பல சமயங்களில், அதற்கான முழுப் புகழும் அவருக்குக் கொடுக்கப்படவில்லை. அந்தப் பாடலை எழுதிய பேனா எந்தக் காரணத்திற்காகப் புகழப்படாமல் போனதோ அதே காரணத்தால்தான் அந்த இசையமைப்பாளரும் அங்கீகரிக்கப்படவில்லை. பேனாவைப் பிடித்து இயக்கியது மனித விரல்கள்; அந்த விரல்களைப் பிடித்து இயக்கியது கடவுள் என்பது அன்றைய மக்களுடைய எண்ணமாக இருந்தது.



படம் **28:** போப் கிரெகரி இறைபாடல்களை இயற்றுகிறார். அவற்றுக்கு அவருடைய பெயரே கொடுக்கப்பட்டுள்ளது. புனித ஆவி தனக்குப் பிடித்தமான புறா வடிவில் கிரெகரியின் வலது தோளின்மீது அமர்ந்து, அந்தப் பாடல்களை அவருடைய காதில் கிசுகிசுக்கிறது. அப்பாடல்களை உண்மையாக இயற்றியது அந்தப் புனித ஆவிதான். கிரெகரி வெறுமனே ஓர் ஊடகம்தான். கடவுள்தான் கலைக்கும் அழகிற்குமான உச்சகட்ட மூலாதாரம்.

இடைக்கால அறிஞர்கள் ஒரு பழமையான கிரேக்கக் கோட்பாட்டை உடும்புபோலப் பிடித்துக் கொண்டிருந்தனர். அக்கோட்பாட்டின்படி, வானம் நெடுகிலும் தெரிகின்ற விண்மீன்களின் அசைவுகள் இந்த ஒட்டுமொத்தப் பிரபஞ்சத்தையும் ஊடுருவுகின்ற தெய்விக இசையை உருவாக்குகின்றன. மனிதர்களுடைய உடல் மற்றும் ஆன்மாவின் உள்ளார்ந்த அசைவுகள் விண்மீன்களால் உருவாக்கப்படுகின்ற தெய்விக இசையுடன் ஒத்திசைவாக இருக்கும்போது அவர்கள்

உடல்ரீதியான ஆரோக்கியத்தையும் உளரீதியான ஆரோக்கியத்தையும் அனுபவிக்கின்றனர். எனவே, மனித இசையானது பிரபஞ்சத்தின் தெய்விக மெல்லிசையை எதிரொலிக்க வேண்டுமே அன்றி, ரத்தத்துடனும் சதையுடனும்கூடிய இசையமைப்பாளர்களின் யோசனைகளையும் போக்குகளையும் பிரதிபலிக்கக்கூடாது. மிக அழகான இறைவாழ்த்துக்கள், பாடல்கள், ராகங்கள் ஆகியவற்றுக்குக் காரணம் தெய்விகத் தூண்டுதலே அன்றி மனிதக் கலைஞர்களின் மேதமை அல்ல என்பது அக்கோட்பாட்டின் சாரமாகும்.

இப்படிப்பட்டக் கண்ணோட்டங்கள் இனியும் நடைமுறையில் இல்லை. கலைஞர்களின் படைப்புகளுக்கும் அழகியல் மதிப்புக்குமான ஒரே மூலாதாரம் மனித உணர்வுகள்தாம் என்று மனிதவாதிகள் இன்று நம்புகின்றனர். நம்முடைய உட்குரல்தான் இசையை உருவாக்கி, அதைச் சீர்தூக்கிப் பார்க்கிறது. இந்த உட்குரல், விண்மீன்களின் எந்தவொரு தாளத்தையும், தேவதைகளின் எந்தவொரு கட்டளையையும் பின்பற்ற வேண்டியதில்லை. ஏனெனில், விண்மீன்களுக்குக் குரல் இல்லை, தேவதைகள் நம்முடைய சொந்தக் கற்பனையில் மட்டுமே இருக்கின்றன. நவீனக் கலைஞர்கள் கடவுளுடன் தங்களைத் தொடர்புபடுத்திக் கொள்ளுவதை விடுத்து, தங்களுடனும் தங்கள் உணர்வுகளுடனும் தங்களைப் பிணைத்துக் கொள்ள முயற்சிக்கின்றனர். நாம் கலையை மதிப்பீடு செய்யும்போது, பாரபட்சமற்ற எந்தவோர் அளவுகோலிலும் இனியும் நம்பிக்கை கொள்ளாததில் எந்த ஆச்சரியமும் இல்லை. நாம் அதற்கு பதிலாக, நம்முடைய அகவயமான உணர்வுகளை நோக்கிச் செல்லுகிறோம். அறநெறிகளில், ‘ஒரு விஷயம் உங்களிடம் நல்லவிதமான உணர்வை ஏற்படுத்தினால் அதைச் செய்யுங்கள்,’ என்பதுதான் மனிதவாததின் முழக்கமாக இருக்கிறது. அரசியலில், ‘எது சிறந்தது என்பதை வாக்காளர்கள் அறிவர்’ என்று மனிதவாதம் நமக்கு அறிவுறுத்துகிறது. அழகியலில், ‘அழகு என்பது பார்ப்பவருடைய கண்களில் இருக்கிறது,’ என்று மனிதவாதம் கூறுகிறது.

1917ம் ஆண்டில், மார்செல் டுசாம்ப் என்ற சிற்பி, ஆண்களின் கழிவறைகளில் இடம்பெறுகின்ற ஒரு சாதாரண சிறுநீர்த் தொட்டியை வாங்கி, அதை ஒரு கலைப் படைப்பு என்று கூறி, அதற்கு ‘ஃபவுன்டன்’ என்று பெயரிட்டு, அதில் கையெழுத்திட்டு, அதை ஓர் அருங்காட்சியகத்தில் வைத்துவிட்டார். இடைக்கால மக்கள் அதைப் பற்றி விவாதிப்பதில் அக்கறை காட்டியிருக்க மாட்டார்கள். அபத்தமான இவ்விஷயத்தைப் பற்றி விவாதிப்பதில் ஏன் மூச்சைத் தொலைக்க வேண்டும்? ஆனால், நவீன மனிதவாத உலகத்தில், மார்செலின்

படைப்பு, கலையைப் பொருத்தவரை மிக முக்கியமானதொரு மைல்கல் என்று கருதப்படுகிறது. உலகம் நெடுகிலும் ஏராளமான வகுப்பறைகளில் முதலாம் ஆண்டு கலை பயிலும் மாணவர்களிடம் மார்செலின் 'ஃபவுன்டன்' புகைப்படம் காட்டப்படுகிறது. அதைப் பற்றி விவாதிக்கும்படி அவர்களுடைய ஆசிரியரிடமிருந்து ஒரு சமிக்கை வந்தவுடன், அந்த வகுப்பறைகளில் காரசாரமான விவாதங்கள் பறக்கத் தொடங்குகின்றன. 'இது கலை! இல்லையில்லை, இது கலை அல்ல! ஆமாம், இது கலைதான்! நிச்சயமாக இல்லை!' மாணவர்கள் இவ்வாறு சிறிது நேரம் விவாதிக்கும்படி விட்டுவிட்டு, அவர்களுடைய ஆசிரியர் அவர்களிடம், "கலை என்பது துல்லியமாக எது? ஒரு படைப்பு உண்மையிலேயே ஒரு கலைப் படைப்பா இல்லையா என்பதை எப்படித் தீர்மானிப்பது?" என்று கேட்டு, அவர்களுடைய கவனத்தை மீண்டும் விவாதத்தின் பக்கமாகத் திருப்புகிறார். ஒருசில நிமிடங்கள் மாணவர்கள் இப்படி முன்னும் பின்னும் போய் வந்த பிறகு, அவர் தன் வகுப்பைச் சரியான திசையில் வழிநடத்துகிறார்: "எது கலை என்று மக்கள் நினைக்கிறார்களோ, அதுதான் கலை. அழகு என்பது பார்ப்பவருடைய கண்களில் இருக்கிறது." ஒரு சிறுநீர்த் தொட்டி ஓர் அழகான கலைப் படைப்பு என்று மக்கள் நம்பினால், அது ஒரு கலைப் படைப்புதான். மக்கள் நினைப்பது தவறு என்று கூறுவதற்கு யாருக்கு என்ன அதிகாரம் இருக்கிறது? இன்று மார்செலின் படைப்பின் நகல்கள் உலகிலுள்ள மிக முக்கியமான அருங்காட்சியகங்களில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. சான்பிரான்சிஸ்கோ நவீனக் கலை அருங்காட்சியகம், கனடா தேசியக் காட்சியகம், லண்டனிலுள்ள டேட் காட்சியகம், பாரீஸில் உள்ள பாம்ப்பிடூ மையம் போன்றவை அவற்றில் சில.

இப்படிப்பட்ட மனிதவாத அணுகுமுறைகள் பொருளாதாரத் துறையின்மீது ஓர் ஆழமான தாக்கம் ஏற்படுத்தியுள்ளன. இடைக் காலங்களில், சங்கங்கள்தான் உற்பத்திச் செயல்முறையைக் கட்டுப்படுத்தின. அங்கு தனிப்பட்டக் கைவினைக் கலைஞர்கள் மற்றும் வாடிக்கையாளர்களின் சுயமுயற்சிக்கும் விருப்பங்களுக்கும் அவ்வளவாக இடம் இருக்கவில்லை. எது ஒரு கச்சிதமான நாற்காலி என்பதைத் தச்சுத் தொழிலாளர்கள் சங்கம் தீர்மானித்தது, எது நல்ல ரொட்டி என்பதை பேக்கரிக்காரர்கள் சங்கம் வரையறுத்தது, எந்தப் பாடல்கள் உயர்தரமானவை, எவை குப்பைத்தொட்டியில் எறியப்பட வேண்டியவை என்பதை மைஸ்டர்சிங்கர் நிறுவனம் தீர்மானித்தது. இதற்கிடையே, இளவரசர்களும் நகர சபை உறுப்பினர்களும் சம்பளங்களையும் விலைவாசியையும் முறைப்படுத்தினர்.

அவ்வப்போது, தாங்கள் நிர்ணயித்த விலையில் குறிப்பிட்ட எண்ணிக்கையில் சில பொருட்களை வாங்குவதற்கு மக்களை அவர்கள் கட்டாயப்படுத்தினர். ஆனால் இன்று, அரசுக் கட்டுப்பாடற்ற நவீனச் சந்தையில் ஒரு புதிய உச்சகட்ட அதிகாரம் இச்சங்கங்களையும் நகர சபைகளையும் இளவரசர்களையும் தூக்கியெறிந்துள்ளது. தங்கள் விருப்பம்போலத் தேர்ந்தெடுப்பதற்கு மக்களுக்கு இருக்கின்ற சுதந்திரம்தான் அது!

டொயோட்டா நிறுவனம் ஒரு கச்சிதமான காரை உற்பத்தி செய்யத் தீர்மானித்திருப்பதாக வைத்துக் கொள்ளுவோம். அந்நிறுவனம் பல்வேறு துறைகளிலிருந்து சில வல்லுநர்களைத் தேர்ந்தெடுத்து ஒரு செயற்குழுவை அமைக்கிறது. பிறகு, தலைசிறந்த பொறியாளர்கள், வடிவமைப்பாளர்கள், திறமையான இயற்பியலாளர்கள், பொருளாதார வல்லுநர்கள் ஆகியோரை அது வேலைக்கு எடுத்துக் கொள்ளுகிறது. சமூகவியலாளர்கள் மற்றும் உளவியலாளர்களிடம்கூட அது கலந்து ஆலோசிக்கிறது. எதற்கும் இருக்கட்டும் என்பதற்காக, ஓரிரு நோபல் பரிசுகளைப் பெற்ற ஒருவரையும், ஆஸ்கார் பரிசு பெற்ற ஒரு நடிகையையும், உலகப் புகழ்பெற்றக் கலைஞர்கள் சிலரையும் அது சேர்த்துக் கொள்ளுகிறது. ஐந்தாண்டுகால ஆராய்ச்சி மற்றும் உருவாக்கத்திற்குப் பிறகு, அந்நிறுவனம் ஒரு கச்சிதமான காரைச் சந்தையில் அறிமுகப்படுத்துகிறது. லட்சக்கணக்கான கார்கள் தயாரிக்கப்பட்டு, உலகம் நெடுகிலும் உள்ள கார் விற்பனை நிலையங்களுக்கு அவை அனுப்பி வைக்கப்படுகின்றன. ஆனாலும் யாரும் அந்தக் கார்களை வாங்கவில்லை. அப்படியானால், இங்கு வாடிக்கையாளர்கள் ஏதோ தவறு செய்து கொண்டிருக்கிறார்கள் என்றும், தங்களுக்கு எது நல்லது என்பது அவர்களுக்குத் தெரியவில்லை என்றும் அர்த்தமா? இல்லை. அரசுக் கட்டுப்பாடற்ற ஒரு சந்தையைப் பொருத்தவரை, வாடிக்கையாளர்கள் என்ன கூறுகின்றனரோ அதுதான் சரி. வாடிக்கையாளர்களுக்கு அந்தக் கார் வேண்டாம் என்றால், அந்தக் கார் சரியில்லை என்று பொருள். இது ஓர் அற்புதமான கார் என்று அனைத்துக் கல்லூரிப் பேராசிரியர்களும் அனைத்துப் பாதிரியார்களும் முல்லாக்களும் மேடைகளில் நின்று காட்டுக்கூச்சல் போட்டாலும்கூட, அது ஒரு பொருட்டல்ல. வாடிக்கையாளர்கள் அந்தக் காரை நிராகரித்தால், அது ஒரு மோசமான கார்தான். அவர்களுடைய எண்ணம் தவறு என்று அவர்களிடம் கூறும் அதிகாரம் யாருக்கும் இல்லை. அவர்களுடைய விருப்பத்திற்கு எதிராக ஒரு குறிப்பிட்டக் காரை வாங்க அவர்களைக் கட்டாயப்படுத்துகின்ற ஓர் அரசாங்கத்தை எந்தக் கடவுளாலும் காப்பாற்ற முடியாது.

கார்களின் விஷயத்தில் எது உண்மையோ, பிற அனைத்துப் பொருட்களின் விஷயத்திலும் அதுவே உண்மையாக இருக்கிறது. எடுத்துக்காட்டாக, சுவீடன் நாட்டின் உப்சாலா பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் லயிஃப் ஆன்டர்சன் கூறுவதைக் கேளுங்கள். வேகமாக வளரக்கூடிய பன்றிகளையும், அதிகமாகப் பால் தரக்கூடிய பசுக்களையும், தம்முடைய எலும்புகள்மீது கூடுதல் இறைச்சியைக் கொண்ட கோழிகளையும் உருவாக்குவதற்காகப் பண்ணை விலங்குகளின் மரபணுக்களை மேம்படுத்துவதில் அவர் நிபுணத்துவம் பெற்றுள்ளார். ஹாரெட்ஸ் பத்திரிகைக்கு அவர் அளித்த ஒரு பேட்டியின்போது, மரபணுக்களுடன் இப்படி விளையாடுவது அந்த விலங்குகளுக்கு மிகுந்த துன்பத்தை விளைவிக்குமல்லவா என்று அப்பத்திரிகையின் நிருபர்களில் ஒருவரான நயோமி டரோம் அவரிடம் கேட்டார். இன்று, ஏற்கனவே 'மேம்படுத்தப்பட்டப்' பண்ணைப் பசுக்கள் நடக்கக்கூட முடியாத அளவுக்கு அவற்றின் பால்மடி மிகவும் கனமாக இருக்கிறது. 'மேம்படுத்தப்பட்டக்' கோழிகளால் எழுந்து நிற்கக்கூட முடிவதில்லை. இந்தக் குற்றச்சாட்டுகளுக்கு அப்பேராசிரியர் இவ்வாறு உறுதியாக பதிலளித்தார்: "எல்லாமே வாடிக்கையாளர்களையும், இறைச்சிக்கு அவர்கள் எவ்வளவு பணம் கொடுக்கத் தயாராக இருக்கின்றனர் என்ற கேள்வியையும் பொருத்ததுதான். நவீனக் கோழிகள் - அதாவது, மேம்படுத்தப்பட்டக் கோழிகள் - இல்லாவிட்டால், இன்று உலக அளவில் உட்கொள்ளப்படுகின்ற இறைச்சிக்கான தேவையை ஈடுகட்டுவது சாத்தியமில்லை. இருப்பதிலேயே மிகவும் விலை குறைந்த இறைச்சிதான் வேண்டும் என்று வாடிக்கையாளர்கள் எங்களிடம் கேட்டால், அதுதான் அவர்களுக்குக் கிடைக்கும். தங்களுக்கு விலை முக்கியமா அல்லது வேறு ஏதேனும் முக்கியமா என்பதை வாடிக்கையாளர்கள்தான் தீர்மானிக்க வேண்டும்."

பேராசிரியர் ஆன்டர்சன் குற்றவுணர்வற்ற மனசாட்சியோடு இரவில் தூங்கப் போகலாம். அவருடைய மேம்படுத்தப்பட்ட விலங்குப் பொருட்களை வாடிக்கையாளர்கள் வாங்கிக் கொண்டிருக்கின்றனர் என்ற உண்மை, அவர்களுடைய தேவைகளையும் விருப்பங்களையும் அவர் நிறைவேற்றிக் கொண்டிருக்கிறார் என்று அர்த்தமாகிறது. எனவே, அவர் சிறப்பாகச் செயல்பட்டுக் கொண்டிருப்பதாக நாம் எடுத்துக் கொள்ள வேண்டும். இதே வாதத்தின்படி பார்க்கும்போது, ஏதோ ஒரு பன்னாட்டு நிறுவனம், 'தீங்கிழைக்காதே' என்ற தன்னுடைய குறிக்கோளுக்கு இசைவாகத் தான் செயல்பட்டுக் கொண்டிருக்கிறோமா என்பதைத் தெரிந்து கொள்ள விரும்பினால், அது ஒரே ஒரு

விஷயத்தைத்தான் பார்க்க வேண்டும் - அதன் சம்பாத்தியம்! அந்நிறுவனம் எக்கச்சக்கப் பணம் சம்பாதித்துக் கொண்டிருந்தால், லட்சக்கணக்கான மக்கள் அதன் பொருட்களை விரும்புகிறார்கள் என்று அர்த்தம். அப்படியானால், அந்நிறுவனம் நல்லவற்றைச் செய்து கொண்டிருக்கின்ற ஓர் ஆற்றலாக விளங்குகிறது என்று அர்த்தம். யாரேனும் இக்கூற்றை மறுத்து, மக்கள் தவறான தேர்ந்தெடுப்புகளை மேற்கொண்டு கொண்டிருப்பதாகக் கூறினால், வாடிக்கையாளர்கள் எப்போதுமே சரியாகத்தான் தேர்ந்தெடுப்பர் என்றும், மனித உணர்வுகள்தாம் அனைத்து அர்த்தத்திற்கும் அதிகாரத்திற்குமான மூலாதாரம் என்றும் அந்நபருக்கு உடனடியாக நினைவுபடுத்தப்படும். லட்சக்கணக்கான மக்கள் அந்நிறுவனத்தின் பொருட்களை வாங்குவதை சுதந்திரமாகத் தேர்ந்தெடுத்தால், அவர்கள் தவறான தேர்ந்தெடுப்பை மேற்கொண்டிருக்கிறனர் என்று கூறுவதற்கு நீங்கள் யார்?

இறுதியாக, மனிதவாத யோசனைகளின் உதயம் கல்வி அமைப்புமுறைகளிலும் புரட்சிகரமான மாற்றங்களை ஏற்படுத்தியுள்ளது. இடைக்காலங்களில், அனைத்து அர்த்தத்திற்கும் அதிகாரத்திற்குமான மூலாதாரம் நிரந்தரமானதாக இருந்தது. எனவே, கீழ்ப்படிதல், மறைநூல் உரைகளை மனப்பாடம் செய்தல், பண்டைய பாரம்பரியங்களைக் கற்றல் ஆகியவற்றை மாணவர்களின் மனங்களில் பதிய வைப்பதன்மீதுதான் கல்வி ஒருமித்த கவனம் செலுத்தியது. ஆசிரியர்கள் மாணவர்களிடம் ஒரு கேள்வி கேட்பர். அக்கேள்விக்கு அரிஸ்டாட்டிலோ, சாலமன் அரசரோ, அல்லது புனிதர் தாமஸ் அக்கினாஸோ எப்படி பதிலளித்தனர் என்பதை அந்த மாணவர்கள் நினைகூர வேண்டியிருந்தது.




படம் **29:** மனிதவாத அரசியல்**:** எது சிறந்தது என்பதை வாக்காளர்கள் அறிவர்**.**




படம் **30:** மனிதவாதப் பொருளியல்**:** வாடிக்கையாளர்களின் கருத்துதான் எப்போதும் சரியானது**.**



படம் **31:** மனிதவாத அழகியல்**:** அழகு என்பது பார்ப்பவர்களின் கண்களில்தான் இருக்கிறது**. (**ஸ்காட்லாந்து தேசியக் கலைக்கூடத்தில் நவீனக் கலைக்கான ஒரு சிறப்புக் கண்காட்சியில் இடம்பெற்றுள்ள மார்சல் டுசாம்ப்பின் **‘**ஃபவுன்டன்**.’)**



படம் **32:** மனிதவாத நெறிமுறை**:** ஒன்று உங்களுக்கு நல்லவிதமான உணர்வைக் கொடுத்தால் **-** அதைச் செய்யுங்கள்**!**



படம் **33:** மனிதவாதக் கல்வி**:** சுயமாக சிந்தியுங்கள்**!**

இதற்கு நேர்மாறாக, மாணவர்கள் சுயமாக சிந்திக்க அவர்களுக்குக் கற்றுக் கொடுப்பதில் நவீன மனிதவாதக் கல்வி நம்பிக்கை கொண்டுள்ளது. அரசியல், கலை, பொருளாதாரம் ஆகியவற்றைப் பற்றி அரிஸ்டாட்டிலும் சாலமனும் அக்கினாஸும் என்ன நினைத்தனர் என்பதைத் தெரிந்து கொள்ளுவது நல்லதுதான். ஆனால், அர்த்தம் மற்றும் அதிகாரத்திற்கான உச்சகட்ட மூலாதாரம் நமக்குள்தான் இருக்கிறது என்பதால், இவ்விஷயங்கள் குறித்து நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்பதை நீங்கள் அறிந்திருக்க வேண்டியது அதிக முக்கியமாகும். மழலையர் பள்ளியிலோ, உயர்நிலைப் பள்ளியிலோ அல்லது கல்லூரியிலோ யாரேனும் ஓர் ஆசிரியரிடம் அல்லது ஒரு பேராசிரியரிடம், “நீங்கள் என்ன கற்றுக் கொடுக்க முயற்சித்துக்

கொண்டிருக்கிறீர்கள்?" என்று நீங்கள் கேட்டால், "குழந்தைகளுக்கு நான் வரலாற்றை அல்லது குவாண்டம் அறிவியலைக் கற்றுக் கொடுத்துக் கொண்டிருக்கிறேன். ஆனால், எல்லாவற்றுக்கும் மேலாக, தாங்கள் சுயமாக எப்படிச் சிந்திக்க வேண்டும் என்பதை நான் அவர்களுக்குக் கற்றுக் கொடுக்கிறேன்," என்று அவர் பதிலளிப்பார். இந்த அணுகுமுறை எல்லா நேரங்களிலும் வெற்றி பெறாமல் போகக்கூடும், ஆனால் மனிதவாதக் கல்வி அதைச் செய்யத்தான் முயற்சிக்கிறது.

***

அர்த்தம் மற்றும் அதிகாரத்திற்கான மூலாதாரம் வானத்திலிருந்து மனித உணர்வுகளுக்கு இடம்பெயர்ந்து வந்துவிட்டதால், ஒட்டுமொத்தப் பிரபஞ்சத்தின் இயல்பு மாறிவிட்டது. கடவுளரையும் தேவதைகளையும் பூதங்களையும் உள்ளடக்கிய புறவயமான பிரபஞ்சம் ஒரு வெற்றிடமாக ஆகிவிட்டது. ஆசைகளை உள்ளடக்கிய, முக்கியத்துவமற்றப் பகுதியான அகவயமான உலகம் ஆழமாகவும் அளவிடற்கரிய விதத்தில் செழுமையாகவும் ஆகிவிட்டது. உலகின் காடுகளிலும் பாலைவனங்களிலும் சுற்றித் திரிந்து கொண்டிருந்த தேவதைகளும் அரக்கர்களும் நம் சொந்த மனத்திற்குள் இருக்கிற உள்ளார்ந்த ஆற்றல்களாக மாற்றப்பட்டுவிட்டனர். மேகங்களுக்கு மேலேயும் எரிமலைகளுக்குக் கீழேயும் எங்கோ இருந்த சொர்க்கமும் நரகமும்கூட உண்மையான இடங்களாக இருந்ததிலிருந்து மாறி, நம்முடைய உள்ளார்ந்த மனநிலைகளாக ஆயின. நீங்கள் உங்கள் இதயத்திற்குள் கோப நெருப்பையும் வெறுப்பையும் தூண்டும் ஒவ்வொரு முறையும் நீங்கள் நரகத்தை அனுபவிக்கிறீர்கள். நீங்கள் உங்களுடைய எதிரிகளை மன்னிக்கும்போதும், உங்களுடைய தவறான செயல்கள் குறித்து வருந்தும்போதும், உங்கள் செல்வத்தை ஏழைகளோடு பகிர்ந்து கொள்ளும்போதும் நீங்கள் சொர்க்கத்தின் மகிழ்ச்சியை அனுபவிக்கிறீர்கள்.

கடவுள் இறந்துவிட்டதாக ஜெர்மானிய தத்துவவியலாளரான நீட்சே கூறியபோது, இந்த அர்த்தத்தில்தான் அவர் அதைக் கூறினார். குறைந்தபட்சம் மேற்கத்திய உலகைப் பொருத்தவரை, கடவுள் என்பது சிலர் ஏற்றுக் கொள்ளுகின்ற, சிலர் மறுக்கின்ற ஒரு தெளிவற்ற யோசனையாக ஆகியுள்ளது. ஆனால் எப்படிப் பார்த்தாலும் அது எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்துவதில்லை. இடைக்காலத்தில், ஒரு கடவுள் இல்லாமல் எனக்கு எந்தவிதமான அரசியல் அதிகாரமும், அறநெறிசார் அதிகாரமும், அழகியல் அதிகாரமும் இருந்திருக்காது. எது சரி, எது நல்லது, எது அழகானது என்று என்னால் கூறியிருக்க

முடியாது. யாரால் அப்படி வாழ முடியும்? இன்று, இதற்கு நேர்மாறாக, கடவுள் என்ற ஒன்றின்மீது நம்பிக்கை இல்லாமல் இருப்பது சுலபமானது. ஏனெனில், நாம் அவ்வாறு நம்பாமல் இருப்பதற்கு நான் எந்த விலையையும் கொடுக்க வேண்டியதில்லை. நான் ஒரு முழுமையான நாத்திகனாக இருந்து கொண்டே, என்னுடைய அகவயமான அனுபவங்களிலிருந்து செழுமையான பல்வேறு அரசியல் விழுமியங்களையும் அறநெறிசார் விழுமியங்களையும் அழகியல் விழுமியங்களையும் என்னால் கைவசப்படுத்த முடியும்.

நான் கடவுள்மீது நம்பிக்கை கொள்ளுகிறேன் என்றால், நம்புவது என்னுடைய விருப்பத்தைப் பொருத்த விஷயம். கடவுள்மீது நம்பிக்கை கொள்ளுமாறு என்னுடைய உட்குரல் கூறினால், நான் அதை நம்புகிறேன். கடவுளின் இருத்தலை நான் உணருவதாலும், கடவுள் என்ற ஒருவர் இருக்கிறார் என்று என் இதயம் என்னிடம் கூறுவதாலும் அவரை நான் நம்புகிறேன். ஆனால், கடவுளின் இருத்தல் குறித்த உணர்வு இனியும் எனக்கு ஏற்படவில்லை என்றாலோ, கடவுள் இல்லை என்று திடீரென்று என் இதயம் கூறினாலோ, நான் கடவுளை நம்புவதை நிறுத்திவிடுவேன். எந்த வழியில் பார்த்தாலும், என்னுடைய சொந்த உணர்வுகள்தாம் அதிகாரத்திற்கான மூலாதாரமாக இருக்கின்றன. எனவே, நான் கடவுள்மீது நம்பிக்கை கொண்டிருப்பதாகக் கூறும்போது, என்னுடைய சொந்த உட்குரல்மீது நான் அதிக வலிமையான நம்பிக்கை கொண்டிருக்கிறேன் என்பதுதான் உண்மை.

## மஞ்சள்நிறச் செங்கற்கள் பதிக்கப்பட்டப் பாதையைப் பின்தொடர்ந்து செல்லுங்கள்

அதிகாரத்திற்கான எந்தவொரு மூலாதாரத்தையும்போலவே, உணர்வுகளும் தம்மிடம் சில குறைபாடுகளைக் கொண்டுள்ளன. ஒவ்வொரு மனிதனிடமும் ஓர் உண்மையான உட்குரல் இருப்பதாக மனிதவாதம் அனுமானிக்கிறது. ஆனால் நான் அதைச் செவிமடுக்க முயற்சிக்கும்போது, ஒன்று அது மௌனமாக இருக்கிறது, அல்லது அங்கு ஒரே நேரத்தில் ஏகப்பட்டக் குரல்கள் சேர்ந்து கூச்சலிட்டுக் கொண்டிருப்பதைத்தான் நான் கேட்கிறேன். இப்பிரச்சனையிலிருந்து மீளுவதற்கு, மனிதவாதம் அதிகாரத்திற்கான ஒரு புதிய மூலாதாரத்தைப் பிரகடனம் செய்திருப்பதோடு மட்டுமல்லாமல், அந்த அதிகாரத்தைப் பயன்படுத்தி உண்மையான அறிவைக் கைவசப்படுத்துவதற்கான ஒரு புதிய வழிமுறையையும் கொடுத்துள்ளது.

இடைக்கால ஐரோப்பாவில், அறிவுக்கான முக்கியச் சூத்திரமாக

இருந்தது இதுதான்: அறிவு = மறைநூல்கள் X தருக்கவாதம். மக்கள் ஒரு முக்கியமான கேள்விக்கான விடையைத் தெரிந்து கொள்ள விரும்பியபோது, அவர்கள் மறைநூல்களைப் படித்து, தங்களுடைய தருக்கவாதத்தைப் பயன்படுத்தி அந்த உரையின் துல்லியமான அர்த்தத்தைப் புரிந்து கொண்டனர். எடுத்துக்காட்டாக, பூமியின் வடிவத்தைத் தீர்மானிக்க விரும்பிய அறிஞர்கள், அது பற்றிய தகவல்களை பைபிளில் தேடினர். “பூமியின் விளிம்புகளைப் பிடித்துக் கொள்ளுங்கள். தீயவர்கள் அதிலிருந்து தூக்கியெறியப்பட்டுவிடுவர்,” என்று ஓரிடத்தில் கூறப்பட்டுள்ளதை ஒருவர் சுட்டிக்காட்டுகிறார். கடவுள் தன் கைகளால் பிடித்துக் கொள்ளக்கூடிய விதத்தில் உலகத்திற்கு ‘விளிம்புகள்’ இருப்பதால், பூமி நிச்சயமாக ஒரு தட்டையான சதுரமாகத்தான் இருக்க வேண்டும் என்று அந்த அறிஞர் வாதிட்டார். இன்னொருவர் இந்த விளக்கத்தை மறுத்துவிட்டு, “பூமியின் வட்டத்திற்கு மேலே ஓர் அரியணையில் கடவுள் வீற்றிருக்கிறார்,” என்று இன்னோர் இடத்தில் குறிப்பிடப்பட்டிருப்பதைச் சுட்டிக்காட்டுகிறார். பூமி உருண்டையானது என்பதற்கு இந்த ஆதாரம் போதாதா? ஆனால் நடைமுறையில் இதற்கு என்ன அர்த்தம் தெரியுமா? அறிஞர்கள் மறைநூல்களின் உரைகளைச் சரியாகப் புரிந்து கொள்ளுவதற்காக, பள்ளிகளிலும் நூலகங்களிலும் மேன்மேலும் அதிகமான உரைகளைப் படித்துத் தங்களுடைய தருக்கவாதம் சார்ந்த அறிவைக் கூர்தீட்டிக் கொள்ளுவதில் பல ஆண்டுகளைச் செலவிட்டதன் மூலம் அறிவைக் கைவசப்படுத்த முயற்சித்தனர் என்பதுதான் அது.

அறிவுக்கு அறிவியல் புரட்சி ஒரு வித்தியாசமான சூத்திரத்தை முன்மொழிந்தது: அறிவு = கண்காணிப்பின் மூலம் பெறப்படுகின்ற தகவல்கள் X கணிதம். நாம் ஏதேனும் ஒரு கேள்விக்கு விடை கண்டுபிடிக்க விரும்பினால், அக்கேள்வி தொடர்பான சில உண்மைத் தகவல்களைச் சேகரித்து, பிறகு கணிதக் கோட்பாடுகளைப் பயன்படுத்தி அவற்றை ஆய்வு செய்ய வேண்டும். எடுத்துக்காட்டாக, பூமியின் உண்மையான வடிவத்தைக் கண்டுபிடிப்பதற்கு, சூரியனையும் நிலவையும் கோள்களையும் பூமியின் பல்வேறு இடங்களிலிருந்து கண்காணிப்பதிலிருந்து நாம் துவக்கலாம். நாம் போதிய அளவு விபரங்களைச் சேகரித்தவுடன், முக்கோணவியலைப் பயன்படுத்தி பூமியின் வடிவத்தை மட்டுமல்லாமல் ஒட்டுமொத்தச் சூரிய மண்டலத்தின் கட்டமைப்பையும் நம்மால் கண்டுபிடிக்க முடியும். நடைமுறையில் இதற்கு என்ன பொருள்? அறிவியலறிஞர்கள் வானாய்வுக்கூடங்களிலும் பரிசோதனைக்கூடங்களிலும் ஆய்வுப் பயணங்களிலும் பல ஆண்டுகளைச் செலவிட்டு அதிகமான

தகவல்களைத் திரட்டுகின்றனர். பிறகு, சேகரிக்கப்பட்டத் தகவல்களைச் சரியாகப் புரிந்து கொள்ளுவதற்காக அவர்கள் தங்களுடைய கணித அறிவைக் கூர்தீட்டுகின்றனர்.

அறிவுக்கான அறிவியல் சூத்திரமானது வானியல், இயற்பியல், மருத்துவம், மற்றும் பிற துறைகளில் மாபெரும் புதிய கண்டுபிடிப்புகள் நிகழக் காரணமாக அமைந்தது. ஆனால் இதில் ஒரு பெரிய குறைபாடு இருந்தது. விழுமியம் மற்றும் அர்த்தம் தொடர்பான கேள்விகளை அதனால் கையாள முடியவில்லை. கொலை செய்வதும் திருடுவதும் தவறு என்றும், கடவுளுடைய விருப்பங்களை நிறைவேற்றுவதுதான் மனித வாழ்வின் நோக்கம் என்றும் இடைக்கால அறிஞர்களால் உறுதியாகக் கூற முடிந்தது. ஏனெனில், மறைநூல்கள் அவ்வாறு எடுத்துரைத்தன. ஆனால் அறிவியலறிஞர்களால் அத்தகைய அறநெறிசார் தீர்ப்புகளை வழங்க முடியாது. அவர்கள் எவ்வளவு தகவல்களைச் சேகரித்தாலும் கணிதத்தில் அவர்கள் எவ்வளவு மேதமை பெற்றிருந்தாலும் கொலை செய்வது தவறு என்று அவர்களால் நிரூபிக்க முடியாது. ஆனால் அப்படிப்பட்ட விழுமியங்கள் இல்லாமல் மனிதச் சமுதாயங்களால் தாக்குப்பிடிக்க முடியாது.

பழைய இடைக்காலச் சூத்திரத்தைப் புதிய அறிவியல் வழிமுறையோடு சேர்த்துப் பயன்படுத்துவது இப்பிரச்சனையிலிருந்து மீளுவதற்கான ஒரு வழி. பூமியின் வடிவம் என்ன என்பதை உறுதி செய்வது, ஒரு பாலத்தைக் கட்டுவது, ஒரு நோயை குணப்படுத்துவது போன்ற நடைமுறைப் பிரச்சனைகளை நாம் எதிர்கொள்ளும்போது, நாம் சூழ்நிலையைக் கண்காணித்துத் தகவல்களைத் திரட்டி, கணிதரீதியாக அவற்றை ஆய்வு செய்கிறோம். விவாகரத்து, கருக்கலைப்பு, தன்பால்புணர்ச்சி போன்றவற்றை நாம் அனுமதிக்கலாமா கூடாதா என்பது போன்ற, அறநெறி சார்ந்த ஒரு பிரச்சனையை நாம் எதிர்கொள்ளும்போது, நாம் மறைநூல்களைப் படிக்கிறோம். இந்தத் தீர்வை, விக்டோரியா மகாராணி காலத்து பிரிட்டனில் தொடங்கி இருபத்தோராம் நூற்றாண்டு ஈரான்வரை எண்ணற்ற நவீனச் சமுதாயங்கள் ஓரளவுக்கு சுவீகரித்துள்ளன.

ஆனாலும், மனிதவாதம் ஒரு மாற்றுத் தீர்வை வழங்குகிறது. மனிதர்கள் தங்கள்மீது அதிக நம்பிக்கை கொள்ளத் தொடங்கியிருப்பதால், அறநெறிசார் அறிவைக் கைவசப்படுத்துவதற்கு ஒரு புதிய சூத்திரம் உருவானது: அறிவு = அனுபவங்கள் **X** பிரக்ஞையுணர்வு. அறநெறி சார்ந்த ஏதேனும் ஒரு கேள்விக்கான விடையை நாம் கண்டுபிடிக்க விரும்பினால், நாம் நம்முடைய உள்ளார்ந்த அனுபவங்களைத் தொடர்பு கொண்டு, அவற்றை மிகுந்த

பிரக்ஞையுணர்வுடன் கண்காணிக்க வேண்டும். நடைமுறையில் இதற்கு என்ன பொருள்? அனுபவங்களைச் சேகரிப்பதிலும் நம்முடைய பிரக்ஞையுணர்வைக் கூர்தீட்டுவதிலும் பல ஆண்டுகளைச் செலவிடுவதன் மூலம் அறிவை நாம் தேடுகிறோம். இந்த அறிவைக் கொண்டு நாம் அந்த அனுபவங்களைச் சரியாகப் புரிந்து கொள்ள முயற்சிக்கிறோம்.

இவை என்ன 'அனுபவங்கள்'? அவை கண்காணிப்பின் மூலம் சேகரிக்கப்பட்டத் தகவல்கள் அல்ல. ஓர் அனுபவம் என்பது அணுக்களாலோ, மின்காந்த அலைகளாலோ, புரதங்களாலோ அல்லது எண்களாலோ ஆனது அல்ல. மாறாக, அது ஓர் அகவயமான நிகழ்வு. அது மூன்று முக்கிய அம்சங்களை உள்ளடக்கியுள்ளது: உணர்வுகள், உணர்ச்சிகள், மற்றும் எண்ணங்கள். குறிப்பிட்ட எந்தவொரு கணத்திலும் என்னுடைய அனுபவம் நான் உணருகின்ற எல்லாவற்றையும் உள்ளடக்குகிறது, என் மனத்தில் எழுகின்ற அனைத்து எண்ணங்களையும் உள்ளடக்குகிறது.

'பிரக்ஞையுணர்வு' என்றால் என்ன? இது இரண்டு விஷயங்களைக் குறிக்கிறது. முதலாவது, என்னுடைய உணர்வுகள், உணர்ச்சிகள், மற்றும் எண்ணங்கள்மீது ஒருமித்த கவனம் செலுத்துவது. இரண்டாவது, இந்த உணர்வுகளும் உணர்ச்சிகளும் எண்ணங்களும் என்மீது தாக்கம் ஏற்படுத்த அனுமதிப்பது. என்னை வருடிச் செல்லுகின்ற காற்று என்னை அடித்துக் கொண்டு போய்விட நான் அனுமதிக்கக்கூடாது என்பது சரிதான். ஆனாலும், புதிய அனுபவங்களுக்கு நான் திறந்த மனத்துடன் இருக்க வேண்டும்; அவை என்னுடைய கண்ணோட்டங்களையும், என்னுடைய நடத்தையையும், என்னுடைய ஆளுமையையும்கூட மாற்ற நான் அனுமதிக்க வேண்டும்.

அனுபவங்களும் பிரக்ஞையுணர்வும் ஒரு முடிவற்றச் சுழற்சியில் ஒன்றையொன்று ஊக்குவிக்கின்றன. எனக்குப் பிரக்ஞையுணர்வு இல்லை என்றால், என்னால் எதையும் அனுபவிக்க முடியாது. எனக்குப் பல்வேறு வகையான அனுபவங்கள் கிடைக்காவிட்டால், என்னுடைய பிரக்ஞையுணர்வை என்னால் வளர்த்தெடுக்க முடியாது. பிரக்ஞையுணர்வு என்பது புத்தகங்களைப் படிப்பதன் மூலமாகவோ அல்லது சொற்பொழிவுகளைக் கேட்பதன் மூலமாகவோ உருவாக்கப்படக்கூடிய, தெளிவற்ற ஒரு திறன் அல்ல. நடைமுறையில் செயல்படுத்துவதன் மூலமாக மட்டுமே கனிந்து பக்குவமடையக்கூடிய ஒரு நடைமுறைத் திறமை அது.

எடுத்துக்காட்டாக, தேநீரை எடுத்துக் கொள்ளுங்கள். நான் தினமும் காலையில் மிகவும் இனிப்பான சாதாரணத் தேநீரைப் பருகியபடி

செய்தித்தாளைப் படிக்கத் தொடங்குகிறேன். அந்தத் தேநீர், சர்க்கரையை உட்கொள்ளுவதற்கான ஒரு சாக்குப்போக்குதானே அன்றி, அதைவிட மேலாக ஒன்றுமில்லை. ஒருநாள், நான் அந்தத் தேநீரை ருசிப்பதே இல்லை என்பதை நான் உணருகிறேன். எனவே, நான் சர்க்கரையின் அளவைக் குறைத்துவிட்டு, செய்தித்தாளை ஓர் ஓரமாக வைத்துவிட்டு, என் கண்களை மூடிக் கொண்டு அந்தத் தேநீரின்மீது ஒருமித்த கவனம் செலுத்துகிறேன். இப்போது அதன் தனித்துவமான வாசனையையும் சுவையையும் நான் என் மனத்தில் பதிய வைக்கத் தொடங்குகிறேன். விரைவில், பல்வேறு வகையான தேநீரை நான் ருசித்துப் பார்க்கத் தொடங்குகிறேன். அவை ஒவ்வொன்றின் தனித்துவமான சுவையையும் நான் ஒப்பிடுகிறேன். ஒருசில மாதங்களில், சாதாரணமான பேரங்காடிகளில் விற்கப்படுகின்ற அனைத்து வகையான தேநீரையும் ஒதுக்கிவிட்டு, லண்டனில் உள்ள ஆடம்பரமான பேரங்காடியான ஹேரட்ஸில் நான் எனக்குப் பிடித்தமான தேநீரை நான் வாங்குகிறேன். ‘பான்டா சாணத் தேநீர்’ என்ற ஒரு குறிப்பிட்ட வகைத் தேநீர் மெல்ல மெல்ல எனக்குப் பிடித்துப் போகிறது. சிசுவான் பிராந்தியத்திலுள்ள யான் மலைகளில் பயிரிடப்படுகின்ற தேயிலைச் செடிகளின் இலைகளிலிருந்து தயாரிக்கப்படுகின்ற தேநீர் அது. பான்டா கரடிகளின் சாணம் அச்செடிகளுக்கு உரமாகப் பயன்படுத்தப்படுவதால் அந்தத் தேநீர் ‘பான்டா சாணத் தேநீர்’ என்று அழைக்கப்படுகிறது. இப்படித்தான், ஒரு நேரத்தில் ஒரு கோப்பை என்ற கணக்கில், தேநீர் குறித்த என்னுடைய பிரக்ஞையுணர்வை நான் கூர்தீட்டி, தேநீரைச் சுவைப்பதில் நிபுணத்துவம் பெற்ற ஒருவனாக நான் ஆகிறேன். நான் தேநீர் பருகத் தொடங்கிய காலத்தில் இதே பான்டா சாணம் தேநீரை மிங் வம்சத்தைச் சேர்ந்த பீங்கான் கோப்பையில் நீங்கள் எனக்குப் பரிமாறியிருந்தால், ஒரு சாதாரணக் காகிதக் கோப்பையில் கொடுக்கப்படுகின்ற சாதாரணத் தேநீரைவிட அதிகமாக நான் அதை மெச்சியிருக்க மாட்டேன். தேவையான பிரக்ஞையுணர்வு இல்லாமல் எந்தவொரு பொருளையும் உங்களால் அனுபவித்துப் பார்க்க முடியாது. தொடர்ந்து பல அனுபவங்கள் கிடைத்தாலொழிய உங்களுடைய பிரக்ஞையுணர்வை உங்களால் வளர்த்துக் கொள்ள முடியாது.

தேநீரின் விஷயத்தில் எது உண்மையோ, அதுதான் பிற அழகியல்ரீதியான அறிவு மற்றும் அறநெறிரீதியான அறிவின் விஷயத்திலும் உண்மையாக இருக்கிறது. நாம் பிறக்கும்போதே மனசாட்சியுடன் பிறப்பதில்லை. வாழ்க்கையின் ஊடாக நாம் பயணிக்கும்போது, நாம் பிறருடைய மனத்தைக் காயப்படுத்துகிறோம்,

அவர்கள் நம்முடைய மனத்தைக் காயப்படுத்துகின்றனர்; நாம் பிறரிடம் மனிதாபிமானத்துடன் நடந்து கொள்ளுகிறோம், அவர்கள் நம்மிடம் மனிதாபிமானத்துடன் நடந்து கொள்ளுகின்றனர். நாம் சற்று கவனம் செலுத்தினால், அறநெறிசார்ந்த நம்முடைய பிரக்ஞையுணர்வு கூர்தீட்டடப்படுகிறது. இந்த அனுபவங்கள், எது நல்லது, எது சரி, நான் உண்மையிலேயே யார் ஆகியவற்றைப் பற்றிய, மதிப்பு வாய்ந்த அறநெறிசார் அறிவுக்கான ஒரு மூலாதாரமாக ஆகின்றன.

வாழ்க்கை என்பது உள்ளார்ந்த மாற்றத்தை உள்ளடக்கிய ஒரு படிப்படியான செயல்முறை என்று மனிதவாதம் கருதுகிறது. அந்த மாற்றம் அறியாமையிலிருந்து தொடங்கி, அனுபவங்களின் வாயிலாக ஞானோதயத்தை எட்டுகிறது. அறிவுரீதியான, உணர்ச்சிரீதியான மற்றும் உடல்ரீதியான பல்வேறு வகையான அனுபவங்களின் மூலமாக உங்கள் அறிவை முழுமையாக வளர்த்துக் கொள்ளுவதுதான் மனிதவாத வாழ்வின் மிக உயர்ந்த நோக்கமாகும். பத்தொன்பதாம் நூற்றாண்டின் துவக்கத்தில், நவீனக் கல்வி அமைப்புமுறையின் முக்கிய வடிவமைப்பாளர்களில் ஒருவரான வில்ஹெம் வான் ஹம்போல்ட் இவ்வாறு கூறியுள்ளார்: “வாழ்வின் மிகப் பரந்த அனுபவங்களை ஞானமாகக் காய்ச்சி வடிப்பதுதான் இருத்தலின் நோக்கம்.” இது மனிதவாதத்தின் குறிக்கோள் வாசகமாக இருப்பதற்குப் பொருத்தமானதாகும்.

***

சீனத் தத்துவத்தின்படி, ஒன்றுக்கொன்று எதிரான, ஆனால் ஒன்றுக்கொன்று தோள் கொடுக்கின்ற ‘யின்,’ ‘யேங்’ ஆகிய இரண்டு ஆற்றல்களுக்கு இடையேயான செயற்பரிமாற்றம்தான் உலகத்தை நீடிக்கச் செய்கிறது. பௌதிக உலகைப் பொருத்தவரை இது உண்மையற்றதாக இருக்கலாம், ஆனால் அறிவியலுக்கும் மனிதவாதத்திற்கும் இடையேயான உடன்படிக்கையினால் உருவாக்கப்பட்டுள்ள நவீன உலகத்தின் விஷயத்தில் இது நிச்சயமாக உண்மையாக இருக்கிறது. அறிவியல்சார் யேங் ஒவ்வொன்றுக்கும் உள்ளே ஒரு மனிதவாத யின் இருக்கிறது; அதேபோல, மனிதவாத யின் ஒவ்வொன்றுக்குள்ளும் அறிவியல்சார் யேங் ஒன்று இருக்கிறது. யேங் நமக்கு சக்தியைக் கொடுக்கிறது. யின் நமக்கு அர்த்தத்தையும் அறநெறிசார் தீர்ப்புகளையும் வழங்குகிறது. காரணம் மற்றும் உணர்ச்சி, பரிசோதனைக்கூடம் மற்றும் காட்சியகம், உற்பத்திச் செயல்முறை மற்றும் பேரங்காடி ஆகியவை நவீனத்துவத்தின் யேங் மற்றும் யின் ஆகும். மக்கள் பொதுவாக யேங்கை மட்டுமே பார்த்துவிட்டு, நவீன உலகம் ஒரு பரிசோதனைக்கூடத்தையும் ஒரு

தொழிற்சாலையையும்போல வறண்டும், அறிவியல் சார்ந்ததாகவும், தருக்கவாதம் சார்ந்ததாகவும், பயன்பாடு சார்ந்ததாகவும் இருப்பதாகக் கற்பனை செய்கின்றனர். ஆனால் நவீன உலகம் ஓர் ஆடம்பரமான பேரங்காடியும்கூட. வரலாற்றில் வேறு எந்தவொரு கலாச்சாரமும் மனித உணர்வுகளுக்கும் விருப்பங்களுக்கும் அனுபவங்களுக்கும் இவ்வளவு முக்கியத்துவம் கொடுத்ததில்லை. தொடர்ச்சியான அனுபவங்களை உள்ளடக்கியதே வாழ்க்கை என்ற மனிதவாதக் கண்ணோட்டம், சுற்றுலாவில் தொடங்கிக் கலைவரை எண்ணற்ற நவீனத் தொழிற்துறைகளின் அடித்தளமாக இருக்கிறது. இக்கண்ணோட்டம் வெறும் கற்பனையானதே. இக்கண்ணோட்டத்தின்படி, பயண முகவர்களும் உணவகங்களின் தலைமைச் சமையற்காரர்களும் நமக்கு விமானப் பயணச்சீட்டுக்களையோ, ஹோட்டல்களையோ, அல்லது விலையுயர்ந்த உணவையோ விற்பனை செய்வதில்லை, மாறாக, புதுமையான அனுபவங்களையே அவர்கள் நம்மிடம் விற்கின்றனர்.

அதேபோல, நவீன காலகட்டத்திற்கு முந்தைய காலகட்டத்தைச் சேர்ந்த விரிவுரைகள் புறவயமான நிகழ்வுகள்மீதும் செயல்நடவடிக்கைகள்மீதும்தான் கவனம் செலுத்தின. ஆனால், நவீனப் புதினங்களும் திரைப்படங்களும் கவிதைகளும் பெரும்பாலும் உணர்ச்சிகளை வலியுறுத்துகின்றன. கிரேக்க-ரோம இதிகாசங்களும், இடைக்காலத்தைச் சேர்ந்த, வீரத்துடன்கூடிய காதலைப் பற்றிய கதைகளும் சாகசச் செயல்களை வலியுறுத்திக் காட்டினவே அன்றி உணர்வுகளை அல்ல. துணிச்சலான போர்வீரன் ஒருவன் ஒரு மிகப் பெரிய அரக்கனை எதிர்த்துச் சண்டையிட்டு அவனை எப்படிக் கொன்றான் என்பதை ஒரு அத்தியாயம் விவரித்தது. நெருப்பை உமிழ்ந்த ஒரு டிராகனிடமிருந்து ஓர் அழகான இளவரசியை அந்த வீரன் எப்படிக் காப்பாற்றி அந்த டிராகனைக் கொன்றான் என்பதை இன்னொரு அத்தியாயம் நினைவுகூர்ந்தது. மூன்றாவது அத்தியாயத்தில், கெடுநோக்குக் கொண்ட ஒரு மந்திரவாதி எப்படி அந்த அழகான இளவரசியைக் கடத்திச் சென்றான் என்பதும், ஆனால் அந்த வீரன் அவர்களைப் பின்தொடர்ந்து சென்று அந்த மந்திரவாதியை எப்படிக் கொன்றான் என்பதும் விவரிக்கப்பட்டுள்ளது. இக்கதையில் வரும் கதாநாயகன் ஒரு விவசாயியாகவோ அல்லது தச்சராகவோ இல்லாமல் ஒரு போர்வீரனாக இருப்பதில் எந்த வியப்பும் இல்லை. ஏனெனில், விவசாயிகளால் எந்தவொரு துணிச்சலான செயலையும் செய்யவில்லை.

இந்தக் கதாநாயகர்கள், குறிப்பிடத்தக்க உள்ளார்ந்த மாற்றம் எதற்கும் உட்படவில்லை என்பது நீங்கள் கவனிக்க வேண்டிய

முக்கியமான விஷயம். துணிச்சல்மிக்க மாவீரர்களாக விளங்கிய அக்கிலெஸ், ஆர்தர், ரோலன்டு, லேன்ஸ்லாட் ஆகியோர் தங்களுடைய சாகசப் பயணங்களுக்குள் அடியெடுத்து வைப்பதற்கு முன்பாக உலகைப் பற்றிய வீரசாகச உணர்வைக் கொண்டிருந்தனர். அவர்கள் தங்கள் வாழ்வின் இறுதிவரை பயமற்ற மாவீரர்களாகவும் உலகைப் பற்றிய அதே கண்ணோட்டத்துடனும் இருந்தனர். அவர்கள் கொன்ற அத்தனை அரக்கர்களும், அந்த அரக்கர்களிடமிருந்து அவர்கள் மீட்ட அத்தனை இளவரசிகளும் அந்த மாவீரர்களின் துணிச்சலையும் விடாமுயற்சியையும் உறுதிப்படுத்தினர். ஆனால் அந்த அனுபவங்கள் அந்த வீரர்களுக்குப் புதிதாக எதையும் கற்றுக் கொடுக்கவில்லை.

மனிதவாதிகள் செயல்கள்மீது கவனம் செலுத்துவதற்கு பதிலாக உணர்வுகள் மற்றும் அனுபவங்கள்மீது கவனம் செலுத்தி, கலைக்கு ஒரு புதிய வடிவத்தைக் கொடுத்தனர். வேர்ட்ஸ்வொர்த், தஸ்தயெவ்ஸ்கி, டிக்கென்ஸ், ஸோலா ஆகியோர் துணிச்சலான வீரர்கள் குறித்தும் அவர்களுடைய வீரதீரச் செயல்கள் குறித்தும் அவ்வளவாக அக்கறை கொள்ளவில்லை; மாறாக, சாதாரணத் தொழிலாளர்களும் குடும்பத்தலைவிகளும் எத்தகைய உணர்வுகளைக் கொண்டிருந்தனர் என்பதை அவர்கள் விவரித்தனர். ஜேம்ஸ் ஜாய்ஸ் எழுதிய யூலிஸெஸ் என்ற புதினம், புறவயமான நடவடிக்கைகளை விடுத்து அகவயமான வாழ்க்கைமீதான நவீன கவனக்குவிப்பின் உச்சத்தைப் பிரதிநுதப்படுத்துவதாக சிலர் நம்புகின்றனர். அக்கதையில் வரும் கதாபாத்திரங்களான ஸ்டீபன் டெடாலஸ், லியோபோல்டு புளூம் ஆகியோருடைய வாழ்வின் சராசரி நாள் ஒன்றை 2,60,000 வார்த்தைகளில் ஜாய்ஸ் விவரித்திருக்கிறார். அவர்கள் ஒரு சராசரி நாளன்று என்ன செய்கின்றனர் என்று பார்த்தால் . . . அவர்கள் உண்மையில் அவ்வளவாக எதுவும் செய்யவில்லை.

வெகுசிலரே யூலிஸெஸ் நூலை வரிவிடாமல் படித்துள்ளனர் என்றாலும், அதே பாணி இப்போது நம்முடைய பெரும்பாலான நவீனக் கலாச்சாரத்தின் அடித்தளமாக ஆகியுள்ளது. அமெரிக்காவில், ‘சர்வைவர்’ என்ற தொலைக்காட்சித் தொடர், யதார்த்த நிகழ்ச்சிகள்மீது மக்கள் வெறித்தனமான ஆர்வம் கொள்ளும்படி செய்துள்ளதாகக் குற்றம் சாட்டப்படுகிறது. தொலைக்காட்சி நிகழ்ச்சிகளை அவற்றின் பிரபலத்துவத்தின்கீழ் பட்டியலிடுகின்ற நீல்சன் மதிப்பீட்டுப் பட்டியலில் முதலிடத்தைப் பிடித்த முதல் யதார்த்த நிகழ்ச்சி ‘சர்வைவர்’ தொடர்தான். வரலாற்றில் நூறு மாபெரும் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில் ஒன்றாக அந்நிகழ்ச்சியை 2007ல் டைம் பத்திரிகை பட்டியலிட்டது. அத்தொடரில் ஒவ்வொரு பருவத்திலும், இருபது

போட்டியாளர்கள் அவர்களுடைய நீச்சலுடைகளில் ஏதோ ஒரு வெப்பமண்டலத் தீவில் தனித்து விடப்படுகின்றனர். அங்கே அவர்கள் பல்வேறு வகையான சவால்களை எதிர்கொள்ள வேண்டியிருக்கும். ஒவ்வோர் அத்தியாயத்திலும் அவர்கள் எல்லோருமாகச் சேர்ந்து வாக்களித்து ஒரு போட்டியாளரை வெளியேற்ற வேண்டும். கடைசியில் எஞ்சியிருப்பவருக்குப் பத்து லட்சம் டாலர்கள் பரிசு வழங்கப்படும்.

ஹோமரின் கிரேக்கத்திலும், ரோமாபுரி சாம்ராஜ்ஜியத்திலும், இடைக்கால ஐரோப்பாவிலும் வாழ்ந்த மக்களுக்கு இந்தத் தொலைக்காட்சித் தொடருடைய அடிப்படை யோசனை பரிச்சயமானதாக இருந்திருக்கும், அது அவர்களைப் பெரிதும் கவர்ந்திருக்கும். இப்போட்டியில் இருபது போட்டியாளர்கள் உள்ளே போகின்றனர், ஒரே ஒரு கதாநாயகன் வெளிவருகிறான். இப்போட்டியைக் காண உட்காருகின்ற ஒரு கிரேக்க இளவரசரோ, ஒரு ரோமாபுரி மேட்டுக்குடி நபரோ, ஒரு சிலுவைப்போர் வீரரோ, “சபாஷ்! நாம் இப்போது அற்புதமான சாகசங்களையும், வாழ்வா-சாவா போராட்டங்களையும், ஒப்பிடப்பட முடியாத வீரதீரச் செயல்களையும், நம்பிக்கைத் துரோக நடவடிக்கைகளையும் கண்டுகளிக்கவிருக்கிறோம். இவர்கள் ஒருவருக்கொருவர் முதுகில் குத்திக் கொள்ளப் போகின்றனர் அல்லது இவர்களுடைய குடலுறுப்புகள் அறுந்து விழப் போகின்றன!” என்று தனக்குள் நினைத்திருப்பார்.

என்னவொரு பெரிய ஏமாற்றம்! முதுகில் குத்துதலும் குடலுறுப்புகள் அறுந்து விழுவதும் வெறும் உருவகங்களே. இத்தொலைக்காட்சி நிகழ்ச்சியின் ஒவ்வோர் அத்தியாயமும் சுமார் ஒரு மணிநேரம் நீடிக்கிறது. அதில் பதினைந்து நிமிடங்களைப் பற்பசை விளம்பரங்களும், குளியல் சோப்புகள் போன்ற பல விளம்பரங்களும் அபகரித்துக் கொண்டுவிடுகின்றன. ஒரு வளையத்திற்குள் யார் அதிகமான தேங்காய்களை எறிகிறார்கள், ஒரு நிமிடத்தில் யார் அதிகமான பூச்சிகளை உட்கொள்ளுகிறார்கள் போன்ற சிறுபிள்ளைத்தனமான சவால்களில் இன்னும் ஐந்து நிமிடங்கள் போய்விடுகின்றன. எஞ்சிய நேரம் இந்தக் ‘கதாநாயகர்கள்’ தங்களுடைய உணர்வுகளைப் பற்றிப் பேசுகின்றனர். அவள் அப்படிச் சொன்னாள், இவன் இப்படிச் சொன்னான், நான் இவ்வாறு உணர்ந்தேன், நான் அவ்வாறு உணர்ந்தேன். இடைக்கால ஐரோப்பிய வீரன் ஒருவன் உட்கார்ந்து இந்த சர்வைவர் நிகழ்ச்சியைப் பார்த்தான் என்றால், அவன் தன்னுடைய போர்க்கோடரியை எடுத்து, வெறுப்பிலும் சலிப்பிலும் அந்தத் தொலைக்காட்சியை அடித்து உடைத்து நொறுக்கியிருந்திருப்பான்.

இடைக்காலத்து வீரர்கள் காட்டுமிராண்டிகள் என்று இன்று நாம் கருதக்கூடும். அவர்கள் நம்மிடையே வாழ்ந்திருந்தால், நாம் அவர்களை ஒரு மனநல ஆலோசகரிடம் அனுப்பி வைத்து, அவர்கள் தங்களுடைய உணர்வுகளுடன் ஒரு தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள உதவியிருப்போம். 'விஸர்டு ஆஃப் ஆஸ்' திரைப்படத்தில் வருகின்ற டின் மேன் கதாபாத்திரம் இதைத்தான் செய்கிறது. அவன் டோரத்தியோடும் தன்னுடைய நண்பர்களோடும் மஞ்சள்நிறச் செங்கற்கள் பதிக்கப்பட்டப் பாதை வழியே நடந்து செல்லுகிறான். தாங்கள் 'ஆஸ்' என்ற நாட்டைச் சென்றடையும்போது, அங்கிருக்கும் மாபெரும் மந்திரவாதி தனக்கு ஓர் இதயத்தைக் கொடுப்பான் என்று டின் மேன் நம்புகிறான். அதேபோல, அவனுடைய நண்பனான ஸ்கேர்குரோ தனக்கு ஒரு மூளை வேண்டும் என்று விரும்புகிறான், அவனுடைய இன்னொரு நண்பனான சிங்கமனிதன் தனக்குத் துணிச்சல் வேண்டும் என்று விரும்புகிறான். ஆனால், அந்த மந்திரவாதி ஓர் ஏமாற்றுப் பேர்வழி என்பதையும், தாங்கள் விரும்பும் விஷயங்களை அவனால் தங்களுக்குக் கொடுக்க முடியாது என்பதையும் அவர்கள் அனைவரும் தங்களுடைய பயணத்தின் முடிவில் அறிந்து கொள்ளுகின்றனர். ஆனால் அதே சமயத்தில், அவர்கள் மிக முக்கியமான ஒரு விஷயத்தையும் கண்டறிகின்றனர். அவ்விஷயம் இதுதான்: 'தாங்கள் விரும்பிய அனைத்து விஷயங்களும் ஏற்கனவே தங்களுக்குள் இருந்தன. தாங்கள் பிரக்ஞையுணர்வைப் பெறுவதற்கோ, அறிவார்ந்தவராக ஆவதற்கோ அல்லது துணிச்சல்மிக்கவராக ஆவதற்கோ ஏதோ கடவுளைப் போன்ற ஒரு மந்திரவாதியின் தேவை தங்களுக்கு ஒருபோதும் இருப்பதில்லை. தாங்கள் வெறுமனே அந்த மஞ்சள்நிறச் செங்கற்பாதையைப் பின்தொடர்ந்து சென்று, தங்கள் வழியில் எதிர்ப்படும் அனுபவங்களைத் திறந்த மனத்துடன் எதிர்கொள்ள வேண்டும், அவ்வளவுதான்.'

பின்வரும் நபர்களும் இதே படிப்பினையைக் கற்றுக் கொண்டனர்: 'ஸ்டார்ஷிப் என்டர்பிரைஸ்' என்ற விண்கலத்தில் விண்மீன் மண்டலம் வழியாகப் பயணிக்கும் கேப்டன் கெர்க் மற்றும் கேப்டன் ஜான் லூக் பிக்கார்டு; மிஸ்ஸிஸிப்பி நதி வழியாகக் கப்பலில் பயணிக்கும் ஹக்கில்பெரி ஃபின் மற்றும் ஜிம்; 'ஈஸி ரைடர்' திரைப்படத்தில் தங்களுடைய ஹார்லே-டேவிட்சன் பைக்கில் பயணிக்கும் வயட் மற்றும் பில்லி. இவர்களும் இவர்களைப்போல இன்னும் ஏராளமான கதாபாத்திரங்களும் தங்களுடைய சொந்த ஊர்களைவிட்டுப் புறப்பட்டு, ஏதோ ஒரு காரிலோ அல்லது பேருந்திலோ பயணம் செய்யும்போது, பல்வேறு வகையான அனுபவங்கள் கிடைக்கப் பெற்று, தாங்கள்

போய்ச் சேர வேண்டிய இடத்தை அடையும்போது, அதிகச் சிறப்பான, அதிக அறிவார்ந்த தனிநபர்களாக ஆகின்றனர்.

## போரைப் பற்றிய உண்மை

அறிவு = அனுபவங்கள் x பிரக்ஞையுணர்வு என்ற சூத்திரம் நம்முடைய பிரபலமான கலாச்சாரத்தை மாற்றியுள்ளதோடு மட்டுமல்லாமல், போர் போன்ற முக்கியமான விவகாரங்களைப் பற்றிய நம்முடைய கண்ணோட்டத்தையும் மாற்றியுள்ளது. வரலாறு நெடுகிலும், ஒரு குறிப்பிட்டப் போர் நியாயமானதா இல்லையா என்பதை மக்கள் தெரிந்து கொள்ள விரும்பியபோது, அவர்கள் கடவுளிடமும், மறைநூல்களிடமும், அரசர்களிடமும், மேட்டுக்குடியினரிடமும், துறவிகளிடமும் கேட்டனர். ஒரு சாதாரணச் சிப்பாய் அல்லது ஒரு சாதாரண நபரின் அபிப்பிராயங்களையும் அனுபவங்களையும் யாரும் அவ்வளவாகக் கண்டுகொள்ளவில்லை. ஹோமர், விர்ஜில், ஷேக்ஸ்பியர் ஆகியோருடைய, போர் பற்றிய விவரிப்புகள், பேரரசர்கள், தளபதிகள், தனிச்சிறப்புக் கொண்ட வீரர்கள் ஆகியோருடைய நடவடிக்கைகளின்மீது கவனம் செலுத்தின. போரினால் ஏற்பட்டத் துயரத்தை அவை மறைக்கவில்லை, ஆனால் துணிச்சலையும் பெருமையையுமே அவை தூக்கிப் பிடித்தன. சாதாரணமான படைவீரர்கள், ஏதோ கோலியாத்தினால் கொல்லப்பட்ட சடலக் குவியல்களாகவோ அல்லது வெற்றிவாகை சூடிய ஒரு டேவிடைத் தங்கள் தோள்களின்மீது சுமந்தபடி உற்சாகக் கூக்குரல் எழுப்பிய ஒரு கூட்டமாகவோ சித்தரிக்கப்பட்டனர்.

எடுத்துக்காட்டாக, பிரைட்டன்ஃபெல்டு போரைப் பற்றிய ஓவியத்தைப் பாருங்கள். 1631ம் ஆண்டு செப்டம்பர் 17ம் நாளன்று நடைபெற்றப் போர் அது. அதை வரைந்த ஜான் ஜாக்ஸ் வால்ட்டர் என்ற ஓவியர், ஒரு குறிப்பிட்ட நாளன்று தன்னுடைய படையை ஒரு நிச்சயமான வெற்றியை நோக்கி வழிநடத்திய சுவீடன் நாட்டு அரசரான குஸ்தாவ் அடால்ஃபைப் புகழுகிறார். சதுரங்க ஆட்டக்காரர் ஒருவர் எவ்வாறு சிப்பாய்களை நகர்த்துகிறாரோ, அதேபோல அரசர்கள் போர்களைக் கட்டுப்படுத்தினர் என்ற அபிப்பிராயம் ஒருவருக்கு முளைக்கிறது. சிப்பாய்கள் பெரும்பாலும் சாதாரண உருவங்களோ அல்லது பின்புலத்தில் உள்ள சிறுசிறு புள்ளிகளோதான். அவர்கள் எதிரிகளை நோக்கி முன்னேறியபோதோ, அவர்களிடமிருந்து தப்பி ஓடியபோதோ, அல்லது அவர்களால் கொல்லப்பட்டபோதோ அவர்கள் எவ்வாறு உணர்ந்தனர் என்பதில் வால்ட்டர் ஆர்வம் காட்டவில்லை.

அவர்கள் அனைவரும் முகங்களற்ற ஒரு கூட்டுக் குவியல், அவ்வளவுதான்.



படம் **34: 1631**ல் பிரைட்டன்ஃபெல்டு போரில் ஸ்வீடன் நாட்டுத் தளபதி குஸ்தாவ் அடால்ஃப் **(**ஓவியம்**:** ஜான் ஜாக்ஸ் வால்ட்டர்**).**

ஓவியர்கள் படைத்தளபதியின்மீது கவனம் செலுத்துவதை விடுத்துப் போரின்மீது கவனம் செலுத்தியபோதுகூட, அவர்கள் மேலேயிருந்துதான் பார்த்தனர். தனிப்பட்ட உணர்வுகளைவிடக் கூட்டு நடவடிக்கைகளின்மீதுதான் அவர்கள் அதிக அக்கறை கொண்டிருந்தனர். எடுத்துக்காட்டாக, 1620ம் ஆண்டு நவம்பர் மாதத்தில் நடைபெற்ற வெள்ளை மலைப் போரைச் சித்தரித்த ஓவியத்தை எடுத்துக் கொள்ளுங்கள். பீட்டர் ஸ்னேயர் வரைந்த அச்சித்திரம், அந்த முப்பதாண்டுகாலப் போரில் புராட்டஸ்டன்ட் போராளிகளை வெற்றி கொண்ட கத்தோலிக்கர்களுடைய வெற்றியைச் சித்தரிக்கிறது. கத்தோலிக்கப் படையினர் அமைத்தப் பல்வேறு வியூகங்கள், அவர்களுடைய நடவடிக்கைகள், அவர்களுடைய நகர்வுகள் ஆகியவற்றை ஸ்னேயர் மிகவும் கஷ்டப்பட்டு அச்சித்திரத்தில் பதிவு செய்துள்ளார். பல்வேறு படைப்பிரிவுகள், அவர்களுடைய படைக்கலன்கள், போரில் அவர்களுடைய நிலைகள் ஆகியவற்றை அதில் உங்களால் சுலபமாக அடையாளம் காண முடியும். சாதாரண வீரர்களுடைய அனுபவங்களுக்கும் உணர்வுகளுக்கும் ஸ்னேயர் மிகக் குறைவான முக்கியத்துவமே கொடுத்தார். ஜான் ஜாக்ஸ் வால்ட்டரைப்போல, ஸ்னேயரும் கிரேக்கக் கடவுள் மற்றும் அரசர்களின் உப்பரிகைக் கண்ணோட்டத்திலிருந்து போரைப் பார்க்க நம்மைத் தூண்டி, போர் என்பது ஒரு பிரம்மாண்டமான சதுரங்க

விளையாட்டு என்ற அபிப்பிராயத்தை நமக்குக் கொடுக்கிறார்.



படம் **35:** வெள்ளை மலைப் போர் **(**ஓவியம்**:** பீட்டர் ஸ்னேயர்ஸ்**).**

நீங்கள் சற்றுக் கூர்ந்து கவனித்தால் (இதற்கு உங்களுக்கு ஒரு உருப்பெருக்குக் கண்ணாடி தேவைப்படும்), வெள்ளை மலைப் போர் ஒரு சதுரங்க விளையாட்டைவிட அதிகச் சிக்கலானது என்பதை நீங்கள் உணருவீர்கள். மேலோட்டமாகப் பார்க்கும்போது ஏதோ வடிவ வரைவியல்சார் ஓவியம்போலத் தெரிகின்ற அது, நீங்கள் கூர்ந்து கவனிக்கும்போது, ஒரு படுகொலையின் கோரக் காட்சியாக மாறுகிறது. ஆங்காங்கே, எதிரிகளைத் தங்கள் துப்பாக்கிகளால் சுட்டுக் கொண்டோ அல்லது ஈட்டி முனைகளைக் கொண்டு அவர்களைக் குத்திவிட்டோ ஓடிக் கொண்டிருக்கின்ற அல்லது அந்த இடத்திலிருந்து தப்பி ஓடிக் கொண்டிருக்கின்ற வீரர்களுடைய முகங்களைக்கூட உங்களால் பார்க்க முடியும். ஆனால், இக்காட்சிகள் இந்த ஒட்டுமொத்தப் படத்திற்குள் இடம்பெற்றிருக்கும் நிலையிலிருந்துதான் தம்முடைய அர்த்தத்தைப் பெறுகின்றன. எடுத்துக்காட்டாக, பீரங்கிக் குண்டு ஒன்று ஒரு வீரனின் தலையைச் சுக்குநூறாக உடைத்துக் கொண்டிருப்பதை நாம் பார்க்கும்போது, அது மாபெரும் கத்தோலிக்க வெற்றியின் ஒரு பகுதி என்பதை நாம் புரிந்து கொள்ளுகிறோம். ஒரு வீரன் புராட்டஸ்டன்டுகளின் சார்பாகப் போரிட்டுக் கொண்டிருக்கின்றான் என்றால், அவனுடைய மரணம் கலகத்திற்கும் மத எதிர்ப்புக்கும் கிடைக்கின்ற ஒரு வெகுமதியாகும். ஒரு வீரன் கத்தோலிக்கப் படையில் சண்டையிட்டுக் கொண்டிருக்கிறான் என்றால், அவனுடைய மரணம் ஒரு முக்கிய நோக்கத்திற்கான ஓர் உன்னதமான தியாகமாகும். நாம் அந்த ஓவியத்தின் மேலே பார்த்தால், அந்தப் போர்க்களத்திற்கு மேலே

தேவதைகள் சுற்றித் திரிந்து கொண்டிருப்பதை நம்மால் பார்க்க முடியும். அவை தம்முடைய கைகளில் பிடித்துக் கொண்டிருக்கின்ற ஒரு வெள்ளைப் பதாகையில், இந்தப் போரில் என்ன நிகழ்ந்தது என்பதும், இந்தப் போர் ஏன் முக்கியம் என்பதும் லத்தீன் மொழியில் விளக்கப்பட்டுள்ளன. அது கூறும் செய்தி இதுதான்: ‘1620ம் ஆண்டு நவம்பர் 8ம் நாளன்று பேரரசர் இரண்டாம் ஃபெர்டினான்டு தன்னுடைய எதிரிகளைத் தோற்கடிப்பதற்குக் கடவுள் உதவினார்.’

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக, மக்கள் ஒரு போரைப் பார்த்தபோது, அவர்கள் கடவுளரையும் பேரரசர்களையும் தளபதிகளையும் மாபெரும் கதாநாயகர்களையும் பார்த்தனர். கடந்த இரண்டு நூற்றாண்டுகளுக்கும் மேலாக, அரசர்களும் தளபதிகளும் அதிகமாக ஒதுக்கப்பட்டு வந்துள்ளனர். கவனம் அவர்களுடைய பக்கமிருந்து விலக்கிக் கொள்ளப்பட்டு, சாதாரணச் சிப்பாயின்மீதும் அவனுடைய அனுபவங்களின்மீதும் குவிக்கப்பட்டு வந்துள்ளது. ‘ஆல் குவயட் ஆன் த வெஸ்ட்டர்ன் ஃபிரன்ட்’ போன்ற போர்ப் புதினங்களும், ‘பிலட்டூன்’ போன்ற போர்த் திரைப்படங்களும், தன்னைப் பற்றியும் உலகத்தைப் பற்றியும் எதுவும் அறியாத ஓர் இளைஞன் ராணுவத்தில் சேருவதிலிருந்து தொடங்குகின்றன. ஆனால் அவன் ஏகப்பட்ட நம்பிக்கைகளையும் மாயைகளையும் தன்னுடன் சுமந்து கொண்டிருக்கிறான். போர் புகழ்மிக்கது என்றும், போருக்கான காரணம் நியாயமானது என்றும், படைத்தளபதி ஒரு மேதை என்றும் அவன் நம்புகிறான். புழுதி, குருதி, மரண வாசனை ஆகியவற்றை உள்ளடக்கிய உண்மையான போரில் ஒருசில வாரங்கள் பங்கு கொண்ட பிறகு, அவனுடைய மாயைகள் ஒவ்வொன்றாகத் தகர்த்தெறியப்படுகின்றன. அவன் அப்போரில் தப்பிப் பிழைத்தால், துவக்கத்தில் ஏதும் அறியாத அப்பாவியாக இருந்த அவன் போர் முடிந்து அங்கிருந்து திரும்பிப் போகும்போது அதிக அறிவார்ந்த ஒருவனாகப் போவான். ஆசிரியர்களும் திரைப்பட இயக்குநர்களும் பேச்சுத் திறமை கொண்ட அரசியல்வாதிகளும் வலியுறுத்தி ஊக்குவிக்கின்ற கண்ணோட்டங்கள் மற்றும் கொள்கைகள்மீது இனியும் அவனுக்கு நம்பிக்கை இருக்காது.

இந்த விவரிப்பு இன்று ஒரு பெரும் தாக்கம் விளைவித்துக் கொண்டிருக்கிறது. ஆசிரியர்களும் திரைப்பட இயக்குநர்களும் பேச்சுத்திறன் கொண்ட அரசியல்வாதிகளும் இதை மீண்டும் மீண்டும் எடுத்துரைத்துக் கொண்டே இருக்கின்றனர். “போர் என்பது நீங்கள் திரைப்படங்களில் பார்ப்பது அல்ல,” என்று ‘அப்போகலிப்ஸ் நௌ,’ ‘ஃபுல் மெட்டல் ஜாக்கெட்,’ ‘பிளாக்ஹாக் டௌன்’ போன்ற பிரபல ஹாலிவுட் திரைப்படங்கள் எச்சரிக்கின்றன. திரைப்படச் சுருளில்,

உரைநடையில், அல்லது கவிதையில் பதிய வைக்கப்படுகின்ற ஒரு சாதாரணப் படைவீரரின் உணர்ச்சிகள்தான் இன்று போரின் உச்சகட்டப் பிரதிபலிப்பாகக் கருதப்படுகின்றன. அதை மதிக்க இன்று அனைவரும் கற்றுக் கொண்டுவிட்டனர்.

குதிரைமீது அமர்ந்து பாய்ந்து செல்லுகின்ற படைத்தளபதிகள்மீதும் போர்முறைகள்மீதும் ஓவியர்கள்கூட ஆர்வம் இழந்துவிட்டனர். மாறாக, சாதாரண வீரன் ஒருவன் எவ்வாறு உணருகிறான் என்பதைச் சித்தரிக்க அவர்கள் கடுமையாக முயற்சிக்கின்றனர். பிரைட்டன்ஃபெல்டு போர் மற்றும் வெள்ளை மலைப் போரை மீண்டும் பாருங்கள். பிறகு, கீழே உள்ள இரண்டு படங்களையும் பாருங்கள்: ஓட்டோ டிக்ஸின் 'போர்' மற்றும் டாம் லீயின் 'அந்த 2,000 கெஜதூர வெறித்தப் பார்வை'. இவை இரண்டும் போர் பற்றி இருபதாம் நூற்றாண்டில் உருவாக்கப்பட்ட மாபெரும் கலைப் படைப்புகளாகக் கருதப்படுகின்றன.

ஓட்டோ டிக்ஸ் முதலாம் உலகப் போரின்போது ஜெர்மானியப் படையில் ஓர் அதிகாரியாகப் பணியாற்றினார். 1944ம் ஆண்டில் பெலீலியு தீவில் நிகழ்ந்த போரை 'லைஃப்' பத்திரிகைக்காக டாம் லீ படம்பிடித்தார். வால்ட்டரும் ஸ்னேயரும் போரை ஒரு ராணுவ நிகழ்வாகவும் அரசியல் நிகழ்வாகவும் பார்த்தனர். குறிப்பிட்டப் போர்களில் என்ன நிகழ்ந்தது என்று நாம் அறிந்து கொள்ள வேண்டும் என்று அவர்கள் நினைத்தனர். டிக்ஸூம் லீயும் போரை ஓர் உணர்ச்சிகரமான நிகழ்வாகப் பார்த்தனர். போர் எப்படி இருக்கும் என்பதை நாம் உணர வேண்டும் என்று அவர்கள் விரும்பினர். தளபதிகளின் திறமைகளைப் பற்றியோ போரின் வியூக விபரங்களைப் பற்றியோ அவர்கள் அக்கறை கொள்ளவில்லை. போர் எந்த இடத்தில் நிகழுகிறது என்பதும் ஒரு பொருட்டல்ல. ஏனெனில், அது எங்கு நடந்தாலும் அது நரகம்தான். லீயின் ஓவியத்தில் இடம்பெற்றுள்ளவர் பெலீலியு போரில் பங்கு கொண்ட ஓர் அமெரிக்க வீரர். ஆனால், அவருடைய முகத்தில் தென்படுகின்ற அதே வெறித்தப் பார்வையை ஈவோ ஜீமா தீவில் ஒரு ஜப்பானிய வீரரின் முகத்திலும் ஸ்டாலின்கிராடில் ஒரு ஜெர்மானிய வீரரின் முகத்திலும், டன்கர்க்கில் ஓர் ஆங்கிலேய வீரரின் முகத்திலும் உங்களால் பார்த்திருக்க முடியும்.

டிக்ஸ் மற்றும் லீயின் ஓவியங்களில், போரின் அர்த்தம், வியூகம் சார்ந்த நடவடிக்கைகளிலிருந்தோ அல்லது தெய்விகப் பிரகடனங்களிலிருந்தோ முளைக்கவில்லை. போரை நீங்கள் புரிந்து கொள்ள விரும்பினால், குன்றின் மேல் நின்று கொண்டிருக்கும் தளபதியைப் பார்க்காதீர்கள். மாறாக, சாதாரணச் சிப்பாய்களின்

கண்களை நேராகப் பாருங்கள். லீயின் ஓவியத்தில், அதிர்ச்சியடைந்துள்ள ஒரு வீரரின் வெறித்தப் பார்வை, போர் பற்றிய கொடூரமான உண்மையை லேசாகத் திரைவிலக்கிக் காட்டுகிறது. டிக்ஸின் ஓவியத்தில் வெளிப்படுகின்ற உண்மை, விஷ வாயுக்களிலிருந்து பாதுகாக்கின்ற முகமூடி ஒன்றின் பின்னால் ஓரளவு மறைக்கப்பட வேண்டிய அளவுக்கு நம்மால் தாங்கிக் கொள்ள முடியாததாக இருக்கிறது. அந்தப் போர்க்களத்திற்கு மேலே எந்த தேவதையும் பறக்கவில்லை. அழுகிக் கொண்டிருக்கும் ஒரு பிணம் மட்டுமே சீரழிந்து போன ஒரு மரக்கிளையிலிருந்து தொங்கிக் கொண்டிருக்கிறது. அதன் விரல் ஒன்று யாரையோ குறைகூறுவதுபோல நீண்டுள்ளது.



படம் **36: ‘**போர்**’ (1929-32) (**ஓவியம்**:** ஓட்டோ டிக்ஸ்**).**



படம் **37: '**அந்த **2,000** கெஜதூர வெறித்தப் பார்வை**' (**ஓவியம்**:** டாம் லீ**).**

இவ்வாறு, டிக்ஸ், லீ போன்ற ஓவியர்கள் போரின் பாரம்பரிய அடுக்கதிகாரத்தைத் தலைகீழாகப் புரட்டிப் போட உதவினர். முந்தைய காலகட்டங்களில் நிகழ்ந்த எண்ணற்றப் போர்கள் நிச்சயமாக இருபதாம் நூற்றாண்டில் நிகழ்ந்த போர்களைப்போல அதே அளவு கொடூரமாக இருந்தன என்றாலும், இருபதாம் நூற்றாண்டில் நிகழ்ந்த போர்களில் மிகக் கொடிய அனுபவங்கள்கூட ஓர் ஒட்டுமொத்தப் போரின் கண்ணோட்டத்தில் பார்க்கப்பட்டதால், அது அவற்றுக்கு ஒரு நேர்மறையான அர்த்தத்தைக் கொடுத்தது. போர் என்பது நரகமாக இருக்கக்கூடும், ஆனால் சொர்க்கத்திற்கான கதவுகளையும் அதுதான் திறந்துவிடுகிறது. வெள்ளை மலைப் போரில் சண்டையிட்டுக் கொண்டிருக்கின்ற ஒரு கத்தோலிக்க வீரர், "நான் துன்புற்றுக் கொண்டிருக்கிறேன் என்பது உண்மைதான். ஆனால் நாங்கள் ஒரு நல்ல

நோக்கத்திற்காகச் சண்டையிட்டுக் கொண்டிருப்பதாகப் போப்பும் பேரரசரும் கூறுவதால், என்னுடைய துயரம் அர்த்தம் வாய்ந்ததுதான்," என்று தனக்குள் கூறிக் கொள்ளக்கூடும். டிக்ஸ் இதற்கு நேர்மாறான தருக்கவாதத்தைப் பயன்படுத்தினார். தனிப்பட்ட அனுபவம்தான் அனைத்து அர்த்தத்திற்குமான மூலாதாரம் என்று அவர் பார்த்தார். எனவே, அவருடைய சிந்தனை இந்த ரீதியில் அமைந்திருந்தது: "நான் துன்புற்றுக் கொண்டிருக்கிறேன். இது மோசமான விஷயம். எனவே, ஒட்டுமொத்தப் போரும் மோசமானதுதான். ஆனால், பேரரசரும் மதகுருக்களும் இப்போரை ஆதரித்தால், விஷயங்களை அவர்கள் தவறாகப் புரிந்து கொண்டிருக்கின்றனர் என்று பொருள்."

## மனிதவாதப் பிரிவினை

மனிதவாதம் தனியொரு அறிவார்ந்த உலகக் கண்ணோட்டம் என்பதாக நாம் இதுவரை விவாதித்து வந்துள்ளோம். உண்மையில், கிறித்தவ மதத்தையும் புத்தமதத்தையும் போன்ற வெற்றிகரமான மதங்களுக்கு ஏற்பட்ட அதே கதி மனிதவாதத்திற்கும் ஏற்பட்டது. மனிதவாதம் பரந்து விரிந்து வளர்ந்தபோது, ஒன்றுக்கொன்று முரண்பட்டப் பல பிரிவுகளாக அது பிளவுபட்டது. மனித அனுபவம்தான் அதிகாரத்திற்கும் அர்த்தத்திற்குமான உச்சகட்ட மூலாதாரம் என்று மனிதவாதப் பிரிவுகள் அனைத்தும் நம்புகின்றன. எனினும், மனித அனுபவத்தை அவை பல்வேறு வழிகளில் அர்த்தப்படுத்துகின்றன.

மனிதவாதம் மூன்று முக்கியக் கிளைகளாகப் பிரிந்தது. ஒவ்வொரு மனிதனும் ஒரு தனித்துவமான தனிநபர் என்றும், அவன் ஒரு தனித்துவமான உட்குரலையும் அனுபவங்களையும் கொண்டுள்ளான் என்றும் பாரம்பரியப் பழமைவாதக் கிளை நம்புகிறது. ஒவ்வொரு மனிதனும் ஒரு வித்தியாசமான கண்ணோட்டத்திலிருந்து இவ்வுலகிற்கு ஒளியூட்டுகின்ற ஓர் ஒற்றை ஒளிக்கீற்றாக இருக்கிறான். அவன் இப்பிரபஞ்சத்திற்கு வண்ணத்தையும் ஆழத்தையும் அர்த்தத்தையும் கூட்டுகிறான். எனவே, தனிநபர்கள் இவ்வுலகை அனுபவிப்பதற்கும், தங்களுடைய உட்குரலைப் பின்தொடருவதற்கும், தங்களுடைய உள்ளார்ந்த உண்மையை வெளிப்படுத்துவதற்கும் அவர்களுக்கு நம்மால் முடிந்த அளவு சுதந்திரத்தை வழங்கியாக வேண்டும். அரசியல், பொருளியல், கலை என்று எதுவாக இருந்தாலும், அவற்றில் நாட்டின் நலனையும் மதக் கொள்கைகளையும்விட மனித விருப்பத்திற்கு அதிக மதிப்புக் கொடுக்கப்பட்டாக வேண்டும். தனிநபர்கள் எவ்வளவு அதிக சுதந்திரத்தை அனுபவிக்கின்றனரோ, உலகம் அவ்வளவு அதிக அழகானதாகவும், அதிகச் செழிப்பானதாகவும், அதிக அர்த்தம் வாய்ந்ததாகவும் இருக்கும். பாரம்பரியப் பழமைவாத மனிதவாதம் சுதந்திரத்தை இவ்வாறு பெரிதும் வலியுறுத்துவதால், அது 'தாராள மனிதவாதம்' அல்லது வெறுமனே 'தாராளவாதம்' என்று அழைக்கப்படுகிறது. அமெரிக்க அரசியலில், தாராளவாதம் பல சமயங்களில் மிகக் குறுகிய நோக்கில் அர்த்தப்படுத்தப்பட்டு, 'பழமைவாதத்தோடு' வேறுபடுத்திக் காட்டப்படுகிறது. ஆனால், பரந்த நோக்கில் பார்க்கும்போது, பெரும்பாலான அமெரிக்கப் பழமைவாதிகளும் தாராளவாதிகளாகவே இருக்கின்றனர்.

எது சிறந்தது என்பதை வாக்காளர்கள் அறிவர் என்று தாராள அரசியல் நம்புகிறது. அழகு என்பது பார்ப்பவர்களின் கண்களில் அடங்கியிருப்பதாக தாராளக் கலை கருதுகிறது. வாடிக்கையாளர்

பக்கம்தான் எப்போதும் நியாயம் இருப்பதாக தாராளப் பொருளியல் நம்புகிறது. ஒரு விஷயம் நமக்கு நல்லவிதமான உணர்வைக் கொடுத்தால், அதை நாம் தயங்காமல் செய்ய வேண்டும் என்று தாராள அறநெறி நமக்கு அறிவுறுத்துகிறது. நமக்கு நாமே சிந்திக்க வேண்டும்; ஏனெனில், அனைத்துக் கேள்விகளுக்குமான விடைகள் நமக்குள்தான் இருக்கின்றன என்று தாராளக் கல்வி நமக்குக் கற்றுக் கொடுக்கிறது.

பத்தொன்பதாம் நூற்றாண்டிலும் இருபதாம் நூற்றாண்டிலும் மனிதவாதம் சமுதாயரீதியாக அதிக நம்பகமானதாக ஆனதாலும், அதிக அரசியல் அதிகாரத்தைக் கைவசப்படுத்தியதாலும், இரண்டு வெவ்வேறு பிரிவுகள் அதிலிருந்து முளைத்தன. முதலாவது, பல்வேறுபட்ட சோசியலிச இயக்கங்களையும் கம்யூனிச இயக்கங்களையும் உள்ளடக்கிய சோசியலிச மனிதவாதம். இரண்டாவது, பரிணாமரீதியான மனிதவாதம். நாஜிக்கள்தான் இதைப் பெரிதும் ஆதரித்தனர். மனித அனுபவம்தான் அர்த்தத்திற்கும் அதிகாரத்திற்குமான உச்சகட்ட மூலாதாரம் என்ற தாராளவாதச் சிந்தனையோடு இவ்விரண்டு பிரிவுகளும் உடன்பட்டன. அவை எந்தவோர் ஆன்மிக சக்தியின்மீதோ அல்லது தெய்விகச் சட்டப் புத்தகத்திலோ நம்பிக்கை கொள்ளவில்லை. எடுத்துக்காட்டாக, பத்து வயதுச் சிறுவர்கள், புகை படிந்த தொழிற்சாலைகளில் நாள்தோறும் பன்னிரண்டு மணிநேரம் வேலை செய்வதில் என்ன தவறு இருக்கிறது என்று நீங்கள் கார்ல் மார்க்ஸிடம் கேட்டால், அது அச்சிறுவர்களுக்குள் வருத்த உணர்வைத் தோற்றுவிக்கும் என்று அவர் பதிலளித்திருப்பார். சுரண்டல், அடக்குமுறை, சமத்துவமின்மை ஆகியவற்றை நாம் தவிர்க்க வேண்டும் என்பதற்குக் காரணம் கடவுள் அவ்வாறு கூறியிருக்கிறார் என்பது அல்ல, மாறாக, மக்களுக்கு அவை துயரத்தை ஏற்படுத்துகின்றன என்பதுதான்.

ஆனாலும், மனித அனுபவத்தை தாராளவாதம் புரிந்து கொண்டுள்ள விதத்தில் குறை இருப்பதாக சோசியலிசவாதிகளும் பரிணாம மனிதவாதிகளும் சுட்டிக்காட்டுகின்றனர். மனித அனுபவம் ஒரு தனிப்பட்ட நிகழ்வு என்று தாராளவாதிகள் நினைக்கின்றனர். ஆனால், இவ்வுலகில் பல தனிநபர்கள் இருக்கின்றனர். அவர்கள் பெரும்பாலும் வெவ்வேறு விஷயங்களை உணருகின்றனர், முரண்பட்ட விருப்பங்களைக் கொண்டுள்ளனர். தனிநபர் அனுபவங்களிலிருந்துதான் அனைத்து அர்த்தமும் அதிகாரமும் முளைவிடுகின்றன என்றால், வேறுபட்ட இத்தகைய அனுபவங்களுக்கு இடையேயான முரண்பாடுகளை நீங்கள் எப்படிக் களைவீர்கள்?

2015ம் ஆண்டு ஜூலை 17ம் நாளன்று, அடைக்கலம் நாடி

ஜெர்மனிக்கு வந்திருந்த, லெபனான் நாட்டைச் சேர்ந்த பாலஸ்தீனியப் பருவ வயதுச் சிறுமி ஒருத்திக்கு ஜெர்மானிய சான்சலரான அங்கெலா மேர்க்கெல்லை நேரடியாக சந்திக்கும் வாய்ப்புக் கிட்டியது. அவளும் அவளுடைய குடும்பத்தினரும் விரைவில் லெபனானுக்குத் திருப்பி அனுப்பப்படும் நிலையில் இருந்தனர். ரீம் என்ற பெயர் கொண்ட அச்சிறுமி, ஜெர்மானிய மொழியில் சரளமாகப் பேசினாள். அவள் மேர்க்கெல்லிடம், "நான் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும்போது மற்ற எல்லோரும் வாழ்க்கையை மகிழ்ச்சியாக அனுபவித்துக் கொண்டிருப்பதைப் பார்ப்பது மிகமிகக் கடினமாக இருக்கிறது. என்னுடைய எதிர்காலம் எனக்கு எதைக் கொண்டுவரும் என்று எனக்குத் தெரியவில்லையே!" என்று கூறினாள். அதற்கு மேர்க்கெல், "அரசியல் மிகக் கடினமானது," என்று பதிலளித்துவிட்டு, லெபனானில் ஆயிரக்கணக்கான பாலஸ்தீனிய அகதிகள் இருக்கின்றனர் என்றும், ஜெர்மனியால் அவர்கள் எல்லோரையும் ஏற்றுக் கொள்ள முடியாது என்றும் விளக்கினார். இந்த நேரடியான பதிலைக் கேட்டு அதிர்ச்சியுற்ற ரீம், தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் அழுதாள். மேர்க்கெல் அவளுடைய முதுகில் தடவிக் கொடுத்தார், ஆனால் அவர் தன்னுடைய தீர்மானத்தில் உறுதியாக இருந்தார்.

இதைத் தொடர்ந்து, அவர் அப்பெண்ணின் உணர்ச்சிகளைப் புரிந்து கொள்ளாமல் கல்நெஞ்சத்துடன் நடந்து கொண்டதாகப் பொதுமக்கள் கோபம் கொண்டனர். தனக்கு எதிராக எழுந்த விமர்சனங்களை மட்டுப்படுத்துவதற்காக மேர்க்கெல் தன்னுடைய தீர்மானத்தை மாற்றி, ரீமுக்கும் அவளுடைய குடும்பத்தினருக்கும் ஜெர்மனியில் அடைக்கலம் கொடுத்தார். அதைத் தொடர்ந்து வந்த மாதங்களில், அவர் ஜெர்மனியின் கதவை மேலும் அகலமாகத் திறந்து ஆயிரக்கணக்கான அகதிகளை ஜெர்மனிக்குள் வரவேற்றார். ஆனால் உங்களால் எல்லோரையும் திருப்திப்படுத்த முடியாதல்லவா? விரைவில், மேர்க்கெல் மிதமிஞ்சி உணர்ச்சிவசப்பட்டுவிட்டதாகவும் அவர் போதுமான அளவு உறுதியானதொரு நிலைப்பாட்டை எடுக்கவில்லை என்றும் பல்வேறு தரப்புகளிலிருந்தும் அவர் தீவிர விமர்சனத்திற்கு ஆளானார். மேர்க்கெல் தன் தீர்மானத்தை மாற்றி அகதிகளுக்கு அடைக்கலம் கொடுத்தது தங்களுடைய குழந்தைகளின் வாழ்க்கைத் தரத்தை வெகுவாகத் தாழ்த்திவிடும் என்றும், அவர்கள் இஸ்லாமிய மதத்திற்கு மாறக்கூடிய வாய்ப்பு உருவாகும் என்றும் எண்ணற்ற ஜெர்மானியப் பெற்றோர் பயந்தனர். முன்பின் தெரியாதவர்களுக்காகத் தங்களுடைய குடும்பங்களின் அமைதியையும் செழிப்பையும் தாங்கள் ஏன் வீணாகப் பணயம் வைக்க வேண்டும் என்று அவர்கள் கேட்டனர்.

அந்த அந்நியர்கள் தாராளவாத விழுமியங்களை மதிக்காதவர்களாகக்கூட இருக்கலாம் என்று அவர்கள் வாதிட்டனர். இவ்விஷயம் எல்லோருடைய மனங்களிலும் வலிமையாக வேரூன்றியுள்ளது. பரிதவிக்கும் அகதிகளின் உணர்வுகளுக்கும் கவலை கொண்ட ஜெர்மானியர்களின் உணர்வுகளுக்கும் இடையேயான முரண்பாடுகளை எப்படித் தீர்ப்பது?

இப்படிப்பட்ட முரண்பாடுகள் குறித்து தாராளவாதிகள் எப்போதும் கவலைப்படுகின்றனர். லாக், ஜெஃபர்சன், மில், மற்றும் அவர்களுடைய சகாக்களின் சிறந்த முயற்சிகள்கூட, இப்படிப்பட்டப் புதிர்களுக்கு ஒரு வேகமான மற்றும் சுலபமான தீர்வைக் கண்டுபிடிக்கத் தவறியுள்ளன. ஜனநாயகரீதியான தேர்தல்களை நடத்துவது உதவாது. ஏனெனில், அந்தத் தேர்தல்களில் யார் வாக்களிக்கப் போகிறார்கள் என்ற கேள்வி எழும். வெறும் ஜெர்மானியக் குடிமக்கள் மட்டுமா அல்லது ஜெர்மனிக்குக் குடிபெயர விரும்புகின்ற லட்சக்கணக்கான ஆசியர்கள் மற்றும் ஆப்பிரிக்கர்கள்கூடவா? மற்றக் குழுவினரின் உணர்வுகளை நிராகரித்துவிட்டு ஒரே ஒரு குழுவின் உணர்வுகளுக்கு மட்டும் ஏன் முக்கியத்துவம் கொடுக்க வேண்டும்? அதேபோல, இஸ்ரேலின் 80 லட்சம் மக்களிடமும் அரபு நாடுகள் கூட்டமைப்பைச் சேர்ந்த 35 கோடி மக்களிடமும் ஒரு பொது வாக்கெடுப்பு நடத்தி அவ்விரு தரப்பினருக்கும் இடையேயான பிரச்சனைக்குத் தீர்வு காண முடியாது. இஸ்ரேலியர்கள் இப்படிப்பட்ட ஒரு தீர்வை மனதார ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்.

ஜனநாயகமான முறையில் வாக்கெடுப்பு நடத்தப்பட வேண்டும் என்றால், வாக்காளர்களுக்கு இடையே ஒரு பொதுவான அடிப்படைப் பிணைப்பு இருக்க வேண்டும். மற்ற வாக்காளர்களுடைய அனுபவங்கள் எனக்கு அந்நியமானவையாக இருக்கும்போதும், அவர்களால் என்னுடைய உணர்வுகளைப் புரிந்து கொள்ள முடியாது என்றும் நான் ஆர்வம் கொண்டுள்ள முக்கியமான விஷயங்கள் குறித்து அவர்களுக்கு அக்கறை இல்லை என்றும் நான் நம்பும்போதும், நூற்றுக்கு ஒன்று என்ற கணக்கில் வாக்கெடுப்பில் நான் தோற்றால்கூட, அவர்களுடைய தீர்ப்பை ஏற்றுக் கொள்ளுவதற்கு என்னிடம் எந்த நியாயமான காரணமும் இருக்காது. பொதுவான மத நம்பிக்கைகள், தேசியக் கட்டுக்கதைகள் போன்ற ஏற்கனவே ஏதோ பொதுவான பிணைப்பு இருக்கின்ற மக்களின் விஷயத்தில்தான் ஜனநாயகரீதியான தேர்தல்கள் வேலை செய்யும். அடிப்படையான விஷயங்களில் ஏற்கனவே உடன்பட்டுள்ள மக்களுக்கு இடையேயான முரண்பாடுகளைக் களைவதற்கான ஒரு வழிதான் அத்தேர்தல்கள்.

அதன்படி, தாராளவாதம் பல விஷயங்களில் பழமையான கூட்டு

அடையாளங்கள் மற்றும் குழு உணர்வுகளோடு ஒன்றுகலந்து நவீன தேசியவாதமாக மாறியுள்ளது. இன்று பலர் தேசியவாதத்தை தாராளவாதத்திற்கு எதிரான சக்திகளோடு தொடர்புபடுத்துகின்றனர். ஆனால் பத்தொன்பதாம் நூற்றாண்டின்போது தேசியவாதம் தாராளவாதத்துடன் மிக நெருக்கமாக ஒத்திசைந்து இருந்தது. தனிநபர்களுடைய தனித்துவமான அனுபவங்களை தாராளவாதிகள் கொண்டாடுகின்றனர். ஒவ்வொரு நபரும் தனித்துவமான உணர்வுகளையும் சுவைகளையும் குணாம்சங்களையும் கொண்டுள்ளார். அவை மற்றவர்களுக்குத் தீங்கு விளைவிக்காதவரை, பிறருடைய மனங்களை எந்த விதத்திலும் காயப்படுத்தாதவரை, அவற்றை வெளிப்படுத்துவதற்கான சுதந்திரம் அவருக்கு இருக்க வேண்டும். அதேபோல, கிஸெப் மசீனி போன்ற பத்தொன்பதாம் நூற்றாண்டு தேசியவாதிகள் நாடுகளுடைய தனித்துவத்தைப் போற்றினார். மனிதர்களுடைய பல உணர்வுகள் சமூகம் சார்ந்தவை என்று அவர்கள் வலியுறுத்தினர். எடுத்துக்காட்டாக, போல்க்கா நடனத்தை நீங்கள் தனியாக ஆட முடியாது. ஜெர்மானிய மொழியை உங்களால் தனியொருவராகக் கண்டுபிடிக்கவோ அல்லது பாதுகாக்கவோ முடியாது. வார்த்தை, நடனம், உணவு, பானம் ஆகியவற்றைப் பயன்படுத்தி ஒவ்வொரு நாடும் தன்னுடைய உறுப்பினர்களுக்குப் பல்வேறு அனுபவங்களைக் கொடுக்கிறது, தனக்கென்று சொந்தமாக ஒரு தனித்துவத்தை வளர்த்துக் கொள்ளுகிறது.

இந்தத் தனித்துவமான தேசிய அனுபவங்கள் சகிப்புத்தன்மை இல்லாத பேரரசுகளால் அடக்கி ஒடுக்கப்பட்டு முற்றிலுமாக ஒழித்துக் கட்டப்படுவதிலிருந்து அவற்றைப் பாதுகாக்க தாராள மனிதவாதிகள் கடுமையாக முயற்சிக்கின்றனர். நாடுகள் ஓர் அமைதியான சமூகமாக இருப்பதுபோலவும், அவை ஒவ்வொன்றும் தம்முடைய அண்டை நாடுகளின் உணர்வுகளைக் காயப்படுத்தாமல் தம்முடைய சமூக உணர்வுகளை வெளிப்படுத்துவதற்கும் ஆய்வு செய்வதற்குமான சுதந்திரம் அவற்றுக்கு இருப்பதுபோலவும் அவர்கள் தங்கள் மனங்களில் காட்சிப்படுத்தினர். இதுதான் ஐரோப்பிய ஒன்றியத்தின் அதிகாரபூர்வமான கொள்கையாக இருந்து வருகிறது. “ஐரோப்பா ‘வேற்றுமையில் ஒற்றுமை’ கொண்ட ஒன்று. ஐரோப்பாவின் பல்வேறுபட்ட மக்கள் தொடர்ந்து தங்கள் சொந்த தேசிய அடையாளங்கள் குறித்துப் பெருமிதத்துடன் இருக்கின்றனர்,” என்று 2004ல் உருவாக்கப்பட்ட அதன் அரசியலமைப்புச் சட்டம் கூறுகிறது. ஜெர்மனியின் தனித்துவமான சமூக அனுபவங்களைப் பாதுகாப்பதன் முக்கியத்துவம், தங்கள் நாட்டிற்குக் குடிபெயர்ந்து வர

விரும்புகின்றவர்களுக்கு ஜெர்மனியின் கதவுகளைத் திறந்துவிடுவதை தாராளவாத ஜெர்மானியர்கள்கூட எதிர்க்கும்படி செய்கிறது.

தாராளவாதமும் தேசியவாதமும் கூட்டு சேருவது எல்லாக் குழப்பங்களையும் தீர்ப்பதில்லை. உண்மையில், அவை பல புதிய குழப்பங்களை உருவாக்கின. சமூக அனுபவங்களின் மதிப்பைத் தனிநபர்களின் அனுபவங்களின் மதிப்போடு நீங்கள் எப்படி ஒப்பிடுவீர்கள்? போல்க்கா நடனம், ஜெர்மானிய சாஸேஜ் இறைச்சி, ஜெர்மானிய மொழி ஆகியவற்றைப் பராமரித்துப் பாதுகாப்பது லட்சக்கணக்கான அகதிகள் வறுமைக்கும் மரணத்திற்கும் பலியாகும்படி விடப்படுவதை நியாயப்படுத்துகிறதா? 1933ல் ஜெர்மனியிலும், 1861ல் அமெரிக்காவிலும், 1936ல் ஸ்பெயினிலும், 2011ல் எகிப்திலும் நிகழ்ந்ததைப்போல, தம்முடைய அடையாளத்தின் வரையறை குறித்து நாடுகளுக்குள் அடிப்படைச் சர்ச்சைகள் எழும்போது என்ன நிகழும்? இப்படிப்பட்டச் சூழ்நிலைகளில், ஜனநாயகரீதியான தேர்தல்களை நடத்துவது ஒரு தீர்வாகாது. ஏனெனில், ஒன்றுக்கொன்று எதிராண அணிகள் அந்தத் தேர்தல்களிலிருந்து கிடைக்கும் முடிவுகளை மதிப்பதற்கு எந்தக் காரணமும் இருப்பதில்லை.

இறுதியாக, நீங்கள் தேசியவாதப் போல்க்கா நடனத்தை ஆடும்போது, அந்த நடனத்தில் நீங்கள் எடுத்து வைக்கும் ஒரு சிறிய, ஆனால் முக்கியமான அடி, உங்கள் நாடு மற்ற நாடுகளிலிருந்து வித்தியாசமானது என்ற உங்கள் நம்பிக்கையை, உங்கள் நாடு மற்ற எல்லா நாடுகளையும்விடச் சிறந்தது என்ற நம்பிக்கையாக மாற்றிவிடக்கூடும். ஜெர்மானியர்கள், இத்தாலியர்கள், போலந்து நாட்டினர், ஸ்லொவீனிய மக்கள் ஆகியோருடைய தனித்துவமான அனுபவங்களை ஹேப்ஸ்பர்க் பேரரசும் ரஷ்ய 'ஜார்' பேரரசும் மதிக்க வேண்டும் என்று பத்தொன்பதாம் நூற்றாண்டு தாராள தேசியவாதம் கட்டாயமாக எதிர்பார்த்தது. ஆனால், இருபதாம் நூற்றாண்டின் தீவிர தேசியவாதமோ, ஒரு வித்தியாசமான தாளத்திற்கு நடனமாடிய மக்கள்மீது படையெடுப்பதிலும் அவர்களுக்காக வதைமுகாம்களை உருவாக்குவதிலும் ஈடுபட்டது.

***

சோசியலிச தேசியவாதம் முற்றிலும் வேறுபட்டதொரு பாதையைத் தேர்ந்தெடுத்திருக்கிறது. மற்றவர்களுடைய அனுபவங்கள்மீது கவனம் செலுத்துவதற்கு பதிலாக நாம் நம்முடைய சொந்த அனுபவங்கள்மீது கவனம் செலுத்தும்படி செய்ததற்காக சோசியலிசவாதிகள் தாராளவாதிகளைக் குறை கூறுகின்றனர். மனித அனுபவம்தான் அனைத்து அர்த்தங்களுக்குமான மூலம் என்பது உண்மைதான், ஆனால்

இவ்வுலகில் கோடிக்கணக்கான மக்கள் இருக்கின்றனர்; அவர்கள் எல்லோருமே என்னைப்போலவே மதிப்பு வாய்ந்தவர்கள்தான். தாராளவாதம் என்னுடைய பார்வையை அகவயமாகத் திருப்புகிறது, என்னுடைய தனித்துவத்தையும் என்னுடைய நாட்டின் தனித்துவத்தையும் வலியுறுத்துகிறது. ஆனால் சோசியலிசம், நான் என்மீதும் என் உணர்வுகள்மீதும் அளவுக்கதிகமாக கவனம் செலுத்துவதை நிறுத்திவிட்டு, மற்றவர்களுடைய உணர்வுகள்மீதும் என்னுடைய நடவடிக்கைகள் அவர்களுடைய அனுபவங்கள்மீது எவ்வாறு தாக்கம் ஏற்படுத்துகின்றன என்பதன்மீதும் கவனம் செலுத்தும்படி வலியுறுத்துகிறது. உலக சமாதானம் என்பது ஒவ்வொரு நாட்டின் தனித்துவத்தையும் கொண்டாடுவதன் மூலம் அடையப்படுவதில்லை, மாறாக, உலகத் தொழிலாளர்கள் அனைவரையும் ஒருங்கிணைப்பதன் மூலமாகவே அடையப்படுகிறது. அதேபோல, ஒவ்வொரு நபரும் தன்னுடைய அகத்தை ஆய்வு செய்வதன் மூலம் சமூக இணக்கத்தை அடைய முடியாது, மாறாக, ஒவ்வொருவரும் தங்களுடைய சொந்த விருப்பங்களை விடுத்து மற்றவர்களுடைய தேவைகளுக்கும் அனுபவங்களுக்கும் முன்னுரிமை கொடுப்பதன் மூலமாகவே அதை அடைய முடியும்.

ஒருவர் தன்னுடைய சொந்த அக உலகத்தை ஆய்வு செய்வதன் மூலம் தன்னுடைய மனிதாபிமான உணர்வையும் மற்றவர்களைப் பற்றிய புரிதலையும் வளர்த்துக் கொள்ளுவதாக ஒரு தாராளவாதி எதிர்வாதம் செய்யக்கூடும். ஆனால் அப்படிப்பட்ட நியாயப்படுத்துதல் லெனினிடமோ அல்லது மாசேதுங்கிடமோ பலனளித்திருக்காது. அவர்கள் ஒருபோதும் தங்களுடைய கருத்துக்களையும் அபிப்பிராயங்களையும் மாற்றிக் கொண்டிருக்க மாட்டார்கள். சுய ஆய்வு என்பது நமக்கு நாமே செல்லம் கொடுத்துக் கொள்ளுகின்ற வகையில் அமைந்த முதலாளித்துவ வர்க்கத்தினரின் ஒரு குறைபாடு என்றும், நான் அகவயமாக என்னுடன் தொடர்பு கொள்ள முயற்சிக்கும்போது நான் ஏதேனும் ஒரு முதலாளித்துவப் பொறியில் சிக்குவதற்கான வாய்ப்பு அதிகம் என்றும் அவர்கள் விளக்கியிருப்பர். என்னுடைய தற்போதைய அரசியல் கண்ணோட்டங்கள், என்னுடைய விருப்புகள் மற்றும் வெறுப்புகள், என்னுடைய பொழுதுபோக்கு நடவடிக்கைகள், என்னுடைய இலக்குகள் ஆகியவை என்னுடைய உண்மையான இயல்பைப் பிரதிபலிப்பதில்லை. மாறாக, என்னுடைய வளர்ப்புமுறையையும் சமூகச் சூழல்களையும் அவை பிரதிபலிக்கின்றன. அவை என்னுடைய வர்க்கத்தைச் சார்ந்திருக்கின்றன. அவை என்னுடைய அக்கம்பக்கத்தினராலும்

என்னுடைய பள்ளிக்கூடத்தாலும் செதுக்கப்படுகின்றன. பணக்காரர்களும் ஏழைகளும் பிறந்ததிலிருந்தே மூளைச்சலவை செய்யப்படுகின்றனர். ஏழைகளைக் கண்டுகொள்ளக்கூடாது என்று பணக்காரர்களுக்குக் கற்றுக் கொடுக்கப்படுகிறது. தங்களுடைய சொந்த ஆர்வங்களைக் கைவிடும்படி ஏழைகளுக்குக் கற்றுக் கொடுக்கப்படுகிறது. அவர்கள் தங்களுடைய சொந்தப் பண்புநலன்களையும் எண்ணங்களையும் பற்றி எவ்வளவு சிந்தித்துப் பார்த்தாலும் சரி (சுயஆய்வுச் சிந்தனை), எவ்வளவு மனநல ஆலோசனை பெற்றாலும் சரி, அது அவர்களுக்கு உதவாது. ஏனெனில், மனநல ஆலோசகர்களும் முதலாளித்துவ அமைப்புமுறைக்காகத்தான் வேலை செய்து கொண்டிருக்கின்றனர்.

சுயஆய்வுச் சிந்தனை உண்மையில் நான் என்னைப் பற்றிய உண்மையைப் புரிந்து கொள்ளுவதிலிருந்து மேலும் அதிகமாக என்னை விலக்கிக் கூட்டிச் செல்ல மட்டுமே செய்யும். ஏனெனில், அது தனிப்பட்டத் தீர்மானங்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கிறது, சமூகச் சூழல்கள்மீது போதிய அக்கறை கொள்ளுவதில்லை. நான் பணக்காரனாக இருந்தால், நான் மேற்கொண்ட அறிவார்ந்த தேர்ந்தெடுப்புகள்தான் அதற்குக் காரணம் என்று நான் முடிவு செய்கிறேன். நான் ஏழ்மையில் உழன்று கொண்டிருந்தால், நான் ஏதோ சில தவறுகள் செய்திருக்க வேண்டும் என்று அர்த்தம். நான் மனச்சோர்வுக்கு ஆளாகியிருந்தால், ஒரு தாராளவாதச் சிகிச்சையாளர் என்னுடைய பெற்றோரைக் குறை கூறி, வாழ்வில் நான் ஏதேனும் சில புதிய இலக்குகளை நிர்ணயிக்க என்னை ஊக்குவிக்கக்கூடும். பெருமுதலாளிகளால் நான் சுரண்டப்பட்டுக் கொண்டிருப்பதால்தான் நான் மனச்சோர்வுக்கு ஆளாகியிருக்கிறேன் என்றும், தற்போதைய சமூக அமைப்புமுறையில் நான் என்னுடைய இலக்குகளை அடைவதற்கு எந்த வாய்ப்பும் இல்லை என்றும் நான் என்னுடைய மனநல ஆலோசகரிடம் கூறினால், நான் என்னுடைய உள்ளார்ந்த கஷ்டங்களை 'சமூக அமைப்புமுறைக்குள்' புகுத்திக் கொண்டிருப்பதாகவும், என் தாயாருடன் எனக்கு இருக்கும் பிரச்சனைகளைப் 'பெருமுதலாளிகளுக்குள்' நான் புகுத்திக் கொண்டிருப்பதாகவும் அவர் கூறக்கூடும்.

சோசியலிசத்தைப் பொருத்தவரை, நான் என்னுடைய தாயாரையும் என்னுடைய உணர்ச்சிகளையும் என்னுடைய மனப்போக்குகளையும் பற்றிப் பேசுவதில் பல ஆண்டுகளைச் செலவிடுவதற்கு பதிலாக, பின்வரும் கேள்விகளை என்னிடமே நான் கேட்டுக் கொள்ள வேண்டும்: 'என் நாட்டில் உற்பத்திக்கான வழிகள் யாருக்குச் சொந்தமாக

இருக்கின்றன? அதன் முக்கிய ஏற்றுமதிகளும் இறக்குமதிகளும் எவை? ஆட்சி செய்து கொண்டிருக்கின்ற அரசியல்வாதிகளுக்கும் சர்வதே வங்கிச் சேவைக்கும் என்ன தொடர்பு இருக்கிறது?' தற்போது நிலவும் சமூகப் பொருளாதார அமைப்புமுறையைப் புரிந்து கொள்ளுவதன் மூலமாகவும், மற்ற அனைவருடைய அனுபவங்களைக் கருத்தில் எடுத்துக் கொள்ளுவதன் மூலமாகவும் மட்டுமே நான் எவ்வாறு உணருகிறேன் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியும். ஒரு பொதுவான நடவடிக்கை எடுப்பதன் மூலமாக மட்டுமே அமைப்புமுறையை நம்மால் மாற்ற முடியும். ஆனாலும், அனைத்து மனிதர்களின் அனுபவங்களையும் கணக்கில் எடுத்துக் கொண்டு அவை ஒவ்வொன்றையும் பரஸ்பரம் மற்றவற்றோடு ஒரு நியாயமான வழியில் ஒப்பிட்டு சீர்தூக்கிப் பார்க்க யாரால் முடியும்?

அதனால்தான் சோசியலிசவாதிகள் சுயஆய்வுச் சிந்தனையை நிராகரிக்கின்றனர். நமக்காக இவ்வுலகைப் புரிந்து கொள்ளுவதை நோக்கமாகக் கொண்ட, சோசியலிசக் கட்சிகள், தொழிற்சங்கங்கள் போன்ற வலிமையான கூட்டு அமைப்புகள் நிலைப்படுத்தப்படுவதை அவர்கள் ஊக்குவிக்கின்றனர். தாராள அரசியலில், எது சிறந்தது என்பதை வாக்காளர் அறிந்திருக்கிறார்; தாராளப் பொருளியலில், வாடிக்கையாளரின் பக்கம்தான் நியாயம் இருக்கிறது; சோசியலிச அரசியலில், எது சிறந்தது என்பதைக் கட்சிகள் அறிந்திருக்கின்றன; சோசியலிசப் பொருளியலில், தொழிற்சங்கங்கள் பக்கம்தான் எப்போதும் நியாயம் இருக்கிறது. அதிகாரமும் அர்த்தமும் இன்னும் மனித அனுபவத்திலிருந்துதான் வருகின்றன (கட்சியும் தொழிற்சங்கமும் மக்களை உள்ளடக்கியவையே, மனிதத் துயரத்தைத் தணிப்பதற்காகவே அவை செயல்படுகின்றன) என்றாலும், தனிநபர்கள் தங்களுடைய தனிப்பட்ட உணர்வுகளுக்குச் செவி சாய்ப்பதற்கு பதிலாக, கட்சியும் தொழிற்சங்கமும் கூறுவதைக் காதுகொடுத்துக் கேட்க வேண்டும்.

***

முரண்பட்ட மனித அனுபவங்கள் எனும் பிரச்சனைக்குப் பரிணாமரீதியான மனிதவாதம் ஒரு வித்தியாசமான தீர்வைக் கொண்டுள்ளது. டார்வினுடைய பரிணாம வளர்ச்சிக் கோட்பாடு என்ற வலிமையான அடித்தளத்தில் வேரூன்றியுள்ள இந்த மனிதவாதம், முரண்பாடு என்பது நாம் கொண்டாட வேண்டிய ஒன்றே அன்றி, நாம் புலம்பும்படியான ஒன்றல்ல என்று வலியுறுத்துகிறது. முரண்பாடுதான் இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறையின் கச்சாப் பொருள், அதுதான் பரிணாம வளர்ச்சியை முன்னோக்கி உந்தித் தள்ளுகிறது. சில மனிதர்கள் மற்றவர்களைவிட உயர்ந்தவர்களாக இருக்கின்றனர். மனித

அனுபவங்களுக்கிடையே மோதல்கள் ஏற்படும்போது, இருப்பதிலேயே மிக வலிமையான மனிதர்கள் மற்றவர்கள்மீது ஏறி அவர்களை மிதித்துவிட்டு முன்னேறிச் செல்ல வேண்டும். காட்டு ஓநாய்களை முற்றிலுமாக அழித்து ஒழித்துவிட்டு, பண்ணைப்படுத்தப்பட்டச் செம்மறியாடுகளை நம்முடைய தன்னலத்திற்காக ஈவு இரக்கமின்றிச் சுரண்டுவதற்கு எந்த வகையான தருக்கவாதம் மனிதர்களைத் தூண்டுகிறதோ, அதே வாதம்தான் குறைவாற்றல் மனிதர்களை உயராற்றல் மனிதர்கள் அடக்கியாளுவதற்கும் அதிகாரம் வழங்குகிறது. அதன்படி, ஐரோப்பியர்கள் ஆப்பிரிக்கர்களை வெற்றி கொண்டது ஒரு நல்ல விஷயம், சாமர்த்தியமான தொழிலதிபர்கள் அவ்வளவாக அறிவு இல்லாதவர்களை திவாலாக்குவதும் ஒரு நல்ல விஷயம்தான். நாம் இந்தப் பரிணாமரீதியான தருக்கவாதத்தைக் கடைபிடித்தால், மனிதகுலம் படிப்படியாக அதிக வலிமையடையும், அதிக ஆரோக்கியமடையும். இது அதிமனிதர்கள் உருவாக வழி வகுக்கும். பரிணாம வளர்ச்சி ஹோமோ சேப்பியன்ஸோடு நின்றுவிடவில்லை - அது பயணிக்க வேண்டிய தூரம் இன்னும் ஏராளமாக இருக்கிறது. ஆனால், மனித உரிமைகள் அல்லது மனித சமத்துவம் என்ற பெயரில், திடகாத்திரமான மனிதர்களை நாம் பலவீனப்படுத்தினால், அதிமனிதர்கள் உருவாவதை அது தடுக்கும் என்பதோடு, ஹோமோ சேப்பியன்ஸ் சீரழிந்து முற்றிலும் துடைத்தெறியப்படுவதற்கும் வழி வகுக்கக்கூடும் என்பது பரிணாமரீதியான மனிதவாதத்தின் வாதமாகும்.

அதிமனிதர்கள் வரவிருப்பதாகக் கட்டியம் கூறுகின்ற இந்த உயராற்றல் மனிதர்கள் யார்? அவர்கள் ஒட்டுமொத்த இனங்களாகவோ, குறிப்பிட்டப் பழங்குடியினராகவோ அல்லது தனித்துவமான மேதைகளாகவோ இருக்கக்கூடும். அவர்கள் யாராக இருந்தாலும் சரி, அவர்கள் அதிகச் சிறப்பான திறன்களைப் பெற்றவர்களாக இருப்பதும், புதிய அறிவின் உருவாக்கம், அதிக மேம்பட்டத் தொழில்நுட்பம், அதிகச் செழிப்பான சமுதாயங்கள், அதிக அழகான கலை ஆகியவற்றில் குறிப்பிடத்தக்கப் பங்களிப்புகளை வழங்குகின்றவர்களாக இருப்பதும்தான் அவர்களை உயராற்றல் கொண்டவர்களாக ஆக்குகின்றன. ஒரு ஐன்ஸ்டீன் அல்லது ஒரு பீத்தோவனின் அனுபவம், ஒன்றுக்கும் உதவாத ஒரு குடிகாரனின் அனுபவத்தைவிட அதிக மதிப்பு வாய்ந்தது. எனவே, அவர்கள் இருவரும் சமமான தகுதி வாய்ந்தவர்கள்போல அவர்களை நடத்துவது நகைப்புக்கிடமானது. அதேபோல, ஒரு குறிப்பிட்ட நாடு தொடர்ந்து மனித முன்னேற்றத்தில் முன்னிலை வகித்து வந்துள்ளது என்றால், மனிதகுலத்தின் வளர்ச்சிக்கு மிகச் சிறிய அளவே பங்களித்துள்ள

அல்லது எந்த விதத்திலும் பங்களிக்காத நாடுகளைவிட அதிக ஆற்றல் கொண்ட நாடாக அதை நாம் கருத வேண்டும். அதுதான் சரியானதும்கூட.

எனவே, ஓட்டோ டிக்ஸ் போன்ற தாராளவாதக் கலைஞர்களுக்கு நேரெதிராக, மனிதர்களுக்குக் கிடைக்கின்ற போர் அனுபவம் மிகவும் மதிப்பு வாய்ந்தது என்றும், மிகவும் இன்றியமையாதது என்றும் பரிணாமரீதியான மனிதவாதம் நம்புகிறது. 'த தேர்டு மேன்' என்ற திரைப்படம் இரண்டாம் உலகப் போர் முடிந்தவுடன் வியன்னாவில் நடைபெறுவதுபோல எடுக்கப்பட்டுள்ளது. சமீபத்தில் நடந்த சண்டையை நினைத்துப் பார்க்கின்ற ஹாரி லைம் என்ற கதாபாத்திரம் இப்படிக் கூறுகிறது: "ஒட்டுமொத்தமாகப் பார்க்கும்போது, அந்தப் போர் ஒன்றும் அவ்வளவு கொடூரமானது அல்ல. இத்தாலியில் 30 ஆண்டுகள் போர்ஜா வம்சத்தினரின் ஆட்சியின்கீழ் போரும் கொலையும் சித்தரவதையும் ரத்தச்சிதறலும் நிகழ்ந்தபோதிலும், அதே ஆட்சியில்தான் மைக்கலேஞ்சலோ, லியொனார்டோ டாவின்சி போன்றோர் உருவாக்கப்பட்டனர், மறுமலர்ச்சி இயக்கமும் தோற்றுவிக்கப்பட்டது. ஆனால், சுவிட்சர்லாந்தில் மக்களிடையே சகோதரத்துவ அன்பு நிலவியது, அங்கு 500 ஆண்டுகாலம் மக்களாட்சியும் அமைதியும் நிலவியது, ஆனால் அவையெல்லாம் சேர்ந்து எதை உருவாக்கின? குக்கூ கடிகாரம்!" லைம் கூறிய அத்தனையும் தவறு. நவீன ஐரோப்பாவின் துவக்ககாலத்தில் சுவிட்சர்லாந்துதான் மிகுந்த ரத்த வெறி பிடித்த நாடாக இருந்தது (கூலிப்படை வீரர்கள்தான் அதன் முக்கிய ஏற்றுமதியாக இருந்த காலம் அது). ஜெர்மானியர்கள்தான் உண்மையில் குக்கூ கடிகாரத்தைக் கண்டுபிடித்தனர். ஆனால், போர் அனுபவம்தான் மனிதகுலத்தைப் புதிய சாதனைகளை நோக்கி உந்தித் தள்ளுகிறது என்ற லைமின் கருத்தோடு ஒப்பிடுகையில் உண்மைத் தகவல்கள் இங்கு அவ்வளவு முக்கியமல்ல. போர் இறுதியில் இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறை சுதந்திரமாகச் செயல்பட அனுமதிக்கிறது. அது பலவீனமானவர்களை அழித்து, ஆக்ரோஷமும் லட்சிய வெறியும் கொண்டவர்களுக்கு வெகுமதி அளிக்கிறது. போர் என்பது வாழ்க்கையைப் பற்றிய உண்மையை வெளிப்படுத்துகிறது, அதிகாரத்திற்கும் புகழுக்கும் வெற்றிப்பேறுக்குமான ஆழ்விருப்பத்தைத் தூண்டுகிறது. போர் என்பது வாழ்வின் பள்ளிக்கூடம் என்றும், எது ஒருவனைக் கொல்லுவதில்லையோ அது அவனை வலிமைப்படுத்துகிறது என்றும் ஜெர்மானிய தத்துவவியலாளரான நீட்சே அதைத் தொகுத்துரைத்தார்.

இதே போன்ற யோசனைகளை ஆங்கிலேய ராணுவத்தைச் சேர்ந்த லெஃப்டினன்ட் ஹென்ரி ஜோன்ஸும் வெளிப்படுத்தினார். முதலாம் உலகப் போரில் தன்னுடைய மரணத்திற்கு மூன்று நாட்களுக்கு முன்பு, இருபத்தோரு வயது நிரம்பிய ஜோன்ஸ் தன்னுடைய போர் அனுபவங்களைப் பற்றிப் புகழ்ந்து விவரித்துத் தன் சகோதரருக்கு ஒரு கடிதம் எழுதினார்:

போரின் கொடூரங்கள் ஒரு புறம் இருந்தாலும், போர் ஒரு பெரிய விஷயம் என்ற உண்மையைப் பற்றி நீ எப்போதேனும் சிந்தித்திருக்கிறாயா? போர் ஒருவனை யதார்த்தத்தை நேருக்கு நேர் சந்திக்க வைக்கிறது. தவறுகள், சுயநலம், ஆடம்பரம், பொதுவான அற்பத்தனம் ஆகியவற்றை உள்ளடக்கிய, மதிப்பற்ற ஒரு வாழ்க்கையைத்தான் அமைதியான காலகட்டத்தில் உலகில் பத்தில் ஒன்பது பேர் வாழுகின்றனர். ஆனால் போர்க்காலங்களில், வன்முறையும் கொடூரமும் நிலவுகின்றன. அதை இப்படிப் பாருங்கள்: சமாதானம் நிலவும் காலகட்டத்தில் ஒருவர் தன்னுடைய சொந்த, சிறிய வாழ்க்கையை வாழுகிறார், அற்பமான விஷயங்களில் ஈடுபடுகிறார், தன்னுடைய சொந்த வசதிகளையும் பண விவகாரங்களையும் பற்றிக் கவலைப்படுகிறார். மொத்தத்தில், அவர் தனக்காக மட்டுமே வாழுகிறார். என்னவோர் இழிவான வாழ்க்கை அது! ஆனால், போரில் நீ கொல்லப்பட்டால்கூட, ஒருசில ஆண்டுகளுக்குப் பிறகு எப்படியும் நிகழவிருக்கின்ற உன் மரணத்தை நீ சற்று முன்னதாகவே எதிர்பார்க்கிறாய், அவ்வளவுதான். அதோடு, நீ உன் நாட்டிற்கு உதவும் முயற்சியில் இறந்து போயிருக்கிறாய் என்ற திருப்தியும் உனக்குக் கிடைக்கும். உண்மையில், நீ ஓர் உன்னதமான நோக்கத்தை நிறைவேற்றியிருக்கிறாய். எனக்குத் தெரிந்தவரை, சாதாரண வாழ்க்கையில் நீ அரிதாகவே செய்கின்ற ஒன்று அது. ஏனெனில், சாதாரண வாழ்க்கை வணிகரீதியானது, தன்னலத்தை அடிப்படையாகக் கொண்டது. நீ தொடர்ந்து வாழ வேண்டும் என்றால், உன் கைகளை உன்னால் சுத்தமாக வைத்துக் கொள்ள முடியாது.

“தனிப்பட்ட முறையில், போரில் கலந்து கொள்ள எனக்கு ஒரு வாய்ப்புக் கிடைத்தது குறித்து நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன். வாழ்க்கை எவ்வளவு அற்பமானது என்பதை அது எனக்கு உணர்த்தியுள்ளது. ஒருவன் தன்னைப் பற்றி சிந்திப்பதை விடுத்து மற்றவர்களைப் பற்றி சிந்திக்கத் தொடங்குவதற்குப் போர் எல்லோருக்கும் ஒரு வாய்ப்புக் கொடுப்பதாக நான் நினைக்கிறேன். என்னைப் பொருத்தவரை, கடந்த ஏப்ரல் மாதம் நிகழ்ந்ததைப்போல,

ஒரு பெரிய சண்டை தொடங்கும்போது கிடைக்கின்ற ஒரு பெரும் குதூகலத்தை என் ஒட்டுமொத்த வாழ்வில் நான் ஒருபோதும் அனுபவித்ததில்லை. போர் தொடங்குவதற்கு முந்தைய அரை மணிநேரம் தருகின்ற உற்சாகத்திற்கு இந்த பூமியில் இணையேதும் இல்லை."

மிகச் சிறப்பாக விற்பனையாகியுள்ள 'பிளாக் ஹாக் டவுன்' என்ற தன்னுடைய பிரபல நூலில், பத்திரிகையாளரான மார்க் பௌடன், சோமாலியாவின் தலைநகரான மோகதிஷுவில் 1993ம் ஆண்டில் அமெரிக்க வீரர் ஷான் நெல்சனுக்குப் போரில் கிடைத்த அனுபவத்தை விவரிக்கிறார்:

அவர் எத்தகைய உணர்வை அனுபவித்தார் என்று கூறுவது கடினமாக இருந்தது. திடீரென்று அவருக்குள் ஏதோ ஒரு புரிதல் எழுந்தது. மரணத்திற்கு மிக அருகில் வந்துவிட்டிருந்த அவர், அவ்வளவு உயிர்த்துடிப்பாக ஒருபோதும் உணர்ந்ததே இல்லை. கண்ணிமைக்கும் நேரத்தில் மரணம் அவரை வேகமாகக் கடந்து சென்றிருந்தது. இது போன்ற கணங்கள் அவருடைய வாழ்வில் பல முறை வந்து சென்றுள்ளன. எடுத்துக்காட்டாக ஒரு முறை அவர் தன் காரில் பயணித்துக் கொண்டிருந்தபோது, வேறொரு கார் திடீரென்று ஒரு திருப்பத்திலிருந்து வேகமாகத் தோன்றி, கிட்டத்தட்ட அவருடைய கார்மீது நேராக மோதும்படி வந்தது. ஆனால் கடைசி நிமிடத்தில் எப்படியோ அது அவருடைய காரை இடிக்காமல் கடந்து சென்றுவிட்டது. போரில் அந்தக் குறிப்பிட்ட நாளன்று சாவை முத்தமிட்டு வந்த தருணத்தில் அவருக்கு ஏற்பட்ட உணர்வு தொடர்ந்து மூன்று மணிநேரத்திற்கும் அதிகமாக நீடித்தது. சண்டை என்பது முற்றிலும் மனரீதியான மற்றும் உடல்ரீதியான பிரக்ஞை நிலை என்பதை அவர் உணர்ந்தார். அந்த ஒருசில மணிநேரம், தெருவில் அவர் ஷான் நெல்சனாக இருக்கவில்லை. வெளியுலகோடு அவருக்கு எந்தத் தொடர்பும் இருக்கவில்லை. அவர் கட்டண பாக்கி எதையும் செலுத்த வேண்டியிருக்கவில்லை, உணர்ச்சிமயமான எந்தப் பிணைப்பும் அவருக்கு இருக்கவில்லை. அவர் ஒரு நேரத்தில் ஒரு கணம் என்று வாழ்ந்து கொண்டிருந்த ஒரு சாதாரண மனிதராக இருந்தார். அவர் ஒவ்வொரு முறை ஆழ்ந்து சுவாசித்தபோதும், அது தன்னுடைய கடைசி சுவாசமாக இருக்கக்கூடும் என்பதை அறிந்தபடியே வாழ்ந்தார். தான் இனி ஒருபோதும் பழைய மாதிரி இருக்கப் போவதில்லை என்பதை அவர் அறிந்தார்.

ஹிட்லரும் தன்னுடைய போர் அனுபவங்களால் மாற்றப்பட்டார், அறிவுத் தெளிவு பெற்றார். போர்முனையைச் சென்றடைந்த ஒருசில

கணங்களில், வீரர்களிடம் துவக்கத்தில் இருந்த உற்சாகம் எப்படி பயமாக மாறியது என்பதையும், அவர்கள் ஒவ்வொருவரும் எப்படி அதற்கு எதிராகத் தொடர்ந்து ஓர் உள்ளார்ந்த சண்டையில் ஈடுபட வேண்டியிருந்தது என்பதையும், அந்த பயம் தங்களை ஆட்கொண்டுவிடக்கூடாது என்பதற்கு அவர்கள் எவ்வளவு தூரம் முயற்சிக்க வேண்டியிருந்தது என்பதையும் 'மெயின் காம்ஃப்' என்ற தன்னுடைய தன்வரலாற்று நூலில் ஹிட்லர் எழுதுகிறார். தன்னுடைய இந்த உள்ளார்ந்த சண்டையை 1915-1916ம் ஆண்டின் குளிர்காலத்தில் தான் வெற்றி கொண்டதாக அவர் கூறுகிறார். "கடைசியில், என்னுடைய மன உறுதிதான் என்னுடைய எஜமானாக இருந்தது. நான் இப்போது அமைதியாகவும் உறுதியோடும் இருந்தேன். இந்நிலை தொடர்ந்தது. இப்போது தலைவிதி எனக்கு உச்சகட்ட சோதனைகளைக் கொண்டுவரக்கூடும், ஆனால் நான் இனி அவற்றால் நடுக்கம் கொள்ள மாட்டேன், என்னுடைய சிந்தனையும் தடுமாறாது."

போரிலிருந்து கிடைத்த அனுபவம் இவ்வுலகத்தைப் பற்றிய உண்மையை ஹிட்லருக்கு வெளிப்படுத்தியது: உலகம் என்பது இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறையின் இரக்கமற்ற விதிகளால் ஆளப்படுகின்ற ஒரு காடு. இந்த உண்மையை ஏற்றுக் கொள்ள மறுக்கின்றவர்களால் உயிர் பிழைத்திருக்க முடியாது. நீங்கள் வெற்றி பெற விரும்பினால், காட்டின் விதிகளை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டியதோடு கூடவே, அவற்றை மகிழ்ச்சியாக ஏற்றுக் கொள்ளவும் வேண்டும். போருக்கு எதிரான தாராளவாத ஓவியர்களைப்போலவே, சாதாரண வீரர்களின் அனுபவங்களை ஹிட்லரும் புனிதப்படுத்தினார். இன்னும் சொல்லப் போனால், ஹிட்லரின் அரசியல் வாழ்க்கையானது, இருபதாம் நூற்றாண்டு அரசியலில் சாதாரண மக்களுடைய தனிப்பட்ட அனுபவங்களுக்கு வழங்கப்பட்ட அளப்பரிய அதிகாரத்திற்கு நம்மிடம் உள்ள மிகச் சிறந்த எடுத்துக்காட்டுகளில் ஒன்றாக விளங்குகிறது. ஹிட்லர் ஒரு மூத்த அதிகாரியாகக்கூட இருக்கவில்லை. நான்காண்டுகாலப் போரில், ராணுவத்தில் அவர் 'கார்ப்போரல்' நிலைக்கு மேலே உயரவில்லை. அவர் முறையாகக் கல்வி கற்கவில்லை. எந்தவிதமான தொழில்முறைத் திறமைகளும் அரசியல் பின்புலமும் அவருக்கு இருக்கவில்லை. அவர் ஒரு வெற்றிகரமான தொழிலதிபராகவோ அல்லது ஒரு தொழிற்சங்கத் தலைவராகவோ இருக்கவில்லை. செல்வாக்குமிக்கப் பதவிகளில் அவருக்கு நண்பர்களோ அல்லது உறவினர்களோ இருக்கவில்லை, சொல்லிக் கொள்ளும்படியான பணமும் அவரிடம் இருக்கவில்லை. துவக்கத்தில், ஜெர்மானியக் குடியுரிமைகூட அவருக்கு இருக்கவில்லை. கையில்

சல்லிக்காசின்றி அவர் ஜெர்மனிக்குக் குடிபெயர்ந்திருந்தார்.

ஹிட்லர் ஜெர்மானிய வாக்காளர்களிடம் தனக்கு ஆதரவு திரட்டச் சென்ற நேரத்தில், தன்மீது நம்பிக்கை கொள்ளும்படி அவர்களுக்கு அவர் வேண்டுகோள் விடுத்தபோது, தனக்கு சாதகமாக அவர்களிடம் எடுத்துரைக்க அவரிடம் ஒரே ஒரு வாதம் மட்டுமே இருந்தது: "எந்தவொரு பல்கலைக்கழகத்திலும், எந்தவொரு தலைமைச் செயலகத்திலும், எந்தவோர் அரசாங்க அமைச்சகத்திலும் உங்களால் ஒருபோதும் கற்றுக் கொள்ள முடியாத பாடங்களைப் போரில் பதுங்குக் குழிகளில் எனக்குக் கிடைத்த அனுபவங்கள் எனக்குக் கற்றுக் கொடுத்துள்ளன." மக்கள் அவரைப் பின்தொடர்ந்து சென்றனர், அவருக்கு வாக்களித்தனர். ஏனெனில், அவர்கள் அவரோடு தங்களை அடையாளம் கண்டனர்; உலகம் ஒரு காடு என்றும், எது நம்மைக் கொல்லுவதில்லையோ அது நமக்கு அதிக வலிமையைக் கொடுக்கிறது என்றும் அவர்களும் நம்பினர்.

ஒவ்வொரு மனிதச் சமூகத்தின் தனித்துவமான அனுபவங்களைப் பாதுகாப்பதற்கு தாராளவாதம் மிதவாத தேசியவாதத்துடன் இணைந்தது; ஆனால் ஹிட்லர் போன்ற பரிணாமரீதியான மனிதவாதிகள், குறிப்பிட்ட சில நாடுகளை மனித முன்னேற்றத்திற்கான உந்துசக்தியாக அடையாளம் கண்டனர். இந்நாடுகள், தங்கள் வழியில் நிற்கின்ற எவரொருவரையும் அடித்து நொறுக்கவோ அல்லது பூண்டோடு அழிக்கவோ வேண்டும் என்ற முடிவுக்கு வந்தன. இருந்தாலும், ஹிட்லரும் நாஜிக்களும் பரிணாமரீதியான மனிதவாதத்தின் ஒரே ஒரு தீவிர வடிவத்தை மட்டுமே பிரதிநுதப்படுத்துகின்றனர் என்பதை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும். ஸ்டாலினின் குலாக் முகாம்கள் எப்படி சோசியலிச யோசனைகளையும் வாதங்களையும் செல்லாதவையாக ஆக்குவதில்லையோ, அதேபோல, நாஜியிசத்தின் கொடூரங்கள் பரிணாமரீதியான மனிதவாதம் வழங்குகின்ற உள்நோக்குகளை நாம் உதாசீனப்படுத்தும்படி செய்துவிடக்கூடாது. பரிணாமரீதியான மனிதவாதம் சில குறிப்பிட்ட இனக் கோட்பாடுகளுடனும் தீவிர தேசியவாத உணர்ச்சிகளுடனும் இணைந்ததன் விளைவாக உருவானதுதான் நாஜியிசம். பரிணாமரீதியான மனிதவாதிகள் அனைவரும் இனவெறியர்கள் அல்லர். இன்னும் அதிகமாகப் பரிணாம வளர்ச்சி அடைவதற்கு மனிதகுலத்திற்கு இருக்கின்ற ஆற்றல்மீதான ஒவ்வொரு நம்பிக்கையும், மக்களுடைய ஒவ்வொரு நடவடிக்கையையும் கண்காணிக்கின்ற எதேச்சாதிகார அரசுகளும் வதை முகாம்களும் அமைக்கப்பட வேண்டும் என்று அறைகூவல் விடுப்பதில்லை.

ஆஷ்விட்ஸ் வதைமுகாம் ஓர் அபாய எச்சரிக்கையாக அமைய வேண்டுமே அன்றி, மனிதத் தொடுவானத்தின் ஒட்டுமொத்தப் பகுதிகளையும் மறைக்கின்ற ஒரு கருப்புத் திரையாக இருக்கக்கூடாது. நவீனக் கலாச்சாரத்தை வடிவமைப்பதில் பரிணாமரீதியான மனிதவாதம் ஒரு முக்கியப் பங்கு வகித்தது. இருபத்தோராம் நூற்றாண்டை மாற்றியமைப்பதில் அது அதைவிடப் பெரிய பங்கு வகிக்கவிருக்கிறது.

## சக் பெர்ரியைவிட பீத்தோவன் சிறந்தவரா?

மனிதவாதத்தின் மூன்று பிரிவுகளுக்கும் இடையேயான வேறுபாடுகளை நாம் புரிந்து கொள்ளுவதை உறுதி செய்வதற்கு, ஒருசில மனித அனுபவங்களை நாம் ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

முதலாவது அனுபவம்: இசையியல் பேராசிரியர் ஒருவர் வியன்னா ஓப்பெரா அரங்கத்தில் அமர்ந்து பீத்தோவனின் ஐந்தாவது சிம்பொனி இசையின் துவக்கத்தைக் கேட்டுக் கொண்டிருக்கிறார். 'பா பா பா பேம்!' ஒலியலைகள் அவருடைய செவிப்பறைகளைச் சென்றடைந்து, சமிக்கைகள் செவிநரம்பு வழியாக அவருடைய மூளையைச் சென்றடைகின்றன. உடனே அட்ரினலின் சுரப்பி அவருடைய ரத்த ஓட்டத்தை அட்ரினலினால் நிரப்புகிறது. அவருடைய இதயத்துடிப்பின் வேகம் அதிகரிக்கிறது, அவருடைய சுவாசம் தீவிரமடைகிறது, அவருடைய கழுத்தின்மீது மயிர்க்கால்கள் குத்திட்டு நிற்கின்றன, அவருடைய முதுகுத்தண்டின் கீழாக ஒரு சிலிர்ப்பு ஓடுகிறது. 'பா பா பா பேம்!'

இரண்டாவது அனுபவம்: அது 1965ம் ஆண்டு. திறந்து மூடப்படக்கூடிய மேற்கூரையைக் கொண்ட மஸ்டேங் கார் ஒன்று பசிபிக் கடற்கரை நெடுஞ்சாலையில் சான்பிரான்சிஸ்கோவில் இருந்து லாஸ் ஏஞ்சலீஸ் நகரை நோக்கி முழு வேகத்தில் பாய்ந்து சென்று கொண்டிருக்கிறது. அதன் இளம் ஓட்டுநர், 'ராக் அன்ட் ரோல்' இசையின் முன்னோடிகளில் ஒருவரான சக் பெர்ரியின் பாடலை மிகச் சத்தமாக ஒலிக்கவிடுகிறார். 'கோ! கோ, ஜானி, கோ, கோ, கோ!' ஒலி அலைகள் அவருடைய செவிப்பறைகளைச் சென்றடைந்து, சமிக்கைகள் செவிநரம்பு வழியாக அவருடைய மூளையைச் சென்றடைகின்றன. உடனே அட்ரினலின் சுரப்பி அவருடைய ரத்த ஓட்டத்தை அட்ரினலினால் நிரப்புகிறது. அவருடைய இதயத்துடிப்பின் வேகம் அதிகரிக்கிறது, அவருடைய சுவாசம் தீவிரமடைகிறது, அவருடைய கழுத்தின்மீது மயிர்க்கால்கள் குத்திட்டு நிற்கின்றன, அவருடைய

முதுகுத்தண்டின் கீழாக ஒரு சிலிர்ப்பு ஓடுகிறது. 'கோ! கோ, ஜானி, கோ, கோ, கோ!'

மூன்றாவது அனுபவம்: காங்கோ நாட்டு மழைக்காட்டில் மிகவும் உள்ளே தள்ளி ஒரு குள்ள வேடுவர் ஆடாமல் அசையாமல் நின்று கொண்டிருக்கிறார். அருகிலுள்ள கிராமம் ஒன்றில் சிறுமியர் பருவமெய்தும்போது பாடப்படுகின்ற பாடல்களை ஒரு சிறுமியர் குழு பாடிக் கொண்டிருப்பது அவருக்குக் கேட்கிறது. 'யே ஓ, ஓ. யே ஓ, ஏ!' ஒலி அலைகள் அவருடைய செவிப்பறைகளைச் சென்றடைந்து, சமிக்கைகள் செவிநரம்பு வழியாக அவருடைய மூளையைச் சென்றடைகின்றன. உடனே அட்ரினலின் சுரப்பி அவருடைய ரத்த ஓட்டத்தை அட்ரினலினால் நிரப்புகிறது. அவருடைய இதயத்துடிப்பின் வேகம் அதிகரிக்கிறது, அவருடைய சுவாசம் தீவிரமடைகிறது, அவருடைய கழுத்தின்மீது மயிர்க்கால்கள் குத்திட்டு நிற்கின்றன, அவருடைய முதுகுத்தண்டின் கீழாக ஒரு சிலிர்ப்பு ஓடுகிறது. 'யே ஓ, ஓ. யே ஓ, ஏ!'

நான்காவது அனுபவம்: கனேடிய ராக்கி மலைத்தொடரில் எங்கோ ஓர் இடத்தில் அன்று பௌர்ணமி நிலவு வானில் ஒளிர்ந்து கொண்டிருக்கிறது. ஒரு சிறு குன்றின்மீது ஓநாய் ஒன்று நின்றுகொண்டு, ஒரு பெண் ஓநாயின் ஊளைகளைக் கேட்டுக் கொண்டிருக்கிறது. 'அஊஊஊஊ! அஊஊஊஊ!' ஒலி அலைகள் அதன் செவிப்பறைகளைச் சென்றடைந்து, சமிக்கைகள் செவிநரம்பு வழியாக அதன் மூளையைச் சென்றடைகின்றன. உடனே அட்ரினலின் சுரப்பி அதனுடைய ரத்த ஓட்டத்தை அட்ரினலினால் நிரப்புகிறது. அதனுடைய இதயத்துடிப்பின் வேகம் அதிகரிக்கிறது, அதன் சுவாசம் தீவிரமடைகிறது, அதன் கழுத்தின்மீது மயிர்க்கால்கள் குத்திட்டு நிற்கின்றன, அதன் முதுகுத்தண்டின் கீழாக ஒரு சிலிர்ப்பு ஓடுகிறது. 'அஊஊஊஊ! அஊஊஊஊ!'

இந்த நான்கு அனுபவங்களில் எது அதிக மதிப்பு வாய்ந்தது?

அந்த இசையியல் பேராசிரியர், அந்த இளம் ஓட்டுநர், அந்தக் குள்ள வேடுவர் ஆகியோருடைய அனுபவங்கள் சம அளவு மதிப்பு வாய்ந்தவை என்றும், அவை அனைத்தும் சமமாகக் கொண்டாடப்பட வேண்டும் என்றும் தாராளவாதிகள் கூறுவர். ஒவ்வொரு மனித அனுபவமும் ஏதோ தனித்துவமான ஒன்றை வழங்குகிறது, புதிய அர்த்தத்தைக் கொடுத்து உலகத்தைச் செழுமைப்படுத்துகிறது. சிலருக்குச் செம்மையான இசை பிடித்திருக்கிறது, சிலருக்கு ராக் அன்ட் ரோல் இசை பிடித்திருக்கிறது, மற்றவர்களுக்கு ஆப்பிரிக்கப் பாரம்பரிய இசை பிடித்திருக்கிறது. பல்வேறு வகைப்பட்ட இசையைக் கேட்கும்

வாய்ப்பு இசையைப் பயிலும் மாணவர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டும். அவர்கள் அவற்றையெல்லாம் கேட்டுவிட்டு, அன்று மாலையில் இணையத்தில் ஐ-டியூன்ஸ் தளத்திற்குச் சென்று, தங்களுடைய கடனட்டை எண்ணை அதில் பதிவு செய்துவிட்டு, தங்களுக்குப் பிடித்தமான பாடல்களைத் தரவிறக்கம் செய்து கொள்ளுவர். அழகு என்பது கேட்பவரின் காதுகளில் இருக்கிறது, வாடிக்கையாளர் கூறுவதுதான் எப்போதும் சரியாக இருக்கிறது. ஆனால் அந்த ஓநாய் ஒரு மனிதனல்ல என்பதால், அதன் அனுபவங்கள் அவ்வளவு மதிப்பு வாய்ந்தவை அல்ல. அதனால்தான், ஓர் ஓநாயின் உயிர் ஒரு மனிதனின் உயிரைவிடக் குறைந்த மதிப்பு வாய்ந்ததாக இருக்கிறது, ஒரு மனிதனைக் காப்பாற்றுவதற்காக ஓர் ஓநாயைக் கொல்லுவது முற்றிலும் சரியான காரியமாக இருக்கிறது. அது மட்டுமா? ஓநாய்களால் எந்த அழகுப் போட்டியிலும் வாக்களிக்க முடியாது, அவற்றுக்குச் சொந்தமாகக் கடனட்டைகளும் கிடையாது.

இந்த தாராளவாத அணுகுமுறை பல விதங்களில் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக, 1977ல் அமெரிக்கர்கள் ‘வாயேஜர் மி’ என்ற விண்ணாய்வுக் கலனை ஒரு விண்வெளிப் பயணத்திற்கு ஏவினர். இப்போது அது நம்முடைய சூரிய மண்டலத்திலிருந்து வெளியேறிவிட்டது. மனிதனால் உருவாக்கப்பட்டு விண்மீன்களுக்கு இடையே பயணித்த முதல் பொருள் அதுதான். நாசா அந்த விண்கலத்தில் அதிநவீன அறிவியல் கருவிகளைப் பொருத்தியிருப்பதோடு கூடவே, தங்க முலாம் பூசப்பட்ட ஓர் இசைத்தட்டையும் வைத்து அனுப்பியுள்ளது. விண்வெளியில் ஏதேனும் அந்நிய உயிரினங்கள் அந்த விண்கலத்தை எதிர்கொண்டால், பூமியை அவற்றுக்கு அறிமுகப்படுத்தும் நோக்கத்துடன் இந்த ஏற்பாடு மேற்கொள்ளப்பட்டது.

பூமியைப் பற்றியும் அதில் வாழுகின்ற அனைத்து உயிர்களைப் பற்றியும் பல்வேறு வகையான அறிவியல் தகவல்களும் கலாச்சாரத் தகவல்களும் அந்த இசைத்தட்டில் பதிவு செய்யப்பட்டுள்ளன. கூடவே, சில உருவங்கள், குரல்கள், உலகம் நெடுகிலுமிருந்தும் சேகரிக்கப்பட்டப் பல்வேறுபட்ட இசை ஆகியவையும் அதில் பதிவு செய்யப்பட்டுள்ளன. பூமிவாசிகளுடைய கலைச் சாதனைகளுக்கான ஒரு சிறு பதத்தை அவை பிரதிநுதப்படுத்துகின்றன. பீத்தோவனின் ஐந்தாவது சிம்பொனி, சக் பெர்ரியின் ‘ஜானி பி. குட்’ பாடல், காங்கோ நாட்டுக் குள்ளப் பெண்கள் பாடும் பாரம்பரியப் பாடல் உட்பட உலகம் நெடுகிலுமுள்ள பல்வேறு வகையான பாரம்பரிய இசை அந்த இசைத்தட்டில் இடம்பெற்றுள்ளன. ஓநாய்களின் ஊளைச் சத்தங்களும்

அதில் உள்ளன. அவை இசையின்கீழ் பதிவு செய்யப்படவில்லை, மாறாக, காற்று, மழை, அலை ஆகியவற்றின் ஓசைகள் அடங்கிய பகுதியில் அந்த ஊளைச் சத்தங்கள் இடம்பெற்றுள்ளன. ஆல்ஃபா சென்டாரியில் உள்ளவர்கள் யாரேனும் இந்த இசைத்தட்டில் உள்ளவற்றைக் கேட்டால், பீத்தோவனும் சக் பெர்ரியும் குள்ளர்களின் பாடலும் சம அளவு முக்கியத்துவம் வாய்ந்தவை, ஆனால் ஓநாய்களின் ஊளைச் சத்தம் முற்றிலும் வேறொரு வகையைச் சேர்ந்தது என்பதுதான் புவிவாசிகள் அவர்களுக்குத் தெரியப்படுத்த விரும்புகின்ற செய்தியாகும்.

அந்த ஓநாயின் அனுபவம் குறைந்த மதிப்புக் கொண்டது என்பதில் சோசியலிசவாதிகள் தாராளவாதிகளுடன் உடன்படக்கூடும். ஆனால் அந்த மூன்று மனித அனுபவங்கள் குறித்த அவர்களுடைய மனப்போக்கு சற்று வித்தியாசமானதாக இருக்கும். இசையின் உண்மையான மதிப்பு அதைச் செவிமடுக்கின்ற தனிநபரின் அனுபவங்களைச் சார்ந்திருப்பதில்லை, மாறாக, மற்றவர்களுடைய அனுபவங்கள்மீதும் இந்த ஒட்டுமொத்தச் சமுதாயத்தின் அனுபவங்கள்மீதும் அது ஏற்படுத்துகின்ற தாக்கத்தையே சார்ந்துள்ளது என்று சோசியலிசத்தில் உண்மையான நம்பிக்கை கொண்டிருக்கின்ற ஒருவர் விளக்கமளிப்பார். மாசேதுங் இவ்வாறு கூறியுள்ளதை எண்ணிப் பாருங்கள்: “கலை என்பது வர்க்க வேறுபாடுகளைக் கடந்த ஒன்று, அது அரசியலுக்கும் அப்பாற்பட்ட ஒன்று.”

எனவே, இசை அனுபவங்களை மதிப்பிடும்போது, சோசியலிசத்தை நம்புகின்றவர்கள் பீத்தோவன் பற்றிய பின்வரும் உண்மையின்மீது கவனம் செலுத்துவர்: ஐரோப்பா ஆப்பிரிக்கக் கண்டத்தின்மீதான படையெடுப்பைத் துவக்கவிருந்த நேரத்தில்தான் பீத்தோவன் மேட்டுக்குடியைச் சேர்ந்த வெள்ளை ஐரோப்பியர்களுக்காக ஐந்தாவது சிம்பொனியை இயற்றினார். அவருடைய இசை, 18ம் நூற்றாண்டில் ஐரோப்பாவின் சிந்தனைக் கருத்துக்கள்மீது தாக்கம் ஏற்படுத்திய ‘அறிவு முக்தி இயக்கத்தின்’ சிந்தனைகளைப் பிரதிபலித்தது. அச்சிந்தனைகள் மேட்டுக்குடி வெள்ளையர்களைப் புகழ்ந்தது, ஆப்பிரிக்காவின்மீதான படையெடுப்பை நியாயப்படுத்தியது.

புளூஸ், ஜாஸ், காஸ்பெல் போன்ற இசை வகைகளிலிருந்து உத்வேகம் பெற்ற, அடக்குமுறைக்கு ஆளாகியிருந்த ஆப்பிரிக்க-அமெரிக்க இசைக்கலைஞர்கள்தான் ராக் அன்ட் ரோல் இசையின் முன்னோடிகள் என்று சோசியலிசவாதிகள் கூறுவர். ஆனால், 1950களிலும் 1960களிலும் ராக் அன்ட் ரோல் இசையை வெள்ளை அமெரிக்கர்கள் தட்டிப் பறித்துக் கொண்டு, அதை நுகர்வோர்வாதம்,

அமெரிக்க ஏகாதிபத்தியம், கோகோ-கோலா காலனித்துவம் ஆகியவற்றுக்குத் துதிபாட வைத்தனர். ராக் அன்ட் ரோல் இசையை மேட்டுக்குடியைச் சேர்ந்த வெள்ளை இளைஞர்கள் வர்த்தகமயமாக்கினர், தங்களுடைய எதிர்ப்பைக் காட்டுவதற்குப் பயன்படுத்தினர். சக் பெர்ரிகூட முதலாளித்துவ சக்திகளின் கட்டளைகளுக்கு அடிபணிந்தார். 'ஜானி பி. குட் என்ற ஒரு கருப்பர் இனச் சிறுவன்' என்று தான் எழுதியிருந்த பாடலை, வெள்ளையர்களுக்குச் சொந்தமாக இருந்த வானொலி நிலையங்கள் கொடுத்த அழுத்தத்தின் காரணமாக, 'ஜானி பி. குட் என்ற ஒரு நாட்டுப்புறச் சிறுவன்' என்று அவர் மாற்றி எழுதினார்.

காங்கோ நாட்டுக் குள்ளர் இனச் சிறுமியர் பருவமெய்தும்போது பாடுகின்ற குழுப் பாடல்கள், ஓர் ஆணாதிக்க அதிகார அமைப்புமுறையின் ஒரு பகுதியாகும். இந்த அமைப்புமுறை, சமுதாயத்தில் ஆண்களும் பெண்களும் தங்களுக்கென்று தனித்தனியாக வரையறுக்கப்பட்டுள்ள ஒழுங்குமுறைக்குக் கட்டுப்பட்டு நடக்க அவர்களுக்கு மூளைச்சலவை செய்கிறது. இப்படிப்பட்ட ஒரு பாடலின் பதிவு உலகச் சந்தையைச் சென்றடைந்தால், பொதுவாக ஆப்பிரிக்காவைப் பற்றியும் குறிப்பாக ஆப்பிரிக்கப் பெண்களைப் பற்றியும் மேற்கிலிருந்து ஆப்பிரிக்காவுக்கு வந்து குடியேறியவர்கள் கொண்டுள்ள கற்பனைகளை மேலும் வலியுறுத்துவதற்கு மட்டுமே அது உதவும்.

அப்படியானால், எந்த இசை சிறந்தது: பீத்தோவனின் ஐந்தாவது சிம்பொனியா, 'ஜானி பி. குட்' பாடலா, அல்லது குள்ளர் இனச் சிறுமியரின் பாடலா? அரசாங்கம் எதைக் கட்டுவதற்கு நிதியுதவி செய்ய வேண்டும் - ஓப்பெரா அரங்கங்களா, ராக் அன்ட் ரோல் சங்கங்களா, அல்லது ஆப்பிரிக்கப் பாரம்பரியத்தை வெளிப்படுத்துகின்ற காட்சியகங்களா? பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் இசை பயிலுகின்ற மாணவர்களுக்கு நாம் எதைக் கற்றுக் கொடுக்க வேண்டும்? இக்கேள்விகளை என்னிடம் கேட்காதீர்கள். உங்கள் கட்சியின் கலாச்சார அதிகாரியைக் கேளுங்கள்.

பல்வேறு கலாச்சாரங்களை ஒப்பிடுவது என்பது கண்ணிவெடிகள் புதைக்கப்பட்ட ஒரு நிலத்தின்மீது நடந்து செல்லுவதைப் போன்றது. தங்களுடைய கருத்து தங்கள் சமுதாயத்தினரில் சிலருடைய மனங்களைக் காயப்படுத்திவிடுமோ என்ற பயத்துடன் தாராளவாதிகள் அந்தக் கண்ணிவெடி நிலத்தில் பயந்து பயந்து ஓசைபடாமல் அடியெடுத்து வைக்கின்றனர். இந்தக் கண்ணிவெடி நிலத்தின் வழியாக நடந்து செல்லுவதற்கான சரியான வழியைக் கண்டுபிடிக்கும்

வேலையை சோசியலிசவாதிகள் தங்கள் கட்சியிடம் விட்டுவிடுகின்றனர். பரிணாமரீதியான மனிதவாதிகள் எதையும் யோசிக்காமல் விறுவிறுவென்று அந்நிலத்தின்மீது நடக்கத் தொடங்குகின்றனர். கண்ணிவெடிகள் ஒவ்வொன்றாக வெடிக்கத் தொடங்குகின்றன. அவர்கள் அந்தக் குழப்பத்தை மகிழ்ச்சியாக அனுபவிக்கின்றனர். தாராளவாதிகளும் சோசியலிசவாதிகளும் பிற விலங்குகளை ஒதுக்கி வைக்கின்றனர். ஓநாய்களைவிட மனிதர்கள் உயராற்றல் கொண்டவர்கள் என்றும், எனவே மனித இசை அந்த ஓநாய்களின் ஊளைகளைவிட அதிக மதிப்பு வாய்ந்தது என்றும் ஒப்புக் கொள்ளுவதில் அவர்களுக்கு எந்தப் பிரச்சனையும் இருப்பதில்லை. ஆனால் மனிதகுலத்திற்குள்ளேயே பரிணாம வேறுபாடுகள் இருக்கின்றன. ஓநாய்களைவிட மனிதர்கள் உயராற்றல்மிக்கவர்கள் என்பதுபோல, சில கலாச்சாரங்கள் மற்றவற்றைவிட அதிகமாக முன்னேற்றமடைந்துள்ளன. மனித அனுபவங்களைப் பொருத்தவரை, எந்தக் குழப்பமும் இல்லாத ஓர் அடுக்கதிகார வரிசை ஒன்று இருக்கிறது. அது குறித்து நாம் வருந்த வேண்டியதில்லை. தாஜ்மகால் ஓர் ஓலைக் குடிசையைவிட அதிக அழகானதாக இருக்கிறது, மைக்கலேஞ்சலோவின் 'டேவிட்' சிற்பம் ஓர் ஐந்து வயது சிறுமி உருவாக்குகின்ற ஒரு களிமண் உருவத்தைவிட மேன்மையானதாக இருக்கிறது, சக் பெர்ரியையும் காங்கோ நாட்டுச் சிறுமியரையும்விட பீத்தோவன் அதிகச் சிறப்பான இசையை இயற்றினார்.

மனித அனுபவங்கள் அனைத்தும் சம அளவு மதிப்பு வாய்ந்தவை என்று வாதிடுகின்ற எவரொருவரும் ஒரு முட்டாளாகவோ அல்லது ஒரு கோழையாகவோதான் இருக்க வேண்டும் என்று பரிணாமரீதியான மனிதவாதிகள் நம்புகின்றனர். இப்படிப்பட்ட முட்டாள்தனமும் கோழைத்தனமும் மனிதகுலத்தின் சீரழிவுக்கும் இறுதியில் ஒட்டுமொத்த அழிவுக்கும் மட்டுமே வழி வகுக்கும். ஏனெனில், பண்பாட்டுச் சார்பியம் அல்லது சமூகச் சமத்துவம் என்ற பெயரில் மனித முன்னேற்றம் தடுக்கப்படுகிறது. தாராளவாதிகளும் சோசியலிசவாதிகளும் கற்காலத்தில் வாழ்ந்திருந்தால், லாஸ்கா மற்றும் அல்டாமீரா குகைகளில் உள்ள சுவரோவியங்கள் அவ்வளவு மதிப்பு வாய்ந்தவை அல்ல என்று கருதி இருப்பர், நியாண்டர்தால்களின் கிறுக்கல்களோடு ஒப்பிடுகையில் அவை எந்த விதத்திலும் மேன்மையானவை அல்ல என்று வலியுறுத்தியிருப்பர்.

## மனிதவாதத்தின் மதப் போர்கள்

தாராள மனிதவாதம், சோசியலிச மனிதவாதம், பரிணாமரீதியான மனிதவாதம் ஆகியவற்றுக்கு இடையேயான வேறுபாடுகள் துவக்கத்தில் அற்பமானவையாகத் தோன்றின. அனைத்து மனிதவாதப் பிரிவுகளுக்கும் கிறித்தவம், இஸ்லாம், இந்துமதம் போன்றவற்றுக்கும் இடையேயான இடைவெளி மிகப் பெரியதாக இருப்பதால், மனிதவாதத்தின் பல்வேறு வடிவங்களுக்கு இடையேயான விவாதங்கள் சொற்பமாகவே இருந்தன. கடவுள் இறந்துவிட்டார் என்றும், மனித அனுபவம் மட்டுமே பிரபஞ்சத்திற்கு அர்த்தத்தைக் கொடுக்கிறது என்றும் நாம் எல்லோரும் ஒப்புக் கொண்டிருக்கும்வரை, அனைத்து மனித அனுபவங்களும் சமமானவையா அல்லது சில அனுபவங்கள் மற்றவற்றைவிட மேன்மையானவையா என்று நாம் சிந்திப்பது உண்மையிலேயே முக்கியம்தானா? ஆனாலும், மனிதவாதம் இவ்வுலகை வெற்றி கொண்டபோது, இந்த உள்ளார்ந்த பிரிவினைகள் விரிவடைந்தன, இறுதியில் அவை தீவிரமடைந்து வரலாற்றின் மிகக் கொடூரமான மதப் போராக உருவெடுத்தன.

இருபதாம் நூற்றாண்டின் முதல் பத்து ஆண்டுகளில், தாராளவாதப் பாரம்பரியம் தன்னுடைய வலிமையின்மீது இன்னும் முழு நம்பிக்கை கொண்டிருந்தது. தனிநபர்கள் தங்களுடைய கருத்துக்களை வெளிப்படுத்துவதற்கும் தங்களுடைய இதயங்களைப் பின்தொடர்ந்து செல்லுவதற்கும் அவர்களுக்கு உச்சபட்ச சுதந்திரம் இருந்தால், இவ்வுலகம் இதற்கு முன்பு ஒருபோதும் அனுபவித்திராத அமைதியையும் செழிப்பையும் அனுபவிக்கும் என்று தாராளவாதிகள் உறுதியாக நம்பினர். பாரம்பரிய அடுக்கதிகார நிலைகள், குழப்பமூட்டுகின்ற மதங்கள், கொடூரமான பேரரசுகள் ஆகியவற்றின் வலிமையான சங்கிலிகளை முற்றிலுமாக உடைத்தெறிவதற்குக் காலம் பிடிக்கக்கூடும் என்றாலும்கூட, ஒவ்வொரு பத்தாண்டுகளும் புதிய சுதந்திரங்களையும் சாதனைகளையும் கொண்டுவரும் என்றும், இறுதியில் நாம் பூமியில் சொர்க்கத்தை உருவாக்குவோம் என்றும் அவர்கள் நம்பினர். 1914ம் ஆண்டு ஜூன் மாதத்தின் மகிழ்ச்சியான காலகட்டத்தில், வரலாறு தங்கள் பக்கம் இருந்ததாக தாராளவாதிகள் நினைத்தனர்.

ஆனால் அதே ஆண்டில் கிறிஸ்துமஸ் காலம் வந்தபோது, அவர்கள் பேரதிர்ச்சி அடைந்தனர். அடுத்தப் பல ஆண்டுகளில் அவர்களுடைய சிந்தனைக் கருத்துக்கள் இடதுசாரிகள் மற்றும் வலதுசாரிகளின் கடும் தாக்குதலுக்கு ஆளாயின. ஈவு இரக்கமற்ற, சுரண்டும் போக்குக் கொண்ட, இனவெறியுடன்கூடிய ஓர் அமைப்புமுறையின் அட்டூழியங்களை மூடி மறைக்கின்ற ஓர் அத்தி இலைதான்

தாராளவாதம் என்று சோசியலிசவாதிகள் வாதிட்டனர். ‘சுதந்திரம்’ என்பதைச் ‘சொத்து’ என்று படிப்பது பொருத்தமாக இருக்கும். எது நல்லவிதமான உணர்வைக் கொடுக்கிறதோ அதைச் செய்வதற்கான தனிநபர் உரிமைக்கு வக்காலத்து வாங்குவது, பெரும்பாலான விஷயங்களில், நடுத்தட்டு மற்றும் மேற்தட்டு மக்களுடைய சொத்துக்களையும் சிறப்புச் சலுகைகளையும் பாதுகாப்பதற்குத்தான் உதவுகிறது. உங்களால் வாடகை கொடுக்க முடியாது எனும்போது, நீங்கள் விரும்பும் இடத்தில் நீங்கள் வாழுவதற்கான சுதந்திரத்தால் என்ன பயன்? உங்களால் கல்விக் கட்டணம் செலுத்த முடியாது எனும்போது, உங்களுக்கு விருப்பமானதைப் படிப்பதற்கான சுதந்திரத்தால் என்ன பயன்? உங்களால் ஒரு கார் வாங்க முடியாது எனும்போது, நீங்கள் விரும்பும் ஊருக்குப் பயணிப்பதற்கான சுதந்திரத்தால் என்ன பயன்? தாராளவாதத்தின்கீழ் பசியால் வாடுவதற்கான சுதந்திரம் எல்லோருக்கும் இருக்கிறது என்ற ஒரு வேடிக்கையான கூற்று இருக்கிறது. இதைவிட மோசமான விஷயம் என்னவென்றால், தங்களைத் தனித்தனி நபர்களாகப் பார்ப்பதற்கு மக்களை ஊக்குவிப்பதன் மூலம், தாராளவாதம் அவர்களை அவர்களுடைய சக வர்க்கத்து உறுப்பினர்களிடமிருந்து பிரிக்கிறது, அவர்களை அடக்கி ஒடுக்குகின்ற அமைப்புமுறைக்கு எதிராக எல்லோரும் ஒன்றுசேருவதிலிருந்து அவர்களைத் தடுக்கிறது. இதன் மூலம், அது ஏற்றத்தாழ்வை உருவாக்குகிறது, பெருந்திரளான மக்களை வறுமைக்குள் தள்ளுகிறது, மேட்டுக்குடியினரை அந்நியப்படுத்துகிறது.

இடதுசாரிகளிடமிருந்து வந்த இந்தத் தாக்குதலால் நிலை தடுமாறிய தாராளவாதத்தை, பரிணாமரீதியான மனிதவாதம் வலது பக்கத்திலிருந்து தாக்கியது. இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறையை நிலைகுலையச் செய்து மனிதகுலத்தின் சீரழிவை ஏற்படுத்தியதற்காக இனவெறியர்களும் பாசிசவாதிகளும் தாராளவாதத்தையும் சோசியலிசத்தையும் குறை கூறினர். எல்லா மனிதர்களுக்கும் சமமான மதிப்பும் இனப்பெருக்கம் செய்வதற்கு சமமான வாய்ப்புகளும் வழங்கப்பட்டால், இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறை ஒட்டுமொத்தமாகச் செயல்படாமல் போய்விடும் என்று அவர்கள் எச்சரித்தனர். மேலும், அதிக ஆற்றலும் வலிமையும் வாய்ந்த மனிதர்கள், சராசரிக்கும் கீழான மனிதர்களை உள்ளடக்கிய மனிதப் பெருங்கடலில் மூழ்கிவிடுவர் என்றும், அதிமனிதர்களாக உருவாவதற்கு பதிலாக மனிதகுலம் பூண்டோடு அழிந்து மறைந்துவிடும் என்றும் அவர்கள் எச்சரித்தனர்.

1914ம் ஆண்டிலிருந்து 1989ம் ஆண்டுவரை, மூன்று மனிதவாதப்

பிரிவுகளுக்கும் இடையே ஒரு வெறித்தனமான மதப் போர் நிகழ்ந்தது. தாராளவாதம் துவக்கத்தில் அடுத்தடுத்துப் பல தோல்விகளை எதிர்கொண்டது. கம்யூனிச ஆட்சிகளும் பாசிச ஆட்சிகளும் எண்ணற்ற நாடுகளில் நிலை கொண்டன, ஆனால் மைய தாராளவாதச் சிந்தனைக் கருத்துக்கள் ஆபத்தானவையாக இல்லாவிட்டாலும்கூட அவை சிறுபிள்ளைத்தனமானவை என்று அம்பலப்படுத்தப்பட்டன. தனிநபர்களுக்கு சுதந்திரத்தைக் கொடுத்துவிட்டால் உலகம் அமைதியையும் செழிப்பையும் அடைந்துவிடுமாம்! என்னவொரு பத்தாம்பசலித்தனமான எண்ணம்!

தாராளவாதத்திற்குக் கிடைத்த வெற்றியாகப் பின்னாளில் பார்க்கப்பட்ட இரண்டாம் உலகப் போர், துவக்கத்தில் அப்படித் தெரியவில்லை. 1939ம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில், சக்தி வாய்ந்த ஒரு தாராளவாதக் கூட்டணிக்கும் தனிப்பட்டிருந்த நாஜி ஜெர்மனிக்கும் இடையேயான ஒரு சண்டையாக அப்போர் தொடங்கியது. பாசிச இத்தாலிகூட மறு ஆண்டு ஜூலை மாதம்வரை பொறுத்திருக்கத் தீர்மானித்தது. தாராளக் கூட்டணி எண்ணிக்கையிலும் பொருளாதாரத்திலும் மேலோங்கியிருந்தது. 1940ல் ஜெர்மனியின் வருடாந்திர மொத்த உற்பத்தி 38.7 கோடி டாலர்களாக இருந்தபோது, ஜெர்மனியின் ஐரோப்பிய எதிரணியினரின் ஒட்டுமொத்த வருடாந்திர மொத்த உற்பத்தி 63.1 கோடி டாலர்களாக இருந்தது. இருந்தாலும், 1940ம் ஆண்டின் வசந்தகாலத்தில், வெறும் மூன்றே மாதங்களில் ஜெர்மனி இந்த தாராளவாதக் கூட்டணிக்கு ஒரு மிகப் பெரிய அடியைக் கொடுத்து, பிரான்ஸ், பெல்ஜியம், நெதர்லாந்து, லக்சம்பர்க், நார்வே, டென்மார்க் ஆகிய நாடுகளைக் கைப்பற்றியது. ஆங்கிலக் கால்வாயினால் பிரிட்டன் தப்பிப் பிழைத்தது.

இந்த தாராளவாத நாடுகள் சோவியத் ஒன்றியத்துடன் கூட்டுச் சேர்ந்த பிறகுதான் ஜெர்மனி இறுதியில் தோற்கடிக்கப்பட்டது. இதில் சோவியத் ஒன்றியம்தான் மிக அதிக இழப்பை அனுபவித்தது. 5 லட்சம் ஆங்கிலேயர்களோடும் 5 லட்சம் அமெரிக்கர்களோடும் ஒப்பிடுகையில் அப்போரில் 2.5 கோடி சோவியத் குடிமக்கள் இறந்தனர். நாஜியிசத்தைத் தோற்கடித்தப் பெருமையில் பெரும் பகுதி கம்யூனிசவாதத்திற்குத்தான் போய்ச் சேர வேண்டும். குறுகியகால நோக்கில், கம்யூனிசவாதமும் அந்தப் போரால் பெரும் பயனடைந்தது.

சோவியத் ஒன்றியம் ஒரு தனியான, தீண்டத்தகாத கம்யூனிசவாத உறுப்பினராகத்தான் அப்போருக்குள் அடியெடுத்து வைத்தது. ஆனால் பின்னாளில், இரண்டு உலக வல்லரசுகளில் ஒன்றாக அது உருவெடுத்தது. 1949ல் கிழக்கு ஐரோப்பிய நாடுகள் சோவியத்தின்

சார்பு நாடுகளாக ஆயின, சீனாவின் கம்யூனிசவாதக் கட்சி சீன உள்நாட்டுப் போரில் வெற்றி பெற்றது, கம்யூனிசவாதம் குறித்தத் தீவிர பயம் அமெரிக்காவைப் பற்றிக் கொண்டது. உலகம் நெடுகிலும் புரட்சி இயக்கங்களும் காலனித்துவத்திற்கு எதிரான இயக்கங்களும் மாஸ்கோவையும் பீஜிங் நகரையும் ஏக்கத்தோடு பார்த்தன. அதே சமயம், தாராளவாதம் இனவெறி கொண்ட ஐரோப்பியப் பேரரசுகளோடு அடையாளப்படுத்தப்படலானது. இப்பேரரசுகள் வீழ்ந்தபோது, பொதுவாக ராணுவ சர்வாதிகார ஆட்சிகளோ அல்லது சோசியலிச ஆட்சிகளோதான் அவற்றின் இடங்களைப் பிடித்தனவே அன்றி, தாராளவாத ஜனநாயக ஆட்சிகள் அல்ல. 1956ல் சோவியத் அதிபர் நிகிதா குருசேவ் தாராளவாத மேற்கத்திய உலகைப் பார்த்து, "உங்களுக்குப் பிடித்திருக்கிறதோ இல்லையோ, வரலாறு எங்கள் பக்கம் இருக்கிறது. நாங்கள் உங்களைக் குழி தோண்டிப் புதைத்துவிடுவோம்!" என்று மிகுந்த நம்பிக்கையோடு மார்தட்டி முழங்கினார்.

குருசேவ் இதை உண்மையிலேயே நம்பினார். அவரைப்போலவே, மூன்றாம் உலகத் தலைவர்கள் பலரும் முதலாம் உலக அறிவுஜீவிகள் பலரும் அதை நம்பினர். 1960களிலும் 1970களிலும் 'தாராளவாதம்' என்ற வார்த்தை மேற்கத்தியப் பல்கலைக்கழகங்கள் பலவற்றில் ஒரு தீய வார்த்தையாக ஆனது. வட அமெரிக்காவிலும் மேற்கத்திய ஐரோப்பாவிலும் தீவிர இடதுசாரி இயக்கங்கள் தாராளவாத ஒழுங்கை பலவீனப்படுத்தக் கடுமையாக முயற்சித்ததால் சமூகக் கொந்தளிப்பு அதிக அளவில் நிகழத் தொடங்கியது. கேம்பிரிட்ஜ், சோர்போன், பெர்க்லீ ஆகிய பல்கலைக்கழகங்களின் மாணவர்கள் மாசேதுங்கின் 'சிவப்புப் புத்தகத்தை'ப் படித்தனர், சேகுவாராவின் புகைப்படத்தைத் தங்களுடைய படுக்கைகளுக்கு மேலே தொங்கவிட்டனர். 1968ல் மேற்கத்திய உலகம் நெடுகிலும் கிளர்ச்சிகளும் எதிர்ப்புகளும் நிகழ்ந்து கம்யூனிசவாத அலை உச்சத்தைத் தொட்டது. மெக்சிகோ நாட்டின் காவல் படையினர் லாத்தேலோல்கோ என்ற இடத்தில் நூற்றுக்கணக்கான மாணவர்களைப் படுகொலை செய்தனர். ரோம் நகரில் மாணவர்கள் இத்தாலியக் காவல்துறையினரை எதிர்த்துச் சண்டையிட்டனர். மார்ட்டின் லூதர் கிங்கின் படுகொலையை அடுத்து அமெரிக்காவில் நூற்றுக்கும் அதிகமான நகரங்களில் கலவரங்களும் கண்டனப் போராட்டங்களும் வெடித்தன, அவை பல நாட்கள் நீடித்தன. பிரான்ஸில் மே மாதத்தில் மாணவர்கள் பாரீஸ் நகர வீதிகளை ஆக்கிரமித்தனர், அதிபர் சார்லஸ் டி கோல் ஜெர்மனியில் இருந்த பிரெஞ்சு ராணுவத் தளம் ஒன்றுக்குத் தப்பி ஓடினார், பணக்கார பிரெஞ்சுக் குடிமக்கள் கில்லெட்டின் கருவியைப் பற்றிய

கொடுங்கனவுகளோடும் பயத்தோடும் தங்கள் படுக்கைகளில் புரண்டு கொண்டிருந்தனர்.

1970ம் ஆண்டுவாக்கில் உலகில் 130 நாடுகள் இருந்தன, ஆனால் இவற்றில் முப்பது நாடுகள் மட்டுமே தாராளவாத ஜனநாயக ஆட்சிகளைக் கொண்டிருந்தன. இவற்றில் பெரும்பாலானவை ஐரோப்பாவின் வடமேற்கு மூலைக்குள் நெருக்கித் தள்ளப்பட்டிருந்தன. இந்தியா மட்டுமே தன்னுடைய விடுதலைக்குப் பிறகு தாராளவாதப் பாதையைத் தேர்ந்தெடுத்து அதற்காகத் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட ஒரே மூன்றாம் உலக நாடாக இருந்தது. ஆனால் இந்தியாகூட மேற்கு ஐரோப்பிய நாடுகளிடமிருந்து தன்னை விலக்கிக் கொண்டு, சோவியத்தின் பக்கம் சாய்ந்தது.

1975ம் ஆண்டில் தாராளவாத முகாம் மிக மோசமான தோல்வியை சந்தித்தது: வியட்நாம் போரில் வடக்கு வியட்நாம் அமெரிக்காவைத் தோற்கடித்தது. மிக விரைவில் கம்யூனிசவாதம் தெற்கு வியட்நாமையும் லாவோஸையும் கம்போடியாவையும் தன்வசப்படுத்தியது. 1975ம் ஆண்டு ஏப்ரல் 17ம் நாளன்று, கம்போடியாவின் தலைநகரான பினாம் பென், கெமர் ரூஜ் என்ற கம்யூனிசவாதக் கட்சியின் கைகளுக்குள் விழுந்தது. இரண்டு வாரங்களுக்குப் பிறகு, சாய்கானில் உள்ள அமெரிக்கத் தூதரகத்தின் மொட்டைமாடியிலிருந்து ஹெலிகாப்டர்கள் மூலம் அமெரிக்கர்கள் அனைவரும் அப்புறப்படுத்தப்பட்டதை உலகம் நெடுகிலுமிருந்த அனைத்து மக்களும் தொலைக்காட்சியில் பார்த்தனர். அமெரிக்க ஏகாதிபத்தியம் நிலைகுலைந்து கொண்டிருந்ததாகப் பலர் உறுதியாக நம்பினர். ஜூன் மாதத்தில் பிரதமர் இந்திரா காந்தி இந்தியாவில் நெருக்கடி நிலையைப் பிரகடனம் செய்தார். உலகின் மாபெரும் ஜனநாயகம் இன்னுமொரு சோசியலிச சர்வாதிகாரமாக மாறவிருந்ததுபோலத் தோன்றியது.

தாராளவாத ஜனநாயகம், ஏனைய உலகிற்கோ அல்லது தங்களுடைய சொந்த இளைய தலைமுறையினருக்கோ பயனுள்ள எதையும் வழங்க முடியாத நிலையிலும் முதுமையடைந்து கொண்டும் இருந்த வெள்ளை ஏகாதிபத்தியர்களுக்கு மட்டுமே உரிய ஒரு சிறப்புச் சங்கம்போலத் தோன்றியது. வாஷிங்டன் நகரம் சுதந்திர உலகின் தலைமை பீடமாகத் தன்னைத் தானே பிரகடனம் செய்து கொண்டது. ஆனால் அதன் கூட்டாளிகளில் பெரும்பாலானோர் ஆதிக்கவாத அரசர்களாகவோ (சவுதி அரேபியாவின் அரசர் காலீத், மொராக்கோ அரசர் ஹசன், பாரசீக ஷா போன்றோர்) அல்லது ராணுவ சர்வாதிகாரிகளாகவோ (கிரேக்க நாட்டுக் கர்னல்கள், சிலி நாட்டில் தளபதி அகஸ்டோ பினோசெட், ஸ்பெயினில் தளபதி ஃபிராங்க்கோ,

தென்கொரியாவில் தளபதி பார்க், பிரேசிலில் தளபதி எர்னெஸ்டோ கைசல், தாய்வானில் தளபதி சாங் காய் ஷெக் போன்றோர்) இருந்தனர்.


படம் **38:** சாய்கானில் உள்ள அமெரிக்கத் தூதரகத்திலிருந்து அமெரிக்கர்கள் வெளியேற்றப்படுதல்.

இந்த அரசர்கள் மற்றும் தளபதிகளின் ஆதரவு இருந்தும்கூட, வார்ஸா உடன்படிக்கையில் கையெழுத்திட்டிருந்த நாடுகளின் மொத்த ராணுவ பலம் நேட்டோ நாடுகளின் ராணுவ பலத்தை விஞ்சியிருந்தது. பாரம்பரிய ஆயுதங்களில் சரிநிகர் நிலையை எட்டுவதற்காக, மேற்கத்திய நாடுகள் தாராளவாத ஜனநாயகத்தையும் அரசுக் கட்டுப்பாடற்றச் சந்தையையும் ஒழித்துவிட்டு, எப்போதும் போருக்குத் தயாராக இருக்கின்ற எதேச்சாதிகார நாடுகளாக ஆக வேண்டிய நிலை உருவாயிற்று. அணுவாயுதங்களால் மட்டுமே தாராளவாத ஜனநாயகம் காப்பாற்றப்பட்டது. ‘உத்தரவாதமான பரஸ்பர அழிவு’ எனும் கொள்கையை நேட்டோ சுவீகரித்தது. அதன்படி, சோவியத் ஒன்றியம் தன்னுடைய பாரம்பரிய ஆயுதங்களைக் கொண்டு தாக்கினாலும், அதற்கு அணுவாயுதங்கள் மூலம் பதிலடி கொடுக்கப்படும். “நீ எங்களைத் தாக்கினால், யாரும் உயிரோடு வெளிவராமல் இருப்பதை நாங்கள் உறுதி செய்வோம்,” என்று தாராளவாதிகள் அச்சுறுத்தினர். இந்த அரக்கத்தனமான பாதுகாப்புக் கேடயத்திற்குப் பின்னால் தாராளவாத ஜனநாயகமும் அரசுக் கட்டுப்பாடற்றச் சந்தையும் தம்முடைய கடைசிப் பாதுகாப்பு அரணுக்குள் பாதுகாப்பாக இருந்து கொண்டன. மேற்கத்தியர்கள் பாலுறவையும் போதை மருந்துகளையும் ராக் அன்ட் ரோல் இசையையும் அனுபவித்ததோடு கூடவே, துணி துவைக்கும் இயந்திரங்கள், குளிர்பதனப் பெட்டிகள், தொலைக்காட்சிகள் போன்றவற்றையும் அனுபவித்தனர். அணுவாயுதங்கள் இல்லாமல் பீட்டில்ஸ் இசைக் குழுவோ, உட்ஸ்டாக் இசைத் திருவிழாவோ, மக்கட்கூட்டம் நிரம்பி வழியும் பேரங்காடிகளோ இருந்திருக்க முடியாது. ஆனால் 1970களின் நடுவில், அணுவாயுதங்கள் இருந்தும்கூட எதிர்காலம் சோசியலிசத்திற்குச் சொந்தமானதாகவே இருக்கும் என்பதுபோலத் தோன்றியது.

***

பிறகு எல்லாம் மாறியது. தாராளவாத ஜனநாயகம் வரலாற்றின் குப்பைத்தொட்டியிலிருந்து தவழ்ந்து வெளியே வந்து தன்னைத் தூய்மைப்படுத்திக் கொண்டு, பிறகு இவ்வுலகை வெற்றி கொண்டது. குலாக் முகாமைவிடப் பேரங்காடி அதிக வலிமையானது என்பது

நிரூபணமாயிற்று. ஜெர்மானிய மொழியில் 'பிளிட்ஸ்கிரைக்' என்று அழைக்கப்படுகின்ற மின்னலடித் தாக்குதல்கள் தெற்கு ஐரோப்பாவில் தொடங்கின. கிரேக்க நாடு, ஸ்பெயின், போர்ச்சுகல் ஆகியவற்றின் எதேச்சாதிகார ஆட்சிகள் நிலைகுலைந்து ஜனநாயக அரசுகள் நிலை பெற அவை வழி வகுத்தன. 1977ல் இந்தியாவில் நெருக்கடி நிலை முடிவுக்குக் கொண்டுவரப்பட்டு மீண்டும் ஜனநாயகம் நிலைப்படுத்தப்பட்டது. 1980களில் கிழக்கு ஆசியாவிலும் லத்தீன் அமெரிக்காவிலும் ராணுவ சர்வாதிகார ஆட்சிகள் ஒழிக்கப்பட்டு, பிரேசில், அர்ஜென்டினா, தாய்வான், தென்கொரியா போன்ற நாடுகளில் ஜனநாயக அரசுகள் நிலைப்படுத்தப்பட்டன. 1980களின் பிற்பகுதியிலும் 1990களின் முற்பகுதியிலும் தாராளவாத அலை ஒரு முழுமையான சுனாமியாக உருவெடுத்து, சக்தி வாய்ந்த சோவியத் சாம்ராஜ்ஜியத்தைத் தகர்த்தெறிந்து, ஒரு வரலாறு முடிவுக்கு வரவிருந்தது என்ற எதிர்பார்ப்பை அதிகரித்தது. பலப்பல ஆண்டுகளாகத் தோல்விகளையும் பின்னடைவுகளையும் சந்தித்து வந்திருந்த தாராளவாதம், இறுதியில் பனிப்போரில் பிரம்மாண்டமான வெற்றியைப் பெற்றது. சற்று மோசமான நிலையில் இருந்தபோதிலும் அது மனிதவாதத்தின் மதப் போர்களில் வெற்றி வாகை சூடியது.

சோவியத் சாம்ராஜ்ஜியம் சீர்குலைந்தபோது, கிழக்கு ஐரோப்பாவில் மட்டுமல்லாமல், முன்னாள் சோவியத் ஒன்றியத்தின் உறுப்பினர்களாக இருந்த எஸ்டோனியா, லாட்வியா, லித்துவேனியா, உக்ரைன், ஜார்ஜியா, அர்மீனியா ஆகிய நாடுகளிலும் கம்யூனிசவாத அரசுகள் தகர்க்கப்பட்டு, தாராளவாத ஜனநாயக அரசுகள் அவற்றுக்கு பதிலாக ஆட்சியமைத்தன. இன்று ரஷ்யாகூடத் தன்னை ஒரு ஜனநாயக நாடாகக் காட்டிக் கொள்ள முயற்சிக்கிறது. பனிப் போரில் தாராளவாதத்திற்குக் கிடைத்த வெற்றி, உலகம் நெடுகிலும் தாராளவாத மாதிரி பரவுவதற்குப் புதிய உத்வேகத்தைக் கொடுத்தது. குறிப்பாக, லத்தீன் அமெரிக்கா, தெற்கு ஆசியா, ஆப்பிரிக்கா ஆகிய பகுதிகளில் தாராளவாதம் வேகமாகப் பரவியது. சில தாராளவாதப் பரிசோதனைகள் படுதோல்வியில் முடிந்தன என்றாலும், வெற்றிக் கதைகளின் எண்ணிக்கை பிரமிப்பூட்டுவதாக இருக்கிறது. எடுத்துக்காட்டாக, இந்தோனேசியா, நைஜீரியா, சிலி போன்ற நாடுகளில் ஆண்டுக்கணக்கில் ராணுவ சர்வாதிகாரிகள்தான் ஆட்சி

நடத்தி வந்திருந்தனர், ஆனால் இன்று அந்நாடுகள் அனைத்திலும் ஜனநாயக ஆட்சிகள்தான் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன.

ஒரு தாராளவாதி 1914ம் ஆண்டு ஜூன் மாதத்தில் தூங்கி விழுந்திருந்து, 2014ம் ஆண்டு ஜூன் மாதத்தில் கண்விழித்திருந்தால், அவருக்கு எந்த வித்தியாசமும் தெரிந்திருக்காது. தனிநபர்களுக்கு சுதந்திரம் கொடுக்கப்பட்டால் உலகம் அமைதியையும் செழிப்பையும் அனுபவிக்கும் என்று மக்கள் மீண்டும் நம்பத் தொடங்கினர். ஒட்டுமொத்த இருபதாம் நூற்றாண்டும் ஒரு பெரிய தவறுபோலத் தோன்றுகிறது. 1914ம் ஆண்டின் கோடைக்காலத்தில் மனிதகுலம் தாராளவாத நெடுஞ்சாலையில் வேகமாகப் பயணித்துக் கொண்டிருந்தது. அப்போது திடீரென்று அது ஒரு தவறான திருப்பத்தில் திரும்பி ஒரு முட்டுச்சந்திற்குள் நுழைந்தது. பிறகு அது மீண்டும் தன் வழியைக் கண்டுபிடித்து நெடுஞ்சாலைக்குத் திரும்பி வருவதற்கு அதற்கு எண்பது ஆண்டுகளும் மூன்று கொடூரமான சர்வதேசப் போர்களும் தேவைப்பட்டன. ஆனால் அந்த எண்பதாண்டுகாலம் முற்றிலும் வீணாகவில்லை; நுண்ணுயிர்க்கொல்லிகள், அணுசக்தி, கணினிகள் ஆகியவற்றை அது நமக்குக் கொடுத்தது; கூடவே, பெண்ணியம், காலனித்துவ ஒழிப்பு, கட்டுப்பாடற்றப் புணர்ச்சி ஆகியவையும் அக்காலகட்டத்தில்தான் முளைத்தன. அது மட்டுமல்லாமல், அந்த அனுபவத்திலிருந்து தாராளவாதம் சுதாரித்துக் கொண்டது. ஒரு நூற்றாண்டுக்கு முன்பு இருந்ததைவிட இன்று அது தன் தந்திரத்தனத்தைக் குறைத்துக் கொண்டுள்ளது. அது தன்னுடைய சோசியலிச மற்றும் பாசிச எதிரிகளிடமிருந்து பல்வேறு யோசனைகளையும் அமைப்புகளையும் சுவீகரித்துக் கொண்டுள்ளது. குறிப்பாக, பொதுமக்களுக்குக் கல்வியும் சுகாதாரமும் நலத்திட்டங்களும் வழங்குவதற்கு அது தன்னை முழுமூச்சாக அர்ப்பணித்துக் கொண்டது. ஆனாலும், அதன் மையக் கோட்பாடு அவ்வளவாக மாறவில்லை. தாராளவாதம் இன்றும் எல்லாவற்றையும்விடத் தனிநபர் சுதந்திரத்தைத்தான் அதிகமாகத் தூக்கிப் பிடிக்கிறது, வாக்காளர்கள் மற்றும் வாடிக்கையாளர்கள்மீது அது இன்றும் உறுதியான நம்பிக்கை கொண்டுள்ளது. இருபத்தோராம் நூற்றாண்டின் துவக்ககாலமான இப்போது, தாராளவாதத் திரைப்படம் மட்டுமே உலகத் திரையரங்குகளில் வெற்றிகரமாக ஓடிக் கொண்டிருக்கிறது.

## மின்சக்தியும் மரபியலும் இஸ்லாமிய அடிப்படைவாதமும்

இப்போதைய நிலவரப்படி, தனிமனிதவாதம், மனித உரிமைகள், ஜனநாயகம், அரசுக் கட்டுப்பாடற்றச் சந்தை ஆகியவற்றை உள்ளடக்கிய தாராளவாதத்திற்கு வேறு எந்தவொரு தீவிர மாற்றும் இல்லை. 2011ல் மேற்கத்திய உலகத்தைப் புரட்டிப் போட்ட 'வால் ஸ்டிரீட் முற்றுகை', 'ஸ்பெயினின் 15எம் இயக்கம்' போன்ற சமூகப் போராட்டங்கள், ஜனநாயகத்திற்கோ, தனிமனிதவாதத்திற்கோ அல்லது மனித உரிமைகளுக்கோ எதிரானவை அல்ல. அவை அரசுக் கட்டுப்பாடற்றச் சந்தைப் பொருளாதாரத்தின் அடிப்படைக் கொள்கைகளுக்கு எதிரானவைகூட அல்ல. உண்மையில் அவற்றின் போக்கு நேர்மாறானதாக இருந்தது. அரசாங்கங்கள் தம்முடைய தாராளவாதக் கொள்கைகளை ஒழுங்காகக் கடைபிடிக்காததை எதிர்த்தே இப்போராட்டங்கள் நிகழ்த்தப்பட்டன. சந்தையானது பெருநிறுவனங்கள் மற்றும் 'ஒருபோதும் தோற்க வாய்ப்பில்லாத' பெரிய வங்கிகளால் கட்டுப்படுத்தப்பட்டு, அவற்றுக்கு சாதகமாக இருக்கும்படி மாற்றியமைக்கப்படுவதற்கு பதிலாக, உண்மையிலேயே கட்டுப்பாடற்றதாக இருக்க வேண்டும் என்று அப்போராட்டங்கள் வலியுறுத்தின. பணபலம் வாய்ந்த பெருநிறுவனங்களின் சார்பில் அரசிடம் பேசி அந்நிறுவனங்களுக்கு சாதகமான கொள்கைகளையும் சட்டங்களையும் இயற்றுவதற்குப் பணம் வாங்கிக் கொண்டு தரகு வேலை செய்கின்ற அதிகாரத் தரகர்கள் மற்றும் சக்தி வாய்ந்த குழுக்களுக்கு சேவை செய்வதற்கு பதிலாக, சாதாரணக் குடிமக்களுடைய நலன்களைப் பாதுகாக்கக்கூடிய உண்மையான ஜனநாயக அமைப்புகள் வேண்டும் என்று அவை அறைகூவல் விடுத்தன. பங்குச் சந்தைகளையும் பாராளுமன்றங்களையும் கடுமையாக விமர்சிப்பவர்களிடம்கூட உலகத்தை நடத்துவதற்கான ஒரு 'மாற்று மாதிரி' இல்லை. தாராளவாதக் கருத்துக்களைக் குறை கூறுவதையே தங்களுடைய ஒரே பொழுதுபோக்காகக் கொண்டுள்ள மேற்கத்தியக் கல்வியாளர்களும் ஆர்வலர்களும்கூட, தாராளவாதத்தைவிடச் சிறந்த ஒரு மாற்றை இதுவரை கண்டுபிடிக்கவில்லை.

மேற்கத்திய சமூகப் போராளிகளைவிடச் சீனா அதிகத் தீவிரமான சவால்களைத் தோற்றுவிக்கிறது. அது தன்னுடைய அரசியலையும் பொருளியலையும் தாராளமயமாக்கியிருந்தும்கூட, அது ஒரு ஜனநாயகமும் அல்ல, அதன் பொருளாதாரம் ஓர் உண்மையான, அரசுக் கட்டுப்பாடற்றச் சந்தைப் பொருளாதாரமும் அல்ல. ஆனாலும், அது இருபத்தோராம் நூற்றாண்டில் பொருளாதாரத்தில் பிரம்மாண்டமான வளர்ச்சி அடைவதற்கு அவை ஒரு தடையாக இருக்கவில்லை.

பிரம்மாண்டமான பொருளாதார வளர்ச்சி கண்டுள்ள சீனா, சித்தாந்தரீதியாகப் பிற நாடுகள்மீது அவ்வளவு பெரிய தாக்கம் எதையும் ஏற்படுத்தவில்லை. சீனர்கள் இந்நாட்களில் எதை நம்புகிறார்கள் என்பது அவர்கள் உட்பட யாருக்கும் தெரியாது. கோட்பாட்டுரீதியாகப் பார்க்கும்போது, சீனா இன்னும் ஒரு கம்யூனிசவாத நாடுதான். ஆனால் நடைமுறையில் அது முற்றிலும் வித்தியாசமாக இருக்கிறது. சில சீனச் சிந்தனையாளர்களும் தலைவர்களும் கன்பூசியயத்திற்குத் திரும்பிச் சென்றுவிடலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கின்றனர். ஆனால் அது மூடி மறைப்பதற்கான ஒரு வசதியான திரையே அன்றி வேறு எதுவுமில்லை. சீனாவில் தற்போது கொள்கைரீதியாக நிலவுகின்ற இந்த வெற்றிடத்தால், தெற்கு சான்பிரான்சிஸ்கோவில் உள்ள சிலிக்கான் பள்ளத்தாக்குப் பகுதியிலிருந்து (பின்வரும் அத்தியாயங்களில் இதை நாம் விவாதிக்கவிருக்கிறோம்) முளைக்கின்ற புதிய தொழில்நுட்ப மதங்கள் வளருவதற்கான கச்சிதமான இடமாகச் சீனா உருவாகியுள்ளது. ஆனால் ஒழுக்கமின்மையிலும் மெய்நிகர் சொர்க்கங்களிலும் நம்பிக்கை கொண்டுள்ள இந்தத் தொழிநுட்ப மதங்கள் தம்மை நிலைப்படுத்திக் கொள்ளுவதற்கு இன்னும் பத்து அல்லது இருபது ஆண்டுகளாவது ஆகும். எனவே, தற்போதைய சீனா தாராளவாதத்திற்கான ஓர் உண்மையான மாற்றாக இல்லை. திவாலாகி, தாராளவாத அமைப்பில் நம்பிக்கை இழந்து நிற்கின்ற கிரேக்கர்களுக்கு, 'சீனர்களை அப்படியே நகலெடுப்பது' ஒரு சாத்தியமான வழி அல்ல.

அப்படியானால், அடிப்படைவாத இஸ்லாம் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? அல்லது, அடிப்படைவாதக் கிறித்தவம், மீட்பர்மீது நம்பிக்கை கொண்ட யூதமதம், அல்லது மறுமலர்ச்சி இந்துமதம் பற்றி உங்கள் கருத்து என்ன? தாங்கள் எதை நம்புகிறோம் என்பது சீனர்களுக்குத் தெரியவில்லை, ஆனால் மத அடிப்படைவாதிகள் தாங்கள் எதை நம்புகிறோம் என்பதை அளவுக்கதிகமாக நன்றாகத் தெரிந்து வைத்திருக்கின்றனர். கடவுள் இறந்துவிட்டதாக நீட்சே பிரகடனம் செய்து நூறு ஆண்டுகளுக்குப் பிறகு, கடவுள் மீண்டும் திரும்பி வந்து கொண்டிருப்பதுபோலத் தோன்றுகிறது. ஆனால் இது ஒரு கானல்நீர்தான். கடவுள் இறந்துவிட்டார் - அவருடைய உடலை அப்புறப்படுத்துவதற்குச் சிறிது காலம் ஆகிறது, அவ்வளவுதான். அடிப்படைவாத இஸ்லாம் தாராளவாதத்திற்கு ஒரு தீவிர அச்சுறுத்தலாக இல்லை. ஏனெனில், அடிப்படைவாத இஸ்லாமின்மீது அதிதீவிரப் பற்றுக் கொண்டுள்ளவர்கள், இருபத்தோராம் நூற்றாண்டின் உலகத்தை உண்மையில் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை; புதிய

தொழில்நுட்பங்கள் நம்மைச் சுற்றிலும் உருவாக்கிக் கொண்டிருக்கின்ற புதுமையான ஆபத்துக்களையும் வாய்ப்புகளையும் பற்றிக் கூறுவதற்குப் பொருத்தமான எதுவும் அவர்களிடம் இல்லை.

மதமும் தொழில்நுட்பமும் எப்போதும் இணைந்து ஒரு மென்மையான 'டேங்கோ' நடனம் ஆடுகின்றன. அவை ஒன்றையொன்று தள்ளுகின்றன, ஒன்றையொன்று சார்ந்துள்ளன, ஒன்றிலிருந்து மற்றொன்றால் அதிக தூரம் விலகிச் செல்ல முடிவதில்லை. தொழில்நுட்பம் மதத்தைச் சார்ந்துள்ளது. ஏனெனில், ஒவ்வொரு கண்டுபிடிப்பும் பல நடைமுறைப் பயன்பாடுகளைக் கொண்டுள்ளன; நெருக்கடியான மற்றும் முக்கியமான தேர்ந்தெடுப்புகளை மேற்கொள்ளுவதற்கும், போய்ச் சேர வேண்டிய இடத்தைச் சுட்டிக்காட்டுவதற்கும் பொறியாளர்களுக்கு ஏதோ ஒரு தீர்க்கதரிசியின் உதவி தேவைப்படுகிறது. இதன்படி, பத்தொன்பதாம் நூற்றாண்டுப் பொறியாளர்கள் நீராவி தொடர்வண்டிகளுக்கான உந்துப் பொறிகளையும் வானொலிகளையும் உள்ளெரிப் பொறிகளையும் கண்டுபிடித்தனர். ஆனால், இதே கருவிகளை, பாசிசவாதச் சமுதாயங்களையும் கம்யூனிசவாத சர்வாதிகார ஆட்சிகளையும் தாராளவாத ஜனநாயக ஆட்சிகளையும் உருவாக்குவதற்குப் பயன்படுத்த முடியும் என்பதை இருபதாம் நூற்றாண்டு நிரூபித்துள்ளது. மத நம்பிக்கைகள் இல்லாமல், எந்தப் பாதையில் போக வேண்டும் என்பதைத் தொடருந்துப் பொறிகளால் தீர்மானிக்க முடியாது.

மறுபுறம், ஓர் உணவகத்தில் உணவு பரிமாறுபவர் நம் கையில் ஓர் உணவுப் பட்டியலைக் கொடுத்து நம்முடைய பசியார்வத்திற்கு ஓர் எல்லையை வரையறுப்பதைப்போல, நம்முடைய மதரீதியான முன்னோக்குகளின் வீச்சையும் எல்லைகளையும் தொழில்நுட்பம்தான் பெரும்பாலும் வரையறுக்கிறது. புதிய தொழில்நுட்பங்கள் பழைய கடவுளரைக் கொன்றுவிட்டுப் புதிய கடவுளரை உருவாக்குகின்றன. அதனால்தான் வேளாண் சார்ந்த கடவுளர் வேட்டையாடிகளின் ஆவிக் கடவுளிடமிருந்து வேறுபட்டிருந்தனர்; தொழிற்சாலைத் தொழிலாளர்கள் கற்பனை செய்த சொர்க்கங்கள் விவசாயிகள் கற்பனை செய்த சொர்க்கங்களிலிருந்து வித்தியாசப்பட்டு இருந்தன; இருபத்தோராம் நூற்றாண்டின் புரட்சிகரமான தொழில்நுட்பங்கள் பண்டைய இடைக்கால சமய நம்பிக்கைகளுக்குப் புத்துயிர் அளிப்பதற்கு பதிலாக, இதற்கு முன்பு ஒருபோதும் இருந்திராத மத இயக்கங்களைத் தோற்றுவிக்கும். 'இஸ்லாம்தான் இதற்கான விடை' என்ற மந்திரத்தை இஸ்லாமிய அடிப்படைவாதிகள் மீண்டும் மீண்டும் கூறக்கூடும், ஆனால் தற்போதைய தொழில்நுட்ப

யதார்த்தங்களுடனான தொடர்பை இழக்கின்ற மதங்கள், கேட்கப்படுகின்ற கேள்விகளைக் புரிந்து கொள்ளுவதற்கான திறனைக்கூட இழந்துவிடுகின்றன. அறிவை உள்ளடக்கிய வேலைகளில், செயற்கை நுண்ணறிவானது மனிதர்களைவிட அதிகச் சிறப்பாகச் செயல்படும்போது வேலைவாய்ப்புச் சந்தையின் நிலை என்னவாகும்? பொருளாதாரரீதியாகப் பயனற்ற மக்களை உள்ளடக்கிய ஒரு புதிய, அளவில் மிக பெரிய வர்க்கம் அரசியல்மீது எத்தகைய தாக்கத்தை ஏற்படுத்தும்? நேனோதொழில்நுட்பமும், திசுக்கள், உயிரணுக்கள், உறுப்புகள் போன்றவற்றை மீண்டும் புதுப்பிப்பதை உள்ளடக்கிய மருத்துவமும் எண்பது வயதைப் புதிய ஐம்பது வயதாக மாற்றும்போது, உறவுகள், குடும்பங்கள், மற்றும் ஓய்வூதிய நிதிகளின் நிலைமை எப்படி இருக்கும்? நமக்குப் பிடித்தமான அம்சங்களுடன்கூடிய குழந்தைகளை உருவாக்குவதற்கும், ஏழைகளுக்கும் பணக்காரர்களுக்கும் இடையே இதற்கு முன்பு ஒருபோதும் இருந்திராத இடைவெளியை உருவாக்குவதற்கும் உயிர்தொழில்நுட்பம் வழி கோலும்போது மனிதச் சமுதாயத்திற்கு என்ன நிகழும்?

இக்கேள்விகளில் எதுவொன்றுக்குமான விடைகளைக் குரானிலோ, இஸ்லாமிய ஷரியா சட்டத்திலோ, பைபிளிலோ, அல்லது கன்பூசியஸின் 'அனலெக்ட்ஸ்' என்ற புத்தகத் தொகுப்பிலோ உங்களால் கண்டுபிடிக்க முடியாது. ஏனெனில், இடைக்காலத்து மத்தியக் கிழக்கு நாடுகளிலோ அல்லது பண்டைய சீனாவிலோ, கணினிகளையும், மரபியலையும், நேனோதொழில்நுட்பத்தையும் பற்றி யாரும் அவ்வளவாக அறிந்திருக்கவில்லை. தொழில்நுட்பப் புயல்களும் பொருளாதாரப் புயல்களும் கடுமையாக வீசிக் கொண்டிருக்கின்ற ஓர் உலகில் உறுதிப்பாடு எனும் நங்கூரத்தைத் தன்னால் கொடுக்க முடியும் என்று வேண்டுமானால் அடிப்படைவாத இஸ்லாமால் வாக்குக் கொடுக்க முடியக்கூடும். ஆனால் ஒரு புயலின் ஊடாகப் பயணிப்பதற்கு, வெறுமனே ஒரு நங்கூரத்தைவிட ஒரு வரைபடமும் ஒரு சுக்கானும்தான் முக்கியமாக உங்களுக்குத் தேவைப்படும். எனவே, அடிப்படைவாத இஸ்லாமைப் பின்பற்றுகின்ற ஒரு குழுவிலேயே பிறந்து வளருகின்ற மக்களுக்கு வேண்டுமானால் அம்மதம் வசீகரமானதாக இருக்கக்கூடும், ஆனால் வேலை எதுவும் கிடைக்காமல் தவிக்கின்ற ஸ்பானிய இளைஞர்களையோ அல்லது பெருங்கவலையுடன் இருக்கின்ற சீனக் கோடீஸ்வரர்களையோ அது எந்த விதத்திலும் கவர்ந்திழுக்காது.

இருந்தாலும், கோடிக்கணக்கான மக்கள் இஸ்லாமையோ,

கிறித்தவத்தையோ, அல்லது இந்து மதத்தையோ தொடர்ந்து நம்பக்கூடும். ஆனால் வரலாற்றில் வெறும் எண்ணிக்கைக்கு எந்த மதிப்பும் இல்லை. பின்னோக்கிப் பார்க்கின்ற பெருங்கூட்டத்தினரைவிட முன்னோக்கிப் பார்க்கின்ற புதுமைப் புனைவாளர்களை உள்ளடக்கிய சிறு குழுக்கள்தான் பல சமயங்களில் வரலாற்றை மாற்றியமைக்கின்றன. 10,000 ஆண்டுகளுக்கு முன்பு பெரும்பாலான மக்கள் வேட்டையாடிகளாக இருந்தனர்; மத்தியக் கிழக்குப் பகுதிகளில் ஒருசில முன்னோடிகளே விவசாயிகளாக இருந்தனர். ஆனால் எதிர்காலம் விவசாயிகளுக்குச் சொந்தமானதாகவே இருந்தது. 1850ம் ஆண்டில் 90 சதவீதத்திற்கும் அதிகமான மனிதர்கள் விவசாயிகளாக இருந்தனர். கங்கை, நைல், யாங்சே ஆகிய நதிகளை ஒட்டி அமைந்திருந்த சிறிய கிராமங்களில் வாழ்ந்த மக்களில் எவருக்கும் நீராவிப் பொறிகள், இருப்புப்பாதைகள், தந்திக்கம்பிகள் போன்றவற்றைப் பற்றி எதுவும் தெரிந்திருக்கவில்லை. ஆனாலும், அந்த விவசாயிகளின் தலையெழுத்து, மான்செஸ்டரிலும் பிர்மிங்காமிலும் தொழிற்புரட்சியை முன்னின்று நடத்திய ஒருசில பொறியாளர்களாலும் அரசியல்வாதிகளாலும் நிதியாளர்களாலும் ஏற்கனவே தீர்மானிக்கப்பட்டிருந்தது. நீராவிப் பொறிகள், இருப்புப்பாதைகள், தந்திக்கம்பிகள் ஆகியவை உணவு, ஆடைகள், ஊர்திகள், மற்றும் ஆயுதங்களின் உற்பத்தியை முற்றிலுமாக மாற்றியமைத்து, தீர்மானங்கள் மேற்கொள்ளுவதற்கான அளப்பரிய அதிகாரத்தைத் தொழிற்துறைக்குக் கொடுத்தன. பாரம்பரிய வேளாண் சமுதாயங்கள் அந்த அதிகாரத்தை இழந்தன.

தொழிற்புரட்சி உலகம் நெடுகிலும் பரவி, கங்கை, நைல், யாங்சே ஆகிய நதியோரப் பகுதிகள்வரை ஊடுருவியபோதிலும், பெரும்பாலான மக்கள் நீராவிப் பொறிகளைவிட வேதங்களையும் பைபிளையும் குரானையும் ‘அனலெக்ட்ஸ்’ நூலையும் தொடர்ந்து நம்பினர். தொழிற்புரட்சியால் உருவான புதிய பிரச்சனைகள் உட்பட, மனிதகுலத்தின் அனைத்துத் துன்பங்களுக்குமான தீர்வு தங்களிடம் மட்டுமே இருந்ததாக வாதிட்ட மதகுருமார்களும் மர்ம யோகிகளும் இன்றுபோலவே பத்தொன்பதாம் நூற்றாண்டிலும் எண்ணற்றோர் இருந்தனர். எடுத்துக்காட்டாக, 1820களுக்கும் 1880களுக்கும் இடையே எகிப்து பிரிட்டனின் உதவியுடன் சூடானைக் கைப்பற்றியது. பிறகு அது அந்நாட்டை நவீனப்படுத்தி, புதிய சர்வதேச வர்த்தகப் பிணையத்தில் அதை இணைக்க முயற்சித்தது. இது பாரம்பரிய சூடான் சமுதாயத்தை நிலை தடுமாறச் செய்து, எல்லா இடங்களிலும் அதிருப்தியையும் கலகங்களையும் உருவாக்கியது. 1881ல், முகமது

அகமது பின் அப்துல்லா என்ற உள்ளூர் மதத் தலைவர், பூமியில் சட்ட ஒழுங்கை நிலைப்படுத்துவதற்குக் கடவுளால் அனுப்பி வைக்கப்பட்ட மஹதி (மீட்பர்) தான்தான் என்று பிரகடனம் செய்தார். அவருடைய ஆதரவாளர்கள் ஆங்கிலேய-எகிப்தியப் படையைத் தோற்கடித்து, அதன் தளபதியான ஜெனரல் சார்லஸ் கார்டனின் தலையைக் கொய்தனர். விக்டோரியா பேரரசியின் காலகட்டத்திய பிரிட்டனை இது அதிர்ச்சிக்கு உள்ளாக்கியது. பிறகு அந்த ஆதரவாளர்கள் சூடானில் ஓர் இஸ்லாமிய இறைவல்லாண்மையை நிறுவினர். ஷரியா சட்டத்தால் நிர்வகிக்கப்பட்ட அந்த ஆட்சி 1898ம் ஆண்டுவரை நீடித்தது.

இதற்கிடையே இந்தியாவில் தயானந்த சரஸ்வதி ஓர் இந்து மறுமலர்ச்சி இயக்கத்திற்குத் தலைமை வகித்தார். வேத நூல்கள் கூறுவது ஒருபோதும் தவறாக இருப்பதில்லை என்பதுதான் அவருடைய இயக்கத்தின் அடிப்படைக் கொள்கையாக இருந்தது. வேத ஞானத்தைப் பரப்புவதை நோக்கமாகக் கொண்ட ஆரிய சமாஜம் என்ற அமைப்பை 1875ம் ஆண்டில் அவர் தோற்றுவித்தார். உண்மையைக் கூற வேண்டுமென்றால், வேதங்களை அவர் ஒரு தாராளவாத வழியில் அர்த்தப்படுத்தினார் என்பது வியப்பூட்டும் ஒரு செய்தியாகும். எடுத்துக்காட்டாக, பெண்களுக்கு சம உரிமை என்ற கோட்பாடு மேற்கத்திய உலகில் பிரபலமாவதற்கு நெடுங்காலத்திற்கு முன்பே அவர் இந்த யோசனையை ஆதரித்தார்.

தயானந்தர் வாழ்ந்த அதே காலகட்டத்தில் வாழ்ந்த போப் ஒன்பதாம் பயஸ், பெண்களைப் பற்றி மிகவும் பிற்போக்கான கண்ணோட்டத்தைக் கொண்டிருந்தார். கத்தோலிக்கக் கொள்கைகளில் பயஸ் பல தொடர்ச்சியான சீர்திருத்தங்களை மேற்கொண்டார். 'போப்பின் வழுவா வரம்' என்ற ஒரு கொள்கையையும் அவர் புதிதாக நிலைப்படுத்தினார். அதன்படி, கடவுள் விசுவாசம் தொடர்பான விவகாரங்களில் போப் ஒருபோதும் தவறிழைக்கவே மாட்டார் (இந்த இடைக்கால யோசனை, சார்லஸ் டார்வின் தன்னுடைய 'ஆன் த ஆரிஜின் ஆஃப் ஸ்பீசீஸ்' என்ற நூலை வெளியிட்டுப் பதினோரு ஆண்டுகளுக்குப் பிறகு 1870ம் ஆண்டில்தான் கத்தோலிக்கக் கொள்கையாக ஏற்றுக் கொள்ளப்பட்டது).

தான் தவறிழைப்பதற்கான சாத்தியமே இல்லை என்று போப் கண்டறிவதற்கு முப்பது ஆண்டுகளுக்கு முன்பாக, பெரிதாக மதிக்கப்படாத சீன அறிஞரான ஹாங் ஜிகுவான், கனவுகள் வாயிலாகத் தனக்குத் தொடர்ச்சியான மதரீதியான தீர்க்கதரிசனங்கள் கிடைத்ததாக முழங்கினார். அதன்படி, ஏசுவின் இளைய சகோதரர்தான் ஹாங் என்று அக்கனவுகளில் கடவுள் அவருக்கு வெளிப்படுத்தினார். பிறகு, அவர்

ஹாங்கிடம் ஒரு தெய்விகக் கடமையை ஒப்படைத்தார். பதினேழாம் நூற்றாண்டிலிருந்து சீனாவை ஆண்டு வந்திருந்த மாஞ்சு கொடுங்கோலர்களை நாடு கடத்திவிட்டு, சொர்க்கம் போன்ற ஒரு மாபெரும் அமைதி சாம்ராஜ்ஜியத்தை தாய்பிங் டியாங்கோ தலைமையில் நிலைப்படுத்தும்படி கடவுள் அவரிடம் கூறினார். ஆங்கிலேயர்களுக்கும் சீனர்களுக்கும் இடையே நடைபெற்ற அபினிப் போர்களில் சீனாவுக்கு ஏற்பட்டத் தோல்விகளாலும் நவீனத் தொழிற்துறை மற்றும் ஐரோப்பிய ஏகாதிபத்தியத்தாலும் அதிர்ச்சியடைந்து முற்றிலுமாக நம்பிக்கை இழந்திருந்த லட்சக்கணக்கான சீனர்களின் மனங்களில் ஹாங்கின் இச்செய்தி நம்பிக்கையை விதைத்தது. ஆனால் ஹாங் ஓர் அமைதியான பேரரசை நோக்கி அவர்களை வழிநடத்திச் செல்லவில்லை. மாறாக, மாஞ்சு சிங் அரசமரபுக்கு எதிரான 'தாய்பிங் கலகத்திற்கு' அவர் அவர்களை முன்னடத்திச் சென்றார். பத்தொன்பதாம் நூற்றாண்டில் (1850-1864) நிகழ்ந்த மிகக் கொடூரமான போர் அது. அதில் குறைந்தபட்சம் இரண்டு கோடி மக்கள் உயிரிழந்தனர். நெப்போலியப் போர்களிலும் அமெரிக்க உள்நாட்டுப் போரிலும் இறந்தவர்களின் எண்ணிக்கையைவிட மிகவும் அதிகம் அது.

தொழிற்சாலைகளும் இருப்புப்பாதைகளும் நீராவிக் கப்பல்களும் உலகை நிறைத்தபோதுகூட, ஹாங், தயானந்தர், பயஸ், மஹதி ஆகியோரின் சமயக் கொள்கைகளை லட்சக்கணக்கான மக்கள் உடும்புபோலப் பற்றிக் கொண்டனர். ஆனாலும், நம்மில் பெரும்பாலானோர் பத்தொன்பதாம் நூற்றாண்டைக் கடவுள் விசுவாசத்தின் காலகட்டமாகக் கருதுவதில்லை. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முன்னோக்காளர்களைப் பற்றி நாம் நினைத்துப் பார்க்கும்போது, மஹதி, ஒன்பதாம் பயஸ், அல்லது ஹாங் ஜிகுவானைவிட, மார்க்ஸ், எங்கெல்ஸ், லெனின் ஆகியோரை நாம் நினைவுகூருவதற்கான வாய்ப்புகள்தான் அதிகம். அதுதான் உண்மை. 1850ல் சோசியலிசம் வெறுமனே ஓர் உதிரி இயக்கமாக மட்டுமே இருந்தது. விரைவில் அது வேகம் பிடித்து, சீனா மற்றும் சூடானின் மீட்பர்கள் தாங்கள் என்று முழங்கியவர்களைவிட அதிக ஆழமான வழிகளில் உலகை மாற்றியது. தேசிய சுகாதார நலத் திட்டங்கள், ஓய்வூதிய நிதிகள், இலவசப் பள்ளிக்கூடங்கள் ஆகியவற்றை நீங்கள் மதித்தால், ஹாங் மற்றும் மஹதியைவிட மார்க்ஸுக்கும் லெனினுக்கும்தான் (ஓட்டோ வான் பிஸ்மார்க்குக்கும்) நீங்கள் அதிகமாக நன்றி கூற வேண்டும்.

ஹாங்கும் மஹதியும் தோற்றுப் போனபோது மார்க்ஸும் லெனினும்

மட்டும் எப்படி வெற்றி பெற்றனர்? சோசியலிச மனிதவாதம் தத்துவரீதியாக இஸ்லாமிய இறையியலையும் கிறித்தவ இறையியலையும்விட அதிக உயர்நயமானது என்பதல்ல அதற்குக் காரணம். மாறாக, மார்க்ஸும் லெனினும் பண்டைய உரைகளையும் தீர்க்கதரிசனக் கனவுகளையும் ஆராய்வதற்குத் தங்கள் நேரத்தை அர்ப்பணிப்பதற்கு பதிலாக, தங்கள் காலகட்டத்தியத் தொழில்நுட்ப யதார்த்தங்களையும் பொருளாதார யதார்த்தங்களையும் புரிந்து கொள்ளுவதன்மீது அதிக கவனம் செலுத்தியதுதான் அவர்களுடைய வெற்றிக்குக் காரணம். நீராவிப் பொறிகள், இருப்புப்பாதைகள், தந்திக்கம்பிகள், மின்சக்தி ஆகியவை யாரும் கேள்விப்பட்டிராத பிரச்சனைகளையும் புதிய வாய்ப்புகளையும் உருவாக்கின. நகர்ப்புறப் பாட்டாளிகள் என்ற புதிய வர்க்கத்தின் அனுபவங்களும் தேவைகளும் நம்பிக்கையுடன்கூடிய எதிர்பார்ப்புகளும் பைபிள் காலத்திய விவசாயிகளின் அனுபவங்கள், தேவைகள், மற்றும் நம்பிக்கையுடன்கூடிய எதிர்பார்ப்புகளிலிருந்து மிகவும் வேறுபட்டிருந்தன. இந்தத் தேவைகளுக்கும் நம்பிக்கையுடன்கூடிய எதிர்பார்ப்புகளுக்கும் விடையளிப்பதற்காக, ஒரு நீராவிப் பொறி எவ்வாறு இயங்குகிறது, ஒரு நிலக்கரிச் சுரங்கம் எப்படிச் செயல்படுகிறது, இருப்புப்பாதைகள் எவ்வாறு நாட்டின் பொருளாதாரத்தை வடிவமைக்கின்றன, மின்சக்தி எப்படி அரசியலின்மீது தாக்கம் ஏற்படுத்துகிறது போன்றவற்றை மார்க்ஸும் லெனினும் ஆய்வு செய்தனர்.

கம்யூனிசவாதத்தை ஓர் ஒற்றை வரியில் வரையறுக்கும்படி லெனினிடம் ஒருமுறை கேட்கப்பட்டபோது, “கம்யூனிசவாதம் என்பது தொழிலாளர் குழுக்களுக்கான சக்தி, ஒட்டுமொத்த நாட்டிற்குமான மின்னிணைப்பு,” என்று அவர் பதிலளித்தார். மின்சக்தியும் இருப்புப்பாதைகளும் வானொலியும் இல்லாமல் கம்யூனிசவாதம் இருக்க வாய்ப்பில்லை. பதினாறாம் நூற்றாண்டு காலகட்டத்திய ரஷ்யாவில் ஒரு கம்யூனிசவாத ஆட்சியை உங்களால் நிறுவியிருக்க முடியாது. ஏனெனில், கம்யூனிசவாதம் செயல்படுவதற்குத் தகவல்களும் வளங்களும் ஒரே இடத்தில் ஒன்றுகுவிக்கப்பட்டிருக்க வேண்டும். உற்பத்தி செய்யப்படும் பொருட்கள் சுலபமாகச் சேகரிக்கப்பட்டு, தொலைதூர இடங்களுக்கு எளிதாக விநியோகிக்கப்படும்போதும், அனைத்து நடவடிக்கைகளும் நாடு தழுவிய அளவில் கண்காணிக்கப்பட்டு ஒருங்கிணைக்கப்படும்போதும்தான் ‘ஒவ்வொருவருடைய திறனுக்கு ஏற்ற உழைப்பு அவரிடமிருந்து பெறப்பட்டு, பொருட்கள் ஒவ்வொருவருக்கும் அவரவருடைய

தேவைகளுக்கு ஏற்பப் பகிர்ந்து அளிக்கப்பட வேண்டும்,' என்ற கார்ல் மார்க்ஸின் முழக்கம் வேலை செய்யும்.

மார்க்ஸும் அவரைப் பின்பற்றியவர்களும் புதிய தொழில்நுட்ப யதார்த்தங்களையும் புதிய மனித அனுபவங்களையும் புரிந்து கொண்டனர். எனவே, தொழிற்துறை சார்ந்த சமுதாயத்தின் புதிய பிரச்சனைகளுக்குப் பொருத்தமான விடைகள் அவர்களிடம் இருந்தன. அதோடு, இதற்கு முன்பு ஒருபோதும் இருந்திராத புதிய வாய்ப்புகளிலிருந்து எப்படிப் பலன் பெறுவது என்பது பற்றிய அசலான யோசனைகளும் அவர்களிடம் இருந்தன. சோசியலிசவாதிகள் ஒரு துணிச்சலான புதிய உலகிற்குத் தேவையான ஒரு துணிச்சலான புதிய மதத்தை உருவாக்கினர். தொழில்நுட்பம் மற்றும் பொருளியல் மூலமாக விமோசனம் பெற்றுத் தருவதாக மக்களுக்கு அவர்கள் வாக்குறுதி அளித்தனர். இவ்வாறு, வரலாற்றில் முதல் தொழில்நுட்ப மதத்தை அவர்கள் தோற்றுவித்தனர், சித்தாந்தரீதியான பிரசங்கத்திற்கான அடித்தளங்களை மாற்றியமைத்தனர். மார்க்ஸுக்கு முன்பு, உற்பத்தி வழிமுறைகளைப் பற்றிய தங்களுடைய கண்ணோட்டங்களுக்கு ஏற்ப அல்லாமல், கடவுளைப் பற்றிய தங்களுடைய கண்ணோட்டங்களுக்கு ஏற்ப மக்கள் தங்களை வரையறுக்கவும் பிரித்துக் கொள்ளவும் செய்தனர். மார்க்ஸின் காலத்திலிருந்து, மரணத்திற்குப் பிந்தைய வாழ்க்கை மற்றும் ஆன்மா பற்றிய வாக்குவாதங்களைவிட, தொழில்நுட்பம் மற்றும் பொருளாதாரக் கட்டமைப்பைப் பற்றிய கேள்விகள் அதிக முக்கியத்துவம் பெற்றன, அதிக அளவில் மக்களைப் பிரித்தன. இருபதாம் நூற்றாண்டின் இரண்டாவது பாதியில், உற்பத்தி வழிமுறைகளைப் பற்றிய ஒரு வாக்குவாதத்தில் மனிதகுலம் தன்னைத் தானே அழித்துக் கொள்ளக்கூடிய நிலைவரை போய்விட்டது. மார்க்ஸையும் லெனினையும் மிகக் கடுமையாக விமர்சித்தவர்கள்கூட, வரலாற்றையும் சமூகத்தையும் பற்றிய அவ்விருவருடைய அடிப்படை மனப்போக்கை சுவீகரித்துக் கொண்டு, கடவுளையும் சொர்க்கத்தையும்விடத் தொழில்நுட்பத்தையும் உற்பத்தியையும் பற்றி அதிக எச்சரிக்கையாக சிந்திக்கத் தொடங்கினர்.

19ம் நூற்றாண்டின் நடுவில் வெகுசிலரே மார்க்ஸைப்போல ஆழமான உள்நோக்குகளை வெளிப்படுத்தினர். எனவே, வெகுசில நாடுகள் மட்டுமே வேகமாகத் தொழில்மயமாயின. இந்த வெகுசில நாடுகள் உலகை வென்றன. என்ன நிகழ்ந்து கொண்டிருந்தது என்பதைப் புரிந்து கொள்ளப் பெரும்பாலான நாடுகள் தவறின. எனவே, முன்னேற்றம் எனும் ரயிலை அவை தவறவிட்டன. தயானந்தரின் இந்தியாவும் மஹதியின் சூடானும் நீராவிப் பொறிகளைவிடக்

கடவுளைப் பற்றிய விவகாரங்களில் அதிக ஆழமாக மூழ்கிப் போயிருந்ததால், தொழில்மயமான நாடான பிரிட்டனால் அவை ஆக்கிரமிக்கப்பட்டுச் சுரண்டலுக்கு ஆளாயின. கடந்த சில ஆண்டுகளில்தான் இந்தியா தனக்கும் பிரிட்டனுக்கும் இடையேயான பொருளாதார இடைவெளியையும் புவிசார் அரசியல் இடைவெளியையும் நிரப்புவதில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் கண்டுள்ளது.

***

இருபத்தோராம் நூற்றாண்டின் துவக்கத்தில், முன்னேற்றம் எனும் ரயில் மீண்டும் ரயில் நிலையத்திலிருந்து வெளியேறிக் கொண்டிருக்கிறது. இந்த ரயில்தான் 'ஹோமோ சேப்பியன்ஸ்' என்ற நிலையத்திலிருந்து வெளியேறுகின்ற கடைசி ரயிலாக இருக்கக்கூடும். இந்த ரயிலைத் தவறவிடுபவர்களுக்கு ஓர் இரண்டாவது வாய்ப்பு ஒருபோதும் கிடைக்காது. இந்த ரயிலில் உங்களுக்கு ஓர் இடம் கிடைப்பதற்கு இருபத்தோராம் நூற்றாண்டின் தொழில்நுட்பத்தை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டியது இன்றியமையாதது. குறிப்பாக, உயிர்தொழில்நுட்பத்தின் சக்தியையும் கணினிப் படிமுறைத் தீர்வுகளின் சக்தியையும் நீங்கள் கண்டிப்பாகப் புரிந்து கொள்ள வேண்டும். இந்த சக்திகள் நீராவியையும் தந்தியையும்விட அதிக ஆற்றல்மிக்கவை. இவை வெறுமனே உணவு, உடைகள், ஊர்திகள், ஆயுதங்கள் ஆகியவற்றைத் தயாரிப்பதற்கு மட்டும் பயன்படுத்தப்படப் போவதில்லை. மாறாக, உடல்கள், மூளைகள் மற்றும் மனங்கள்தாம் இருபத்தோராம் நூற்றாண்டின் முக்கிய உற்பத்திப் பொருட்களாக இருக்கப் போகின்றன. உடல்களையும் மூளைகளையும் உருவாக்கத் தெரிந்திருக்கின்றவர்களுக்கும் அவற்றை உருவாக்கத் தெரியாதவர்களுக்கும் இடையேயான இடைவெளி, சார்லஸ் டிக்கென்ஸின் பிரிட்டனுக்கும் மஹதியின் சூடானுக்கும் இடையேயான இடைவெளியைவிட மிகப் பெரியதாக இருக்கும். இன்னும் சொல்லப் போனால், சேப்பியன்ஸுக்கும் நியான்டர்தால்களுக்கும் இடையேயான இடைவெளியைவிட அது மிகப் பெரியதாக இருக்கும். இருபத்தோராம் நூற்றாண்டில் முன்னேற்ற ரயிலில் பயணிப்பவர்கள், படைப்பதற்கும் அழிப்பதற்குமான தெய்விகத் திறன்களைக் கைவசப்படுத்துவர்; அந்த ரயிலைத் தவறவிட்டவர்கள் பூண்டோடு அழிக்கப்படும் நிலையை எதிர்கொள்ளுவர்.

ஒரு நூறு ஆண்டுகளுக்கு முன்புவரை அந்தந்தக் காலகட்டங்களின் தொழில்நுட்பங்களைப் பற்றித் துல்லியமாக அறிந்து வைத்திருந்த சோசியலிசம், இன்று புதிய தொழில்நுட்பத்தைப் புரிந்து கொள்ளத்

தவறிவிட்டது. சோவியத் ஒன்றிய சோசியலிசக் கட்சியின் மத்தியக் குழுவின் பொதுச் செயலாளராக இருந்த லியோனீத் பிரெஸ்னேவ், கியூபாவின் அதிபர் ஃபிடெல் கேஸ்ட்ரோ ஆகியோர் நீராவி யுகத்தில் மார்க்ஸும் லெனினும் உருவாக்கிய யோசனைகளை இறுகப் பற்றியிருந்தனரே தவிர, கணினிகள் மற்றும் உயிர்தொழில்நுட்பத்தின் சக்திகளை அவர்கள் புரிந்து கொள்ளவில்லை. தாராளவாதிகள், இதற்கு நேரெதிராக, தகவல் யுகத்திற்குத் தங்களை மிகச் சிறப்பாகப் பொருத்திக் கொண்டனர். குருசேவின் 1956ம் ஆண்டுக் கணிப்பு ஏன் ஒருபோதும் நிறைவேறவில்லை என்பதையும், ஏன் இறுதியில் தாராளவாதப் பெருமுதலாளிகள் மார்க்ஸியவாதிகளைப் புதைத்தனர் என்பதையும் இது ஓரளவுக்கு விளக்குகிறது. மார்க்ஸ் இன்று மீண்டும் உயிரோடு திரும்பி வந்தால், ‘மூலதனம்’ என்ற தன்னுடைய நூலைப் படிப்பதில் குறைவான நேரத்தைச் செலவிட்டுவிட்டு, இணையத்தையும் மனித மரபணுத் தொகுதியையும் ஆய்வு செய்வதற்கு அதிக நேரத்தைச் செலவிடும்படி தன்னுடைய எஞ்சிய சீடர்களிடம் வலியுறுத்தியிருப்பார்.

அடிப்படைவாத இஸ்லாம் சோசியலிசத்தைவிட மிக மோசமான ஒரு நிலையில் இருக்கிறது. அது இன்னும் தொழிற்புரட்சியைக்கூட ஏற்றுக் கொள்ளவில்லை என்பதால், மரபுப் பொறியியலையும் செயற்கை நுண்ணறிவையும் பற்றிக் கூறுவதற்குப் பொருத்தமான எதுவும் அதனிடம் இல்லாததில் வியப்பேதும் இல்லை. இஸ்லாம், கிறித்தவம், மற்றும் பிற பாரம்பரிய மதங்கள் உலகில் இன்றளவும் முக்கிய ஆட்டக்காரர்களாக இருக்கின்றன. ஆனால் அவை பெரும்பாலான நேரம் எதிர்வினையாற்றவே செய்கின்றன. கடந்தகாலத்தில், அவை ஒரு படைப்பாற்றலாகத் திகழ்ந்தன. எடுத்துக்காட்டாக, முன்பு கிறித்தவத்திற்கு எதிரானதாகப் பார்க்கப்பட்டு வந்திருந்த, ‘கடவுளின் முன்னிலையில் அனைத்து மனிதர்களும் சமமானவர்கள்’ என்ற யோசனையைக் கிறித்தவம் இவ்வுலகம் நெடுகிலும் பரப்பியதன் மூலம், மனித அரசியல் கட்டமைப்புகளையும், சமுதாய அடுக்கதிகாரங்களையும், ஆண்-பெண் உறவுகளையும்கூட மாற்றியுள்ளது. ஏசு தன்னுடைய மலைப் பிரசங்கத்தில் இன்னும் ஒரு படி மேலே சென்று, ஏழைகளும் ஒடுக்கப்பட்டவர்களும்தான் கடவுளுக்கு மிகவும் பிடித்தமான மக்கள் என்று வலியுறுத்தியதன் மூலம் அதிகாரப் பிரமிடைத் தலைகீழாகப் புரட்டிப் போட்டு, பல தலைமுறைப் புரட்சியாளர்களுக்கு சக்திவாய்ந்த வெடிமருந்துகளை வழங்கினார்.

சமூக மற்றும் அறநெறிசார் சீர்திருத்தங்களோடு கூடவே, முக்கியமான பொருளாதாரப் புதுமைகளுக்கும் தொழில்நுட்பப் புதுமைகளுக்கும் கிறித்தவ மதம் காரணமாக இருந்தது. கத்தோலிக்க

தேவாலயம் பண்டைய இடைக்கால ஐரோப்பாவின் அதிஉயர்நய நிர்வாக அமைப்புமுறையைத் தோற்றுவித்து, ஆவணக் காப்பகங்கள், விபரப் பட்டியல்கள், கால அட்டவணைகள், தரவுச் செயலாக்கத்திற்கான பிற உத்திகள் ஆகியவற்றைப் பயன்படுத்துவதில் முன்னோடியாகத் திகழ்ந்தது. பன்னிரண்டாம் நூற்றாண்டு காலகட்டத்திய ஐரோப்பாவின் வாடிகன் நகரம் இன்றைய சிலிக்கான் பள்ளத்தாக்கைக் கிட்டத்தட்ட ஒத்திருந்தது என்று கூறலாம். ஐரோப்பாவின் முதல் பொருளாதாரப் பெருநுவனங்களான மடங்களைக் கிறித்தவ தேவாலயம் தோற்றுவித்தது. அம்மடங்கள் ஆயிரம் ஆண்டுகளாக ஐரோப்பியப் பொருளாதாரத்தை முன்னின்று வழிநடத்தின, மேம்பட்ட வேளாண் வழிமுறைகளையும் நிர்வாக வழிமுறைகளையும் அறிமுகப்படுத்தின. மடங்கள்தான் கடிகாரங்களைப் பயன்படுத்திய முதல் அமைப்புகளாகும். பல நூற்றாண்டுகளுக்கு அந்த மடங்களும் தேவாலயப் பள்ளிகளும்தான் ஐரோப்பாவின் மிக முக்கியமான கல்வி மையங்களாக விளங்கின; பொலோனியா (இத்தாலி), ஆக்ஸ்போர்டு (இங்கிலாந்து), சாலமன்கா (ஸ்பெயின்) போன்ற, ஐரோப்பாவின் முதல் பல்கலைக்கழகங்களில் பலவற்றைத் தோற்றுவிக்கவும் அவை உதவின.

இன்று கத்தோலிக்க தேவாலயம் தன்னைப் பின்பற்றுகின்ற கோடிக்கணக்கான மக்களுடைய விசுவாசத்தையும் நன்கொடைகளையும் தொடர்ந்து அனுபவிக்கிறது. ஆனாலும், கத்தோலிக்கமும், பிற ஆத்திக மதங்களும் நெடுங்காலத்திற்கு முன்பிலிருந்தே படைப்பாற்றல்களாக இருந்ததிலிருந்து மாறி எதிர்வினையாற்றும் ஆற்றல்களாக ஆகியுள்ளன. புதுமையான தொழில்நுட்பங்கள், புதுமையான பொருளாதார வழிமுறைகள், புதுமையான சமூக யோசனைகள் ஆகியவற்றை உருவாக்குவதில் முன்னோடியாகத் திகழுவதை விட்டுவிட்டு, பின்னாலிருந்து பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ளுவதில் அவை மும்முரமாக இருக்கின்றன. அவை இப்போது பெரும்பாலும் பிற இயக்கங்கள் பரப்புகின்ற தொழில்நுட்பங்கள், வழிமுறைகள், மற்றும் யோசனைகள் குறித்து வேதனைப்படுகின்றன. உயிரியலாளர்கள் கருத்தடை மாத்திரையைக் கண்டுபிடிக்கின்றனர், ஆனால் அது குறித்து என்ன செய்வதென்று போப்பிற்குத் தெரியவில்லை. கணினி அறிவியலறிஞர்கள் இணையத்தை உருவாக்குகின்றனர், ஆனால் அதைப் பயன்படுத்துவதற்குப் பாரம்பரிய யூதர்களை அனுமதிக்கலாமா கூடாதா என்று யூதகுருமார்கள் விவாதிக்கின்றனர். பெண்கள் தங்களுடைய உடல்கள்மீதான அதிகாரத்தைத் தங்கள் கைகளில்

எடுத்துக் கொள்ள வேண்டும் என்று பெண்ணியவாதச் சிந்தனையாளர்கள் பெண்களிடம் அறைகூவல் விடுக்கின்றனர். கலகம் விளைவிக்கக்கூடிய இத்தகைய யோசனைகளை எப்படி எதிர்கொள்ளுவது என்று கற்றறிந்த இஸ்லாமிய முஃப்திக்கள் வாதிட்டுக் கொண்டிருக்கின்றனர்.

பின்வரும் கேள்வியை உங்களை நீங்களே கேட்டுக் கொள்ளுங்கள்: மிகுந்த தாக்கம் விளைவித்த இருபதாம் நூற்றாண்டுக் கண்டுபிடிப்பு அல்லது படைப்பு எது? இது ஒரு கடினமான கேள்வி. ஏனெனில், நுண்ணுயிர்க்கொல்லிகள் போன்ற அறிவியல் கண்டுபிடிப்புகள், கணினிகள் போன்ற தொழில்நுட்பக் கண்டுபிடிப்புகள், பெண்ணியம் போன்ற கொள்கைசார் படைப்புகள் ஆகியவற்றை உள்ளடக்கிய ஒரு நீளமான பட்டியலில் இருந்து ஒன்றைத் தேர்ந்தெடுப்பது நிச்சயமாகக் கடினமானதுதான். இப்போது, பின்வரும் கேள்வியைக் கேளுங்கள்: 20ம் நூற்றாண்டில் இஸ்லாம், கிறித்தவம் போன்ற பாரம்பரிய மதங்கள் கண்டுபிடித்த அல்லது உருவாக்கிய எது மிகுந்த தாக்கம் விளைவித்தது? இதுவும் ஒரு கடினமான கேள்விதான். ஏனெனில், தேர்ந்தெடுப்பதற்கு வெகுசில விஷயங்களே இருக்கின்றன. நுண்ணுயிரிக்கொல்லிகள், கணினிகள், பெண்ணியம் போன்றவற்றோடு ஒப்பிடத்தக்க எதை இருபதாம் நூற்றாண்டில் மதகுருக்களும் யூதகுருமார்களும் முஃப்திக்களும் கண்டுபிடித்தனர்? இவ்விரண்டு கேள்விகளையும் பற்றி நீங்கள் ஓரளவுக்குச் சிந்தித்துள்ள நிலையில், இருபத்தோராம் நூற்றாண்டின் மிகப் பெரிய மாற்றங்கள் எங்கிருந்து முளைக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்: இஸ்லாமிய அரசிடமிருந்தா அல்லது கூகுளில் இருந்தா? யூ-டியூபில் வீடியோக்களை எப்படித் தரவேற்றம் செய்ய வேண்டும் என்பதை இஸ்லாமிய அரசு அறியும் என்பது உண்மைதான்; ஆனால் சித்தரவதைத் தொழிற்துறையைத் தவிர, சிரியாவிலிருந்தோ அல்லது ஈராக்கிலிருந்தோ சமீபத்தில் வேறென்ன புதிய கண்டுபிடிப்புகள் வெளிவந்துள்ளன?

பல அறிவியலறிஞர்கள் உட்பட, கோடிக்கணக்கான மக்கள், மத நூல்களை அதிகாரத்திற்கான ஒரு மூலாதாரமாகத் தொடர்ந்து பயன்படுத்துகின்றனர். ஆனால் இந்த உரைகள் இனியும் படைப்புத்திறனுக்கான ஒரு மூலாதாரமாக இல்லை. எடுத்துக்காட்டாக, தன்பால் புணர்ச்சிக்காரர்களுக்கு இடையேயான திருமணத்தையும் பெண்கள் பாதிரியார்களாக ஆவதையும் கிறித்தவத்தின் அதிக முற்போக்கான பிரிவுகள் ஏற்றுக் கொண்டுள்ளதைப் பற்றி எண்ணிப் பாருங்கள். இந்த ஒப்புதல் எங்கிருந்து முளைத்தது? பைபிளையோ அல்லது புனித அகஸ்டீனின் எழுத்துக்களையோ அல்லது மார்ட்டின்

லூதரின் படைப்புகளையோ படித்ததிலிருந்து அந்த ஒப்புதல் வரவில்லை. மாறாக, மைக்கெல் ஃபோகால்ட் எழுதிய 'த ஹிஸ்டரி ஆஃப் செக்சுவாலிட்டி' அல்லது டானா ஹாரவேயின் 'எ சைபார்க் மேனிஃபெஸ்டோ' போன்ற நூல்களைப் படித்ததிலிருந்துதான் அந்த ஒப்புதல் பிறந்தது. ஆனாலும், கிறித்தவத்தை உண்மையிலேயே நம்புகின்றவர்கள் எவ்வளவு முற்போக்குச் சிந்தனை கொண்டவர்களாக இருந்தாலும் சரி, தாங்கள் ஃபோகால்ட் மற்றும் ஹாரவேயிடமிருந்து தங்களுடைய நெறிமுறைகளைக் கற்றுக் கொண்டதாக ஒருபோதும் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். எனவே, அவர்கள் மீண்டும் பைபிளிடமும் புனித அகஸ்டீனிடமும் மார்ட்டின் லூதரிடமும் அடைக்கலமாகி, புனித நூல்களைத் தீவிரமாக ஆய்வு செய்கின்றனர். அவர்கள் மீண்டும் ஒவ்வொரு பக்கமாக, ஒவ்வொரு கதையாக மிகுந்த கவனத்தோடு படிக்கின்றனர். தன்பால் புணர்ச்சிக்காரர்களுக்கு இடையேயான திருமணங்களைக் கடவுள் ஆசீர்வதிக்கிறார் என்றும், பெண்கள் பாதிரியார்களாக நியமிக்கப்பட முடியும் என்றும் அர்த்தப்படுத்தப்படக்கூடிய ஏதோ ஒரு பழமொழியையோ, புனைகதையையோ, அல்லது தீர்ப்பையோ அவர்கள் அதில் கண்டுபிடிக்கும்வரை அவர்கள் தொடர்ந்து படிக்கின்றனர். பிறகு, அந்த யோசனை உண்மையில் ஃபோகால்ட்டின் நூலிலிருந்து முளைத்தபோதிலும், அது பைபிளில் இருந்து முளைத்ததாக அவர்கள் பாசாங்கு செய்கின்றனர். பைபிள், அதிகாரத்திற்கான ஒரு மூலாதாரமாக வைக்கப்பட்டுள்ளது - அது இனியும் உத்வேகத்திற்கான ஓர் உண்மையான மூலாதாரமாக இல்லாவிட்டாலும்கூட!

அதனால்தான் பாரம்பரிய மதங்கள் தாராளவாதத்திற்கான உண்மையான மாற்றாக எதையும் வழங்கவில்லை. மரபுப் பொறியியலைப் பற்றியோ அல்லது செயற்கை நுண்ணறிவைப் பற்றியோ கூறுவதற்கு அவற்றின் மறைநூல்களில் எதுவும் இல்லை. உயிரியலிலும் கணினி அறிவியலிலும் ஏற்பட்டுள்ள சமீபத்தியப் புதுமையான கண்டுபிடிப்புகளைப் பற்றிப் பெரும்பாலான மதகுருக்களுக்கும் யூதகுருமார்களுக்கும் முஃப்திக்களுக்கும் புரிவதில்லை. இந்தக் கண்டுபிடிப்புகளைப் பற்றி நீங்கள் புரிந்து கொள்ள வேண்டுமென்றால், பண்டைய உரைகளைப் படித்து அவற்றை மனப்பாடம் செய்து அவற்றைப் பற்றி விவாதம் மேற்கொள்ளுவதற்கு பதிலாக, அறிவியல் கட்டுரைகளைப் படிப்பதிலும் பரிசோதனைக்கூடங்களில் பரிசோதனைகளை மேற்கொள்ளுவதிலும் நேரம் செலவிடுவதைத் தவிர உங்களுக்கு வேறு வழி இல்லை.

ஆனால் அதற்காக, தாராளவாதம் தனக்கு இதுவரை கிடைத்துள்ள

பெருமைகளைப் பற்றிப் பேசிக் கொண்டு அப்படியே இருந்துவிடலாம் என்று அர்த்தமில்லை. அது மனிதவாதத்தின் மதப் போர்களை வென்றுள்ளது என்பது உண்மைதான்; தற்சமயம் தாராளவாதத்திற்கு எந்தவொரு சாத்தியமான மாற்றும் இல்லை. ஆனால் அதன் வெற்றிக்குள்தான் அதன் சீரழிவும் அடங்கியுள்ளது. வெற்றிகரமான தாராளவாத யோசனைகள் இப்போது மனிதகுலத்தை இறவாமையையும் பேரானந்தத்தையும் தெய்விகத்தையும் நோக்கி உந்தித் தள்ளிக் கொண்டிருக்கின்றன. வாடிக்கையாளர்கள் மற்றும் வாக்காளர்களின் 'தவறாகப் போக முடியாத' விருப்பங்களால் உந்தப்பட்டு, அறிவியலறிஞர்களும் பொறியாளர்களும் சற்றுமுன் குறிப்பிடப்பட்ட அந்த மூன்று தாராளவாதப் பணித்திட்டங்களுக்கு மேன்மேலும் அதிகமான ஆற்றல்களை அர்ப்பணித்துக் கொண்டிருக்கின்றனர். ஆனால், அந்த அறிவியலறிஞர்கள் கண்டுபிடித்துக் கொண்டிருக்கின்ற விஷயங்களும், அந்தப் பொறியாளர்கள் உருவாக்கிக் கொண்டிருக்கின்ற விஷயங்களும், உலகத்தைப் பற்றி தாராளவாதம் கொண்டுள்ள கண்ணோட்டத்தில் உள்ளடங்கியுள்ள குறைபாடுகளையும் வாடிக்கையாளர்கள் மற்றும் வாக்காளர்களின் பார்வையில் உள்ள குறைகளையும் தம்மையும் அறியாமல் அம்பலப்படுத்திவிடக்கூடும். மரபுப் பொறியியலும் செயற்கை நுண்ணறிவும் தம்முடைய முழு ஆற்றலையும் வெளிப்படுத்தும்போது, தீக்கல் முனைகளைக் கொண்ட ஈட்டிகள், ஆடியோ கேசட்டுகள், இஸ்லாம், மற்றும் கம்யூனிசவாதத்தைப்போலவே தாராளவாதமும் ஜனநாயகமும் கட்டுப்பாடற்றச் சந்தைகளும் வழக்கொழிந்து போய்விடும்.

இருபத்தோராம் நூற்றாண்டில் மனிதர்கள் இறவாமையையும் பேரானந்தத்தையும் தெய்விகத்தையும் அடைய முயற்சிப்பார்கள் என்று முன்னறிவிப்பு செய்ததன் மூலம் இப்புத்தகம் தொடங்கியது. இந்த முன்னறிவிப்பு அசலானதோ அல்லது தொலைநோக்குப் பார்வையுடன்கூடியதோ அல்ல. இது வெறுமனே தாராள மனிதவாதத்தின் பாரம்பரியக் கொள்கைகளைப் பிரதிபலிக்கிறது, அவ்வளவுதான். மனிதவாதம் நெடுங்காலத்திற்கு முன்பே மனிதர்களுடைய வாழ்க்கையையும் உணர்ச்சிகளையும் விருப்பங்களையும் புனிதப்படுத்தியுள்ளதால், ஒரு மனிதவாத நாகரிகம் மனித ஆயுட்காலத்தையும் மனித மகிழ்ச்சியையும் மனித சக்தியையும் உச்சபட்சமாக அதிகரிக்க விரும்புவதில் வியப்பு எதுவுமில்லை. ஆனாலும், இந்த மனிதவாதக் கனவை நனவாக்க மேற்கொள்ளப்படுகின்ற முயற்சி, மனிதவாதக் காலகட்டத்தைத்

தொடர்ந்து வருகின்ற புதிய தொழில்நுட்பங்களைக் கட்டவிழ்த்துவிடுவதன் மூலம் அதன் அடித்தளத்தையே ஆட்டம் காணச் செய்துவிடும் என்று இப்புத்தகத்தின் மூன்றாம் பகுதி (கடைசிப் பகுதி) விவாதிக்கிறது. மனித உணர்வுகள்மீது மனிதவாதம் கொண்டுள்ள நம்பிக்கை, நாம் எந்த விலையும் கொடுக்காமல் நவீன உடன்படிக்கையின் பலன்களை அனுபவிக்க நமக்கு வழி வகுத்துள்ளது. நம்முடைய சக்தியை மட்டுப்படுத்துவதற்கும் நமக்கு அர்த்தத்தைக் கொடுப்பதற்கும் நமக்கு எந்தக் கடவுளும் தேவையில்லை. வாடிக்கையாளர்கள் மற்றும் வாக்காளர்கள் தங்கள் விருப்பம்போல மேற்கொள்ளும் தேர்ந்தெடுப்புகள் நமக்குத் தேவையான அனைத்து அர்த்தத்தையும் நமக்கு வழங்குகின்றன. அப்படியானால், வாடிக்கையாளர்களும் வாக்காளர்களும் ஒருபோதும் தங்கள் விருப்பம்போலத் தேர்ந்தெடுப்பதில்லை என்பதை நாம் உணர்ந்து கொள்ளும்போதும், அவர்களுடைய உணர்வுகளைக் கணக்கிடுவதற்கும், செதுக்குவதற்கும், அல்லது தந்திரமாக ஏய்ப்பதற்குமான தொழில்நுட்பம் நம் வசப்படும்போதும் என்ன நிகழும்? இந்த ஒட்டுமொத்தப் பிரபஞ்சமும் மனித அனுபவத்துடன் பிணைக்கப்பட்டிருக்கும் பட்சத்தில், மனித அனுபவம் ஒரு பேரங்காடியில் விற்கப்படுகின்ற மற்ற எந்தவொரு பொருளையும்போலவே ஏதோ ஒன்றால் வடிவமைத்துத் தயாரிக்கப்படுகின்ற ஒரு பொருளே அன்றி வேறு எதுவும் இல்லை என்று ஆகும்போது என்ன நிகழும்?

பகுதி மூன்று

# சேப்பியன்ஸ் தங்கள் கட்டுப்பாட்டை இழக்கின்றனர்

**மனிதர்களால் தொடர்ந்து இவ்வுலகை ஆட்சி செய்து கொண்டும் அதற்கு அர்த்தத்தைக் கொடுத்துக் கொண்டும் இருக்க முடியுமா?**

**உயிர்தொழில்நுட்பமும் செயற்கை நுண்ணறிவும் மனிதகுலத்தை எவ்வாறு அச்சுறுத்துகின்றன?**

**மனிதகுலம் யாருக்கு சுவீகாரமாகப் போகக்கூடும்? எந்தப் புதிய மதம் மனிதவாதத்தின் இடத்தை எடுத்துக் கொள்ளக்கூடும்?**




படம் **39:** மூளையை அப்படியே கணினியில் நகலெடுக்க முயற்சி மேற்கொள்ளப்பட்டு வருகிறது. செயற்கை நுண்ணறிவு இப்போது மனித அறிவை விஞ்சவிருக்கிறது.

## அத்தியாயம் 8

# எந்நேரத்திலும் வெடிக்கவிருக்கின்ற ஒரு வெடிகுண்டு

தற்போது தனிமனிதவாதம், மனித உரிமைகள், ஜனநாயகம், கட்டுப்பாடற்றச் சந்தை போன்ற அம்சங்களை உள்ளடக்கிய தாராளவாதம் இவ்வுலகின்மீது ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருக்கிறது. ஆனால் இருபத்தோராம் நூற்றாண்டு அறிவியல் தாராளவாத அமைப்புமுறையின் அடித்தளங்களை பலவீனப்படுத்திக் கொண்டிருக்கிறது. விழுமியங்கள் பற்றிய கேள்விகளை அறிவியல் கையாளுவதில்லை என்பதால், தாராளவாதிகள் சமத்துவத்தைவிட சுதந்திரத்திற்கு அதிக மதிப்புக் கொடுப்பதும், ஒட்டுமொத்த மனிதக்கூட்டத்தைவிடத் தனிநபருக்கு அதிக மதிப்புக் கொடுப்பதும் சரியா என்று அறிவியலால் தீர்மானிக்க முடியாது. இருந்தாலும், பிற அனைத்து மதங்களையும் போலவே தாராளவாதமும் தெளிவற்ற அறநெறிசார் தீர்ப்புகளை மட்டுமல்லாமல், தான் உண்மை என்று நம்புகின்ற கூற்றுக்களையும் சார்ந்துள்ளது. இந்த உண்மைக் கூற்றுக்கள் அறிவியற்பூர்வமான சோதனைகளுக்கு உட்படுத்தப்படும்போது தோற்றுவிடுகின்றன.

தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரம் மனிதர்களுக்கு இருப்பதாக தாராளவாதிகள் நம்புவதால், தனிநபர் சுதந்திரத்தை அவர்கள் அதிகமாக மதிக்கின்றனர். தாராளவாதத்தைப் பொருத்தவரை, வாக்காளர்கள் மற்றும் வாடிக்கையாளர்களின் தீர்மானங்கள் முன்கூட்டியே நிர்ணயிக்கப்பட்டவையும் அல்ல, தன்னிச்சையானவையும் அல்ல. புறவயமான காரணிகளும் தற்செயலான நிகழ்வுகளும் மக்கள்மீது தாக்கம் ஏற்படுத்துகின்றன என்பது உண்மைதான், ஆனால் இறுதியில், சுதந்திரம் எனும் மந்திரக் கோலை ஆட்டி, விஷயங்களை நமக்கு நாமே தீர்மானித்துக் கொள்ளுவதற்கான சக்தி நமக்கு இருக்கிறது. இக்காரணத்தால்தான் வாக்காளர்களுக்கும் வாடிக்கையாளர்களுக்கும் தாராளவாதம் மிக அதிக முக்கியத்துவம் கொடுக்கிறது. நாம் நம்முடைய இதயத்தைப் பின்தொடர்ந்து செல்ல வேண்டும் என்றும், நமக்கு நல்லவிதமான உணர்வைக் கொடுக்கின்ற விஷயங்களை நாம் செய்ய வேண்டும் என்றும் அது நம்மிடம் வலியுறுத்துகிறது. தேர்ந்தெடுப்பதற்கான

நம்முடைய சுதந்திரம்தான் பிரபஞ்சத்தை அர்த்தத்தால் நிரப்புகிறது. அகவயமாக நீங்கள் எப்படி உணருகிறீர்கள் என்பதை வெளியில் உள்ள ஒருவரால் அறிந்திருக்க முடியாது என்பதாலும், உங்களுடைய தேர்ந்தெடுப்புகளை அவரால் முன்கூட்டியே உறுதியாகக் கணிக்க முடியாது என்பதாலும், உங்களுடைய ஆர்வங்களையும் விருப்பங்களையும் நீங்கள் இன்னொருவரின் பொறுப்பில் ஒப்படைக்கக்கூடாது.

தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரம் மனிதர்களுக்கு இருப்பதாகக் கூறுவது ஓர் அறநெறிசார் தீர்ப்பு அல்ல; உலகைப் பற்றிய உண்மையின் ஒரு விவரிப்புபோல அது தோன்றுகிறது. இந்த உண்மை விவரிப்பு, ஜான் லாக், ஜான் ஜாக்ஸ், தாமஸ் ஜெஃபர்சன் ஆகியோருடைய காலத்தில் அர்த்தம் வாய்ந்ததாக இருந்திருக்கக்கூடும், ஆனால் உயிரியல் சமீபத்தில் கண்டுபிடித்துள்ள விஷயங்களுடன் அது முரண்பட்டு நிற்கிறது. தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரத்திற்கும் நவீன அறிவியலுக்கும் இடையேயான முரண்பாடுதான் பரிசோதனைக்கூடத்தில் விசுவரூபம் எடுத்து நிற்கின்ற, ஆனால் யாரும் கண்டுகொள்ள விரும்பாத, யாரும் கையாள விரும்பாத பெரிய பிரச்சனையாகும். அங்கு ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளவர்களில் பலர் தங்களுடைய நுண்ணோக்கிகள் மற்றும் எம்ஆர்ஐ ஸ்கேனர்களுக்குள் உற்றுப் பார்ப்பதோடு நிறுத்திக் கொள்ளுகின்றனர், அந்த முக்கியப் பிரச்சனையை வேண்டுமென்றே அவர்கள் கண்டுகொள்ளாமல் இருந்துவிடுகின்றனர்.

பதினெட்டாம் நூற்றாண்டில், ஹோமோ சேப்பியன்ஸ் இனம், நம்முடைய புரிதலுக்கு அப்பாற்றப்பட்ட உள்ளார்ந்த செயல்பாடுகளைக் கொண்ட ஒரு மர்மமான கருப்புப் பெட்டியைப்போல இருந்தது. எனவே, ஒருவன் ஒரு கத்தியை எடுத்து இன்னொருவனை ஏன் குத்திக் கொன்றான் என்று அறிஞர்கள் கேட்டபோது, “ஏனெனில், அவ்வாறு செய்வதை அவன் தேர்ந்தெடுத்தான். தேர்ந்தெடுப்பதற்கான தன்னுடைய சுதந்திரத்தைப் பயன்படுத்தி, கொலை செய்வதை அவன் தேர்ந்தெடுத்தான். அதனால்தான், அந்தக் கொலைக்கு அவன் முழுப் பொறுப்பாளியாக ஆகிறான்,” என்ற பதில் ஏற்றுக் கொள்ளத்தக்கதாக இருந்தது. கடந்த நூற்றாண்டின் ஊடாக, அறிவியலறிஞர்கள் சேப்பியன்ஸ் என்ற கருப்புப் பெட்டியைத் திறந்தபோது, அதில் ஆன்மாவோ, தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரமோ, அல்லது சுயமோகூட இல்லை என்பதை அவர்கள் கண்டறிந்தனர். மாறாக, ஏனைய யதார்த்தத்தைக் கட்டுப்படுத்துகின்ற அதே பௌதிக விதிகளுக்கும் வேதியியல்

விதிகளுக்கும் கட்டுப்படுகின்ற மரபணுக்கள், ஹார்மோன்கள், மற்றும் நரம்பணுக்கள் மட்டுமே அதில் இருந்தன. ஒருவன் ஒரு கத்தியை எடுத்து ஏன் இன்னொருவனைக் குத்திக் கொன்றான் என்று அறிஞர்கள் இன்று கேட்கும்போது, "ஏனெனில், அவன் அவ்வாறு செய்வதைத் தேர்ந்தெடுத்தான்," என்ற பதில் ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை. மாறாக, மரபியல் மற்றும் மூளை அறிவியலறிஞர்கள் அதிக விபரமான ஒரு விடையை வழங்குகின்றனர். "மூளையில் நடைபெறுகின்ற இன்னின்ன மின்வேதிச் செயல்முறைகளால் அவன் இவ்வாறு செய்தான். சில மரபணுக்களின் அமைப்புதான் இச்செயல்முறைகளுக்குக் காரணம். இந்த அமைப்பு, பண்டைய பரிணாம வளர்ச்சிரீதியான அழுத்தங்களையும் தற்செயலான மரபுச்சிதைவு மாற்றங்களையும் பிரதிபலிக்கின்றன," என்று அவர்கள் கூறுகின்றனர்.

மரணத்தை விளைவிக்கின்ற மூளை மின்வேதிச் செயல்முறைகள் முன்கூட்டியே நிர்ணயிக்கப்பட்டவையாகவோ, தன்னிச்சையானவையாகவோ, அல்லது இரண்டும் சேர்ந்தவையாகவோ இருக்கலாம், ஆனால் அவை ஒருபோதும் சுதந்திரமானவை அல்ல. எடுத்துக்காட்டாக, ஒரு நரம்பணு ஒரு மின்னேற்றத்தை விடுவிக்கும்போது, அது ஏதோ புறத்தூண்டுதலுக்கான, முன்கூட்டியே நிர்ணயிக்கப்பட்ட ஓர் எதிர்வினையாக இருக்கக்கூடும், அல்லது கதிரியக்கம் போன்ற ஒரு தன்னிச்சையான நிகழ்வின் விளைவாக இருக்கக்கூடும். ஆனால் இவ்விரண்டிலும், தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரத்திற்கு எந்த இடமும் இல்லை. உயிர்வேதி நிகழ்வுகளின் தொடர் எதிர்வினைகளின் மூலம் எட்டப்படுகின்ற தீர்மானங்கள் நிச்சயமாக சுதந்திரமானவை அல்ல. கதிரியக்கம் போன்ற தன்னிச்சையான விபத்துக்களிலிருந்து விளைகின்ற தீர்மானங்களும் சுதந்திரமானவை அல்ல. அவை தன்னிச்சையானவை, அவ்வளவுதான். தன்னிச்சையான விபத்துக்கள் முன்கூட்டியே நிர்ணயிக்கப்பட்டச் செயல்முறைகளோடு இணையும்போது, நிகழ்தகவு சார்ந்த விளைவுகள் நமக்குக் கிடைக்கக்கூடும், ஆனால் இதுவும் சுதந்திரமான தேர்ந்தெடுப்பாகாது.

நாம் ஒரு ரோபாட்டை உருவாக்கியிருப்பதாக வைத்துக் கொள்ளுவோம். அதன் மையச் செயலகம் கதிரியக்க யுரேனியத் துண்டு ஒன்றுடன் இணைக்கப்பட்டிருக்கிறது. அந்த ரோபாட் இரண்டு செயல்பாடுகளில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கலாம்: ஒன்று, அது வலது பொத்தானை அழுத்தலாம் அல்லது இடது பொத்தானை அழுத்தலாம். அவ்வாறு தேர்ந்தெடுக்கும்போது, முந்தைய நிமிடத்தில் எத்தனை

யுரேனியம் அணுக்கள் சிதைந்தன என்பதை அது கணக்கிடுகிறது. அந்த எண்ணிக்கை இரட்டைப்படை எண்ணாக இருந்தால், அது வலது பொத்தானை அழுத்தும், ஒற்றைப்படை எண்ணாக இருந்தால் இடது பொத்தானை அழுத்தும். அப்படிப்பட்ட ஒரு ரோபாட்டின் நடவடிக்கைகளை நம்மால் ஒருபோதும் உறுதியாக அறிந்திருக்க முடியாது. பாதுகாப்பற்ற, சிக்கலான, மற்றும் விநோதமான இப்படிப்பட்ட ஒரு கருவியை யாரும் 'சுதந்திரமானது' என்று அழைக்க மாட்டார்கள். ஜனநாயகத் தேர்தல்களில் வாக்களிக்க அதற்கு அனுமதியளிப்பதைப் பற்றியோ, அதன் செயல்களுக்கு அதைப் பொறுப்பாளியாக்குவதைப் பற்றியோ நாம் கனவுகூடக் காண மாட்டோம்.

அறிவியலை நாம் புரிந்து கொண்டுள்ளதை வைத்துப் பார்க்கும்போது, நியதிக் கொள்கையும் தன்னிச்சை இயல்பும் ஒட்டுமொத்தக் 'கேக்'கையும் தமக்கிடையே பிரித்துக் கொண்டுள்ளன. எனவே, சுதந்திரத்திற்கு அவை ஒரு கேக் துகளைக்கூட விட்டுவைக்கவில்லை. 'சுதந்திரம்' என்ற புனிதமான வார்த்தை 'ஆன்மா' என்ற வார்த்தையைப்போலவே, உணர்ந்து கொள்ளத்தக்க எந்த அர்த்தமும் இல்லாத ஒரு வெற்று வார்த்தையாக ஆகியுள்ளது. மனிதர்களாகிய நாம் கண்டுபிடித்துள்ள கற்பனைக் கதைகளில் மட்டுமே 'தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரம்' இடம்பெறுகிறது.

சுதந்திரத்தின் சவப்பெட்டியில் அடிக்கப்படுவதற்கான கடைசி ஆணியைப் பரிணாம வளர்ச்சிக் கோட்பாடு வழங்குகிறது. பரிணாம வளர்ச்சி எப்படி நிரந்தரமான ஆன்மாக்கள் எனும் யோசனையோடு ஒத்துப் போவதில்லையோ, அதேபோல, தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரம் எனும் யோசனையையும் அதனால் ஏற்றுக் கொள்ள முடியாது. ஏனெனில், மனிதர்கள் சுதந்திரமானவர்கள் என்றால், இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறையால் எப்படி அவர்களை வடிவமைத்திருக்க முடியும்? பரிணாம வளர்ச்சிக் கோட்பாட்டின்படி, வாழ்விடம், உணவு, புணர்ச்சிக்கான துணை போன்ற விஷயங்களில் விலங்குகள் மேற்கொள்ளுகின்ற அனைத்துத் தேர்ந்தெடுப்புகளும் அவற்றின் மரபுக் குறியீட்டைப் பிரதிபலிக்கின்றன. ஒரு விலங்கு தன்னுடைய ஆரோக்கியமான உயிரணுக்களின் காரணமாக, ஊட்டச்சத்துமிக்க ஒரு காளானை உட்கொள்ளுவதையும், ஆரோக்கியமான மற்றும் கரு உண்டாக்கும் திறன் கொண்ட துணைகளோடு புணருவதையும் தேர்ந்தெடுத்தால், அந்த உயிரணுக்கள் அடுத்தத் தலைமுறைக்கு எடுத்துச் செல்லப்படும். மாறாக, ஒரு விலங்கு தன்னுடைய ஆரோக்கியமற்ற உயிரணுக்களின் காரணமாக, நச்சான

காளான்களையும் ரத்தசோகை கொண்ட துணைகளையும் தேர்ந்தெடுத்தால், அந்த உயிரணுக்கள் பூண்டோடு அழிந்துவிடும். ஆனால், ஒரு விலங்கு, தான் உண்ணுவதற்கான உணவையும் புணருவதற்கான துணைகளையும் தன் விருப்பம்போல 'சுதந்திரமாக'த் தேர்ந்தெடுத்தால், இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறைக்கு அங்கு எந்த வேலையும் இருக்காது.

இப்படிப்பட்ட அறிவியற்பூர்வமான விளக்கங்கள் வழங்கப்படும்போது, மக்கள் பெரும்பாலும் அவற்றை ஒதுக்கிவிட்டு, தாங்கள் சுதந்திரமானவர்கள் என்றும், தங்கள் சொந்த விருப்பங்களுக்கும் தீர்மானங்களுக்கும் ஏற்பத் தாங்கள் நடந்து கொள்ளுவதாகவும் சுட்டிக்காட்டுகின்றனர். இது உண்மைதான். மனிதர்கள் தங்கள் விருப்பங்களுக்கு ஏற்பச் செயல்படுகின்றனர். நம்முடைய விருப்பங்களுக்கு ஏற்ப நடந்து கொள்ளுவதற்கான திறன்தான் 'தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரம்' என்று நாம் அர்த்தம் கற்பித்தால், தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரம் மனிதர்களுக்கு இருக்கிறது என்பது உண்மைதான். அப்படியானால், அதே சுதந்திரம் சிம்பன்சிகளுக்கும் நாய்களுக்கும் கிளிகளுக்கும்கூட இருக்கிறது. பாலி என்ற கிளிக்கு பிஸ்கெட் பிடித்திருக்கிறது. எனவே, பாலி ஒரு பிஸ்கெட்டைச் சாப்பிடுகிறது. ஆனால், இங்கு முக்கியமான கேள்வி, கிளிகளாலும் மனிதர்களாலும் தங்களுடைய உள்ளார்ந்த விருப்பங்களுக்கு ஏற்பச் செயல்பட முடியுமா என்பது அல்ல; முதலில் அவர்களால் தங்களுடைய விருப்பங்களைத் தேர்ந்தெடுக்க முடியுமா என்பதுதான் கேள்வியே. பாலி ஏன் ஒரு வெள்ளரிக்காயை விடுத்து ஒரு பிஸ்கெட்டை விரும்புகிறது? நான் என்னுடைய மறுகன்னத்தைக் காட்டுவதற்கு பதிலாக, எரிச்சலூட்டும் என்னுடைய அண்டைவீட்டுக்காரரை நான் ஏன் கொல்ல விரும்புகிறேன்? கருப்புக் காரைவிட, சிவப்புக் காரை வாங்குவதில் நான் ஏன் மிகவும் ஆர்வமாக இருக்கிறேன்? நான் ஏன் கன்சர்வேட்டிவ் கட்சிக்கு வாக்களிப்பதற்கு பதிலாகத் தொழிற்கட்சிக்கு வாக்களிக்க விரும்புகிறேன்? இந்த விருப்பங்கள் எதையும் நான் தேர்ந்தெடுப்பதில்லை. ஒரு குறிப்பிட்ட விருப்பம் என்னுள் பொங்குவதை நான் உணருவதற்குக் காரணம், என் மூளையில் உள்ள உயிர்வேதிச் செயல்முறைகள் அந்த உணர்வை உருவாக்குவதுதான். இச்செயல்முறைகள் முன்கூட்டியே நிர்ணயிக்கப்பட்டவையாகவோ அல்லது தன்னிச்சையானவையாகவோ இருக்கலாம், ஆனால் அவை நிச்சயமாக சுதந்திரமானவை அல்ல.

ஓர் அண்டைவீட்டுக்காரரைக் கொலை செய்வது, ஓர்

அரசாங்கத்தைத் தேர்ந்தெடுப்பது போன்ற பெரிய தீர்மானங்களின் விஷயத்திலாவது என்னுடைய தேர்ந்தெடுப்பு வெறுமனே ஒரு கணநேர உணர்வைப் பிரதிபலிப்பதில்லை, மாறாக, தீவிரமான விவாதங்களை உள்ளடக்கிய ஒரு நீண்ட சிந்தனையையே அது பிரதிபலிக்கிறது என்று நீங்கள் கூறக்கூடும். ஆனால், அந்த விவாதங்களைத் தொடர்ந்து, மேலும் பல தொடர்ச்சியான விவாதங்களை என்னால் சிந்திக்க முடியும். அவற்றில் சில விவாதங்கள், நான் கன்சர்வேட்டிவ் கட்சிக்கு ஓட்டுப் போடும்படி செய்யும், வேறு சில விவாதங்கள் நான் தொழிற்கட்சிக்கு ஓட்டுப் போடும்படி செய்யும். மற்றவை, பிரிட்டனின் சுதந்திரக் கட்சிக்கு ஓட்டுப் போடவோ அல்லது வெறுமனே வீட்டில் இருக்கவோ என்னைத் தூண்டும். நான் ஓர் எண்ண ஓட்டத்தை விடுத்து இன்னோர் எண்ண ஓட்டத்தைத் தேர்ந்தெடுக்க எது என்னைத் தூண்டுகிறது? என் மூளையில் முன்கூட்டியே நிர்ணயிக்கப்பட்ட சில செயல்முறைகள் நான் ஒரு குறிப்பிட்ட எண்ண ஓட்டத்தைத் தேர்ந்தெடுப்பதற்கு என்னைக் கட்டாயப்படுத்தக்கூடும், அல்லது நான் வேறொரு காரணத்தைத் தன்னிச்சையாகத் தேர்ந்தெடுக்கக்கூடும். ஆனால், நான் கன்சர்வேட்டிவ் கட்சிக்கு ஓட்டுப் போடும்படி செய்கின்ற எண்ணங்களை எண்ணுவதை நான் ஒருபோதும் ‘சுதந்திரமாக’த் தேர்ந்தெடுப்பதில்லை.

இவை வெறுமனே தற்காலிகமான ஊகங்களோ அல்லது தத்துவரீதியான அனுமானங்களோ அல்ல. மக்களுடைய விருப்பங்களும் தீர்மானங்களும் அவர்களுக்குத் தெரிவதற்கு முன்பாகவே ‘மூளை ஸ்கேனர்’ கருவிகளைப் பயன்படுத்தி அவற்றை இன்று நம்மால் முன்கூட்டியே கணிக்க முடிகிறது. அப்படிப்பட்ட ஒரு பரிசோதனையில், மக்கள் ஒரு பெரிய மூளை ஸ்கேனருக்குள் வைக்கப்பட்டனர். அவர்கள் தங்களுடைய ஒவ்வொரு கையிலும் ஒரு சுவிட்சைப் பிடித்திருந்தனர். தாங்கள் விரும்பும் நேரத்தில் அவற்றில் ஏதேனும் ஒன்றை அழுத்தும்படி அவர்களிடம் கேட்டுக் கொள்ளப்பட்டது. ஒருவர் எந்த சுவிட்சை அழுத்துவார் என்பதை அவர் அதை அழுத்துவதற்கு முன்பாகவும், தான் செய்யவிருப்பதை அவர் தானே அறியும் முன்பாகவும், மூளையில் நிகழும் நரம்பியல் நடவடிக்கைகளைக் கண்காணிக்கின்ற அறிவியலறிஞர்களால் கணிக்க முடியும். ஒரு நபருடைய தீர்மானத்தை உணர்த்துகின்ற, மூளையில் நிகழுகின்ற நரம்பியல் நிகழ்வுகள், அந்நபர் தன்னுடைய தேர்ந்தெடுப்பைப் பற்றி அறிவதற்கு ஒருசில நொடிகளுக்கு முன்பாகத் தொடங்குகின்றன.

இடது சுவிட்சை அல்லது வலது சுவிட்சை அழுத்துவதற்கு அவர்

மேற்கொள்ளுகின்ற தீர்மானம் நிச்சயமாக அவருடைய தேர்ந்தெடுப்பைத்தான் பிரதிபலிக்கிறது என்றாலும்கூட, அது ஒரு சுதந்திரமான தேர்ந்தெடுப்பு அல்ல. உண்மையில், தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரத்தில் நாம் கொண்டுள்ள நம்பிக்கை ஒரு தவறான தருக்கவாதத்திலிருந்து முளைக்கிறது. ஒரு தொடர்ச்சியான உயிர்வேதி எதிர்வினை வலது சுவிட்சை அழுத்துவதற்கான விருப்பத்தை என்னுள் ஏற்படுத்தும்போது, நான் அந்த வலது சுவிட்சை உண்மையிலேயே அழுத்த விரும்புகிறேன் என்ற உணர்வு எனக்கு ஏற்படுகிறது. இது உண்மை. நான் உண்மையிலேயே அதை அழுத்த விரும்புகிறேன். ஆனால், நான் அதை அழுத்த விரும்பினால், நான் அந்த விருப்பத்தைத் தேர்ந்தெடுப்பதாக மக்கள் ஒரு தவறான முடிவுக்கு வருகின்றனர். ஏனெனில், நான் என்னுடைய விருப்பங்களைத் தேர்ந்தெடுப்பதில்லை. நான் அவற்றை உணர மட்டுமே செய்கிறேன், அவற்றின்படி செயல்படுகிறேன்.

ஆனாலும், தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரம் குறித்து மக்கள் தொடர்ந்து விவாதித்துக் கொண்டே இருக்கின்றனர். ஏனெனில், காலாவதியாகிவிட்ட இறையியல் கோட்பாடுகளை அறிவியல் அறிஞர்கள்கூடப் பல சமயங்களில் தொடர்ந்து பயன்படுத்துகின்றனர். பல நூற்றாண்டுகளாக, கிறித்தவ, இஸ்லாமிய, மற்றும் யூத இறையியலாளர்கள் ஆன்மாவுக்கும் விருப்பத்திற்கும் இடையேயான உறவுகளைப் பற்றி விவாதித்தனர். ஆன்மா என்ற ஓர் உள்ளார்ந்த மைய அம்சம் ஒவ்வொரு மனிதனிடமும் இருந்ததாகவும், அதுதான் என்னுடைய உண்மையான சுயம் என்றும் அவர்கள் அனுமானித்தனர். மேலும், இந்த சுயம், ஆடைகளையும் ஊர்திகளையும் வீடுகளையும் கொண்டிருந்ததைப்போலவே பல்வேறு விருப்பங்களையும் கொண்டிருந்ததாக அவர்கள் நம்பினர். அந்த நம்பிக்கையின்படி, நான் எப்படி என்னுடைய ஆடைகளைத் தேர்ந்தெடுக்கிறேனோ, அவ்வாறே நான் என் விருப்பங்களையும் தேர்ந்தெடுக்கிறேன். நான் நல்ல விருப்பங்களைத் தேர்ந்தெடுத்தால், நான் சொர்க்கத்திற்குப் போய்ச் சேருவேன். நான் மோசமான விருப்பங்களைத் தேர்ந்தெடுத்தால், நான் நிச்சயமாக நரகத்திற்குத்தான் போய்ச் சேருவேன். அப்படியானால், நான் என்னுடைய விருப்பங்களை எவ்வாறு தேர்ந்தெடுக்கிறேன் என்ற கேள்வி முளைக்கிறது. எடுத்துக்காட்டாக, சாப்பிடக்கூடாது என்று தடை விதிக்கப்பட்ட ஒரு கனியை ஏவாளிடம் அந்தப் பாம்பு கொடுத்தபோது, அவள் ஏன் அதை உண்ண விரும்பினாள்? இந்த விருப்பம் அவள்மீது வலுக்கட்டாயமாகத் திணிக்கப்பட்டதா? அல்லது, அது தற்செயலாக அவளுடைய மனத்திற்குள் வந்து விழுந்ததா?

அல்லது, அவள் அதை ‘சுதந்திரமாக’த் தேர்ந்தெடுத்தாளா? அதை அவள் சுதந்திரமாகத் தேர்ந்தெடுக்கவில்லை என்றால், அவள் அதற்காக ஏன் தண்டிக்கப்பட வேண்டும்?

ஆனாலும், ஆன்மா என்று எதுவும் இல்லை என்றும், மனிதர்களுக்கு ‘சுயம்’ என்ற உள்ளார்ந்த மைய அம்சம் எதுவும் இல்லை என்றும் நாம் ஏற்றுக் கொள்ளும் பட்சத்தில், “சுயம் எப்படித் தன்னுடைய விருப்பங்களைத் தேர்ந்தெடுக்கிறது?” என்று ஒருவரிடம் கேட்பது இனியும் அர்த்தம் வாய்ந்ததாக இருக்காது. திருமணமாகாத ஒருவரிடம் சென்று, “உங்களுடைய மனைவி எப்படித் தன்னுடைய ஆடைகளைத் தேர்ந்தெடுக்கிறார்?” என்று கேட்பதைப் போன்றது அது. யதார்த்தத்தில், ஒரு தொடர்ச்சியான எண்ண ஓட்டம் மட்டுமே இருக்கிறது. விருப்பங்கள் இந்த ஓட்டத்திற்குள் முளைப்பதும் கடந்து போவதுமாக இருக்கின்றன. ஆனால், இந்த விருப்பங்களைச் சொந்தமாகக் கொண்டுள்ள நிரந்தரமான சுயம் எதுவும் இல்லை. எனவே, நான் என்னுடைய விருப்பங்களை முன்கூட்டியே நிர்ணயிக்கப்பட்டபடி தேர்ந்தெடுக்கிறேனா, தன்னிச்சையாகத் தேர்ந்தெடுக்கிறேனா, அல்லது சுதந்திரமாகத் தேர்ந்தெடுக்கிறேனா என்று கேட்பது அர்த்தமற்றது.

இந்த யோசனை மிகச் சிக்கலானதுபோலத் தோன்றக்கூடும், ஆனால் இதை சோதித்துப் பார்ப்பது மிகவும் எளிது. அடுத்த முறை உங்கள் மனத்தில் ஓர் எண்ணம் முளைக்கும்போது, நீங்கள் ஒரு கணம் நிதானித்து, “நான் ஏன் இந்தக் குறிப்பிட்ட எண்ணத்தை எண்ணினேன்? இந்த எண்ணத்தை நினைக்க வேண்டும் என்று ஒரு நிமிடத்திற்கு முன்பாக நான் தீர்மானித்துவிட்டு, பிறகுதான் அதை நான் எண்ணினேனா? அல்லது, என்னுடைய அறிவுறுத்தலோ அல்லது அனுமதியோ இல்லாமல் அது திடீரென்று முளைத்ததா? நான்தான் என்னுடைய எண்ணங்களுக்கும் தீர்மானங்களுக்குமான எஜமான் என்றால், அடுத்த அறுபது நொடிகளுக்கு எதைப் பற்றியும் சிந்திக்காமல் இருக்க என்னால் தீர்மானிக்க முடியுமா?” என்று உங்களை நீங்களே கேட்டுக் கொண்டு, அடுத்து என்ன நிகழுகிறது என்று பாருங்கள்.

***

தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரத்தை சந்தேகிப்பது வெறுமனே ஒரு தத்துவரீதியான பயிற்சி மட்டும் அல்ல. அது நடைமுறையில் சில தாக்கங்களையும் ஏற்படுத்துகிறது. தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரம் உயிரினங்களுக்கு இல்லை என்றால், மருந்துகள், மரபுப் பொறியியல், மூளையை நேரடியாகத் தூண்டுதல் ஆகியவற்றின் மூலம் அவற்றின் விருப்பங்களை நம்மால் மாற்றியமைக்கவும் கட்டுப்படுத்தவும் முடியும்

என்று அர்த்தமாகிறது.

தத்துவம் நடைமுறையில் எப்படி வேலை செய்கிறது என்பதை நீங்கள் பார்க்க விரும்பினால், ரோபோ-எலிகள் பயன்படுத்தப்படுகின்ற ஒரு பரிசோதனைக்கூடத்திற்கு ஒரு நடை போய்விட்டு வாருங்கள். ரோபோ-எலிகள் என்பவை சில கருவிகள் பொருத்தப்பட்ட சாதாரண எலிகள்தான். எலிகளின் மூளைகளிலுள்ள புலனுணர் பகுதியிலும் வெகுமதிப் பகுதியிலும் அறிவியலறிஞர்கள் சில மின்முனைகளைப் பதிய வைத்துள்ளனர். அந்த எலிகளின் நடமாட்டத்தைத் தொலை இயக்கியைக் கொண்டு கட்டுப்படுத்த இது அவர்களுக்கு உதவுகிறது. குறுகியகாலப் பயிற்சிக்குப் பிறகு, அந்த எலிகளை வலது பக்கமாகவோ அல்லது இடது பக்கமாகவோ திரும்ப வைக்க அவர்களால் முடிகிறது. அதோடு, அவற்றை ஏணிகளில் ஏற வைப்பது, குப்பைக் குவியல்களைச் சுற்றி மோப்பம் பிடிக்க வைப்பது போன்றவற்றையும் அவர்களால் செய்ய முடிகிறது. மிக அதிக உயரத்திலிருந்து கீழே குதிப்பது போன்ற, பொதுவாக எலிகள் செய்ய விரும்பாத விஷயங்களையும் அவர்கள் அந்த எலிகளைச் செய்ய வைக்கின்றனர். ராணுவமும் பெருநிறுவனங்களும் இந்த ரோபோ-எலிகள்மீது தீவிர ஆர்வம் காட்டுகின்றன. அந்த ரோபோ-எலிகள் பல்வேறு வேலைகளிலும் சூழ்நிலைகளிலும் பயன்படும் என்று அவர்கள் நம்புகின்றனர். எடுத்துக்காட்டாக, இடிந்து விழுந்துள்ள கட்டடங்களுக்கு அடியில் மாட்டிக் கொண்டிருக்கின்றவர்களைக் கண்டுபிடிப்பதற்கும், மறைத்து வைக்கப்பட்டுள்ள வெடிகுண்டுகளையும் சூழ்ச்சிப் பொறிகளையும் கண்டுபிடிப்பதற்கும், பூமிக்குக் கீழே உள்ள சுரங்கப் பாதைகளையும் குகைகளையும் பற்றிய வரைபடங்களைத் தயாரிக்கவும் அந்த ரோபோ-எலிகள் உதவக்கூடும்.

இப்படிப்பட்டப் பரிசோதனைகள் அந்த எலிகளுக்கு ஏற்படுத்துகின்ற துன்பங்களைப் பற்றி விலங்குகள் நல ஆர்வலர்கள் குரல் கொடுத்துள்ளனர். ரோபோ-எலிகளை வைத்துப் பரிசோதனைகளை மேற்கொள்ளுகின்ற முன்னணி ஆராய்ச்சியாளர்களில் ஒருவரான, நியூயார்க் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் சஞ்சீவ் தல்வார், இந்தக் குற்றச்சாட்டை மறுத்துள்ளார். அந்த எலிகள் உண்மையில் இப்பரிசோதனைகளை மகிழ்ச்சியாக அனுபவிப்பதாக அவர் கூறுகிறார். அவை 'இன்பத்திற்காக வேலை செய்கின்றன' என்றும், அந்த மின்முனைகள் அவற்றின் மூளைகளிலுள்ள வெகுமதிப் பகுதிகளைத் தூண்டும்போது 'அந்த எலிகள் முக்தி நிலையை உணருகின்றன' என்றும் தல்வார் விளக்குகிறார்.

அவர் கூறுவதை நாம் புரிந்து கொண்டுள்ளதன்படி, தன்னை வேறு

யாரோ கட்டுப்படுத்திக் கொண்டிருப்பதாக அந்த எலி உணருவதில்லை, தன்னுடைய விருப்பத்திற்கு மாறான விஷயங்களைச் செய்யத் தான் தூண்டப்படுகிறோம் என்பதையும் அது உணருவதில்லை. பேராசிரியர் தல்வார் தன்னுடைய தொலை இயக்கியை அழுத்தும்போது, அந்த எலி இடப்பக்கமாகத் திரும்ப 'விரும்புகிறது', அதனால்தான் அது இடப்பக்கமாகத் திரும்புகிறது. அவர் இன்னொரு சுவிட்சை அழுத்தும்போது, அந்த எலி ஓர் ஏணியில் ஏற 'விரும்புகிறது', அதனால்தான் அது அந்த ஏணியில் ஏறுகிறது. அந்த எலியின் விருப்பங்கள் என்பவை சில நரம்பணுக்கள் தூண்டப்படும் விதமே அன்றி வேறு எதுவுமில்லை, இல்லையா? அப்படியானால், அந்த நரம்பணுக்கள் வேறு சில நரம்பணுக்களால் தூண்டப்படுவதோ, அல்லது பேராசிரியர் தல்வாரின் தொலை இயக்கியுடன் இணைக்கப்பட்டுள்ள, அந்த எலியின் மூளையில் பதிக்கப்பட்டுள்ள மின்முனைகளால் தூண்டப்படுவதோ என்ன வித்தியாசத்தை ஏற்படுத்தப் போகிறது? நீங்கள் இது பற்றி அந்த எலியிடம் கேட்டால், அது பின்வருமாறு உங்களுக்கு பதிலளிக்கும்: "தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரம் எனக்கு இருக்கிறது! இங்கே பாருங்கள், நான் இடப்பக்கமாகத் திரும்ப விரும்புகிறேன், அதனால் இடப்பக்கமாகத் திரும்புகிறேன். நான் ஓர் ஏணியில் ஏற விரும்புகிறேன், அதனால் அதில் நான் ஏறுகிறேன். தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரம் எனக்கு இருக்கிறது என்பதை இது நிரூபிக்கிறது, இல்லையா?"

எலிகளைப்போலவே மனிதர்களையும் நம் விருப்பத்திற்கு ஏற்றபடி வளைக்க முடியும் என்பதையும், மனித மூளையில் சரியான பகுதிகளைத் தூண்டுவதன் மூலம் அன்பு, கோபம், பயம், மனச்சோர்வு போன்ற சிக்கலான உணர்வுகளைக்கூடத் தூண்டவோ அல்லது துடைத்தெறியவோ முடியும் என்பதையும் ஹோமோ சேப்பியன்ஸ்மீது மேற்கொள்ளப்பட்டப் பரிசோதனைகள் உணர்த்துகின்றன. மக்களுடைய மூளைகளில் கணினிச் சில்லுகளைப் பதிய வைக்கும் பரிசோதனைகளை அமெரிக்க ராணுவம் சமீபத்தில் துவக்கியுள்ளது. 'அதிர்ச்சிக்குப் பிறகான மன அழுத்தக் கோளாறு' பிரச்சனையால் துன்புறுகின்ற ராணுவ வீரர்களுக்குச் சிகிச்சை அளிப்பதற்கு இந்த வழிமுறையைப் பயன்படுத்த முடியும் என்று அது நம்புகிறது. ஜெரூசலம் நகரிலுள்ள ஹடாஸா மருத்துவமனையில், தீவிர மனச்சோர்வால் பாதிக்கப்பட்டுள்ள மக்களுக்காக ஒரு நூதனமான சிகிச்சையைக் கண்டுபிடித்துள்ளனர். அப்பிரச்சனையால் பாதிக்கப்பட்டுள்ள ஒரு நோயாளியின் மூளையில் அவர்கள் சில மின்முனைகளைப் பதித்து, அந்நபரின் மார்புப் பகுதியில் பதிக்கப்பட்டுள்ள ஒரு சின்னஞ்சிறு

கணினியுடன் அவற்றை இணைக்கின்றனர். அக்கணினியிலிருந்து அந்த மின்முனைகளுக்கு ஒரு கட்டளை வரும்போது, அவை பலவீனமான மின்னோட்டங்களை உமிழுகின்றன. அந்த மின்னோட்டங்கள், மனச்சோர்வுக்குக் காரணமான மூளைப் பகுதியை முடக்கிப் போடுகின்றன. இச்சிகிச்சை எல்லா நேரத்திலும் வெற்றி பெறுவதில்லை, ஆனால் தங்கள் வாழ்நாள் முழுவதும் தங்களைச் சித்தரவதை செய்து வந்திருந்த இருண்ட வெறுமையுணர்வு மாயமாய் மறைந்துவிட்டதாக சில நோயாளிகள் தெரிவித்தனர்.

இச்சிகிச்சைக்கு உட்பட்ட இன்னொரு நோயாளி, சிகிச்சை முடிந்து பல மாதங்களுக்குப் பிறகு தான் மீண்டும் கடுமையான மனச்சோர்வுக்கு ஆளாகியிருந்ததாகக் குறை கூறினார். அவரை ஆய்வு செய்த மருத்துவர்கள், அவருடைய கணினியின் பேட்டரி சக்தி தீர்ந்து போனதுதான் அவருடைய பிரச்சனைக்குக் காரணம் என்பதைக் கண்டுபிடித்தனர். அவர்கள் அந்த பேட்டரியை எடுத்துவிட்டுப் புதிய பேட்டரியைப் பொருத்தியபோது, அந்நபரின் மனச்சோர்வு விரைவில் கரைந்து போயிற்று!

அறநெறிசார் கட்டுப்பாடுகளின் காரணமாக, விதிவிலக்கான சூழல்களில் மட்டுமே ஆராய்ச்சியாளர்கள் மனித மூளைகளில் மின்முனைகளைப் பதிக்கின்றனர். எனவே, மனிதர்கள்மீது நடத்தப்படுகின்ற பொருத்தமான பரிசோதனைகளில் பெரும்பாலானவை உடலை ஊடுருவாத, தலைக்கவசம் போன்ற தூண்டல் கருவிகளைப் பயன்படுத்தி மேற்கொள்ளப்படுகின்றன. இந்தத் தலைக்கவசத்தில் மின்முனைகள் பொருத்தப்பட்டுள்ளன. அவை உச்சந்தலையின் வெளிப்புறத்தின்மீது இணைக்கப்படுகின்றன. இந்தத் தலைக்கவசம் பலவீனமான மின்காந்தப் புலங்களை உருவாக்கி, மூளையின் சில குறிப்பிட்டப் பகுதிகளை நோக்கி அவற்றைச் செலுத்துகிறது. இதன் மூலம், சில குறிப்பிட்ட மூளை நடவடிக்கைகளை அது தூண்டுகிறது அல்லது மட்டுப்படுத்துகிறது.

ராணுவ வீரர்களுடைய கவனக்குவிப்பையும், அவர்கள் தங்கள் பயிற்சிகளின்போது செயல்படும் விதத்தையும், போர்க்களங்களில் அவர்கள் செயல்படும் விதத்தையும் மேம்படுத்தும் நோக்கத்தில் அமெரிக்க ராணுவம் இப்படிப்பட்டத் தலைக்கவசங்களைக் கொண்டு பரிசோதனைகளை மேற்கொண்டு வருகிறது. ஒஹையோ மாநிலத்திலுள்ள விமானப்படைத் தளத்தில் அமைந்துள்ள 'ஹியூமன் எஃபெக்டிவ்னெஸ் டைரக்டரேட்' அமைப்பு முக்கியமான பரிசோதனைகளை மேற்கொள்ளுகிறது. பரிசோதனை முடிவுகள் திட்டவட்டமானவையாக இல்லாதபோதிலும், இத்தகைய தூண்டல்

கருவிகளைப் பற்றிய ஆரவாரம் அவை உண்மையிலேயே சாதித்த விஷயங்களைவிட அதிகமாக இருந்தாலும்கூட, இந்த வழிமுறை, விமானியில்லா வானூர்திகளை இயக்குபவர்கள், விமானப் போக்குவரத்துக் கட்டுப்பாட்டாளர்கள், தொலைநோக்கிகள் பொருத்தப்பட்டத் துப்பாக்கிகளைக் கொண்டு துல்லியமாகச் சுடுகின்றவர்கள், அதிக நேரம் ஒருமித்த கவனத்துடன் இருக்க வேண்டிய தேவையை உள்ளடக்கிய வேலைகளில் இருப்பவர்கள் ஆகியோருடைய அறிவுசார் திறனை மேம்படுத்தும் என்பதைப் பல ஆய்வுகள் சுட்டிக்காட்டுகின்றன.

'நியூ சயன்டிஸ்ட்' என்ற இதழுக்கான பத்திரிகையாளர்களில் ஒருவரான சாலி அடீ, தொலைநோக்கிகள் பொருத்தப்பட்டத் துப்பாக்கிகளைக் கொண்டு துல்லியமாகச் சுடுவதற்குப் பயிற்சியளிக்கின்ற ஒரு பயிற்சிக்கூடத்தை நேரில் பார்வையிட அனுமதிக்கப்பட்டார். அவர் அப்பயிற்சியின் விளைவுகளைத் தானே சோதித்துப் பார்க்க விரும்பினார். முதலில், ஒரு செயற்கையான போர்க்களத்தைத் தூண்டிய ஒரு கருவிக்குள், அவர் அந்தத் தொழில்நுட்பத் தலைக்கவசத்தை அணியாமல் நுழைந்தார். உடலின்மீது வெடிகுண்டுகளைக் கட்டிக் கொண்டு, கைகளில் நீள்துப்பாக்கிகளை ஏந்தியபடி, முகமூடி அணிந்த இருபது தீவிரவாதிகள் சாலியை நோக்கி வந்தனர். பயம் தன்னை ஆட்கொண்ட விதத்தை சாலி இவ்வாறு விவரிக்கிறார்: "நான் ஒரு தீவிரவாதியைச் சுட்டுக் கொன்ற ஒவ்வொரு முறையும் மூன்று புதிய தீவிரவாதிகள் எங்கிருந்தோ தோன்றினர். நான் போதுமான அளவு வேகமாகச் சுடவில்லை. எனக்கு ஏற்பட்ட பீதியாலும் சுடுவதில் எனக்குத் தகுதியும் அனுபவமும் இல்லாததாலும் என்னால் ஒழுங்காகச் சுட முடியவில்லை." அதிர்ஷ்டவசமாக, அந்தத் தீவிரவாதிகள் அனைவரும் அவரைச் சுற்றிலும் இருந்த பிரம்மாண்டமான திரைகள்மீது திரையிடப்பட்ட வெறும் வீடியோ பிம்பங்களே. ஆனாலும், சாலி தான் சிறப்பாகச் சுடாதது குறித்து ஏமாற்றமடைந்தார். தன் துப்பாக்கியைத் தூக்கி எறிந்துவிட்டு, அந்தத் தூண்டுக் கருவியிலிருந்து வெளியேறிவிடலாம் என்றுகூட அவர் நினைத்தார்.

அப்போது அங்கிருந்தவர்கள் சாலிக்கு அந்தத் தலைக்கவசத்தைப் பொருத்தினர். ஒரு சேலான சிலிர்ப்பையும், வாயில் ஒருவிதமான விநோதமான சுவையையும் தவிர வேறு எந்த வித்தியாசமும் தனக்குத் தெரியவில்லை என்று சாலி கூறினார். ஆனாலும், அந்த மெய்நிகர் தீவிரவாதிகளை ஒருவர் பின் ஒருவராக அவர் சுட்டுக் கொல்லத் தொடங்கினார். அவர் 'ரேம்போ'வைப்போல எள்ளளவும் அலட்டிக்

கொள்ளாமலும் எந்தப் பதற்றமும் இல்லாமலும் மிக ஆசுவாசமாக அவர்களைச் சுட்டுத் தள்ளினார். “இருபது பேர் தங்கள் கைகளில் துப்பாக்கிகளை ஏந்தியபடி என்னை நோக்கி ஓடி வந்தபோது, நான் ஆழமாக சுவாசித்துவிட்டு, என்னுடைய நீள்துப்பாக்கியைக் கையில் எடுத்து, எனக்கு மிக அருகே இருந்த நபரைச் சுட்டேன். பிறகு நான் என்னுடைய அடுத்த இலக்கை மதிப்பீடு செய்தேன். நான் கண்மூடித் திறப்பதற்குள் (எனக்கு அப்படித்தான் தோன்றியது), ‘அவ்வளவுதான், பயிற்சி முடிந்துவிட்டது,’ என்று யாரோ கூறியது என் காதுகளில் விழுந்தது. பிறகு அந்த அறையில் விளக்குள் ஒளிர்ந்தன. நான் மேலும் சில தீவிரவாதிகளை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். ஆனால், அங்கிருந்த பரிசோதனைக் குழுவினர் என்னுடைய மின்முனைகளை அகற்றத் தொடங்கினர். நான் மேலே ஏறிட்டுக் கடிகாரத்தைப் பார்த்துவிட்டு, யாரேனும் நேரத்தை முன்னால் திருப்பி வைத்துவிட்டார்களா என்று யோசித்தேன். நான் நினைத்தறியாமல் இருபது நிமிடங்கள் கடந்துவிட்டிருந்தன. ‘நான் எத்தனைப் பேரைக் கொன்றேன்?’ என்று ஓர் உதவியாளரிடம் நான் கேட்டேன். அவர் என்னை ஒரு கேள்விக்குறியோடு பார்த்துவிட்டு, ‘எல்லோரையும் சுட்டுவிட்டீர்கள்!’ என்று பதிலளித்தார்,” என்று சாலி எழுதியுள்ளார்.

இப்பரிசோதனை சாலியின் வாழ்க்கையை மாற்றியது. “அடுத்த சில நாட்களில், ஏறக்குறைய ஓர் ஆன்மிக அனுபவம் எனக்குக் கிடைத்திருந்ததுபோல நான் உணர்ந்தேன். அப்பரிசோதனையில் எனக்குக் கிடைத்த அனுபவம், நான் அதிக சாமர்த்தியமானவள் என்ற உணர்வையோ, நான் வேகமாகக் கற்றுக் கொள்ளக்கூடியவள் என்ற உணர்வையோ எனக்குக் கொடுக்கவில்லை. மாறாக, என் வாழ்வில் முதன்முறையாக, என் தலைக்குள் இருந்து என்னைப் பாடாய்ப்படுத்திக் கொண்டிருந்த ஓயாத கூச்சல்கள் ஒருவழியாக அடங்கி நான் வானத்தில் பறப்பது போன்ற ஓர் உணர்வை ஏற்படுத்தின. முதல் முறையாக, என்னைப் பற்றிய சுயசந்தேகம் என் மூளையிலிருந்து மறைந்தது. திடீரென்று, நம்புதற்கரிய ஓர் அமைதியை நான் என் தலையில் உணர்ந்தேன். அடுத்த ஒருசில வாரங்களின்போது, நான் மீண்டும் அந்தப் பயிற்சி நிலையத்திற்குச் சென்று அந்த மின்முனைகளை என் தலைமீது பொருத்திக் கொள்ளுவதைத்தான் எல்லாவற்றையும்விட அதிகமாக விரும்பினேன். என் மனத்தில் ஏகப்பட்டக் கேள்விகளும் எழத் தொடங்கின. “முயற்சிக்க நான் பயப்படுகின்ற காரணத்தால் என்னைத் தோல்வியை நோக்கித் தள்ளுகின்ற, என் மனத்தை ஆக்கிரமித்துள்ள அந்தக் கோபக் குரல்களை ஒதுக்கிவிட்டால், உண்மையிலேயே நான் யார்? அந்தக் குரல்கள் எங்கிருந்து வந்தன?”

அவற்றில் சில குரல்கள் சமுதாயத்தின் ஓரவஞ்சனைகளை மீண்டும் மீண்டும் பறைசாற்றுகின்றன, சில குரல்கள் நம்முடைய தனிப்பட்ட வரலாற்றை எதிரொலிக்கின்றன, சில குரல்கள் நம்முடைய மரபியல் பாரம்பரியத்தைப் பற்றி எடுத்துக்கூறுகின்றன. அவை எல்லாம் சேர்ந்து உருவாக்குகின்ற, பார்வைக்குப் புலப்படாத ஒரு கதை, நம்மால் புரிந்து கொள்ள முடியாத வழிகளில், பிரக்ஞையுடன்கூடிய நம்முடைய தீர்மானங்களை வடிவமைக்கின்றன. நம் தலைக்குள் ஓடிக் கொண்டிருக்கின்ற ஓரங்கவுரைகளை நம்மால் மாற்றி எழுத முடிந்தாலோ அல்லது சில சமயங்களில் அவற்றை முற்றிலுமாக ஊமையாக்கிவிட முடிந்தாலோ என்ன நிகழும்?

தற்சமயம், உச்சந்தலைமீது புறவயமாகப் பொருத்தப்படுகின்ற தூண்டல் கருவிகள் (தூண்டல் தலைக்கவசங்கள் போன்றவை) இன்னமும் துவக்க நிலையில்தான் இருக்கின்றன. அவை ஒரு முழுமையான தொழில்நுட்பமாக ஆகுமா என்பதும், ஒருவேளை அவை அப்படி ஆகும் பட்சத்தில் அது எப்போது சாத்தியமாகும் என்பதும் யாருக்கும் தெளிவாகத் தெரியவில்லை. இன்றைய நிலவரப்படி, அவை தூண்டிவிடுகின்ற அதீத உணர்வு மிகச் சொற்ப காலமே நிலைக்கிறது. சாலியின் இருபது நிமிட அனுபவம் ஒரு விதிவிலக்கு என்றுதான் கூற வேண்டும் (அது பிரபலமான பிளசீபோ விளைவால் ஏற்பட்டதாகக்கூட இருக்கலாம்). இந்தத் தூண்டல் கருவிகளைப் பற்றி வெளியிடப்பட்டுள்ள ஆய்வுக் கட்டுரைகளில் பெரும்பாலானவை, பிரத்யேகமான சூழல்களின்கீழ் மிகக் குறைவான எண்ணிக்கையிலான மக்களைக் கொண்டு நடத்தப்பட்டப் பரிசோதனைகளின் அடிப்படையில் அமைந்துள்ளன. இப்பரிசோதனைகளின் நீண்டகால விளைவுகளையும் ஆபத்துக்களையும் பற்றி யாருக்கும் எதுவும் தெரியாது. ஆனாலும், அந்தத் தொழில்நுட்பம் முழுமையான வளர்ச்சி அடைந்தாலோ அல்லது மூளையின் மின்செயல்பாடுகளை மாற்றியமைக்க வேறு ஏதேனும் வழிமுறை கண்டுபிடிக்கப்பட்டாலோ, அது மனிதச் சமுதாயங்களுக்கும் மனித உயிரினங்களுக்கும் என்னவெல்லாம் செய்யும்?

வெறுமனே தீவிரவாதிகளைத் துல்லியமாகத் தாக்குவதற்கு மட்டுமல்லாமல், சிறப்பாகப் படிப்பது, ஆற்றல்மிக்க வகையில் வேலை செய்வது, விளையாட்டுக்களிலும் பொழுதுபோக்கு நடவடிக்கைகளிலும் தங்களை மூழ்கடித்துக் கொள்ளுவது, ஒரு குறிப்பிட்டக் கணத்தில் தங்களுக்குப் பிடித்தமான ஒரு விளையாட்டிலோ அல்லது பாடத்திலோ கவனம் செலுத்த முடிவது போன்ற சலிப்பூட்டும் இலக்குகளை அடைவதற்கும் மக்கள் தங்கள் மூளைகளின் மின்சுற்றுக்களை

மாற்றியமைக்கக்கூடும். ஆனால், அது ஒரு வழக்கமாக ஆகும்போது, வாடிக்கையாளர்களுடைய ‘தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரம்’ நாம் கடையில் வாங்கக்கூடிய இன்னொரு சாதாரணப் பொருளாக ஆகிவிடும். நீங்கள் பியானோ வாசிப்பதில் மேதமை பெற விரும்புகிறீர்கள், ஆனால் அதை வாசித்துப் பயிற்சி செய்வதற்கான நேரம் வரும்போது நீங்கள் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைப் பார்க்க விரும்புகிறீர்கள். இப்போது என்ன செய்வது? கவலை வேண்டாம்: வெறுமனே ஒரு தலைக்கவசத்தைப் போட்டுக் கொண்டு, சரியான மென்பொருளை உள்ளீடு செய்தால் போதும். பியானோ வாசிக்க வேண்டும் என்ற துடிப்பு உடனடியாக உங்களுக்குள் எழும்.

உங்கள் தலையில் உள்ள குரல்களை அமைதிப்படுத்துவதற்கான அல்லது மேம்படுத்துவதற்கான திறன், தேர்ந்தெடுப்பதற்கான உங்கள் சுதந்திரத்தை உண்மையில் வலிமைப்படுத்துமே அன்றி பலவீனப்படுத்தாது என்று நீங்கள் எதிர்வாதம் புரியக்கூடும். தற்போது, வெளியிலிருந்து உங்கள் கவனத்தைச் சிதறடிக்கின்ற காரணிகளால், நீங்கள் உண்மையிலேயே மனதார விரும்புகின்ற விஷயங்களை அடைய நீங்கள் பெரும்பாலும் தவறிவிடுகிறீர்கள். கவனச்சிதறலைக் கட்டுப்படுத்துகின்ற தலைக்கவசம் மற்றும் அதை ஒத்தப் பிற கருவிகளின் உதவி இருந்தால், பெற்றோர்கள், மதகுருக்கள், போலி மருத்துவர்கள், விளம்பரதாரர்கள், அண்டைவீட்டார் போன்றோரின் அந்நியக் குரல்களை அதிக சுலபமாக உங்களால் அமைதிப்படுத்த முடியும், நீங்கள் விரும்பும் விஷயத்தின்மீது உங்களால் ஒருமித்த கவனம் செலுத்த முடியும். ஆனாலும், உங்களிடம் ஒரு சுயம் இருக்கிறது என்பதும், இதனால் உங்களுடைய உண்மையான விருப்பங்களை அந்நியக் குரல்களிடமிருந்து உங்களால் வேறுபடுத்த முடியும் என்பதும் இன்னொரு தாராளவாதக் கட்டுக்கதைதான். சமீபத்திய அறிவியல் ஆராய்ச்சிகள் இதை நிரூபித்துள்ளன.

## நான் யார்?

தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரத்தின்மீது நாம் கொண்டுள்ள தாராள நம்பிக்கையை மட்டுமல்லாமல், தனிமனிதவாதத்தின்மீது நமக்கு இருக்கும் நம்பிக்கையையும் அறிவியல் பலவீனப்படுத்துகிறது. ஒரு தனியான, பிரிக்கப்பட முடியாத சுயம் நமக்கு இருப்பதாக தாராளவாதிகள் நம்புகின்றனர். என்னுடைய உடலில் ஏறக்குறைய 37 லட்சம் கோடி உயிரணுக்கள் இருக்கின்றன. ஒவ்வொரு நாளும் என் உடலும் மனமும் எண்ணற்ற வரிசைமாற்றங்களுக்கும்

உருவமாற்றங்களுக்கும் உட்படுகின்றன. ஆனால், நான் உண்மையிலேயே கவனம் செலுத்தி, அகரீதியாக என்னோடு தொடர்பு கொள்ளக் கடுமையாக முயற்சித்தால், எனக்குள் மிக ஆழத்தில் ஒரு தனியான, தெளிவான, உண்மையான குரல் இருப்பதை என்னால் கண்டுபிடிக்க முடியும். அதுதான் என்னுடைய உண்மையான சுயம். அதுதான் பிரபஞ்சத்தில் உள்ள எல்லா அர்த்தத்திற்கும் அதிகாரத்திற்குமான மூலாதாரம். தாராளவாதம் அர்த்தம் வாய்ந்ததாக இருக்க வேண்டும் என்றால், உண்மையான ஒரே ஒரு சுயம் மட்டுமே என்னிடம் இருக்க வேண்டும். ஏனெனில், ஒன்றுக்கு மேற்பட்டக் குரல்கள் என்னுள் இருந்தால், வாக்குச் சாவடியில் நான் எந்தக் குரலுக்குச் செவிசாய்க்க வேண்டும், பேரங்காடியில் நான் எந்தக் குரலுக்குக் கீழ்ப்படிய வேண்டும், திருமணச் சந்தையில் நான் எந்தக் குரலுக்கு ஏற்ப நடந்து கொள்ள வேண்டும் என்று எனக்கு எப்படித் தெரியும்?

ஆனாலும், கடந்த சில ஆண்டுகளின் ஊடாக உயிரியல் ஓர் உறுதியான முடிவுக்கு வந்துள்ளது: இந்த தாராளவாதக் கதை முழுக்க முழுக்க ஒரு கட்டுக்கதைதான். நிரந்தர ஆன்மாவும் கிறிஸ்துமஸ் தாத்தாவும் எவ்வளவு நிஜமோ, உண்மையான சுயம் அவ்வளவு நிஜமானது. நான் உண்மையிலேயே எனக்குள் சென்று தேடினால், நான் இதுவரை கண்டுகொள்ளாமல் இருந்த 'ஐக்கிய உணர்வு', முரண்பட்டப் பல குரல்களை உள்ளடக்கிய ஒரு நாரசாரமான கூச்சலுக்குள் கரைந்து போகிறது. இந்தக் குரல்களில் எதுவுமே என்னுடைய 'உண்மையான சுயம்' அல்ல.

மனித மூளை இரண்டு அரைக்கோளங்களைக் கொண்டுள்ளது. அக்கோளங்கள் ஒரு தடினமான நரம்புக் கற்றையால் இணைக்கப்பட்டு உள்ளன. ஒவ்வோர் அரைக்கோளமும் உடலின் எதிர்ப்பகுதியைக் கட்டுப்படுத்துகிறது. வலது அரைக்கோளம் இடது பக்க உடலைக் கட்டுப்படுத்துகிறது. இது இடப்பக்கப் பார்வைப் புலத்திலிருந்து தகவல்களைப் பெறுகிறது, இடது கை மற்றும் இடது காலின் அசைவுகளுக்குக் காரணமாக இருக்கிறது. அதேபோல, இடது அரைக்கோளம் வலது பக்க உடலைக் கட்டுப்படுத்துகிறது. இது வலப்பக்கப் பார்வைப் புலத்திலிருந்து தகவல்களைப் பெறுகிறது, வலது கை மற்றும் வலது காலின் அசைவுகளுக்குக் காரணமாக இருக்கிறது. தங்கள் மூளையின் வலது அரைக்கோளத்தில் பக்கவாதம் ஏற்பட்டுள்ளவர்கள் சில சமயங்களில் தங்கள் உடலின் இடது பக்கத்தைப் புறக்கணிப்பதற்கான காரணம் இதுதான். (அவர்கள் தலைசீவும்போது தங்கள் தலையின் வலது பக்கத்தை மட்டுமே சீவுவர்,

தங்கள் தட்டின் வலது பக்கத்தில் வைக்கப்பட்டுள்ள உணவை மட்டுமே சாப்பிடுவர்.)

இரண்டு அரைக்கோளங்களுக்கும் இடையே உணர்ச்சிரீதியான மற்றும் அறிவுரீதியான வேறுபாடுகளும் இருக்கின்றன, ஆனால் இப்பிரிவினை அவ்வளவு திட்டவட்டமானதாக இல்லை. பெரும்பாலான அறிவுசார் நடவடிக்கைகள் இரண்டு அரைக்கோளங்களையும் ஈடுபடுத்துகின்றன, ஆனால் ஒவ்வோர் அரைக்கோளமும் எந்த அளவு ஈடுபடுத்தப்படுகிறது என்பதில் வேறுபாடு இருக்கிறது. எடுத்துக்காட்டாக, பேச்சிலும் தர்க்கரீதியான வாதங்களிலும் இடது அரைக்கோளம் அதிக முக்கியப் பங்கு வகிக்கிறது. ஆனால், இடம் சார்ந்த தகவல்களைக் கையாளுவதில் வலது அரைக்கோளம் அதிக ஆதிக்கம் செலுத்துகிறது.

இரண்டு அரைக்கோளங்களுக்கும் இடையேயான உறவுகளைப் புரிந்து கொள்ளுவதற்கு உதவிய பல புதிய கண்டுபிடிப்புகள் வலிப்பு நோயால் பாதிக்கப்பட்டவர்கள்மீது நடத்தப்பட்ட ஆய்வின் அடிப்படையில் அமைந்தவையாகும். தீவிர வலிப்பு நோய் உள்ளவர்களுடைய விஷயத்தில், மின்புயல்கள் மூளையின் ஒரு பகுதியிலிருந்து தொடங்கி விரைவாக மற்றப் பகுதிகளுக்குப் பரவி ஒரு தீவிரமான வலிப்பைத் தோற்றுவிக்கின்றன. இப்படிப்பட்ட வலிப்புகளின்போது நோயாளிகள் தங்கள் உடல்கள்மீதான கட்டுப்பாட்டை இழக்கின்றனர். அடிக்கடி வலிப்பு ஏற்படுகின்ற நபர்களால் தொடர்ந்து ஒரு வேலையில் நீடிக்க முடிவதில்லை, இயல்பான வாழ்க்கையை வாழ முடிவதில்லை. இருபதாம் நூற்றாண்டின் நடுவில், பிற அனைத்துச் சிகிச்சைகளும் தோல்வியுற்றபோது, மூளையின் இரண்டு அரைக்கோளங்களையும் இணைக்கின்ற தடிமனான நரம்புக் கற்றையை வெட்டியதன் மூலம் மருத்துவர்கள் வலிப்புப் பிரச்சனையின் தீவிரத்தை வெகுவாகத் தணித்தனர். அவர்கள் அந்த நரம்புக் கற்றையை வெட்டியதால், ஓர் அரைக்கோளத்தில் தொடங்குகின்ற மின்புயல்களால் மறுகோளத்தில் பரவ முடியாமல் போனது. மூளை அறிவியலறிஞர்களுக்கு இந்த நோயாளிகள் விலைமதிப்பிடப்பட முடியாத ஒரு தகவல் களஞ்சியமாக விளங்கினர்.

பேராசிரியர் ரோஜர் வால்காட் ஸ்பெர்ரியும் அவருடைய மாணவரான பேராசியர் மைக்கேல் கசானிகாவும் இணைந்து, அரைக்கோளங்களுக்கு இடையேயான பிணைப்பு துண்டிக்கப்பட்ட மூளையைக் கொண்ட நோயாளிகள்மீது நடத்திய சில ஆராய்ச்சிகள் மிகப் பிரபலமானவை. பேராசிரியர் ரோஜர் 1981ம் ஆண்டில்

உடலியங்கியல் மற்றும் மருத்துவத்திற்கான நோபல் பரிசு பெற்றவராவார். அவரும் கசானிகாவும் நடத்திய ஆராய்ச்சிகளில், பருவ வயதுச் சிறுவன் ஒருவனை உள்ளடக்கிய ஆராய்ச்சியும் ஒன்று. அவன் வளர்ந்து பெரியவனாகும்போது அவன் என்ன செய்ய விரும்பினான் என்று அவனிடம் கேட்கப்பட்டது. இயந்திரங்கள், கட்டடங்கள், உட்கட்டமைப்புகள் போன்றவற்றுக்கான விரிவான தொழில்நுட்ப வரைபடங்களையும் திட்டங்களையும் வரைகின்ற ஒருவராகத் தான் ஆக விரும்பியதாக அவன் பதிலளித்தான். அவனுடைய மூளையின் இடது அரைக்கோளம் இந்த பதிலை வழங்கியது. தர்க்கரீதியான வாதங்களிலும் பேச்சிலும் ஓர் இன்றியமையாத பங்கு வகிக்கின்ற அரைக்கோளம் அது. ஆனாலும், அச்சிறுவனின் வலது மூளையில் இன்னொரு துடிப்பான பேச்சு மையம் இருந்தது. இந்த மையத்தால் பேச்சு மொழியைக் கட்டுப்படுத்த முடியாது, ஆனால் ஸ்கிரேபிள் விளையாட்டில் உள்ள, ஆங்கில எழுத்துக்கள் பதிக்கப்பட்டுள்ள காய்களைப் பயன்படுத்தி வார்த்தைகளை அதனால் உருவாக்க முடியும். அவனுடைய வலது மூளை என்ன சொல்லும் என்று அறிந்து கொள்ள அந்த அறிவியலறிஞர்கள் ஆர்வமாக இருந்தனர். எனவே, அவர்கள் ஒரு மேசையின்மீது ஸ்கிரேபிள் காய்களைப் பரப்பி வைத்து, ஒரு காகிதத்தின்மீது பின்வருமாறு எழுதினர்: “நீ வளர்ந்து பெரியவனாகும்போது நீ என்ன செய்ய விரும்புகிறாய்?” அவர்கள் அக்காகிதத்தை அவனுடைய இடப்பக்கப் பார்வைப் புலத்தின் முனையில் வைத்தனர். இடப்பக்கப் பார்வைப் புலத்திலிருந்து பெறப்படும் தகவல்கள் வலது அரைக்கோளத்தால் கையாளப்படுகின்றன. வலது அரைக்கோளத்தால் பேச்சு மொழியைப் பயன்படுத்த முடியாது என்பதால், அச்சிறுவன் அக்கேள்விக்கு பதிலேதும் கூறவில்லை. ஆனால் அவனுடைய இடதுகை அந்த மேசையின்மீது வேகமாகக் குறுக்கும் நெடுக்குமாக நகரத் தொடங்கியது. அவன் அந்த ஸ்கிரேபிள் காய்களை அங்கொன்றும் இங்கொன்றுமாக எடுத்து, இறுதியில், ‘கார் பந்தயம்’ என்ற வார்த்தையை அவன் அமைத்தான். இது விநோதமானது!

இதே போன்ற விநோதமான நடத்தையை இன்னொரு நோயாளியும் வெளிப்படுத்தினார். அவர் இரண்டாம் உலகப் போரில் பங்கு கொண்ட ஒருவர். அவருடைய மூளையின் இரண்டு அரைக்கோளங்களும் ஒன்றோடொன்று தொடர்பற்று இருந்ததால், சில சமயங்களில், அவருடைய வலது கை ஒரு கதவைத் திறக்க முயற்சித்தபோது, அவருடைய இடது கை அதில் குறுக்கிட்டு அக்கதவை வேகமாக ஓங்கிச் சாத்த முற்பட்டது.

இன்னொரு நோயாளியை உள்ளடக்கிய ஒரு பரிசோதனையில், பேராசிரியர் கசானிகாவும் அவருடைய குழுவினரும் ஒரு கோழிக் காலின் படத்தை, பேச்சுக்குக் காரணமான இடது அரைக்கோளத்தின் முன்பாக ஒரு கணம் காட்டினர். அதே நேரத்தில், பனி படர்ந்த ஒரு நிலத்தை வலது அரைக்கோளத்தின் முன்பாகக் காட்டினர். அவர் என்ன பார்த்தார் என்று அந்நோயாளியிடம் அவர்கள் கேட்டபோது, "அது ஒரு கோழிக் கால்," என்று அவர் பதிலளித்தார். பிறகு, அவர்கள் பல்வேறு படங்களை வரிசையாக அவரிடம் காட்டி, அவர் பார்த்திருந்த படத்தை இவற்றில் எது ஒத்திருந்தது என்று சுட்டிக்காட்டும்படி அவரிடம் கேட்டனர். அந்நோயாளியின் வலது கை (அவருடைய இடது மூளையால் கட்டுப்படுத்தப்பட்டக் கை) ஒரு கோழியின் படத்தைச் சுட்டிக்காட்டியது, ஆனால் அதே நேரத்தில் அவருடைய இடது கை நீண்டு, பனியைக் கொத்தி அள்ளுவதற்கான ஒரு மண்வெட்டி இருந்த ஒரு படத்தைச் சுட்டிக்காட்டியது. அப்போது கசானிகா அந்நோயாளியிடம், "நீங்கள் ஏன் ஒரே நேரத்தில் கோழியையும் பனிவெட்டியையும் சுட்டிக்காட்டினீர்கள்?" என்று கேட்டார். அதற்கு அந்நோயாளி இவ்வாறு பதிலளித்தார்: "ஓ, அதுவா? அந்தக் கோழிக் கால் கோழியுடையது. அதனால் நான் அந்தக் கோழியைச் சுட்டிக்காட்டினேன். அந்தக் கோழியின் கழிவுகளை அள்ளுவதற்கு ஒரு மண்வெட்டி வேண்டுமல்லவா? அதற்காக நான் அந்த மண்வெட்டியைச் சுட்டிக்காட்டினேன்."

இங்கு என்ன நிகழ்ந்தது? பேச்சைக் கட்டுப்படுத்துகின்ற இடது மூளையிடம் பனிக் காட்சியைப் பற்றிய எந்தத் தகவலும் இருக்கவில்லை. எனவே, இடது கை ஏன் அந்த மண்வெட்டிப் படத்தைச் சுட்டிக்காட்டியது என்று அதற்குத் தெரியவில்லை. எனவே, நம்பத்தக்க ஒரு காரணத்தை அது தானாகக் கண்டுபிடித்தது. இப்பரிசோதனையைப் பல முறை மேற்கொண்ட கசானிகா, பின்வரும் முடிவைத் தெரிவித்தார்: "நம்முடைய மூளையின் இடது அரைக்கோளம் நம்முடைய பேச்சுத் திறனுக்கான இடம் மட்டுமல்ல. மாறாக, நம்பத்தக்கக் கதைகளைப் புனைவதற்காக, இருக்கின்ற துப்புக்களைப் பயன்படுத்தி நம் வாழ்க்கைக்கு அர்த்தத்தைக் கொடுக்க முயற்சிக்கின்ற ஓர் உள்ளார்ந்த அம்சமும் அங்கு இருக்கிறது."

இன்னொரு பரிசோதனையில், பேச்சுத் திறனோடு தொடர்பில்லாத வலது அரைக்கோளத்திடம் ஆபாசப் புகைப்படம் ஒன்று ஒரு நோயாளியிடம் காட்டப்பட்டது. சம்பந்தப்பட்ட நோயாளி இதைக் கண்டு சங்கோஜப்பட்டு, வெட்கச் சிரிப்பு ஒன்றை உதிர்த்தார். அந்தக் குறும்புக்கார ஆராய்ச்சியாளர்கள் அவரைப் பார்த்து, "நீங்கள் என்ன

பார்த்தீர்கள்?" என்று கேட்டனர். "ஒன்றுமில்லை, ஓர் ஒளி மின்னியதைப் பார்த்தேன், அவ்வளவுதான்," என்று அவருடைய இடது அரைக்கோளம் பதிலளித்தது. அந்த நோயாளி தன் கையால் தன் வாயைப் பொத்திக் கொண்டு மீண்டும் வெட்கப்பட்டுச் சிரித்தார். "பிறகு நீங்கள் எதற்காகச் சிரிக்கிறீர்கள்?" என்று அந்த ஆராய்ச்சியாளர்கள் மீண்டும் துருவிக் கேட்டனர். இடது அரைக்கோளத்தில் இருந்த அர்த்தப்படுத்தும் அம்சம், ஓர் அறிவார்ந்த விளக்கத்தைக் கொடுக்கப் போராடியது. பிறகு, அது தட்டுத்தடுமாறி ஒரு விளக்கத்தைக் கண்டுபிடித்தது: "இந்த அறையில் உள்ள இயந்திரங்களில் ஒன்று, பார்ப்பதற்கு மிகவும் வேடிக்கையானதாக இருக்கிறது."

அமெரிக்க உளவு நிறுவனமான சிஐஏ, அமெரிக்க உள்துறைக்குத் தெரியாமல் ஆளில்லா விமானங்களைக் கொண்டு பாகிஸ்தான்மீது தாக்குதல் நடத்துவதைப்போல இருக்கிறது இது. அந்தத் தாக்குதல் பற்றி அமெரிக்க உள்துறை அதிகாரிகளை ஒரு பத்திரிகையாளர் கேள்விகளால் துளைக்கும்போது, நம்பத்தக்க ஏதோ ஒரு விளக்கத்தை அவர்கள் இட்டுக்கட்டிக் கூறுகின்றனர். யதார்த்தத்தில், அந்தத் தாக்குதல் ஏன் உத்தரவிடப்பட்டது என்பது அந்த அதிகாரிகளுக்குத் தெரியாது என்பதால், அவர்கள் ஏதோ ஒரு காரணத்தைக் கண்டுபிடிக்கின்றனர். இதே போன்ற ஓர் உத்தியைத்தான், மூளையின் அரைக்கோளங்கள் பிரிக்கப்பட்ட நோயாளிகள் மட்டுமல்லாமல், எல்லா மனிதர்களும் பயன்படுத்துகின்றனர். என்னுடைய தனிப்பட்ட சிஐஏ என்னுடைய உள்துறையின் அனுமதியின்றியோ அல்லது அதற்குத் தெரியாமலோ மீண்டும் மீண்டும் எதையேனும் செய்து கொண்டே இருக்கிறது. பிறகு என்னை ஒரு நேர்மறையான விதத்தில் காட்டுவதற்காக என்னுடைய உள்துறை ஏதோ ஒரு கதையைப் புனைகிறது. ஆனால், பல சமயங்களில், தான் கண்டுபிடித்துள்ள கற்பனைக் கதைகளை அந்த உள்துறையே நம்பத் தொடங்கிவிடுகிறது.

***

மக்கள் எவ்வாறு பொருளாதாரரீதியான தீர்மானங்களை மேற்கொள்ளுகின்றனர் என்பதைத் தெரிந்து கொள்ள விரும்புகின்ற நடத்தைசார் பொருளாதார வல்லுநர்களும் இதே முடிவுக்குத்தான் வந்துள்ளனர். அதிகத் துல்லியமாகக் கூற வேண்டுமென்றால், யார் இந்தத் தீர்மானங்களை மேற்கொள்ளுகின்றனர் என்பதை அறிந்து கொள்ளுவதில்தான் அவர்கள் அதிக ஆர்வம் காட்டுகின்றனர். ஒரு மெர்சிடீஸ் கார் வாங்குவதற்கு பதிலாக ஒரு டொயோட்டா வாங்கலாம் என்று யார் தீர்மானிக்கிறார்கள்? தாய்லாந்துக்கு ஓர் உல்லாச விடுமுறை மேற்கொள்ளுவதற்கு பதிலாகப் பாரீஸுக்குப் போகலாம்

என்று யார் தீர்மானிக்கிறார்கள்? ஷாங்காய் பங்குச் சந்தையில் முதலீடு செய்வதற்கு பதிலாகத் தென்கொரியக் கருவூலப் பத்திரங்களில் முதலீடு செய்ய யார் தீர்மானிக்கிறார்கள்? இந்தத் தீர்மானங்களில் எதையும் தனியொரு அம்சம் மேற்கொள்ளுவதில்லை, மாறாக, ஒன்றுக்கொன்று முரண்பட்டப் பல்வேறு உள்ளார்ந்த அம்சங்களுக்கு இடையே நிகழுகின்ற ஒரு போராட்டத்திலிருந்துதான் இத்தீர்மானங்கள் விளைகின்றன என்று பெரும்பாலான பரிசோதனைகள் உணர்த்தியுள்ளன.

இது தொடர்பான ஒரு முக்கியப் பரிசோதனையை, 2002ம் ஆண்டில் பொருளியலில் நோபல் பரிசு பெற்ற டேனியல் கானமன் என்பவர் மேற்கொண்டார். மூன்று பகுதிகளை உள்ளடக்கிய அப்பரிசோதனையில் பங்கு கொள்ளும்படி அவர் சில தன்னார்வலர்களிடம் கேட்டார். முதலாவது பகுதி ‘குறுகியது’. அதில், 14 டிகிரி சென்டிகிரேடு வெப்பநிலையில் இருந்த குளிர்ந்த நீருக்குள் ஒரு நிமிடம் ஒரு கையை அமிழ்த்தி வைத்திருக்கும்படி அவர்களிடம் கேட்டுக் கொள்ளப்பட்டது. இனிமையற்ற இந்த அனுபவம் கிட்டத்தட்ட வேதனை ஏற்படுத்துவதாக இருந்தது. அறுபது நொடிகளுக்குப் பிறகு, கைகளை வெளியே எடுக்கும்படி அவர்களிடம் கூறப்பட்டது. அப்பரிசோதனையின் இரண்டாவது பகுதி ‘நீண்டது’. இதில், வேறு சில கலயங்களில் 14 டிகிரி வெப்பநிலையில் வைக்கப்பட்டிருந்த நீரில் அடுத்தக் கையை நுழைக்கும்படி அந்தத் தன்னார்வலர்களிடம் கானமன் கேட்டுக் கொண்டார். ஆனால் அறுபது நொடிகளுக்குப் பிறகு, அவர்களுக்குத் தெரியாமல் அந்தக் கலயங்களுக்குள் சிறிதளவு வெந்நீர் சேர்க்கப்பட்டு, அவற்றில் இருந்த நீரின் வெப்பநிலை 15 டிகிரியாக லேசாக அதிகரிக்கப்பட்டது. மேலும், முப்பது நொடிகள் கழித்து (அதாவது மொத்தத்தில் 90 நொடிகளுக்குப் பிறகு), கைகளை வெளியே எடுக்கும்படி அவர்களிடம் கூறப்பட்டது. சில தன்னார்வலர்கள் ‘குறுகிய’ பகுதியை முதலில் செய்தனர், மற்றவர்கள் ‘நீண்ட’ பகுதியை முதலில் செய்தனர். இவ்விரு குழுவினரும் அப்பரிசோதனையின் இரண்டு பகுதிகளிலும் கலந்து கொண்ட பிறகு ஏழு நிமிடங்கள் கழித்து, அதன் மிக முக்கியமான மூன்றாவது பகுதி பற்றி அவர்களிடம் கூறப்பட்டது. அதன்படி, பரிசோதனையின் இரண்டு பகுதிகளில் ஏதேனும் ஒன்றை அவர்கள் மீண்டும் செய்ய வேண்டும் என்றும், எதை அவர்கள் தேர்ந்தெடுக்கிறார்கள் என்பது அவர்களுடைய விருப்பத்தைப் பொருத்தது என்றும் அவர்களிடம் தெரிவிக்கப்பட்டது. 80 சதவீதத் தன்னார்வலர்கள் ‘நீண்ட’ பகுதியைத் தேர்ந்தெடுத்தனர். அது சற்றுக் குறைவாக வேதனையளித்தது என்பது அவர்களுக்கு நினைவிருந்ததால்

அவர்கள் அதைத் தேர்ந்தெடுத்தனர்.

இப்பரிசோதனை எளிமையானதாக இருந்தாலும், இதன் விளைவுகள், உலகத்தைப் பற்றி தாராளவாதம் கொண்டிருக்கும் கண்ணோட்டத்தின் மையத்தை ஆட்டம் காணச் செய்கின்றன. 'அனுபவித்து உணரும் சுயம்,' 'விவரிக்கும் சுயம்' என்ற இரண்டு வெவ்வேறு சுயங்கள் நமக்குள் இருப்பதை இப்பரிசோதனை வெளிச்சம் போட்டுக் காட்டுகிறது. ஒவ்வொரு கணத்தையும் பற்றிய பிரக்ஞைதான் நம்முடைய 'அனுபவித்து உணரும் சுயம்'. இந்த சுயத்திற்கு, அப்பரிசோதனையின் 'நீண்ட' பகுதி மிக மோசமானதாக இருந்தது. ஏனெனில், அதில் முதல் அறுபது நொடிகளுக்கு 14 டிகிரி வெப்பத்தில் உள்ள நீரை நீங்கள் அனுபவிக்கிறீர்கள். இது 'குறுகிய' பகுதியில் நீங்கள் அனுபவிக்கின்ற அதே வேதனையைப்போல மோசமானதாக இருக்கிறது. பிறகு 15 டிகிரி வெப்பத்தில் உள்ள நீரை இன்னொரு முப்பது நொடிகளுக்கு நீங்கள் தாங்கிக் கொள்ள வேண்டும். இது அந்த அறுபது நொடிகள் வேதனையைவிட சற்றுக் குறைவாக வேதனையளித்தாலும், இதுவும் இனிமையற்றதாகவே இருக்கிறது. அனுபவித்து உணரும் சுயத்தைப் பொருத்தவரை, மிகவும் இனிமையற்ற ஓர் அனுபவத்துடன் சற்று லேசாக இனிமையற்ற ஓர் அனுபவத்தை இணைப்பது அந்த ஒட்டுமொத்த அனுபவத்தையும் அதிக வசீகரமானதாக ஆக்கிவிடாது.

ஆனாலும், அனுபவித்து உணரும் சுயத்திற்கு அது எதுவும் நினைவில் இல்லை. முக்கியமான தீர்மானங்களை மேற்கொள்ளும்போது அது எந்தக் கதைகளையும் கூறுவதில்லை, அதனிடம் அரிதாகவே ஆலோசனை கேட்கப்படுகிறது. விஷயங்களை நினைவுகூருதல், கதை கூறுதல், பெரிய தீர்மானங்களை மேற்கொள்ளுதல் ஆகியவை நமக்குள் இருக்கின்ற 'விவரிக்கும் சுயம்' என்ற முற்றிலும் வித்தியாசமான இன்னோர் அம்சத்தின் அதிகாரத்திற்கு உட்பட்டது. இந்த சுயம், பேராசிரியர் கசானிகாவின் பரிசோதனையில் நீங்கள் பார்த்த, இடது மூளையில் இருக்கின்ற அர்த்தப்படுத்தும் அம்சத்தைப் போன்றது. அது கடந்தகாலத்தைப் பற்றிய கதைகளைப் புனைவதிலும் எதிர்காலத்திற்கான திட்டங்களை வகுப்பதிலும் மும்முரமாக இருக்கிறது. ஒவ்வொரு பத்திரிகையாளரையும் கவிஞரையும் அரசியல்வாதியையும்போலவே, இந்த விவரிக்கும் சுயம் பல குறுக்குவழிகளைப் பயன்படுத்துகிறது. அது எல்லாவற்றையும் விவரிப்பதில்லை. வழக்கமாக, உச்சக் கணங்களையும் இறுதி முடிவுகளையும் மட்டுமே பயன்படுத்தி அது கதைகளைப் புனைகிறது. அந்த ஒட்டுமொத்த அனுபவத்தின் மதிப்பு அப்படிப்பட்ட உச்சக்

கணங்கள் மற்றும் இறுதி முடிவின் சராசரியால் தீர்மானிக்கப்படுகிறது. எடுத்துக்காட்டாக, முன்பு நீங்கள் படித்தத் தண்ணீர்ப் பரிசோதனையின் குறுகிய பகுதியை மதிப்பிடும்போது, விவரிக்கும் சுயமானது, மிக மோசமான கணத்திற்கும் (தண்ணீர் மிகவும் குளிராக இருக்கிறது) கடைசிக் கணத்திற்கும் (தண்ணீர் இப்போதும் அதே அளவு குளிராக இருக்கிறது) இடையேயான சராசரியைக் கணக்கிட்டுவிட்டு, 'தண்ணீர் மிகவும் குளிராக இருந்தது' என்ற முடிவுக்கு வருகிறது. அதேபோல, அப்பரிசோதனையின் நீண்ட பகுதியின் விஷயத்திலும் அது இதேபோலச் செய்கிறது. மிக மோசமான கணத்திற்கும் (தண்ணீர் மிகவும் குளிராக இருந்தது) கடைசிக் கணத்திற்கும் (தண்ணீர் அவ்வளவு குளிராக இருக்கவில்லை) இடையேயான சராசரியை அது கண்டுபிடித்து, 'தண்ணீர் சற்று வெதுவெதுப்பாக இருந்தது' என்ற முடிவுக்கு வருகிறது. இதில் நாம் கவனிக்க வேண்டிய முக்கியமான விஷயம் என்னவென்றால், இந்த விவரிக்கும் சுயம், அப்பரிசோதனையின் இரண்டு பகுதிகளும் வெவ்வேறு கால அளவுகளைக் கொண்டிருந்ததை முக்கியமானதாகக் கருதவில்லை. எனவே, அவ்விரண்டு பகுதிகளில் ஒன்றைத் தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரம் அதற்கு இருக்கும்போது, 'தண்ணீர் சற்று வெதுவெதுப்பாக இருந்த' அந்த நீண்ட பகுதியை மீண்டும் மேற்கொள்ள அது விரும்புகிறது.

விவரிக்கும் சுயம் நம்முடைய அனுபவங்களை மதிப்பிடும்போது, அது அவற்றின் கால அளவை உதாசீனப்படுத்திவிட்டு, 'உச்சம்-முடிவு' விதியை சுவீகரிக்கிறது. அதாவது, உச்சக் கணத்தையும் இறுதிக் கணத்தையும் மட்டுமே அது தன் நினைவில் வைத்திருக்கிறது. இவற்றின் சராசரியைக் கொண்டு அது அந்த ஒட்டுமொத்த அனுபவத்தையும் மதிப்பிடுகிறது. இது நம்முடைய நடைமுறைத் தீர்மானங்கள் அனைத்தின்மீதும் மிகப் பெரிய அளவில் தாக்கம் ஏற்படுத்துகிறது. 1990களின் துவக்கத்தில் கானமனும் டொரோன்டோ பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த டொனால்டு ரீடில்மையரும் சேர்ந்து பெருங்குடல் பரிசோதனைக்கு உட்பட்ட நோயாளிகளை ஆய்வு செய்தபோது, அனுபவித்து உணரும் சுயத்தையும் விவரிக்கும் சுயத்தையும் கானமன் ஆய்வு செய்யத் தொடங்கினார். பெருங்குடல் பரிசோதனையில், சிறிய கேமரா ஒன்று மலத்துவாரத்தின் வழியாக நோயாளியின் பெருங்குடலுக்குள் நுழைக்கப்படும். குடல் தொடர்பான நோய்களைக் கண்டுபிடிப்பதற்கான இச்சோதனை நிச்சயமாக ஓர் இனிமையான அனுபவம் அல்ல. நோயாளிகள் மிகக் குறைவான வலியை மட்டுமே உணரும் விதத்தில் இச்சோதனையை எப்படி

மேற்கொள்ளுவது என்பதை மருத்துவர்கள் தெரிந்து கொள்ள விரும்பினர். இச்சோதனையைத் துரிதப்படுத்தி, நோயாளிக்கு ஒரு குறுகிய நேரத்தில் அதிகத் துன்பத்தை விளைவிப்பதா அல்லது அதை மிக மெதுவாகவும் அதிக கவனமாகவும் செய்வதா?

இக்கேள்விக்கு விடையளிப்பதற்காக, கானமனும் ரீடில்மையரும் 154 நோயாளிகளிடம் ஆய்வு நடத்தினர். அந்நோயாளிகள் குடல் பரிசோதனைக்கு உட்படுத்தப்பட்டபோது, அவர்கள் அனுபவித்த வேதனையின் அளவை 0-10 என்ற அளவீட்டில் ஒரு-நிமிட இடைவெளிகளில் தெரிவிக்கும்படி அவ்விரு ஆராய்ச்சியாளர்களும் அந்நோயாளிகளிடம் கேட்டுக் கொண்டனர். '0' என்றால் வலி எதுவும் இல்லை என்றும், 10 என்றால் தாங்கிக் கொள்ளப்பட முடியாத வலி என்றும் அவர்களிடம் கூறப்பட்டது. அவர்களுடைய குடற்பரிசோதனை நிறைவடைந்த பிறகு, 0-10 என்ற அளவீட்டில் 'ஒட்டுமொத்த வேதனை அளவு' என்னவாக இருந்தது என்று அவர்களிடம் கேட்கப்பட்டது. அவர்கள் ஒவ்வொரு நிமிடமும் அனுபவித்த வலியைக் கூட்டி ஒரு விடையைச் சொல்லுவார்கள் என்றுதான் நாம் எதிர்பார்த்திருப்போம். அவர்களுடைய சோதனை எவ்வளவு அதிக நேரம் நீடித்ததோ, அவ்வளவு அதிக வலியை அவர்கள் அனுபவித்திருப்பர் என்பதால், ஒட்டுமொத்த வலி அளவு அதிகமாக இருக்கும் என்று நாம் கணக்கிட்டிருப்போம். ஆனால் உண்மையான முடிவுகள் வேறு விதமாக இருந்தன.

அந்தக் குளிர்ந்த நீர்ப் பரிசோதனையில் நிகழ்ந்ததைப்போலவே, ஒட்டுமொத்த வேதனை அளவு இங்கும் கால அளவைப் புறக்கணித்துவிட்டு, உச்சம்-முடிவு விதியைத்தான் பிரதிபலித்தது. ஒரு நோயாளியின் குடற்பரிசோதனை எட்டு நிமிடங்கள் நீடித்தது. அப்பரிசோதனையின் மிக மோசமான ஒரு கணத்தில் அவர் தன் வேதனை அளவை 8 எட்டு குறிப்பிட்டார், பரிசோதனையின் கடைசி நிமிடத்தில் 7 என்று தெரிவித்தார். பரிசோதனை முடிந்த பிறகு, அவர் அனுபவித்த ஒட்டுமொத்த வேதனையின் அளவை அவரிடம் கேட்டபோது, 7.5 என்று அவர் கூறினார். இன்னொரு நோயாளியின் பரிசோதனை இருபத்து நான்கு நிமிடங்கள் நீடித்தது. இம்முறையும் உச்ச வேதனை அளவு 8ஆக இருந்தது, ஆனால் பரிசோதனையின் கடைசி நிமிடத்தில் தன் வேதனையின் அளவை 1 என்று அந்நோயாளி குறிப்பிட்டார். அவருடைய ஒட்டுமொத்த வேதனை அளவு வெறும் 4.5 மட்டுமே இருந்தது. இவருடைய பரிசோதனை மற்றவர்களைவிட மூன்று மடங்கு அதிக நேரம் நீடித்ததபோதிலும், அதன் விளைவாக அவர் அனுபவித்தக் கூட்டு வேதனை அதிகமாக இருந்தபோதிலும், அது

அவருடைய நினைவை பாதிக்கவே இல்லை. விவரிக்கும் சுயமானது அனுபவங்களைக் கூட்டுவதில்லை, அது அவற்றை சராசரிப்படுத்த மட்டுமே செய்கிறது.

அப்படியானால், நோயாளிகள் எதை விரும்புகின்றனர்: சிறிது நேரம் மட்டுமே நீடிக்கின்ற, அதிக வலி ஏற்படுத்தக்கூடிய குடல் பரிசோதனையையா அல்லது நீண்ட நேரம் நீடிக்கின்ற, மிகுந்த கவனத்தோடு செய்யப்படுகின்ற குடற்பரிசோதனையையா? இக்கேள்விக்குத் தனியொரு விடை எதுவும் இல்லை. ஏனெனில், ஒரு நோயாளி இரண்டு வெவ்வேறு சுயங்களைக் கொண்டிருக்கிறார், அவை வெவ்வேறு விஷயங்களில் ஆர்வம் கொண்டுள்ளன. அனுபவித்து உணரும் சுயத்திடம் நீங்கள் கேட்டீர்கள் எனில், குறைவான நேரம் நீடிக்கின்ற ஒரு குடற்பரிசோதனையை அது தேர்ந்தெடுக்கக்கூடும். ஆனால், விவரிக்கும் சுயத்திடம் நீங்கள் கேட்டால், நீண்ட நேரம் நீடிக்கின்ற ஒரு குடற்பரிசோதனையை அது தேர்ந்தெடுக்கும். ஏனெனில், மிக மோசமான கணத்திற்கும் கடைசிக் கணத்திற்கும் இடையேயான சராசரி மட்டுமே அதன் நினைவில் இருக்கிறது. உண்மையில், விவரிக்கும் சுயத்தின் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, அந்த மருத்துவர் அப்பரிசோதனையின் முடிவில், மிகமிக லேசான வலி கூடுதலாக ஒருசில நிமிடங்கள் நீடிக்கும்படி பார்த்துக் கொள்ளுவது நல்லது. ஏனெனில், இது அந்த ஒட்டுமொத்த நினைவும் அந்நோயாளிக்கு அதிகத் துயரத்தைக் கொடுக்காதபடி பார்த்துக் கொள்ளும்.

குழந்தைகள் நல மருத்துவர்களும் விலங்குகள் நல மருத்துவர்களும் இந்தத் தந்திரத்தை நன்றாக அறிந்துள்ளனர். அவர்களில் பலர் தங்கள் மருத்துவமனைகளில் பாட்டில்கள் நிறைய இனிப்புகளை வைத்திருக்கின்றனர். வலி ஏற்படும் ஓர் ஊசியைச் செலுத்திய பிறகோ அல்லது இனிமையற்ற மருத்துவப் பரிசோதனை ஒன்றை மேற்கொண்ட பிறகோ, அவர்கள் அந்த இனிப்புகளில் ஒருசிலவற்றைக் குழந்தைகளுக்கு (அல்லது நாய்களுக்கு) கொடுக்கின்றனர். விவரிக்கும் சுயம், மருத்துவரிடம் போய்வந்ததை நினைவுகூர்ந்து பார்க்கும்போது, கடைசிப் பத்து நொடிகளின்போது கிடைத்த இன்பம் (இனிப்புகள்), அதற்கு முந்தைய பல நிமிடக் கவலையையும் வலியையும் போக்கிவிடுவதாக இருக்கிறது.

குழந்தைகள் நல மருத்துவர் இந்தத் தந்திரத்தைக் கண்டுபிடிப்பதற்குப் பல யுகங்களுக்கு முன்பாகவே பரிணாம வளர்ச்சி இதைக் கண்டுபிடித்துவிட்டது. பிரசவத்தின்போது பல பெண்கள் அனுபவிக்கின்ற தாங்க முடியாத வேதனைகளைக் கருத்தில்

கொள்ளும்போது, ஒரு முறை இந்த வேதனையை அனுபவித்த ஒரு பெண் மீண்டும் அதை அனுபவிக்க ஒருபோதும் ஒப்புக் கொள்ள மாட்டாள் என்று ஒருவர் நினைக்கக்கூடும். ஆனால், பிரசவத்தின் முடிவிலும் அடுத்த சில நாட்களிலும், அவளுடைய ஹார்மோன் அமைப்புமுறை, கார்ட்டிசால் மற்றும் பீட்டா-என்டார்பின்களைச் சுரக்கிறது. இந்த ஹார்மோன்கள் அப்பெண்ணின் வலியைக் குறைத்து அவளுக்கு ஒருவித நிவாரணத்தை வழங்குகின்றன. சில சமயங்களில் அவை அவளுக்கு உற்சாகத்தையும் கொடுக்கின்றன. மேலும், அவளுக்குத் தன்னுடைய குழந்தையின்மீது வளரும் அன்பும், நண்பர்கள், குடும்ப உறுப்பினர்கள், மதக் கோட்பாடுகள், தேசியப் பிரச்சாரங்கள் ஆகியவை கொடுக்கின்ற பாராட்டுக்களும் சேர்ந்து சதி செய்து, குழந்தைப் பிறப்பை ஒரு கொடுமையான வேதனை என்பதிலிருந்து ஒரு நேர்மறையான நினைவாக மாற்றுகின்றன.



படம் **40:** அன்னை மரியாள் குழந்தை ஏசுவை ஏந்தியிருக்கின்ற ஒரு பிரபலமான படம். பெரும்பாலான கலாச்சாரங்களில், பிரசவம் ஒரு வேதனையளிக்கும் அனுபவமாகச்

சித்தரிக்கப்படுவதற்கு பதிலாக ஓர் அற்புதமான அனுபவமாகச் சித்தரிக்கப்படுகிறது.

பிரசவத்தைப் பற்றிய நினைவு முக்கியமாக உச்சக் கணத்தையும் முடிவுக் கணத்தையும் மட்டுமே பிரதிபலித்ததாகவும், ஒட்டுமொத்தப் பிரசவ நேரம் எந்தத் தாக்கத்தையும் ஏற்படுத்தவில்லை என்றும் டெல் அவீவ் நகரில் உள்ள ரபின் மருத்துவ மையத்தில் நடத்தப்பட்ட ஓர் ஆய்வு வெளிப்படுத்தியது. இன்னோர் ஆய்வில், இரண்டு மாதங்களுக்கு முன்பு குழந்தை பெற்றிருந்த சுவீடன் நாட்டுப் பெண்கள் 2,428 பேரிடம், அவர்களுடைய பிரசவ நினைவுகளை நினைவுகூரும்படி கேட்கப்பட்டது. தங்களுடைய பிரசவ அனுபவம் நேர்மறையானதாக இருந்ததாகவோ அல்லது அதிக நேர்மறையானதாகவோ இருந்ததாகவோ 90 சதவீதப் பெண்கள் தெரிவித்தனர். அவர்கள் தங்கள் பிரசவ வேதனையை மறக்கவில்லை. இருப்பதிலேயே மிக மோசமான வலி அதுதான் என்று 28.5 சதவீதத்தினர் விவரித்தனர். ஆனாலும், அந்த அனுபவம் நேர்மறையானதாக இருந்ததாக அவர்கள் மதிப்பிடுவதிலிருந்து அது அவர்களைத் தடுக்கவில்லை. விவரிக்கும் சுயம் ஒரு கூர்மையான கத்தரிக்கோலையும் ஒரு கருப்பு மார்க்கர் பேனாவையும் கொண்டு நம்முடைய அனுபவங்களை அலசுகிறது. ஒருசில கொடூரக் கணங்களையாவது அது கத்தரித்துவிடுகிறது. பிறகு, எஞ்சியவற்றைக் கொண்டு ஒரு மகிழ்ச்சியான முடிவைக் கொண்ட ஒரு கதையை அது நம்முடைய நினைவுப் பெட்டகத்தில் பத்திரமாகச் சேமித்துவிடுகிறது.

நம்முடைய வாழ்க்கைத் துணைவர், தொழில்வாழ்க்கை, வீடு, விடுமுறைகள் போன்ற, நம்முடைய வாழ்வின் மிக முக்கியமான தேர்ந்தெடுப்புகளில் பெரும்பாலானவை, நம்முடைய விவரிக்கும் சுயத்தால்தான் மேற்கொள்ளப்படுகின்றன. இரண்டு வெவ்வேறு இடங்களுக்கு விடுமுறையில் செல்லுவதற்கான வாய்ப்பு உங்களுக்குக் கொடுக்கப்படுவதாக வைத்துக் கொள்ளுவோம். ஒன்று, விர்ஜினியா மாநிலத்தில் உள்ள, வரலாற்றுப் புகழ்மிக்கக் காலனித்துவ நகரமான ஜேம்ஸ்டவுன் நகருக்குச் சென்று, 1607ல் வட அமெரிக்காவில் தோற்றுவிக்கப்பட்ட முதல் ஆங்கிலேயக் குடியிருப்பை நீங்கள் காணலாம். அல்லது, நீங்கள் உங்களுக்கு விருப்பமான ஓர் இடத்திற்குச் சென்று, உங்கள் விருப்பம்போல என்ன வேண்டுமானாலும் செய்யலாம். ஆனால் இதில் ஒரு சிக்கல் இருக்கிறது. நீங்கள் உங்களுக்கு விருப்பமான இடத்தில் விடுமுறையைக் கழிப்பதைத் தேர்ந்தெடுத்தால், நீங்கள் அந்த விடுமுறை முடிந்து வீடு திரும்புவதற்காக உங்கள் விமானத்தில் ஏறுவதற்கு சற்று முன்பாக நீங்கள் ஒரு மாத்திரையை உட்கொள்ள வேண்டும். அந்த மாத்திரை,

அந்த விடுமுறையைப் பற்றிய உங்கள் நினைவுகள் அனைத்தையும் அழித்துவிடும். இப்போது நீங்கள் எந்த விடுமுறையைத் தேர்ந்தெடுப்பீர்கள்? பெரும்பாலான மக்கள் காலனித்துவ நகரமான ஜேம்ஸ்டவுனைத் தேர்ந்தெடுப்பர். ஏனெனில், விவரிக்கும் சுயம் கதைகள்மீது மட்டுமே அக்கறை கொண்டுள்ளது. ஒரு விடுமுறையில் மிக அற்புதமான அனுபவங்கள் கிடைத்தால்கூட, அவற்றை அதனால் நினைவில் வைத்துக் கொள்ள முடியாது என்றால், அவற்றில் அதற்குத் துளிகூட ஆர்வம் இருப்பதில்லை.

உண்மையைக் கூற வேண்டுமென்றால், அனுபவித்து உணரும் சுயமும் விவரிக்கும் சுயமும் முற்றிலும் இருவேறு அம்சங்கள் அல்ல, மாறாக, அவை ஒன்றோடொன்று நெருக்கமாகப் பின்னிப் பிணைந்துள்ளன. விவரிக்கும் சுயம் நம்முடைய அனுபவங்களைத் தன்னுடைய கதைகளுக்கான முக்கியக் கச்சாப் பொருட்களாகப் பயன்படுத்துகிறது. அனுபவித்து உணரும் சுயம் உண்மையிலேயே எதை உணருகிறதோ அதை இந்தக் கதைகள்தான் தீர்மானிக்கின்றன. நாம் ரம்ஜான் நோன்பு இருக்கும்போதும், ஒரு மருத்துவப் பரிசோதனைக்காக வயிற்றைப் பட்டினி போடும்போதும், நம்மிடம் பணம் இல்லாததால் நாம் சாப்பிடாமல் இருக்கும்போதும் பசியை வெவ்வேறு விதமாக நாம் அனுபவிக்கிறோம். நம்முடைய பசிக்கு விவரிக்கும் சுயம் கொடுக்கின்ற பல்வேறு அர்த்தங்கள் வெவ்வேறு உண்மையான அனுபவங்களை உருவாக்குகின்றன.

மேலும், விவரிக்கும் சுயம் தீட்டுகின்ற மிகச் சிறப்பான திட்டங்களைச் சீரழிக்கக்கூடிய அளவுக்கு அனுபவித்து உணரும் சுயம் வலிமையானதாக இருக்கிறது. எடுத்துக்காட்டாக, வரும் ஆண்டில் நான் ஓர் ஒழுங்கான உணவுமுறையைக் கடைபிடித்து, தினமும் உடற்பயிற்சி நிலையத்திற்குப் போகப் போவதாகப் புதுவருட நாளன்று ஒரு தீர்மானம் மேற்கொள்ளுவதாக வைத்துக் கொள்ளலாம். இப்படிப்பட்ட பிரம்மாண்டமான தீர்மானங்கள் முழுக்க முழுக்க விவரிக்கும் சுயத்தின் கட்டுப்பாட்டில் இருக்கின்றன. ஆனால் மறுவாரம் உடற்பயிற்சி நிலையத்திற்குப் போவதற்கான நேரம் வரும்போது, ஒட்டுமொத்த அதிகாரமும், அனுபவித்து உணரும் சுயத்தின் கைக்கு வந்துவிடுகிறது. எனவே, நான் உடற்பயிற்சி நிலையத்திற்குப் போக விரும்பவில்லை, மாறாக, ஒரு பீட்சாவை ஆர்டர் செய்துவிட்டு, என் வீட்டு வரவேற்பறையில் உள்ள சோபாவில் உட்கார்ந்து கொண்டு, தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைப் பார்க்கத் தொடங்குகிறேன்.

ஆனாலும், நம்மில் பெரும்பாலானோர் நம்முடைய விவரிக்கும் சுயத்துடன்தான் நம்மை அடையாளம் காணுகிறோம். 'நான்' என்று நாம்

சொல்லும்போது, நம் தலைக்குள் இருக்கின்ற கதையைத்தான் நாம் உணர்த்துகிறோமே அன்றி, நாம் அனுபவிக்கின்ற தொடர்ச்சியான அனுபவங்களை அல்ல. வாழ்வின் குழப்பங்களை எடுத்து, அவற்றிலிருந்து அர்த்தம் வாய்ந்த கதைகளைப் பின்னுகின்ற உள்ளார்ந்த அமைப்புமுறையுடன் நம்மை நாம் அடையாளம் காணுகிறோம். அக்கதையில் பொய்களும் குறைபாடுகளும் நிரம்பி வழிந்தாலும் சரி, இன்றைய கதை நேற்றைய கதையோடு முற்றிலும் முரண்பட்டு இருக்கும்படி அது மீண்டும் மீண்டும் அழித்து எழுதப்பட்டாலும் சரி, அது ஒரு பொருட்டல்ல. நாம் பிறந்த நேரத்திலிருந்து இறக்கும் நேரம்வரை (அதற்கு அப்பாலும்கூட), ஒருபோதும் மாறாத ஒரு தனி அடையாளம் நமக்கு இருக்கிறது என்ற உணர்வை நாம் எப்போதும் தக்க வைத்துக் கொள்ளுகிறோம் என்பதுதான் இங்கு முக்கியம். 'நான் ஒரு தனிநபர். இந்த ஒட்டுமொத்தப் பிரபஞ்சத்திற்கும் அர்த்தத்தைக் கொடுக்கின்ற ஒரு தெளிவான, மாறாத உட்குரல் எனக்கு இருக்கிறது,' என்ற சர்ச்சைக்குரிய தாராளவாத நம்பிக்கைக்கு இது வழி வகுக்கிறது.

## வாழ்வின் பொருள்

ஜார்ஜ் லூயி போர்ஜெஸின் 'எ பிராப்ளம்' கதையில் ஜொலிப்பது விவரிக்கும் சுயம்தான். ஸ்பானிய எழுத்தாளரான மிகெல் செவான்டெஸின் பிரபலமான நாவலில் வருகின்ற டான் கிக்சாட் என்ற கதாபாத்திரத்தைப் பற்றியது இக்கதை. டான் கிக்சாட் தனக்கென்று ஒரு கற்பனை உலகத்தை உருவாக்கிக் கொள்ளுகிறான். அதில் அவன் தன்னை ஒரு மாபெரும் வீரனாகவும், கொடிய அரக்கர்களை எதிர்த்துச் சண்டையிட்டு லேடி டுல்சினி டெல் டொபோசோவைத் தான் அவர்களிடமிருந்து காப்பாற்றுவது போலவும் கற்பனை செய்கிறான். யதார்த்தத்தில், அவன் அலான்ஸோ கிக்சானோ என்ற ஒரு முதிய கிராமவாசி. மேட்டுக்குடியைச் சேர்ந்த டுல்சினி, பக்கத்து கிராமம் ஒன்றைச் சேர்ந்த, இங்கிதமும் நாகரீகமும் அறியாத ஒரு பட்டிக்காட்டுப் பெண். அந்த கிராமத்தில் உள்ள காற்றாலைகள்தான் அக்கொடிய அரக்கர்கள். டான் கிக்சாட் இத்தகைய கற்பனைக் கதைகளில் கொண்டுள்ள தீவிர ஆர்வத்தால் உண்மையிலேயே யாரையேனும் தாக்கி அவரைக் கொலை செய்தால் என்ன நிகழும் என்று போர்ஜெஸ் சிந்திக்கிறார். மனிதச் சூழ்நிலை பற்றி போர்ஜெஸ் ஓர் அடிப்படைக் கேள்வியைக் கேட்கிறார்: "நம்முடைய விவரிக்கும் சுயம் புனைகின்ற கதைகள் நமக்கோ அல்லது நம்மைச் சூழ்ந்து இருப்பவர்களுக்கோ தீங்கு

விளைவித்தால் என்ன நிகழும்?” மூன்று முக்கிய சாத்தியக்கூறுகள் இருப்பதாக அவர் கூறுகிறார்.

பெரிதாக எதுவும் நிகழுவதில்லை என்பது முதல் சாத்தியக்கூறு. ஓர் உண்மையான மனிதனைக் கொல்லுவதால் டான் கிக்சாட் எந்தக் கவலையும் கொள்ள மாட்டான். உண்மையான கொலையைச் செய்வதற்கும், கற்பனையான காற்றாலை அரக்கர்களோடு சண்டையிடுவதற்கும் இடையேயான வேறுபாட்டை உணர்ந்து கொள்ள முடியாத அளவுக்கு அவனுடைய மாயைகள் அவனை முற்றிலுமாக ஆட்கொண்டு அவனால் சிந்திக்க முடியாதபடி செய்துவிடுகின்றன. இரண்டாவது சாத்தியக்கூறு இப்படி இருக்கலாம்: அவன் ஒரு நபரின் உயிரைப் பறித்தவுடன், அந்தக் கொடூரம் அவனுக்கு அதிர்ச்சியளித்து, அவனை அவனுடைய மாயைகளிலிருந்து வெளிக்கொணர்ந்துவிடலாம். தன் நாட்டிற்காக உயிரைக் கொடுப்பது நல்லது என்று நம்பி முதன்முறையாக ஒரு போரில் பங்கு கொள்ளுகின்ற ஓர் இளைஞன், அந்தப் போரின் யதார்த்தங்களால் தன் மாயைகள் முழுவதுமாக நீங்கப் பெறுவதைப் போன்றது அது.

ஆனால் மூன்றாவது சாத்தியக்கூறு அதிகச் சிக்கலானது, மிகவும் ஆழமானது. டான் கிக்சாட் வெறுமனே தன்னுடைய கற்பனையான அரக்கர்களோடு சண்டையிடும்வரை, அவன் வெறுமனே பாசாங்கு செய்கிறான், அவ்வளவுதான். ஆனால், அவன் உண்மையிலேயே ஒருவரைக் கொல்லும்போது, அவன் தன்னுடைய கற்பனைகளை உடும்புபோலப் பிடித்துக் கொள்ளுவான். ஏனெனில், அவை மட்டுமே அவனுடைய கொடூரமான பாதகச் செயலுக்கு அர்த்தத்தைக் கொடுக்கின்றன. இதில் முரணான விஷயம் என்னவென்றால், ஒரு கற்பனைக் கதைக்காக நாம் எவ்வளவு அதிகமான தியாகங்களைச் செய்கிறோமோ, நாம் அவ்வளவு பிடிவாதமாக அக்கதைகளைப் பற்றிக் கொள்ளுகிறோம். ஏனெனில், நம்முடைய இந்தத் தியாகங்களுக்கும் நாம் விளைவித்துள்ள துன்பங்களுக்கும் நாம் அர்த்தத்தைக் கொடுக்கத் துடிக்கிறோம்.

அரசியலில் இது ‘நம்முடைய வீரர்களின் மரணம் வீண் போகவில்லை’ நோய்க்குறி என்று அறியப்படுகிறது. 1915ம் ஆண்டில், இத்தாலி, நேசப் படைகளுக்கு ஆதரவாக முதலாம் உலகப் போருக்குள் நுழைந்தது. ஆஸ்திரிய-ஹங்கேரியப் பேரரசு ‘நியாயமற்ற முறையில்’ கைப்பற்றி வைத்திருந்த டிரென்டோ, டிரியஸ்ட் ஆகிய ‘இத்தாலிய’ப் பகுதிகளை அதனிடமிருந்து ‘மீட்பது’தான் தன்னுடைய லட்சியம் என்று இத்தாலி பிரகடனம் செய்தது. இது பற்றி இத்தாலிய அரசியல்வாதிகள் தங்களுடைய நாடாளுமன்றத்தில் அனல் பறக்கப் பேசினர். தாங்கள்

வரலாற்றைச் சரி செய்யவிருந்ததாகவும், பண்டைய ரோமின் புகழை மீட்டெடுக்கவிருந்ததாகவும் மக்களுக்கு அவர்கள் வாக்குறுதி அளித்தனர். புதிதாக ராணுவத்தில் சேர்ந்த ஆயிரக்கணக்கான இத்தாலிய இளைஞர்கள், “டிரென்டோவும் டிரியஸ்ட்டும் நம்முடையதே!” என்று கோஷமிட்டபடி போரிடச் சென்றனர். தாங்கள் மிக எளிதாக அந்நகரங்களை மீட்டுவிடுவோம் என்று அவர்கள் நினைத்தனர்.

ஆனால் யதார்த்தம் வேறு மாதிரி அமைந்தது. ஆஸ்திரிய-ஹங்கேரியப் படை இஸோன்ஸோ ஆற்றையொட்டித் தம்முடைய வீரர்களை ஒரு வலிமையான அரண்போல நிறுத்தி வைத்திருந்தது. இத்தாலியர்கள் அவர்களோடு பதினோரு கொடூரமான சண்டைகளில் ஈடுபட்டபோதிலும், அதிகபட்சமாக ஒருசில கிலோமீட்டர்வரை மட்டுமே அவர்களால் முன்னேற முடிந்தது. அதைத் தாண்டி அவர்களால் உள்ளே நுழைய முடியவில்லை. முதல் போரில் அவர்கள் 15,000 வீரர்களை இழந்தனர். இரண்டாவது போரில் 40,000 பேர் மடிந்தனர். மூன்றாவது போரில் 60,000 வீரர்கள் கொல்லப்பட்டனர். இது இன்னும் இரண்டு ஆண்டுகள் தொடர்ந்தது. மொத்தம் பதினோரு போர்கள் நிகழ்ந்தன. இறுதியில், ஆஸ்திரிய வீரர்கள் எதிர்த்தாக்குதல் நடத்தினர். ‘காப்பரெட்டோ போர்’ என்று அழைக்கப்பட்டப் பன்னிரண்டாவது போரில், ஆஸ்திரியர்கள் இத்தாலியர்களை மிக மோசமாகத் தோற்கடித்து, கிட்டத்தட்ட வெனிஸ் நகர எல்லைவரை அவர்களைத் துரத்தியடித்தனர். ஒரு புகழ்மிக்க சாகச முயற்சி இறுதியில் ஒரு ரத்தக்குளியலாக மாறியது. அப்போரின் முடிவில், கிட்டத்தட்ட 70,000 இத்தாலியர்கள் கொல்லப்பட்டிருந்தனர், பத்து லட்சத்திற்கும் அதிகமானோர் காயமுற்றிருந்தனர்.

முதல் இஸோன்ஸோ யுத்தத்தில் தோல்வியுற்றப் பிறகு, இத்தாலிய அரசியல்வாதிகளின் முன்னால் இரண்டு தேர்ந்தெடுப்புகள் மட்டுமே இருந்தன. ஒன்று, அவர்கள் தங்கள் தவறை ஒப்புக் கொண்டு, ஒரு சமாதான உடன்படிக்கையில் கையெழுத்திட முன்வந்திருக்கலாம். ஆஸ்திரிய-ஹங்கேரிக்கு இத்தாலியோடு எந்தப் பிரச்சனையும் இருக்கவில்லை என்பதால் அப்பேரரசு இத்தாலியோடு சமாதானம் செய்து கொள்ள மகிழ்ச்சியாக ஒப்புக் கொண்டிருந்திருக்கும். ஏனெனில், தான் பிழைத்திருப்பதற்கு, அதிக வலிமை கொண்ட ரஷ்யர்களை எதிர்த்துச் சண்டையிடுவதில் அது மும்முரமாக இருந்தது. ஆனாலும், இத்தாலிய அரசியல்வாதிகள், போரில் மாண்ட 15,000 இத்தாலிய வீரர்களுடைய பெற்றோரிடமும் மனைவியரிடமும் குழந்தைகளிடமும் போய், “மன்னிக்க வேண்டும், ஒரு தவறு நிகழ்ந்துள்ளது. நீங்கள்

இதைப் பெரிதாக எடுத்துக் கொள்ள மாட்டீர்கள் என்று நாங்கள் நம்புகிறோம். உங்களுடைய ஜியோவனி வீணாக இறந்துவிட்டார். அதேபோல, உங்களுடைய மார்க்கோவும் இறந்துவிட்டார்," என்று கூறுவது எப்படிச் சாத்தியப்படும்? அவர்கள் இதற்கு பதிலாக, "ஜியோவனியும் மார்க்கோவும் மாவீரர்கள்! டிரியஸ்ட் நகரம் மீண்டும் இத்தாலியினுடையதாக ஆவதற்காக அவர்கள் தம் இன்னுயிர்களைத் தியாகம் செய்துள்ளனர். அவர்களுடைய இறப்பு வீணாகவில்லை என்பதை நாங்கள் உறுதி செய்வோம். வெற்றி நம்முடையதாக ஆகும்வரை நாம் தொடர்ந்து சண்டையிடுவோம்!" என்று கூறலாம். அரசியல்வாதிகள் இந்த இரண்டாவது தேர்ந்தெடுப்பை விரும்பியதில் வியப்பேதும் இல்லை. எனவே, அவர்கள் ஓர் இரண்டாவது போரைத் துவக்கி அதில் சண்டையிட்டு, இன்னுமொரு 40,000 வீரர்களை இழந்தனர். தொடர்ந்து சண்டையிடுவது சிறந்தது என்று அந்த அரசியல்வாதிகள் மீண்டும் தீர்மானித்தனர். 'நம்முடைய வீரர்களின் மரணம் வீண் போகவில்லை' என்று அவர்கள் அதற்குக் காரணம் கற்பித்தனர்.



படம் **41:** இஸோன்ஸோ போர்களில் பலியானவர்களில் ஒருசிலர்**.** அவர்களுடைய தியாகம் வீணானதா**?**

அரசியல்வாதிகளை மட்டுமே நம்மால் குறை கூற முடியாது. பொதுமக்களும் அந்தப் போருக்குத் தொடர்ந்து ஆதரவு கொடுத்துக் கொண்டே இருந்தனர். போர் முடிந்த பிறகும் தான் கேட்டப் பகுதிகள் இத்தாலிக்குக் கிடைக்காமல் போனபோது, இத்தாலிய ஜனநாயகம், இத்தாலியர்கள் செய்திருந்த அனைத்துத் தியாகங்களுக்கும் முறையான இழப்பீட்டைப் பெற்றுத் தருவதாக வாக்குறுதியளித்த பெனிட்டோ முசோலினியையும் அவருடைய பாசிசவாதிகளையும் தலைமைப் பொறுப்பில் உட்கார வைத்தது. ஓர் அரசியல்வாதி ஒரு பெற்றோரிடம் சென்று, எந்தவொரு நியாயமான காரணமும் இன்றி அவர்களுடைய

மகன் இறந்துவிட்டதாகக் கூறுவது கடினமானதுதான் என்றாலும், அந்தப் பெற்றோர் அதைத் தங்களுக்குத் தாங்களே கூறிக் கொள்ளுவது அதைவிட அதிக வேதனையளிக்கும் ஒரு விஷயமாகும். போரில் காயப்பட்டவர்களுக்கு அது அதைவிட அதிகக் கடினமானதாக இருக்கிறது. தன் கால்கள் இரண்டையும் இழந்துள்ள ஒரு வீரர், தனக்குத் தானே, "சுயநலவாத அரசியல்வாதிகளை நம்பும் அளவுக்கு நான் முட்டாளாக இருந்ததால் நான் என் கால்களை இழந்துவிட்டேன்," என்று கூறிக் கொள்ளுவதைவிட, "இத்தாலிய நாட்டின் பெருமைக்காக நான் என் கால்களை இழந்தேன்," என்று கூறவே விரும்புவார். ஏனெனில், கற்பனையுடன் வாழுவது அதிக சுலபமானதாக இருக்கிறது. அந்தக் கட்டுக்கதை அவருடைய துன்பத்திற்கு அர்த்தத்தைக் கொடுக்கிறது.

இக்கொள்கையை ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பாக மதகுருமார்கள் கண்டுபிடித்தனர். கடவுள், நாடு போன்ற கற்பனையான அம்சங்களில் மக்களுக்கு நம்பிக்கை ஏற்படும்படி செய்ய நீங்கள் விரும்பினால், மதிப்பு வாய்ந்த ஏதோ ஒன்றை அவர்கள் தியாகம் செய்வதை நீங்கள் உறுதி செய்ய வேண்டும். அந்தத் தியாகம் எவ்வளவு அதிக வேதனையூட்டுவதாக இருக்கிறதோ, அந்தக் கற்பனையான அம்சம் உண்மையிலேயே நடைமுறையில் இருப்பதாக அவர்கள் அவ்வளவு அதிகமாக நம்புவர். விலைமதிப்புக் கொண்ட ஓர் எருதை ஜூபிடர் கடவுளுக்குப் பலி கொடுக்கின்ற ஓர் ஏழை விவசாயி, ஜூபிடர் உண்மையிலேயே இருப்பதாக உறுதியாக நம்புவான். இல்லாவிட்டால், அவனால் எப்படித் தன்னுடைய முட்டாள்தனத்தை நியாயப்படுத்த முடியும்? அவன் இன்னோர் எருதைப் பலி கொடுப்பான், பிறகு இன்னொன்றைப் பலி கொடுப்பான். இது தொடர்ந்து கொண்டே இருக்கும். ஏனெனில், முன்பு தான் பலி கொடுத்த அத்தனை எருதுகளும் வீணாகிவிட்டதாக அவன் ஒப்புக் கொள்ள வேண்டியிருக்காதல்லவா? இதே காரணத்திற்காகத்தான், இத்தாலியின் பெருமைக்காக நான் ஒரு குழந்தையைத் தியாகம் செய்திருந்தாலோ, அல்லது கம்யூனிசவாதப் புரட்சிக்காக என்னுடைய கால்களை இழந்திருந்தாலோ, நான் ஓர் உற்சாகமான இத்தாலிய தேசியவாதியாகவோ அல்லது ஆர்வத்துடிப்புக் கொண்ட ஒரு கம்யூனிசவாதியகவோ மாறுவதற்கு அது போதுமானதாக இருந்திருக்கும். ஏனெனில், இத்தாலிய தேசியவாதக் கட்டுக்கதைகளும் கம்யூனிசவாதப் பிரச்சாரங்களும் ஒரு பொய் என்றால், என்னுடைய குழந்தையின் மரணமோ அல்லது என் சொந்த ஊனமோ முற்றிலும் அர்த்தமற்றது என்று ஒப்புக் கொள்ள வேண்டிய கட்டாயத்திற்கு நான் ஆளாவேன். அப்படிப்பட்ட ஒரு விஷயத்தை

ஒப்புக் கொள்ளுவதற்கான துணிச்சல் வெகுசிலரிடம் மட்டுமே இருக்கிறது.

பொருளாதாரத் தளத்திலும் இதே தருக்கவாதம் செயல்படுகிறது. 1999ல் ஸ்காட்லாந்து அரசு ஒரு புதிய நாடாளுமன்றக் கட்டடத்தை நிர்மாணிக்கத் தீர்மானித்தது. அதற்கான அசல் திட்டப்படி, அது இரண்டு ஆண்டுகளில் 4 கோடி பவுண்டு செலவில் கட்டி முடிக்கப்படும் என்று எதிர்பார்க்கப்பட்டது. அந்தக் கட்டுமானப் பணியின்போது முளைத்த எதிர்பாராத பிரச்சனைகளையும் செலவுகளையும் எதிர்கொள்ள வேண்டியிருந்த ஒவ்வொரு முறையும், சம்பந்தப்பட்ட ஒப்பந்தக்காரர்கள், ஸ்காட்லாந்து அரசிடம் சென்று தங்களுக்கு அதிகப் பணமும் அதிக நேரமும் வேண்டும் என்று கேட்டனர். இவ்வாறு நிகழ்ந்த ஒவ்வொரு முறையும், ஸ்காட்லாந்து அரசு தனக்குத் தானே இவ்வாறு கூறிக் கொண்டது: "நாம் ஏற்கனவே லட்சக்கணக்கில் இதில் கொட்டிவிட்டோம். இப்போது நாம் இந்தப் பணித்திட்டத்தைப் பாதியில் நிறுத்தினால், அரைகுறையான ஒரு கட்டடம் அங்கு நிற்கும். நாம் முற்றிலும் மரியாதை இழந்துவிடுவோம். எனவே, இன்னொரு 4 கோடி பவுண்டு பணத்தை நாம் அதற்கு வழங்கலாம்." பல மாதங்களுக்குப் பிறகு இதே விஷயம் மீண்டும் நிகழ்ந்தது. இப்போது அக்கட்டடத்தை முழுமையாகக் கட்டி முடிப்பது குறித்து அவர்கள் அதிக அழுத்தத்திற்கு ஆளாயினர். ஒருசில மாதங்களுக்குப் பிறகு அக்கதை மீண்டும் நிகழ்ந்தது. இறுதியில், அவர்கள் துவக்கத்தில் மதிப்பிட்டதைவிடப் பத்து மடங்கு அதிகச் செலவில் அந்தக் கட்டடத்தைக் கட்டி முடித்தனர்.



படம் **42:** ஸ்காட்லாந்து நாடாளுமன்றக் கட்டடம். நம்முடைய பணம் வீணாகவில்லை.

இத்தகைய ஒரு பொறிக்குள் சிக்கிக் கொள்ளுவது அரசாங்கங்கள் மட்டுமல்ல. வியாபாரப் பெருநிறுவனங்களும் அடிக்கடித் தங்களுடைய பணத்தைத் தோல்வியடைந்துள்ள பணித்திட்டங்களுக்குள் கொட்டுகின்றன; தனிநபர்களோ, மனத்தளவில் என்றோ முறிந்து போய்விட்டத் திருமண உறவுகளையும் முன்னேற்றத்திற்கு வாய்ப்பில்லாத வேலைகளையும் இன்னும் உடும்புபோலப் பிடித்துக் கொண்டிருக்கின்றனர். கடந்தகாலத்தில் நாம் அனுபவித்தத் துன்பங்கள் அர்த்தமற்றவை என்று ஒப்புக் கொள்ள வேண்டிய கட்டாயத்திற்கு நாம் ஆளாவதைத் தவிர்க்கும் பொருட்டு, நம்முடைய விவரிக்கும் சுயம், எதிர்காலத்தில் நாம் தொடர்ந்து துன்புறுவதற்குத் தயாராக இருக்கிறது. இறுதியாக, நாம் நம்முடைய கடந்தகாலத் தவறுகளை வெளிப்படையாக ஒப்புக் கொள்ள விரும்பினால், அந்தத் தவறுகளுக்கு ஏதேனும் அர்த்தத்தைக் கொடுக்கக்கூடிய ஏதோ ஒரு சுவாரசியமான திருப்பத்தை, நம்முடைய விவரிக்கும் சுயம், நம்முடைய கதைக்கருவில் கண்டுபிடித்தாக வேண்டும். எடுத்துக்காட்டாக, இப்போது ஓர் அமைதிவாதியாக மாறியுள்ள முன்னாள் ராணுவ வீரர் ஒருவர் தனக்குத் தானே, “ஆமாம், ஒரு தவறின் காரணமாக நான் என் கால்களை இழந்திருக்கிறேன். ஆனால் அதே தவறுதான், போர் என்பது ஒரு நரகம் என்பதை எனக்குப் புரிய வைத்துள்ளது. இன்றிலிருந்து, அமைதிக்காகப் போராடுவதற்காக நான் என் வாழ்க்கையை அர்ப்பணிக்கப் போகிறேன். எனவே, என்னுடைய ஊனத்திற்கு ஏதோ ஒரு நேர்மறையான அர்த்தம் இருக்கத்தான் செய்கிறது. ஏனெனில், அமைதியின் மதிப்பை அது எனக்குக் கற்றுக் கொடுத்துள்ளது,” என்று கூறக்கூடும்.

அப்படியானால், நாடுகளையும் கடவுளரையும் பணத்தையும் போலவே இந்த சுயமும் ஒரு கற்பனைக் கதைதான் என்பதை நாம் கண்கூடாகப் பார்க்கிறோம். நம் ஒவ்வொருவரிடமும் உள்ள மிக நேர்த்தியான அமைப்புமுறை ஒன்று நம்முடைய அனுபவங்களில் பெரும்பாலானவற்றைத் தூக்கி வீசிவிட்டு, ஒருசிலவற்றை மட்டும் தேர்ந்தெடுத்துக் கொண்டு, நாம் பார்த்துள்ள திரைப்படங்களிலிருந்தும், நாம் படித்துள்ள புதினங்களிலிருந்தும், நாம் கேட்டுள்ள உரைகளிலிருந்தும், நாம் பொக்கிஷமாகக் கருதுகின்ற நம்முடைய கனவுகளிலிருந்தும் சில விஷயங்களை எடுத்து அந்தத் தேர்ந்தெடுப்புகளோடு கலந்து, நாம் யார் என்பதையும், நாம் எங்கிருந்து வந்தோம் என்பதையும், நாம் எங்கே போய்க் கொண்டிருக்கிறோம் என்பதையும் பற்றிய ஒரு கதையைப் புனைகிறது. இக்கதை, நான் எதை நேசிக்க வேண்டும் என்பதையும், யாரை வெறுக்க வேண்டும்

என்பதையும், நான் என்னைக் கொண்டு என்ன செய்ய வேண்டும் என்பதையும் எனக்குக் கூறுகிறது. நான் என் வாழ்க்கையைத் தியாகம் செய்ய வேண்டியது அவசியம் என்பதுபோல அக்கதை அமைக்கப்பட்டிருந்தால், நான் அவ்வாறு செய்ய அது என்னைத் தூண்டவும்கூடும். நம் ஒவ்வொருவருடைய கதையும் வெவ்வேறு வகையைச் சேர்ந்ததாக இருக்கிறது. சிலர் ஒரு துயர வாழ்க்கையை வாழுகின்றனர், மற்றவர்கள் என்றென்றும் முடிவுறாத மதச் சிக்கலுக்குள் சிக்கிக் கொண்டு அலைக்கழிக்கப்படுகின்றனர், சிலர் தங்கள் வாழ்க்கையைச் சண்டைக் காட்சிகள் நிறைந்த ஒரு படம்போலக் கருதி அதற்கேற்ப வாழுகின்றனர். வாழ்க்கையை ஒரு நகைச்சுவை நாடகம்போல வாழுகின்றவர்கள் அரிதாகவே இருக்கின்றனர். ஆனால் இறுதியில், இவை எல்லாமே கதைகள்தாம்.

அப்படியானால், வாழ்வின் அர்த்தம் என்ன? முன்கூட்டியே தயாரிக்கப்பட்ட ஓர் அர்த்தத்தை வெளியிலிருந்து ஏதோ ஒன்று நமக்குத் தர வேண்டும் என்று நாம் எதிர்பார்க்கக்கூடாது; மாறாக, ஒவ்வொரு வாக்காளரும் வாடிக்கையாளரும் பார்வையாளரும், தேர்ந்தெடுப்பதற்கான தங்கள் சுதந்திரத்தைப் பயன்படுத்தி, தங்கள் வாழ்க்கைக்கு மட்டுமல்லாமல் இந்த ஒட்டுமொத்தப் பிரபஞ்சத்திற்கும் அர்த்தத்தை உருவாக்க வேண்டும் என்று தாராளவாதம் கூறுகிறது.

ஆனால் உயிரியல் வேறு விதமாக வாதிட்டு தாராளவாதத்தை பலவீனப்படுத்துகிறது. உயிரியலின் வாதத்தின்படி, ஒரு தனிநபர் என்பவர் சில உயிர்வேதிப் படிமுறைத் தீர்வுகள் சேர்ந்து புனைகின்ற ஒரு கற்பனைக் கதை மட்டுமே. ஒவ்வொரு கணமும் மூளையின் உயிர்வேதி இயங்குமுறைகள் ஓர் அனுபவத்தை உருவாக்குகின்றன, அவை ஒரு கணத்தில் மறைந்துவிடுகின்றன. பிறகு அடுத்தடுத்துப் பல அனுபவங்கள் மின்னல்போலப் பளிச்சிட்டுவிட்டு உடனடியாக மறைந்துவிடுகின்றன. இந்தக் கணநேர அனுபவங்கள் அனைத்தும் இணைந்து ஒரு முழுமையான அனுபவமாக உருவெடுப்பதில்லை. விவரிக்கும் சுயம் இக்குழப்பத்திற்கு ஓர் ஒழுங்கைக் கொண்டுவருவதற்காக முடிவற்ற ஒரு கதையைப் புனைகிறது. அக்கதையில் ஒவ்வோர் அனுபவத்திற்கும் ஓர் இடம் இருக்கிறது. எனவே, ஒவ்வோர் அனுபவத்திற்கும் ஒரு நிரந்தரமான அர்த்தம் கிடைக்கிறது. இது எவ்வளவு நம்பத்தக்கதாகவும் எவ்வளவு வசீகரமானதாகவும் இருந்தாலும், இது ஒரு கற்பனைக் கதைதான். கடவுளும் சொர்க்கமும் தங்கள் வாழ்க்கைக்கு அர்த்தத்தைக் கொடுத்ததாக இடைக்காலச் சிலுவைப் போராளிகள் நம்பினர்; தேர்ந்தெடுப்பதற்கு ஒவ்வொருவருக்கும் இருக்கின்ற சுதந்திரம்தான்

வாழ்க்கைக்கு அர்த்தத்தைக் கொடுப்பதாக நவீன தாராளவாதிகள் நம்புகின்றனர். இவர்கள் எல்லோருமே சம அளவு மாயையில் சிக்கியுள்ளனர்.

தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரம், தனிநபர் ஆகியவை உண்மையிலேயே இருக்கின்றனவா என்ற சந்தேகம் ஒன்றும் புதிதல்ல. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு, இந்தியாவிலும் சீனாவிலும் கிரேக்க நாட்டிலும் வாழ்ந்த சிந்தனையாளர்கள், 'சுயம் என்பது ஒரு மாயை' என்று வாதிட்டனர். இப்படிப்பட்ட சந்தேகங்கள் பொருளாதாரத்தின்மீதும் அரசியலின்மீதும் அன்றாட வாழ்வின்மீதும் ஒரு நடைமுறைத் தாக்கம் ஏற்படுத்தினாலொழிய, அவை வரலாற்றை உண்மையில் அவ்வளவாக மாற்றுவதில்லை. உளவியல்ரீதியான அழுத்தத்தை உருவாக்கிக் கொள்ளுவதில் மனிதர்கள் கைதேர்ந்தவர்கள். நாம் ஒரு பரிசோதனைக்கூடத்தில் ஒரு விஷயத்தை நம்புகிறோம்; நீதிமன்றத்திலோ அல்லது நாடாளுமன்றத்திலோ முற்றிலுமாக வேறொரு விஷயத்தை நம்புகிறோம். டார்வின் தன்னுடைய 'ஆன் த ஆரிஜின் ஆஃப் ஸ்பீசீஸ்' நூலை வெளியிட்ட நாளன்று எப்படிக் கிறித்தவ மதம் மறைந்துவிடவில்லையோ, அதேபோல, சுதந்திரமான தனிநபர்கள் என்று யாரும் கிடையாது என்ற முடிவுக்கு அறிவியலறிஞர்கள் வந்துவிட்டனர் என்பதற்காக தாராளவாதம் காணாமல் போய்விடாது.

உண்மையில், ரிச்சர்டு டாக்கின்ஸ், ஸ்டீவன் பிங்க்கர் உட்பட, புதிய அறிவியற்பூர்வமான உலகக் கண்ணோட்டத்தின் முன்னோடிகள், தாராளவாதத்தைக் கைவிட மறுக்கின்றனர். தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரத்தையும் சுயத்தையும் பற்றி அணுவணுவாக ஆய்வு செய்து நூற்றுக்கணக்கான பக்கங்களைக் கொண்ட அறிவுபூர்வமான ஆய்வுக் கட்டுரைகளை அவர்கள் எழுதிய பிறகு, குட்டிகரணம் போட்டதுபோல அவர்கள் தங்களுடைய கொள்கைகளைத் தலைகீழாக மாற்றிக் கொண்டனர். அது அவர்களை நேரடியாகப் பதினெட்டாம் நூற்றாண்டுக்குள் கொண்டு தள்ளியது. பரிணாம உயிரியலும் மூளை அறிவியலும் நிகழ்த்திய அற்புதமான கண்டுபிடிப்புகள் எதுவும் லாக், ரூஸோ, ஜெஃபர்சன் ஆகியோருடைய அறநெறிசார் கருத்துக்கள்மீதும் அரசியல் கருத்துக்கள்மீதும் எந்தத் தாக்கமும் ஏற்படுத்தவில்லை என்பதுபோல இருக்கிறது இது.

ஆனாலும், மதக் கொள்கைகளுடன் முரண்பட்ட அறிவியல் உள்நோக்குகள் அன்றாடத் தொழில்நுட்பமாகவும் வழக்கமான நடவடிக்கைகளாகவும் பொருளாதாரக் கட்டமைப்புகளாகவும் உருமாற்றப்படும்போது, இந்த இரட்டை விளையாட்டைத் தொடர்ந்து

தாக்குப்பிடிப்பது மேன்மேலும் அதிகக் கடினமானதாக ஆகிவிடும். புதிய மத நம்பிக்கைகளையும் அரசியல் அமைப்புகளையும் கொண்ட ஒரு புத்தம்புதிய அமைப்புமுறை நமக்கோ அல்லது நம்முடைய வாரிசுகளுக்கோ தேவைப்படக்கூடும். இருபத்தோராம் நூற்றாண்டின் துவக்கத்தில், 'சுதந்திரமான தனிநபர்கள் என்று யாரும் கிடையாது' என்ற தத்துவார்த்த யோசனை தாராளவாதத்திற்கு அச்சுறுத்தலாக இல்லை, மாறாக, திட்டவட்டமான தொழில்நுட்பங்கள்தான் மிகப் பெரிய அச்சுறுத்தலாக இருக்கின்றன. தனிமனிதர்களுடைய தேர்ந்தெடுப்பு சுதந்திரத்திற்கு எள்ளளவும் இடமளிக்காத, பயனுள்ள கருவிகளையும் இயந்திரங்களையும் கட்டமைப்புகளையும் உள்ளடக்கிய ஒரு காட்டாற்று வெள்ளத்தை நாம் எதிர்கொள்ளவிருக்கிறோம். இந்த வெள்ளத்தில் ஜனநாயகமும் கட்டுப்பாடற்றச் சந்தையும் மனித உரிமைகளும் தப்பிப் பிழைக்குமா?

## அத்தியாயம் 9

# மாபெரும் பிணைப்பின் முறிவு

தாராளவாதத் தத்துவத்தை வலுவிழக்கச் செய்கின்ற சமீபத்திய அறிவியல் கண்டுபிடிப்புகளைப் பற்றி முந்தைய பக்கங்கள் மிகச் சுருக்கமாக எடுத்துரைத்தன. இக்கண்டுபிடிப்புகளின் நடைமுறைத் தாக்கங்களை ஆய்வு செய்வதற்கான நேரம் வந்துவிட்டது. ஒவ்வொரு மனிதனும் தனித்துவமான முறையில் மதிப்பு வாய்ந்த ஒரு தனிநபர் என்றும், அவனுடைய சுதந்திரமான தேர்ந்தெடுப்புகள்தான் அதிகாரத்திற்கான உச்சகட்ட மூலாதாரம் என்றும் தாராளவாதிகள் நம்புவதால், அரசுக் கட்டுப்பாடற்றச் சந்தைகளையும் ஜனநாயகரீதியான தேர்தல்களையும் அவர்கள் தூக்கிப் பிடிக்கின்றனர். இருபத்தோராம் நூற்றாண்டில் உருவாகவிருக்கும் மூன்று 'நடைமுறை' யதார்த்தங்கள் இந்த நம்பிக்கையை வழக்கொழிந்து போகச் செய்கின்றன:

1. மனிதர்கள் பொருளாதாரரீதியாகவும் ராணுவரீதியாகவும் பயனற்றவர்களாக ஆவர். எனவே, பொருளாதார அமைப்புமுறையும் அரசியல் அமைப்புமுறையும் அவர்கள் அதிக மதிப்பு வாய்ந்தவர்கள் என்று கருதுவதை நிறுத்திவிடும்.
2. மனிதர்கள் கூட்டாக மதிப்பு வாய்ந்தவர்கள் என்றும், ஆனால் தனித்துவமான தனிநபர்கள் மதிப்பற்றவர்கள் என்றும் இந்த அமைப்புமுறைகள் கருதும்.
3. இந்த அமைப்புமுறைகள் சில தனித்துவமான தனிநபர்களிடம் மதிப்பைக் காணும், ஆனால் அவர்கள் சாதாரண மக்களாக இல்லாமல், மேம்படுத்தப்பட்ட அதிமனிதர்களை உள்ளடக்கிய ஒரு புதிய மேட்டுக்குடிப் பிரிவைச் சேர்ந்தவர்களாக இருப்பர்.

இந்த மூன்று அச்சுறுத்தல்களையும் நாம் விரிவாக ஆய்வு செய்யலாம். தொழில்நுட்ப வளர்ச்சி மனிதர்களைப் பொருளாதாரரீதியாகவும் ராணுவரீதியாகவும் பயனற்றவர்களாக ஆக்கிவிடும் என்ற முதல் அச்சுறுத்தல், தாராளவாதம் ஒரு தத்துவார்த்த நிலையில் தவறானதாக இருக்கிறது என்று நிரூபிக்காது, ஆனால் யதார்த்தத்தில், ஜனநாயகமும் கட்டுப்பாடற்றச் சந்தைகளும் பிற தாராளவாத அமைப்புகளும் இந்த அச்சுறுத்தலைக் கடந்து எப்படிப் பிழைத்திருக்கும் என்பதைப் பற்றி நினைத்துப் பார்ப்பது கடினமானதாக இருக்கிறது. என்ன இருந்தாலும், தாராளவாதத்தின்

தத்துவார்த்த விவாதங்கள்தான் பெரிதும் ஏற்றுக் கொள்ளத்தக்கவையாக இருந்தன என்ற காரணத்தாலேயே தாராளவாதம் ஓர் ஆதிக்கக் கொள்கையாக ஆகிவிடல்லை அல்லவா? மாறாக, ஒவ்வொரு மனிதனும் மதிப்பு வாய்ந்தவன் என்று கருதுவதில் அரசியல்ரீதியாகவும் பொருளாதாரரீதியாகவும் ராணுவரீதியாகவும் அபரிமிதமான அர்த்தம் இருந்ததால்தான் தாராளவாதம் வெற்றி பெற்றது. நவீனத் தொழில்நுட்பங்களால் உருவாக்கப்பட்டப் போர்த்தளவாடங்களை உள்ளடக்கிய போர்கள் நிகழ்ந்த போர்களங்களிலும், நவீனப் பொருளாதாரத்திற்குத் தீனி போடுவதற்காக பிரம்மாண்டமான அளவில் பொருட்கள் உற்பத்தி செய்யப்பட்டுக் கொண்டிருந்த தொழிற்சாலைகளிலும் தனிநபர்கள் ஒவ்வொருவரும் இன்றியமையாதவர்களாக இருந்தனர். ஒரு துப்பாக்கியை ஏந்தக்கூடிய அல்லது ஓர் இயந்திரத்தை இயக்கக்கூடிய சக்தி வாய்ந்த ஒவ்வொரு ஜோடிக் கைகளும் மதிப்பு வாய்ந்தவையாக இருந்தன.

1793ம் ஆண்டின் வசந்தகாலத்தில், ஐரோப்பிய அரச குடும்பங்கள் அனைத்தும் பிரெஞ்சுப் புரட்சியைத் துவக்கத்திலேயே கழுத்தை நெறித்துக் கொன்றுவிடுவதற்காகத் தம்முடைய படைகளை அனுப்பி வைத்தன. ஆனால், பாரீஸில் இருந்த புரட்சிக்காரர்களோ, நல்ல உடல்நலத்துடன் இருந்த அத்தனை ஆண்களும் புரட்சிப் போரில் பங்கு கொள்ள வேண்டும் என்று பிரகடனம் செய்து முதல் போரைக் கட்டவிழ்த்துவிட்டனர். பிரெஞ்சுப் புரட்சியினால் உருவான முதல் அரசாங்கமான 'தேசியப் பேரவை' ஆகஸ்ட் 23ம் நாளன்று இவ்வாறு ஆணையிட்டது: "இக்கணத்தில் தொடங்கி, நம்முடைய எதிரிகள் நம்முடைய குடியரசின் மண்ணைவிட்டுத் துரத்தியடிக்கப்படும் நேரம்வரை, பிரெஞ்சு ஆண்மக்கள் அனைவரும் ராணுவச் சேவைக்கு நிரந்தரமாகத் தேவைப்படுகின்றனர். இளைஞர்கள் இப்போரில் சண்டையிட வேண்டும்; திருமணமான ஆண்கள் ஆயுதங்களைத் தயாரிக்க வேண்டும், மளிகைப் பொருட்களை ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்திற்குக் கொண்டு செல்ல வேண்டும்; பெண்மணிகள் கூடாரங்களையும் ஆடைகளையும் தயாரிக்க வேண்டும், மருத்துவமனைகளில் சேவை செய்ய வேண்டும்; குழந்தைகள் பழைய துணி இழைகளைக் கொண்டு போர்வைகளைத் தயாரிக்க வேண்டும்; முதிய ஆண்கள் பொதுச் சதுக்கங்களுக்கு வந்து வீரர்களிடம் துணிச்சலைத் தூண்ட வேண்டும், அரசர்கள்மீதான வெறுப்பை போதிக்க வேண்டும், குடியரசின் ஒற்றுமையை வலியுறுத்த வேண்டும்."

இந்த அரசாணை, பிரெஞ்சுப் புரட்சியின் மிகப் பிரபலமான

ஆவணமான ‘ஆண்கள் மற்றும் குடிமக்களின் உரிமைகள் குறித்தப் பிரகடனம்’ பற்றிய சுவாரசியமான தகவல்களை வெளிப்படுத்துகிறது. குடிமக்கள் அனைவரும் சம அளவு மதிப்பும் சம அளவு அரசியல் உரிமைகளும் கொண்டவர்கள் என்று அந்த ஆவணம் அங்கீகரித்தது. பிரெஞ்சுப் புரட்சிப் போருக்கு ஒட்டுமொத்த ஆள்சேர்ப்பு நிகழ்த்தப்பட்ட அதே நேரத்தில் ஒட்டுமொத்த உரிமைகளும் பிரகடனம் செய்யப்பட்டது ஒரு தற்செயலான நிகழ்வா? இவ்விரண்டு நிகழ்வுகளுக்கும் இடையேயான துல்லியமான உறவுகளைப் பற்றி அறிஞர்கள் வாதிடக்கூடும் என்றாலும், அடுத்து வந்த இரண்டு நூற்றாண்டுகளில் ஜனநாயகத்திற்கு ஆதரவான ஒரு பொதுவான விவாதம் இவ்வாறு விளக்கியது: ‘குடிமக்களுக்கு அரசியல் உரிமைகளைக் கொடுப்பது நல்லது. ஏனெனில், ஜனநாயக நாடுகளைச் சேர்ந்த வீரர்களும் தொழிலாளர்களும் சர்வாதிகார நாடுகளில் உள்ளோரைவிட அதிகச் சிறப்பாக வேலை செய்கின்றனர்.’ மக்களுக்கு அரசியல் உரிமைகளை வழங்குவது அவர்களுடைய ஊக்கத்தையும் தன்முயற்சியையும் அதிகரிக்கிறது. ஊக்கமும் தன்முயற்சியும் போர்க்களத்திலும் தொழிற்சாலையிலும் மிகவும் பயனுள்ளவையாக இருக்கின்றன.

1869ம் ஆண்டிலிருந்து 1909ம் ஆண்டுவரை ஹார்வர்டு பல்கலைக்கழகத்தின் தலைவராக இருந்த சார்லஸ் எலியட், 1917ம் ஆண்டு ஆகஸ்ட் 5ம் நாளன்று ‘நியூயார்க் டைம்ஸ்’ பத்திரிகையில் பின்வருமாறு எழுதினார்: “மேற்தட்டு மக்களால் அடுக்கதிகார முறையில் ஒழுங்கமைக்கப்பட்டு எதேச்சாதிகார முறையில் நிர்வகிக்கப்படுகின்ற ராணுவப் படைகளைவிட ஜனநாயக ராணுவப் படைகள் அதிகச் சிறப்பாகச் சண்டையிடுகின்றன. எந்த நாடுகளில் பெருந்திரளான மக்கள் ஒன்றாகச் சேர்ந்து சட்டங்களை இயற்றி, இணைந்து தங்களுடைய அரசு ஊழியர்களைத் தேர்ந்தெடுத்து, அமைதி மற்றும் போர் பற்றிய விவகாரங்களுக்குக் கூட்டாகத் தீர்வு காணுகின்றனரோ, அந்நாடுகளின் ராணுவப் படையினர், பிறப்பால் கிடைத்த உரிமையாலும் ‘கடவுளிடமிருந்து வந்த ஆணையாலும்’ ஆளுகின்ற ஒரு எதேச்சாதிகாரியின் படையினரைவிட அதிகச் சிறப்பாகச் சண்டையிடுகின்றனர்.”

இதே போன்ற ஒரு காரணம்தான் முதலாம் உலகப் போர் தொடங்கிய நேரத்தில் பெண்களுக்கு ஓட்டுரிமை அளிப்பதற்கு ஆதரவாக அமைந்தது. முழுவீச்சில் நடைபெற்றுக் கொண்டிருந்த தொழிற்போட்டிகளில் பெண்களின் இன்றியமையாத பங்கை உணர்ந்து கொண்ட நாடுகள், அமைதிக் காலத்தில் அவர்களுக்கு அரசியல் உரிமைகள் கொடுக்கப்பட வேண்டிய தேவையையும்

கண்டுகொண்டன. எனவே, 1918ல் அமெரிக்க அதிபர் உட்ரூ வில்சன், பெண்கள் வாக்குரிமைக்கான ஓர் ஆதரவாளராக ஆனார். அமெரிக்க மேலவையில் அவர் இவ்வாறு முழங்கினார்: "பல்வேறு தளங்களில் பெண்களின் சேவைகள் மட்டும் கிடைக்காமல் போயிருந்தால், முதலாம் உலகப் போரில் கலந்து கொண்ட பிற நாடுகளாலோ அல்லது அமெரிக்காவாலோ அப்போரில் சண்டையிட்டிருக்க முடியாது. பெண்கள் தங்களுடைய வழக்கமான துறைகளில் மட்டுமல்லாமல், இதுவரை ஆண்கள் மட்டுமே ஈடுபட்டு வந்திருந்த துறைகளிலும் போர்முனைகளிலும்கூட அளப்பரிய சேவைகளைச் செய்துள்ளனர். பெண்களுக்கு வாக்குரிமை உட்பட அனைத்து அரசியல் உரிமைகளையும் நாம் கொடுக்காவிட்டால், நாம் நம்முடைய நம்பகத்தன்மையை இழந்துவிடுவோம், அதை இழப்பதற்கு நாம் தகுதியுடையவர்களாகவும் ஆகிவிடுவோம்."

ஆனால், இருபத்தோராம் நூற்றாண்டில், பெரும்பாலான ஆண்களும் பெண்களும் தங்களுடைய ராணுவ மதிப்பையும் பொருளாதார மதிப்பையும் இழக்கக்கூடும். மொத்தமாக ராணுவத்திற்கு ஆள் சேர்ப்பது அந்த இரண்டு உலகப் போர்களோடு முடிந்துவிட்டது. இருபத்தோராம் நூற்றாண்டின் ராணுவப் படைகள், அதிநேர்த்தியான மற்றும் அதிநவீனத் தொழில்நுட்பத்தை அதிகமாகச் சார்ந்துள்ளன. எதிரிகளின் பீரங்கிக் குண்டுகளுக்கு இரையாகின்ற கணக்கற்ற சாதாரணச் சிப்பாய்களுக்கு பதிலாக, மிகச் சிறப்பாகப் பயிற்றுவிக்கப்பட்ட, குறைந்த எண்ணிக்கையிலான வீரர்கள் மட்டுமே நாடுகளுக்கு இப்போது தேவைப்படுகின்றனர். அதிகத் திறன் கொண்ட வீரர்களை உள்ளடக்கிய சிறப்புப் படைகளும், அதிநவீனத் தொழில்நுட்பத்தை உருவாக்கவும் பயன்படுத்தவும் தெரிந்த ஒருசில வல்லுநர்களும் மட்டும் இருந்தாலே போதும். விமானியில்லா வானூர்திகளாலும் கணினி நச்சுநிரல்களாலும் கட்டுப்படுத்தி இயக்கப்படுகின்ற உயர்தொழில்நுட்பப் படைகள், இருபதாம் நூற்றாண்டின் சாதாரண மக்கட்படைகளின் இடத்தை மெல்ல மெல்ல ஆக்கிரமித்துக் கொண்டிருக்கின்றன. மேற்கொள்ளப்பட வேண்டிய முக்கியமான தீர்மானங்களைப் படைத்தளபதிகள் கணினிப் படிமுறைத் தீர்வுகளின் பொறுப்பில் அதிக அளவில் ஒப்படைத்து வருகின்றனர்.

மனித ராணுவ வீரர்கள் கணிக்கப்பட முடியாதவர்களாகவும், பசி, பயம், களைப்பு ஆகியவற்றுக்கு உட்படக்கூடியவர்களாகவும் இருப்பதோடு மட்டுமல்லாமல், அவர்கள் போதிய அளவு வேகமாக சிந்திப்பதும் செயல்படுவதும் இல்லை. நெபுகட் நெசாரின் காலத்தில் தொடங்கி சதாம் உசேனின் காலம்வரை எண்ணற்றத் தொழில்நுட்ப

மேம்பாடுகள் ஏற்பட்டிருந்தும்கூட, போர்கள் காலவரையறையின்றித் தொடரப்பட்டன. விவாதங்கள் பல மணிநேரம் நீடித்தன, சண்டைகள் நாட்கணக்கில் நடந்தன, போர்கள் ஆண்டுகணக்கில் இழுத்தடிக்கப்பட்டன. ஆனால், இணையப் போர்கள் ஒருசில நிமிடங்கள் மட்டுமே நீடிக்கக்கூடும். அமெரிக்க இணையக் கட்டுப்பாட்டு மையத்தில் பணியில் இருக்கின்ற ஒரு லெஃப்டினன்ட், ஏதோ விநோதமாக நிகழ்ந்து கொண்டிருப்பதை கவனித்துவிட்டு, தன்னுடைய மேலதிகாரியைத் தொலைபேசியில் தொடர்பு கொள்ளுகிறார். அவர் உடனடியாக வெள்ளை மாளிகையை எச்சரிக்கிறார். ஆனால், அமெரிக்க அதிபர் அந்தத் தொலைபேசியைத் தன் கையில் எடுப்பதற்குள்ளாகவே அந்தப் போரில் அவர்கள் ஏற்கனவே தோற்றுவிடுகின்றனர். போதுமான அளவு அதிநவீனக் கணினித் தாக்குதல் ஒன்றால் ஒருசில நொடிகளில் ஒட்டுமொத்த அமெரிக்காவின் மின் விநியோகத்தை முற்றிலுமாக முடக்கிவிட முடியும், அமெரிக்க விமானக் கட்டுப்பாட்டு மையங்களைத் துவம்சம் செய்ய முடியும், அணுமின் நிலையங்களிலும் வேதித் தொழிற்சாலைகளிலும் எண்ணற்ற விபத்துக்களை ஏற்படுத்த முடியும், ராணுவம், காவல்துறை, மற்றும் உளவுத் துறையின் தகவல் தொடர்புப் பிணையங்களைத் தகர்த்தெறிய முடியும், நிதி தொடர்பான ஆவணங்களை முற்றிலுமாக அழித்துவிட முடியும். பல கோடிக்கணக்கான டாலர்கள் எந்தச் சுவடுமின்றி எப்படி மறைந்தன என்பதையும், அவை இப்போது யாரிடம் இருக்கின்றன என்பதையும் கண்டுபிடிக்க முடியாமல் அதிகாரிகள் திணறுவர். இணையத்தளம், தொலைக்காட்சி, வானொலி ஆகியவை வேலை செய்யாமல் போய்விடும் என்பதால், நிகழ்ந்து கொண்டிருக்கின்ற பேரழிவின் வீச்சு மக்களுக்குத் தெரியாமல் போய்விடும். ஆனால் அதுதான் அவர்களை அதிர்ச்சியிலிருந்தும் பீதியிலிருந்தும் பாதுகாக்கவும் செய்யும்.

ஓர் எளிய எடுத்துக்காட்டைப் பார்க்கலாம். விமானியில்லா வானூர்திகள் இரண்டு, வானில் ஒன்றோடொன்று சண்டையிட்டுக் கொண்டிருப்பதாக வைத்துக் கொள்ளுவோம். அவற்றில் ஒரு வானூர்தியால், கீழே ஏதோ ஒரு பதுங்குக் குழியில் ஒளிந்திருக்கின்ற ஒரு கட்டுப்பாட்டாளரிமிருந்து உத்தரவுச் சமிக்கை கிடைக்காமல் சுடத் தொடங்க முடியாது. ஆனால் இன்னொரு வானூர்தி முற்றிலும் தானாக இயங்கக்கூடியது. எந்த வானூர்தி தாக்குப்பிடிக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்? 2093ல், சிதிலடைந்துள்ள ஐரோப்பிய ஒன்றியம், ஒரு புதிய பிரஞ்சுப் புரட்சியைப் பற்றிய தகவல்களைக் கண்டுபிடிப்பதற்காகத் தன் வசமுள்ள விமானியில்லா

வானூர்திகளையும் சைபார்குகளையும் அனுப்பி வைத்தால், பாரீஸில் உள்ள சமூகக் குழுவினர் தங்கள் வசமுள்ள ஒவ்வொரு கணினியையும், ஸ்மார்ட்போனையும், இணையத்தள ஊடுருவியையும் பணியில் அமர்த்தக்கூடும், ஆனால் பெரும்பாலான மனிதர்களுக்கு அங்கு வேலையிருக்காது. மனிதக் கேடயங்களாகப் பயன்படுத்தப்படுவதற்கு வேண்டுமானால் அவர்கள் சிலரை நியமிக்கக்கூடும். சம அளவுப் போர்பலம் இல்லாத இரண்டு நாடுகளுக்கு இடையேயான சண்டைகள் பலவற்றில், பெரும்பாலான குடிமக்கள், மேம்பட்டப் போர்த்தளவாடங்களுக்கான மனிதக் கேடயங்களாகச் சேவை செய்யும் நிலைக்குத் தாழ்த்தப்பட்டுள்ளனர்.



படம் **43:** இடது**: 1916**ம் ஆண்டில் நடைபெற்ற சோம் யுத்தத்தில் சண்டையில் ஈடுபட்டுள்ள வீரர்கள்**.** வலது**:** ஒரு விமானியில்லா வானூர்தி**.**

வெற்றியைவிட நியாயத்தின்மீது நீங்கள் அதிக அக்கறை கொண்டிருந்தால், நீங்கள் உங்களுடைய வீரர்களையும் விமானிகளையும் நீக்கிவிட்டு, அவர்களுக்கு பதிலாகத் தானியங்கி ரோபாட்டுகளையும் விமானியில்லா வானூர்திகளையும் போரில் ஈடுபடுத்த வேண்டும். கொலை, கொள்ளை, கற்பழிப்பு போன்றவற்றில் மனிதச் சிப்பாய்கள் ஈடுபடுகின்றனர். அவர்கள் நல்லவர்களாக நடந்து கொள்ள முயற்சி செய்தாலும்கூட, அவர்கள் எல்லோரும் அடிக்கடித் தவறுதலாகப் பொதுமக்களைக் கொன்றுவிடுகின்றனர். அறநெறிசார் படிமுறைத் தீர்வுகளைக் கொண்டு பயிற்றுவிக்கப்படுகின்ற கணினிகள், பன்னாட்டுக் குற்றவியல் நீதிமன்றத்தின் சமீபத்தியத் தீர்ப்புகளுக்கு அதிக எளிதாக உடன்படக்கூடும்.

பொருளாதாரத் தளத்திலும்கூட, ஒரு சுத்தியலைப் பிடித்திருப்பதற்கான அல்லது ஒரு பொத்தானை அழுத்துவதற்கான திறனின் மதிப்பு முன்பைவிட இப்போது குறைந்து வருகிறது. இது தாராளவாதத்திற்கும் முதலாளித்துவத்திற்கும் இடையேயான முக்கியமான பிணைப்புக்கு ஒரு பெரும் அச்சுறுத்தலாக இருக்கிறது. அறநெறிக்கும் பொருளாதாரத்திற்கும் இடையே ஏதோ ஒன்றை நாம் தேர்ந்தெடுக்க வேண்டியதில்லை என்று இருபதாம் நூற்றாண்டில்

தாராளவாதிகள் விளக்கினர். மனித உரிமைகளையும் சுதந்திரத்தையும் பாதுகாப்பது அறநெறிரீதியாக இன்றியமையாதது என்றும், அது பொருளாதார வளர்ச்சிக்கான திறவுகோல் என்றும் அவர்கள் கூறினர். பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா ஆகிய நாடுகள் தம்முடைய பொருளாதாரங்களையும் சமூகங்களையும் தாராளமயப்படுத்தியதால் செழிப்புற்றன. துருக்கி, பிரேசில், அல்லது சீனா இதே அளவுக்குச் செழிப்புற விரும்பினால், அவையும் அதே விஷயத்தைச் செய்ய வேண்டும். தம்முடைய நாடுகளை தாராளமயமாக்குவதற்குப் பல கொடுங்கோலர்களையும் ராணுவ சர்வாதிகாரிகளையும் ஒப்புக் கொள்ள வைத்தது பொருளாதாரரீதியான வாதமே அன்றி, அறநெறிரீதியான வாதம் அல்ல.

இருபத்தோராம் நூற்றாண்டில் தாராளவாதம் தன்னைத் தக்க வைத்துக் கொள்ளுவதற்கு மிகவும் சிரமப்பட வேண்டியிருக்கும். பெரும் எண்ணிக்கையிலான மக்கள் தங்களுடைய பொருளாதாரரீதியான மதிப்பை இழக்கும்போது, மனித உரிமைகளையும் சுதந்திரத்தையும் பாதுகாப்பதற்கு அறநெறிசார் வாதங்கள் மட்டும் போதுமானவையாக இருக்குமா? மக்கள் ஒவ்வொருவரையும் மதிப்பது எந்தவிதமான பொருளாதார லாபத்தையும் பெற்றுக் கொடுக்காதபோதுகூட அரசாங்கங்களும் மேட்டுக்குடியினரும் தொடர்ந்து மனிதர்களை மதிப்பு வாய்ந்தவர்களாகக் கருதுவரா?

கடந்தகாலத்தில் மனிதர்களால் மட்டுமே செய்யப்பட முடிந்த பல விஷயங்கள் இருந்தன. ஆனால் இன்று ரோபாட்டுகளும் கணினிகளும் மனிதர்களுக்குப் போட்டியாக வந்துவிட்டன. விரைவில், பெரும்பாலான வேலைகளில் அவை மனிதர்களைத் தூக்கிச் சாப்பிட்டுவிடக்கூடும். மனிதர்கள் செயல்படும் விதத்திலிருந்து முற்றிலும் வித்தியாசமாகக் கணினிகள் செயல்படுகின்றன என்பது உண்மைதான். கணினிகளால் மனிதர்களைப்போல ஆவது இப்போதைக்குச் சாத்தியமில்லை. குறிப்பாக, கணினிகள் பிரக்ஞையைப் பெறுவதோ, உணர்ச்சிகளையும் உணர்வுகளையும் அனுபவிக்கத் தொடங்குவதோ இப்போதைக்கு நிகழப் போவதாகத் தெரியவில்லை. கடந்த அரை நூற்றாண்டின் ஊடாக, கணினி நுண்ணறிவில் அளப்பரிய முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது, ஆனால் கணினிப் பிரக்ஞையில் ஒரு சின்னஞ்சிறு முன்னேற்றம்கூட ஏற்படவில்லை. நமக்குத் தெரிந்தவரை, 1950களில் இருந்த கணினிகளின் முன்மாதிரிகள் எப்படிப் பிரக்ஞையற்றவையாக இருந்தனவோ, அதேபோலத்தான் 2016ம் ஆண்டிலும் கணினிகள் எந்தவிதப் பிரக்ஞையும் இல்லாதவையாக இருக்கின்றன. ஆனால், ஒரு

மாபெரும் புரட்சி ஏற்படவிருக்கின்ற ஒரு நிலையில் நாம் இருக்கிறோம். மனிதர்கள் தங்களுடைய பொருளாதாரரீதியான மதிப்பை இழக்கும் ஆபத்தில் இருக்கின்றனர். ஏனெனில், அறிவுக்கும் பிரக்ஞைக்கும் இடையேயான பிணைப்பு அறுந்து கொண்டிருக்கிறது.

இந்நாள்வரை, உயர்ந்த அறிவும் பக்குவமடைந்த பிரக்ஞையும் எப்போதும் ஒன்றோடொன்று கைகோர்த்துச் சென்றன. சதுரங்கம் விளையாடுவது, காரோட்டுவது, நோய்களைக் கண்டறிவது, தீவிரவாதிகளைக் கண்டுபிடிப்பது போன்ற, ஏராளமான அறிவு தேவைப்படுகின்ற காரியங்களை, பிரக்ஞை கொண்ட உயிரினங்களால் மட்டுமே செய்ய முடிந்தது. ஆனால் இன்று, அந்த வேலைகளை மனிதர்களைவிட மிகச் சிறப்பாகச் செய்யக்கூடிய, பல்வேறு வகைப்பட்டப் பிரக்ஞையற்ற நுண்ணறிவை நாம் உருவாக்கிக் கொண்டிருக்கிறோம். ஏனெனில், இவ்வேலைகள் அனைத்தும் வடிவவிதத்தை உணர்ந்து கொள்ளுவதன் அடிப்படையில் அமைந்தவை. வடிவவிதத்தை உணர்ந்து கொள்ளுவதில், பிரக்ஞையற்றப் படிமுறைத் தீர்வுகள் மனிதப் பிரக்ஞையை விரைவில் விஞ்சிவிடக்கூடும்.

கணினிகள் மனித நுண்ணறிவுக்கு இணையாகவோ அல்லதை அதைவிடச் சிறப்பாகவோ உருவெடுப்பதற்குப் பிரக்ஞையை வளர்த்துக் கொள்ள வேண்டியிருக்கும் என்று அறிவியல் புனைகதைத் திரைப்படங்கள் பொதுவாக அனுமானிக்கின்றன. ஆனால் உண்மையான அறிவியல் வேறொரு கதையைக் கூறுகிறது. அதன்படி, அதிநுண்ணறிவுக்கு இட்டுச் செல்லக்கூடிய பல்வேறு மாற்று வழிகள் இருக்கக்கூடும், ஆனால் அவற்றில் சில வழிகள் மட்டுமே பிரக்ஞை எனும் நீர்ச்சந்தியின் ஊடாகச் செல்லுகின்றன. லட்சக்கணக்கான ஆண்டுகளாக, இயற்கை உயிரினங்களின் பரிணாம வளர்ச்சியானது பிரக்ஞைப் பாதையின் வழியாக மெதுவாகவே பயணித்து வந்துள்ளது. செயற்கை உயிரினங்களான கணினிகளின் பரிணாம வளர்ச்சி இந்தக் குறுகலான நீர்ச்சந்திகளை முற்றிலுமாகத் தவிர்த்துவிட்டு, அதிநுண்ணறிவை எட்டுவதற்கு ஒரு வித்தியாசமான, அதிக விரைவான பாதையை வகுத்துக் கொள்ளக்கூடும்.

இது ஒரு புதுமையான கேள்வியை எழுப்புகிறது: எது உண்மையிலேயே முக்கியமானது - அறிவா அல்லது பிரக்ஞையா? அவை ஒன்றோடொன்று கைகோர்த்துச் சென்றவரை, அவற்றின் மதிப்பை ஒப்பிடுவதை உள்ளடக்கிய விவாதங்கள் தத்துவவியலாளர்களுக்கு ஒரு சுவாரசியமான பொழுதுபோக்காக மட்டுமே இருந்தன. ஆனால் இருபத்தோராம் நூற்றாண்டில் இது ஓர்

அவசரமான அரசியல் விவகாரமாகவும் பொருளாதார விவகாரமாகவும் ஆகியுள்ளது. குறைந்தபட்சம், ராணுவங்கள் மற்றும் பெருநிறுவனங்களின் விஷயத்திலாவது இக்கேள்விக்கான விடை நேரடியானதாக இருக்கிறது என்பது நம்மை ஓரளவுக்கு ஆசுவாசப்படுத்துவதாக இருக்கிறது. அந்த விடை இதுதான்: அறிவு கட்டாயம் தேவை, ஆனால் பிரக்ஞை விருப்பத்தைப் பொருத்தது.

அறிவார்ந்த அதிகாரிகள் இல்லாமல் ராணுவங்களாலும் பெருநிறுவனங்களாலும் இயங்க முடியாது, ஆனால் அவற்றுக்குப் பிரக்ஞையோ அல்லது அகவயமான அனுபவங்களோ தேவையில்லை. ஒரு மனித டாக்ஸி ஓட்டுநருடைய பிரக்ஞையுடன்கூடிய அனுபவங்கள் நிச்சயமாக ஒரு தானியங்கிக் காரின் பிரக்ஞையற்ற அனுபவங்களைவிட அளப்பரிய விதத்தில் அதிகச் செழுமையானவையாக இருக்கின்றன. ஏனெனில், ஒரு தானியங்கிக் காரால் எதையும் உணர முடியாது. சியோல் நகரின் மும்முரமான தெருக்கள் வழியாகக் காரோட்டிச் செல்லும்போது ஒரு டாக்ஸி ஓட்டுநரால் இசையை ரசித்துக் கொண்டே பயணம் செய்ய முடியும். மேலே ஏறிட்டு விண்மீன்களைப் பார்க்கும்போதும் பிரபஞ்சத்தின் மர்மங்களைப் பற்றி யோசிக்கும்போதும் அவருடைய மனம் ஆச்சரியத்தால் விரியக்கூடும். தன்னுடைய குழந்தை முதன்முதலாக அடியெடுத்து வைத்து நடக்கத் தொடங்குவதை அவர் பார்க்கும்போது அவருடைய கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகக்கூடும். ஆனால், அவர் எதற்காகப் பணியில் அமர்த்தப்பட்டிருக்கிறாரோ, அதற்கு இவை எதுவும் தேவைப்படுவதில்லை. அவர் தன்னுடைய பயணியரை ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்திற்கு விரைவாகவும் பாதுகாப்பாகவும் குறைவான கட்டணத்திலும் கூட்டிச் செல்ல வேண்டும் என்று மட்டுமே அவரிடமிருந்து எதிர்பார்க்கப்படுகிறது. ஒரு தானியங்கிக் காரால் இதை விரைவில் மிகச் சிறப்பாகச் செய்ய முடியும் - அக்காரால் இசையை ரசிக்க முடியாவிட்டாலும், இருத்தலின் மாயாஜாலத்தைக் கண்டு வியப்புற முடியாவிட்டாலும்கூட!

தொழிற்புரட்சியின்போது குதிரைகளுக்கு நேர்ந்த கதியை நமக்கு நாமே நினைவூட்டிக் கொள்ள வேண்டும். ஒரு சாதாரணப் பண்ணைக் குதிரையால் வாசனைகளை முகர முடியும், அன்பு காட்ட முடியும், முகங்களை அடையாளம் காண முடியும், வேலிகளைத் தாண்டிக் குதிக்க முடியும், இன்னும் ஓராயிரம் விஷயங்களை ஒரு ஃபோர்டு காரைவிடவும் லட்சக்கணக்கான டாலர்கள் விலைமதிப்புக் கொண்ட ஒரு லம்பார்கினி காரைவிடவும் மிகச் சிறப்பாகச் செய்ய முடியும். ஆனால், கார்கள் குதிரைகளின் இடத்தை எடுத்துக் கொண்டதற்குக்

காரணம், குறிப்பிட்ட எந்த ஒருசில வேலைகள் உண்மையிலேயே தேவையாக இருந்தனவோ அவற்றை அவை அக்குதிரைகளைவிட மிகமிகச் சிறப்பாக செய்ததுதான். அக்குதிரைகளுக்கு நேர்ந்த அதே கதி விரைவில் அந்த டாக்ஸி ஓட்டுநர்களுக்கும் நிகழுவதற்கான சாத்தியம் அதிகம் இருக்கிறது.

டாக்ஸிக்களை மட்டுமல்லாமல், எந்தவொரு வண்டியையும் ஓட்டக்கூடாது என்று மனிதர்களுக்கு ஒட்டுமொத்தமாக நாம் ஒரு தடை விதித்துவிட்டு, போக்குவரத்திற்கான அதிகாரத்தைக் கணினிப் படிமுறைத் தீர்வுகளின் வசம் நாம் ஒப்படைத்துவிட்டால், பிறகு எல்லா வண்டிகளையும் தனியொரு பிணையத்தோடு நம்மால் இணைத்துவிட முடியும். இதன் விளைவாக, கார் விபத்துக்கள் அரிதாகிவிடும். 2015ம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில், கூகுள் நிறுவனம் உருவாக்கியிருந்த, பரிசோதனை நிலையில் இருந்த தானியங்கிக் கார்களில் ஒன்று விபத்துக்கு உள்ளானது. அது ஒரு நாற்சந்தியை அணுகியபோது, பாதசாரிகள் அப்பாதையைக் கடக்க விரும்பியதைக் கண்டறிந்துவிட்டு அது தன்னுடைய பிரேக்கை அழுத்தியது. ஒரு கணத்திற்குப் பிறகு, சாலையை கவனிப்பதற்கு பதிலாகப் பிரபஞ்சத்தின் மர்மங்களில் மூழ்கியபடி தன்னுடைய செடான் காரை ஓட்டி வந்த கவனக்குறைவான மனித ஓட்டுநர் ஒருவர், பின்னாலிருந்து கூகுள் கார்மீது தன் காரைக் கொண்டு மோதிவிட்டார். இவ்விரு கார்களும் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டுள்ள கணினிகளால் வழிநடத்தப்பட்டிருந்தால் இந்த விபத்து நிகழ்ந்திருக்காது. சாலையில் உள்ள ஒவ்வொரு வண்டியும் எங்கே இருந்தது என்பதையும் அந்த வண்டிகள் என்ன செய்யவிருந்தன என்பதையும் அக்கணினியின் படிமுறைத் தீர்வு அறிந்திருக்கும். எனவே, அது அந்த மோதலைத் தவிர்த்திருக்கும். அப்படிப்பட்ட ஒரு கணினி அமைப்புமுறை ஏராளமான பணத்தையும் நேரத்தையும் மிச்சப்படுத்திக் கொடுக்கும், எண்ணற்ற மனித உயிர்களைக் காப்பாற்றிக் கொடுக்கும், ஆனால் அதே நேரத்தில், ஒரு காரை ஓட்டுவதிலிருந்து கிடைக்கின்ற மனித அனுபவத்தையும் லட்சக்கணக்கான மனித வேலைகளையும் அது விழுங்கி ஏப்பம் விட்டிருக்கும்.

தங்களை மேம்படுத்திக் கொள்ளாத மனிதர்கள் இன்றோ அல்லது நாளையோ முற்றிலுமாகப் பயனற்றவர்களாக ஆகிவிடுவர் என்று சில பொருளாதார வல்லுநர்கள் கணிக்கின்றனர். ரோபாட்டுகளும் 3டி பிரின்டர்களும் ஏற்கனவே ஆடைகள் தயாரிப்பு போன்ற மனித வேலைகளில் ஊழியர்களின் இடத்தைப் அபகரிக்கத் தொடங்கிவிட்டன. இதேபோலத்தான், மிகவும் அறிவார்ந்த படிமுறைத் தீர்வுகள் அறிவுசார் வேலைகளையும் பிடுங்கிக் கொள்ளப் போகின்றன.

சிறிது காலத்திற்கு முன்பு வங்கிக் கணக்காளர்களும் பயண முகவர்களும் இயந்திரமயமாக்கலில் இருந்து முற்றிலும் பாதுகாப்பாக இருந்ததுபோலத் தோன்றியது. ஆனால் இப்போது, அவர்கள் அருகிவரும் உயிரினங்களாக ஆகியுள்ளனர். நம்முடைய ஸ்மார்ட்போனைப் பயன்படுத்தி ஒரு படிமுறைத் தீர்விடமிருந்து ஒரு விமானப் பயணச்சீட்டை நம்மால் வாங்க முடிகிறது எனும்போது, எத்தனைப் பயண முகவர்கள் நமக்குத் தேவைப்படுவர்?

பங்குச் சந்தைத் தரகர்களும் ஆபத்தில் இருக்கின்றனர். இன்று பெரும்பான்மைப் பொருளாதார வர்த்தகம் ஏற்கனவே கணினிப் படிமுறைத் தீர்வுகளால் கையாளப்பட்டுக் கொண்டிருக்கிறது. ஒரு மனிதனால் ஓராண்டில் எவ்வளவு தகவல்களைக் கையாள முடியுமோ, அதைவிட அதிகமான தகவல்களை ஒரு நொடியில் அந்தப் படிமுறைத் தீர்வுகளால் கையாள முடியும். 2013ம் ஆண்டு ஏப்ரல் 23ம் நாளன்று, சிரியாவைச் சேர்ந்த இணையத்தள ஊடுருவிகள், ‘அசோசியேட்டட் பிரெஸ்’ செய்தி நிறுவனத்தின் அதிகாரபூர்வமான டுவிட்டர் கணக்கிற்குள் அத்துமீறி நுழைந்தனர். வெள்ளை மாளிகை தாக்கப்பட்டிருந்ததாகவும் அதிபர் ஒபாமா காயமுற்றதாகவும் 13:07 மணிக்கு அவர்கள் ஒரு டுவீட் செய்தி அனுப்பினர். மறுகணம், தொடர்ந்து செய்திகளைக் கண்காணிக்கின்ற வர்த்தகப் படிமுறைத் தீர்வுகள் எதிர்வினையாற்றின, பங்குகளை அவை வேகவேகமாக விற்கத் தொடங்கின. ‘டோ ஜோன்ஸ்’ என்ற பங்குச் சந்தைக் குறியீடு வேகமாகச் சரிந்து, அறுபது நொடிகளில் 150 புள்ளிகளை இழந்தது. இது 13,600 கோடி டாலர்கள் இழப்புக்குச் சமம்! தன்னுடைய டுவிட்டர் கணக்கிலிருந்து வெளிச்சென்ற டுவீட் போலியானது என்று 13:10 மணிக்கு அசோசியேட்டட் பிரெஸ் தெளிவுபடுத்தியது. இப்போது அந்தப் படிமுறைத் தீர்வுகள் தலைகீழாக மாறி, 13:13 மணிக்கு டோ ஜோன்ஸ் கிட்டத்தட்ட அனைத்து இழப்புகளிலிருந்தும் மீண்டிருந்தது.

அதற்கு மூன்று ஆண்டுகளுக்கு முன்பு, 2010ம் ஆண்டு மே 6ம் நாளன்று, நியூயார்க் பங்குப் பரிவர்த்தனை மையம் இன்னும் அதிகத் தீவிர அதிர்ச்சிக்கு உள்ளானது. ஐந்து நிமிடங்களுக்குள் - 14:42 மணியிலிருந்து 14:47 மணிக்குள் - டோ ஜோன்ஸ் 1,000 புள்ளிகள் குறைந்து, ஒரு லட்சம் கோடி டாலர்கள் இழப்பு ஏற்பட்டது. பிறகு வெறும் மூன்றே நிமிடங்களில், அது தன்னுடைய சரிவுக்கு முந்தைய நிலைக்குத் திரும்பியது. அதிவேகக் கணினி நிரல்களின் பொறுப்பில் நம் பணம் இருக்கும்போது அதுதான் நிகழும். 2010ம் ஆண்டு நிகழ்ந்த பங்குச் சந்தைச் சரிவில் என்ன நிகழ்ந்தது என்பதைப் புரிந்து கொள்ள வல்லுநர்கள் எப்போதும் முயற்சித்து வந்துள்ளனர். படிமுறைத்

தீர்வுகள்தாம் குற்றவாளி என்பதை அவர்கள் அறிந்திருந்தபோதிலும், உண்மையிலேயே எது தவறாகப் போனது என்பதை அவர்களால் உறுதியாகக் கண்டுபிடிக்க முடியவில்லை. படிமுறைத் தீர்வுகளின் அடிப்படையில் நிகழுகின்ற பங்குச் சந்தை வர்த்தகத்திற்கு எதிராக அமெரிக்காவில் உள்ள சில வர்த்தகர்கள் ஏற்கனவே வழக்குகள் தொடுத்துள்ளனர். கணினியைப்போல அதிவேகமாகச் செயல்விடை அளிக்கவோ அல்லது அதனோடு போட்டிப் போடவோ முடியாத மனிதர்களைப் படிமுறைத் தீர்வுகள் நியாயமற்ற முறையில் பாரபட்சமாக நடத்துவதாக அவர்கள் வாதிட்டனர். இது உண்மையிலேயே மனித உரிமை மீறல்தானா இல்லையா என்பது பற்றிய வாக்குவாதம் வழக்கறிஞர்களுக்கு ஏராளமான வேலைகளையும் எக்கச்சக்கமான கட்டணங்களையும் வழங்கக்கூடும்.

இந்த வழக்கறிஞர்கள் மனிதர்களாக இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. நீதிமன்றத்தில் 'அப்ஜெக்ஷன்!' என்று கத்திக் கொண்டும் உணர்ச்சிகரமாகப் பேசிக் கொண்டும் வழக்கறிஞர்கள் தங்கள் நாட்கள் முழுவதையும் செலவிடுவது போன்ற ஓர் அபிப்பிராயத்தைத் திரைப்படங்களும் தொலைக்காட்சித் தொடர்களும் உருவாக்கியுள்ளன. ஆனால், சராசரி வழக்கறிஞர்கள் முடிவற்றக் கோப்புகளை ஆய்வு செய்வதற்கும், முன்னுதாரணங்களையும் சட்டத்திலுள்ள ஓட்டைகளையும் பொருத்தமான ஆதாரங்களையும் தேடுவதற்கும் தங்கள் நேரத்தை அர்ப்பணிக்கின்றனர். சம்பந்தப்பட்ட நபர் இறந்த அன்று இரவு என்ன நிகழ்ந்தது என்பதைக் கண்டுபிடிப்பதில் சிலர் மும்முரமாக இருக்கின்றனர். இன்னும் சிலர், தங்களுடைய கட்சிக்காரரைப் பாதுகாக்கக்கூடிய மிகப் பெரிய வியாபார ஒப்பந்தத்தைத் தயாரிப்பதில் மும்முரமாக இருக்கின்றனர். ஒரு மனிதனால் தன் வாழ்நாள் முழுவதும் எத்தனை முன்னுதாரணங்களைத் தேட முடியுமோ அதைவிட அதிகமான முன்னுதாரணங்களை ஒரே நாளில் தேடிக் கண்டுபிடிக்கக்கூடிய அதிநவீனப் படிமுறைத் தீர்வுகள் கண்டுபிடிக்கப்பட்டு, ஒரு பொத்தானை அழுத்தினால் ஒருவனுடைய அத்தனைப் பொய்களையும் புரட்டுக்களையும் வெளிப்படுத்தக்கூடிய மூளை ஸ்கேன்கள் வந்தவுடன், இந்த அத்தனை வழக்கறிஞர்களின் நிலைமையும் என்னவாகும்? மிக அதிக அனுபவம் வாய்ந்த வழக்கறிஞர்களாலும் துப்பறிவாளர்களாலும்கூட வெறுமனே மக்களுடைய முகபாவங்களையும் குரலின் தொனியையும் கண்காணிப்பதன் மூலம் அவர்களுடைய ஏமாற்றுத்தனத்தை அவ்வளவு எளிதாகக் கண்டுபிடித்துவிட முடியாது. உண்மையைச் சொல்லும்போது

மூளையின் சில பகுதிகள் தூண்டப்படுகின்றன, பொய் சொல்லும்போது மூளையின் வேறு பகுதிகள் தூண்டப்படுகின்றன. எதிர்காலத்தில், எம்ஆர்ஐ ஸ்கேனர்கள் உண்மையை எடுத்துரைக்கும் கருவிகளாக ஆகும் என்பதற்கான சாத்தியக்கூறு அதிகம் இருக்கிறது. அத்தகைய ஸ்கேனர்கள் கண்டுபிடிக்கப்பட்டால், லட்சக்கணக்கான வழக்கறிஞர்கள், நீதிபதிகள், காவல்துறையினர், துப்பறிவாளர்கள் ஆகியோரின் நிலைமை என்னவாகும்? ஒரு புதிய தொழிலைக் கற்றுக் கொள்ளுவதற்காக மீண்டும் கல்லூரிக்குச் செல்லுவதைப் பற்றி அவர்கள் யோசிக்க வேண்டியிருக்கும்.

ஆனால், அவர்கள் தங்கள் வகுப்பறைக்குள் நுழையும்போது, படிமுறைத் தீர்வுகள் ஏற்கனவே அங்கு வந்து சேர்ந்துவிட்டதை அவர்கள் கண்டறிவர். கணிதம், இயற்பியல், வரலாறு ஆகியவற்றை எனக்குக் கற்றுக் கொடுப்பதோடு மட்டுமல்லாமல், என்னை ஆய்வு செய்து, நான் உண்மையிலேயே யார் என்பதையும் தெரிந்து கொள்ளக்கூடிய இருவழிக் கருத்துப் பரிமாற்றப் படிமுறைத் தீர்வுகளை மின்டோஜோ போன்ற நிறுவனங்கள் உருவாக்கிக் கொண்டிருக்கின்றன. நான் கொடுக்கின்ற ஒவ்வொரு பதிலையும், அவை ஒவ்வொன்றுக்கும் நான் எவ்வளவு நேரம் எடுத்துக் கொண்டேன் என்பதையும் டிஜிட்டல் கற்பிப்புக் கருவிகள் (டிஜிட்டல் ஆசிரியர்கள்) உன்னிப்பாகக் கண்காணிக்கும். காலப்போக்கில் அவை என்னுடைய தனித்துவமான பலவீனங்களையும் வலிமைகளையும் புரிந்து கொள்ளுவதோடு, எது எனக்கு உற்சாகமளிக்கிறது, எது எனக்கு வருத்தம் ஏற்படுத்துகிறது ஆகியவற்றையும் அவை கண்டுபிடிக்கும். என்னுடைய ஆளுமை வகைக்குப் பொருத்தமான ஒரு வழியில் (குறிப்பிட்ட இந்த வழிமுறை பிற 99 சதவீத மாணவர்களுக்குப் பொருத்தமானதாக இல்லாவிட்டால்கூட) வெப்ப இயக்கவியலையோ அல்லது வடிவவியலையோ அவற்றால் எனக்குக் கற்றுக் கொடுக்க முடியும். இந்த டிஜிட்டல் கற்பிப்புக் கருவிகள் ஒருபோதும் தம்முடைய பொறுமையை இழப்பதில்லை, நம்மைப் பார்த்துக் கத்துவதில்லை. அவை ஒருபோதும் வேலை நிறுத்தப் போராட்டங்களில் ஈடுபடப் போவதில்லை. ஆனால், இப்படிப்பட்ட அறிவார்ந்த கணினி நிரல்கள் இருக்கின்ற ஓர் உலகில் நான் ஏன் வெப்ப இயக்கவியலையும் வடிவவியலையும் அறிந்திருக்க வேண்டும் என்பதற்குத் தெளிவான விடை எதுவும் இல்லை.

இந்தப் படிமுறைத் தீர்வுகள் மருத்துவர்களையும் குறி வைக்கின்றன. ஒருவருடைய நோயைச் சரியாகக் கண்டறிந்து, இருப்பதிலேயே மிகச் சிறந்த சிகிச்சையை அவருக்குப் பரிந்துரைப்பதுதான்

மருத்துவர்களுடைய தலையாய வேலை. நான் காய்ச்சலாலும் வயிற்றுப் போக்காலும் துன்புற்றுக் கொண்டிருப்பதாகக் கூறி நான் ஒரு மருத்துவமனைக்குச் செல்லுவதாக வைத்துக் கொள்ளுவோம். பிரச்சனை நான் சாப்பிட்ட உணவில் இருந்திருக்கக்கூடும். இதே நோய்க்குறிகள் வயிற்றில் ஒரு நச்சுயிரியினாலோ, அல்லது வாந்திபேதி நோய், வயிற்றுளைச்சல், மலேரியா, புற்றுநோய், அல்லது வேறு ஏதோ புதிய நோயாலோகூட ஏற்படக்கூடும். என் உடலில் என்ன பிரச்சனை என்று கண்டறிவதற்கு என்னுடைய மருத்துவருக்கு ஒருசில நிமிடங்களே இருக்கின்றன. ஏனெனில், என்னுடைய உடல்நலக் காப்பீடு அவ்வளவு நேரத்திற்குத்தான் பணம் கொடுக்கும். இதனால், ஒருசில கேள்விகளுக்கு மேல் அங்கு இடமிருக்காது. பிறகு, இந்தச் சொற்பத் தகவலை என்னுடைய மருத்துவ வரலாற்றோடும், உலகிலுள்ள பிற மனித நோய்களோடும் அந்த மருத்துவர் ஒப்பிட்டுப் பார்க்கிறார். மிகக் கடுமையாக உழைக்கின்ற ஒரு மருத்துவரால்கூட என்னுடைய முந்தைய எல்லா நோய்களையும் பரிசோதனைகளையும் நினைவில் வைத்திருக்க முடியாது. அதேபோல, எந்தவொரு மருத்துவருக்கும் எல்லா நோய்களையும் எல்லா மருந்துகளையும் பற்றிய பரிச்சயம் இருக்க வாய்ப்பில்லை. ஒவ்வொரு மருத்துவ இதழிலும் வருகின்ற ஒவ்வொரு கட்டுரையையும் அவர்களால் படிக்க முடியாது. அதோடு, ஒரு மருத்துவர் சில சமயங்களில் களைப்பாகவோ அல்லது பசியுடனோ இருக்கலாம். அவருக்கு உடல்நலம்கூடச் சரியில்லாமல் இருக்கலாம். நோயாளிகளின் நோய்களைக் கண்டறிவதற்கான அவருடைய திறனை இது பாதிக்கிறது. மருத்துவர்கள் சில சமயங்களில் தவறான கணிப்புகளை மேற்கொள்ளுவதிலும், சரியான சிகிச்சையைப் பரிந்துரைக்காமல் போவதிலும் எந்த ஆச்சரியமும் இல்லை.




படம் **44:** ஐபிஎம் நிறுவனத்தின் வாட்சன் **2011**ல் **'ஜியபர்டி!'** நிகழ்ச்சியில் தன்னுடைய

இரண்டு மனித எதிராளிகளைத் தோற்கடிக்கிறது.

ஐபிஎம் நிறுவனத்தின் பிரபலமான வாட்சன் நுண்ணறிவு அமைப்புமுறையை எடுத்துக் கொள்ளுங்கள். 2011ல் ‘ஜியபர்டி!’ என்ற தொலைக்காட்சி விளையாட்டு நிகழ்ச்சியில் வெற்றி பெற்ற ஒரு செயற்கை நுண்ணறிவு அமைப்புமுறை அது. அதிக முக்கியமான மற்றும் தீவிரமான வேலைகளைக் கையாளுவதற்கு, குறிப்பாக நோய்களைக் கண்டறிவதற்கு, இப்போது வாட்சனுக்குப் பயிற்சியளிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறது. மனித மருத்துவர்களோடு ஒப்பிடுகையில், வாட்சன் போன்ற ஒரு செயற்கை நுண்ணறிவு அமைப்புமுறை பல அனுகூலங்களைக் கொண்டுள்ளது. முதலாவதாக, மனித வரலாற்றில் இதுவரை கண்டுபிடிக்கப்பட்டுள்ள அனைத்து நோய்களையும் மருந்துகளையும் பற்றிய அனைத்துத் தகவல்களையும் அந்தச் செயற்கை நுண்ணறிவால் தன்னுடைய தரவு வங்கிகளில் சேகரித்து வைக்க முடியும். புதிய ஆராய்ச்சிகள் கண்டுபிடிக்கின்ற புதிய விஷயங்களை மட்டுமல்லாமல், உலகம் நெடுகிலும் ஒன்றுக்கொன்று இணைக்கப்பட்டுள்ள மருத்துவமனைகள் மற்றும் மருத்துவ மையங்களிலிருந்து சேகரிக்கப்படும் மருத்துவப் புள்ளிவிபரங்களையும்கூட அன்றாட அடிப்படையில் அதனால் தன்னுடைய தரவு வங்கிகளில் சேகரித்து வைக்க முடியும்.

இரண்டாவதாக, வாட்சனுக்கு என்னுடைய ஒட்டுமொத்த மரபணுத் தொகுதியையும் என்னுடைய அன்றாட மருத்துவ வரலாற்றையும் பற்றி மட்டுமல்லாமல், என்னுடைய பெற்றோர், உடன்பிறந்தோர், உறவினர்கள், அண்டைவீட்டார், மற்றும் நண்பர்களின் மரபணுத் தொகுதிகளையும் மருத்துவ வரலாற்றையும் பற்றிக்கூட மிக நன்றாகத் தெரிந்திருக்கும். வெப்பமண்டலப் பகுதியிலுள்ள ஏதேனும் ஒரு நாட்டிற்கு சமீபத்தில் நான் சென்று வந்திருந்தேனா, வயிற்றில் எனக்கு அடிக்கடி நோய்த்தொற்று ஏற்படுகிறதா, என் குடும்பத்தில் யாருக்கேனும் குடற்புற்றுநோய் ஏற்பட்டிருக்கிறதா, இன்று காலையில் என்னுடைய நகரத்தில் பலர் வயிற்றுப்போக்கால் பாதிக்கப்பட்டுள்ளனரா போன்ற அனைத்தும் கணநேரத்தில் வாட்சனுக்குத் தெரிந்துவிடும்.

மூன்றாவதாக, வாட்சனுக்கு ஒருபோதும் களைப்போ அல்லது பசியோ ஏற்படாது. அது ஒருபோதும் நோயுறாது. எனக்காகச் செலவிடுவதற்கு அதனிடம் ஏராளமான நேரம் இருக்கும். நான் என் வீட்டில் என் சோபாவில் வசதியாக அமர்ந்து கொண்டு, வாட்சன் கேட்கின்ற நூற்றுக்கணக்கான கேள்விகளுக்கு என்னால் விடையளிக்க முடியும், நான் அனுபவிப்பவற்றை வாட்சனுக்கு என்னால் தெளிவாக

எடுத்துரைக்க முடியும். பெரும்பாலான நோயாளிகளுக்கு இது ஒரு நல்ல செய்தி (உடல்நலத்தைப் பற்றி மிதமிஞ்சிய கவலை கொண்டுள்ளோரைத் தவிர). இன்னும் இருபது ஆண்டுகளில் ஒரு குடும்ப மருத்துவராக ஆகிவிடலாம் என்ற நினைப்பில் இன்று நீங்கள் ஒரு மருத்துவக் கல்லூரிக்குள் அடியெடுத்து வைத்தால், நீங்கள் அதைப் பற்றி மீண்டும் சிந்தித்தாக வேண்டும்.

இந்த அச்சுறுத்தல் சாதாரண மருத்துவர்களின் தலைகளுக்கு மேலே மட்டுமல்லாமல், சிறப்பு மருத்துவர்களின் தலைகளுக்கு மேலேயும் வட்டமிட்டுக் கொண்டிருக்கிறது. ஒரு நோயாளிக்குப் புற்றுநோய் இருக்கிறதா என்பதைக் கண்டுபிடிப்பதை உள்ளடக்கிய ஒரு சிறப்புத் துறையில் பணியாற்றுகின்ற மருத்துவர்களின் இடத்தைச் செயற்கை நுண்ணறிவு மிக எளிதாகப் பிடித்துக் கொள்ளக்கூடும். சமீபத்தில் நிகழ்த்தப்பட்ட ஒரு பரிசோதனையில், புற்றுநோயால் பாதிக்கப்பட்ட சிலருடைய மருத்துவக் குறிப்புகள் ஒரு கணினிப் படிமுறைத் தீர்விடம் ஒப்படைக்கப்பட்டன. 90 சதவீத நோயாளிகளின் விஷயத்தில் அது சரியாகக் கணித்தது. ஆனால் மனித மருத்துவர்கள் 50 சதவீத வெற்றி விகிதத்தை மட்டுமே கொண்டிருந்தனர். உண்மையில், எதிர்காலம் ஏற்கனவே இங்கு வந்துவிட்டது. சி.டி. ஸ்கேன்களும் மார்பக ஊடுகதிர்ப்படச் சோதனைகளும் இப்போது சிறப்புப் படிமுறைத் தீர்வுகளால் சரிபார்க்கப்படுகின்றன. இது மருத்துவர்களுக்குத் தேவையான இரண்டாது அபிப்பிராயத்தைக் கொடுக்கிறது. சில சமயங்களில், மருத்துவர்கள் கண்டுபிடிக்கத் தவறிய கட்டிகளைக்கூட இந்தச் சிறப்புப் படிமுறைத் தீர்வுகள் கண்டுபிடித்துவிடுகின்றன.

நாளை காலையிலேயே வாட்சனும் அதன் சகாக்களும் பெரும்பாலான மருத்துவர்களைத் துரத்திவிட்டு அவர்களுடைய இடத்தை எடுத்துக் கொள்ளுவதைத் தடுக்கின்ற பல கடினமான தொழில்நுட்பப் பிரச்சனைகள் இருக்கின்றன. ஆனாலும், அப்பிரச்சனைகள் எவ்வளவு கடினமானவையாக இருந்தாலும் சரி, அவை ஒரே ஒரு முறை மட்டும் தீர்க்கப்பட்டுவிட்டால் போதும். ஒரு மனித மருத்துவருக்குப் பயிற்சியளிப்பது மிகச் சிக்கலான மற்றும் அதிகச் செலவை உள்ளடக்கிய ஒரு செயல்முறையாக இருக்கிறது. அது பல ஆண்டுகள் நீடிக்கிறது. அவர் கிட்டத்தட்டப் பத்து ஆண்டுகள் படித்துப் பயிற்சி பெற்றப் பிறகு, உங்களுக்குக் கிடைப்பது ஒரே ஒரு மருத்துவர் மட்டுமே. உங்களுக்கு இரண்டு மருத்துவர்கள் வேண்டும் என்றால், இந்த ஒட்டுமொத்தச் செயல்முறையையும் நீங்கள் மீண்டும் முதலிலிருந்து துவக்கியாக வேண்டும். இதற்கு நேர்மாறாக, வாட்சனுக்கு இடைஞ்சலாக இருக்கின்ற தொழில்நுட்பப்

பிரச்சனைகளுக்கு நீங்கள் தீர்வு கண்டுவிட்டால், உங்களுக்கு ஒரே ஒரு மருத்துவருக்கு பதிலாக எண்ணற்ற மருத்துவர்கள் கிடைப்பர். உலகின் ஒவ்வொரு மூலையிலும் தினமும் இருபத்து நான்கு மணிநேரமும் அவற்றின் சேவை உங்களுக்குக் கிடைக்கும். வாட்சனை முழுமையாகச் செயல்பட வைப்பதற்குப் பத்தாயிரம் கோடி டாலர்கள் செலவானாலும்கூட, நீண்டகால நோக்கில் பார்க்கும்போது, மனித மருத்துவர்களுக்குப் பயிற்சியளிப்பதற்கு ஆகக்கூடிய செலவைவிட இது மிகக் குறைவாகவே இருக்கும்.

ஆனால் அதற்காக எல்லா மனித மருத்துவர்களும் ஒரேயடியாக மறைந்துவிட மாட்டார்கள். ஒருவர் என்ன நோயால் பாதிக்கப்பட்டுள்ளார் என்பதைக் கண்டுபிடிப்பதற்குத் தேவையான படைப்பாற்றலைவிட அதிகப் படைப்பாற்றல் தேவைப்படுகின்ற வேலைகள் இன்னும் வெகு காலத்திற்கு மனிதர்களின் கைகளில்தான் இருக்கும். இருபத்தோராம் நூற்றாண்டின் ராணுவம் எப்படித் தன்னுடைய சிறப்புப் படைகளின் அளவை அதிகரித்துக் கொண்டிருக்கிறதோ, அதேபோல எதிர்கால உடல்நலப் பராமரிப்புச் சேவைகளும் அதிசிறப்புப் பயிற்சி பெற்ற மருத்துவர்களுக்குத் திறந்துவிடப்படக்கூடும். ஆனாலும், ராணுவத்திற்கு எப்படி லட்சக்கணக்கான சாதாரண வீரர்கள் இனியும் தேவையில்லையோ, அதேபோல எதிர்காலத்தில் உடல்நலப் பராமரிப்புச் சேவைகளுக்கு லட்சக்கணக்கான சாதாரண மருத்துவர்கள் தேவைப்பட மாட்டார்கள்.

மருத்துவர்களின் விஷயத்தில் எது உண்மையோ, அது மருந்தாளர்களின் விஷயத்திலும் உண்மையாக இருக்கிறது. 2011ல் சான்பிரான்சிஸ்கோவில் ஒரு மருந்தகம் திறக்கப்பட்டது. ஒரே ஒரு ரோபாட் மட்டுமே அதை நிர்வகித்துக் கொண்டிருக்கிறது. ஒரு மனிதர் அந்த மருந்தகத்திற்குள் வரும்போது, ஒருசில நொடிகளுக்குள் அந்த ரோபாட் அவருடைய மருந்துச் சீட்டுகள் அனைத்தையும் வாங்கிக் கொண்டு, அவருக்கு ஏதேனும் ஒவ்வாமைகள் இருந்தால் அவற்றைப் பற்றியும், அவர் ஏற்கனவே உட்கொண்டு கொண்டிருக்கின்ற பிற மருந்துகளைப் பற்றியும் விபரமாகத் தகவல் சேகரித்துக் கொள்ளுகிறது. அந்த ரோபாட் வேலை செய்யத் தொடங்கி ஓராண்டில், ஒரு தவறுகூடச் செய்யாமல் இருபது லட்சம் மருந்துச் சீட்டுகளைக் கையாண்டு மருந்துகளை வழங்கியது. ஆனால், மனித மருந்தாளர்கள் சராசரியாக 1.17 சதவீத மருந்துச் சீட்டுகளில் தவறிழைக்கின்றனர். இதன்படி, அமெரிக்காவில் ஆண்டுதோறும் 5 கோடி மருந்துச் சீட்டுகள் தவறாகக் கையாளப்படுகின்றன.

தம்முடைய தொழிலில் உள்ளடங்கியுள்ள தொழில்நுட்ப

அம்சங்களில் மனித மருத்துவர்களையும் மனித மருந்தாளர்களையும்விட ஒரு படிமுறைத் தீர்வால் அதிகச் சிறப்பாகச் செயல்பட முடியும் என்றாலும்கூட, மனிதத் தொடுதலுக்கு அது ஒருபோதும் ஒரு மாற்றாக ஆக வாய்ப்பில்லை என்று சிலர் வாதிடுகின்றனர். உங்களுக்குப் புற்றுநோய் இருப்பதாக உங்களுடைய சி.டி. ஸ்கேன் உணர்த்தினால், இச்செய்தியை எந்த உணர்ச்சியும் இல்லாத ஓர் இயந்திரத்தின் வாயிலாக நீங்கள் பெற விரும்புவீர்களா அல்லது உங்களுடைய உணர்ச்சிகள்மீது அக்கறை காட்டுகின்ற ஒரு மனித மருத்துவரிடமிருந்து அதை நீங்கள் தெரிந்து கொள்ள விரும்புவீர்களா? ஒருவேளை, உங்களுடைய உணர்ச்சிகளுக்கும் ஆளுமைக்கும் ஏற்றாற்போலப் பேசக்கூடிய ஓர் இயந்திரம் அச்செய்தியை உங்களிடம் தெரிவிக்கும் என்றால், அது குறித்து உங்கள் கருத்து என்ன? உயிரினங்கள் என்பவை படிமுறைத் தீர்வுகளே என்பதை நினைவில் கொள்ளுங்கள். அதோடு, வாட்சன் உங்களுடைய கட்டிகளை எவ்வளவு துல்லியமாகக் கண்டுபிடிக்கிறதோ, அதே அளவு துல்லியமாக அதனால் உங்களுடைய உணர்ச்சிகளையும் தெரிந்து கொள்ள முடியும்.

ஒரு மனித மருத்துவர் உங்களுடைய முகபாவங்கள், உங்கள் குரலின் தொனி போன்ற புறவயமான சமிக்கைகளை ஆய்வு செய்வதன் மூலம் உங்களுடைய உணர்ச்சி நிலையை அறிந்து கொள்ளுகிறார். ஆனால், அந்தப் புறவயமான சமிக்கைகளை மட்டுமல்லாமல், பொதுவாக நம்முடைய கண்களிடமிருந்தும் செவிகளிடமிருந்தும் மறைந்தே இருக்கின்ற எண்ணற்ற அகவயமான நிலைகாட்டிகளையும் ஒரு மனித மருத்துவரைவிட வாட்சனால் அதிகத் துல்லியமாக ஆய்வு செய்ய முடியும். அதோடு, உங்களுடைய ரத்த அழுத்தம், மூளை நடவடிக்கைகள், எண்ணற்றப் பிற உயிரியளவுத் தகவல்கள் ஆகியவற்றைக் கண்காணிப்பதன் மூலம், நீங்கள் எவ்வாறு உணருகிறீர்கள் என்பதை வாட்சனால் தெரிந்து கொள்ள முடியும். முந்தைய சமூக உறவாடல்களிலிருந்து திரட்டப்பட்டக் கோடிக்கணக்கான புள்ளிவிபரங்களின் காரணமாக, நீங்கள் செவிமடுக்க வேண்டியவற்றை உங்களுக்கு ஏற்றச் சரியான தொனியில் வாட்சனால் உங்களிடம் கூற முடியும். அளவுக்கதிகமாகக் கொண்டாடப்படுகின்ற உணர்ச்சிசார் அறிவு இருந்தும்கூட, மனிதர்கள் பல சமயங்களில் தங்கள் சொந்த உணர்ச்சிகளால் ஆட்கொள்ளப்பட்டுத் திக்குமுக்காடிப் போகின்றனர், அதன் விளைவாக அவர்கள் ஆக்கபூர்வமற்ற வழிகளில் எதிர்வினையாற்றுகின்றனர். எடுத்துக்காட்டாக, அவர்கள் ஒரு கோபமான நபரை எதிர்கொள்ளும்போது கத்தத் தொடங்குகின்றனர்; பயத்தால்

ஆட்கொள்ளப்பட்டுள்ள ஒரு நபர் கூறுவதைக் கேட்கும்போது தங்கள் சொந்த பயங்கள் தறிகெட்டு ஓட அவர்கள் அனுமதித்துவிடுகின்றனர். வாட்சன் இப்படிப்பட்டத் தூண்டுதல்களுக்கு ஆளாகாது. தனக்கென்று எந்த உணர்ச்சியும் இல்லாத அது, எப்போதும் உங்களுடைய உணர்ச்சி நிலைக்கு மிகப் பொருத்தமான செயல்விடையை வழங்கும்.

இந்த யோசனை ஏற்கனவே வாடிக்கையாளர் சேவைத் துறைகள் சிலவற்றில் ஓரளவுக்குச் செயல்படுத்தப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக, மேட்டர்சைட் நிறுவனம் அதைச் செயல்படுத்தியுள்ளது. அதன் விளம்பரம் இவ்வாறு அமைகிறது: "நீங்கள் ஒருவரிடம் பேசிய ஒருசில நிமிடங்களிலேயே, அவருடன் உங்களுக்கு நன்றாக ஒத்துப் போவது போன்ற ஓர் உணர்வை நீங்கள் அனுபவித்திருக்கிறீர்களா? இந்த மாயாஜாலமான உணர்வு உங்களுக்கு ஏற்படுவதற்குக் காரணம் ஓர் ஆளுமைப் பிணைப்புதான். மேட்டர்சைட் நிறுவனம் அந்த உணர்வை உலகம் நெடுகிலுமுள்ள தகவல் சேவை மையங்களில் ஒவ்வொரு நாளும் உருவாக்குகிறது." நீங்கள் ஏதோ ஒரு புகாருடனோ அல்லது ஒரு கோரிக்கையுடனோ ஒரு வாடிக்கையாளர் சேவை மையத்தைத் தொடர்பு கொள்ளும்போது, மேட்டர்சைட் நிறுவனம் உங்களுடைய அழைப்பை ஒரு சாதுரியமான படிமுறைத் தீர்வைக் கொண்டு பொருத்தமான நபரிடம் கொண்டுபோய்ச் சேர்க்கிறது. முதலில் நீங்கள் உங்கள் அழைப்பிற்கான காரணத்தை அதனிடம் தெரிவிக்க வேண்டும். அந்தப் படிமுறைத் தீர்வு உங்கள் பிரச்சனையைக் கேட்டுவிட்டு, நீங்கள் பயன்படுத்தியுள்ள வார்த்தைகளையும் உங்கள் குரலின் தொனியையும் ஆய்வு செய்துவிட்டு, உங்களுடைய தற்போதைய உணர்ச்சி நிலையை மட்டுமல்லாமல் உங்களுடைய ஆளுமை வகையையும் பற்றி ஒரு முடிவுக்கு வருகிறது. நீங்கள் வெளிப்படையாகப் பேசக்கூடியவரா, யாருடனும் அவ்வளவாகக் கலந்து பழகாதவரா, போராடும் குணம் கொண்டவரா, சுதந்திரமான போக்கைக் கொண்டவரா என்றெல்லாம் அது உங்களை எடைபோடுகிறது. இந்தத் தகவல்களின் அடிப்படையில் அந்தப் படிமுறைத் தீர்வு உங்கள் மனநிலைக்கும் ஆளுமைக்கும் பொருத்தமான ஒரு பிரதிநிதியிடம் உங்கள் அழைப்பைக் கொண்டுபோய்ச் சேர்க்கிறது. உங்களுக்குத் தேவை உங்களுடைய புகார்களைப் பொறுமையாகக் கேட்கக்கூடிய, பச்சாதாப உணர்வு கொண்ட ஒருவரா அல்லது விரைவாகவும் சுற்றி வளைக்காமலும் ஒரு தொழில்நுட்பத் தீர்வை வழங்கக்கூடிய யதார்த்தமான மற்றும் அறிவார்ந்த ஒருவரா என்பதை அந்தப் படிமுறைத் தீர்வு அறிந்திருக்கிறது. குறைவான நேரத்திலும் மிகக் குறைவான செலவிலும் வாடிக்கையாளர்களுக்கு சேவை வழங்கும் அதே சமயத்தில், இது

அவர்களுக்கு மகிழ்ச்சியூட்டும் விதத்திலும் செயல்படுவதால், இதில் இரட்டை லாபம் இருக்கிறது.

## பயனற்ற வர்க்கம்

தேவைக்கு அதிகமாக இருக்கின்ற மக்களைக் கொண்டு என்ன செய்வது என்பது இருபத்தோராம் நூற்றாண்டுப் பொருளியலின் மிக முக்கியமான கேள்வியாக உருவெடுக்கக்கூடும். கிட்டத்தட்ட எல்லா வேலைகளையும் அதிகச் சிறப்பாகச் செய்யக்கூடிய, அதிக அறிவார்ந்த, பிரக்ஞையற்றப் படிமுறைத் தீர்வுகள் உருவாக்கப்பட்டவுடன், பிரக்ஞையுடன்கூடிய மனிதர்கள் என்ன செய்வார்கள்?

வரலாறு நெடுகிலும் வேலைவாய்ப்புச் சந்தை மூன்று முக்கியப் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு வந்துள்ளது: வேளாண்மை, தொழில், மற்றும் சேவைகள். 1800ம் ஆண்டுவரை, பெரும்பான்மை மக்கள் விவசாயத்தில் மட்டுமே வேலை செய்தனர், ஒரு சிறுபான்மையினரே தொழில்களிலும் சேவைகளிலும் பணியாற்றினர். தொழிற்புரட்சியின்போது, வளர்ந்த நாடுகளில் இருந்த மக்கள் வயல்களையும் பண்ணை விலங்குகளையும் கைவிட்டனர். அவர்களில் பெரும்பாலானோர் தொழிற்துறைகளில் வேலை செய்யத் தொடங்கியபோதிலும், அதிக எண்ணிக்கையிலான மக்கள் சேவைத் துறை வேலைகளில் சேர்ந்தனர். சமீபத்திய சில ஆண்டுகளில், வளர்ந்த நாடுகளில் தொழிற்துறை வேலைகள் மறைந்தபோது, சேவைத் துறை விரிவடைந்தது. 2010ல் 2 சதவீத அமெரிக்கர்களே வேளாண் துறையில் வேலை செய்தனர், 20 சதவீதத்தினர் தொழிற்துறையிலும், மீதி 78 சதவீதத்தினர் ஆசிரியர்களாகவும் மருத்துவர்களாகவும் வலைப்பக்க வடிவமைப்பாளர்களாகவும் பணியாற்றினர். பிரக்ஞையற்றப் படிமுறைத் தீர்வுகளால் மனிதர்களைவிடச் சிறப்பாகக் கற்றுக் கொடுக்கவும், நோய்களைக் கண்டறியவும், வடிவமைக்கவும் முடியும்போது, நாம் என்ன செய்வோம்?

இது முற்றிலும் புதிய கேள்வியொன்றும் அல்ல. இயந்திரமயமாக்கல் ஒட்டுமொத்த வேலை இழப்புக்கு வழி வகுக்கக்கூடும் என்று தொழிற்புரட்சி வெடித்தக் காலத்திலிருந்தே மக்கள் பயந்து வந்தனர். ஆனால் ஒட்டுமொத்த வேலையிழப்பு ஒருபோதும் நிகழவில்லை. ஏனெனில், பழைய தொழில்முறை வேலைகள் வழக்கொழிந்து போனபோது, புதிய தொழில்முறை வேலைகள் உருவாயின. மனிதர்களால் இயந்திரங்களைவிட அதிகச் சிறப்பாகச் செய்யக்கூடிய வேலைகள் எப்போதும் இருக்கத்தான் செய்தன. ஆனால் இது ஓர்

இயற்கை விதி அல்ல. எனவே, எதிர்காலத்திலும் இது தொடரும் என்பதற்கு எந்த உத்தரவாதமும் இல்லை. மனிதர்களுக்கு இரண்டு வகையான அடிப்படைத் திறன்கள் இருக்கின்றன: உடற்திறன் மற்றும் அறிவுத் திறன். உடற்திறன் தொடர்பான வேலைகளில் மட்டும் இயந்திரங்கள் மனிதர்களோடு போட்டியிட்டவரை, மனிதர்கள் சிறப்பாகச் செய்த அறிவுசார் வேலைகள் பெரும் எண்ணிக்கையில் இருந்தன. எனவே, முழுக்க முழுக்க உடலுழைப்பு சார்ந்த வேலைகளை இயந்திரங்கள் மனிதர்களிடமிருந்து அபகரித்துக் கொண்டபோது, சிறிதளவாவது அறிவுத் திறன் தேவைப்பட்ட வேலைகள்மீது மனிதர்கள் கவனம் செலுத்தினர். ஆனால், வடிவவிதங்களை நினைவில் வைத்திருப்பதிலும் ஆய்வு செய்வதிலும் உணர்ந்து கொள்ளுவதிலும் படிமுறைத் தீர்வுகள் நம்மைவிட அதிகச் சிறப்பாகச் செயல்படும்போது என்ன நிகழும்?

பிரக்ஞையற்றப் படிமுறைத் தீர்வுகளுக்கு எட்டாத ஒரு தனித்துவமான திறன் மனிதர்களுக்கு எப்போதுமே இருக்கும் என்ற யோசனை வெறும் பகற்கனவு மட்டுமே. இந்த மாயைக்குத் தற்போதைய அறிவியல்

வழங்குகின்ற பதிலை மூன்று எளிய கொள்கைகளில் தொகுத்துக் கூறிவிடலாம்:

1. உயிரினங்கள் என்பவை படிமுறைத் தீர்வுகளே. ஹோமோ சேப்பியன்ஸ் உட்பட ஒவ்வொரு விலங்கும், கோடிக்கணக்கான ஆண்டுகாலப் பரிணாம வளர்ச்சியின் ஊடாக இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறையால் வடிவமைக்கப்பட்ட இயற்கைப் படிமுறைத் தீர்வுகளின் ஒரு தொகுதிதான்.

2. படிமுறைத் தீர்வுகளின் அடிப்படையில் அமைந்த கணக்கீடுகள், அவற்றை மேற்கொள்ளுகின்ற கணிப்பான் எந்தப் பொருட்களைக் கொண்டு தயாரிக்கப்பட்டிருக்கிறதோ அப்பொருட்களால் பாதிக்கப்படுவதில்லை. அபாகஸ் எனும் எண்சட்டம் மரத்தாலோ, இரும்பாலோ, அல்லது பிளாஸ்டிக்காலோ செய்யப்பட்டிருந்தாலும், இரண்டு மணிகள் இன்னும் இரண்டு மணிகளோடு சேர்ந்தால் மொத்தம் நான்கு மணிகள்தாம் கிடைக்கும்.

3. எனவே, செயற்கைப் படிமுறைத் தீர்வுகளால் ஒருபோதும் நகலெடுக்க முடியாத விஷயங்களை இயற்கைப் படிமுறைத் தீர்வுகளால் செய்ய முடியும் என்று நினைப்பதற்கு எந்த அறிவார்ந்த காரணமும் இல்லை. கணக்கீடுகள் சரியாக இருக்கும்வரை, அந்தப் படிமுறைத் தீர்வுகள் கரிமத்தில் உருப்பெற்றிருந்தால் என்ன அல்லது சிலிக்கானில் உருப்பெற்றிருந்தால் என்ன?

செயற்கைப் படிமுறைத் தீர்வுகளைவிட இயற்கைப் படிமுறைத் தீர்வுகள் அதிகச் சிறப்பாகச் செய்கின்ற எண்ணற்ற விஷயங்கள் தற்போது இருக்கின்றன என்பது உண்மைதான். சில விஷயங்கள் 'என்றென்றைக்கும்' செயற்கைப் படிமுறைத் தீர்வுகளுக்கு எட்டாக்கனியாகவே இருக்கும் என்று வல்லுநர்கள் மீண்டும் மீண்டும் பிரகடனம் செய்கின்றனர். ஆனால் உண்மை நிலவரம் என்னவென்றால், 'என்றென்றைக்கும்' என்பதன் பொருள் ஒரு பத்து அல்லது இருபது ஆண்டுகள் என்பதுதான். சிறிது காலத்திற்கு முன்புவரை, 'முக அங்கீகாரம்' என்பது, கைக்குழந்தைகள்கூட மிக எளிதாக சாதிக்கின்ற, ஆனால் மிகவும் சக்திவாய்ந்த கணினிகள் கிரகித்துக் கொள்ளத் தவறிய ஒரு விஷயத்திற்கான ஒரு பிரபலமான எடுத்துக்காட்டாக இருந்தது. இன்று, முக அங்கீகார நிரல்கள் மனிதர்களைவிட அதிகத் துல்லியமாகவும் அதிக விரைவாகவும் மக்களை அடையாளம் காணக்கூடியவையாக ஆகியுள்ளன. குற்றம் இழைத்துள்ளதாக சந்தேகிக்கப்படுகின்ற நபர்களையும் குற்றவாளிகளையும் கண்டுபிடிப்பதற்காக, கண்காணிப்புக் கேமராக்கள் படம்பிடித்துப் பதிவு செய்துள்ள, எண்ணற்ற மணிநேரம் ஓடக்கூடிய வீடியோ பதிவுகளை ஆய்வு செய்வதற்காக இப்படிப்பட்ட முக அங்கீகார நிரல்களைக் காவல் துறையினரும் உளவுத் துறையினரும் இன்று பரவலாகப் பயன்படுத்துகின்றனர்.

1980களில், மனிதகுலத்தின் தனித்துவமான இயல்பைப் பற்றி மக்கள் விவாதித்தபோது, மனிதன் பிற எல்லா உயிரினங்களையும்விட மிகவும் உயர்ந்தவன் என்பதை நிரூபிப்பதற்கான ஒரு முதன்மை ஆதாரமாகச் சதுரங்கத்தை அவர்கள் அடிக்கடிப் பயன்படுத்தினர். சதுரங்க விளையாட்டில் கணினிகளால் மனிதர்களை ஒருபோதும் தோற்கடிக்க முடியாது என்று அவர்கள் நம்பினர். 1996ம் ஆண்டு பிப்ரவரி 10ம் நாளன்று, ஐபிஎம் உருவாக்கிய 'டீப் ப்ளூ' கணினி, உலக சதுரங்க சாம்பியனான கேரி கேஸ்பரோவைத் தோற்கடித்து, மனிதர்களுடைய அந்தக் குறிப்பிட்ட நம்பிக்கையைத் தவிடுபொடியாக்கியது.

டீப் ப்ளூவை உருவாக்கியவர்கள், சதுரங்கத்தின் அடிப்படை விதிமுறைகளை மட்டுமல்லாமல், சதுரங்க உத்திகள் தொடர்பான விரிவான அறிவுறுத்தல்களையும் அதில் முன்கூட்டியே பதிவு செய்து அதற்கு ஒரு கூடுதல் அனுகூலத்தைக் கொடுத்திருந்தனர். புதிய தலைமுறை செயற்கை நுண்ணறிவு அமைப்புகள், மனித அறிவுரைகளைவிட 'இயந்திரக் கற்றல்' செயல்முறையைப் பெரிதும் விரும்புகின்றன. 2015ம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில், 'கூகுள் டீப்மைன்ட்' நிறுவனம் உருவாக்கிய ஒரு நிரல், பல ஆண்டுகளுக்கு

முன்பு அட்டாரி நிறுவனம் உருவாக்கியிருந்த வீடியோ விளையாட்டுக்களில் 49 விளையாட்டுக்களை (பேக்மேன் விளையாட்டில் தொடங்கிக் கார் பந்தயம்வரை) விளையாடத் தனக்குத் தானே கற்றுக் கொடுத்துக் கொண்டது. பிறகு, அவற்றில் பெரும்பாலானவற்றை மனிதர்களைவிடச் சிறப்பாகவோ அல்லது மனிதர்கள் அளவுக்குச் சிறப்பாகவோ அது விளையாடியது. சில சமயங்களில், அவ்விளையாட்டுக்களை விளையாடுகின்ற மனிதர்கள் ஒருபோதும் யோசித்திராத உத்திகளையும் அது கண்டுபிடித்தது.



படம் **45:** '**டீப் புளூ**' கணினி கேரி கேஸ்பரோவைத் தோற்கடிக்கிறது.

பிறகு, கூகுள் நிறுவனத்தின் 'ஆல்ஃபாகோ' மென்பொருள், சதுரங்கத்தைவிட அதிகச் சிக்கலான, பண்டைய சீனர்கள் கண்டுபிடித்த உத்திசார் பலகை விளையாட்டான 'கோ' என்ற விளையாட்டை விளையாடத் தனக்குத் தானே கற்றுக் கொடுத்துக் கொண்டபோது, செயற்கை நுண்ணறிவுக்கு ஒரு பிரமிக்கத்தக்க வெற்றி கிடைத்தது. அவ்விளையாட்டின் நுணுக்கங்கள் செயற்கை நுண்ணறிவால் ஒருபோதும் எட்டப்பட முடியாத நிலையில் இருந்ததாக நெடுங்காலமாகக் கருதப்பட்டு வந்திருந்தது. 2016ம் ஆண்டு மார்ச் மாதத்தில், சியோல் நகரில் ஆல்ஃபாகோவுக்கும் தென்கொரிய 'கோ' சேம்பியனான லீ செடாலுக்கும் இடையே ஒரு போட்டி நடைபெற்றது. பாரம்பரியத்திற்கு மாறான நகர்த்தல்களையும் அசலான உத்திகளையும் பயன்படுத்தி 4-1 என்ற கணக்கில் ஆல்ஃபாகோ லீயைத் தோற்கடித்து வல்லுநர்களை அதிர்ச்சிக்குள்ளாக்கியது. அப்போட்டி தொடங்குவதற்கு முன்பாக, லீ நிச்சயமாக வெற்றி பெற்றுவிடுவார் என்று தொழில்முறை 'கோ' விளையாட்டுக்காரர்களில் பெரும்பாலானோர் உறுதியாக நம்பினர். ஆனால் அப்போட்டியில் ஆல்ஃபாகோவின்

நகர்த்தல்களையும் அது பயன்படுத்திய உத்திகளையும் ஆய்வு செய்த பிறகு, ஆல்ஃபாகோவையும் அதன் வாரிசுகளையும் மனிதர்களால் இனி ஒருபோதும் தோற்கடிக்க முடியாது என்ற முடிவுக்குப் பெரும்பாலானோர் வந்துவிட்டனர்.

சமீபத்தில் பந்து விளையாட்டுக்களிலும் கணினிப் படிமுறைத் தீர்வுகள் தம்முடைய முத்திரையைப் பதித்துள்ளன. பலப்பல ஆண்டுகளாக, பேஸ்பால் விளையாடுவதற்கு வீரர்களைத் தேர்ந்தெடுப்பதற்குத் தொழில்முறைத் தேர்ந்தெடுப்பாளர்கள் மற்றும் மேலாளர்களின் அறிவையும் அனுபவத்தையும் உள்ளுணர்வையும் மட்டுமே பேஸ்பால் அணிகள் பயன்படுத்தி வந்தன. தலைசிறந்த விளையாட்டு வீரர்கள் கோடிக்கணக்கான டாலர்களை ஈட்டிக் கொடுத்தனர். எனவே, இயல்பாக, பணக்கார அணிகள் அத்தகைய வீரர்களைக் கைவசப்படுத்தின. ஆனால், ஏழை அணிகள் தமக்குக் கிடைத்ததைக் கொண்டு திருப்திப்பட்டுக் கொள்ள வேண்டியிருந்தது. 2002ல், குறைவான பட்ஜெட்டில் செயல்பட்ட 'ஓக்லேன்ட் அத்லெட்டிக்ஸ்' அணியின் மேலாளரான பில்லி பீன் இச்செயல்முறையை மாற்றியமைக்கத் தீர்மானித்தார். தேர்ந்தெடுப்பாளர்களும் மேலாளர்களும் குறைவாக மதிப்பிட்ட அல்லது உதாசீனப்படுத்திய வீரர்களைக் கொண்டு ஒரு வெற்றிகரமான அணியை உருவாக்குவதற்கு, பொருளியலாளர்களும் கணினி வல்லுநர்களும் வேறு காரணங்களுக்காக உருவாக்கிய ஒரு புதிரான கணினிப் படிமுறைத் தீர்வை அவர் பயன்படுத்தினார். அப்படிமுறைத் தீர்வு பேஸ்பால் விளையாட்டின் மதிப்பைச் சீர்குலைத்துவிட்டதாகப் பழமைவாதிகள் பீனின்மீது கடுங்கோபம் கொண்டனர். பேஸ்பால் வீரர்களைத் தேர்ந்தெடுப்பது ஒரு கலை என்றும், நீண்டகால அனுபவமும் பேஸ்பாலுடனான ஒரு நெருங்கிய உறவையும் கொண்ட மனிதர்களால் மட்டுமே அக்கலையில் மேதமை பெற முடியும் என்றும் வலியுறுத்திய அவர்கள், அவ்விளையாட்டின் ரகசியங்களையும் உள்ளார்ந்த போக்கையும் ஒரு கணினி நிரலால் ஒருபோதும் அறிந்து கொள்ள முடியாது என்பதால் அந்தப் படிமுறைத் தீர்வு ஒருபோதும் வெற்றி பெறாது என்று கூறினர்.

ஆனால் விரைவில் அவர்கள் எல்லோரும் வாயடைத்துப் போக வேண்டியதாயிற்று. ஒரு படிமுறைத் தீர்வின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்ட, பீனின் குறைந்த பட்ஜெட் (4.4 கோடி டாலர்கள்) பேஸ்பால் அணி, பெரிய பட்ஜெட் அணியான 'நியூயார்க் யேங்க்கீஸ்' (12.5 கோடி டாலர்கள்) போன்ற தலைசிறந்த அணிகளைத் தோற்கடித்ததோடு, அமெரிக்க லீக் வரலாற்றில் தொடர்ந்து இருபது

போட்டிகளில் வெற்றி பெற்ற முதல் அணி என்ற பெருமையையும் பெற்றது. ஆனால், பீன் மற்றும் அவருடைய ஓக்லேன்ட் அணியின் வெற்றிப் பயணம் நீண்டகாலம் தொடரவில்லை. ஏனெனில், விரைவில் மற்ற அணிகளும் இந்தப் படிமுறைத் தீர்வு அணுகுமுறையைப் பயன்படுத்தத் தொடங்கின. யேங்க்கீஸ் மற்றும் 'ரெட் சாக்ஸ்' அணிகளால் பேஸ்பால் வீரர்களுக்கும் கணினி மென்பொருளுக்கும் மிக அதிகப் பணத்தைக் கொடுக்க முடிந்ததால், ஓக்லேன்ட் அத்லெட்டிக்ஸ் போன்ற குறைந்த பட்ஜெட் அணிகள் பேஸ்பால் அமைப்புமுறையை எதிர்த்துச் சமாளிப்பதற்கு முன்பைவிடக் குறைவான வாய்ப்பே மிஞ்சியது.

2004ம் ஆண்டில், மசாசூசெட்ஸ் பல்கலைக்கழகப் பேராசிரியரான ஃபிராங்க் லெவியும் ஹார்வர்டு பல்கலைக்கழகப் பேராசிரியரான ரிச்சர்டு மர்னேனும் சேர்ந்து வேலைவாய்ப்புச் சந்தையை முழுமையாக ஆய்வு செய்து ஓர் அறிக்கையைப் பிரசுரித்தனர். எந்தெந்தத் தொழில்முறை வேலைகள் இயந்திரமயமாக்கலுக்கு உட்படக்கூடும் என்பது குறித்து அவர்கள் ஒரு பட்டியலை அதில் வெளியிட்டனர். எதிர்காலத்தில் அவ்வளவு சீக்கிரமாக இயந்திரமயமாக்கப்பட முடியாத வேலைகளில் ஒன்று லாரி ஓட்டுவது என்று அவர்கள் குறிப்பிட்டனர். போக்குவரத்து மும்முரமாக இருக்கின்ற ஒரு சாலையில் லாரிகளை கவனமாக ஓட்டக்கூடிய படிமுறைத் தீர்வுகளைப் பற்றிக் கற்பனை செய்வதுகூடக் கடினம் என்று அவர்கள் எழுதினர். ஆனால் வெறும் பத்து ஆண்டுகளில், கூகுளும் டெஸ்லாவும் அதைக் கற்பனை செய்ததோடு மட்டுமல்லாமல், அதை உண்மையிலேயே நிகழ்த்திக் கொண்டும் இருக்கின்றனர்.

யதார்த்தத்தில், காலம் செல்ல செல்ல, மனிதர்களுக்கு மாற்றாகக் கணினிப் படிமுறைத் தீர்வுகளைப் பயன்படுத்துவது அதிக சுலபமானதாக ஆகிக் கொண்டிருக்கிறது. படிமுறைத் தீர்வுகள் அதிக சாமர்த்தியமானவையாக ஆகிக் கொண்டிருப்பது மட்டும் அதற்குக் காரணமல்ல, மாறாக, மனிதர்கள் ஒவ்வொருவரும் ஒரு குறிப்பிட்டத் துறையில் மட்டுமே நிபுணத்துவம் பெற்று வருவதும் ஒரு முக்கியக் காரணமாக இருக்கிறது. பண்டைய வேட்டையாடிகள் உயிர்பிழைத்து இருப்பதற்குப் பல வகையான திறமைகளில் அவர்கள் தங்களை வல்லவர்களாக ஆக்கிக் கொண்டனர். அதனால்தான், ஒரு 'வேட்டையாடி ரோபாட்'டை வடிவமைத்து உருவாக்குவது மிகமிகக் கடினமானதாக இருக்கும். அப்படிப்பட்ட ஒரு ரோபாட்டுக்கு, கற்கருவிகளை எப்படி உருவாக்க வேண்டும் என்பதும், உண்ணத்தக்கக் காளான்களை ஒரு காட்டில் எப்படிக் கண்டுபிடிக்க வேண்டும் என்பதும்,

தன்னுடைய இரையை எப்படித் தேடிச் செல்லுவது என்பதும் தெரிந்திருக்க வேண்டும்.

ஆனாலும், கடந்த ஒருசில ஆயிரம் ஆண்டுகளின் ஊடாக, மனிதர்களாகிய நாம் ஒவ்வொருவரும் ஒரு குறிப்பிட்டத் துறையில் மட்டுமே சிறப்புத் திறமையும் பயிற்சியும் பெற்று வந்திருக்கிறோம். ஒரு வேட்டையாடியோடு ஒப்பிடும்போது, ஒரு டாக்ஸி ஓட்டுநரோ அல்லது ஓர் இதய மருத்துவரோ ஒரு குறிப்பிட்டத் தொழிலில் மட்டுமே மேதமை பெறுகிறார். அவர்களுக்கு பதிலாகச் செயற்கை நுண்ணறிவை அவர்களுடைய வேலைகளில் ஈடுபடுத்துவது சுலபமாவதற்குக் காரணம் அதுதான். நான் மீண்டும் மீண்டும் வலியுறுத்தி வந்துள்ளதுபோல, செயற்கை நுண்ணறிவு முழுக்க முழுக்க மனிதர்களை ஒத்த நிலையை இன்னும் அடையவில்லை. ஆனால், மனிதர்களிடம் இருக்கின்ற பண்புநலன்கள் மற்றும் திறன்களில் 99 சதவீதம் பெரும்பாலான நவீன வேலைகளுக்குத் தேவைப்படுவதில்லை. மனிதர்களை வேலைவாய்ப்புச் சந்தையிலிருந்து வெளியே தூக்கி எறிவதற்குச் செயற்கை நுண்ணறிவு செய்ய வேண்டியதெல்லாம், ஒரு குறிப்பிட்டத் தொழில்முறை வேலையில் எதிர்பார்க்கப்படுகின்ற சிறப்புத் திறன்களில் மட்டும் மனிதர்களைவிட அதிகச் சிறப்பாகச் செயல்பட வேண்டியது மட்டும்தான்.

இந்த அனைத்து நடவடிக்கைகளுக்கும் பொறுப்பான மேலாளர்கள்கூடத் தூக்கியெறியப்படக்கூடும். ஊபர் டாக்ஸி நிறுவனம் தன்னுடைய சக்திவாய்ந்த படிமுறைத் தீர்வுகளின் உதவியினால், ஒருசில மனிதர்களை மட்டுமே வைத்துக் கொண்டு சுமார் பத்து லட்சம் டாக்ஸி ஓட்டுநர்களை நிர்வகிக்கிறது. அந்தப் படிமுறைத் தீர்வுகள் கொடுக்கின்ற கட்டளைகளில் பெரும்பாலானவற்றுக்கு மனித மேற்பார்வையோ அல்லது கண்காணிப்போ தேவையில்லை. மனித உறுப்புகளைப் புதுப்பிக்கும் மருத்துவத்தில் தனிச்சிறப்புப் பெற்றுள்ள, ஹாங்காங்கில் அமைந்த 'டீப் நாலெட்ஜ் வென்சர்ஸ்' என்ற ஒரு தொழில் மூலதன நிறுவனம், 2014ம் ஆண்டு மே மாதத்தில், 'வைட்டல்' என்ற பெயர் கொண்ட ஒரு படிமுறைத் தீர்வைத் தன்னுடைய இயக்குநர் குழுமத்தில் ஓர் உறுப்பினராக நியமித்து ஒரு புதுமையைச் செய்துள்ளது. தன்னுடைய நிறுவனம் வேறொரு குறிப்பிட்ட நிறுவனத்தில் முதலீடு செய்ய வேண்டுமா கூடாதா என்று தீர்மானிப்பதில் வாக்களிக்கும் உரிமை அதன் மற்ற ஐந்து உறுப்பினர்களுக்கும் இருப்பதைப்போல வைட்டலுக்கும் இருக்கிறது. ஏராளமான தகவல்களை ஒழுங்குமுறையோடு ஆய்வு செய்வதன் அடிப்படையில் அந்தப் படிமுறைத் தீர்வு தன்னுடைய

அபிப்பிராயங்களை உருவாக்குகிறது.

வைட்டல் இந்நாள்வரை செயல்பட்டு வந்துள்ள விதத்தைப் பார்க்கும்போது, மேலாளர்களுக்குரிய ஒரு மோசமான வழக்கத்தை அது ஏற்கனவே சுவீகரித்துக் கொண்டுள்ளதுபோலத் தெரிகிறது. அதாவது, அது தன் இனத்தைச் சேர்ந்தவர்களுக்கு சிறப்புச் சலுகைகளைக் கொடுக்கிறது. படிமுறைத் தீர்வுகளுக்கு அதிக அதிகாரம் வழங்குகின்ற நிறுவனங்களில் முதலீடு செய்யும்படி அது பரிந்துரைத்துள்ளது. எடுத்துக்காட்டாக, வைட்டலின் ஆசீர்வாதத்துடன், டீப் நாலெட்ஜ் நிறுவனம் சமீபத்தில் 'பாத்வே பார்மசூட்டிக்கல்ஸ்' நிறுவனத்தில் முதலீடு செய்துள்ளது. அந்நிறுவனம், தனிப்பட்டப் புற்றுநோய்ச் சிகிச்சைகளைத் தேர்ந்தெடுத்து அவற்றை மதிப்பீடு செய்வதற்கு 'ஆன்கோஃபைன்டர்' என்ற ஒரு படிமுறைத் தீர்வைப் பயன்படுத்துகிறது.

படிமுறைத் தீர்வுகள் வேலைவாய்ப்புச் சந்தையிலிருந்து மனிதர்களை வெளியே தள்ளிக் கொண்டிருக்கின்ற இந்நேரத்தில், சர்வ வல்லமை வாய்ந்த படிமுறைத் தீர்வுகளைச் சொந்தமாக வைத்திருக்கின்ற ஒருசில மேட்டுக்குடியினரின் கைகளில் செல்வமும் அதிகாரமும் குவியக்கூடும். இது முன்பு ஒருபோதும் இருந்திராத சமுதாயரீதியான சமத்துவமின்மையையும் அரசியல்ரீதியான சமத்துவமின்மையையும் உருவாக்கும். இன்று கோடிக்கணக்கான டாக்ஸி ஓட்டுநர்களும் பேருந்து ஓட்டுநர்களும் லாரி ஓட்டுநர்களும் கூட்டாகக் குறிப்பிடத்தக்கப் பொருளாதார செல்வாக்கையும் அரசியல் செல்வாக்கையும் கொண்டுள்ளனர். போக்குவரத்துச் சந்தையில் அவர்கள் ஒவ்வொருவரும் தனித்தனியே ஒரு சிறிய அளவு பங்கு வகிக்கின்றனர். அவர்களுடைய கூட்டு ஆர்வங்கள் அச்சுறுத்தலுக்கு உள்ளானால், அவர்களால் ஒரு தொழிற்சங்கத்தில் சேர முடியும், வேலை நிறுத்தப் போராட்டங்களிலும் புறக்கணிப்புப் போராட்டங்களிலும் ஈடுபட முடியும், சக்திவாய்ந்த வாக்காளர் குழுக்களை உருவாக்க முடியும். ஆனால், ஒரே ஒரு படிமுறைத் தீர்வு இந்தக் கோடிக்கணக்கான மனித ஓட்டுநர்களை வேலையைவிட்டுத் துரத்தியடிக்கும்போது, அந்தப் படிமுறைத் தீர்வு எந்த நிறுவனத்திற்குச் சொந்தமோ அந்த நிறுவனத்திடமும் அதன் கோடீஸ்வர உரிமையாளர்களிடமும் அத்தனைச் செல்வமும் அதிகாரமும் போய்ச் சேர்ந்துவிடும்.

இதற்கு மாற்றாக, அந்தப் படிமுறைத் தீர்வுகளே உரிமையாளர்களாக ஆகக்கூடும். பெருநிறுவனங்கள், நாடுகள் போன்றவை 'சட்டபூர்வமான நபர்கள்' என்று மனிதச் சட்டம் ஏற்கனவே அங்கீகரித்துள்ளது. டொயோட்டா நிறுவனத்திற்கும் அர்ஜென்டினாவுக்கும் ஓர் உடலோ

அல்லது ஒரு மனமோ இல்லாவிட்டால்கூட, அவை சர்வதேசச் சட்டவிதிகளுக்கு உட்பட்டிருக்கின்றன, அவற்றால் நிலத்தையும் பணத்தையும் சொந்தமாக்கிக் கொள்ள முடியும், நீதிமன்றத்தில் வழக்குத் தொடுக்க முடியும், அவற்றின்மீதும் வழக்குத் தொடரப்பட முடியும். இதே அந்தஸ்தை விரைவில் படிமுறைத் தீர்வுகளுக்கும் நாம் வழங்கக்கூடும். அப்போது, எந்தவொரு மனித முதலாளியின் விருப்பங்களுக்கும் கீழ்ப்படிய வேண்டிய தேவை இல்லாமல் ஒரு படிமுறைத் தீர்வால் ஒரு போக்குவரத்து சாம்ராஜ்ஜியத்தையோ அல்லது ஒரு முதலீட்டு நிதியையோ சொந்தமாக வைத்திருக்க முடியும்.

ஒரு படிமுறைத் தீர்வு மிகச் சரியான தீர்மானங்களை மேற்கொண்டால், அது ஏகப்பட்டப் பணத்தைக் குவிக்கும். பிறகு, சரியென்று தனக்குத் தோன்றுகின்ற ஒரு விஷயத்தில் அது அந்தப் பணத்தை முதலீடு செய்யும். அது உங்கள் வீட்டை வாங்கி உங்களுடைய வீட்டு உரிமையாளராக ஆகக்கூடும். நீங்கள் அதன் சட்டபூர்வமான உரிமைகளில் குறுக்கிட்டால் - எடுத்துக்காட்டாக, நீங்கள் உங்கள் வாடகைப் பணத்தை அதற்குக் கொடுக்காவிட்டால் - அது வழக்கறிஞர்களை நியமித்து நீதிமன்றத்தில் உங்கள்மீது வழக்குத் தொடுக்கக்கூடும். இப்படிப்பட்டப் படிமுறைத் தீர்வுகள் தொடர்ந்து மனிதப் பெருமுதலாளிகளைவிட அதிகச் சிறப்பாகச் செயல்பட்டால், படிமுறைத் தீர்வுகளால் ஆன ஒரு மேற்தட்டு வர்க்கம் உருவாகி நம்முடைய பூமியின் பெரும்பகுதியைத் தனக்குச் சொந்தமாக்கிக் கொள்ளக்கூடும். இது சாத்தியமற்றதாகத் தோன்றக்கூடும், ஆனால் இந்த யோசனையை உதாசீனப்படுத்துவதற்கு முன்பாக நீங்கள் ஒரு விஷயத்தை நினைத்துப் பார்ப்பது நல்லது. நாடுகள், நிறுவனங்கள் போன்ற, மனிதரல்லாத, பரஸ்பரம் பொதுவான அகவயமான யதார்த்தங்கள் ஏற்கனவே நம்முடைய பூமியின் பெரும்பகுதியை சட்டபூர்வமாக உரிமையாக்கிக் கொண்டுள்ளன. 5,000 ஆண்டுகளுக்கு முன்பு சுமேரின் பெரும்பகுதி என்கி, இனானா போன்ற கற்பனையான கடவுளருக்குச் சொந்தமாக இருந்தது. கடவுளரால் நிலங்களைச் சொந்தமாக்கிக் கொள்ளவும் ஆட்களை வேலையில் அமர்த்தவும் முடியும் என்றால், படிமுறைத் தீர்வுகளால் ஏன் அவற்றைச் செய்ய முடியாது?

அப்படியானால் மக்கள் என்ன செய்வார்கள்? மனிதர்களுக்கு மட்டுமே உரிய தனித்துவமான, உச்சகட்டப் புகலிடத்தைக் கலை நமக்கு வழங்குவதாகக் கூறப்படுகிறது. மருத்துவர்கள், ஓட்டுநர்கள், ஆசிரியர்கள், நில உரிமையாளர்கள் ஆகியோரின் இடங்களைக் கணினிகள் அபகரித்துக் கொண்டுள்ள ஓர் உலகில், எல்லோரும் ஓர்

ஓவியக் கலைஞராக ஆகிவிடுவரா? ஆனாலும், கலைப் படைப்புகளால் மட்டும் எப்படிப் படிமுறைத் தீர்வுகளிடமிருந்து பாதுகாப்பாக இருக்க முடியும்? இசையை உருவாக்குவதில் கணினிகளால் மனிதர்களை ஒருபோதும் விஞ்ச முடியாது என்று ஏன் நாம் உறுதியாக நம்புகிறோம்? உயிரியலின்படி, கலை என்பது ஏதோ மேம்பட்ட ஆன்மாவின் விளைவு அல்ல, மாறாக, கணிதம் சார்ந்த வடிவவிதங்களை அடையாளம் கண்டுகொள்ளுகின்ற இயற்கைப் படிமுறைத் தீர்வுகளின் விளைவுதான். அப்படியானால், செயற்கைப் படிமுறைத் தீர்வுகளால் ஏன் அதில் மேதமை பெற முடியாது? அதை மறுப்பதற்கு எந்த முகாந்திரமும் இல்லை.

அமெரிக்காவிலுள்ள சான்டாகுரூஸ் நகரில் அமைந்த கலிபோர்னியா பல்கலைக்கழகத்தில் இசையியல் பேராசிரியராகப் பணியாற்றிய டேவிட் கோப், செவ்விசையுலகில் அதிகச் சர்ச்சைக்குரிய ஒருவராக இருக்கிறார். கான்செர்ட்டோக்கள், கொரால்கள், சிம்பொனிக்கள், ஓப்பெராக்கள் ஆகிய இசைகளை உருவாக்கக்கூடிய கணினி நிரல்களை டேவிட் எழுதியுள்ளார். அவருடைய முதல் படைப்பு ‘ஈஎம்ஐ’ (இசையியலில் செயற்கை நுண்ணறிவுப் பரிசோதனைகள்) என்று அழைக்கப்பட்டது. பிரபல ஜெர்மானிய இசை மேதையான யோஹான் செபாஸ்டியன் பாக்கின் பாணியை அப்படியே நகலெடுப்பதில் அந்தக் கணினி நிரல் தனிச்சிறப்புப் பெற்றது. அந்த நிரலை உருவாக்குவதற்கு டேவிடுக்கு ஏழு ஆண்டுகள் ஆயின. ஆனால் அது முழுமை பெற்றபோது, அந்த ஈஎம்ஐ ஒரே நாளில் யோஹானின் பாணியில் 5,000 கொரால்களை இயற்றியது. சான்டாகுரூஸில் நடைபெற்ற இசை விழா ஒன்றில் ஒருசில கொரால்களை அரங்கேற்றுவதற்கு டேவிட் ஏற்பாடு செய்தார். பார்வையாளர்கள் அந்த அற்புதமான இசையைப் புகழ்ந்ததோடு, அது எப்படித் தங்களுடைய மனத்தின் ஆழத்தைத் தொட்டிருந்தது என்பதையும் விளக்கினர். ஆனால் அந்த இசையை இயற்றியிருந்தது ‘ஈஎம்ஐ’தானே அன்றி, யோஹான் அல்ல என்பதை அவர்கள் அறியவில்லை. உண்மை வெளிப்படுத்தப்பட்டபோது, அவர்களில் சிலர் மௌனமாயினர், மற்றவர்கள் கடும் கோபத்தை வெளிப்படுத்தினர்.

ஈஎம்ஐ தொடர்ந்து மேம்பட்டு, பீத்தோவன், சோப்பின், ராக்மனினோவ், ஸ்ட்ராவின்ஸ்கி போன்றோரை நகலெடுக்கக் கற்றுக் கொண்டது. கோப் தன்னுடைய நிரலுக்கு ஓர் ஒப்பந்தத்தைப் பெற்று, ‘கணினியால் இயற்றப்பட்டச் செவ்விசை’ என்ற அதன் முதல் இசைத்தட்டை வெளியிட்டார். அது சிறப்பாக விற்பனையாகி எல்லோரையும் ஆச்சரியப்படுத்தியது. அதே சமயத்தில், இந்த

இசைத்தட்டிற்குக் கிடைத்தப் பிரபலத்துவம் செவ்விசை ஆர்வலர்களிடத்தில் கடும் கோபத்தையும் வெறுப்பையும் தூண்டியது. அமெரிக்காவின் ஆரெகன் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் ஸ்டீவ் லார்சன் ஓர் இசைப் போட்டியில் கலந்து கொள்ளும்படி டேவிடுக்கு அழைப்பு விடுத்தார். அப்போட்டியில், தொழில்முறை பியானோ கலைஞர்கள், மூன்று வெவ்வேறு நபர்கள் இயற்றிய இசையை ஒன்றன்பின் ஒன்றாக வாசிக்க வேண்டும் என்று லார்சன் பரிந்துரைத்தார். அவற்றில் ஒன்று யோஹான் இயற்றியதாகவும், இன்னொன்று ஈஎம்ஐ இயற்றியதாகவும், மூன்றாவது தானே (லார்சன்) இயற்றியதாகவும் இருக்க வேண்டும் என்று அவர் கூறினார். அக்கச்சேரி முடிந்த பிறகு, அம்மூன்றில் யார் எதை இயற்றினார்கள் என்று கணிக்குமாறு பார்வையாளர்களிடம் கேட்டுக் கொள்ளப்படும். மனிதர்களால் இயற்றப்பட்ட, ஆன்மாவைக் கிளர்ந்தெழச் செய்கின்ற இசைக்கும், ஓர் இயந்திரம் உருவாக்குகின்ற ஜீவனற்ற ஒரு கலைப் படைப்புக்கும் இடையேயான வேறுபாட்டை மக்களால் சுலபமாக அடையாளம் காண முடியும் என்று லார்சன் உறுதியாக நம்பினார். டேவிட் அந்த சவாலை ஏற்றுக் கொண்டார். குறிப்பிட்ட நாளன்று நூற்றுக்கணக்கான பேராசிரியர்களும் மாணவர்களும் இசை ரசிகர்களும் ஆரெகான் பல்கலைக்கழகத்தின் இசையரங்கில் கூடினர். அந்த இசை நிகழ்ச்சியின் முடிவில், ஒரு கணிப்பு நடத்தப்பட்டது. அதன் விளைவு? ஈஎம்ஐ இயற்றிய இசை உண்மையானதாக இருந்ததாகவும், யோஹானின் இசையை லார்சன் இயற்றியிருந்ததாகவும், லார்சனின் இசையை ஒரு கணினி உருவாக்கியிருந்ததாகவும் பார்வையாளர்கள் கருதினர்.

ஈஎம்ஐயின் இசை தொழில்நுட்பரீதியாக அருமையாக இருக்கிறது, ஆனால் அதில் ஏதோ ஒரு குறைபாடு உள்ளது என்று விமர்சகர்கள் தொடர்ந்து வாதிடுகின்றனர். அதன் இசை அளவுக்கதிகமாகத் துல்லியமாக இருப்பதாகவும், ஆனால் அதில் ஜீவன் இல்லை என்றும் அவர்கள் கூறுகின்றனர். ஆனாலும், ஈஎம்ஐ இயற்றிய பல்வேறு இசைப் படைப்புகளை (அவை ஈஎம்ஐயால் இயற்றப்பட்டவை என்பது தெரியாமல்) மக்கள் கேட்டபோது, அந்த இசைப் படைப்புகள் தங்களுடைய ஆன்மாவைத் தொட்டதாகவும், அவற்றிலிருந்த ஜீவன் தங்கள் உணர்ச்சிகளைத் தூண்டியதாகவும் கூறி அவர்கள் அவற்றைப் புகழ்ந்தனர்.

ஈஎம்ஐயின் வெற்றியைத் தொடர்ந்து, டேவிட் இன்னும் புதிய, அதிக நவீனமான நிரல்களை உருவாக்கினார். 'ஆனி' என்பது அவருடைய மிகப் பிரபலமான படைப்பு. ஈஎம்ஐ நிரல், முன்கூட்டியே

தீர்மானிக்கப்பட்ட விதிமுறைகளுக்கு ஏற்ப இசையை இயற்றியது; ஆனால் ஆனி, இயந்திரக் கற்றலின் அடிப்படையில் அமைந்துள்ளது. அதன் இசைப் பாணி, புறவுலகிலிருந்து வருகின்ற புதிய உள்ளீடுகளுக்கு ஏற்பத் தொடர்ந்து மாறவும் வளரவும் செய்கிறது. ஆனி அடுத்து எதை இயற்றப் போகிறது என்பது பற்றி டேவிடுக்கு எந்த யோசனையும் இல்லை. இசையை இயற்றுவதோடு ஆனி தன்னை மட்டுப்படுத்திக் கொள்ளவில்லை, மாறாக, ஹைக்கூ கவிதை போன்ற பிற கலை வடிவங்களையும் அது முயற்சித்துப் பார்க்கிறது. 'கம்ஸ் த ஃபயரி நைட்: 2,000 ஹைக்கூ பை மேன் அன்ட் மெஷின்' என்ற நூலை 2011ல் டேவிட் வெளியிட்டார். அதில் இடம்பெற்றிருந்த ஹைக்கூ கவிதைகளில் சிலவற்றை ஆனி எழுதியிருந்தது, வேறு சிலவற்றை உண்மையான கவிஞர்கள் எழுதியிருந்தனர். ஆனியின் கவிதைகள் எவை, மற்றவர்களுடைய கவிதைகள் எவை என்பதை அந்நூல் வெளிப்படுத்தவில்லை. மனிதப் படைப்பாற்றலுக்கும் இயந்திரத்தின் படைப்புக்கும் இடையேயான வேறுபாட்டை உங்களால் கூற முடியும் என்று நீங்கள் நினைத்தால், அதை நீங்கள் தாராளமாக சோதித்துப் பார்க்கலாம்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தொழிற்புரட்சி ஒரு மிகப் பெரிய, புதிய, நகர்ப்புறப் பாட்டாளி வர்க்கத்தை உருவாக்கியது. இப்புதிய பாட்டாளி வர்க்கத்தின் புதிய தேவைகளுக்கும் எதிர்பார்ப்புகளுக்கும் பயங்களுக்கும் வேறு எந்தவோர் இயக்கத்தாலும் பதிலளிக்க முடியாததால் சோசியலிசம் பரவியது. சோசியலிய அமைப்புமுறையில் இருந்த சிறப்பான அம்சங்களை சுவீகரித்துக் கொண்டதன் மூலமாக மட்டுமே தாராளவாதம் இறுதியில் சோசியலிசத்தைத் தோற்கடித்தது. இருபத்தோராம் நூற்றாண்டில் ஒரு மாபெரும் புதிய வர்க்கம் உருவாவதை நாம் பார்க்கக்கூடும். 'வேலையற்ற வர்க்கம்'தான் அது. பொருளாதாரரீதியாகவும் அரசியல்ரீதியாகவும் கலைரீதியாகவும்கூட எந்த மதிப்பும் இல்லாத மக்களை உள்ளடக்கிய வர்க்கம் அது. சமுதாயத்தின் செழிப்புக்கும் சக்திக்கும் பெருமைக்கும் அந்த வர்க்கம் எந்தவிதமான பங்களிப்பையும் வழங்கப் போவதில்லை. இந்தப் 'பயனற்ற வர்க்கம்' வேலையின்றி இருப்பதோடு மட்டுமல்லாமல், வேலைக்கு நியமிக்கப்படத் தகுதியற்றதாகவும் இருக்கும்.

2013ம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில், ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த கார்ல் பெனடிக்ட் ஃபிரே, மைக்கெல் ஏ. ஓஸ்போர்ன் ஆகிய இரண்டு ஆராய்ச்சியாளர்கள், 'த ஃபியூச்சர் ஆஃப் எம்ப்ளாய்மென்ட்' என்ற ஓர் ஆய்வறிக்கையை வெளியிட்டனர். அடுத்த இருபது ஆண்டுகளில் எந்தெந்தத் தொழில்முறை

வேலைகளையெல்லாம் கணினிப் படிமுறைத் தீர்வுகள் மனிதர்களிடமிருந்து பறிக்கக்கூடிய வாய்ப்பு இருக்கிறது என்பது பற்றி அதில் அவர்கள் ஆய்வு செய்தனர். கணக்கிடுவதற்கு ஃபிரேயும் ஓஸ்போர்னும் உருவாக்கிய படிமுறைத் தீர்வு, 47 சதவீத அமெரிக்க வேலைகள் பறிபோகக்கூடும் என்று கணக்கிட்டது. எடுத்துக்காட்டாக, தொலைபேசி வழியாக மார்க்கெட்டிங் செய்கின்ற மனிதர்களும் காப்பீட்டு எழுத்துறுதி வழங்குவோரும் 2033ம் ஆண்டுக்குள் படிமுறைத் தீர்வுகளிடம் தங்கள் வேலைகளை இழப்பதற்கு 99 சதவீத சாத்தியக்கூறு இருக்கிறது. இதே நிலைமை விளையாட்டு நடுவர்களுக்கு ஏற்படுவதற்கு 98 சதவீத சாத்தியக்கூறும், காசாளர்களுக்கு 97 சதவீத சாத்தியக்கூறும், சமையற்காரர்களுக்கு 96 சதவீத சாத்தியக்கூறும் இருக்கிறது. உணவகச் சிப்பந்திகள் - 94 சதவீதம். வழக்கறிஞர்களின் உதவியாளர்கள் - 94 சதவீதம். சுற்றுலா வழிகாட்டிகள் - 91 சதவீதம். பேக்கரிப் பொருட்களைத் தயாரிப்போர் - 89 சதவீதம். பேருந்து ஓட்டுநர்கள் - 89 சதவீதம். கட்டுமானத் தொழிலாளர்கள் - 88 சதவீதம். விலங்குகள் நல மருத்துவர்களின் உதவியாளர்கள் - 86 சதவீதம். பாதுகாவலர்கள் - 84 சதவீதம். கடலோடிகள் - 83 சதவீதம். மதுவிடுதிகளில் மது பரிமாறுவோர் - 77 சதவீதம். ஆவணக் காப்பாளர்கள் - 76 சதவீதம். தச்சர்கள் - 72 சதவீதம். கடற்கரையில் பணியாற்றும் உயிர்க்காப்பாளர்கள் - 67 சதவீதம். பட்டியல் இப்படி நீண்டு கொண்டே போகும். சில பாதுகாப்பான வேலைகளும் இருக்கத்தான் செய்கின்றன. கணினிப் படிமுறைத் தீர்வுகள் 2033ம் ஆண்டுக்குள் தொல்பொருள் ஆய்வாளர்களின் இடத்தைப் பிடித்துக் கொள்ளுவதற்கான சாத்தியம் 0.7 சதவீதம் மட்டுமே இருக்கிறது. ஏனெனில், பல்வேறு வகைப்பட்ட வடிவவிதங்களை அடையாளம் காணக்கூடிய அசாத்தியத் திறன் அந்த வேலைக்குத் தேவையாக இருக்கிறது. மேலும், அந்த வேலையில் பெரிய லாபங்கள் எதுவும் கிட்டாது. எனவே, அடுத்த இருபது ஆண்டுகளுக்குள் தொல்பொருள் ஆராய்ச்சித் துறையை இயந்திரமயமாக்குவதற்கு அரசோ அல்லது நிறுவனங்களோ தேவையான முதலீடுகளைச் செய்யப் போவதில்லை.

அதே நேரம், 2033ம் ஆண்டுக்குள் பல புதிய தொழில்முறை வேலைகள் தோன்றுவதற்கான சாத்தியம் தெரிகிறது (எ.கா. மெய்நிகர் உலக வடிவமைப்பாளர்கள்). ஆனால் அத்தகைய வேலைகளுக்கு மற்ற சாதாரண வேலைகளைவிட அதிகப் படைப்பாற்றலும் வளைந்து கொடுத்துப் போகும் தன்மையும் தேவைப்படும். நாற்பது வயதுக் காசாளர்களோ அல்லது காப்பீட்டு முகவர்களோ மெய்நிகர் உலக

வடிவமைப்பாளர்களாகத் தங்களை மாற்றிக் கொள்ள முடியுமா என்பது தெளிவாகத் தெரியவில்லை (ஒரு காப்பீட்டு முகவரால் உருவாக்கப்பட்ட மெய்நிகர் உலகம் ஒன்றைக் கற்பனை செய்ய முயற்சித்துப் பாருங்கள்!). ஒருவேளை அவர்களால் அது முடிந்தால்கூட, இன்னுமொரு பத்து ஆண்டுகளுக்குள் அவர்கள் மீண்டும் தங்களைப் புதுப்பித்துக் கொள்ள வேண்டியிருக்கும். ஏனெனில், மெய்நிகர் உலகங்களை வடிவமைப்பதிலும்கூடப் படிமுறைத் தீர்வுகள் மனிதர்களை விஞ்சக்கூடும். புதிய வேலைகளை உருவாக்குவது இங்குள்ள முக்கியப் பிரச்சனை அல்ல, மாறாக, படிமுறைத் தீர்வுகளைவிட மனிதர்கள் அதிகச் சிறப்பாகச் செய்யக்கூடிய புதிய வேலைகளை உருவாக்குவதுதான் முக்கியப் பிரச்சனையாகும்.

2030ம் ஆண்டிலோ அல்லது 2040ம் ஆண்டிலோ வேலைவாய்ப்புச் சந்தை எப்படி இருக்கும் என்பது யாருக்கும் தெரியாது என்பதால், தங்களுடைய குழந்தைகளுக்கு எதைக் கற்றுக் கொடுக்க வேண்டும் என்பது குறித்துப் பெற்றோர் மிகவும் குழம்பிப் போயிருக்கின்றனர். தற்போது அக்குழந்தைகள் தங்கள் பள்ளிகளில் படிக்கின்ற விஷயங்கள் அவர்களுக்கு நாற்பது வயது ஆகும்போது சற்றும் பொருத்தமில்லாதவையாக ஆகிவிடும். பாரம்பரியமாக, வாழ்க்கை இரண்டு முக்கியப் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது: முதலாவது, கற்றலுக்கான ஒரு காலகட்டம்; அதைத் தொடர்ந்து, ஏதாவது ஒரு வேலை செய்வதற்கான ஒரு காலகட்டம். இந்தப் பாரம்பரிய மாதிரி விரைவில் வழக்கொழிந்து போய்விடும். மனிதர்கள் தொடர்ந்து தாக்குப்பிடிப்பதற்கு, அவர்கள் தங்கள் வாழ்நாள் முழுவதும் தொடர்ந்து கற்றுக் கொண்டே இருக்க வேண்டும், தங்களை மீண்டும் மீண்டும் புதுப்பித்துக் கொண்டே இருக்க வேண்டும். பெரும்பாலான மனிதர்களால் இதைச் செய்ய முடியாது.

வரவிருக்கும் தொழில்நுட்பச் செழிப்பு, இந்தப் பயனற்ற மக்களுக்கு உணவும் ஆதரவும் வழங்குவதைச் சாத்தியமாக்கும் - அவர்கள் எந்த முயற்சியும் மேற்கொள்ளாவிட்டாலும்கூட. ஆனால் அவர்கள் எதில் தங்களை மும்முரமாக வைத்துக் கொள்ளுவார்கள்? எது அவர்களுக்கு மனநிறைவைக் கொடுக்கும்? மக்கள் எதையேனும் செய்தாக வேண்டும், இல்லாவிட்டால் அவர்களுக்குப் பைத்தியம் பிடித்துவிடும். நாள் முழுவதும் அவர்கள் என்ன செய்வார்கள்? போதை மருந்துகளில் திளைத்திருப்பது மற்றும் கணினி விளையாட்டுக்களில் மூழ்கிக் கிடப்பது என்பது அதற்கான ஒரு பதிலாக இருக்கக்கூடும். தேவையற்ற மக்கள் அதிகப்படியான நேரத்தை முப்பரிமாண மெய்நிகர் உலகங்களில் செலவிடக்கூடும். அது யதார்த்த உலகைவிட அதிக

உற்சாகத்தைக் கொடுப்பதாகவும், அவர்களுடைய உணர்ச்சிகளை ஆட்கொள்ளுவதாகவும் இருக்கக்கூடும். ஆனாலும் அப்படிப்பட்ட ஒரு வளர்ச்சி, மனித வாழ்க்கையும் மனித அனுபவங்களும் புனிதமானவை என்ற தாராளவாத நம்பிக்கைக்கு ஒரு மரண அடியாக அமையும். தினமும் கணினி விளையாட்டுக்களிலும் செயற்கை உலகங்களிலும் மூழ்கிப் போய் வெட்டியாகப் பொழுதைக் கழிக்கின்ற வீணர்களிடம் அப்படி என்ன புனிதத்துவம் இருக்கும்?

மனிதகுலம் இந்தச் சீரழிவுக்கு உட்பட்டே ஆகும்; ஏனெனில், செயற்கை நுண்ணறிவு மனித நுண்ணறிவை மிஞ்சும்போது, அது மனிதகுலத்தைப் பூண்டோடு அழித்துவிடும் என்று நிக் பாஸ்ட்ராம் போன்ற சில வல்லுநர்களும் சிந்தனையாளர்களும் எச்சரிக்கின்றனர். ஒருவேளை, மனிதகுலம் தனக்கு எதிராகத் திரும்பித் தன்னுடைய அதிகாரத்தைப் பறித்துவிடக்கூடும் என்ற பயத்தால் செயற்கை நுண்ணறிவு அவ்வாறு செய்யக்கூடும். அல்லது, நமக்குப் புரியாத, ஆனால் தனக்குச் சொந்தமான ஏதோ ஓர் இலக்கைப் பின்தொடருவதற்காகச் செயற்கை நுண்ணறிவு அவ்வாறு செய்யக்கூடும். ஏனெனில், தங்களைவிட அதிக சாமர்த்தியமான ஓர் அமைப்புமுறையின் உள்நோக்கத்தைக் கட்டுப்படுத்துவது மனிதர்களுக்கு மிகக் கடினமான ஒரு செயலாக ஆகிவிடும்.

நல்ல நோக்கத்தைக் கொண்ட இலக்குகளை அந்த அமைப்புமுறையில் பதிய வைப்பதுகூட நமக்கு எதிராகத் திரும்பக்கூடும். அதற்கான ஒரு கற்பனையான நிகழ்வு இதோ. ஒரு நிறுவனம் தன்னுடைய முதல் செயற்கை அதிநுண்ணறிவை வடிவமைத்து, கணித அளவீடான 'π' யின் (பை) மதிப்பைக் கணக்கிடுவது போன்ற ஒரு சாதாரண வேலையை அதனிடம் ஒப்படைக்கிறது. என்ன நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதை எவரும் அறியும் முன்பாகவே, அந்தச் செயற்கை நுண்ணறிவு இந்த ஒட்டுமொத்தப் புவியையும் தன்னுடைய கட்டுப்பாட்டிற்குள் எடுத்துக் கொண்டு, மனித இனத்தை முற்றிலுமாகத் துடைத்தெறிந்து, விண்மீன் மண்டலம் முழுவதையும் கைப்பற்றுவதற்கு அதன்மீது ஒரு போரைத் தொடுத்து, நமக்குத் தெரிந்த இந்தப் பிரபஞ்சத்தை ஒட்டுமொத்தமாக ஒரு பிரம்மாண்டமான அதிகணினியாக மாற்றிவிடுகிறது. அக்கணினி, அடுத்துப் பல கோடிக்கணக்கான ஆண்டுகள் 'π'யின் மதிப்பை மேன்மேலும் அதிகத் துல்லியமாகக் கணக்கிடுகிறது. இந்தச் செயற்கை நுண்ணறிவை உருவாக்கிய அந்தப் 'படைப்பாளி' அதற்குக் கொடுத்த தெய்விக நோக்கம் இதுதானே!

# 87 சதவீத நிகழ்தகவு

தாராளவாதத்திற்கு இருக்கின்ற பல்வேறு நடைமுறை அச்சுறுத்தல்களை இந்த அத்தியாயத்தின் துவக்கத்தில் நாம் கண்டறிந்தோம். மனிதர்கள் ராணுவரீதியாகவும் பொருளாதாரரீதியாகவும் பயனற்றவர்களாக ஆகிவிடக்கூடும் என்பது முதல் அச்சுறுத்தல். இது வெறுமனே ஒரு சாத்தியக்கூறுதானே அன்றி, ஒரு தீர்க்கதரிசனம் அல்ல. தொழில்நுட்பப் பிரச்சனைகளும் அரசியல் எதிர்ப்புகளும் படிமுறைத் தீர்வுகள் வேலைவாய்ப்புச் சந்தையை முற்றுகையிடும் வேகத்தைக் குறைக்கக்கூடும். மனித மனம் இன்னும் நம்மால் முழுமையாகப் புரிந்து கொள்ளப்படாத ஒரு பகுதியாகவே இருக்கிறது என்பதால், மனிதர்களிடத்தில் என்னென்ன திறமைகளெல்லாம் ஒளிந்திருக்கின்றன, அவர்கள் தங்களிடம் எவற்றைக் கண்டறிவார்கள் என்பது நமக்கு உண்மையிலேயே தெரியாது. அதோடு, படிமுறைத் தீர்வுகளிடம் தாங்கள் இழக்கக்கூடிய வேலைகளை ஈடு செய்வதற்கு மக்கள் வேறு என்ன புதுமையான வேலைகளை உருவாக்குவார்கள் என்பதும் நமக்குத் தெரியாது. ஆனால், தாராளவாதத்தைக் காப்பாற்ற அது போதாது. ஏனெனில், மனிதர்களுடைய மதிப்பின்மீது மட்டுமல்லாமல், தனிமனிதவாதத்தின்மீதும் தாராளவாதம் நம்பிக்கை கொண்டுள்ளது. நடைமுறை அமைப்புமுறைக்கு எதிர்காலத்தில் மனிதக்கூட்டத்தின் தேவை தொடர்ந்து இருக்கக்கூடும், ஆனால் அதற்குத் தனிமனிதர்களின் தேவை இருக்காது. தாராளவாதம் எதிர்கொண்டுள்ள இரண்டாவது அச்சுறுத்தல் இது. மனிதர்கள் தொடர்ந்து இசையை இயற்றுவர், இயற்பியலைக் கற்றுக் கொடுப்பர், பணத்தை முதலீடு செய்வர், ஆனால் அவர்கள் தங்களைத் தாங்களே புரிந்து கொண்டுள்ளதைவிட, அமைப்புமுறை அவர்களை அதிகச் சிறப்பாகப் புரிந்து கொண்டு, மிக முக்கியமான தீர்மானங்களில் பெரும்பாலானவற்றை அவர்களுக்காக அந்த அமைப்புமுறையே தீர்மானிக்கும். இவ்விதத்தில், தனிமனிதர்களுடைய அதிகாரத்தையும் சுதந்திரத்தையும் அந்த அமைப்புமுறை அவர்களிடமிருந்து பறித்துவிடும்.

தனிமனிதவாதத்தின்மீது தாராளவாதம் கொண்டுள்ள நம்பிக்கை, முன்பு நாம் ஏற்கனவே பார்த்தபடி பின்வரும் மூன்று முக்கியமான அனுமானங்களின் அடிப்படையில் அமைந்துள்ளது:

1. நான் ஒரு தனிமனிதன். பிரிக்கப்பட முடியாத அல்லது

கூறுபோடப்பட முடியாத தனியொரு மைய அம்சம் என்னுள் இருக்கிறது. இந்த உள்ளார்ந்த மையம் பல்வேறு படலங்களுக்குள் பொதிந்து கிடைக்கிறது. நான் இப்படலங்களை அகற்ற முயற்சி மேற்கொண்டால், மிகத் தெளிவான தனியொரு உட்குரலை என்னுள் நான் கண்டறிவேன். இதுதான் என்னுடைய உண்மையான சுயம்.

2. என்னுடைய உண்மையான சுயம் முற்றிலும் சுதந்திரமானது.

3. என்னைப் பற்றி வேறு எவரொருவராலும் கண்டுபிடிக்க முடியாத பல விஷயங்களை என்னால் அறிந்து கொள்ள முடியும் என்பது மேற்கூறப்பட்ட இரண்டு அனுமானங்களிலிருந்தும் தெளிவாகிறது. ஏனெனில், என்னுடைய உள்ளார்ந்த சுதந்திர வெளியை என்னால் மட்டுமே அணுக முடியும், என்னுடைய உண்மையான சுயம் மென்மையாகக் கூறுவதை என்னால் மட்டுமே கேட்க முடியும். அதனால்தான் தாராளவாதம் ஒரு தனிநபருக்கு இவ்வளவு அதிகாரத்தை வழங்குகிறது. எனக்காக விஷயங்களைத் தேர்ந்தெடுப்பதற்கு என்னால் யாரையும் நம்ப முடியாது. ஏனெனில், நான் உண்மையிலேயே யார் என்பதையும், நான் எவ்வாறு உணருகிறேன் என்பதையும், எனக்கு உண்மையிலேயே என்ன வேண்டும் என்பதையும் வேறு யாராலும் அறிய முடியாது. தங்களுக்கு எது சிறந்தது என்பது வாக்காளர்களுக்கு மட்டுமே தெரிந்திருப்பதற்கும், வாடிக்கையாளர்கள் கூறுவதுதான் எப்போதும் சரியாக இருப்பதற்கும், அழகு என்பது பார்ப்பவர்களின் பார்வையில் இருப்பதற்கும் காரணம் இதுதான்.

ஆனாலும், உயிரியல் இம்மூன்று அனுமானங்கள் குறித்தும் கேள்விகள் எழுப்புகிறது. உயிரியலைப் பொருத்தவரை:

1. உயிரினங்கள் என்பவை படிமுறைத் தீர்வுகளே. அதாவது, மனிதர்கள் என்போர் தனியொரு சுயமோ அல்லது தனியொரு உட்குரலோ இல்லாத, பல்வேறு படிமுறைத் தீர்வுகளால் ஆன ஒரு தொகுதியே.

2. ஒரு மனிதனை உருவாக்குகின்ற படிமுறைத் தீர்வுகள் சுதந்திரமானவை அல்ல. அவை மரபணுக்களாலும் சுற்றுச்சூழல் அழுத்தங்களாலும் வடிவமைக்கப்படுகின்றன. அவை மேற்கொள்ளும் தீர்மானங்கள் முன்கூட்டியே நிர்ணயிக்கப்பட்டவையோ அல்லது தற்செயலானவையோதானே அன்றி, சுதந்திரமானவை அல்ல.

3. மேற்கூறப்பட்ட இரண்டு அனுமானங்களை வைத்துப் பார்க்கும்போது, என்னை நான் அறிந்திருப்பதைவிட, புறவயமான ஒரு படிமுறைத் தீர்வால் என்னை அதிகச் சிறப்பாக அறிந்து கொள்ள முடியும். என்னுடைய உடலையும் மூளையையும் வடிவமைத்துள்ள அமைப்புமுறைகள் ஒவ்வொன்றையும் கண்காணிக்கின்ற ஒரு

படிமுறைத் தீர்வால், நான் உண்மையிலேயே யார் என்பதையும், நான் எவ்வாறு உணருகிறேன் என்பதையும், எனக்கு உண்மையிலேயே என்ன வேண்டும் என்பதையும் துல்லியமாக அறிந்து கொள்ள முடியும். அப்படிப்பட்ட ஒரு படிமுறைத் தீர்வு உருவாக்கப்பட்டுவிட்டால், வாக்காளர்களையும் வாடிக்கையாளர்களையும் அழகை ரசிப்பவர்களையும் அது ஒழித்துவிடும். எது சிறந்தது என்பது அந்தப் படிமுறைத் தீர்வுக்கு நன்றாகத் தெரிந்திருக்கும், அது செய்யும் எல்லாமே எப்போதும் சரியாகவே இருக்கும், அழகு அந்தப் படிமுறைத் தீர்வு செய்யும் கணக்கீடுகளில் இருக்கும்.

பத்தொன்பதாம் மற்றும் இருபதாம் நூற்றாண்டுகளின்போது தனிமனிதவாதத்தின்மீது வைக்கப்பட்டிருந்த நம்பிக்கை நடைமுறையில் அர்த்தம் வாய்ந்ததாகத்தான் இருந்தது. ஏனெனில், என்னை உண்மையிலேயே சிறப்பாகக் கண்காணிக்கக்கூடிய புறவயமான படிமுறைத் தீர்வுகள் எதுவும் அப்போது இருக்கவில்லை. நாடுகளும் சந்தைகளும் என்னைக் கண்காணிக்க விரும்பியிருக்கக்கூடும், ஆனால் தேவையான தொழில்நுட்பம் அவற்றிடம் இருக்கவில்லை. கேஜிபி, எஃப்பிஐ ஆகிய உளவு நிறுவனங்களுக்கு என்னுடைய உயிர்வேதியியலையும் மரபணுத் தொகுதியையும் மூளையையும் பற்றிய ஒரு தெளிவற்றப் புரிதல் மட்டுமே இருந்தது. நான் விடுத்தத் தொலைபேசி அழைப்புகள் ஒவ்வொன்றையும் அவர்கள் ஒட்டுக் கேட்டாலோ, அல்லது தெருவில் நான் தற்செயலாக யாருடனெல்லாம் பேசினேன் என்பதை அவர்கள் பதிவு செய்தாலோகூட, அத்தனைத் தகவல்களையும் ஆய்வு செய்யக்கூடிய சக்தி வாய்ந்த கருவி எதுவும் அவர்களிடம் இருக்கவில்லை. அதன் விளைவாக, இருபதாம் நூற்றாண்டில் நிலவிய தொழில்நுட்பச் சூழலை வைத்துப் பார்க்கும்போது, என்னைப் பற்றி நான் அறிந்திருப்பதைவிட அதிகச் சிறப்பாக வேறு யாராலும் என்னைப் பற்றி அறிந்திருக்க முடியாது என்று தாராளவாதிகள் வாதிட்டது சரிதான். எனவே, மனிதர்கள் தங்களை ஒரு சுதந்திர அமைப்புமுறையாகக் கருதியதற்கும், அதிகாரத்திற்கு அடிபணியாமல் தங்களுடைய சொந்த உட்குரல் கூறியதன்படி அவர்கள் நடந்து கொண்டதற்கும் மனிதர்களிடம் ஒரு நியாயமான காரணம் இருந்தது.

ஆனால், புறவயமான படிமுறைத் தீர்வுகள் 'மனிதகுலத்திற்குள் அத்துமீறி நுழைந்து', என்னை நான் அறிந்திருப்பதைவிடச் சிறப்பாக என்னை அறிந்து கொள்ளுவதற்கு 21ம் நூற்றாண்டுத் தொழில்நுட்பம் உதவக்கூடும். இது நிகழ்ந்துவிட்டால், தனிமனிதவாதத்தின்மீதான நம்பிக்கை முற்றிலுமாக நிலைகுலைந்துவிடும், அதிகாரம்

தனிமனிதர்களிடமிருந்து படிமுறைத் தீர்வுகளிடம் கைமாறிவிடும். மக்கள் இனியும் தங்கள் விருப்பம்போலத் தங்கள் வாழ்க்கையை நடத்துகின்ற ஒரு சுதந்திர அமைப்புமுறையாகத் தங்களைப் பார்க்க மாட்டார்கள். மாறாக, மின்னணுப் படிமுறைத் தீர்வுகளால் ஆன ஒரு பிணையத்தால் எந்நேரமும் கண்காணிக்கப்பட்டு கொண்டும் வழிநடத்தப்பட்டுக் கொண்டும் இருக்கின்ற உயிர்வேதி அமைப்புமுறைகளின் ஒரு தொகுதியாக அவர்கள் தங்களைப் பார்க்கப் பழகிக் கொள்ளுவர். இது நிகழுவதற்கு, என்னைக் கச்சிதமாக அறிந்திருக்கின்ற, ஒருபோதும் ஒரு தவறுகூடச் செய்யாத ஒரு புறவயமான படிமுறைத் தீர்வு தேவையில்லை. என்னை நான் அறிந்திருப்பதைவிடச் சிறப்பாக என்னை அறிந்திருக்கின்ற, நான் செய்வதைவிடக் குறைவான தவறுகளைச் செய்கின்ற ஒரு படிமுறைத் தீர்வு அதற்குப் போதுமானது. இது யதார்த்தமாகின்ற பட்சத்தில், என்னுடைய தீர்மானங்களையும் வாழ்வில் என்னுடைய தேர்ந்தெடுப்புகளையும் இந்தப் படிமுறைத் தீர்வை நம்பி நான் அதனிடம் ஒப்படைப்பது அர்த்தம் வாய்ந்ததாக இருக்கும்.

மருத்துவத் துறையைப் பொருத்தவரை நாம் ஏற்கனவே இந்த எல்லைக்கோட்டைக் கடந்துவிட்டோம். மருத்துவமனைகளில் நாம் இனியும் தனிநபர்கள் அல்லர். உங்கள் வாழ்நாளின்போது, உங்கள் உடலைப் பற்றியும் உங்கள் ஆரோக்கியத்தைப் பற்றியுமான மிக முக்கியமான தீர்மானங்கள் ஐபிஎம் நிறுவனத்தின் வாட்சனைப் போன்ற கணினிப் படிமுறைத் தீர்வுகளால் மேற்கொள்ளப்படுவதற்கான வாய்ப்பு மிகவும் அதிகம். இது முற்றிலும் மோசமான ஒரு செய்தி அல்ல. நீரிழிவு நோயாளிகளின் சர்க்கரை அளவை தினமும் பல முறை தாமாகவே பரிசோதிக்கின்ற உணரிகளை அந்நோயாளிகள் எல்லா இடங்களுக்கும் தங்களோடு எடுத்துச் செல்லுகின்றனர். அவர்களுடைய சர்க்கரை அளவு ஓர் ஆபத்தான வரம்பைத் தாண்டும்போது, அந்த உணரிகள் அவர்களை எச்சரிக்கின்றன. 2014ல் யேல் பல்கலைக்கழக ஆராய்ச்சியாளர்கள், ஒரு ஐ-போனால் கட்டுப்படுத்தப்பட்டச் 'செயற்கைக் கணையம்' ஒன்றை முதன்முறையாக வெற்றிகரமாகப் பரிசோதித்தனர். ஐம்பத்திரண்டு நீரிழிவு நோயாளிகள் அப்பரிசோதனையில் பங்கு கொண்டனர். ஒவ்வொரு நோயாளியின் வயிற்றினுள்ளும் ஒரு சின்னஞ்சிறு உணரியும் ஒரு சின்னஞ்சிறு பம்பும் பொருத்தப்பட்டன. அந்த பம்பு, இன்சுலின் மற்றும் குளூக்ககான் ஹார்மோன்கள் அடங்கிய சிறு குழாய்களுடன் இணைக்கப்பட்டது. இன்சுலினும் குளூக்ககானும் சேர்ந்து ரத்தத்தில் சர்க்கரை அளவை முறைப்படுத்துகின்றன. அந்த உணரி தொடர்ந்து சர்க்கரை அளவை

அளவிட்டு, அந்தத் தகவலை ஒரு ஐ-போனுக்கு அனுப்பியது. அந்த ஐபோனில் இருந்த ஒரு செயலி அந்தத் தகவலை ஆய்வு செய்ததோடு, தேவைப்பட்டபோது சில கட்டளைகளையும் அந்த பம்புக்கு அனுப்பியது. அந்த பம்பு அதன்படி ஒரு குறிப்பிட்ட அளவு இன்சுலினையோ அல்லது குளூக்ககானையோ உடலுக்குள் செலுத்தியது. இந்த ஒட்டுமொத்தச் செயல்முறையும் மனிதக் குறுக்கீட்டிற்கான எந்தத் தேவையும் இன்றி சுமூகமாக நடைபெற்றது.

தீவிர நோய் எதுவும் இல்லாதவர்கள்கூடத் தங்களுடைய ஆரோக்கியத்தையும் நடவடிக்கைகளையும் கண்காணிப்பதற்கு, அணியப்படக்கூடிய உணரிகளையும் கணினியையும் பயன்படுத்தத் தொடங்கியுள்ளனர். ரத்த அழுத்தம், இதயத்துடிப்பு விகிதம் போன்ற பல்வேறுபட்ட உயிரியளவுத் தகவல்களை இக்கருவிகள் பதிவு செய்கின்றன (ஸ்மார்ட்போன்கள், கைக்கடிகாரங்கள், கைப்பட்டிகள், உள்ளாடைகள் போன்ற எவற்றில் வேண்டுமானாலும் இக்கருவிகளைப் பொருத்திக் கொள்ளலாம்). இந்தத் தகவல்கள் அதிநவீனக் கணினி நிரல்களுக்கு உள்ளீடுகளாக வழங்கப்படுகின்றன. அந்த நிரல்கள், சம்பந்தப்பட்ட நபர் தன்னுடைய ஆரோக்கியத்தை மேம்படுத்திக் கொள்ளவும், ஒரு நீண்ட, ஆக்கபூர்வமான வாழ்க்கையை வாழவும் தன்னுடைய உணவுமுறையிலும் அன்றாட நடவடிக்கைகளிலும் என்னென்ன மாற்றங்களை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் என்று அவருக்கு அறிவுறுத்துகின்றன. கூகுள் நிறுவனம், உலகின் மிகப் பெரிய மருந்து நிறுவனங்களில் ஒன்றான நொவார்ட்டிஸுடன் சேர்ந்து, கண்ணீரில் பொதிந்திருக்கும் பொருட்களை ஆய்வு செய்வதன் மூலம் ஒருசில நொடிகளுக்கு ஒருமுறை குளூக்கோஸின் அளவைப் பரிசோதிக்கின்ற 'கான்டாக்ட் லென்ஸ்' ஒன்றை உருவாக்கிக் கொண்டிருக்கிறது. 'பிக்ஸி சயன்டிஃபிக்' நிறுவனம் குழந்தைகளுக்கான 'ஸ்மார்ட் டயப்பர்ஸ்' என்ற அரைக்கச்சைகளை விற்பனை செய்கிறது. அந்த அரைக்கச்சைகள் குழந்தைகளின் மலத்தை ஆய்வு செய்து அவர்களுடைய நோயைக் கண்டறிகின்றன. 2014ம் ஆண்டு நவம்பர் மாதத்தில் மைக்ரோசாஃப்ட் நிறுவனம் 'மைக்ரோசாஃப்ட் கைப்பட்டி' ஒன்றை அறிமுகப்படுத்தியது. அப்பட்டி உங்கள் இதயத்துடிப்பையும், உங்கள் உறக்கத்தின் தரத்தையும், ஒவ்வொரு நாளும் நீங்கள் எத்தனை அடிகள் எடுத்து வைக்கிறீர்கள் என்பதையும் கண்காணிக்கிறது. 'டெட்லைன்' என்ற ஒரு செயலி இன்னும் ஒரு படி மேலே போய், உங்களுடைய தற்போதைய பழக்கங்களின் அடிப்படையில் உங்கள் வாழ்நாளில் எத்தனை ஆண்டுகள் மீதமுள்ளன என்று உங்களுக்குத் தெரிவிக்கிறது.

சிலர் இச்செயலிகளைப் பற்றி ஆழமாக சிந்தித்துப் பார்க்காமல் வெறுமனே பயன்படுத்துகின்றனர், மற்றவர்கள் இதை ஒரு மதமாக இல்லாவிட்டாலும் ஒரு சித்தாந்தமாக ஏற்றுக் கொண்டுள்ளனர். சுயம் என்பது கணித வடிவவிதங்களே அன்றி வேறு எதுவும் இல்லை என்று 'குவான்டிஃபைடு செல்ஃப்' இயக்கம் வாதிடுகிறது. இந்த வடிவவிதங்கள் மிகவும் சிக்கலானவையாக இருப்பதால், மனித மனத்தால் அவற்றைப் புரிந்து கொள்ள முடியாது. எனவே, 'உன்னை அறிந்து கொள்!' என்ற பழம்பெரும் கூற்றுக்கு நீங்கள் கீழ்ப்படிந்து உங்களை அறிந்து கொள்ள விரும்பினால், தத்துவம், தியானம், உளநிலைப் பகுப்பாய்வு போன்றவற்றின்மீது நீங்கள் உங்கள் நேரத்தை விரயம் செய்யக்கூடாது; மாறாக, நீங்கள் தொடர்ந்து உங்கள் உயிரியளவுத் தகவல்களைச் சேகரித்து, படிமுறைத் தீர்வுகள் உங்களுக்காக அவற்றை ஆய்வு செய்யவும், நீங்கள் யார் என்பதையும் நீங்கள் என்ன செய்ய வேண்டும் என்பதையும் உங்களிடம் கூறவும் நீங்கள் அந்தப் படிமுறைத் தீர்வுகளை அனுமதிக்க வேண்டும், அவ்வளவுதான். 'எண்களின் மூலம் சுயஅறிவு' என்பதுதான் இந்த இயக்கத்தின் தாரக மந்திரமாக இருக்கிறது. ஒருவருடனான பாலுறவு எவ்வளவு இன்பமளிப்பதாக இருக்கிறது என்பதைக் கணக்கிடுவதற்குக்கூட இப்போது கைப்பட்டிகள் வந்துவிட்டன.

இப்படிப்பட்டக் கருவிகளின் வாயிலாகத் தங்களை உணருகின்ற மக்கள், தங்களைத் தனிநபர்களாகப் பார்ப்பதற்கு பதிலாக உயிர்வேதி அமைப்புமுறைகளின் ஒரு தொகுதியாகத் தங்களைப் பார்க்கத் தொடங்கக்கூடும். அவர்களுடைய தீர்மானங்கள், பல்வேறு அமைப்புமுறைகளின் முரண்பட்ட எதிர்பார்ப்புகளை அதிக அளவில் பிரதிபலிக்கும். உங்களுடைய அனைத்து வேலைகளுக்கும் தேவையான நேரம் போக, உங்கள் விருப்பம்போலச் செலவிடுவதற்கு வாரத்திற்கு இரண்டு மணிநேரம் உங்களுக்குக் கிடைப்பதாக வைத்துக் கொள்ளுங்கள். அந்த நேரத்தில் சதுரங்கம் விளையாடலாமா அல்லது டென்னிஸ் விளையாடலாமா என்று உங்களால் உறுதியாகத் தீர்மானிக்க முடியவில்லை. உங்கள் நலனில் அக்கறை கொண்ட ஒரு நண்பர் உங்களோடு இருந்தால், "உன் இதயம் உன்னிடம் என்ன சொல்லுகிறது?" என்று கேட்டிருப்பார். அதற்கு நீங்கள், "என் இதயத்தைப் பொருத்தவரை, அது டென்னிஸைத்தான் அதிகம் விரும்புகிறது. அது என்னுடைய கொழுப்புச்சத்து அளவுக்கும் ரத்த அழுத்தத்திற்கும்கூட நல்லது. ஆனால், நான் என்னுடைய மூளையின் முற்பகுதியின் மேற்பரப்பிற்கு வலுவூட்ட வேண்டும் என்று என்னுடைய எம்ஆர்ஐ ஸ்கேன்கள் உணர்த்துகின்றன. என்னுடைய குடும்பத்தில்

மறதிநோய் பரவலான ஒன்று. இளம் வயதிலேயே என் மாமாவுக்கு அந்நோய் வந்துவிட்டது. வாரம் ஒருமுறை சதுரங்கம் விளையாடுவது அந்நோய் வருவதைத் தாமதப்படுத்த உதவும் என்று சமீபத்திய ஆய்வுகள் சுட்டிக்காட்டுகின்றன," என்று கூறுகிறீர்கள்.

முதுமை என்பது ஞானத்திற்கும் விழிப்புணர்வுக்குமான ஒரு பருவம் என்பதாக மனிதவாதம் கற்பனை செய்கிறது. ஒரு முதியவர் உடற்பிரச்சனைகளாலும் பலவீனங்களாலும் துன்புறக்கூடும், ஆனால் அவருடைய மனம் தெளிவாகவும் கூர்மையாகவும் இருக்கும், எண்பது ஆண்டுகளாக அவர் சேகரித்து வந்துள்ள உள்நோக்குகள் அவரிடம் இருக்கும். எது என்ன என்பது எப்போதும் அவருக்குத் தெரிந்திருக்கும். தன்னுடைய பேரக்குழந்தைகளுக்கும் தன்னை சந்திக்க வரும் விருந்தினர்களுக்கும் கொடுப்பதற்கான அறிவுரைகள் எப்போதும் அவரிடம் ஏராளமாக இருக்கும். ஆனால், 21ம் நூற்றாண்டைச் சேர்ந்த எண்பது வயதுப் பெரியவர்கள் பல சமயங்களில் அந்தப் பிம்பத்தை ஒத்திருக்கப் போவதில்லை. மனித உயிரியல் பற்றிய நம்முடைய புரிதல் அதிகரித்து வருவதால், நம்முடைய மனமும் 'உண்மையான சுயமும்' சிதைந்து கரைந்து போகும்வரை நம்மை உயிரோடு வைத்திருப்பதற்கு ஏகப்பட்ட மருந்துகள் கண்டுபிடிக்கப்பட்டுவிட்டன. ஆனால் பல சமயங்களில், கண்காணிப்புக் கருவிகளாலும் கணினிகளாலும் பம்புகளாலும் தொடர்ந்து எப்படியோ உயிரோடு வைக்கப்படுகின்ற, செயலிழந்து போயுள்ள உயிரியல் அமைப்புமுறைகள் மட்டுமே எஞ்சியிருக்கும்.

ஓர் ஆழமான நிலையில் பார்க்கும்போது, மரபணுத் தொழில்நுட்பங்கள் அன்றாட வாழ்க்கைக்குள் ஒருங்கிணைப்பட்டுக் கொண்டிருப்பதாலும், மக்கள் தங்களுடைய டிஎன்ஏ உடனான நெருக்கமான உறவை மேன்மேலும் வளர்த்துக் கொண்டிருப்பதாலும், அவர்களுடைய தனியொரு சுயம் மேலும் மங்கிப் போகக்கூடும், அவர்களுடைய உட்குரல் மரபணுக் கூட்டத்தின் இரைச்சலுக்குள் கரைந்து போகக்கூடும். கடினமான தீர்மானங்களையும் இக்கட்டான சூழ்நிலைகளையும் நான் எதிர்கொள்ளும்போது, நான் என்னுடைய உட்குரலைத் தேடுவதை நிறுத்திவிட்டு, அதற்கு பதிலாக என்னுடைய உள்ளார்ந்த மரபணு நாடாளுமன்றத்துடன் கலந்தாலோசிக்கக்கூடும்.

2013ம் ஆண்டு மே 14ம் நாளன்று, ஹாலிவுட் நடிகை ஏஞ்சலினா ஜோலி தன்னுடைய 'மார்பக நீக்க அறுவைச் சிகிச்சை'யைப் பற்றி நியூயார்க் டைம்ஸ் பத்திரிகையில் ஒரு கட்டுரையை வெளியிட்டிருந்தார். அவருடைய தாயாரும் பாட்டியும் நடுத்தர வயதிலேயே மார்பகப் புற்றுநோய்க்கு பலியாகியிருந்ததால், தனக்கு

அந்நோய் வருவதற்கான ஆபத்துடனேயே ஜோலி பல ஆண்டுகள் வாழ்ந்து வந்திருந்தார். எனவே, அவர் தன்மீது ஒரு மரபணுப் பரிசோதனையை மேற்கொண்டு, 'பிஆர்சிஏ1' என்ற ஒரு மரபணுவின் ஓர் ஆபத்தான மரபுச்சிதைவு மாற்றத்தைத் தான் சுமந்து கொண்டிருந்ததைக் கண்டுபிடித்தார். சமீபத்தியப் புள்ளிவிபரங்களின்படி, இந்த மரபுச்சிதைவு மாற்றத்தைச் சுமந்து கொண்டிருக்கின்ற பெண்களுக்கு மார்பகப் புற்றுநோய் வருவதற்கு 87 சதவீத சாத்தியக்கூறு இருக்கிறது. ஜோலி அந்த அறுவைச் சிகிச்சைக்கு உட்பட்ட நேரத்தில் அவருக்குப் புற்றுநோய் இருக்கவில்லை என்றாலும்கூட, அந்நோய் வருவதைத் தடுக்கும் முயற்சியாகத் தன்னுடைய இரண்டு மார்பகங்களையும் நீக்குவதென்று அவர் தீர்மானித்தார். அக்கட்டுரையில் அவர் இவ்வாறு குறிப்பிட்டிருந்தார்: "நான் என்னுடைய கதையைப் பொதுமக்களுடன் பகிர்ந்து கொள்ளத் தீர்மானித்ததற்குக் காரணம், புற்றுநோய் வருவதற்கான ஆபத்து தங்களுக்கு இருக்கிறது என்பதைப் பல பெண்கள் அறியாமல் இருப்பதுதான். இக்கட்டுரையைப் படித்தப் பிறகு அவர்களும் தங்களுடைய மரபணுவைப் பரிசோதித்துக் கொள்ளுவார்கள் என்று நான் நம்புகிறேன். ஒருவேளை புற்றுநோய் வருவதற்கான ஆபத்து அவர்களுக்கு இருந்தால், தாங்கள் தேர்ந்தெடுப்பதற்குப் பல்வேறு சிகிச்சைகள் இருக்கின்றன என்பதை அவர்கள் அறிந்திருக்க வேண்டும் என்பதே என் விருப்பம்."

மார்பக நீக்க அறுவைச் சிகிச்சைக்கு உட்பட வேண்டுமா அல்லது வேண்டாமா என்பதைத் தீர்மானிப்பது மிகக் கடினமான, உயிருக்கு ஆபத்து விளைவிக்கக்கூடிய சாத்தியமுள்ள ஒரு தேர்ந்தெடுப்பாகும். அந்த அறுவைச் சிகிச்சையில் உள்ளடங்கியுள்ள அசௌகரியங்கள், ஆபத்துக்கள், செலவுகள், தொடர்ச்சியான சிகிச்சைகள் ஆகியவற்றைத் தாண்டி, அத்தீர்மானம் ஒருவருடைய ஆரோக்கியத்தின்மீதும், உடற்தோற்றத்தின்மீதும், உணர்ச்சிரீதியான நலன்மீதும், அவருடைய உறவுகள்மீதும் அளப்பரிய தாக்கம் ஏற்படுத்தக்கூடும். ஜோலியின் தேர்ந்தெடுப்பும், அதைப் பொதுமக்களிடையே பகிர்ந்து கொண்டதன் மூலம் அவர் வெளிப்படுத்திய துணிச்சலும் ஒரு பெரிய சலசலப்பை ஏற்படுத்தியதோடு, உலக அளவில் அவருக்குப் பெருமையையும் பாராட்டுக்களையும் பெற்றுக் கொடுத்தது. குறிப்பாக, இந்த விளம்பரம் மரபணு மருத்துவம் மற்றும் அதன் நன்மைகள் பற்றிய விழிப்புணர்வை மக்களிடையே அதிகரிக்கும் என்று பலர் நம்பினர்.

ஒரு வரலாற்றுக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, அவருடைய விஷயத்தில் படிமுறைத் தீர்வுகள் ஆற்றியுள்ள

இன்றியமையாத பங்கைக் கூர்ந்து கவனிப்பது சுவாரசியமளிக்கிறது. ஜோலி தன்னுடைய வாழ்க்கையைப் பற்றிய அத்தகைய ஒரு முக்கியமான தீர்வை எடுக்க வேண்டியிருந்தபோது, அவர் ஒரு கடலுக்கு அருகே உள்ள பெரிய மலையில் ஏறி அதன் உச்சியை அடைந்து, சூரியன் அக்கடலின் அலைகளுக்குள் மறைவதைப் பார்த்துக் கொண்டே தன்னுடைய உள்ளார்ந்த உணர்வுகளோடு தொடர்பு கொள்ள முயற்சிக்கவில்லை. மாறாக, அவர் தன்னுடைய மரபணுக்கள் கூறுவதைச் செவிமடுப்பதைத் தேர்ந்தெடுத்தார். அந்த மரபணுக்களின் குரல் எண்களின் வடிவில் வெளிப்பட்டதே அன்றி, உணர்வுகளில் அல்ல. ஜோலி அத்தீர்மானத்தை மேற்கொண்ட நேரத்தில் அவருக்கு எந்தவிதமான வலியோ அல்லது அசௌகரியமோ இருக்கவில்லை. "ஆசுவாசமாக இரு, எல்லாம் கச்சிதமாக இருக்கிறது," என்று அவருடைய உணர்வுகள் அவரிடம் கூறின. ஆனால், அவருடைய மருத்துவர்கள் பயன்படுத்திய கணினிப் படிமுறைத் தீர்வுகள் முற்றிலும் வேறொரு கதையைக் கூறின. "உன் உடலில் எந்தப் பிரச்சனையும் இல்லை என்ற உணர்வு உனக்கு இருக்கக்கூடும், ஆனால், எந்நேரத்திலும் வெடிக்கக்கூடிய வெடிகுண்டு ஒன்று உன்னுடைய 'டிஎன்ஏ'வில் புதைந்து இருக்கிறது. இக்கணமே அது குறித்து ஏதேனும் செய்!" என்று அவை அவரிடம் கூறின.

ஜோலியின் உணர்ச்சிகளும் தனித்துவமான ஆளுமையும்கூட அவருடைய தீர்மானத்தில் ஒரு முக்கியப் பங்கு வகித்தன என்பது உண்மைதான். வேறொரு ஆளுமையுடன்கூடிய வேறொரு பெண், தானும் அதே மரபுச்சிதைவு மாற்றத்தைச் சுமந்து கொண்டிருந்ததைக் கண்டறிந்தால், மார்பக நீக்க அறுவைச் சிகிச்சைக்குத் தான் உட்பட வேண்டாம் என்று தீர்மானித்திருக்கக்கூடும். ஆனால், அந்த ஆபத்தான 'பிஆர்சிஏ1' மரபுச்சிதைவு மாற்றத்தை மட்டுமல்லாமல், சாத்தியக்கூறுகளை மதிப்பீடு செய்வதற்குப் பொறுப்பான மூளைப் பகுதி ஒன்றை பாதிக்கக்கூடிய 'ஏபிசிடி3' என்ற ஒரு (கற்பனையான) மரபணுவிலும் ஒரு மரபுச்சிதைவு மாற்றத்தைத் தான் சுமந்து கொண்டிருந்ததை அப்பெண் கண்டுபிடித்திருந்து, மூளையின் அப்பகுதி பாதிக்கப்பட்டால் மக்கள் தங்களுக்கு ஏற்படக்கூடிய ஆபத்துக்களைக் குறைவாக மதிப்பிடுவர் என்பது அவருக்குத் தெரிய வந்தால், அவர் என்ன தீர்மானம் எடுத்திருப்பார்? அவருடைய தாயாரும் பாட்டியும் இன்னும் பிற உறவினர்களும் ஆரோக்கியம் தொடர்பான பல்வேறு ஆபத்துக்களைக் குறைத்து மதிப்பிட்டிருந்ததாலும் முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளை மேற்கொள்ளத் தவறியிருந்ததாலும்தான் அவர்கள் எல்லோரும் இளம் வயதிலேயே இறந்துவிட்டதாக ஒரு புள்ளியியல்

வல்லுநர் அப்பெண்ணிடம் சுட்டிக்காட்டியிருந்தால் அப்பெண் என்ன செய்திருப்பார்?

நீங்கள் உங்கள் ஆரோக்கியம் தொடர்பான முக்கியமான தீர்மானங்களை ஏஞ்சலினா ஜோலி மேற்கொண்ட அதே வழியில் மேற்கொள்ளுவதற்கான வாய்ப்பு அதிகம் உள்ளது. ஒரு மரபணுப் பரிசோதனைக்கோ, ஒரு ரத்தப் பரிசோதனைக்கோ, அல்லது ஒரு எம்ஆர்ஐ ஸ்கேனுக்கோ நீங்கள் உட்படுவீர்கள். ஏகப்பட்டப் புள்ளிவிபரத் தகவல்கள் அடங்கிய தரவுத்தளங்களின் அடிப்படையில் அப்பரிசோதனையின் விளைவுகளை ஒரு படிமுறைத் தீர்வு ஆய்வு செய்து உங்களுக்குப் பரிந்துரைகளை வழங்கும். நீங்கள் அதன் பரிந்துரைகளை ஏற்றுக் கொள்ளுவீர்கள். இது ஓர் ஆபத்தான சூழல் அல்ல. படிமுறைத் தீர்வுகள் நமக்கு எதிராகக் கலகம் செய்து நம்மை அடிமைப்படுத்தப் போவதில்லை. மாறாக, அவை நமக்காகத் தீர்மானங்களை மேற்கொள்ளுவதில் மிகச் சிறப்பாகச் செயல்படுகின்றன. அவற்றின் அறிவுரையை நாம் பின்பற்றாவிட்டால், நாம்தான் முட்டாள்களாக ஆகிவிடுவோம்.

***

1993ல் வெளிவந்த ‘சைபார்க் 2’ என்ற அறிவியல் புனைகதைத் திரைப்படம்தான் ஏஞ்சலினா ஜோலி முதன்முதலாக ஒரு முன்னணிப் பாத்திரத்தில் நடித்தத் திரைப்படமாகும். அவர் அத்திரைப்படத்தில் கேஸெல்லா ரீஸ் என்ற ஒரு சைபார்க் பாத்திரத்தை ஏற்று நடித்தார். அக்கதையின்படி, உளவு பார்ப்பதற்கும் படுகொலை செய்வதற்கும் 2074ல் பின்வீல் ரோபாட்டிக்ஸ் உருவாக்கிய ஒரு சைபார்க் அது. அது தன்னுடைய பணிகளைச் செய்வதற்கு மனிதச் சமுதாயங்களோடு சிறப்பாக ஒன்றுகலப்பதற்கு உதவுவதற்காக அதற்கு மனித உணர்ச்சிகள் ஏற்றப்படுகின்றன. பின்வீல் ரோபாட்டிக்ஸ் நிறுவனம் தன்னைக் கட்டுப்படுத்துவதோடு மட்டுமல்லாமல், தன்னை அழிக்கவும் திட்டமிட்டுக் கொண்டிருக்கிறது என்பதைக் கேஸெல்லா கண்டுபிடிக்கும்போது, அது தப்பிச் சென்று, தன் உயிருக்காகவும் சுதந்திரத்திற்காகவும் போராடுகிறது. ‘சைபார்க் 2’ திரைப்படம், தன்னுடைய சுதந்திரத்திற்காகவும் அந்தரங்க உரிமைக்காகவும் பன்னாட்டுப் பெருநிறுவனங்களை எதிர்த்துப் போராடுகின்ற ஒரு தனிநபரைப் பற்றிய ஒரு தாராளவாதக் கற்பனைக் கதையாகும்.

ஜோலி தன்னுடைய நிஜ வாழ்க்கையில் தன்னுடைய ஆரோக்கியத்திற்காகத் தன்னுடைய அந்தரங்கத்தையும் சுதந்திரத்தையும் தியாகம் செய்யத் தயாரானார். மனித ஆரோக்கியத்தை மேம்படுத்துவதற்கான இதே வகையான ஆர்வம்தான், நாமே

மனமுவந்து நம்முடைய அந்தரங்க இடங்களைப் பாதுகாக்கின்ற தடைகளை உடைத்தெறிவதற்கும், நம்முடைய உள்ளார்ந்த பகுதிகளைச் சென்றடைவதற்கு அரசாங்கத்திற்கும் பன்னாட்டு நிறுவனங்களுக்கும் நாம் அனுமதியளிப்பதற்கும் காரணமாக இருக்கிறது. எடுத்துக்காட்டாக, நம்முடைய மின்னஞ்சல்களைப் படிப்பதற்கும் நம்முடைய நடவடிக்கைகளைக் கண்காணிப்பதற்கும் கூகுளுக்கு நாம் அனுமதியளிப்பது, பரவிக் கொண்டிருக்கின்ற தொற்றுநோய்கள் பாரம்பரிய நலவாழ்வு அமைப்புகளின் கவனத்திற்கு வருவதற்கு முன்பாகவே அவற்றைப் பற்றி கூகுள் நம்மை எச்சரிப்பதைச் சாத்தியமாக்குகிறது.

லண்டனில் சளிக்காய்ச்சல் தொற்றுநோய் ஒன்று முளைத்திருப்பதை பிரிட்டனின் தேசிய நலவாழ்வுச் சேவை மையம் எப்படித் தெரிந்து கொள்ளுகிறது? நூற்றுக்கணக்கான மருத்துவமனைகளில் உள்ள மருத்துவர்களுடைய ஆயிரக்கணக்கான அறிக்கைகளை ஆய்வு செய்வதன் மூலமாகத்தான் அதற்கு அப்பிரச்சனை பற்றித் தெரிய வருகிறது. அந்த மருத்துவர்கள் அனைவரும் அந்தத் தகவலை எங்கிருந்து பெறுகின்றனர்? மேரி ஒருநாள் காலையில் எழுந்திருக்கும்போது தலைவலியுடன் கண்விழிக்கிறார் என்று வைத்துக் கொள்ளுவோம். அவர் உடனே தன் மருத்துவரிடம் ஓடவில்லை. ஒரு குவளை தேநீரில் சிறிதளவு தேன் கலந்து பருகினால் தலைவலி சரியாகிவிடும் என்ற நம்பிக்கையுடன் அவர் ஒருசில மணிநேரம் காத்திருக்கிறார் அல்லது ஓரிரு நாட்கள்கூடக் காத்திருக்கிறார். ஆனால் நிலைமை மேம்படாதபோது, அவர் தன் மருத்துவரைப் பார்க்க முன்னனுமதி பெற்று, அவருடைய மருத்துவ மையத்திற்குச் சென்று தன்னுடைய நோய்க்குறிகளை விவரிக்கிறார். அவருடைய மருத்துவர் அந்தத் தகவலை ஒரு கணினியில் ஏற்றுகிறார். தேசிய நலவாழ்வுச் சேவை மையத்தில் யாரேனும் அத்தகவலை, இன்னும் ஆயிரக்கணக்கான மருத்துவர்களிடமிருந்து வந்து குவிகின்ற தகவல் அறிக்கைகளோடு சேர்த்து ஆய்வு செய்து, அப்பகுதியில் சளிக்காய்ச்சல் நோய் பரவிக் கொண்டிருக்கிறது என்ற தீர்மானத்திற்கு வருகின்றனர். இவை அனைத்திற்கும் ஏகப்பட்ட நேரம் ஆகிறது.

கூகுளால் இதை ஒருசில நிமிடங்களில் கண்டுபிடித்துவிட முடியும். லண்டன் நகரவாசிகள் தங்களுடைய மின்னஞ்சல்களிலும் கூகுளின் தேடல் பொறியிலும் தட்டச்சு செய்கின்ற வார்த்தைகளை அது வெறுமனே கண்காணித்து, பல்வேறு நோய்களுக்கான அறிகுறிகளை உள்ளடக்கிய ஒரு தரவுத்தளத்துடன் அவற்றைச் சரிபார்த்தால் போதும். எடுத்துக்காட்டாக, ஒரு சராசரி நாளன்று லண்டன் மின்னஞ்சல்களிலும்

தேடல்களிலும் ‘தலைவலி’, ‘காய்ச்சல்’, ‘குமட்டல்’, ‘தும்மல்’ போன்ற வார்த்தைகள் சுமார் 1,00,000 முறை இடம்பெறுவதாக வைத்துக் கொள்ளுவோம். ஆனால் இன்று அவ்வார்த்தைகள் 3,00,000 முறை இடம்பெறுவதை கூகுளின் படிமுறைத் தீர்வு கவனித்தால், சளிக்காய்ச்சல் நோய் பரவிக் கொண்டிருப்பதை அது நமக்குத் தெரிவித்துவிடுகிறது. மேரி தன்னுடைய மருத்துவரைச் சென்று பார்க்கும்வரை காத்திருக்க வேண்டியதில்லை. அவர் லேசாக உடல்நலம் சரியில்லாமல் கண்விழித்த முதல் நாளன்று வேலைக்குப் போவதற்கு முன்பாகத் தன்னுடைய சக ஊழியர் ஒருவருக்கு இப்படி ஒரு மின்னஞ்சல் அனுப்புகிறார்: “தலைவலி என்னைப் படுத்தியெடுக்கிறது, ஆனால் நான் அலுவலகத்திற்கு வருகிறேன்.” கூகுளுக்கு இது போதும்!

ஆனால், கூகுள் தன் மாயாஜாலத்தை நிகழ்த்துவதற்கு, தன்னுடைய மின்னஞ்சல்களை கூகுள் படிப்பதற்கு மேரி அதற்கு அனுமதியளிக்க வேண்டும். அதோடு, கூகுள் அத்தகவலை நலவாழ்வுத் துறை அதிகாரிகளுடன் பகிர்ந்து கொள்ளவும் மேரி அனுமதிக்க வேண்டும். மார்பகப் புற்றுநோய் பற்றிய விழிப்புணர்வை அதிகரிப்பதற்கு ஏஞ்சலினா ஜோலி தன்னுடைய அந்தரங்க உரிமையைத் தியாகம் செய்யத் தயாராக இருந்தார் என்றால், தொற்றுநோயைக் களைவதற்காக அதே போன்ற ஒரு தியாகத்தை மேரி ஏன் செய்யக்கூடாது?

இது ஒரு நாடகத்தனமான யோசனை அல்ல. 2008ல் ‘கூகுள் சளிக்காய்ச்சல் போக்குகள்’ என்ற வலைத்தளத்தை கூகுள் நிறுவனம் துவக்கியது. கூகுள் தேடல்களைக் கண்காணிப்பதன் மூலம் சளிக்காய்ச்சல் நோய் எங்கெல்லாம் பரவிக் கொண்டிருக்கிறது என்பதை அது அறிந்து கொள்ளுகிறது. இச்சேவை இன்னும் உருவாக்க நிலையில்தான் இருக்கிறது. அந்தரங்க உரிமைகளில் உள்ள சிக்கல்களின் காரணமாக, தேடப்படும் வார்த்தைகளை மட்டுமே அது பரிசீலிக்கிறது. தனிப்பட்ட மின்னஞ்சல்களைப் படிப்பதை அது தவிர்த்துவிடுவதாகக் கூறப்படுகிறது. ஆனால், சளிக்காய்ச்சல் நோயின் பரவல் பாரம்பரிய நலவாழ்வுச் சேவை அமைப்புக்குத் தெரிய வருவதற்குப் பத்து நாட்களுக்கு முன்பாகவே மக்களுக்கு அந்நோய் பற்றிய எச்சரிக்கை மணிகளை ஒலிக்கச் செய்வதற்கான திறன் ஏற்கனவே கூகுளிடம் இருக்கிறது.

‘கூகுள் அடிக்கோட்டு ஆய்வு’ என்பது இதைவிடப் பெரியதொரு பணித்திட்டமாகும். மனித ஆரோக்கியத்தைப் பற்றிய ஒரு பிரம்மாண்டமான தரவுத்தளத்தை உருவாக்கி, கச்சிதமான ஆரோக்கியம் என்றால் எப்படி இருக்கும் என்பதைப் பற்றிய ஒரு

விபரக்குறிப்பை உருவாக்க கூகுள் திட்டமிட்டுள்ளது. அடிக்கோட்டிலிருந்து மாறுபட்டிருக்கின்ற சிறுசிறு மாறுதல்களைக்கூட அடையாளம் காணுவதன் மூலம், புற்றுநோய் போன்ற, முளையிலேயே கிள்ளி எறியப்படக்கூடிய உடல்நலப் பிரச்சனைகள் குறித்து மக்களை எச்சரிப்பதை அது சாத்தியமாக்கும் என்று நம்பப்படுகிறது. 'அடிக்கோட்டு ஆய்வு' கூகுளின் இன்னொரு கண்டுபிடிப்பான 'கூகுள் ஃபிட்' செயலியுடன் கச்சிதமாக இணைந்து செயல்படுகிறது. ஆடைகள், வளையல்கள், காலணிகள், மூக்குக்கண்ணாடிகள் போன்றவற்றில் அச்செயலியைப் பொருத்த முடியும். அது தொடர்ந்து உயிரியளவுத் தகவல்களைத் திரட்டிக் கொண்டே இருக்கும். அத்தகவல்களை அடிக்கோட்டு ஆய்வுக்கு உள்ளீடாக வழங்க வேண்டியதுதான் அதன் வேலை.

ஆனால், கூகுள் போன்ற நிறுவனங்கள் இன்னும் ஒரு படி மேலே செல்ல விரும்புகின்றன. டிஎன்ஏ சோதனைக்கான சந்தை தற்போது பிரம்மாண்டமாக வளர்ந்து கொண்டிருக்கிறது. அதில் முன்னணி வகிக்கின்ற நிறுவனங்களில் ஒன்று '23அன்ட்மீ'. இதை நிறுவியவர் கூகுள் நிறுவனத்தைத் தோற்றுவித்தவர்களில் ஒருவரான செர்ஜி பிரின்னின் முன்னாள் மனைவியான ஆன் வோஜிக்கி. அந்நிறுவனத்தின் பெயரில் உள்ள 23 என்ற எண், மனித மரபணுத் தொகுதியை உருவாக்குகின்ற 23 ஜோடி குரோமோசோம்களைக் குறிக்கிறது. எனக்கும் என்னுடைய குரோமோசோம்களுக்கும் இடையே ஒரு தனிச்சிறப்பான உறவு இருக்கிறது என்பதுதான் அப்பெயர் உணர்த்துகின்ற செய்தி. குரோமோசோம்கள் கூறிக் கொண்டிருப்பவற்றைப் புரிந்து கொள்ளக்கூடிய எவரொருவராலும், உங்களைப் பற்றி உங்களுக்கே தெரியாத விஷயங்களை உங்களிடம் கூற முடியும்.

உங்களைப் பற்றிய தகவல்களை நீங்கள் அறிந்து கொள்ள விரும்பினால், 23அன்ட்மீ நிறுவனத்திற்கு வெறும் 99 டாலர்கள் பணத்தை அனுப்பி வையுங்கள். ஒரு சிறு குழாயை உள்ளடக்கிய ஒரு சிறிய பார்சலை அவர்கள் உங்களுக்கு அனுப்பி வைப்பார்கள். அந்தக் குழாயினுள் நீங்கள் உங்கள் உமிழ்நீரை உமிழ்ந்து, அக்குழாயை மூடி, கலிபோர்னியாவில் உள்ள மவுன்டன் வியூ நகருக்கு அதை நீங்கள் அனுப்பி வைக்க வேண்டும். அங்கு உங்கள் உமிழ்நீரில் உள்ள டிஎன்ஏ ஆய்வு செய்யப்படும். அதன் முடிவுகள் இணையத்தின் வழியாக உங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். உங்களுக்கு ஏற்படக்கூடிய சாத்தியமுள்ள உடல்நலப் பிரச்சனைகள் அப்பட்டியலில் குறிப்பிடப்பட்டிருக்கும். அதோடு, வழுக்கைத் தலையிலிருந்து

பார்வையின்மை வரையிலான 90 விதமான பிரச்சனைகள் தொடருவதற்கான சாத்தியக்கூறுகள் உங்களுக்கு எவ்வளவு தூரம் இருக்கிறது என்பதையும் அது பட்டியலிடும். ‘உன்னை அறிந்து கொள்’ என்ற பழம்பெரும் கூற்றைப் பின்பற்றுவது இன்றுபோல ஒருபோதும் சுலபமாகவும் சிக்கனமானதாகவும் இருந்ததில்லை. இவை எல்லாமே புள்ளிவிபரங்களின் அடிப்படையில் அமைந்திருப்பதால், துல்லியமான கணிப்புகளை மேற்கொள்ளுவதற்கு ஒரு நிறுவனத்தின் தரவுத்தளத்தின் அளவு அதிக முக்கியமானதாக ஆகிறது. எனவே, எந்த நிறுவனம் ஒரு மாபெரும் மரபணுத் தரவுத்தளத்தை உருவாக்குகிறதோ, அந்நிறுவனம்தான் தன்னுடைய வாடிக்கையாளர்களுக்கு மிகச் சிறந்த கணிப்புகளை வழங்கும், சந்தையைக் கைப்பற்றும். அமெரிக்காவில் தனிநபர் அந்தரங்க உரிமைகள் தொடர்பான விதிகள் மிகவும் கண்டிப்பானவையாக இருப்பதாலும், சீனர்கள் தனிநபர் அந்தரங்கத்தைப் பற்றி அக்கறை கொள்ளுவதில்லை என்பதாலும், மரபணுச் சந்தை சுலபமாகச் சீனாவின் கைகளுக்குப் போய்விடுமோ என்ற கவலை அமெரிக்க உயிர்தொழில்நுட்ப நிறுவனங்களை மேன்மேலும் அதிகமாக ஆட்கொண்டு வருகிறது.

நாம் எல்லாப் புள்ளிகளையும் இணைத்துப் பார்த்து, நம்முடைய உயிரியளவுக் கருவிகளையும், நம்முடைய டிஎன்ஏ ஸ்கேன்களையும், நம்முடைய மருத்துவ ஆவணங்களையும் தொடர்பு கொள்ளுவதற்கான அனுமதியை கூகுளுக்கும் அதன் போட்டியாளர்களுக்கும் நாம் வழங்கினால், அனைத்துமறிந்த ஆரோக்கியப் பராமரிப்பு நமக்குக் கிடைக்கும். அது தொற்றுநோய்களை எதிர்த்துச் சண்டையிடுவதோடு, புற்றுநோய், மாரடைப்பு, மறதிநோய் போன்றவற்றிலிருந்தும் நம்மைப் பாதுகாக்கும். ஆனால் அப்படிப்பட்ட ஒரு தரவுத்தளம் கூகுளின் வசம் இருந்தால், கூகுள் அதைக் கொண்டு இன்னும் ஏராளமானவற்றைச் செய்யக்கூடும். உங்களுடைய ஒவ்வொரு சுவாசத்தையும், ஒவ்வோர் அசைவையும், நீங்கள் முறிக்கின்ற ஒவ்வோர் உறவையும், உங்கள் வங்கிக் கணக்கையும், இதயத்துடிப்பையும், சர்க்கரை அளவுகளையும், பாலியல் தொடர்புகளையும் கண்காணிக்கின்ற ஓர் அமைப்புமுறையைக் கற்பனை செய்து பாருங்கள். நீங்கள் உங்களை அறிந்து வைத்திருப்பதைவிட அதிகச் சிறப்பாக அந்த அமைப்புமுறை உங்களைப் பற்றித் தெரிந்து கொண்டிருக்கும். மோசமான உறவுகளில் மக்கள் சிக்கிக் கிடக்கும்படி செய்கின்ற சுயஏய்ப்புகளும் சுயமாயைகளும், அவர்களுக்குப் பொருத்தமில்லாத வேலைகளும், தீய பழக்கங்களும் கூகுளை முட்டாளாக்க வாய்ப்பில்லை. இன்று நம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டிருக்கின்ற நம்முடைய விவரிக்கும் சுயத்தைப்

போலன்றி, கட்டுக்கதைகளின் அடிப்படையில் கூகுள் எந்தவொரு தீர்மானத்தையும் மேற்கொள்ளாது; அறிவுரீதியான குறுக்குவழிகளாலோ அல்லது உச்சம்-முடிவு விதியாலோ அதைத் தவறாக வழிநடத்த முடியாது. நாம் எடுத்து வைக்கின்ற ஒவ்வோர் அடியையும் நாம் குலுக்குகின்ற ஒவ்வொரு கையையும் கூகுள் உண்மையிலேயே நினைவில் வைத்திருக்கும்.

நம்மில் பெரும்பாலானோர் நம்முடைய தீர்மானம் மேற்கொள்ளும் செயல்முறைகளில் பலவற்றை இப்படிப்பட்ட ஓர் அமைப்புமுறையிடம் மகிழ்ச்சியாக ஒப்படைத்துவிடுவோம். குறைந்தபட்சம், முக்கியமான தேர்ந்தெடுப்புகளை மேற்கொள்ள வேண்டிய சமயங்களில் நாம் அதனுடன் கலந்தாலோசிக்க விரும்புவோம். நாம் எந்தத் திரைப்படத்தைப் பார்க்க வேண்டும், விடுமுறைக்கு எந்த இடத்திற்குப் போக வேண்டும், எந்தக் கல்லூரியில் படிக்க வேண்டும், எந்த வேலையை ஏற்றுக் கொள்ள வேண்டும், யாரைக் காதலிக்க வேண்டும், யாரைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று கூகுள் நமக்கு அறிவுறுத்தும். ஓர் இளம்பெண் கூகுளிடம், "ஜான், டாம் ஆகிய இருவருமே என்னைக் காதலிக்கின்றனர். எனக்கு அவர்கள் இருவரையும் பிடித்திருக்கிறது, ஆனால் வெவ்வேறு வழிகளில் அவர்களைப் பிடித்திருக்கிறது. எனவே, அவர்களில் யாரைத் தேர்ந்தெடுப்பது என்று என்னால் உறுதியாகத் தீர்மானிக்க முடியவில்லை. உனக்கு என்னைப் பற்றித் தெரிந்திருக்கின்ற அனைத்து விஷயங்களையும் வைத்துப் பார்க்கும்போது, நான் என்ன செய்ய வேண்டும் என்று நீ எனக்கு அறிவுறுத்துவாய்?" என்று கேட்பதாக வைத்துக் கொள்ளுவோம்.

கூகுள் அதற்கு இப்படி பதிலளிக்கும்: "நீ பிறந்த நாளிலிருந்து நான் உன்னை அறிந்து வந்திருக்கிறேன். நான் உன்னுடைய எல்லா மின்னஞ்சல்களையும் படித்திருக்கிறேன், உன்னுடைய தொலைபேசி அழைப்புகள் அனைத்தையும் பதிவு செய்து வைத்திருக்கிறேன். உனக்குப் பிடித்தமான திரைப்படங்கள் எவை என்பது எனக்குத் தெரியும். உன்னுடைய டிஎன்ஏ, உன் இதயத்தின் ஒட்டுமொத்த உயிரியளவு வரலாறு ஆகியவையும் எனக்குத் தெரியும். நீ உன்னுடைய காதலர்கள் ஒவ்வொருவருடனும் என்றென்றைக்கு எங்கெங்கே சென்றாய் என்பது பற்றிய துல்லியமான தகவல்கள் என்னிடம் உள்ளன. நீ ஜானுடனோ அல்லது டாமுடனோ வெளியே சென்றபோதெல்லாம் உன் இதயத்துடிப்பு விகிதமும் ரத்த அழுத்தமும் சர்க்கரை அளவுகளும் எவ்வளவு இருந்தன என்பது பற்றிய நொடிவாரியான வரைபடங்களை என்னால் உனக்குக் காட்ட முடியும்.

நீ அவர்களோடு புணர்ச்சியில் ஈடுபட்ட ஒவ்வொரு முறையும் அது எவ்வளவு இன்பகரமாக இருந்தது என்பது பற்றிய கணிதரீதியான மதிப்பீடுகளையும் என்னால் உனக்கு வழங்க முடியும். உன்னை நான் எவ்வளவு நன்றாகத் தெரிந்து வைத்திருக்கிறேனோ, அதே அளவு அவர்கள் இருவரைப் பற்றிய அத்தனை விஷயங்களும் எனக்கு நன்றாகத் தெரியும். இந்த அனைத்துத் தகவல்களையும், என்னுடைய அற்புதமான படிமுறைத் தீர்வுகளையும், கோடிக்கணக்கான உறவுகளைப் பற்றி ஆண்டுக்கணக்கில் நான் சேகரித்து வந்துள்ள புள்ளிவிபரங்களையும் வைத்துப் பார்க்கும்போது, நீ ஜானுடன் போக வேண்டும் என்று நான் உனக்கு அறிவுறுத்துகிறேன். காலப்போக்கில் நீ அவனோடு அதிக மனநிறைவோடு வாழுவதற்கு 87 சதவீத சாத்தியக்கூறு இருக்கிறது.

"உன்னை நான் அறிந்து வைத்திருப்பதைக் கொண்டு பார்க்கும்போது, என்னுடைய பதில் உனக்குப் பிடிக்கவில்லை என்று எனக்கு உறுதியாகத் தெரியும். ஜானைவிட டாம் அதிக வசீகரமாக இருப்பதாலும், நீ புறத்தோற்றத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பவள் என்பதாலும், நான் 'டாம்' என்று கூற வேண்டும் என்று நீ ரகசியமாக விரும்புகிறாய். புறத்தோற்றம் முக்கியமானதுதான், ஆனால் நீ நினைக்கின்ற அளவுக்கு அது முக்கியமானதல்ல. ஆப்பிரிக்கக் காடுகளில் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பாக உருவாகிய உன்னுடைய உயிர்வேதிப் படிமுறைத் தீர்வுகள், புணர்ச்சிக்கான துணைகளின் தேடலில் புறத்தோற்றத்திற்கு வெறும் 35 சதவீத முக்கியத்துவத்தையே கொடுத்தன. இந்நாள்வரையிலான ஆய்வுகள் மற்றும் புள்ளிவிபரங்களின் அடிப்படையில் அமைந்துள்ள என்னுடைய படிமுறைத் தீர்வுகள், காதல் உறவுகளின் நீண்டகால வெற்றியின்மீது புறத்தோற்றம் வெறும் 14 சதவீதத் தாக்கம் மட்டுமே ஏற்படுத்துவதாகக் கூறுகின்றன. எனவே, டாமின் புறத்தோற்றத்தை நான் கணக்கில் எடுத்துக் கொண்டபோதிலும், நீ ஜானுடன் அதிக மகிழ்ச்சியாக இருப்பாய் என்பதுதான் இப்போதும் என்னுடைய கருத்தாகும்."

அர்ப்பணிப்புடன்கூடிய இப்படிப்பட்ட ஆலோசனைச் சேவைகளுக்குக் கைமாறாக நாம் விட்டுக்கொடுக்க வேண்டியதெல்லாம், மனிதர்கள் தனிநபர்கள் என்ற யோசனையையும், எது நல்லது, எது அழகானது, வாழ்வின் அர்த்தம் என்ன ஆகியவற்றைத் தீர்மானிப்பதற்கு ஒவ்வொரு மனிதனுக்கும் சுதந்திரம் இருக்கிறது என்ற யோசனையையும் மட்டுமே. மக்கள் இனியும் தங்களுடைய விவரிக்கும் சுயம் புனைகின்ற கதைகளால் இயக்கப்படுகின்ற சுதந்திர அமைப்புமுறைகளாக இருக்க மாட்டார்கள். மாறாக, அவர்கள் ஒரு

மாபெரும் உலகளாவிய பிணையத்தின் ஒரு முக்கியப் பகுதியாக இருப்பர்.

***

தாராளவாதம் நம்முடைய விவரிக்கும் சுயத்தைப் புனிதமாக்குகிறது, ஓட்டுச் சாவடிகளிலும் பேரங்காடிகளிலும் திருமணச் சந்தையிலும் அது வாக்களிக்க அனுமதிக்கிறது. பல நூற்றாண்டுகளாக இது அர்த்தம் வாய்ந்ததாக இருந்தது. ஏனெனில், விவரிக்கும் சுயம் அனைத்து வகையான புனைகதைகளிலும் கற்பனைக் கதைகளிலும் நம்பிக்கை கொண்டிருந்தபோதிலும், அதைத் தவிர வேறு எந்த மாற்று அமைப்புமுறையும் என்னை அவ்வளவு சிறப்பாக அறிந்திருக்கவில்லை. ஆனால், என்னை உண்மையிலேயே மிகச் சிறப்பாக அறிந்திருக்கின்ற ஓர் அமைப்புமுறை உருவாக்கப்பட்டுவிட்டால், விவரிக்கும் சுயத்தின் கைகளில் அதிகாரத்தை ஒப்படைப்பது முட்டாள்தனமான காரியமாக இருக்கும்.

ஜனநாயகரீதியான தேர்தல்கள் போன்ற தாராளவாதப் பழக்கங்கள் வழக்கொழிந்து போய்விடும். ஏனெனில், என்னுடைய அரசியல் அபிப்பிராயங்களை என்னைவிடச் சிறப்பாக கூகுளால் பிரதிநுதப்படுத்த முடிகின்ற நிலை ஏற்படும். வாக்குச் சாவடியில் திரைச்சீலைக்குப் பின்னே நான் நின்று கொண்டிருக்கும்போது, நான் என்னுடைய உண்மையான சுயத்துடன் கலந்தாலோசித்து, என்னுடைய ஆழமான விருப்பங்களைப் பிரதிபலிக்கின்ற கட்சியை அல்லது வேட்பாளரை நான் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று தாராளவாதம் எனக்கு அறிவுறுத்துகிறது. ஆனால், நான் அந்தத் திரைச்சீலைக்குப் பின்னால் நிற்கும்போது, கடந்த தேர்தலுக்கும் இந்தத் தேர்தலுக்கும் இடைப்பட்டக் காலத்தில் நான் உணர்ந்த மற்றும் நினைத்த எல்லா விஷயங்களும் உண்மையில் என் நினைவில் இல்லை என்று உயிரியல் சுட்டிக்காட்டுகிறது. மேலும், பல முனைகளிலிருந்தும் வந்து என்னைத் தாக்குகின்ற ஏகப்பட்டப் பிரச்சாரங்களும் பொய்களும் தன்னிச்சையான நினைவுகளும் என்னுடைய தேர்ந்தெடுப்புகளைத் திரிக்கக்கூடும். மனிதனுடைய விவரிக்கும் சுயம் கானமனின் ‘குளிர்ந்த நீர்ப் பரிசோதனை’யில் செய்ததைப்போலவே, அரசியலிலும் உச்சம்-முடிவு விதியைப் பின்பற்றுகிறது. அது பெரும்பாலான நிகழ்வுகளை மறந்துவிடுகிறது, வழக்கத்திற்கு மாறான மிகத் தீவிரமான நிகழ்வுகளில் ஒருசிலவற்றை மட்டுமே அது தன் நினைவில் வைத்திருக்கிறது, சமீபத்திய நிகழ்வுகளுக்கு அளவுக்கதிகமான முக்கியத்துவத்தைக் கொடுக்கிறது.

நான்கு நீண்ட ஆண்டுகளாக, என்னுடைய நாட்டின் பிரதம

மந்திரியின் கொள்கைகளைப் பற்றி நான் மீண்டும் மீண்டும் குறை கூறி வந்திருக்கக்கூடும், அவர் 'நம் எல்லோரையும் சீரழித்துவிடுவார்' என்று என்னிடமும் என் பேச்சைக் கேட்கத் தயாராக இருந்த எவரொருவரிடமும் நான் கூறி வந்திருக்கக்கூடும். ஆனால், தேர்தலுக்கு முந்தைய ஒருசில மாதங்களில், அரசாங்கம் வரிகளைக் குறைக்கிறது, பணத்தை தாராளமாகச் செலவு செய்கிறது. ஒரு பிரமாதமான பிரச்சாரத்தை நிகழ்த்துவதற்காக, ஆளும் கட்சி மிகச் சிறப்பாக உரை எழுதுபவர்களை நியமிக்கிறது. என்னுடைய மூளையின் பய மையத்திடம் நேரடியாகப் பேசுகின்ற அச்சுறுத்தல்களும் வாக்குறுதிகளும் அந்த உரையில் சம அளவில் இருக்கும்படி அது பார்த்துக் கொள்ளுகிறது. தேர்தல் நாளன்று காலையில் நான் எழுந்திருக்கும்போது எனக்குச் சளி பிடித்திருக்கிறது, அது என்னுடைய மனச் செயல்முறைகளை பாதிக்கிறது, மற்ற விஷயங்களை விட்டுவிட்டுப் பாதுகாப்பையும் உறுதிப்பாட்டையும் தேர்ந்தெடுக்க அது என்னைத் தூண்டுகிறது. அதன் விளைவாக, யார் 'நம் எல்லோரையும் சீரழித்துவிடுவார்' என்று நான் முழங்கினேனோ, அதே நபரை இன்னும் நான்கு ஆண்டுகளுக்கு நான் மீண்டும் பிரதமராக்குகிறேன்.

எனக்காக வாக்களிப்பதற்கான அதிகாரத்தை நான் கூகுளிடம் ஒப்படைத்திருந்தால் இப்படிப்பட்டத் தலைவிதியிலிருந்து என்னை என்னால் காப்பாற்றியிருக்க முடியும். கூகுள் நேற்றுப் புதிதாய்ப் பிறந்த ஒன்றல்லவே. சமீபத்திய வரிக் குறைப்புகளையும் தேர்தல் வாக்குறுதிகளையும் அது உதாசீனப்படுத்தாது என்றாலும், முந்தைய நான்கு ஆண்டுகளின்போது நிகழ்ந்தவற்றையும் அது நினைத்துப் பார்க்கும். தினமும் காலையில் நான் செய்தித்தாள்களைப் படித்தபோது என்னுடைய ரத்த அழுத்தம் எவ்வளவு இருந்தது என்பதையும், தொலைக்காட்சியில் மாலைச் செய்திகளைப் பார்த்தபோது என்னுடைய டோபமீன் அளவு எவ்வளவு குறைந்தது என்பதையும் கூகுள் அறிந்திருக்கும். அரசியல் கட்சிகளின் சார்பில் நிகழ்வுகளை அவர்களுக்குச் சாதகமாகத் திரித்துக் கூறுகின்ற செய்தித் தொடர்பாளர்களின் வெற்று முழக்கங்களை எப்படி வடிகட்டித் தூக்கியெறிவது என்பதை கூகுள் அறியும். உடல்நலக்குறைவானது, வாக்காளர்கள் சற்று அதிகமாக வலதுசாரிக் கட்சியின் பக்கமாகச் சாயும்படி செய்கிறது என்பதை கூகுள் புரிந்து கொண்டு அதை ஈடுகட்டும். எனவே, என்னுடைய நிலையற்ற மனநிலைக்கு ஏற்பவோ அல்லது என்னுடைய விவரிக்கும் சுயத்தின் கற்பனைக் கதைகளுக்கு ஏற்பவோ அல்லாமல், 'நான்' என்று அழைக்கப்படுகின்ற உயிர்வேதிப்

படிமுறைத் தீர்வுகளை உள்ளடக்கிய ஒரு கரிமத் தொகுதியின் உண்மையான உணர்வுகளுக்கும் ஆர்வங்களுக்கும் ஏற்ப கூகுளால் வாக்களிக்க முடியும்.

கூகுள் எல்லா நேரத்திலும் சரியான தேர்ந்தெடுப்புகளை மேற்கொள்ளாது. என்ன இருந்தாலும், இவை எல்லாம் வெறும் நிகழ்தகவுகள்தானே! ஆனால், கூகுள் போதுமான அளவு நல்ல தீர்மானங்களை மேற்கொண்டால், மக்கள் அதற்குத் தொடர்ந்து கூடுதல் அதிகாரத்தை வழங்குவர். காலம் செல்லச் செல்ல, தரவுத்தளங்கள் வளரும், புள்ளிவிபரங்கள் அதிகத் துல்லியமானவையாக ஆகும், படிமுறைத் தீர்வுகள் மேம்படும், தீர்மானங்கள் மேன்மேலும் சிறப்புறும். ஆனாலும், அமைப்புமுறை ஒருபோதும் என்னைக் கச்சிதமாக அறிந்திருக்காது, அது முற்றிலும் தவறிழைக்காத ஒன்றாகவும் ஒருபோதும் இருக்காது. ஆனால் அதற்கான தேவை இல்லை. என்னை நான் அறிந்திருப்பதைவிட அதிகச் சிறப்பாக என்னைப் பற்றி அந்த அமைப்புமுறை அறியும் நாளன்று தாராளவாதம் நிலைகுலைந்து விழுந்துவிடும். ஆனால், பெரும்பாலான மக்கள் உண்மையிலேயே தங்களைப் பற்றி எதுவும் அறியாதவர்களாகவே இருக்கின்றனர் என்பதை வைத்துப் பார்க்கும்போது, என்னை என்னைவிடச் சிறப்பாக அந்த அமைப்புமுறை அறிந்து கொள்ளுவது ஒன்றும் அவ்வளவு கடினமான காரியமாகத் தோன்றவில்லை.

ஒருவருடைய நண்பர்களும் பெற்றோரும் வாழ்க்கைத்துணைவரும் அவருடைய ஆளுமையையும் மனநிலையையும் பற்றி அறிந்திருப்பதைவிட முகநூல் படிமுறைத் தீர்வு அதிகச் சிறப்பாக அவற்றை எடைபோடுவதாக கூகுளின் பரம எதிரியான முகநூல் நிறுவனம் சமீபத்தில் நடத்திய ஓர் ஆய்வு சுட்டிக்காட்டுகிறது. முகநூல் உறுப்பினர்களில் 86,220 பேர் அந்த ஆய்வில் தாங்களாக விருப்பப்பட்டுக் கலந்து கொண்டனர். ஆளுமையைப் பற்றிய நூறு கேள்விகளுக்கு அவர்கள் பதிலளித்தனர். முகநூலில் அவர்கள் மேற்கொண்ட அனைத்து நடவடிக்கைகளையும் (அவர்கள் 'லைக்' செய்த வலைத்தளங்கள், பிம்பங்கள், வீடியோக்கள் போன்றவை) கண்காணித்ததன் அடிப்படையில், முகநூல் படிமுறைத் தீர்வு அவர்களுடைய விடைகளை முன்கூட்டியே கணித்திருந்தது. அவர்கள் எவ்வளவு அதிக 'லைக்' கொடுத்திருந்தனரோ, கணிப்புகள் அவ்வளவு அதிகத் துல்லியமாக இருந்தன. அக்கணிப்புகள், அந்நபர்களுடைய சக ஊழியர்களும் நண்பர்களும் குடும்ப உறுப்பினர்களும் வாழ்க்கைத்துணைவர்களும் வழங்கிய கணிப்புகளோடு ஒப்பிடப்பட்டன. இதில் சுவாரசியமான விஷயம் என்னவென்றால், சக

ஊழியர்களின் கணிப்புகளைவிட அதிகத் துல்லியமான கணிப்புகளை வழங்குவதற்கு அந்த முகநூல் படிமுறைத் தீர்வுக்கு வெறும் பத்து 'லைக்'குகள் மட்டுமே தேவைப்பட்டன. அந்நபரின் நண்பர்களைவிட அதிகத் துல்லியமாகக் கணிப்பதற்கு 70 'லைக்'குகளும், குடும்ப உறுப்பினர்களைவிட அதிகத் துல்லியமாகக் கணிப்பதற்கு 150 'லைக்'குகளும், வாழ்க்கைத்துணைவர்களைவிட அதிகத் துல்லியமாகக் கணிப்பதற்கு 300 'லைக்'குகளும் மட்டுமே தேவைப்பட்டன. இதை வேறு வார்த்தைகளில் கூற வேண்டுமென்றால், நீங்கள் உங்கள் முகநூல் பக்கத்தில் 300 லைக்குகளைத் தட்டியிருந்தால், உங்களுடைய கணவரை அல்லது மனைவியைவிட முகநூல் படிமுறைத் தீர்வால் உங்களுடைய அபிப்பிராயங்களையும் விருப்பங்களையும் அதிகச் சிறப்பாகக் கணிக்க முடியும்!

சில துறைகளில், சம்பந்தப்பட்ட நபரைவிட முகநூல் படிமுறைத் தீர்வு அதிகச் சிறப்பாக வேலை செய்தது. மேற்குறிப்பிடப்பட்ட ஆய்வில் கலந்து கொண்ட நபர்கள் எவ்வளவு தூரம் போதைப் பொருட்களை உட்கொண்டனர், அவர்களுடைய சமூகப் பிணையத்தின் அளவு எவ்வளவு ஆகியவற்றை மதிப்பீடு செய்யும்படி அவர்களிடம் கேட்டுக் கொள்ளப்பட்டபோது, அவர்கள் கொடுத்த விடைகளைவிட அந்தப் படிமுறைத் தீர்வு அவ்விஷயங்கள் பற்றித் தெரிவித்த முடிவுகள் அதிகத் துல்லியமாக இருந்தன. அந்த ஆய்வின் முடிவில் பின்வரும் கணிப்பு வெளியிடப்பட்டது (இக்கணிப்பு இக்கட்டுரையை எழுதிய மனித எழுத்தாளர்களுடையதே அன்றி, முகநூல் படிமுறைத் தீர்வினுடையது அல்ல): 'தங்களுடைய தொழில்வாழ்க்கையையும் வாழ்க்கைத்துணைவரையும் செயல்நடவடிக்கைகளையும் தேர்ந்தெடுப்பது போன்ற, வாழ்வின் முக்கியத் தீர்மானங்களை மேற்கொள்ளும்போது, மக்கள் தங்கள் சொந்த உள்ளுணர்வைக் கைவிட்டுவிட்டுக் கணினிகளைச் சார்ந்திருக்கக்கூடும். தரவுகள் மேற்கொள்ளுகின்ற தீர்மானங்கள் மக்களுடைய வாழ்க்கையை மேம்படுத்துவது சாத்தியம்தான்.'

இந்த ஆய்வு இலைமறை காய்போலச் சுட்டுக்காட்டுகின்ற ஒரு மோசமான விஷயத்தையும் நான் இங்கு குறிப்பிட்டாக வேண்டும். எதிர்காலத்தில் அமெரிக்க அதிபர்களைத் தேர்ந்தெடுப்பதற்கான தேர்தல்களில், கோடிக்கணக்கான அமெரிக்கர்களின் அரசியல் அபிப்பிராயங்களை மட்டுமல்லாமல், அவர்களில் யாரெல்லாம் தங்கள் ஓட்டு யாருக்கு என்பதைத் தீர்மானித்திருக்கவில்லை என்பதையும், அவர்களை எப்படி ஒரு குறிப்பிட்ட நபருக்கு ஓட்டுப் போடும்படி செய்வது என்பதையும் முகநூல் அறிந்திருக்கும். ஒக்லஹோமா

மாநிலத்தில் குடியரசுக் கட்சிக்கும் ஜனநாயகக் கட்சிக்கும் இடையே நெருக்கமான போட்டி நிலவுகிறது என்று முகநூலால் கூற முடியும், யாருக்குத் தங்கள் ஓட்டு என்பதைத் தீர்மானித்திருக்காத 32,417 வாக்காளர்களை முகநூலால் கண்டுபிடிக்க முடியும், வேட்பாளர்கள் எதைக் கூறினால் அந்த வாக்காளர்களைத் தங்கள் பக்கமாகச் சாய்க்க முடியும் என்பதையும் அதனால் தீர்மானிக்க முடியும். விலை மதிப்பிடப்பட முடியாத இந்த அரசியல் தரவுகளை முகநூல் எங்கிருந்து பெறுகிறது? நாம்தான் இலவசமாக அவற்றை அதற்குக் கொடுக்கிறோம்.

ஐரோப்பிய ஏகாதிபத்தியம் கொடிகட்டிப் பறந்த காலகட்டத்தில், வெற்றியாளர்களும் வணிகர்களும் வண்ணமயமான மணிகளைக் கொடுத்து ஒட்டுமொத்தத் தீவுகளையும் நாடுகளையும் வாங்கினர். இந்த 21ம் நூற்றாண்டில் நம்மைப் பற்றிய தனிப்பட்டத் தகவல்கள்தாம் பெரும்பாலான மனிதர்கள் வழங்கக்கூடிய பெரும் மதிப்பு வாய்ந்த வளமாக இருக்கின்றன. மின்னஞ்சல் சேவைகளுக்கும் வேடிக்கையான பூனை வீடியோக்களுக்கும் கைமாறாக நாம் அந்த வளத்தைத் தொழில்நுட்ப ஜாம்பவான்களுக்குத் தாரை வார்த்துக் கொண்டிருக்கிறோம்.

## தீர்க்கதரிசியிலிருந்து இடைத்தரகர்களாக

கூகுள், முகநூல், மற்றும் பிற படிமுறைத் தீர்வுகள் 'எல்லாமறிந்த' தீர்க்கதரிசிகளாக ஆகியுள்ள நிலையில், அவை இடைத்தரகர்களாக உருமாறி, இறுதியில் அரசர்களாக உருவெடுக்கின்றன. இப்போக்கைப் புரிந்து கொள்ளுவதற்கு, 'வேஸ்' என்ற, ஒரு புவியிடங்காட்டியின் அடிப்படையில் அமைந்த, பயணங்களுக்கு உதவுகின்ற ஒரு செயலியைப் பார்க்கலாம். இன்று பல ஓட்டுநர்கள் இதைப் பயன்படுத்துகின்றனர். வேஸ் வெறுமனே ஒரு வரைபடம் மட்டுமல்ல. அதைப் பயன்படுத்துகின்ற லட்சக்கணக்கான நபர்கள், போக்குவரத்து நெரிசல்களைப் பற்றியும், கார் விபத்துக்களைப் பற்றியும், காவல்துறையினரின் கார்களைப் பற்றியும் அச்செயலியில் தொடர்ந்து தகவல்களைப் பதிவேற்றம் செய்கின்றனர். எனவே, அதிகமான போக்குவரத்து இருக்கின்ற இடங்களைத் தவிர்த்துவிட்டு, நீங்கள் சென்றடைய வேண்டிய இடத்திற்கு விரைவாக உங்களைக் கூட்டிச் செல்லுவது எப்படி என்பதை வேஸ் அறிந்து கொள்ளுகிறது. சாலையில் நீங்கள் ஒரு சந்திப்பை வந்தடையும்போது, வலது பக்கமாகத் திரும்பும்படி உங்கள் உள்ளுணர்வு உங்களிடம் கூறக்கூடும், ஆனால்

இடது பக்கம் திரும்பும்படி வேஸ் உங்களுக்கு அறிவுறுத்துகிறது. தங்களுடைய உள்ளுணர்வுக்குச் செவிசாய்ப்பதைவிட, வேஸின் பரிந்துரையை ஏற்றுக் கொள்ளுவது சாலச் சிறந்தது என்பதை அதைப் பயன்படுத்துபவர்கள் விரைவில் தெரிந்து கொள்ளுகின்றனர்.

துவக்கத்தில் வேஸின் படிமுறைத் தீர்வு ஒரு தீர்க்கதரிசியைப்போல மட்டுமே செயல்படுவதுபோலத் தோன்றக்கூடும். நீங்கள் ஒரு கேள்வி கேட்கிறீர்கள், அதற்கு அந்தத் தீர்க்கதரிசி பதிலளிக்கிறது. ஆனால் ஒரு தீர்மானம் மேற்கொள்ளுவது உங்களைச் சார்ந்தது. ஆனால், அந்தத் தீர்க்கதரிசி உங்களுடைய நம்பிக்கைக்குப் பாத்திரமானால், அதை ஓர் இடைத்தரகராக மாற்றுவதுதான் நீங்கள் அடுத்துச் செய்யக்கூடிய அறிவார்ந்த செயலாக இருக்கும். ஓர் இறுதி இலக்கை மட்டுமே நீங்கள் அந்தப் படிமுறைத் தீர்வுக்குக் கொடுக்கிறீர்கள். வேஸின் விஷயத்தில் இது எப்படி நிகழுகிறது என்று பார்க்கலாம். வேஸை நீங்கள் உங்களுடைய தானியங்கிக் காருடன் பொருத்தி, 'வீட்டிற்குச் சீக்கிரமாகப் போய்ச் சேருவதற்கான வழியில் போ' என்றோ, 'அழகான இயற்கைக் காட்சிகள் நிறைந்த சாலை வழியாகப் போ' என்றோ, 'மாசுபாடு அவ்வளவாக இல்லாத வழியாகப் போ' என்றோ அதனிடம் கூறினால், தீர்மானம் உங்களுடையதுதான், ஆனால் உங்கள் கட்டளைகளை நிறைவேற்றுகின்ற பொறுப்பை நீங்கள் வேஸிடம் விட்டுவிடுகிறீர்கள்.

இறுதியில், வேஸ் ஓர் அரசனாக ஆகக்கூடும். தன் கையில் அளப்பரிய அதிகாரத்துடனும், உங்களைவிட அதிகமான விஷயங்களைத் தெரிந்து வைத்தும் இருக்கின்ற அது, விரைவில் உங்களையும் மற்ற ஓட்டுநர்களையும் தனக்குச் சாதகமாகச் செயல்பட வைத்து, உங்களுடைய விருப்பங்களை வடிவமைத்து, உங்களுக்காக உங்கள் தீர்மானங்களை மேற்கொள்ளத் தொடங்கக்கூடும். எடுத்துக்காட்டாக, வேஸ் ஒரு நல்ல செயலியாக இருப்பதால் எல்லோரும் அதைப் பயன்படுத்தத் தொடங்குவதாக வைத்துக் கொள்ளுவோம். ஒரு குறிப்பிட்டச் சாலையில் போக்குவரத்து நெரிசல் இருப்பதாகவும் வைத்துக் கொள்ளுவோம். அதற்கு மாற்றான இன்னொரு வழி அவ்வளவு கூட்டம் இல்லாததாக இருக்கிறது. இத்தகவலை வேஸ் எல்லா ஓட்டுநர்களுக்கும் தெரிவித்தால், எல்லோரும் அந்த மாற்று வழியை நோக்கி விரைவர். இப்போது அங்கும் போக்குவரத்து நெரிசல் உருவாகிவிடும். எல்லோரும் ஒரே தீர்க்கதரிசியைப் பயன்படுத்தும்போது, எல்லோரும் அதை நம்பும்போது, அந்தத் தீர்க்கதரிசி ஓர் அரசனாக மாறுகிறது. எனவே, வேஸ் நமக்காக சிந்தித்தாக வேண்டும். அப்படியானால், அந்த மாற்று

வழியில் நெரிசல் இல்லை என்று 50 சதவீத ஓட்டுநர்களுக்கு மட்டுமே அது தகவல் வழங்கும், இன்னொரு 50 சதவீத மக்களுக்கு இத்தகவல் தெரியாமல் போகும். இதன் மூலம், அந்த மாற்று வழியில் நெரிசல் ஏற்படுவது தடுக்கப்படுவதோடு, முதல் வழியிலும் நெரிசல் குறைக்கப்படுகிறது.

இதைவிட அதிக நவீனமான அமைப்புமுறை ஒன்றை மைக்ரோசாஃப்ட் நிறுவனம் உருவாக்கிக் கொண்டிருக்கிறது. கோர்ட்டானா என்பது அதன் பெயர். மைக்ரோசாஃப்ட்டின் 'ஹேலோ' என்ற மிகப் பிரபலமான வீடியோ விளையாட்டுத் தொடரில் வருகின்ற செயற்கை நுண்ணறிவுக் கதாபாத்திரத்தின் பெயர் அது. எதிர்காலத்தில் மைக்ரோசாஃப்ட் தன்னுடைய வின்டோஸ் மென்பொருளின் ஒரு முக்கியமான அம்சமாகக் கோர்ட்டானாவைச் சேர்த்துக் கொள்ளத் திட்டமிட்டுள்ளது. கோர்ட்டானா ஒரு தனிப்பட்டச் செயலாளரைப்போலச் செயல்படும். வின்டோஸைப் பயன்படுத்துகின்றவர்கள் கோர்ட்டானா தங்களுடைய கோப்புகளையும் மின்னஞ்சல்களையும் செயலிகளையும் கையாள அனுமதிக்கும்படி ஊக்குவிக்கப்படுவர். அவ்வாறு அனுமதிக்கப்படும்போது, அது அவர்களைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொண்டு, எண்ணற்ற விஷயங்களில் அவர்களுக்கு அறிவுரை வழங்கும், அவர்களுடைய ஆர்வங்களைப் பிரதிநுதப்படுத்துகின்ற ஓர் இடைத்தரகராகச் செயல்படும். உங்கள் மனைவியின் பிறந்தநாளுக்கு ஏதேனும் பரிசு வாங்கும்படி கோர்ட்டானாவால் உங்களுக்கு நினைவூட்ட முடியும், அதனால் அப்பரிசைத் தேர்ந்தெடுக்க முடியும், ஓர் உணவகத்தில் உங்களுக்கு ஒரு மேசையை முன்கூட்டியே பதிவு செய்ய முடியும், சாப்பாட்டிற்கு ஒரு மணிநேரத்திற்கு முன்பாக நீங்கள் மருந்து உட்கொள்ள வேண்டும் என்று உங்களுக்கு நினைவூட்ட முடியும். நீங்கள் வாசித்துக் கொண்டிருக்கும் புத்தகத்தை நீங்கள் உடனே மூடி வைக்காவிட்டால், வியாபார சந்திப்பிற்கு நீங்கள் தாமதமாகப் போகக்கூடும் என்று அதனால் உங்களை எச்சரிக்க முடியும். நீங்கள் அந்த சந்திப்புக்கூட்டத்திற்குள் அடியெடுத்து வைக்கவிருக்கும் நேரத்தில், உங்கள் ரத்த அழுத்தம் மிக அதிகமாக இருப்பதாகவும் உங்கள் டோபமீன் அளவு மிகக் குறைவாக இருப்பதாகவும் கோர்ட்டானா உங்களை எச்சரிக்கும். அதோடு, உங்களுடைய கடந்தகாலப் புள்ளிவிபரங்களின் அடிப்படையில் பார்க்கும்போது, நீங்கள் இப்படிப்பட்டச் சூழல்களில் வியாபாரத்தில் தீவிரமாகத் தவறு செய்யும் போக்கு நிலவுவதையும் அது உங்களுக்குச் சுட்டிக்காட்டும். எனவே, அச்சமயத்தில் முக்கியமான எந்தப் பரிவர்த்தனையிலும்

கையெழுத்திட வேண்டாம் என்று அது உங்களுக்குப் பரிந்துரைக்கும்.

கோர்ட்டானாக்கள் தீர்க்கதரிசிகளாக இருப்பதிலிருந்து இடைத்தரகர்களாகப் பரிணாம வளர்ச்சி அடைந்தவுடன், அவை தம்முடைய எஜமானர்களின் சார்பில் ஒன்றோடொன்று நேரடியாகப் பேசத் தொடங்கக்கூடும். இது எந்த உள்நோக்கமும் இன்றி சாதாரணமாகத் தொடங்கும். என்னுடைய கோர்ட்டானா உங்களுடைய கோர்ட்டானாவைத் தொடர்பு கொண்டு, எந்த இடத்தில் எந்த நேரத்தில் சந்திக்கலாம் என்று கேட்கும். நான் ஏதேனும் ஒரு நிறுவனத்தில் வேலை தேடும்போது, நான் என்னுடைய தன்விபரக் குறிப்பு எதையும் தங்களுக்கு அனுப்பி வைக்க வேண்டாம் என்றும், வெறுமனே தங்களுடைய கோர்ட்டானா என்னுடைய கோர்ட்டானாவைக் கேள்விகளால் துளைத்தெடுக்க நான் அனுமதித்தால் போதும் என்றும் அந்நிறுவனத்தின் மனிதவளத் துறை மேலாளர் என்னிடம் கூறக்கூடும். அல்லது, நான் காதலிக்க சாத்தியமுள்ள ஒரு நபருடைய கோர்ட்டானா என்னுடைய கோர்ட்டானாவை அணுகி, அவ்விரண்டும் சேர்ந்து குறிப்புகளை ஒப்பிட்டுப் பார்த்து, அந்நபரும் நானும் ஒரு நல்ல பொருத்தம்தானா என்று தீர்மானிக்கும் - தம்முடைய மனித உரிமையாளர்களாகிய எங்கள் இருவருக்கும் எதுவும் தெரியாமலேயே!

கோர்ட்டானாக்களின் அதிகாரம் அதிகரிக்கும்போது, அவை தம்முடைய எஜமானர்களின் நலனுக்கு உதவக்கூடிய விளைவுகளைப் பெற்றுக் கொடுப்பதற்காக ஒன்றையொன்று ஏமாற்றத் தொடங்கக்கூடும். எனவே, வேலைவாய்ப்புச் சந்தையிலும் திருமணச் சந்தையிலும் உங்களுக்குக் கிடைக்கக்கூடிய வெற்றி உங்களுடைய கோர்ட்டானாவின் தரத்தை அதிக அளவில் சார்ந்திருக்கத் தொடங்கும். மிக சமீபத்தியக் கோர்ட்டானாவை வைத்திருக்கின்ற பணக்காரர்கள், பழைய கோர்ட்டானாக்களை வைத்திருக்கின்ற ஏழைகளைவிட அதிக அனுகூலமான ஒரு நிலையை அனுபவிப்பர்.

ஆனால், யார் கோர்ட்டானாவின் எஜமானர் என்பது இங்கு ஒரு சிக்கலான பிரச்சனையாகிறது. நாம் ஏற்கனவே பார்த்துள்ளதுபோல, மனிதர்கள் தனிநபர்கள் அல்லர், அவர்களுக்கென்று தனியொரு சுயம் எதுவும் கிடையாது. அப்படியானால், கோர்ட்டானா யாருடைய விருப்பங்களை நிறைவேற்ற வேண்டும்? எடுத்துக்காட்டாக, தான் இனி சமச்சீர் உணவை மட்டுமே உட்கொள்ளப் போவதாகவும் தினமும் உடற்பயிற்சி நிலையத்திற்குச் சென்று உடற்பயிற்சி செய்யப் போவதாகவும் புதுவருடத் தீர்மானம் ஒன்றை என்னுடைய விவரிக்கும் சுயம் மேற்கொள்ளுவதாக வைத்துக் கொள்ளுவோம். ஒரு வாரத்திற்குப் பிறகு, உடற்பயிற்சி நிலையத்திற்குப் போவதற்கான நேரம்

வரும்போது, தொலைக்காட்சியை 'ஆன்' செய்யும்படியும், பீட்சாவை ஆர்டர் செய்யும்படியும் என்னுடைய அனுபவிக்கும் சுயம் கோர்ட்டானாவுக்கு உத்தரவிடுகிறது. இப்போது கோர்ட்டானா என்னுடைய அனுபவிக்கும் சுயத்திற்குக் கீழ்ப்படிய வேண்டுமா அல்லது ஒரு வாரத்திற்கு முன்பு என்னுடைய விவரிக்கும் சுயம் மேற்கொண்ட தீர்மானத்திற்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டுமா?

காலையில் சரியான நேரத்தில் வேலைக்குச் செல்லுவதற்கு அனுபவிக்கும் சுயத்தை எழுப்புவதற்காக முந்தைய நாள் மாலையில் விவரிக்கும் சுயம் அலாரம் வைப்பதற்குப் பயன்படுத்துகின்ற ஒரு அலாரக் கடிகாரமும் கோர்ட்டானாவும் ஒன்றுதானோ என்று நீங்கள் யோசிக்கக்கூடும். ஆனால், கோர்ட்டானா ஒரு அலாரக் கடிகாரத்தைவிட அதிகமாக என்மீது ஆதிக்கம் செலுத்துகிறது. அனுபவிக்கும் சுயம் ஒரு பொத்தானை அழுத்துவதன் மூலம் அந்த அலாரத்தை அணைத்துவிடலாம். இதற்கு நேர்மாறாக, கோர்ட்டானா என்னை மிக நன்றாக அறிந்திருக்கும் என்பதால், என்னுடைய எந்த உள்ளார்ந்த பொத்தான்களை அழுத்தினால் நான் அதன் 'அறிவுரை'யைக் கேட்பேன் என்பதை அது மிகத் துல்லியமாகத் தெரிந்து வைத்திருக்கும்.

மைக்ரோசாஃப்ட்டின் கோர்ட்டானாவைப்போல இன்னும் சில செயலிகளும் இவ்விளையாட்டிற்குள் நுழைந்துவிட்டன. 'கூகுள் நௌ', ஆப்பிளின் 'சிரீ' ஆகியவையும் கோர்ட்டானா செல்லுகின்ற அதே திசையில் பயணித்துக் கொண்டிருக்கின்றன. அமேசான் நிறுவனமும் உங்களை ஆய்வு செய்து, தான் ஏற்கனவே திரட்டியுள்ள தகவல்களின் அடிப்படையில் பொருட்களை உங்களுக்குப் பரிந்துரைக்கின்ற படிமுறைத் தீர்வுகளைத் தொடர்ந்து பயன்படுத்திக் கொண்டிருக்கிறது. நான் ஒரு புத்தகக் கடைக்குச் செல்லும்போது, சரியான புத்தகத்தை என் உள்ளுணர்வு தேர்ந்தெடுக்கும் என்ற நம்பிக்கையோடு அங்கிருக்கும் எல்லா அலமாரிகளையும் நான் வலம் வருவேன், அவற்றில் இருக்கும் புத்தகங்களை மேலோட்டமாகப் பார்த்துக் கொண்டே போவேன். ஆனால், நான் அமேசானின் இணையப் புத்தகக் கடைக்குச் செல்லும்போது, திடீரென்று ஒரு படிமுறைத் தீர்வு அங்கு முளைத்து, "முன்பு நீங்கள் எந்தப் புத்தகங்களை விரும்பினீர்கள் என்று எனக்குத் தெரியும். இதே போன்ற ரசனை கொண்ட மக்கள் 'இந்த'ப் புத்தகத்தையும் விரும்புகின்றனர்," என்று என்னிடம் கூறுகிறது.

இது வெறும் துவக்கம் மட்டுமே. அமெரிக்காவில் இன்று அதிக எண்ணிக்கையிலான மக்கள், அச்சிடப்பட்டப் புத்தகங்களைவிட டிஜிட்டல் புத்தகங்களை அதிகமாகப் படிக்கின்றனர். அமேசானின்

'கின்டில்' போன்ற கருவிகள், அவற்றைப் பயன்படுத்துவோர் படித்துக் கொண்டிருக்கும்போதே அவர்களைப் பற்றிய தகவல்களைத் திரட்டுகின்றன. எடுத்துக்காட்டாக, ஒரு புத்தகத்தின் எந்தப் பகுதிகளை நீங்கள் விரைவாக வாசிக்கிறீர்கள், எவற்றை மெதுவாக வாசிக்கிறீர்கள், எந்தப் பக்கத்தில் நீங்கள் ஓர் இடைவேளை எடுத்தீர்கள், எந்த வாக்கியத்துடன் அப்புத்தகத்தை ஒட்டுமொத்தமாகக் கைவிட்டீர்கள் போன்ற எல்லாத் தகவல்களையும் கின்டிலால் திரட்ட முடியும். முகங்களை அடையாளம் காணும் உணரிகளையும் உயிரியளவு உணரிகளையும் சேர்த்துக் கின்டில் மேம்படுத்தப்படால், நீங்கள் வாசித்த ஒவ்வொரு வாக்கியமும் உங்கள் இதயத்துடிப்பு விகிதத்தின்மீதும் ரத்த அழுத்தத்தின்மீதும் எவ்வளவு தாக்கம் ஏற்படுத்தியது என்பதையும் கின்டில் அறிந்து கொள்ளும். எது உங்களைச் சிரிக்க வைத்தது, எது உங்களுக்கு வருத்தத்தை ஏற்படுத்தியது, எது உங்களுக்குக் கோபமூட்டியது ஆகியவையும் அதற்குத் தெரியும். விரைவில், நீங்கள் புத்தகங்களை வாசித்துக் கொண்டிருக்கும்போது, புத்தகங்கள் உங்களை வாசிக்கும். நீங்கள் படிக்கின்றவற்றில் பெரும்பாலானவற்றை விரைவில் நீங்கள் மறந்துவிடுவீர்கள், ஆனால் அமேசான் எந்தவொரு விஷயத்தையும் ஒருபோதும் மறக்காது. இத்தகைய தகவல்கள், உங்களுக்கான புத்தகங்களை அமேசான் மிகத் துல்லியமாகத் தேர்ந்தெடுப்பதற்கு உதவும். அதோடு, துல்லியமாக நீங்கள் யார் என்பதையும், உங்களை எப்படி உற்சாகப்படுத்த வேண்டும் என்பதையும், எப்படி ஊக்கமிழக்கச் செய்ய வேண்டும் என்பதையும் அமேசான் அறிந்து கொள்ள அத்தகவல்கள் உதவும்.

இறுதியில், எல்லாமறிந்த இந்தப் பிணையத்திலிருந்து ஒரு கணம்கூட நம்மால் பிரிந்திருக்க முடியாத ஒரு நிலையை நாம் எட்டக்கூடும். இணைப்பைத் துண்டிப்பது என்பது மரணத்திற்குச் சமம். மருத்துவத் துறையின் நம்பிக்கைகள் அனைத்தும் மெய்யாகும்போது, எதிர்கால மனிதர்கள் தங்கள் உடல்களுக்குள் ஏகப்பட்ட உயிரியளவுக் கருவிகளையும் பயானிக் உறுப்புகளையும் நேனோரோபாட்டுகளையும் பொருத்திக் கொள்ளுவர். அவை நம்முடைய ஆரோக்கியத்தைக் கண்காணித்து, நோய்கள், நோய்த்தொற்றுகள், பாதிப்புகள் ஆகியவற்றிலிருந்து நம்மைப் பாதுகாக்கும். ஆனால் இக்கருவிகள் அனைத்தும் எல்லா நேரமும் இணையத்துடன் பிணைக்கப்பட்டிருக்க வேண்டும். அப்போதுதான், சமீபத்திய மருத்துவக் கண்டுபிடிப்புகளைக் கொண்டு இக்கருவிகளைப் புதுப்பித்துக் கொள்ள முடியும், இணையவெளியில் வலம் வருகின்ற புதிய நச்சுயிரிகளால் அவை

தாக்கப்படாமல் பார்த்துக் கொள்ள முடியும். என்னுடைய வீட்டுக் கணினி எப்படி நச்சுயிரிகள் மற்றும் பிற ஆபத்துக்களால் தொடர்ந்து தாக்கப்படுகிறதோ, அதேபோல, என்னுடைய இதயமுடுக்கியும், காதுகேட்புச் சாதனமும், நேனோதொழில்நுட்ப நோய்த்தடுப்பு அமைப்புமுறையும் தாக்கப்படும். நான் என்னுடைய உடலின் நச்சுயிரித் தடுப்பி நிரலை ஒழுங்காகப் புதுப்பித்து வைத்துக் கொள்ளாவிட்டால், என்றேனும் ஒரு நாள் நான் துயிலெழும்போது, என்னுடைய நாளங்களின் வழியாக அங்குமிங்கும் திரிந்து கொண்டிருக்கின்ற லட்சக்கணக்கான நேனோரோபாட்டுகள் அனைத்தும் இப்போது வடகொரியாவில் உள்ள இணையத்தள ஊடுருவி ஒருவனின் கட்டுப்பாட்டில் இயங்கிக் கொண்டிருப்பதை நான் கண்டறிவேன்.

இருபத்தோராம் நூற்றாண்டின் புதிய தொழில்நுட்பங்கள் மனிதவாதப் புரட்சியைத் தலைகீழாகப் புரட்டிப் போட்டு, மனிதர்களிடமிருந்து அவர்களுடைய அதிகாரத்தை முற்றிலுமாகப் பறித்து, மனிதரல்லாத படிமுறைத் தீர்வுகளிடம் அந்த அதிகாரத்தைக் கொடுத்துவிடக்கூடும். இப்போக்கு உங்களுக்குப் பீதி ஏற்படுத்துவதாக இருந்தால், இதற்குக் கணினி வல்லுநர்களைக் குறை கூறாதீர்கள். இதற்கு உண்மையான பொறுப்பாளிகள் உயிரியலாளர்கள்தான். இந்த ஒட்டுமொத்தப் போக்கிற்கும் தூபம் போட்டு அதிகமாக எரியூட்டுவது உயிரியல் உள்நோக்குகள்தானே அன்றி, கணினி அல்ல என்பதை நாம் உணர்ந்து கொள்ளுவது இன்றியமையாதது. உயிரினங்கள் படிமுறைத் தீர்வுகளே என்று முடிவு செய்தது உயிரியல்தான். இந்த முடிவு உண்மையல்லை என்றால், அதாவது, உயிரினங்கள் படிமுறைத் தீர்வுகளிடமிருந்து முற்றிலும் வித்தியாசமான முறையில் செயல்படுகின்றன என்றால், கணினிகளால் பிற துறைகளில் வேண்டுமானால் அதிசயங்களை நிகழ்த்த முடியக்கூடும், ஆனால் அவற்றால் நம்மைப் புரிந்து கொள்ளவோ அல்லது நம்முடைய வாழ்க்கையைக் கட்டுப்படுத்தி இயக்கவோ முடியாது, நம்மோடு நிச்சயமாக அவற்றால் ஒன்றுகலக்க முடியாது. ஆனால் உயிரினங்கள் வெறும் படிமுறைத் தீர்வுகள்தாம் என்று உயிரியலாளர்கள் முடிவு செய்தவுடன், இயற்கை உயிரினங்களுக்கும் செயற்கை உயிரினங்களுக்கும் இடையேயான சுவரை அவர்கள் தகர்த்துவிட்டனர், ஓர் இயந்திரரீதியான விவகாரமாக மட்டுமே இருந்த கணினிப் புரட்சியை அவர்கள் ஓர் உயிரியல்ரீதியான சீரழிவாக மாற்றிவிட்டனர், அதிகாரத்தைத் தனிநபர்களிடமிருந்து பறித்துப் படிமுறைத் தீர்வுகளிடம் கொடுத்துவிட்டனர்.

சிலர் இந்த மாற்றத்தால் பீதியடைந்துள்ளனர், ஆனால்

கோடிக்கணக்கான மக்கள் இதை மனமுவந்து விரும்பி ஏற்றுக் கொள்ளுகின்றனர் என்பதுதான் உண்மை. இன்று ஏற்கனவே பலர் தங்களுடைய வாழ்வின் பெரும்பகுதியை இணையத்திலேயே கழிக்கின்றனர், தங்களுடைய ஒவ்வொரு நடவடிக்கையையும் அதில் பதிவு செய்கின்றனர். இதன் மூலம், அவர்கள் தங்களுடைய அந்தரங்க உரிமையையும் தனித்துவத்தையும் விட்டுக்கொடுத்துவிடுகின்றனர். இணையத்துடனான தொடர்பு ஒருசில நிமிடங்கள் துண்டிக்கப்பட்டால்கூடப் பரிதவித்துப் போகும் அளவுக்கு அவர்கள் இணையத்துடன் ஒன்றிப் போயுள்ளனர். அதிகாரம் மனிதர்களிடமிருந்து விலகிப் படிமுறைத் தீர்வுகளின் கைகளில் போய்ச் சேருவது நம்மைச் சுற்றி எல்லா இடங்களிலும் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. ஆனால், இது தொடர்ச்சியான தனிப்பட்டத் தேர்ந்தெடுப்புகளின் விளைவுதானே அன்றி, ஏதோ அரசாரங்கத் தீர்மானத்தின் விளைவு அல்ல.

நாம் எச்சரிக்கையாக இல்லாவிட்டால், விளைவு, ஜார்ஜ் ஆர்வெல் தன்னுடைய ‘1984’ என்ற பிரபலமான நூலில் சித்தரித்துள்ளது போன்ற ஒரு போலீஸ் ராஜ்ஜியத்தில் போய் முடியும். இங்கு நம்முடைய நடவடிக்கைகள் மட்டுமல்லாமல், நம்முடைய உடல்களுக்குள்ளும் மூளைகளுக்குள்ளும் நிகழுகின்ற விஷயங்கள்கூடத் தொடர்ந்து கண்காணிக்கப்பட்டுக் கொண்டும் கட்டுப்படுத்தப்பட்டுக் கொண்டும் இருக்கும். நம் உடலுக்குள் எல்லா நேரத்திலும் உயிரியளவு உணரிகள் இருந்தால் ரஷ்ய சர்வாதிகாரி ஸ்டாலின் அவற்றை எதற்கெல்லாம் பயன்படுத்தியிருக்கக்கூடும் என்று நினைத்துப் பாருங்கள். விளாடிமிர் புடின் அவற்றுக்கு என்னென்ன பயன்களைக் கண்டுபிடிக்கக்கூடும் என்பதையும் நினைத்துப் பாருங்கள். மனிதர்களுடைய தனித்துவத்திற்கு ஆதரவானவர்கள் இருபதாம் நூற்றாண்டுக் கொடுமைகள் மீண்டும் நிகழ்ந்துவிடுமோ என்று பயந்து, தங்களுக்குப் பரிச்சயமான சர்வாதிகார எதிரிகளை எதிர்க்கத் தங்களைத் தயார்படுத்திக் கொண்டிருக்கும் இந்நேரத்தில், அதைவிடப் பெரிய அச்சுறுத்தல் ஒன்றை மனிதத் தனித்துவம் எதிர்த்திசையிலிருந்து இப்போது எதிர்கொண்டிருக்கிறது. இருபத்தோராம் நூற்றாண்டில் தனிநபர்கள் வெளியிலிருந்து கொடூரமாக அழிக்கப்படுவதற்கு பதிலாக, உள்ளுக்குள் தாங்களாகவே மென்மையாக உருக்குலைந்து அழிந்து போவதற்கான வாய்ப்பு அதிகம் உள்ளது.

இன்று பெரும்பாலான பெருநிறுவனங்களும் அரசாங்கங்களும் என்னுடைய தனித்துவத்தைப் போற்றுகின்றன, எனக்குத் தேவையான மருந்துகளையும் கல்வியையும் என்னுடைய தனித்துவமான

தேவைகளுக்கும் விருப்பங்களுக்கும் ஏற்றக் கேளிக்கையையும் எனக்குக் கொடுப்பதாக வாக்குறுதி வழங்குகின்றன. ஆனால் அவை அவ்வாறு செய்வதற்கு, முதலில் அவை என்னை உயிர்வேதித் துணைஅமைப்புமுறைகளாகக் கூறுபோட்டாக வேண்டும், இந்தத் துணைஅமைப்புமுறைகளை உணரிகளைக் கொண்டு கண்காணிக்க வேண்டும், சக்தி வாய்ந்த படிமுறைத் தீர்வுகளைக் கொண்டு அவற்றின் செயல்பாட்டைப் புரிந்து கொள்ள வேண்டும். இச்செயல்முறையின் ஊடாக, தனிநபர் என்பது ஒரு மதரீதியான கற்பனைக் கதையே அன்றி வேறு ஒன்றுமில்லை என்பது தெளிவாகும். யதார்த்தம் என்பது தெளிவான எல்லைகளும் தனிநபர்க் கூட்டங்களும் இல்லாத, உயிர்வேதிப் படிமுறைத் தீர்வுகளையும் மின்னணுப் படிமுறைத் தீர்வுகளையும் உள்ளடக்கிய ஒரு வலையாக இருக்கும்.

## சமத்துவமின்மையின் அதிகரிப்பு

தாராளவாதத்திற்கு எதிரான மூன்று நடைமுறை அச்சுறுத்தல்களில் இரண்டை நாம் இதுவரை பார்த்தோம். மனிதர்கள் தங்களுடைய ஒட்டுமொத்த மதிப்பையும் இழந்துவிடுவர் என்பது முதலாவது அச்சுறுத்தல். இரண்டாவது, மனிதர்கள் கூட்டாக மதிப்பு வாய்ந்தவர்களாக இருப்பார்கள், ஆனால் தங்களுடைய தனிநபர் அதிகாரத்தை இழந்துவிட்டு, அதற்கு பதிலாகப் புறவயமான படிமுறைத் தீர்வுகளால் அவர்கள் நிர்வகிக்கப்படுவர். சிம்பொனிகளை இயற்றுவதற்கும், வரலாற்றைக் கற்பிப்பதற்கும், கணினி நிரல்களை எழுதுவதற்கும் இந்தச் சமூக அமைப்புமுறைக்கு நீங்கள் இன்னும் தேவைப்படுவீர்கள், ஆனால் நீங்கள் உங்களைப் பற்றி அறிந்திருப்பதைவிட அது உங்களை அதிகச் சிறப்பாக அறிந்திருக்கும் என்பதால், முக்கியத் தீர்மானங்களில் பெரும்பாலானவற்றை உங்கள் சார்பில் அது மேற்கொள்ளும். அது குறித்து நீங்கள் முற்றிலும் மகிழ்ச்சியாக இருப்பீர்கள்! உலகம் அவ்வளவு மோசமான ஒன்றாக இருக்காது, ஆனால் தாராளவாதத்திற்குப் பிந்தைய உலகமாக அது இருக்கும்.

சிலர் இன்றியமையாதவர்களாகவும் புரிந்து கொள்ளப்பட முடியாதவர்களாகவும் இருப்பர், ஆனால் அவர்கள் மேம்படுத்தப்பட்ட மனிதர்களை உள்ளடக்கிய ஒரு சிறிய, செல்வாக்குமிக்க மேட்டுக்குடியினராக இருப்பர். இதுவே தாராளவாதத்திற்கான மூன்றாவது அச்சுறுத்தலாகும். இந்த அதிமனிதர்கள் நாம் இதுவரை கேள்விப்பட்டிராத திறன்களையும் படைப்பாற்றலையும்

கொண்டவர்களாக இருப்பர். உலகில் மிக முக்கியமான தீர்வுகளில் பெரும்பாலானவற்றைத் தொடர்ந்து மேற்கொள்ளுவதற்கு அத்திறன்களும் படைப்பாற்றலும் அவர்களுக்கு உதவும். அமைப்புமுறைக்கு அவர்கள் பல இன்றியமையாத சேவைகளைச் செய்வர், ஆனால் அந்த அமைப்புமுறையால் அவர்களைப் புரிந்து கொள்ளவோ அல்லது நிர்வகிக்கவோ முடியாது. ஆனால், பெரும்பாலான மனிதர்கள் மேம்படுத்தப்பட மாட்டார்கள். அதன் விளைவாக, கணினிப் படிமுறைத் தீர்வுகளும் புதிய அதிமனிதர்களும் ஆதிக்கம் செலுத்துகின்ற ஒரு தாழ்ந்த சாதியைச் சேர்ந்தவர்களாக அவர்கள் ஆகிவிடுவர்.

மனிதகுலத்தை உயிரியல்ரீதியான சாதிகளாகப் பிரிப்பது தாராளவாதக் கொள்கையின் அடித்தளத்தைச் சீரழித்துவிடும். தாராளவாதத்தால் சமுகப் பொருளாதார இடைவெளிகளோடு ஒத்து வாழ முடியும். தாராளவாதம் சமத்துவத்தைவிட சுதந்திரத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பதால், அந்த இடைவெளிகளைப் பற்றி அது அவ்வளவாக அக்கறை கொள்ளுவதில்லை. ஆனால், அனைத்து மனிதர்களும் சம அளவு மதிப்பும் அதிகாரமும் வாய்ந்தவர்கள் என்று தாராளவாதம் நம்புகிறது. ஒரு தாராளவாதக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, ஒருவர் ஒரு கோடீஸ்வரராக ஒரு மாளிகையில் வாழுவதிலும், இன்னொருவர் ஓர் ஏழை விவசாயியாக ஓர் ஓலைக்குடிசையில் வாழுவதிலும் எந்தத் தவறும் இல்லை. ஏனெனில், தாராளவாதத்தைப் பொருத்தவரை, அந்தக் கோடீஸ்வரரின் தனித்துவமான அனுபவங்கள் எவ்வளவு மதிப்பு வாய்ந்தவையோ, அந்த விவசாயியின் தனித்துவமான அனுபவங்களும் அதே அளவு மதிப்பு வாய்ந்தவையாகும். அதனால்தான் தாராளவாத நூலாசிரியர்கள் ஏழை விவசாயிகளின் அனுபவங்களைப் பற்றிய நீண்ட புதினங்களை எழுதுகின்றனர். கோடீஸ்வரர்கள்கூட இத்தகைய புத்தகங்களைப் படிப்பதற்கான காரணமும் இதுதான். பிராட்வே அரங்கிலோ அல்லது கோவென்ட் கார்டன் அரங்கிலோ ‘லெ மிஸரபில்ஸ்’ நாடகத்தை நீங்கள் பார்க்கச் சென்றிருந்தால், அங்கிருக்கும் நல்ல வசதியான இருக்கைகளில் அமர்ந்து அந்நாடகத்தைப் பார்ப்பதற்கு நூற்றுக்கணக்கான டாலர்கள் கொடுத்தாக வேண்டும் என்பதையும், அங்கிருக்கும் அத்தனைப் பார்வையாளர்களுடைய ஒட்டுமொத்தச் சொத்தும் பல கோடிக்கணக்கான டாலர்களுக்கு மேல் இருக்கும் என்பதையும், ஆனாலும் அந்தக் கோடீஸ்வரப் பெருமக்கள் அனைவரும், அந்த நாடகத்தில் வருகின்ற ஜீன் வேல்ஜீன் கதாபாத்திரம், பசியால் வாடிக் கொண்டிருக்கின்ற தன்னுடைய

உறவுக்காரக் குழந்தைகளுக்குக் கொடுப்பதற்காக ஒரு ரொட்டித் துண்டைத் திருடியதற்காகப் பத்தொன்பது ஆண்டுகளைச் சிறையில் கழித்தது குறித்து அவன்மீது இரக்கம் கொள்ளுவதையும் நீங்கள் கவனித்திருப்பீர்கள்.

இதே தருக்கவாதம்தான் தேர்தல் நாளன்று ஓர் ஏழை விவசாயியின் ஓட்டுக்கும் ஒரு கோடீஸ்வரரின் ஓட்டுக்கும் சம அளவு மதிப்பு இருப்பதற்கும் காரணமாக இருக்கிறது. சமுதாயத்தில் நிலவுகின்ற சமத்துவமின்மையைத் தீர்ப்பதற்கு தாராளவாதம் வழங்குகின்ற தீர்வு இதுதான்: 'எல்லோருக்கும் ஒரே அனுபவங்களை உருவாக்க முயற்சிப்பதற்கு பதிலாக, வெவ்வேறு மனித அனுபவங்களுக்கும் சம அளவு மதிப்புக் கொடுக்கப்பட வேண்டும்.' ஆனால், பணக்காரர்களும் ஏழைகளும் சொத்தின் அடிப்படையில் மட்டுமல்லாமல் உண்மையான உயிரியல்ரீதியான இடைவெளிகளாலும் பிரிக்கப்பட்டிருக்கும்போதும் அத்தீர்வு வேலை செய்யுமா?

'நியூயார்க் டைம்ஸ்' பத்திரிகையில் தான் எழுதிய கட்டுரையில், மரபணுப் பரிசோதனை அதிக விலை கொண்டதாக இருப்பதை

ஏஞ்சலினா ஜோலி சுட்டிகாட்டினார். அவர் உட்பட்டிருந்த பரிசோதனைக்கு 3,000 டாலர்கள் செலவாயிற்று (மார்பக நீக்க அறுவைச் சிகிச்சைக்கும், பிற சிகிச்சைகளுக்கும் ஆன செலவு தனி). 100 கோடி மக்களுடைய அன்றாட வருமானம் 1 டாலருக்கும் குறைவாக உள்ள ஓர் உலகில் இது நிகழுகிறது. இன்னொரு 150 கோடி மக்கள் தினமும் 1-2 டாலர்கள் சம்பாதிக்கின்றனர். அவர்கள் தங்கள் வாழ்நாள் முழுவதும் கடினமாக உழைத்தாலும், 3,000 டாலர்கள் விலை கொண்ட ஒரு மரபணுப் பரிசோதனை அவர்களுக்கு ஒருபோதும் கட்டுப்படியாகாது. மேலும், இன்று பொருளாதார இடைவெளிகள் மேன்மேலும் அதிகரித்துக் கொண்டுதான் இருக்கின்றன. 2016ம் ஆண்டின் துவக்கத்தில், உலகின் மாபெரும் பணக்காரர்கள் 62 பேருடைய ஒட்டுமொத்தச் சொத்து மதிப்பு, மிகவும் ஏழ்மைப்பட்ட 360 கோடி மக்களுடைய ஒட்டுமொத்தச் சொத்துக்குச் சமமாக இருந்தது. உலகின் மக்கட்தொகை சுமார் 720 கோடியில், மனிதகுலத்தின் ஒட்டுமொத்தக் கீழ்ப்பாதியின் ஒட்டுமொத்தச் சொத்து எவ்வளவோ, அந்த 62 கோடீஸ்வரர்களும் சேர்ந்து அதே அளவு சொத்தைத் தமக்கிடையே வைத்திருக்கின்றனர்.

காலப்போக்கில் டிஎன்ஏ பரிசோதனைக்கான கட்டணம் குறைய வாய்ப்புள்ளது. ஆனால், அதிகச் செலவு வைக்கக்கூடிய புதிய பரிசோதனைகளும் சிகிச்சைகளும் தொடர்ந்து கண்டுபிடிக்கப்பட்டுக் கொண்டே இருக்கின்றன. எனவே, பழைய சிகிச்சைகள் மெல்ல மெல்ல

சாதாரண மக்களுக்குக் கட்டுப்படியாகத் தொடங்கும்போது, மேட்டுக்குடியினர் எப்போதும் ஓரிரு அடிகள் முன்னால் சென்றிருப்பர். வரலாறு நெடுகிலும் பணக்காரர்கள் சமூகரீதியான மற்றும் அரசியல்ரீதியான அனுகூலங்களை அனுபவித்து வந்துள்ளனர், ஆனால் உயிரியல்ரீதியாக எந்தவிதமான பெரிய இடைவெளியும் அவர்களை ஏழைகளிடமிருந்து பிரிக்கவில்லை. இடைக்கால மேட்டுக்குடியினர், மேன்மையான நீல ரத்தம் தங்கள் நாளங்களில் ஓடிக் கொண்டிருந்ததாக முழங்கினர். இந்து பிராமணர்கள் தாங்கள் மற்றவர்களைவிட இயற்கையாகவே அதிக சாமர்த்தியமானவர்கள் என்று வலியுறுத்தினர். ஆனால் இவை எல்லாம் வெறும் கற்பனைக் கதைகளே. ஆனால் எதிர்காலத்தில், மேம்படுத்தப்பட்ட ஒரு மேற்தட்டு வர்க்கத்திற்கும் ஏனைய சமுதாயத்திற்கும் இடையே உடல்ரீதியான மற்றும்

அறிவுரீதியான திறன்களில் உண்மையான இடைவெளிகளை நாம் பார்க்கக்கூடும். அறிவியலறிஞர்கள் இச்சூழ்நிலையை எதிர்கொள்ளும்போது, அவர்களுடைய வழக்கமான பதில் இப்படி அமைகிறது: “இருபதாம் நூற்றாண்டில் கண்டுபிடிக்கப்பட்டப் பல முக்கியமான மருந்துகள் முதலில் பணக்காரர்களுக்கு மட்டுமே கட்டுப்படியானபோதிலும், இறுதியில் ஒட்டுமொத்த மக்களுக்கும் நன்மை பயத்ததோடு, சமுதாய இடைவெளிகளை விரிவுபடுத்துவதற்கு பதிலாக அவற்றைக் குறைக்கவும் உதவின. எடுத்துக்காட்டாக, நோய்த்தடுப்பு மருந்துகளும் நுண்ணுயிர்க்கொல்லிகளும் முதலில் மேற்கத்திய நாடுகளில் இருந்த மேற்தட்டு மக்களுக்கு மட்டுமே முக்கியமாக நன்மை பயத்தன. ஆனால் இன்று, அவை எல்லா இடங்களிலும் மனித வாழ்க்கையை மேம்படுத்துகின்றன.”

ஆனாலும், இதே செயல்முறை இருபத்தோராம் நூற்றாண்டிலும் நிகழும் என்று எதிர்பார்ப்பது வெறும் பகற்கனவாக அமையக்கூடும். இதற்கு இரண்டு முக்கியக் காரணங்கள் இருக்கின்றன. முதலாவதாக, மருத்துவத் துறையில் கோட்பாட்டுரீதியாக ஒரு மிகப் பெரிய புரட்சி நிகழ்ந்து கொண்டிருக்கிறது. நோயாளிகளை குணப்படுத்துவதுதான் இருபதாம் நூற்றாண்டு மருத்துவத்தின் நோக்கமாக இருந்தது. ஆனால், ஆரோக்கியமான நபர்களை மேலும் மேம்படுத்துவதுதான் இருபத்தோராம் நூற்றாண்டு மருத்துவத்தின் மாபெரும் நோக்கமாக இருக்கிறது. முன்பு நோயாளிகளை குணப்படுத்துவது ஒரு சமத்துவப் பணித்திட்டமாக இருந்தது. ஏனெனில், ஒரு குறிப்பிட்டத் தரத்துடன்கூடிய உடல் ஆரோக்கியத்தையும் மன ஆரோக்கியத்தையும் எல்லோராலும் பெற முடியும் என்றும், அவர்கள் கண்டிப்பாக அவற்றைப் பெற்றிருக்க வேண்டும் என்றும் அது அனுமானித்தது.

யாருடைய நலமேனும் இந்தக் குறிப்பிட்டத் தரத்திற்குக் கீழே போனால், அவர் மீண்டும் 'மற்ற எல்லோரையும்போல' ஆவதற்கு அவருடைய பிரச்சனையைத் தீர்த்து அவருக்கு உதவ வேண்டியது மருத்துவர்களின் கடமையாக இருந்தது. இதற்கு நேர்மாறாக, ஆரோக்கியமானவர்களை மேம்படுத்துவது மேட்டுக்குடியினருக்கான ஒரு பணித்திட்டமாகும். ஏனெனில், எல்லோருக்கும் கிடைக்க வேண்டிய ஓர் உலகளாவிய தரம் என்ற யோசனையை இத்திட்டம் நிராகரிக்கிறது, சில தனிநபர்களுக்கு மற்றவர்களைவிடக் கூடுதல் அனுகூலங்களைக் கொடுப்பதை அது ஆதரிக்கிறது. அற்புதமான நினைவாற்றல், சராசரிக்கும் கூடுதலான அறிவு, வீரியமிக்கப் புணர்ச்சித் திறன் ஆகியவற்றை எல்லோரும் விரும்புகின்றனர். ஏதோ ஒரு வகையான மேம்பாடு மலிவான கட்டணத்தில் பரவலாகக் கிடைக்கிறது என்றால், அது புதிய அடிக்கோடாகக் கருதப்படும். எனவே, அடுத்தத் தலைமுறைச் சிகிச்சைகள் இந்த அடிக்கோட்டைத் தாண்டிச் சிறப்புறக் கடுமையாக முயற்சிக்கும்.

இதன் விளைவாக, இன்று கிடைப்பதைவிட அதிகச் சிறப்பான மருத்துவ வசதிகளை 2070ல் ஏழைகளால் அனுபவிக்க முடியும். ஆனால் பணக்காரர்களிடமிருந்து அவர்களைப் பிரிக்கின்ற இடைவெளி மட்டும் மிக அதிகமாகவே இருக்கும். மக்கள் பொதுவாகத் தங்களைத் தங்களுடைய துரதிர்ஷ்டக்கார மூதாதையரோடு ஒப்பிடுவதற்கு பதிலாக, தங்களைவிட அதிக வசதியாக இருக்கின்ற யாருடனாவது தங்களை ஒப்பிடுகின்றனர். டெட்ராய்ட் நகரின் மிக ஏழ்மையான பகுதியில் வசிக்கும் ஒருவரிடம் சென்று, நூறு ஆண்டுகளுக்கு முன்பு அவருடைய கொள்ளுத் தாத்தாவுக்கும் கொள்ளுப்பாட்டிக்கும் கிடைத்த மருத்துவ வசதிகளைவிட அதிகமான வசதிகளை இன்று அவர் அனுபவித்துக் கொண்டிருப்பதாக நீங்கள் கூறினால், அது அவரை நிச்சயமாக மகிழ்ச்சிப்படுத்தாது. உண்மையில், இப்படிப்பட்டப் பேச்சு அவரை இழிவுபடுத்துவதாகவும் சிறுமைப்படுத்துவதாகவும் இருக்கும். "நான் ஏன் என்னைப் பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தொழிற்சாலைத் தொழிலாளர்களுடனோ அல்லது விவசாயிகளுடனோ ஒப்பிட வேண்டும்? தொலைக்காட்சியில் வரும் பணக்காரர்களைப்போல நான் வாழ விரும்புகிறேன். அது முடியாவிட்டால், செழிப்பான பகுதிகளில் வாழுகின்ற மக்களைப்போலவாவது நான் வாழ விரும்புகிறேன்," என்று அவர் வாதிடக்கூடும். அதேபோல, 2070ல் நீங்கள் கீழ்த்தட்டு மக்களிடம் சென்று, 2017ல் அவர்களுக்குக் கிடைத்த மருத்துவ வசதிகளைவிட இப்போது அதிகச் சிறப்பான மருத்துவ வசதிகளை அவர்கள் அனுபவித்துக் கொண்டிருப்பதாகக் கூறினால், அது

அவர்களுக்கு மகிழ்ச்சியளிக்கப் போவதில்லை. ஏனெனில், உலகின்மீது ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருக்கின்ற, மேம்படுத்தப்பட்ட அதிமனிதர்களுடன் அவர்கள் தங்களை ஒப்பிட்டுக் கொண்டிருப்பர்.

மேலும், இவ்வளவு மருத்துவக் கண்டுபிடிப்புகள் நிகழ்த்தப்பட்டிருந்தாலும், 2070ல் ஏழைகளுக்கு இன்றைவிட அதிகச் சிறப்பான மருத்துவ வசதிகள் கிடைக்கும் என்று நம்மால் உறுதியாகக் கூற முடியாது. ஏனெனில், அரசாங்கமும் மேட்டுக்குடியும் ஏழைகளுக்கு மருத்துவ வசதிகளை வழங்குவதில் ஆர்வம் இழக்கக்கூடும். இருபதாம் நூற்றாண்டில் மருத்துவத்தால் பொதுமக்களுக்கு நன்மை கிட்டியதற்குக் காரணம், அந்த நூற்றாண்டு பொதுமக்களுக்கான காலமாக இருந்ததுதான். இருபதாம் நூற்றாண்டின் ராணுவங்களுக்கு ஆரோக்கியமான வீரர்களும் பொருளாதாரங்களுக்கு ஆரோக்கியமான பணியாளர்களும் லட்சக்கணக்கில் தேவைப்பட்டனர். அதன் விளைவாக, எல்லோரும் ஆரோக்கியமாகவும் உறுதியான உடலோடும் இருப்பதை உறுதி செய்வதற்காகப் பொதுமக்கள் நலவாழ்வுச் சேவைகள் உருவாக்கப்பட்டன. பெருந்திரளான மக்களுக்கு சுகாதார வசதிகளும் நோய்த்தடுப்பு மருந்துகளும் வழங்கப்பட்டதும், மக்களைக் கூட்டங்கூட்டமாகக் கொன்று குவித்தக் கொள்ளைநோய்கள் முற்றிலுமாக ஒழிக்கப்பட்டதும் நம்முடைய மாபெரும் மருத்துவச் சாதனைகளாகும். 1914ல் ஜப்பானிய மேட்டுக்குடியினர் ஏழைகளுக்கு நோய்த்தடுப்பேற்றம் செய்ததிலும், குடிசைப் பகுதிகளில் மருத்துவமனைகளையும் கழிவுநீர் அமைப்புகளையும் நிறுவியதிலும் ஒரு தன்னல நோக்கம் இருந்தது. ஏனெனில், ஜப்பான் ஒரு சக்திவாய்ந்த ராணுவத்துடனும் ஒரு திடமான பொருளாதாரத்துடனும் ஒரு வலிமையான நாடாக இருக்க வேண்டும் என்றால், அதற்குக் கோடிக்கணக்கான ஆரோக்கியமான வீரர்களும் தொழிலாளர்களும் தேவை என்பதை அவர்கள் அறிந்திருந்தனர்.

ஆனால், பொதுமக்களுக்கான காலம் மலையேறிவிட்டது. அதோடு சேர்த்து, பெருந்திரளான மக்களுக்கான பொதுநல மருத்துவத்தின் காலமும் மலையேறிவிட்டது. மனித வீரர்கள் மற்றும் தொழிலாளர்களின் இடத்தைப் படிமுறைத் தீர்வுகள் எடுத்துக் கொள்ளுவதால், பயனற்ற ஏழை மக்களுக்கு மேம்பட்ட மருத்துவ வசதிகளை அல்லது சாதாரணமான மருத்துவ வசதிளைக்கூட வழங்குவதில் எந்த அர்த்தமும் இல்லை; மாறாக, வெகுசில அதிமனிதர்களை மேலும் மேம்படுத்துவது அதிக அர்த்தம் வாய்ந்ததாக இருக்கும் என்று மேட்டுக்குடி மக்களில் சிலராவது கூறக்கூடும்.

தொழில்நுட்பரீதியாக முன்னேறியுள்ள ஜப்பான், தென்கொரியா

போன்ற நாடுகளில் ஏற்கனவே பிறப்பு விகிதம் குறைந்து கொண்டிருக்கிறது. அந்த வெகுசில குழந்தைகளை வளர்ப்பதற்கும் அவர்களுக்கு மேம்பட்டக் கல்வியைக் கொடுப்பதற்கும் அளப்பரிய முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. அதற்குக் கைமாறாக, அக்குழந்தைகளிடமிருந்து மேன்மேலும் அதிகமாக எதிர்பார்க்கப்படுகிறது. இந்தியா, பிரேசில், நைஜீரியா போன்ற பெரிய, வளரும் நாடுகளால் ஜப்பானோடு போட்டிப் போடுவதைப் பற்றி எப்படி நினைத்துப் பார்க்க முடியும்? இந்த நாடுகள் ஒரு நீளமான ரயிலை ஒத்திருக்கின்றன. முதல் வகுப்புப் பெட்டிகளில் உள்ள மேட்டுக்குடியினர், உலகின் மிகவும் முன்னேறிய நாடுகளுக்கு இணையான மருத்துவ வசதிகளையும் கல்வியையும் வருவாயையும் அனுபவிக்கின்றனர். ஆனால், மூன்றாம் வகுப்புப் பெட்டிகளில் கூட்டமாகப் பயணிக்கின்ற கோடிக்கணக்கான சாதாரண மக்கள் இன்றும் பரவலான நோய்களாலும் அறியாமையாலும் ஏழ்மையாலும் துன்புறுகின்றனர். வரும் நூற்றாண்டில் இந்திய மேட்டுக்குடியினரும் பிரேசிலிய மேட்டுக்குடியினரும் நைஜீரிய மேட்டுக்குடியினரும் என்ன செய்ய விரும்புவர்? கோடிக்கணக்கான ஏழைகளின் பிரச்சனையைத் தீர்ப்பதில் அவர்கள் முதலீடு செய்ய விரும்புவார்களா அல்லது 1 லட்சம் பணக்காரர்களை மேம்படுத்துவதில் முதலீடு செய்ய விரும்புவார்களா? இருபதாம் நூற்றாண்டில் ஏழைகளின் பிரச்சனைகளைத் தீர்ப்பதில் மேட்டுக்குடியினருக்கு ஓர் ஆதாயம் இருந்தது. ஏனெனில், ஏழைகள் ராணுவரீதியாகவும் பொருளாதாரரீதியாகவும் இன்றியமையாதவர்களாக இருந்தனர். ஆனால் இருபத்தோராம் நூற்றாண்டில், பயனற்ற மூன்றாம் வகுப்புப் பெட்டிகளைக் கழற்றி விட்டுவிட்டு, முதல் வகுப்புப் பெட்டியுடன் பயணிப்பதுதான் மிகவும் ஆக்கபூர்வமான (மனிதாபிமானமற்றதாக இருந்தாலும்கூட!) உத்தியாக இருக்கக்கூடும். ஜப்பானுடன் போட்டிப் போடுவதற்கு, லட்சக்கணக்கான ஆரோக்கியமான சாதாரண வீரர்களைவிட, மேம்படுத்தப்பட்ட அதிமனிதர்கள் வெகுசிலரே பிரேசிலுக்குத் தேவைப்படக்கூடும்.

அசாதாரணமான உடற்திறனையும் உணர்ச்சித் திறனையும் அறிவுத் திறனையும் கொண்ட அதிமனிதர்களுக்கு இடையே தாராளவாத நம்பிக்கைகள் எப்படிப் பிழைத்திருக்கும்? அப்படிப்பட்ட அதிமனிதர்கள் அடிப்படையில் சாதாரண சேப்பியன்ஸிடமிருந்து வித்தியாசமான அனுபவங்களைக் கொண்டிருக்கின்றனர் என்றால் என்ன நிகழும்? அதிமனிதர்களின் காதல் விவகாரங்களைப் பற்றிய தொலைக்காட்சித் தொடர்கள் புரியாத புதிராக இருப்பதாக சாதாரண மக்கள்

நினைக்கும்போது, தாழ்ந்த இனமான சேப்பியன்ஸ் இனத்தைச் சேர்ந்த திருடர்களுடைய அனுபவங்களைப் பற்றிய புதினங்கள் அதிமனிதர்களுக்கு அலுப்பூட்டினால் என்ன நிகழும்?

பஞ்சம், தொற்றுநோய், போர் ஆகியவற்றிலிருந்து மீளுவது இருபதாம் நூற்றாண்டின் மாபெரும் மனிதப் பணித்திட்டமாக இருந்தது. எந்த விதிவிலக்குமின்றி எல்லோருக்கும் ஒரு குறிப்பிட்ட அளவு அபரிமிதமும் ஆரோக்கியமும் அமைதியும் கிடைப்பதை உறுதி செய்வது அதன் நோக்கமாக இருந்தது. இறவாநிலை, பேரானந்தம், தெய்விகம் ஆகியவற்றை அடைவது இருபத்தோராம் நூற்றாண்டின் புதிய பணித்திட்டமாகும். இம்மூன்றும் ஒட்டுமொத்த மனிதகுலத்திற்கும் கிடைக்க வேண்டும் என்பதே அதன் நோக்கமாக இருக்கிறது. ஆனால் இப்பணித்திட்டம், அந்த நோக்கத்தைப் பாதுகாப்பதற்கு பதிலாக அதைத் தவிர்ப்பதிலேயே குறியாக இருக்கிறது. ஒரு புதிய அதிமனிதச் சாதி உருவாவதற்கு அது வழி வகுக்கக்கூடும். அந்தச் சாதி தன்னுடைய தாராளவாத வேர்களை அறுத்தெறிந்துவிட்டு, பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஐரோப்பியர்கள் ஆப்பிரிக்கர்களை எவ்வாறு நடத்தினார்களோ அதே விதத்தில் சாதாரண மனிதர்களை நடத்தும்.

அறிவியல் கண்டுபிடிப்புகளும் தொழில்நுட்ப வளர்ச்சியும் மனிதகுலத்தைப் பயனற்ற மனிதர்களை உள்ளடக்கிய ஒரு பெருங்கூட்டமாகவும், மேம்படுத்தப்பட்ட அதிமனிதர்களை உள்ளடக்கிய ஒரு சிறு மேட்டுக்குடியாகவும் பிரித்தாலோ, அல்லது அதிகாரம் ஒட்டுமொத்தமாக மனிதகுலத்திடமிருந்து பிடுங்கப்பட்டு அதிக அறிவார்ந்த படிமுறைத் தீர்வுகளின் கைகளில் ஒப்படைக்கப்பட்டாலோ, பிறகு தாராளவாதம் முற்றிலுமாக நிலைகுலைந்து அழிந்துவிடும். எந்தப் புதிய மதம் அல்லது சித்தாந்தம் அந்த வெற்றிடத்தை நிரப்பி, கடவுளைப் போன்ற அடுத்தத் தலைமுறையினரின் பரிணாம வளர்ச்சியை வழிநடத்தும்?

# அத்தியாயம் 10

# பிரக்ஞைப் பெருங்கடல்

புதிய மதங்கள் ஆப்கானிஸ்தானின் குகைகளிலிருந்தோ அல்லது மத்தியக் கிழக்கு நாடுகளின் மதரஸாக்களில் இருந்தோ முளைக்கப் போவதில்லை. மாறாக, ஆராய்ச்சிக்கூடங்களில் இருந்துதான் அவை முளைவிடும். நீராவி மற்றும் மின்சக்தியின் வாயிலாக விமோசனத்தைக் கொடுப்பதாக வாக்குறுதி வழங்கியதன் மூலம் சோசியலிசம் எப்படி இவ்வுலகை ஆட்கொண்டதோ, அதேபோல, இனிவரும் ஆண்டுகளில், படிமுறைத் தீர்வுகள் மற்றும் மரபணுக்களின் வாயிலாக விமோசனத்தைப் பெற்றுக் கொடுப்பதாக வாக்குக் கொடுப்பதன் மூலம் புதிய தொழில்நுட்ப மதங்கள் இவ்வுலகை வெற்றி கொள்ளக்கூடும்.

அடிப்படைவாத இஸ்லாம், கிறித்தவ அடிப்படைவாதம் போன்றவற்றைப் பற்றிய பேச்சுக்கள் ஒரு புறம் இருந்தாலும், மதரீதியான ஒரு கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, உலகில் மிக சுவாரசியமான இடம் இஸ்லாமிய அரசோ அல்லது கிறித்தவம் ஆதிக்கம் செலுத்துகின்ற அமெரிக்கத் தென்மாநிலங்களோ அல்ல, மாறாக, கலிபோர்னியாவின் சிலிக்கான் பள்ளத்தாக்குதான். அங்குதான் உயர்தொழில்நுட்ப குருமார்கள் துணிச்சலான புதிய மதங்களை நமக்காக உருவாக்கிக் கொண்டிருக்கிறார்கள். அம்மதங்களுக்கும் கடவுளுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை, ஆனால் தொழில்நுட்பம்தான் அவற்றின் சுவாசக்காற்றாக இருக்கிறது. மகிழ்ச்சி, அமைதி, செழிப்பு, நிரந்தரமான வாழ்க்கை போன்ற பழைய பரிசுகளை நமக்கு வழங்கப் போவதாக இந்த மதங்களும் வாக்குக் கொடுக்கின்றன. ஆனால், நம்முடைய மரணத்திற்குப் பிறகு விண்ணுலக அம்சங்களின் உதவியுடன் அப்பரிசுகளை நமக்கு வழங்குவதற்கு பதிலாக, இங்கு இந்த பூமியிலேயே தொழில்நுட்பத்தின் உதவியுடன் தாம் அவற்றை நமக்கு வழங்கப் போவதாக அவை கட்டியம் கூறுகின்றன.

இப்புதிய தொழில்நுட்ப மதங்களை இரண்டு முக்கிய வகைகளாகப் பிரிக்கலாம்: தொழில்நுட்ப மனிதவாதம் மற்றும் தரவு மதம். மனிதர்கள் தங்களுடைய பிரபஞ்சப் பொறுப்புகளை நிறைவேற்றிவிட்டனர் என்றும், இப்போது அப்பொறுப்பை முற்றிலும் புதிய வகைகளைச் சேர்ந்த உருபொருட்களின் வசம் அவர்கள் ஒப்படைத்துவிட வேண்டும் என்றும் தரவு மதம் வாதிடுகிறது. தரவு மதத்தின் சாதக பாதகங்களைப் பற்றி அடுத்த அத்தியாயத்தில் நாம் பேசவிருக்கிறோம். இந்த

அத்தியாயம், பழமைவாதத்தைத் தூக்கிப் பிடிக்கின்ற தொழில்நுட்ப மனிதவாதத்தை விரிவாக அலசவிருக்கிறது. இன்றும் மனிதர்கள்தாம் படைப்பின் உச்சம் என்று அது கருதுகிறது, பாரம்பரிய மனிதவாத விழுமியங்கள் பலவற்றை அது போற்றுகிறது. ஹோமோ சேப்பியன்ஸின் வரலாறு முடிந்துவிட்டது என்றும், எதிர்காலத்திற்கு அவர்கள் எந்த விதத்திலும் பொருத்தமானவர்களாக இருக்க மாட்டார்கள் என்றும் ஒப்புக் கொள்ளுகின்ற தொழிநுட்ப மனிதவாதம், துல்லியமாக இக்காரணத்திற்காக நாம் நம்முடைய தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தி 'ஹோமோ டியஸ்' என்ற உயர்வான ஒரு மனித இனத்தை உருவாக்க வேண்டும் என்று பரிந்துரைக்கிறது. ஹோமோ டியஸ் சில இன்றியமையாத மனித அம்சங்களைத் தக்கவைத்துக் கொள்ளும், ஆனால் கூடவே, மேம்பட்ட உடற்திறன்களையும் மனத்திறன்களையும் பெற்றிருக்கும். அதிநவீனப் படிமுறைத் தீர்வுகளுக்கு எதிராகக்கூட அது தன்னுடைய சொந்த அம்சங்களைத் தக்கவைத்துக் கொள்ளுவதற்கு இத்திறன்கள் அதற்கு உதவும். அறிவுக்கும் பிரக்ஞைக்கும் இடையேயான பிணைப்பு முறிந்து கொண்டிருப்பதாலும், பிரக்ஞையற்ற அறிவு அதிவேகத்தில் வளர்ச்சியடைந்து கொண்டிருப்பதாலும், மனிதர்கள் இந்த ஆட்டத்தில் தொடர்ந்து நீடிக்க விரும்பினால் தங்களுடைய மனங்களைச் செயற்துடிப்புடன் மேம்படுத்திக் கொள்ள வேண்டியது இன்றியமையாததாக ஆகியுள்ளது.

70,000 ஆண்டுகளுக்கு முன்பு, அறிவுப் புரட்சி சேப்பியன்ஸின் மனத்தை அடியோடு மாற்றி, அதன் மூலம், முக்கியத்துவமற்ற ஓர் ஆப்பிரிக்க மனிதக்குரங்கை இந்த உலகின் ஆட்சி பீடத்தில் அமர்த்தி அழகு பார்த்தது. திடீரென்று, சேப்பியன்ஸின் மேம்பட்ட மனங்களால், பரஸ்பரம் பொதுவான அகவயமான தளத்துடன் தொடர்பு கொள்ள முடிந்தது. அவர்கள் கடவுளரையும் பெருநிறுவனங்களையும் படைப்பதற்கும், நகரங்களையும் பேரரசுகளையும் உருவாக்குவதற்கும், எழுத்தையும் பணத்தையும் கண்டுபிடிப்பதற்கும், இறுதியில் அணுக்களைப் பிளந்து நிலவைச் சென்றடைவதற்கும் அது உதவியது. நமக்குத் தெரிந்தவரை, இந்த முக்கியமான அறிவுப் புரட்சி, சேப்பியன்ஸின் 'டிஎன்ஏ'வில் ஏற்பட்ட ஒருசில சிறிய மாற்றங்களிலிருந்தும், சேப்பியன்ஸின் மூளையில் ஏற்பட்ட ஒரு லேசான திருத்தத்திலிருந்துமே முளைத்தது. அப்படியானால், நம்முடைய மரபணுத் தொகுதியில் கூடுதலாக ஒருசில மாற்றங்களும் நம்முடைய மூளையில் இன்னொரு திருத்தமும் நிகழ்ந்தால் ஓர் இரண்டாவது அறிவுப் புரட்சியைத் தோற்றுவிக்க அது போதுமானதாக இருக்கும் என்று தொழில்நுட்ப மனிதவாதம் கூறுகிறது. முதலாம்

அறிவுப் புரட்சியால் ஏற்பட்ட மனரீதியான புதுப்பிப்புகள் பரஸ்பரம் பொதுவான அகவயமான தளத்தை சேப்பியன்ஸுக்குத் திறந்துவிட்டன. அதன் மூலம், இவ்வுலகின் ஆட்சியாளர்களாக அவை அவர்களை மாற்றின. ஓர் இரண்டாவது அறிவுப் புரட்சி, நம்முடைய கற்பனைக்கு எட்டாத புதிய தளங்களை அவர்களுக்குத் திறந்துவிட்டு, இந்த விண்மீன் மண்டலத்தின் அதிபதிகளாக அவர்களை மாற்றக்கூடும்.

இந்த யோசனை, அதிமனிதர்கள் உருவாக்கப்பட வேண்டும் என்று நூறு ஆண்டுகளுக்கு முன்பு ஏற்கனவே அறைகூவல் விடுத்தப் பரிணாமரீதியான மனிதவாதத்தின் பழைய கனவுகளின் நவீன வடிவமாகும். முன்பு ஹிட்லரும் அவருடைய வகையைச் சேர்ந்தவர்களும் செயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறையின் மூலமும் இன ஒழிப்பின் மூலமும் அதிமனிதர்களை உருவாக்கத் திட்டமிட்டனர். ஆனால் இருபத்தோராம் நூற்றாண்டின் தொழில்நுட்ப மனிதவாதமோ, மரபணுப் பொறியியல், நேனோதொழில்நுட்பம், மூளைக்கும் கணினிக்கும் இடையேயான இணைப்புப் பாலங்கள் ஆகியவற்றின் மூலமாக அதே இலக்கை அமைதியான முறையில் அடைய முயற்சிக்கிறது.

## மனத்தை மேம்படுத்துதல்

மனித மனத்தை மேம்படுத்துவதற்கும், நமக்குப் பரிச்சயமில்லாத அனுபவங்களையும் பிரக்ஞை நிலைகளையும் நாம் அனுபவிப்பதை உறுதி செய்வதற்கும் தொழில்நுட்ப மனிதவாதம் முயற்சிக்கிறது. ஆனால், மனித மனத்தை முற்றிலுமாகப் புதுப்பிப்பது மிகவும் சிக்கலான மற்றும் ஆபத்தான ஒரு முயற்சி. மூன்றாவது அத்தியாயத்தில் நாம் ஏற்கனவே விரிவாகப் பார்த்ததுபோல, மனத்தை நாம் உண்மையிலேயே புரிந்து கொள்ளுவதில்லை. மனங்கள் எப்படி உருவாகின்றன, அவற்றின் செயல்பாடுகள் என்னென்ன ஆகியவற்றைப் பற்றி நமக்கு எதுவும் தெரியாது. நம்முடைய மனநிலைகளை எப்படி உருவாக்குவது என்பதை நாம் தட்டுத்தடுமாறிக் கற்றுக் கொண்டிருக்கிறோம், ஆனால் அப்படிப்பட்ட முயற்சிகளின் பின்விளைவுகள் முழுவதையும் நாம் அரிதாகவே புரிந்து கொள்ளுகிறோம். இதைவிட மோசமான விஷயம் என்னவென்றால், மனநிலைகளின் வீச்சு எல்லை என்ன என்பது பற்றி நமக்குப் பரிச்சயமில்லாததால், நமக்கு நாமே எத்தகைய மனரீதியான இலக்குகளை நிர்ணயிப்பது என்பது நமக்குத் தெரியவில்லை.

தனித்து இருக்கின்ற ஒரு சிறிய தீவில், முதல் படகை உருவாக்கி, எந்தவொரு வரைபடமும் இல்லாமலும் தாங்கள் போய்ச் சேர விரும்புகின்ற இடம் எது என்று தெரியாமலும் தங்களுடைய கடற்பயணத்தைத் துவக்குகின்ற அந்தத் தீவுவாசிகளைப் போன்றவர்கள்தான் நாம். உண்மையைக் கூற வேண்டுமென்றால், நாம் அவர்களைவிட மோசமான ஒரு நிலையில் இருக்கிறோம். நம்முடைய அந்தக் கற்பனையான தீவில் வசிப்பவர்களாவது ஒரு பெரிய, மர்மமான கடலுக்குள் ஒரு மிகச் சிறிய பகுதியைத் தாங்கள் ஆக்கிரமித்திருக்கிறோம் என்பதை அறிந்திருக்கின்றனர். ஆனால் நாமோ, பரிச்சயமற்ற மனநிலைகள் எனும் எல்லையற்றப் பெருங்கடலுக்குள் பிரக்ஞை எனும் ஒரு சின்னஞ்சிறிய தீவில் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம் என்பதை மெச்சத் தவறுகிறோம்.

ஒளி நிறமாலையும் ஒலி அலைமாலையும் மனிதர்களால் பார்க்க முடிவதையும் கேட்க முடிவதையும்விட மிகவும் பரந்துபட்டவையாக இருப்பதுபோல, மனநிலைகளின் வீச்சு எல்லையும் சரசாரி மனிதர்கள் உணரக்கூடியதைவிட மிகப் பெரியதாக இருக்கிறது. 400-700 நேனோமீட்டர் அலைநீளங்களில் உள்ள ஒளியை மட்டுமே நம்மால் பார்க்க முடியும். இந்த வீச்சைத் தாண்டி, மனிதர்களின் பார்வைக்குப் புலப்படாத தூரத்தில் அகச்சிவப்புக் கதிர்கள், நுண்ணலைகள், வானொலி அலைகள் ஆகியவற்றை உள்ளடக்கிய பரந்த தளம் ஒன்று உள்ளது. 400 நேனோமீட்டர் அலைநீளத்திற்குக் கீழே, புறவூதாக் கதிர், எக்ஸ்-கதிர், காமா கதிர் ஆகியவற்றை உள்ளடக்கிய ஓர் இருண்ட தளம் உள்ளது. அதேபோல, மனநிலைகளின் வீச்சு எல்லை முடிவற்றது, ஆனால் அறிவியல் அதன் இரண்டு முக்கியப் பகுதிகளை மட்டுமே ஆய்வு செய்துள்ளது.

மதியிறுக்கத்தில் தொடங்கி மனச்சிதைவு நோய்வரை பல்வேறு மனநலக் கோளாறுகளாலும் மனநோய்களாலும் துன்புற்றுக் கொண்டிருக்கின்ற மக்கள்மீது உளவியலாளர்களும் உயிரியலாளர்களும் ஒரு நூற்றாண்டுக்கும் மேலாக விரிவான ஆய்வுகளை நடத்தி வந்துள்ளனர். அதன் விளைவாக, இயல்புக்குக் கீழான மனரீதியான வீச்சு எல்லையைப் பற்றிய ஒரு விரிவான, ஆனால் கச்சிதமற்ற வரைபடம் நம்மிடம் உள்ளது: இந்த வீச்சு எல்லையில் வாழுகின்றவர்களுடைய உணரும் திறனும் சிந்திக்கும் திறனும் கருத்துப் பரிமாற்றத் திறனும் இயல்பான நிலையைவிட மிகக் குறைந்த நிலையில் இருக்கும். அதேபோல, ஆரோக்கியமானவர்களாகவும் இயல்பானவர்களாகவும் கருதப்படுகின்ற மக்கள்மீதும் அறிவியலறிஞர்கள் விரிவான

ஆய்வுகளை நடத்தியுள்ளனர். ஆனால், சாமானிய மனிதகுலத்தின் பிரதிநிதிகளாக இல்லாத மேற்கத்திய அறிவுஜீவிச் சமுதாயங்கள்மீதுதான் மிகப் பொருத்தமான ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டு வந்துள்ளன.

2010ல் நிகழ்த்தப்பட்ட ஒரு முக்கியமான ஆய்வு, உளவியலின் ஆறு வெவ்வேறு துணைப் பிரிவுகளின் முன்னணி அறிவியல் பத்திரிகைகளில் 2003ம் ஆண்டுக்கும் 2007ம் ஆண்டுக்கும் இடையே வெளிவந்த அனைத்து ஆய்வுக் கட்டுரைகளையும் முறையாக மதிப்பீடு செய்தது. மனித மனத்தைப் பற்றி அக்கட்டுரைகள் அடிக்கடி மிகப் பெரிய விஷயங்களைப் பிரகடனம் செய்தபோதிலும், அவற்றில் பெரும்பாலானவற்றின் கண்டுபிடிப்புகள் மேற்கத்திய அறிவுஜீவிச் சமுதாயங்களை அடிப்படையாகக் கொண்டே அமைந்திருந்ததை அந்த மதிப்பீட்டாளர்கள் கண்டனர். எடுத்துக்காட்டாக, சமூக உளவியல் என்ற துணைப் பிரிவின் மிக முக்கியமான பத்திரிகையான ‘ஜர்னல் ஆஃப் பர்சனாலிட்டி அன்ட் சோசியல் சைக்காலஜி’ என்ற பத்திரிகையில் வெளியிடப்பட்ட ஆய்வுக் கட்டுரைகளில், சம்பந்தப்பட்ட ஆய்வுகளில் பங்கு பெற்றோரில் 96 சதவீதத்தினர் மேற்கத்திய அறிவுஜீவிச் சமுதாயங்களைச் சேர்ந்தவர்கள், 68 சதவீதத்தினர் அமெரிக்கர்கள். மேலும், அந்த ஆய்வுகளில் கலந்து கொண்ட அமெரிக்கர்களில் 67 சதவீதத்தினரும் அமெரிக்கர் அல்லாதோரில் 80 சதவீதத்தினரும் உளவியல் மாணவர்கள்! இதை வேறு வார்த்தைகளில் கூறினால், அந்த ஆய்வுகளில் பங்கு கொண்டோரில் மூன்றில் இரண்டு பகுதிக்கும் அதிகமானோர் மேற்கத்தியப் பல்கலைக்கழகங்களில் உளவியல் பயின்று கொண்டிருந்த மாணவர்களே.

உளவியல் மாணவர்கள் பல ஆய்வுகளில் பங்கு கொள்ளுவதற்குக் காரணம் அவர்களுடைய பேராசிரியர்கள் அவர்களை அவற்றில் ஈடுபடுத்துவதுதான். ஹார்வர்டு பல்கலைக்கழகத்தில் நான் ஓர் உளவியல் பேராசிரியராக இருந்தால், குற்றங்கள் கொழிக்கின்ற பாஸ்டன் சேரிப் பகுதியில் உள்ளோரை வைத்தோ அல்லது நமீபியாவுக்குப் பயணம் செய்து கலஹாரி பாலைவனத்திலுள்ள வேட்டையாடிகளை வைத்தோ பரிசோதனைகளை மேற்கொள்ளுவதைவிட என்னுடைய சொந்த மாணவர்கள்மீது ஆய்வு நடத்துவது எனக்கு எளிதானதாக இருக்கும். ஆனால், ஹார்வர்டு உளவியல் மாணவர்களிடம் எக்கச்சக்கமான கேள்விகள் அடங்கிய ஒரு பட்டியலைக் கொடுத்து அவற்றுக்கு விடையளிக்கும்படி அவர்களைக் கட்டாயப்படுத்துவதன் மூலமாகவோ அல்லது அவர்களுடைய தலைகளை எம்ஆர்ஐ கருவிக்குள் நுழைப்பதன் மூலமாகவோ நம்மால்

ஒருபோதும் கண்டுபிடிக்க முடியாத மனநிலைகளை பாஸ்டன் சேரிவாசிகளும் கலஹாரி வேட்டையாடிகளும் அனுபவிக்கக்கூடும்.




படம் **46:** மின்காந்த வீச்சு எல்லையின் ஒரு கடுகளவுப் பகுதியை மட்டுமே மனிதர்களால் பார்க்க முடியும். அந்த வீச்சு எல்லை நம் கண்களுக்குப் புலப்படக்கூடிய ஒளியின் வீச்சு எல்லையைவிடப் பத்து லட்சம் கோடி மடங்கு அதிகம். மனத்தின் வீச்சு எல்லையும் சம அளவு பரந்து விரிந்திருக்கக்கூடுமோ?

நாம் இந்த உலகம் முழுவதும் பயணித்து ஒவ்வொரு சமூகத்தையும் ஆய்வு செய்தாலும், சேப்பியன்ஸுடைய மனத்தின் வீச்சு எல்லையின் ஒரு சிறு பகுதியை மட்டுமே நம்மால் அறிந்து கொள்ள முடியும். இன்று நவீனத்துவம் எல்லா மனிதர்களையும் சென்றடைந்துள்ளது. ஒரு சர்வதேச கிராமமாகச் சுருங்கிப் போயுள்ள ஓர் உலகின் குடிமக்களாக அவர்கள் ஆகியுள்ளனர். கலஹாரி வேட்டையாடிகள் ஹார்வடு உளவியல் மாணவர்கள் அளவுக்கு நவீனமானவர்கள் அல்லர் என்றாலும், அவர்கள் மிகப் பழமையானவர்களும் அல்லர். கிறித்தவ சமயப் பரப்பாளர்கள், ஐரோப்பிய வணிகர்கள், பெரும் பணம் படைத்த சூழல்-சுற்றுலாப் பயணியர், ஆர்வத்துடிப்புக் கொண்ட ஆராய்ச்சியாளர்கள் போன்றோரின் தாக்கங்களுக்கு அவர்களும் ஆளாகியுள்ளனர். (அவர்களைப் பற்றிய ஒரு நகைச்சுவையான கேள்வி-பதில் இப்படி அமைகிறது: கலஹாரி பாலைவனத்தில் ஒரு வேட்டையாடிக் குழுவில் எத்தனைப் பேர் இருக்கின்றனர்? பதில்: வேட்டையாடிகள் இருபது பேர், கனிகளையும் கொட்டைகளையும் சேகரிப்பவர்கள் இருபது பேர், மனிதவியலாளர்கள் ஐம்பது பேர்.)

உலகம் ஒரு சர்வதேச கிராமமாகச் சுருங்குவதற்கு முன்பு இந்த பூமி தனித்தனியான மனிதக் கலாச்சாரங்களை உள்ளடக்கிய ஒரு தொகுதியாக இருந்தது. அக்கலாச்சாரங்கள் வளர்த்தெடுத்த மனநிலைகள் இப்போது இல்லை. பல்வேறு சமூகப் பொருளாதார

யதார்த்தங்களும் அன்றாட வழக்கங்களும் பிரக்ஞையின் பல்வேறு நிலைகளை வளர்த்தெடுத்தன. கற்காலத்தில் மாமூத்துக்களை வேட்டையாடியவர்கள், புதிய கற்காலத்தில் வாழ்ந்த விவசாயிகள், கமாகுரா காலத்து சாமுராய் வீரர்கள் ஆகியோருடைய மனங்களை யாராலாவது ஊகிக்க முடியுமா? மேலும், நவீனகாலத்திற்கு முந்தைய காலங்களின் கலாசாரங்கள் உயர்வான பிரக்ஞை நிலைகள் இருந்ததாக நம்பின. தியானம், போதைப் பொருட்கள், அல்லது சடங்குகள் வாயிலாக அவற்றை அடைய முடியும் என்று மக்கள் நினைத்தனர். ஷாமன்களும் துறவிகளும் மனத்தின் மர்மமான பகுதிகளில் தொடர்ந்து ஆய்வுப் பயணம் மேற்கொண்டு, வியக்க வைக்கும் ஏராளமான கதைகளுடன் திரும்பி வந்தனர். சலனமற்ற அமைதி, மிகத் தீவிரமான கவனம், இணையற்றப் பிரக்ஞையுணர்வு ஆகிய பரிச்சயமற்ற மனநிலைகளைப் பற்றி அவர்கள் எடுத்துரைத்தனர். மனம் எல்லையின்றி விரிவடைந்ததாகவும், அதே சமயத்தில் வெறுமைக்குள் கரைந்து போனதாகவும் அவர்கள் கூறினர்.

நவீன மேற்கத்தியக் கலாச்சாரம் உயர்வான மனநிலைகள்மீது நம்பிக்கையும் ஆர்வமும் இழப்பதற்கும், ஒரு சராசரி நபரின் அலுப்பூட்டும் அனுபவங்களைப் புனிதப்படுத்துவதற்கும் மனிதவாதப் புரட்சி காரணமாயிற்று. எனவே, நவீன மேற்கத்தியக் கலாச்சாரம் ஒரு விஷயத்தில் தனித்துவமானதாக இருக்கிறது. அசாதாரணமான மனநிலைகளை அனுபவிப்பதை நாடுகின்ற மக்களை உள்ளடக்கிய ஒரு தனிச்சிறப்பு வர்க்கம் அதில் இல்லை. அத்தகைய தேடலில் ஈடுபடுகின்ற எவரொருவரும் போதைப் பொருட்களுக்கு அடிமையாகியுள்ள ஒருவராகவோ, ஒரு மனநோயாளியாகவோ அல்லது ஒரு போலி மருத்துவராகவோதான் இருக்க வேண்டும் என்று அது உறுதியாக நம்புகிறது. எனவே, ஹார்வர்டு உளவியல் மாணவர்களின் மனத்தளத்தின் விரிவான வரைபடம் ஒன்று நம்மிடம் இருக்கிறது என்றாலும், செவ்விந்திய ஷாமன்கள், புத்தமதத் துறவிகள், ஸூபி யோகிகள் ஆகியோருடைய மனத்தளங்களைப் பற்றி நமக்கு அவ்வளவாக எதுவும் தெரியாது.

நாம் இங்கு பேசிக் கொண்டிருப்பது சேப்பியன்ஸின் மனத்தைப் பற்றி மட்டுமே. ஐம்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு நம்முடைய நியான்டர்தால் உறவினர்களும் நம்மோடு இப்புவியைப் பகிர்ந்து கொண்டனர். அவர்கள் விண்வெளி ஊர்திகளை ஏவவில்லை, பிரமிடுகளைக் கட்டியெழுப்பவில்லை, சாம்ராஜ்ஜியங்களை உருவாக்கவில்லை. அவர்கள் வேறுபட்ட மனத்திறன்களைக் கொண்டவர்களாகவும் நம்மிடம் இருக்கும் பல திறமைகள்

இல்லாதவர்களாகவும் இருந்தனர். ஆனாலும், சேப்பினஸாகிய நம்முடைய மூளைகளைவிட அவர்களுடைய மூளைகள் மிகப் பெரிதாக இருந்தன. அவர்கள் அந்த நரம்பணுக்கள் அனைத்தையும் கொண்டு என்ன செய்தனர்? நமக்கு அது பற்றி எதுவும் தெரியாது. ஆனால், எந்தவொரு சேப்பியன்ஸும் ஒருபோதும் அனுபவித்திராத பல மனநிலைகளை அவர்கள் அனுபவித்திருக்கக்கூடும்.

ஆனால், இப்புவியில் இதுவரை வாழ்ந்த அனைத்து மனித இனங்களையும் நாம் கணக்கில் எடுத்துக் கொண்டாலும், நம்முடைய மனநிலைகளின் வீச்சு எல்லையை அவற்றால் நிரப்ப முடியாது. மனிதர்களாகிய நம்மால் கற்பனை செய்யக்கூட முடியாத அனுபவங்களைப் பிற விலங்குகள் பெற்றிருக்கக்கூடும். எடுத்துக்காட்டாக, வௌவால்கள் இவ்வுலகை எதிரொலிப்பு மூலம் உணருகின்றன. உயர்ந்த அலைவரிசையைக் கொண்ட கீச்சொலிகளை மிக வேகமாக அவை அனுப்புகின்றன. அந்த ஒலிகள் மனிதக் காதுகளின் எல்லைக்கு அப்பாற்பட்டவையாக இருக்கின்றன. அந்த ஒலிகள் ஒரு பொருள்மீது பட்டு எதிரொலிக்கும்போது, அந்த வௌவால்கள் அந்த எதிரொலியை ஆய்வு செய்து, உலகைப் பற்றிய ஒரு காட்சியைத் தம் மனத்தில் உருவாக்குகின்றன. அவை மரங்களுக்கும் கட்டடங்களுக்கும் இடையே மிக வேகமாகப் பறந்து செல்லக்கூடிய அளவுக்கும், அந்துப்பூச்சிகளையும் கொசுக்களையும் துரத்திச் சென்று பிடிக்கக்கூடிய அளவுக்கும், ஆந்தைகள் மற்றும் பிற கொன்றுண்ணிகளிடம் இருந்து தப்பிச் செல்லும் அளவுக்கும் அந்த மனக்காட்சி மிக விபரமாகவும் மிகத் துல்லியமாகவும் இருக்கிறது.

வௌவால்கள் எதிரொலிகள் நிறைந்த ஓர் உலகில் வாழுகின்றன. மனித உலகில் ஒவ்வொரு பொருளுக்கும் ஒரு குறிப்பிட்ட வடிவமும் நிறமும் இருப்பதைப்போலவே, வௌவால்களின் உலகிலும் ஒவ்வொரு பொருளும் ஒரு குறிப்பிட்ட விதத்தில் எதிரொலிப்பதால் அவை ஒவ்வொன்றுக்கும் ஒரு தனித்துவமான எதிரொலிப்பு வடிவம் இருக்கிறது. ஒரு சுவையான அந்துப்பூச்சி இனத்திற்கும் விஷத்தன்மை கொண்ட ஓர் அந்துப்பூச்சி இனத்திற்கும் இடையேயான வேறுபாட்டை ஒரு வௌவாலால் உணர்ந்து கொள்ள முடியும். ஏனெனில், அவ்விரு பூச்சியினங்களின் மெல்லிய சிறகுகளில் பட்டுத் திரும்பும் எதிரொலிகள் வித்தியாசமாக இருக்கின்றன. உண்ணத்தக்க அந்துப்பூச்சி இனங்கள், விஷத்தன்மை கொண்ட அந்துப்பூச்சி இனங்களுடைய பிரதிபலிப்பு வடிவத்தைத் தம்மிடம் உருவாக்கிக் கொள்ளுவதன் மூலம் தம்மைப் பாதுகாத்துக் கொள்ள முயற்சிக்கின்றன. பிற விலங்குகள் வௌவால்களின் ஒலியலைகளைச் சிதறடிப்பதற்கு வேறு பல

குறிப்பிடத்தக்கத் திறன்களைத் தம்மிடம் வளர்த்துக் கொண்டுள்ளன. வௌவால்களுக்குத் தெரியாதபடி வட்டமிட அத்திறன்கள் அவற்றுக்கு உதவுகின்றன. எதிரொலியின் மூலம் பொருட்களை உணருவதை உள்ளடக்கிய ஓர் உலகம், ஒலியையும் ஒளியையும் உள்ளடக்கிய நமக்குப் பரிச்சயமான உலகத்தைப்போலவே சிக்கலானதாகவும் கொந்தளிப்பானதாகவும் இருக்கிறது, ஆனால் அந்த எதிரொலி உலகைப் பற்றிய விழிப்புணர்வு நமக்கு இல்லை.

'ஒரு வௌவாலைப்போல இருப்பது எப்படிப்பட்ட அனுபவமாக இருக்கும்?' என்ற தலைப்பில் எழுதப்பட்ட ஒரு கட்டுரை, மனத்தின் தத்துவத்தைப் பற்றிய மிக முக்கியமான கட்டுரைகளில் ஒன்று. தத்துவவியலாளரான தாமஸ் நேகல் 1974ல் வெளியிட்ட அந்த ஆய்வுக் கட்டுரையில் இவ்வாறு குறிப்பிட்டிருந்தார்: "சேப்பியன்ஸ் இனத்தைச் சேர்ந்த ஒருவருடைய மனத்தால் ஒரு வௌவாலின் அகவயமான உலகைப் புரிந்து கொள்ள முடியாது. வௌவாலின் உடலைப் பற்றியும், எதிரொலியின் மூலம் பொருட்களை உணருவதை உள்ளடக்கிய அதன் அமைப்புமுறையைப் பற்றியும், வௌவாலின் நரம்பணுக்கள் பற்றியும் நாம் எத்தனைப் படிமுறைத் தீர்வுகளை வேண்டுமானாலும் எழுதலாம். ஆனால், ஒரு வௌவாலாக இருப்பது எப்படிப்பட்ட உணர்வைக் கொடுக்கும் என்பதை அவை எதுவும் நமக்கு எடுத்துரைக்காது. தன்னுடைய சிறகுகளைப் படபடவென அடித்துக் கொண்டிருக்கின்ற ஓர் அந்துப்பூச்சியை எதிரொலி மூலம் கண்டுபிடிப்பது எப்படிப்பட்ட உணர்வைக் கொடுக்கும்? அப்பூச்சியைக் கண்ணால் பார்க்கும்போது எழுகின்ற உணர்வும் அதுவும் ஒன்றாக இருக்குமா அல்லது அதிலிருந்து முற்றிலும் வேறுபட்டதாக இருக்குமா?"

ஒரு வண்ணத்துப்பூச்சியை எதிரொலி மூலம் கண்டுபிடிப்பது எப்படி இருக்கும் என்று சேப்பியன்ஸுக்கு விளக்க முற்படுவது, கரவாஜியோவின் ஓவியம் ஒன்றைப் பார்ப்பது எப்படி இருக்கும் என்று பார்வையற்ற ஓர் எலியிடம் விளக்குவதைப்போல அர்த்தமற்றது. எதிரொலியின் மூலம் பொருட்கள் இருக்கும் இடங்களை அறிந்து கொள்ளுகின்ற உணர்வின் முக்கியத்துவம் வௌவால்களின் உணர்ச்சிகள்மீதும் ஓர் ஆழமான தாக்கம் ஏற்படுத்துவது சாத்தியம்தான். சேப்பியன்ஸ் செந்நிறத்தைக் காதலோடும், பச்சை நிறத்தைப் பொறாமையோடும், நீலநிறத்தை மனச்சோர்வுடனும் அடையாளப்படுத்துகின்றனர். ஒரு பெண் வௌவால் தன் குட்டியின்மீது கொண்டுள்ள அன்புக்கோ அல்லது ஓர் ஆண் வௌவால் தன்னுடைய எதிரிகள் குறித்துக் கொண்டுள்ள உணர்வுகளுக்கோ எதிரொலிகள் எந்த வண்ணத்தைக் கொடுக்கின்றன என்று யாருக்குத்

தெரியும்?

வௌவால்கள் தனிச்சிறப்புக் கொண்டவை அல்ல. ஆனால், சாத்தியமுள்ள எண்ணற்ற எடுத்துக்காட்டுகளில் அவையும் ஒன்று. ஒரு வௌவாலாக இருப்பது எப்படி இருக்கும் என்பதை சேப்பியன்ஸால் எப்படிப் புரிந்து கொள்ள முடியாதோ, அதேபோல, ஒரு திமிங்கலமாகவோ, ஒரு புலியாகவோ, அல்லது ஒரு நாரையாகவோ இருப்பது எப்படிப்பட்ட உணர்வைக் கொடுக்கும் என்பதைப் புரிந்து கொள்ளுவதிலும் நமக்கு அதே போன்ற பிரச்சனைகள் இருக்கின்றன. அது ஏதோ ஒரு வகையான உணர்வைக் கொடுத்தாக வேண்டும், ஆனால் அது என்ன என்று நமக்குத் தெரியாது. திமிங்கலங்கள் மற்றும் மனிதர்களின் உணர்ச்சிகள், மூளையின் ஒரு பகுதியான 'லிம்பிக்' அமைப்புமுறையில்தான் கையாளப்படுகின்றன. ஆனால், மனித மூளையில் இல்லாத கூடுதல் பகுதி ஒன்று திமிங்கலத்தின் 'லிம்பிக்' அமைப்புமுறையில் உள்ளது. அப்பகுதி, நமக்குப் பரிச்சயமில்லாத ஆழமான மற்றும் சிக்கலான உணர்ச்சிகளைத் திமிங்கலங்கள் உணர வழி வகுக்கிறதோ என்னவோ! பிறவி இசை மேதைகளான பாக் மற்றும் மொசார்ட்டால்கூட உணர முடியாத அற்புதமான இசை அனுபவங்களைத் திமிங்கலங்கள் அனுபவிக்கக்கூடும். நூறு கிலோமீட்டர் தூர இடைவெளியில் இருக்கின்ற திமிங்கலங்களால் பரஸ்பரம் ஒன்றோடொன்று தகவல் பரிமாறிக் கொள்ள முடியும். ஒவ்வொரு திமிங்கலத்திடமும் அவற்றுக்குரிய தனித்துவமான சில 'பாடல்கள்' இருக்கின்றன. அப்பாடல்கள் நீண்ட நேரம் நீடிக்கக்கூடியவை. அவை மிக நுட்பமான வடிவவிதங்களைக் கொண்டுள்ளன. ஒரு திமிங்கலம் அவ்வப்போது ஒரு புதிய இசையை உருவாக்குகிறது. இதை அந்தப் பெருங்கடல் நெடுகிலும் உள்ள பிற திமிங்கலங்கள் சுவீகரித்துக் கொள்ளுகின்றன. அறிவியலறிஞர்கள் இப்பாடல்களைப் பதிவு செய்து, கணினிகளைக் கொண்டு அவற்றை ஆய்வு செய்கின்றனர். ஆனால் இந்த இசை அனுபவங்களை புரிந்து கொண்டு, ஒரு திமிங்கல பீத்தோவனுக்கும் ஒரு திமிங்கல ஜஸ்டின் பீபருக்கும் இடையேயான வேறுபாட்டை எந்த மனிதனாலாவது கூற முடியுமா?



படம் 47: ஒரு போஹெட் திமிங்கலப் பாடலின் வீச்சு எல்லைப் படம். ஒரு திமிங்கலம் இப்பாட்டை எப்படி அனுபவிக்கிறது? 'வாயேஜர்' இசைத்தட்டில் பீத்தோவன், பாக், சக் பெர்ரி ஆகியோருடைய பாடல்களோடு ஒரு திமிங்கலப் பாடலும் இடம்பெற்றது. அது நிச்சயமாக ஒரு நல்ல பாடலாகத்தான் இருக்க வேண்டும்.

இவை எதுவும் நமக்கு வியப்பூட்டக்கூடாது. சேப்பியன்ஸ் இவ்வுலகை ஆளுவதற்குக் காரணம் பிற விலங்குகளைவிட நாம் அதிக ஆழமான உணர்ச்சிகளையோ அல்லது அதிகச் சிக்கலான அனுபவங்களையோ கொண்டிருப்பது அல்ல. எனவே, குறைந்தபட்சம் சில உணர்ச்சிகள் மற்றும் அனுபவங்களைப் பொருத்தவரை, நாம் திமிங்கலங்களையும் வெளவால்களையும் புலிகளையும் நாரைகளையும்விடத் தாழ்ந்தவர்களாக இருக்கக்கூடும்.

மனிதர்கள், வெளவால்கள், திமிங்கலங்கள் மற்றும் பிற விலங்குகளின் மனநிலைகளின் வீச்சு எல்லைக்கு அப்பால், அதைவிடப் பரந்த வெளிகள் நமக்காகக் காத்திருக்கக்கூடும். 400 கோடி ஆண்டுகாலப் புவிசார் பரிணாம வளர்ச்சியில், எந்தவொரு சேப்பியன்ஸும், வெளவாலும், அல்லது டைனசாரும் அனுபவித்திராத முடிவற்ற மனநிலை வகைகள் இருக்கக்கூடும். அந்த மனநிலைகளை உணர்ந்து கொள்ளத் தேவையான திறன்கள் அவற்றுக்கு இல்லாததுதான் அம்மனநிலைகளை அவை அனுபவிக்க முடியாமல் போனதற்கான காரணமாகும். ஆனால் எதிர்காலத்தில், சக்திவாய்ந்த மருந்துகளும், மரபணுப் பொறியியலும், மின்னணுத் தலைக்கவசங்களும், மூளைக்கும் கணினிக்கும் இடையேயான நேரடியான இணைப்புப் பாலங்களும் இந்த மனநிலைகளை அடைவதற்கான வழியைத் திறந்துவிடக்கூடும். கொலம்பஸும் மெகல்லனும் தொடுவானங்களைத் தாண்டிக் கடலில் பயணித்துப் புதிய தீவுகளையும் பரிச்சயமற்றக் கண்டங்களையும் கண்டுபிடித்ததைப்போல, என்றேனும் ஒருநாள் மனத்தின் அடியாழத்தை நோக்கி நாம் பயணிக்கக்கூடும்.




படம் **48:** பிரக்ஞையின் வீச்சு எல்லை

# பயத்தின் வாசனை

இருபத்தோராம் நூற்றாண்டின் துவக்கத்தில், தாராளவாதத்தின் இடத்தைத் தொழில்நுட்ப மனிதவாதம் ஆக்கிரமிக்கத் தொடங்கியுள்ள நிலையில், மருத்துவம் நோயாளிகளை குணப்படுத்துவதற்கு பதிலாக ஆரோக்கியமானவர்களை மேம்படுத்துவதன்மீது அதிகமாக கவனம் செலுத்தி வருவதைத் தொடர்ந்து, முற்றிலும் வித்தியாசமான ஒரு சவாலை நாம் எதிர்கொண்டுள்ளோம். மருத்துவர்களும் பொறியாளர்களும் வாடிக்கையாளர்களும் வெறுமனே மனநலப் பிரச்சனைகளை மட்டும் தீர்க்க விரும்புவதில்லை, மாறாக, அவர்கள் தங்கள் மனங்களை அடுத்த நிலைக்கு மேம்படுத்த விரும்புகின்றனர். புதிய பிரக்ஞை நிலைகளை உருவாக்கத் தொடங்குவதற்கான தொழில்நுட்பத் திறன்களை நாம் கைவசப்படுத்திக் கொண்டிருக்கிறோம். ஆனாலும், இப்புதிய பிராந்தியங்களின் வரைபடம் எதுவும் நம்மிடம் இல்லை. நாம் எதை நோக்கிச் செல்ல வேண்டும் என்பதுகூட நமக்குத் தெரியவில்லை.

எனவே, உளவியலின் இன்னொரு துணைப் பிரிவான நேர்மறை உளவியல் பிரபலமடைந்துள்ளதில் வியப்பேதும் இல்லை. உளவியல் வெறுமனே மனநோய்களை மட்டுமல்லாமல் மனவலிமைகளையும் ஆய்வு செய்ய வேண்டும் என்று 1990களில் மார்ட்டின் செலிக்மேன், எட் டின்னர், மிஹாய் சீக்சென்ட்மீஹாயி போன்ற முன்னணி வல்லுனர்கள் வாதிட்டனர். நோயுற்ற மனத்தைப் பற்றிய விரிவான வரைபடம் நம்மிடம் இருக்கிறது, ஆனால் செழிப்பான மனத்தைப் பற்றிய அறிவியல் வரைபடம் எதுவும் நம்மில் இல்லாதது ஏன்? கடந்த இருபது ஆண்டுகளின் ஊடாக, நேர்மறை உளவியல், மீஇயல்புசார்

மனநிலைகளைப் பற்றிய ஆய்வில் முக்கியமான முதலடிகளை எடுத்து வைத்துள்ளது. ஆனால் தற்போதைய நிலவரப்படி, மீஇயல்புசார் பகுதி இன்னும் அறிவியலின் புரிதலுக்கு அப்பாற்பட்டதாகவே இருக்கிறது.

அப்படிப்பட்டச் சூழ்நிலைகளில், நாம் எந்த வரைபடமும் இல்லாமல் முன்னோக்கி விரைந்து, தற்போதைய பொருளாதார அமைப்புமுறைக்கும் அரசியல் அமைப்புமுறைக்கும் தேவையான மனத்திறன்களை மேம்படுத்துவதன்மீது கவனம் செலுத்தக்கூடும். அதே சமயத்தில், பிற மனத்திறன்களை நாம் உதாசீனப்படுத்தவோ அல்லது மோசமாக்கவோ கூடும். இது ஒன்றும் முற்றிலும் புதிய நிகழ்வு அல்ல. ஏனெனில், ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக சமூக அமைப்புமுறை தன்னுடைய தேவைகளுக்கு ஏற்ப நம்முடைய மனங்களை மீண்டும் மீண்டும் மாற்றியமைத்து வந்துள்ளது. சேப்பியன்ஸ் துவக்கத்தில் சிறிய மற்றும் நெருக்கமான சமூகங்களின் உறுப்பினர்களாகவே வளர்ச்சியடைந்தனர். அவர்களுடைய மனத்திறன்கள் ஒரு பெரிய இயந்திரத்தின் சக்கரப்பற்களாக வாழப் பொருத்தமானவையாக இருக்கவில்லை. ஆனால், நகரங்களும் ராஜ்ஜியங்களும் சாம்ராஜ்ஜியங்களும் உருவானதைத் தொடர்ந்து, பெரிய அளவிலான ஒத்துழைப்பிற்குத் தேவையான மனத்திறன்களை அந்த அமைப்புமுறை நம்மிடம் வளர்த்தெடுத்தது. அதே நேரத்தில், பிற திறமைகளை அது புறக்கணித்தது.

எடுத்துக்காட்டாக, பண்டைய மனிதர்கள் தங்களுடைய முகர்வுணர்வை மிக அதிகமாகப் பயன்படுத்தினர். ஒரு குறிப்பிட்ட தூரத்திலிருந்தே பல்வேறு விலங்கினங்களையும் பல்வேறு மனித இனங்களையும் பல்வேறு உணர்ச்சிகளையும்கூட மோப்பம் பிடித்துவிடக்கூடிய திறன் வேட்டையாடிகளுக்கு இருந்தது. எடுத்துக்காட்டாக, துணிச்சலின் வாசனையிலிருந்து பயத்தின் வாசனை வேறுபட்டிருக்கிறது. ஒருவன் பயம் கொள்ளும்போது அவனுடைய உடலில் சுரக்கின்ற வேதிப் பொருட்கள் அவன் துணிச்சலோடு இருக்கும்போது சுரப்பவற்றிலிருந்து வேறுபட்டுள்ளன. இன்னொரு குழுவிற்கு எதிராக ஒரு போரைத் துவக்கலாமா என்பது பற்றி விவாதித்துக் கொண்டிருக்கின்ற ஒரு பண்டைய வேட்டையாடிக் குழுவுடன் நீங்கள் அமர்ந்திருந்தால், அக்கூட்டத்தில் உள்ளோரின் அபிப்பிராயங்களை உங்களால் உண்மையிலேயே மோப்பம் பிடித்துவிட முடியும்.

சேப்பியன்ஸ் இனத்தினர் தங்களைப் பெரிய குழுக்களாக ஒழுங்கமைத்துக் கொண்டபோது, மூக்கு அதன் சமூக முக்கியத்துவத்தில் பெருமளவை இழந்துவிட்டது. ஏனெனில், சிறிய எண்ணிக்கையிலான

தனிநபர்களைக் கையாளும்போது மட்டுமே அது பயனுள்ளதாக இருக்கிறது. எடுத்துக்காட்டாக, சீனா குறித்து அமெரிக்கா கொண்டுள்ள பயத்தை உங்களால் முகர முடியாது. அதன் விளைவாக, மனித முகர்வு சக்திகள் உதாசீனப்படுத்தப்பட்டன. பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக வாசனைகளைக் கையாண்ட மூளைப் பகுதிகள், கணிதம் போன்ற அதிக அவசரமான வேலைகளில் ஈடுபடுத்தப்பட்டன. நம்முடைய நரம்பணுக்கள் நம்முடைய அண்டைவீட்டாரை முகர்ந்து பார்ப்பதை விட்டுவிட்டுக் கணிதச் சமன்பாடுகளைக் கையாளுவது சிறந்தது என்று நம்முடைய அமைப்புமுறை கருதுகிறது.

நம்முடைய பிற புலன்களுக்கும் நம்முடைய உணர்வுகள்மீது கவனம் செலுத்துவதற்கான நம்முடைய அடிப்படைத் திறனுக்கும் இதே நிலைமைதான் ஏற்பட்டது. பண்டைய வேட்டையாடிகள் எப்போதும் கவனமாகவும் எச்சரிக்கையாகவும் இருந்தனர். அவர்கள் காளான்களைத் தேடிக் காட்டில் அலைந்து திரிந்தபோது, காற்றை எச்சரிக்கையோடு முகர்ந்தனர், நிலத்தைக் கூர்ந்து கண்காணித்தனர். அவர்கள் ஒரு காளானைக் கண்டுபிடித்தபோது, அதை மிகவும் கவனமாக உட்கொண்டனர், அதன் சுவையை அணுவணுவாக உணர்ந்தனர். உண்ணத்தக்கக் காளான்களை விஷத்தன்மை கொண்ட காளான்களிடமிருந்து பிரித்தறிவதற்கு இது அவர்களுக்குப் பெரிதும் உதவியது. இன்றைய செழிப்பான சமுதாயங்களின் உறுப்பினர்களுக்கு இப்படிப்பட்டக் கூர்மையான விழிப்புணர்வு தேவையில்லை. நாம் ஒரு பேரங்காடிக்குச் சென்று, அங்கிருக்கும் ஆயிரக்கணக்கான உணவுப் பொருட்களில் எதையேனும் வாங்கி வரலாம். ஏனெனில், சுகாதாரத் துறை அதிகாரிகள் அவற்றின் தயாரிப்பைக் கண்காணிக்கின்றனர். இத்தாலியப் பீட்சா, தாய்லாந்து நூடுல்ஸ் என்று நாம் எதைத் தேர்ந்தெடுத்தாலும் சரி, அதன் சுவையை ருசித்து அனுபவிக்காமல் தொலைக்காட்சியின் முன்னால் உட்கார்ந்து அதை வேகவேகமாக நாம் உட்கொள்ளுவதுதான் வழக்கமாக இருக்கிறது.

அதேபோல, சிறந்த போக்குவரத்து வசதிகளால், ஊரின் மறுகோடியில் இருக்கின்ற ஒரு நண்பரை நம்மால் சுலபமாக சந்திக்க முடிகிறது. ஆனால் நாம் நம் நண்பரை சந்திக்கும்போது, அவர்மீது நாம் முழுமையாக கவனம் செலுத்துவதில்லை. ஏனெனில், இந்த உரையாடலைவிட அதிக சுவாரசியமான ஏதோ ஒரு விஷயம் வேறு எங்கோ நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்ற உறுதியான நம்பிக்கையில், ஒருசில நொடிகளுக்கு ஒருமுறை நாம் நம்முடைய ஸ்மார்ட்போன்களை எடுத்துப் பார்த்துக் கொண்டும், நம்முடைய முகநூல் பதிவுகளைப் படித்துக் கொண்டும் அரைகுறை ஈடுபாட்டுடன் நம் நண்பருடன்

உரையாடுகிறோம். உலக நடப்புகளில் ‘நாம் எதையேனும் தவறவிட்டுவிடுவோமோ’ என்ற பயம் நவீன மனிதகுலத்திற்கு ஏற்பட்டுள்ள ஒரு நோய் என்றுதான் கூற வேண்டும். முன்பு ஒருபோதும் இருந்திராத அளவுக்கு இன்று நாம் தேர்ந்தெடுப்பதற்கு ஏராளமான விஷயங்கள் இருக்கின்றன. ஆனால், நாம் எதைத் தேர்ந்தெடுத்தாலும் அதன்மீது உண்மையிலேயே ஒருமித்த கவனம் செலுத்துவதற்கான திறனை நாம் இழந்துவிட்டோம்.

நாம் நம்முடைய முகர்வுணர்வையும் கவனக்குவிப்புத் திறனையும் இழந்ததோடு கூடவே, கனவு காணுவதற்கான திறனையும் இழந்து விட்டோம். மக்கள் விழித்திருக்கும்போது பார்க்கின்ற விஷயங்களும் செய்கின்ற விஷயங்களும் எவ்வளவு முக்கியமோ, அவர்கள் தங்களுடைய கனவுகளில் பார்க்கின்ற விஷயங்களும் செய்கின்ற விஷயங்களும் அதே அளவு முக்கியம் என்று பல கலாச்சாரங்கள் நம்பின. எனவே, கனவு காணுவதற்கும், அக்கனவுகளை நினைவில் வைத்திருப்பதற்கும், கனவுலகில் தங்களுடைய நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துவதற்குமான தங்கள் திறனை அவர்கள் மும்முரமாக வளர்த்தெடுத்தனர். இச்செயல்முறை ‘தெளிவாகக் கனவு காணுதல்’ என்று அழைக்கப்படுகிறது. தெளிவாகக் கனவு காணுவதில் கைதேர்ந்தவர்களால் அக்கனவுலகில் தங்கள் விருப்பம்போல வளைய வர முடிந்தது. அந்த நிலையையும் தாண்டி வேறோர் உயரமான இருத்தல் தளத்திற்குத் தங்களால் செல்ல முடிந்தது என்றும், பிற உலகங்களைச் சேர்ந்தவர்களைத் தங்களால் சந்திக்க முடிந்தது என்றும்கூட அவர்கள் வலியுறுத்தினர். இதற்கு நேர்மாறாக, கனவுகள் என்பவை வெறும் ஆழ்மனச் செய்திகளோ அல்லது உளக் குப்பைகளோதான் என்று நவீன உலகம் கூறுகிறது. அதன் விளைவாக, கனவுகள் நம்முடைய வாழ்க்கையில் மிகச் சிறியதொரு பங்கு மட்டுமே வகிக்கின்றன, வெகுசிலரே கனவு காணுவதற்கான தங்கள் திறனை வளர்த்துக் கொள்ளுகின்றனர். பலர், தாங்கள் கனவே காணுவதில்லை என்றோ அல்லது தங்களுடைய கனவுகள் எதையும் தங்களால் நினைவுகூர முடிவதில்லை என்றோ கூறுகின்றனர்.

முகர்ந்து உணருவதற்கும், கவனம் செலுத்துவதற்கும், கனவு காணுவதற்குமான நம்முடைய திறன் குறைந்தது நம் வாழ்க்கையை அதிக ஏழ்மையானதாகவும் அதிகத் துயரமானதாகவும் ஆக்கியுள்ளதா? அது உண்மையாக இருக்கலாம். எப்படி இருந்தாலும், பொருளாதார அமைப்புமுறைக்கும் அரசியல் அமைப்புமுறைக்கும் அது ஏற்புடையதாக இருந்தது. நீங்கள் அடிக்கடி மலர்களை முகர்ந்து பார்ப்பதையும் தேவதைகளைப் பற்றிக் கனவு காணுவதையும்விட,

உங்களுடைய மின்னஞ்சல்களை அடிக்கடிப் பார்க்க வேண்டும் என்று உங்கள் மேலதிகாரி விரும்புகிறார். இதே காரணத்திற்காகத்தான், மனித மனத்திற்கு எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய மேம்பாடுகள் அரசியல் தேவைகளையும் சந்தை நிலவரங்களையும் பிரதிபலிப்பவையாக இருக்கும்.

எடுத்துக்காட்டாக, அமெரிக்க ராணுவத்தின் ‘கவனக்குவிப்புத் தலைக்கவசம்’, மக்கள் தங்களுடைய தெளிவாக வரையறுக்கப்பட்ட வேலைகள்மீது ஒருமித்த கவனம் செலுத்தவும், தங்களுடைய தீர்மானம் மேற்கொள்ளும் செயல்முறையைத் துரிதப்படுத்தவும் உதவுவதற்காக வடிவமைக்கப்பட்டுள்ளது. ஆனால், இரக்கம் காட்டுவதற்கும், சந்தேகங்களையும் உள்ளார்ந்த முரண்பாடுகளையும் பொறுத்துக் கொள்ளுவதற்குமான அவர்களுடைய திறனை இது குறைக்கக்கூடும். எடுத்துக்காட்டாக, நீங்கள் வேலை செய்யும் அலுவலகத்தில் உங்களுடைய புதிய மேலதிகாரி உங்களுடைய கண்ணோட்டங்களை மெச்சுவதில்லை என்பதாலும், எல்லாம் தன் வழியில் செய்யப்பட வேண்டும் என்று வலியுறுத்துவதாலும், நீங்கள் ஒரு தொடர்ச்சியான நெருக்கடியை அனுபவித்துக் கொண்டிருக்கிறீர்கள் என்று வைத்துக் கொள்ளுவோம். ஒரு குறிப்பிட்ட நாளன்று உங்கள் மேலதிகாரியின் செயலால் நீங்கள் மிகவும் வருத்தமுற்று இருக்கும்போது, நீங்கள் உங்கள் நண்பர் ஒருவரைத் தொலைபேசியில் அழைக்கிறீர்கள். ஆனால் உங்களோடு செலவிடுவதற்கு அவருக்கு அவ்வளவாக நேரமில்லை. எனவே, அவர் உங்கள் பேச்சில் குறுக்கிட்டு, உங்கள் பிரச்சனையைத் தீர்க்க முயற்சிக்கிறார்: “சரி, நீ சொல்லுவது எனக்குப் புரிகிறது. நீ தேர்ந்தெடுப்பதற்கு உனக்கு இங்கு இரண்டு விஷயங்கள்தான் உள்ளன: ஒன்று, நீ உன் வேலையைவிட்டு விலக வேண்டும். அல்லது, தொடர்ந்து அங்கேயே இருந்து உன் மேலதிகாரிக்கு விருப்பமானதைச் செய்ய வேண்டும். நான் உன் நிலைமையில் இருந்தால், அந்த வேலையிலிருந்து நான் விலகிவிடுவேன்.” அவருடைய இந்தப் பரிந்துரை உங்களுக்கு எள்ளளவும் உதவாது. ஓர் உண்மையான நண்பர் ஒரு தீர்வைக் கண்டுபிடிக்க இவ்வளவு அவசரப்பட மாட்டார். அவர் உங்களுடைய இன்னல்களைக் காதுகொடுத்துக் கேட்டுவிட்டு, உங்களுடைய முரண்பட்ட உணர்ச்சிகளையும் உங்களை அரித்துக் கொண்டிருக்கும் கவலைகளையும் நீங்கள் வெளிப்படுத்துவதற்கான நேரத்தையும் இடைவெளியையும் உங்களுக்குக் கொடுத்துவிட்டு அவர் காத்திருப்பார்.

அந்த கவனக்குவிப்புத் தலைக்கவசம் ஒரு விதத்தில் இந்தப் பொறுமையற்ற நண்பரைப்போலச் செயல்படுகிறது. ஆனால் சில

சமயங்களில் - எடுத்துக்காட்டாக, ஒரு போர்க்களத்தில் - மக்கள் விரைவாக உறுதியான தீர்மானங்களை மேற்கொள்ள வேண்டும். ஆனால் வாழ்க்கை இன்னும் அதிகமானவற்றை உள்ளடக்கியுள்ளது. முகர்ந்து பார்ப்பதற்கும் கனவு காணுவதற்கும் ஒருமித்த கவனம் செலுத்துவதற்குமான நம்முடைய திறனை நாம் எப்படி இழந்திருக்கிறோமோ, அதேபோல, நாம் அந்த கவனக்குவிப்புத் தலைக்கவசத்தை அளவுக்கதிகமாகப் பயன்படுத்தினால் நம்முடைய குழப்பங்களையும் சந்தேகங்களையும் முரண்பாடுகளையும் சகித்துக் கொள்ளுவதற்கான நம்முடைய திறனையும் நாம் இழக்கக்கூடும். ஆனால், சமூக அமைப்புமுறை நம்மை அந்தத் திசையை நோக்கித் தள்ளக்கூடும். ஏனெனில், நாம் மேற்கொள்ளுகின்ற தீர்மானங்களுக்காகத்தான் அது நமக்கு வெகுமதி வழங்குகிறதே தவிர, நம்முடைய சந்தேகங்களுக்காக அல்ல. ஆனால், உறுதியான தீர்மானங்களையும் விரைவான தீர்வுகளையும் உள்ளடக்கிய ஒரு வாழ்க்கை, சந்தேகங்களும் முரண்பாடுகளும் நிரம்பிய ஒரு வாழ்க்கையைவிட அதிக ஏழ்மையானதாகவும் அதிக மேலோட்டமானதாகவும் இருக்கும்.

மனங்களை வளர்த்தெடுப்பதற்கான நம்முடைய நடைமுறைத் திறனை, மனத்தின் வீச்சு எல்லையைப் பற்றிய நம்முடைய அறியாமையோடும், அரசாங்கங்கள், ராணுவங்கள் மற்றும் பெருநிறுவனங்களின் குறுகலான ஆர்வங்களோடும் நாம் ஒன்றுகலக்கும்போது, பிரச்சனைகள் தலைதூக்குவதற்கான ஒரு கச்சிதமான சூழல் அங்கு உருவாகிறது. நாம் நம்முடைய உடல்களையும் மூளைகளையும் வெற்றிகரமாக மேம்படுத்தக்கூடும், ஆனால் அச்செயல்முறையில் நாம் நம்முடைய மனங்களை இழந்துவிடக்கூடும். தொழில்நுட்ப மனிதவாதம் மனிதர்களுடைய நிலையைத் தாழ்த்துவதில் போய் முடியக்கூடும். ஆனால் சமூக அமைப்புமுறையானது, நிலை தாழ்த்தப்பட்ட மனிதர்களை விரும்பக்கூடும். அதிமனிதப் பண்புகள் அவர்களிடம் இருக்கும் என்பதற்காக அல்லாமல், அமைப்புமுறைக்கு ஊறு விளைவித்து அதன் வேகத்தைக் குறைக்கக்கூடிய பிரச்சனைகரமான சில மனிதப் பண்புகள் அவர்களிடம் இருக்காது என்பதற்காகவே அது அவர்களை விரும்பும். ஓர் ஆட்டு மந்தையில் உள்ள மிகவும் அறிவார்ந்த ஆடுதான் பொதுவாக மிகவும் பிரச்சனை ஏற்படுத்துகிறது என்பதை ஒவ்வொரு விவசாயியும் அறிவார். அதனால்தான், விலங்குகளின் அறிவுத்திறனைக் குறைப்பதும் வேளாண் புரட்சியின் ஒரு பகுதியாக இருந்தது. விலங்குகளுக்கு வேளாண் புரட்சி செய்த அந்தக் காரியத்தை, தொழில்நுட்ப

மனிதவாதிகள் கற்பனை செய்துள்ள இரண்டாவது அறிவுப் புரட்சி, மனிதர்களாகிய நமக்குச் செய்யக்கூடும். முன்பு எப்போதையும்விட அதிகச் சிறப்பாகத் தகவல் பரிமாறிக் கொள்ளக்கூடிய, அதிகச் சிறப்பாகத் தகவல்களைக் கையாளக்கூடிய, ஆனால் ஒருமித்த கவனம் செலுத்த முடியாத, கனவு காண முடியாத மற்றும் சந்தேகிக்க முடியாத மனிதச் சக்கரப்பற்களாக அது நம்மை உருமாற்றும். லட்சக்கணக்கான ஆண்டுகளாக நாம் மேம்படுத்தப்பட்டச் சிம்பன்சிகளாக இருந்தோம். ஆனால் எதிர்காலத்தில், நாம் மிதமிஞ்சிய உருவத்தைக் கொண்ட எறும்புகளாக ஆகக்கூடும்.

## பிரபஞ்சம் தொங்கிக் கொண்டிருக்கின்ற ஆணி

தொழில்நுட்ப மனிதவாதம் இன்னொரு பெரிய ஆபத்தை எதிர்கொண்டுள்ளது. பிற அனைத்து மனிதவாதப் பிரிவுகளையும் போலவே, தொழில்நுட்ப மனிதவாதமும் மனித விருப்பத்தைப் புனிதமானதாகக் கருதுகிறது, ஒட்டுமொத்தப் பிரபஞ்சமும் அந்த ஆணியில்தான் தொங்கிக் கொண்டிருப்பதாக அது கருதுகிறது. நாம் எந்த மனத்திறன்களை வளர்க்க வேண்டும் என்பதை நம்முடைய விருப்பங்கள்தாம் தேர்ந்தெடுக்க வேண்டும் என்றும், அதன் மூலம் எதிர்கால மனங்களை அவை வடிவமைக்க வேண்டும் என்றும் தொழில்நுட்ப மனிதவாதம் எதிர்பார்க்கிறது. ஆனால், அந்த விருப்பங்களையே மாற்றியமைக்கவும் புதிதாக உருவாக்கவும்கூடத் தொழில்நுட்ப முன்னேற்றம் ஏற்படும்போது என்ன நிகழும்?

நம்முடைய உண்மையான விருப்பம் எது என்பதைக் கண்டுபிடிப்பது அவ்வளவு எளிதான காரியமல்ல என்று மனிதவாதம் எப்போதுமே வலியுறுத்தியது. நாம் நம்முடைய உட்குரலைச் செவிமடுக்க முயற்சிக்கும்போது, ஒன்றுக்கொன்று முரணான சத்தங்களை உள்ளடக்கிய காட்டுக்கூச்சல் நம் மனத்தில் தோன்றிக் குழப்பத்தை உண்டாக்கும். சில சமயங்களில் நாம் நம்முடைய உண்மையான உட்குரலைக் கேட்க விரும்புவதில்லை. ஏனெனில், மற்றவர்கள் வெறுக்கக்கூடிய ரகசியங்களையும் அசௌகரியமான கோரிக்கைகளையும் அது வெளிப்படுத்தக்கூடும். தங்களை அதிக ஆழமாக ஆராயாமல் இருப்பதில் பலர் மிகுந்த எச்சரிக்கையோடு செயல்படுகின்றனர். மிக வேகமாக முன்னேறிக் கொண்டிருக்கின்ற ஒரு வெற்றிகரமான பெண் வழக்கறிஞர், ஓர் இடைவேளை எடுத்துக் கொண்டு குழந்தை பெற்றுக் கொள்ளும்படி தன்னிடம் கூறுகின்ற தன்னுடைய உட்குரலின் கழுத்தை நெறிக்கக்கூடும். மனநிறைவு

அளிக்காத ஒரு திருமண உறவில் சிக்கித் தவிக்கின்ற ஒரு பெண், அந்த உறவு கொடுக்கின்ற பாதுகாப்பைத் தான் இழந்துவிடக்கூடுமோ என்று பயப்படுகிறார். குற்றவுணர்வு கொண்ட ஒரு ராணுவ வீரர், தான் செய்த அட்டூழியங்கள் பற்றிய கொடுங்கனவுகளால் உள்ளூரத் துன்புறுகிறார். தன்னுடைய பாலினம் எது என்று உறுதியாகத் தெரியாமல் இருக்கின்ற ஓர் இளைஞர், 'எதுவும் கேட்காதே, எதுவும் கூறாதே,' என்ற தனிப்பட்டக் கொள்கையைப் பின்பற்றுகிறார். இச்சூழ்நிலைகளில் எல்லாவற்றுக்கும் எல்லோருக்கும் பொருந்தக்கூடிய தனியொரு தீர்வு என்று எதுவும் கிடையாது என்று மனிதவாதம் கருதுகிறது. ஆனால், அதே நேரம், நாம் சிறிதளவு துணிச்சலை வெளிப்படுத்தி, நம்முடைய உட்குரல் கூறும் செய்திகள் நம்மை அச்சுறுத்தினாலும் அவற்றைக் காதுகொடுத்துக் கேட்டு, நம்முடைய உண்மையான குரலை அடையாளம் கண்டுகொண்டு, என்ன பிரச்சனை வந்தாலும் அக்குரலின் அறிவுறுத்தல்களைப் பின்பற்றி நடக்க வேண்டும் என்று மனிதவாதம் எதிர்பார்க்கிறது.

தொழில்நுட்ப முன்னேற்றம் முற்றிலும் வேறொரு நோக்கத்தைக் கொண்டிருக்கிறது. அது நம்முடைய உட்குரல்கள் கூறுவதைக் கேட்க விரும்புவதில்லை. மாறாக, அது அவற்றைக் கட்டுப்படுத்த விரும்புகிறது. இக்குரல்கள் அனைத்தையும் உருவாக்குகின்ற உயிர்வேதி அமைப்புமுறையை நாம் புரிந்து கொண்டுவிட்டால், அவற்றின் சுவிட்சுகளோடு நாம் விளையாடலாம், இங்கே ஒலியளவைக் கூட்டலாம், அங்கே அதைக் குறைக்கலாம், வாழ்க்கையை அதிக சுலபமானதாகவும் அதிக வசதியானதாகவும் ஆக்கிக் கொள்ளலாம். கவனச்சிதறலுக்கு ஆளாகியுள்ள அந்தப் பெண் வழக்கறிஞருக்கு நாம் ரிட்டாலின் மாத்திரைகளைக் கொடுக்கலாம், குற்றவுணர்வு கொண்ட அந்த ராணுவ வீரருக்குப் புரோசாக் மாத்திரைகளைக் கொடுக்கலாம், மனநிறைவின்றி இருக்கும் அந்த மனைவிக்கு சிப்ராலெக்ஸ் மாத்திரைகளைக் கொடுக்கலாம். இது துவக்கம் மட்டுமே.

இந்த அணுகுமுறை மனிதவாதிகளுக்கு அதிர்ச்சியூட்டுகிறது, ஆனால் அவசரப்பட்டு அதை விமர்சிக்காமல் இருப்பது நல்லது. நம்முடைய உட்குரலுக்கு நாம் செவிசாய்க்க வேண்டும் என்ற மனிதவாதப் பரிந்துரை பலருடைய வாழ்க்கையைச் சீரழித்துள்ளது, ஆனால் சரியான வேதிப் பொருட்களைச் சரியான அளவில் உட்கொள்ளுவது லட்சக்கணக்கானோரின் உடல்நலனையும் உறவுகளையும் வெகுவாக மேம்படுத்தியுள்ளது. உண்மையிலேயே தங்கள் உட்குரல் கூறுவதைக் கேட்பதற்கு, சிலர் தங்களுடைய உள்ளார்ந்த கூச்சல்கள் மற்றும் வசைகளின் சத்தத்தைக் குறைத்தாக வேண்டும். பல 'உட்குரல்களும்'

‘உண்மையான விருப்பங்களும்’ உயிர்வேதிச் சமநிலையின்மைகள் மற்றும் நரம்பியல் நோய்களின் விளைவுகள்தானே அன்றி வேறு எதுவும் இல்லை என்று நவீன மனநல மருத்துவம் கூறுகிறது. தீவிர மனச்சோர்வால் துன்புறுகின்ற மக்கள் தொடர்ந்து நல்ல வேலைகளையும் மகிழ்ச்சியான உறவுகளையும் கைவிடுகின்றனர். ஏனெனில், அவர்களுக்குள் இருக்கின்ற ஏதோ ஓர் உயிர்வேதிப் பிரச்சனை, எல்லா விஷயங்களையும் எதிர்மறையான கண்ணோட்டத்தில் பார்க்கும்படி அவர்களைத் தூண்டுகிறது. அப்படிப்பட்ட அழிவுபூர்வமான குரல்கள் கூறுவதைக் கேட்பதற்கு பதிலாக, அவற்றின் வாயை மூடிவிடுவது நல்லது. சாலி அடீ தன்னுடைய தலையில் எழுந்த குரல்களை அமைதிப்படுத்துவதற்கு அந்த கவனக்குவிப்புத் தலைக்கவசத்தைப் பயன்படுத்தியபோது, சரியாகக் குறி பார்த்துச் சுடுவதில் அவர் கைதேர்ந்தவராக ஆனதோடு, தன்னைப் பற்றியும் நல்லவிதமாக உணரத் தொடங்கினார்.

தனிப்பட்ட முறையில் இப்பிரச்சனைகளைப் பற்றி நாம் ஒவ்வொருவரும் ஒரு வித்தியாசமான கண்ணோட்டத்தைக் கொண்டிருக்கிறோம். ஆனாலும், வரலாற்றுரீதியான ஒரு கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, ஏதோ முக்கியமான விஷயம் நிகழ்ந்து கொண்டிருப்பது தெளிவாகத் தெரிகிறது. ‘உங்கள் உட்குரல் கூறுவதைக் காதுகொடுத்துக் கேளுங்கள்’ என்ற மனிதவாத்ததின் முதல் கட்டளை இனியும் தெளிவாக இல்லை. நம்முடைய உட்குரலின் சத்தத்தைக் கூட்டவும் குறைக்கவும் நாம் கற்றுக் கொண்டுள்ளதையடுத்து, உண்மைத்தன்மையின்மீதான நம்பிக்கையை நாம் இழந்துவிடுகிறோம். ஏனெனில், சுவிட்சின்மீது இருப்பது யாருடைய கை என்பது இப்போது நமக்குத் தெளிவாகத் தெரியவில்லை. என் தலைக்குள் முளைத்து எனக்கு எரிச்சலூட்டிக் கொண்டிருக்கின்ற சத்தங்களை ஒடுக்குவது ஓர் அற்புதமான யோசனைபோலத் தோன்றுகிறது. ஆனால் எனக்குள் ஆழமாக இருக்கின்ற என்னுடைய உண்மையான சுயத்தின் குரலை நான் கேட்பதற்கு அது எனக்கு உதவினால் மட்டுமே அது ஒரு நல்ல யோசனையாக இருக்கும். ஆனால், உண்மையான சுயம் என்று எதுவும் கிடையாது என்றால், எந்தக் குரல்களை அடக்கி ஒடுக்க வேண்டும், எவற்றின் ஒலியளவை அதிகரிக்க வேண்டும் என்று நான் எப்படித் தீர்மானிப்பது?

ஒருசில ஆண்டுகளில் நம்முடைய பல உட்குரல்களை சுலபமாகவும் துல்லியமாகவும் நம்முடைய கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவருவதற்கு மூளை அறிவியலறிஞர்களால் நமக்கு உதவ முடியும் என்று வைத்துக்

கொள்ளுவோம். மோர்மோன் கிறித்தவப் பிரிவைச் சேர்ந்த ஓர் இளைஞர் ஓரினச் சேர்க்கையாளர் என்று வைத்துக் கொள்ளுவோம். அவர் பல ஆண்டுகளாக ஒரு கூட்டுக்குள் வாழ்ந்த பிறகு, இறுதியில், தன்னை ஒரு முழுமையான ஆண்மகனாக மாற்றக்கூடிய ஓர் அறுவைச் சிகிச்சைக்குத் தேவையான பணத்தைச் சேமித்துள்ளார். தன் கையில் 1,00,000 டாலர் பணத்துடன் அவர் ஒரு மருத்துவ மையத்திற்குச் செல்லுகிறார். அங்கிருந்து வெளியேறும்போது தான் ஒரு முழுமையான ஆணாக வெளியேறப் போவதாக அவர் தீர்மானிக்கிறார். அவர் அந்த மருத்துவ மையத்தின் வாசலை அடைந்தவுடன், அந்த மருத்துவரிடம் தான் கூற விரும்புவதை ஒரு முறை தன் மனத்தில் ஒத்திகை பார்க்கிறார்: "டாக்டர், இந்த 1,00,000 டாலர் பணத்தை எடுத்துக் கொள்ளுங்கள். நான் இனி ஒருபோதும் இன்னோர் ஆண்மகனை ஏறெடுத்தும் பார்க்காதபடி என்னைச் சரி செய்துவிடுங்கள்." பிறகு அவர் அங்கிருக்கும் அழைப்பு மணியை அழுத்துகிறார். அக்கதவைத் திறப்பவர், பிரபல ஹாலிவுட் நடிகரான ஜார்ஜ் குளூனி. அவருடைய வசீகரமான உருவத்தைக் கண்டு திக்குமுக்காடிப் போகின்ற அந்த இளைஞர், படபடவென்று, "டாக்டர், இதில் 1,00,000 டாலர் பணம் இருக்கிறது. நான் இனி ஒருபோதும் பெண்களை ஏறெடுத்தும் பார்க்காதபடி என்னைச் சரி செய்துவிடுங்கள்," என்று கூறுகிறார்.

இத்தனை நாட்களாக மதரீதியாக அந்த இளைஞருக்குச் செய்யப்பட்டு வந்திருந்த மூளைச்சலவையை அவருடைய உண்மையான சுயம் வெற்றி கொண்டுவிட்டதா? அல்லது, ஒரு கணநேர சபலம் அவர் தனக்குத் தானே நம்பிக்கைத் துரோகம் இழைக்கும்படி செய்ததா? அல்லது, நாம் பின்பற்றுவதற்கோ அல்லது நம்பிக்கைத் துரோகம் இழைப்பதற்கோ உண்மையான சுயம் என்று ஒன்று இல்லையா? நம்முடைய விருப்பத்தை நம்மால் உருவாக்கவும் மாற்றியமைக்கவும் முடியும்போது, அதை அனைத்து அர்த்தத்திற்கும் அதிகாரத்திற்குமான உச்சகட்ட மூலாதாரமாக இனியும் நம்மால் பார்க்க முடிவதில்லை. நம் விருப்பம் நம்மிடம் என்ன கூறினாலும் சரி, வேறு எதையேனும் கூறும்படி அதை எப்போதும் நம்மால் வளைக்க முடியும்.

மனிதவாதத்தைப் பொருத்தவரை, மனித விருப்பங்கள் மட்டுமே இவ்வுலகிற்கு அர்த்தத்தைக் கொடுக்கின்றன. ஆனால், நம்மால் நம்முடைய விருப்பங்களைத் தேர்ந்தெடுக்க முடியும் என்றால், பிறகு நாம் எதன் அடிப்படையில் அவற்றைத் தேர்ந்தெடுப்பது? 'ரோமியோ மற்றும் ஜூலியட்' நாடகத்தின் முதல் காட்சியில், யாரிடம் காதல் வயப்படுவது என்று ரோமியோ தீர்மானிக்க வேண்டியிருப்பதாக வைத்துக் கொள்ளுவோம். அவன் ஒரு தீர்மானத்தை மேற்கொண்ட

பிறகுகூட, அவனால் அதை மாற்றி வேறொன்றைத் தேர்ந்தெடுக்க முடியும் என்று அனுமானித்துக் கொள்ளுங்கள். அப்படியானால் அது எப்படிப்பட்ட நாடகமாக இருந்திருக்கும்? அந்த நாடகத்தைத்தான் தொழில்நுட்ப முன்னேற்றம் நமக்காக உருவாக்கி அரங்கேற்றத் துடித்துக் கொண்டிருக்கிறது. நம்முடைய விருப்பங்கள் நமக்கு அசௌகரியத்தை ஏற்படுத்தும்போது, அதிலிருந்து நம்மை மீட்பதாகத் தொழில்நுட்பம் வாக்குக் கொடுக்கிறது. பிரபஞ்சம் எந்த ஆணியில் தொங்கிக் கொண்டிருக்கிறதோ, அந்த ஆணி அடிக்கப்பட்டிருக்கின்ற இடம் பிரச்சனையானதாக இருந்தால், தொழில்நுட்பம் அந்த ஆணியை அங்கிருந்து பிடுங்கி வேறோர் இடத்தில் அடித்துவிடும். ஆனால் துல்லியமாக எங்கே அடிக்கும்? பிரபஞ்சத்தில் எங்கு வேண்டுமானாலும் என்னால் அந்த ஆணியை அடிக்க முடியும் என்றால், நான் அதை எங்கே அடிக்க வேண்டும்? மற்ற இடங்களையெல்லாம் விட்டுவிட்டு, குறிப்பிட்ட அந்த இடத்தை நான் ஏன் தேர்ந்தெடுக்க வேண்டும்?

மக்கள் அசௌகரியமான விருப்பங்களைக் கொண்டிருக்கும்போது மனிதவாத நாடகம் அரங்கேறத் தொடங்குகிறது. எடுத்துக்காட்டாக, மான்டெக்யூ குடும்பத்தைச் சேர்ந்த ரோமியோ, கபுலெட் குடும்பத்தைச் சேர்ந்த ஜூலியட்மீது காதல் வயப்படும்போது அது மிகவும் அசௌகரியமானதாக இருக்கிறது. ஏனெனில், அவ்விரு குடும்பத்தினரும் பரஸ்பர எதிரிகள். நமக்கு ஒருபோதும் அசௌகரியமான விருப்பங்கள் ஏற்படாமல் இருப்பதை உறுதி செய்வதுதான் இப்படிப்பட்ட நாடகங்களுக்கான தொழில்நுட்பரீதியான தீர்வாகும். ரோமியோவும் ஜூலியட்டும் விஷத்தை அருந்தியதற்கு பதிலாக, தங்களுக்கு வேறு எவர்மீதேனும் காதல் ஏற்படும்படி செய்திருக்கக்கூடிய ஒரு மாத்திரையை உட்கொண்டிருந்தாலோ அல்லது அதற்கான ஒரு தலைக்கவசத்தை அணிந்திருந்தாலோ எவ்வளவு வேதனையும் துயரமும் தவிர்க்கப்பட்டிருக்கும் என்பதை எண்ணிப் பாருங்கள்.

தொழில்நுட்ப மனிதவாதம் இங்கு ஓர் இக்கட்டான நிலைமையை எதிர்கொண்டுள்ளது. மனித விருப்பம்தான் பிரபஞ்சத்திலுள்ள மிக முக்கியமான விஷயம் என்று அது கருதுவதால், அந்த விருப்பத்தைக் கட்டுப்படுத்தவும் மாற்றியமைக்கவும்கூடிய தொழில்நுட்பங்களை உருவாக்குவதை நோக்கி மனிதகுலத்தை அது உந்தித் தள்ளுகிறது. அதாவது, உலகிலுள்ள மிக முக்கியமான விஷயத்தை உங்கள் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவருவதற்கு அது உங்களை சபலப்படுத்துகிறது. ஆனால் நமக்கு அந்தக் கட்டுப்பாடு கிடைத்துவிட்டால், அதைக் கொண்டு என்ன செய்ய வேண்டும் என்பது

தொழில்நுட்ப மனிதவாதத்திற்குத் தெரியாது. ஏனெனில், புனிதமான மனிதர்கள் அதன் இன்னொரு நவீனமான, ஆடம்பரமான தயாரிப்பாக ஆகிவிடுவர். மனித விருப்பமும் மனித அனுபவமும்தான் அதிகாரத்திற்கும் அர்த்தத்திற்குமான உச்சகட்ட மூலாதாரம் என்று நாம் நம்பும்வரை, இப்படிப்பட்டத் தொழில்நுட்பங்களை நம்மால் ஒருபோதும் கையாள முடியாது.

எனவே, அதிகத் துணிச்சலான ஒரு தொழில்நுட்ப மதம் மனிதவாதத் தொப்புள்கொடியை முழுவதுமாக அறுத்தெறிய விழைகிறது. மனிதர்களை ஒத்த உயிரினங்கள் எதுவொன்றின் விருப்பங்களையும் அனுபவங்களையும் சுற்றி இயங்காத ஓர் உலகத்தை உருவாக்குவதுதான் அதன் நோக்கமாக இருக்கிறது. இப்போது அனைத்து அர்த்தத்திற்கும் அதிகாரத்திற்குமான மூலாதாரமாக இருக்கின்ற விருப்பங்கள் மற்றும் அனுபவங்களின் இடத்தை அப்போது எது எடுத்துக் கொள்ளக்கூடும்? தற்போதைய நிலவரப்படி, அந்த வேலைக்கான நேர்முகத் தேர்வுக்காக ஒரு விஷயம் வரலாற்றின் வரவேற்பறையில் காத்துக் கொண்டிருக்கிறது. அதன் பெயர் தரவுவாதம். அதை நாம் அடுத்த அத்தியாயத்தில் சந்திக்கலாம்.

## அத்தியாயம் 11

# தரவு மதம்

பிரபஞ்சம் என்பது தரவோட்டங்களை உள்ளடக்கியது என்றும், எந்தவொரு நிகழ்வின் அல்லது பொருளின் மதிப்பும் தரவுச் செயலாக்கத்திற்கு அது வழங்குகின்ற பங்களிப்பால்தான் தீர்மானிக்கப்படுகிறது என்றும் தரவுவாதம் முழங்குகிறது. இது ஏதோ கிறுக்குத்தனமான யோசனைபோலத் தோன்றக்கூடும், ஆனால் உண்மையில், அறிவியல் அமைப்புமுறையின் பெரும்பகுதியை இது ஏற்கனவே வெற்றி கொண்டுவிட்டது. இரண்டு மாபெரும் அறிவியல் அலைகளின் ஆக்ரோஷமான சங்கமத்திலிருந்து பிறந்ததுதான் தரவுவாதம். சார்லஸ் டார்வின் தன்னுடைய ‘ஆன் த ஆரிஜின் ஆஃப் ஸ்பீசீஸ்’ என்ற நூலை வெளியிட்டதைத் தொடர்ந்து 150 ஆண்டுகளாக, உயிரியலானது உயிரினங்களை உயிர்வேதிப் படிமுறைத் தீர்வுகளாகப் பார்த்து வந்துள்ளது. அதே நேரத்தில், ஆலன் டியூரிங் தன்னுடைய டியூரிங் இயந்திரத்திற்கான யோசனையை வெளியிட்டதைத் தொடர்ந்து எண்பது ஆண்டுகளில், கணினிப் பொறியாளர்கள் அதிநவீன மின்னணுப் படிமுறைத் தீர்வுகளை உருவாக்கக் கற்றுக் கொண்டுள்ளனர். தரவுவாதம் இவ்விரண்டையும் ஒப்பிட்டுப் பார்த்து, உயிர்வேதிப் படிமுறைத் தீர்வுகளும் மின்னணுப் படிமுறைத் தீர்வுகளும் ஒரே கணித விதிகளைத்தான் அடிப்படையாகக் கொண்டுள்ளன என்று சுட்டிக்காட்டுகிறது. இதன் மூலம், தரவுவாதம் விலங்குகளுக்கும் இயந்திரங்களுக்கும் இடையேயான தடையைத் தகர்க்கிறது, மின்னணுப் படிமுறைத் தீர்வுகள் இறுதியில் உயிர்வேதிப் படிமுறைத் தீர்வுகளைப் புரிந்து கொண்டு செயல்பாட்டில் அவற்றை விஞ்சிவிடும் என்று எதிர்பார்க்கிறது.

அரசியல்வாதிகளுக்கும் தொழிலதிபர்களுக்கும் சாதாரண நுகர்வோருக்கும் தரவுவாதம் புதுமையான தொழில்நுட்பங்களையும் அளப்பரிய புதிய சக்திகளையும் வழங்குகிறது. இத்தனை நூற்றாண்டுகளாக அறிஞர்கள் மற்றும் அறிவார்ந்தவர்களின் கைகளுக்கு அகப்படாமல் அவர்களோடு கண்ணாமூச்சி விளையாட்டு விளையாடி வந்திருந்த ஒரு முக்கியமான அறிவியல் கோட்பாட்டை அவர்களுக்கு வழங்குவதாக அது வாக்குக் கொடுக்கிறது. இசையியலில் தொடங்கி, பொருளாதாரம் உட்பட உயிரியல்வரை அனைத்து அறிவியல் பிரிவுகளையும் ஒன்றுபடுத்துகின்ற தனியொரு கோட்பாடு

அது. தரவுவாதத்தைப் பொருத்தவரை, பீத்தோவனின் ஐந்தாம் சிம்பொனியும், ஒரு பங்குச் சந்தை வீழ்ச்சியும், சளிக்காய்ச்சல் நோய்க்கிருமியும் ஒரே அடிப்படைக் கோட்பாடுகளையும் கருவிகளையும் கொண்டு ஆராயப்படக்கூடிய மூன்று வெவ்வேறு வகையான தரவோட்ட வடிவவிதங்களாகும். இந்த யோசனை மிக வசீகரமானதாக இருக்கிறது. இது எல்லா அறிவியலறிஞர்களுக்கும் ஒரு பொதுவான மொழியைக் கொடுக்கிறது, கல்விசார் இடைவெளிகளைச் சரி செய்வதற்கான பாலங்களை உருவாக்குகிறது, அறிவியலின் ஒரு பிரிவிலிருந்து இன்னொரு பிரிவுக்கு உள்நோக்குகளை சுலபமாக ஏற்றுமதி செய்கிறது. இசையியலாளர்கள், பொருளியலாளர்கள், உயிரணு உயிரியலாளர்கள் ஆகியோரால் இறுதியில் ஒருவழியாகப் பரஸ்பரம் ஒருவரையொருவர் புரிந்து கொள்ள முடிகிறது.

இச்செயல்முறையின் ஊடாக, தரவுவாதம், கற்றலுக்கான பாரம்பரியப் பிரமிடைத் தலைகீழாக்குகிறது. இந்நாள்வரை, தரவு என்பது அடுத்தடுத்துப் பல அறிவார்ந்த நடவடிக்கைகளை உள்ளடக்கிய ஒரு சங்கிலித் தொடரின் முதலடியாக மட்டுமே பார்க்கப்பட்டு வந்தது. தரவுகளைத் தகவல்களாகப் பிரித்தெடுத்து, அத்தகவல்களை அறிவாகவும், அந்த அறிவை ஞானமாகவும் மாற்றுவது மனிதர்களுடைய வேலையாக இருந்தது. ஆனால், இன்றைய அளப்பரிய தரவோட்டங்களை இனியும் மனிதர்களால் கையாள முடியாது என்றும், அதனால் அவர்களால் தரவுகளைத் தகவல்களாகக்கூடப் பிரித்தெடுக்க முடியாது என்றும் தரவுவாதிகள் நம்புகின்றனர். எனவே, தரவுகளைச் செயலாக்கம் செய்வதற்கான வேலையை, மனித மூளையின் திறனைவிடப் பன்மடங்கு அதிகத் திறன் படைத்த மின்னணுப் படிமுறைத் தீர்வுகளிடம் ஒப்படைக்க வேண்டும் என்று அவர்கள் கருதுகின்றனர். அதாவது, மனித அறிவின்மீதும் ஞானத்தின்மீதும் தரவுவாதிகள் அவநம்பிக்கை கொண்டுள்ளனர் என்பது நடைமுறையில் இதற்கான அர்த்தமாகும். எனவே, பெரும் தரவுக் குவியல்களையும் கணினிப் படிமுறைத் தீர்வுகளையும் நம்புவதை அவர்கள் தேர்ந்தெடுக்கின்றனர்.

கணினி அறிவியல், உயிரியல் ஆகிய தன்னுடைய இரண்டு மூல அறிவியல் பிரிவுகளில் தரவுவாதம் உறுதியாக வேரூன்றியுள்ளது. இவ்விரண்டில் உயிரியல்தான் அதிக முக்கியமானது. தரவுவாதத்தை உயிரியல் சுவீகரித்துக் கொண்டதுதான், கணினி அறிவியலில் ஏற்பட்ட ஒரு மட்டுப்படுத்தப்பட்ட அளவிலான புதுமையை, வாழ்வின் அடிப்படை இயல்பையே முற்றிலுமாக மாற்றக்கூடிய, உலகை ஒட்டுமொத்தமாகப் புரட்டிப் போடக்கூடிய ஒரு பேரழிவாக மாற்றியது.

உயிரினங்கள் என்பவை படிமுறைத் தீர்வுகளே என்ற யோசனையுடன் நீங்கள் உடன்படாமல் இருக்கலாம், ஆனால் இதுதான் கேள்விக்கு உட்படுத்தப்பட முடியாத தற்போதைய அறிவியல் கோட்பாடு என்பதையும், அடையாளம் காணப்பட முடியாத அளவுக்கு நம்முடைய உலகை அது மாற்றிக் கொண்டிருக்கிறது என்பதையும் நீங்கள் தெரிந்து கொண்டாக வேண்டும்.

இன்று தனி உயிரினங்கள் மட்டுமல்லாமல், தேன்கூடுகள், நுண்ணுயிரிக் கூட்டங்கள், காடுகள், மனித நகரங்கள் போன்ற ஒட்டுமொத்தச் சமுதாயங்களும்கூடத் தரவுச் செயலாக்க அமைப்புமுறைகளாகப் பார்க்கப்படுகின்றன. பொருளியலாளர்கள் பொருளாதாரத்தைக்கூட ஒரு தரவுச் செயலாக்க அமைப்புமுறையாகப் பார்ப்பது அதிகரித்து வருகிறது. விவசாயிகள் கோதுமையை வளர்ப்பது, தொழிலாளர்கள் ஆடைகளைத் தயாரிப்பது, வாடிக்கையாளர்கள் ரொட்டிகளையும் மேலாடைகளையும் வாங்குவது ஆகியவற்றை உள்ளடக்கியதுதான் பொருளாதாரம் என்று அப்பாவி மக்கள் நம்புகின்றனர். ஆனால் வல்லுநர்களோ, விருப்பங்களையும் திறன்களையும் பற்றிய தரவுகளைச் சேகரிப்பதற்கும், அந்தத் தரவுகளைத் தீர்மானங்களாக மாற்றுவதற்குமான ஓர் இயக்க அமைப்பாகப் பொருளாதாரத்தைப் பார்க்கின்றனர்.

இந்தக் கண்ணோட்டத்தின்படி, கட்டுப்பாடற்றச் சந்தையை உள்ளடக்கிய முதலாளித்துவமும் அரசின் கட்டுப்பாட்டில் உள்ள கம்யூனிசவாதமும் ஒன்றோடொன்று போட்டியிடுகின்ற சித்தாந்தங்களோ, அறநெறி சார்ந்த மதங்களோ, அல்லது அரசியல் அமைப்புகளோ அல்ல; மாறாக, அவை ஒன்றோடொன்று போட்டியிடுகின்ற தரவுச் செயலாக்க அமைப்புமுறைகளே. முதலாளித்துவம் பகிர்வுச் செயலாக்கத்தைப் பயன்படுத்துகிறது, கம்யூனிசவாதம் மையச் செயலாக்கத்தைச் சார்ந்திருக்கிறது. முதலாளித்துவம் உற்பத்தியாளர்களையும் நுகர்வோரையும் ஒருவரோடு ஒருவர் நேரடியாகத் தொடர்புபடுத்தி, அவர்கள் தங்களுக்கிடையே சுதந்திரமாகத் தகவல்களைப் பரிமாறிக் கொள்ளவும் தீர்மானங்களை மேற்கொள்ளவும் அனுமதிக்கிறது. அரசுக் கட்டுப்பாடற்ற ஒரு சந்தையில் ஒரு ரொட்டியின் விலை எவ்வாறு தீர்மானிக்கப்படுகிறது? ஒவ்வொரு பேக்கரியும் தான் விரும்பும் அளவுக்கு ரொட்டிகளைத் தயாரிக்கலாம், எந்த விலை வைத்து வேண்டுமானாலும் அந்த ரொட்டிகளை விற்கலாம். அதேபோல, வாடிக்கையாளர்களும் தங்களுக்குக் கட்டுப்படியாகக்கூடிய அளவுக்கு ரொட்டிகளை வாங்கிக் கொள்ளலாம், அல்லது அந்த பேக்கரிக்குப் போட்டியாக உள்ள

வேறொரு பேக்கரியில் வாங்கிக் கொள்ளலாம். ஒரு துண்டு ரொட்டிக்கு 1,000 டாலர்கள் விலை வைத்து விற்பது சட்டத்திற்குப் புறம்பானது அல்ல, ஆனால் யாரும் அதை வாங்க மாட்டார்கள், அவ்வளவுதான்.

ஒரு மிகப் பெரிய அளவில் பார்க்கும்போது, ரொட்டிக்கான தேவை அதிகரிக்கப் போவதாக முதலீட்டாளர்கள் கணித்தால், அதிக மகசூல் கொடுக்கக்கூடிய கோதுமை வகைகளை மரபணு மாற்றச் செயல்முறை மூலம் தயாரிக்கின்ற உயிர்தொழில்நுட்ப நிறுவனங்களின் பங்குகளை அவர்கள் வாங்குவர். மூலதனத்தின் வரவு அதிகரிப்பது அந்நிறுவனங்கள் தம்முடைய ஆராய்ச்சியைத் துரிதப்படுத்துவதைச் சாத்தியமாக்குகிறது. இதன் மூலம், அவர்களால் அதிக அளவு கோதுமையை வேகமாக வழங்கி, ரொட்டித் தட்டுப்பாடு ஏற்படுவதைத் தவிர்க்க முடிகிறது. ஒரே ஒரு உயிர்தொழில்நுட்பப் பெருநிறுவனம் குறைபாடுள்ள ஒரு கோட்பாட்டை சுவீகரித்து, அதன் காரணமாக ஒரு முட்டுச்சந்தில் போய் முட்டி நின்றால், அந்நிறுவனத்தைவிட அதிக வெற்றிகரமாக விளங்குகின்ற அதன் போட்டி நிறுவனங்கள் அப்புதிய வகைக் கோதுமையைக் கண்டுபிடிக்கக்கூடும். இவ்விதத்தில், கட்டுப்பாடற்றச் சந்தை முதலாளித்துவம், தரவுகளை ஆராய்ந்து தீர்மானங்களை மேற்கொள்ளும் வேலையை சுதந்திரமான, ஆனால் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டுள்ள செயலிகளுக்கு இடையே பகிர்ந்தளிக்கிறது. ஆஸ்திரியப் பொருளியல் மேதையான ஃபிரீட்ரிக் ஹாயக் அதை இவ்வாறு விளக்குகிறார்: “சம்பந்தப்பட்டத் தகவல்கள் பற்றிய அறிவு எந்த அமைப்புமுறையில் பலரிடையே பகிர்ந்து கொள்ளப்படுகிறதோ, அதில் வெவ்வெறு நபர்களுடைய தனித்தனி நடவடிக்கைகளை ஒருங்கிணைப்பதற்கு விலைகள் உதவுகின்றன.”

இக்கண்ணோட்டத்தின்படி, பங்குச்சந்தைதான் மனிதகுலம் இதுவரை உருவாக்கியுள்ள மிக வேகமான மற்றும் மிக அதிகச் செயற்திறன் வாய்ந்த தரவுச் செயலாக்க அமைப்புமுறையாகும். நேரடியாக இல்லாவிட்டால்கூட, தங்களுடைய வங்கிகள் மூலமாகவோ அல்லது ஓய்வூதிய நிதிகளின் மூலமாகவோ எல்லோரும் இதில் சேர்ந்து கொள்ளலாம். பங்குச்சந்தை சர்வதேசப் பொருளாதாரத்தைக் கட்டுப்படுத்தி நிர்வகிக்கிறது. உலகம் நெடுகிலும் (அதற்கு அப்பாலும்கூட) நிகழுகின்ற எல்லாவற்றையும் அது கணக்கில் எடுத்துக் கொள்ளுகிறது. வெற்றிகரமான அறிவியல் பரிசோதனைகள், ஜப்பானில் நிகழும் அரசியல் மோசடிகள், ஐஸ்லாந்தில் நிகழும் எரிமலை வெடிப்புகள், சூரியனின் மேற்பரப்பின்மீது நிகழுகின்ற விஷயங்கள் போன்றவைகூட விலைகள்மீது தாக்கம் ஏற்படுத்துகின்றன. அமைப்புமுறை சீராகவும் சுமூகமாகவும்

இயங்குவதற்கு, இயன்ற அளவு தகவல்கள் இயன்ற அளவு சுதந்திரமாக வளைய வர வேண்டும். சம்பந்தப்பட்டத் தகவல்கள் அனைத்தும் உலகம் நெடுகிலும் கோடிக்கணக்கான மக்களுக்குக் கிடைக்கும்போது, எண்ணெயின் துல்லியமான விலையையும், ஹாந்தே கார் நிறுவனத்தின் பங்குகளின் துல்லியமான விலையையும், ஸ்வீடனின் அரசுப் பத்திரங்களின் துல்லியமான விலையையும் அவர்கள் தீர்மானிக்கின்றனர். எப்படி? அவற்றை வாங்குவதன் மூலமும் விற்பதன் மூலமும்தான். நியூயார்க் டைம்ஸ் பத்திரிகையில் இடம்பெறும் தலைப்புச் செய்தி ஒன்று பெரும்பாலான பங்குகளின் விலைகள்மீது ஏற்படுத்துகின்ற தாக்கத்தைத் தெரிந்து கொள்ளுவதற்குப் பங்குச் சந்தையில் வெறும் பதினைந்து நிமிடங்கள் பரிவர்த்தனைகள் நிகழ்ந்தால் போதும் என்று கணிக்கப்பட்டுள்ளது.

பெருமுதலாளிகள் ஏன் குறைவான வரிகளை விரும்புகின்றனர் என்பதையும் தரவுச் செயலாக்கமுறைகள் விளக்குகின்றன. அதிக வரி விதிப்பு என்றால், இருக்கின்ற மூலதனத்தின் ஒரு பெரும் பகுதி ஒரே இடத்தில் (அரசாங்கத்தில்) குவிகிறது என்று பொருள். அதன் விளைவாக, மேன்மேலும் அதிகமான தீர்மானங்கள் ஒரே ஒரு செயலியால் (அரசாங்கத்தால்) மட்டுமே எடுக்கப்பட வேண்டியுள்ளது. இது ஒரு மையத் தரவுச் செயலாக்க அமைப்புமுறையை உருவாக்குகிறது. ஏதோ காரணத்தால் வரிகள் மிக அதிகமாக விதிக்கப்பட்டிரும்போது, கிட்டத்தட்ட எல்லா மூலதனமும் அரசின் கைகளுக்குப் போய்விடுகிறது. எனவே, அரசாங்கம் மட்டுமே எல்லாத் தீர்மானங்களையும் மேற்கொள்ளுகிறது. ரொட்டியின் விலையையும், பேக்கரிகள் எங்கே இருக்க வேண்டும் என்பதையும், ஆராய்ச்சி மற்றும் வளர்ச்சிக்கான பட்ஜெட்டையும் அதுதான் தீர்மானிக்கிறது. கட்டுப்பாடற்ற ஒரு சந்தையில், ஒரு தரவுச் செயலர் ஒரு தவறான தீர்மானத்தை மேற்கொண்டால், மற்றவர்கள் அந்தத் தவறை மிக விரைவாகத் தங்களுக்கு சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளுவர். ஆனால், ஒரே ஒரு செயலர் கிட்டத்தட்ட எல்லாத் தீர்மானங்களையும் மேற்கொள்ளும்போது, அதனால் விளையக்கூடிய தவறுகள் மிக மோசமானவையாக இருக்கும்.

தனியொரு மையச் செயலி எல்லாத் தரவுகளையும் செயலாக்கம் செய்து, எல்லாத் தீர்மானங்களையும் மேற்கொள்ளுகின்ற இந்த அசாதாரணமான சூழ்நிலை கம்யூனிசவாதம் என்று அழைக்கப்படுகிறது. ஒரு கம்யூனிசவாதப் பொருளாதாரத்தில் மக்கள் தங்கள் திறன்களுக்கு ஏற்ப வேலை செய்கின்றனர், தங்கள் தேவைகளுக்கு ஏற்பப் பெறுகின்றனர். வேறு வார்த்தைகளில்

கூறினால், அரசாங்கம் உங்களுடைய லாபத்தில் 100 சதவீதத்தை எடுத்துக் கொண்டு, உங்களுக்கு என்ன தேவை என்பதைத் தானே தீர்மானித்து, பிறகு அத்தேவைகளை நிறைவேற்றுகிறது. இந்தத் திட்டத்தை எந்தவொரு நாடும் அளவுக்கு மீறிச் செயல்படுத்தவில்லை என்றாலும், சோவியத் ஒன்றியமும் அதன் முன்னாள் உறுப்பினர் நாடுகளும் தங்களால் முடிந்த அளவுக்கு அதைத் தீவிரமாகச் செயல்படுத்தின. பகிர்வுத் தரவுச் செயலாக்கக் கொள்கையைக் கைவிட்டுவிட்டு, ஒரு மையத் தரவுச் செயலாக்க அமைப்புமுறையை அவர்கள் தேர்ந்தெடுத்தனர். சோவியத் ஒன்றியம் நெடுகிலுமிருந்து அனைத்துத் தகவல்களும் மாஸ்கோவில் இருந்த ஒரு மைய இடத்திற்குப் பாய்ந்தன. அந்த இடத்தில்தான் முக்கியத் தீர்மானங்கள் அனைத்தும் மேற்கொள்ளப்பட்டன. உற்பத்தியாளர்களாலும் நுகர்வோராலும் தங்களுக்கிடையே நேரடியாகத் தகவல் பரிமாற்றம் மேற்கொள்ள முடியவில்லை. அவர்கள் அரசின் உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டியிருந்தது.


படம் **49: 1963**ல் மாஸ்கோவில் சோவியத் தலைமைத்துவம்**:** மையத் தரவுச் செயலாக்கம்

எடுத்துக்காட்டாக, எல்லாக் கடைகளிலும் ரொட்டியின் விலை துல்லியமாக இரண்டு ரூபிள்களும் நான்கு கோபெக்குகளும் மட்டுமே இருக்க வேண்டும் என்றும், ஒடெஸா ஒப்லாஸ்ட் என்ற பிராந்தியத்தில் உள்ள ஒரு குறிப்பிட்டக் 'கோல்கோஸ்' (கூட்டுப் பண்ணை), கோதுமைகளைப் பயிரிடுவதை நிறுத்திவிட்டுக் கோழிகளை வளர்க்கத் தொடங்க வேண்டும் என்றும், மாஸ்கோவில் உள்ள 'ரெட் அக்டோபர் பேக்கரி' தினமும் துல்லியமாக 35 லட்சம் ரொட்டிகளை மட்டுமே தயாரிக்க வேண்டும் என்றும் சோவியத் பொருளாதார அமைச்சகம் தீர்மானிக்கக்கூடும். இதற்கிடையே, சோவியத் உயிர்தொழில்நுட்பப் பரிசோதனைக்கூடங்கள் அனைத்தும் லெனின் வேளாண் அறிவியல் மையத்தின் தலைவராக இருந்த டுரோஃபிம் லைசென்கோவின் கோட்பாடுகளைக் கடைபிடித்தாக வேண்டும் என்று சோவியத் அறிவியல் அமைச்சகம் அவற்றைக் கட்டாயப்படுத்தியது. லைசென்கோ

ஒரு தவறான காரணத்திற்காகப் பிரபலமானவர். தன்னுடைய காலகட்டத்தில் ஆதிக்கம் செலுத்திய மரபணுக் கோட்பாடுகளை அவர் நிராகரித்தார். ஓர் உயிரினம் தன்னுடைய வாழ்நாளின்போது ஏதேனும் புதிய பண்புநலன் கைவரப் பெற்றால், அது அதன் சந்ததியினருக்கு நேரடியாகப் போய்ச் சேரும் என்று அவர் வலியுறுத்தினார். இந்த யோசனை டார்வினின் கோட்பாட்டுடன் முரண்பட்டு நின்றது, ஆனால் கம்யூனிசவாதக் கல்விக் கொள்கைகளுடன் இது கச்சிதமாகப் பொருந்தியது. அதாவது, குளிர்காலத்தைத் தாக்குப்பிடிப்பதற்கு கோதுமைப் பயிர்களுக்குப் பயிற்சியளித்தால், அவற்றின் சந்ததியும் குளிர்காலத்தைத் தாக்குப்பிடிக்கும் என்று லைசென்கோ வலியுறுத்தினார். அதன்படி, கோடிக்கணக்கான புரட்சிகரமான கோதுமைத் தாவரங்களை சைபீரியாவுக்கு அவர் அனுப்பி வைத்தார். விரைவில், சோவியத் ஒன்றியம் அமெரிக்காவிலிருந்து மேன்மேலும் அதிக அளவில் கோதுமையை இறக்குமதி செய்யும் கட்டாயத்திற்கு ஆளாகியது.




படம் **50:** சிக்காகோ பங்குச் சந்தையில் குழப்பம் பகிர்வுத் தரவுச் செயலாக்கம்

முதலாளித்துவத்தால் கம்யூனிசவாதத்தைத் தோற்கடிக்க முடிந்ததற்குக் காரணம் அது கம்யூனிசவாதத்தைவிட அதிக அறநெறி சார்ந்த ஒன்றாக இருந்ததாலோ, தனிநபர் சுதந்திரம் புனிதமானது என்பதாலோ, அல்லது மத நம்பிக்கையற்றக் கம்யூனிசவாதிகள்மீது கடவுள் கோபம் கொண்டதாலோ அல்ல. மாறாக, பகிர்வுத் தரவுச் செயலாக்கம் மையத் தரவுச் செயலாக்கத்தைவிட அதிகச் சிறப்பாக இருந்ததுதான் (குறைந்தபட்சம், தொழில்நுட்ப மாற்றம் துரிதமாக நடைபெற்றுக் கொண்டிருக்கின்ற காலகட்டங்களில்) பனிப் போரில்

முதலாளித்துவம் வெற்றி பெறக் காரணமாக அமைந்தது. இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வேகமாக மாறிக் கொண்டிருந்த உலகத்தைக் கம்யூனிசவாதக் கட்சியின் மைய ஆணையத்தால் கையாள முடியவில்லை. எல்லாத் தரவுகளும் ஒரு ரகசியப் பாதாள அறையில் சேகரித்து வைக்கப்படும்போதும், முதியோர் அடங்கிய தனியொரு குழு மட்டுமே எல்லாத் தீர்மானங்களையும் மேற்கொள்ளும்போதும், வண்டி நிறைய அணுகுண்டுகளை வேண்டுமானால் அவர்களால் தயாரிக்க முடியும். ஆனால், ஓர் ஆப்பிள் நிறுவனத்தையோ அல்லது ஒரு விக்கிப்பீடியாவையோ அவர்களால் உருவாக்க முடியாது.

சோவியத் பொருளாதாரத்திற்குப் புத்துயிர் ஊட்டுவதற்காக மிக்கெல் கோர்பசெவ் தன்னுடைய தலைமை அதிகாரிகளில் ஒருவரை லண்டனுக்கு அனுப்பி வைத்து, தாட்சர்வாதம் என்பது உண்மையிலேயே எதைப் பற்றியது என்பதையும், ஒரு முதலாளித்துவ அமைப்புமுறை உண்மையிலேயே எவ்வாறு செயல்பட்டது என்பதையும் தெரிந்து கொண்டு வரும்படி கூறியது பற்றிய ஒரு கதை இருக்கிறது (பெரும்பாலான சுவாரசியமான கதைகளைப்போலவே இதுவும் ஒரு கட்டுக்கதையாக இருக்கக்கூடும்). இங்கிலாந்து அரசு அதிகாரிகள் அந்த சோவியத் அதிகாரிக்கு லண்டன் நகரைச் சுற்றிக் காட்டினர். லண்டன் பங்குச் சந்தை, லண்டன் பொருளாதாரப் பள்ளி போன்ற இடங்களுக்கு அவர்கள் அவரைக் கூட்டிச் சென்றனர். அவர் அங்கு வங்கி மேலாளர்களுடனும் தொழிலதிபர்களுடனும் பேராசிரியர்களுடனும் நீண்ட உரையாடல்களில் ஈடுபட்டார். பல மணிநேரத்திற்குப் பிறகு, அவர் அந்த லண்டன் அதிகாரிகளிடம், “இந்தச் சிக்கலான பொருளாதாரக் கோட்பாடுகளையெல்லாம் விட்டுத்தள்ளுங்கள். இன்று முழுவதும் நாம் லண்டன் நகரைச் சுற்றி வந்துள்ளோம். ஒரு விஷயம் எனக்குப் புரியவில்லை. மாஸ்கோவில் எங்களுடைய ரொட்டி விநியோக அமைப்புமுறையை அறிவார்ந்த அதிகாரிகள் நிர்வகித்துக் கொண்டிருக்கின்றனர். ஆனாலும் ரொட்டிக்காக அனைத்து பேக்கரிகளிலும் மளிகைக் கடைகளிலும் நீண்ட வரிசைகளில் மக்கள் எப்போதும் காத்திருக்க வேண்டியுள்ளது. இங்கே லண்டனில் கோடிக்கணக்கான மக்கள் வாழுகின்றனர். நாம் இன்று பல கடைகள் மற்றும் பேரங்காடிகள் வழியாகப் பயணித்துள்ளோம். ஆனாலும், ரொட்டிக்காக எந்தவொரு பேக்கரியிலும் யாரும் எந்த வரிசையிலும் நின்று நான் பார்க்கவில்லை. லண்டனுக்கு ரொட்டிகளை விநியோகம் செய்வதற்கு யார் பொறுப்போ, அவரிடம் என்னை அழைத்துச் செல்லுங்கள். நான் அவருடைய ரகசியத்தைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்,” என்று வினவினார்.

அந்த அதிகாரிகள் ஒரு கணம் யோசித்துவிட்டு, “லண்டனுக்கு ரொட்டிகளை விநியோகிப்பதற்கான பொறுப்பு எந்தவொரு குறிப்பிட்ட நபருக்கும் வழங்கப்படவில்லை,” என்று பதிலளித்தனர்.

வெற்றிக்கான முதலாளித்துவ ரகசியம் அதுதான். லண்டனின் ரொட்டி விநியோகத்தைப் பற்றிய அனைத்துத் தரவுகளும் எந்தவொரு மையச் செயலாக்க அமைப்பின் தனியுரிமையாகவும் இல்லை. அதாவது, எந்தவொரு மையச் செயலாக்க அமைப்பும் அத்தரவுகள்மீது ஏகபோக உரிமை கொண்டாடுவதில்லை. கோடிக்கணக்கான நுகர்வோர் மற்றும் உற்பத்தியாளர்களுக்கு இடையேயும், பேக்கரிக்காரர்கள் மற்றும் தொழிலதிபர்களுக்கு இடையேயும், விவசாயிகள் மற்றும் அறிவியலறிஞர்களுக்கு இடையேயும் தகவல்கள் சுதந்திரமாக வளைய வருகின்றன. ரொட்டியின் விலையையும், ஒவ்வொரு நாளும் எவ்வளவு ரொட்டி தயாரிக்கப்பட வேண்டும் என்பதையும், எவற்றைப் பற்றிய ஆராய்ச்சிகளுக்கும் உருவாக்கத்திற்கும் முன்னுரிமை கொடுக்கப்பட வேண்டும் என்பதையும் சந்தைகள்தான் தீர்மானிக்கின்றன. அவை ஒரு மோசமான தீர்மானத்தை மேற்கொண்டால், விரைவில் அவை தம்மைத் திருத்திக் கொள்ளுகின்றன. பெருமுதலாளிகள் அப்படித்தான் நம்புகின்றனர். நம்முடைய தற்போதைய நோக்கங்களுக்கு இந்த முதலாளித்துவக் கோட்பாடு சரியானதா இல்லையா என்பது ஒரு பொருட்டல்ல. பொருளியலைத் தரவுச் செயலாக்கத்தின் அடிப்படையில் இக்கோட்பாடு புரிந்து கொள்ளுகிறது என்பதுதான் இங்கு முக்கியம்.

## எல்லா அதிகாரமும் எங்கே போயிற்று?

அரசியலறிஞர்களும் மனித அரசியல் கட்டமைப்புகளைத் தரவுச் செயலாக்க அமைப்புமுறைகளாக அதிக அளவில் அர்த்தப்படுத்தி வருகின்றனர். முதலாளித்துவத்தையும் கம்யூனிசவாதத்தையும்போலவே, ஜனநாயகங்களும் சர்வாதிகாரங்களும் அடிப்படையில் தகவல்களைச் சேகரிப்பதற்கும் ஆய்வு செய்வதற்கும் ஒன்றோடொன்று போட்டியிடுகின்ற இயங்குமுறைகளே. சர்வாதிகாரம் மையச் செயலாக்க வழிமுறைகளைப் பயன்படுத்துகிறது, ஜனநாயகம் பகிர்வுச் செயலாக்க வழிமுறைகளைப் பயன்படுத்த விரும்புகிறது. கடந்த பல ஆண்டுகளின் ஊடாக ஜனநாயகத்தின் கை ஓங்கி வந்துள்ளது. ஏனெனில், இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் நிலவிய தனித்துவமான சூழ்நிலைகளின்கீழ், பகிர்வுச் செயலாக்கம் அதிகச் சிறப்பாகப்

பலனளித்தது. இதற்கு நேர்மாறான சூழ்நிலைகளில் - எடுத்துக்காட்டாக, பண்டைய ரோமாபுரி சாம்ராஜ்ஜியத்தில் நிலவிய சூழ்நிலைகளில் - மையச் செயலாக்கம் கூடுதல் அனுகூலம் பயப்பதாக இருந்தது. அதனால்தான் ரோமானியக் குடியரசு வீழ்ந்து, அதிகாரம் செனட் மற்றும் சட்டசபைகளில் இருந்து தனியொரு எதேச்சாதிகாரியின் கைகளுக்கு மாறியது.

அப்படியானால், இருபத்தோராம் நூற்றாண்டில் தரவுச் செயலாக்கச் சூழ்நிலைகள் மீண்டும் மாறிக் கொண்டிருக்கின்ற நிலையில், ஜனநாயகம் வீழ்ச்சியடைந்து முற்றிலுமாக மறைந்து போகவும்கூடும் என்பதைத்தான் முந்தைய எடுத்துக்காட்டு சுட்டிக்காட்டுகிறது. தரவுகளின் அளவும் வேகமும் அதிகரித்துக் கொண்டே போகும்போது, பெரிதும் மதிக்கப்படுகின்ற அமைப்புகளான அரசியல் கட்சிகள், நாடாளுமன்றங்கள், தேர்தல்கள் போன்றவை வழக்கொழிந்து போகக்கூடும். அதற்குக் காரணம் அவை அறநெறிக்குப் புறம்பானவை என்பது அல்ல, மாறாக, தரவுகளைப் போதிய அளவு ஆற்றல்மிக்க வகையில் அவற்றால் கையாள முடியாது என்பதுதான். தொழில்நுட்பத்தைவிட அரசியல் அதிக வேகமாக நகர்ந்து கொண்டிருந்த ஒரு காலகட்டத்தில் இந்த அமைப்புகள் உருவாகி வளர்ந்தன. பத்தொன்பதாம் மற்றும் இருபதாம் நூற்றாண்டுகளில், தொழிற்புரட்சியானது, அரசியல்வாதிகளும் வாக்காளர்களும் எப்போதும் அதைவிட ஓரடி முன்னால் இருக்கக்கூடிய விதத்திலும், அதன் போக்கை முறைப்படுத்தக்கூடிய மற்றும் மாற்றியமைக்கக்கூடிய விதத்திலும் மெதுவாக வளர்ந்தது. நீராவிக் காலத்திலிருந்து அரசியலின் போக்கு அவ்வளவாக மாறியிருக்கவில்லை; ஆனால் தொழில்நுட்பம் முதல் கியரிலிருந்து நான்காவது கியருக்குத் தாவிவிட்டது. தொழில்நுட்பப் புரட்சிகள் இப்போது அரசியல் செயல்முறைகளைவிட அதிவேகத்தில் நிகழுகின்றன. இதனால், கட்டுப்பாடு நாடாளுமன்ற உறுப்பினர்களின் கைகளிலிருந்தும் வாக்காளர்களின் கைகளிலிருந்தும் நழுவிக் கொண்டிருக்கிறது.

இணையத்தின் எழுச்சி இனி வரவிருக்கும் விஷயங்களைப் பற்றிய ஒரு வெள்ளோட்டத்தை நமக்குக் கொடுக்கிறது. இணையவெளி இன்று நம்முடைய அன்றாட வாழ்க்கை, நம்முடைய பொருளாதாரம், மற்றும் நம்முடைய பாதுகாப்பின் இன்றியமையாத ஒரு பகுதியாக ஆகியுள்ளது. ஆனால், இறையாண்மை, எல்லைகள், தனிநபர் அந்தரங்க உரிமை, பாதுகாப்பு போன்ற பாரம்பரியமான அரசியல் விவகாரங்கள் வலைப்பக்க வடிவமைப்பில் உள்ளடங்கியுள்ளபோதிலும், மாற்று வலைப்பக்க வடிவமைப்புகளுக்கு இடையேயான முக்கியமான

தேர்ந்தெடுப்புகள் ஒரு ஜனநாயகரீதியான அரசியல் செயல்முறைக்கு உட்படுத்தப்படவில்லை. இணையவெளியின் வடிவம் எப்படி இருக்க வேண்டும் என்பது தொடர்பாக நீங்கள் வாக்களித்தீர்களா? வலைப்பக்க வடிவமைப்பாளர்கள் மேற்கொள்ளுகின்ற தீர்மானங்கள் பற்றிப் பொதுமக்களுக்கு எதுவும் தெரிவதில்லை. அப்படியானால், இன்று இணையத்தளம் என்பது அரசு இறையாண்மையைத் தூக்கியெறிகின்ற, எல்லைகளை உதாசீனப்படுத்துகின்ற, தனிநபர் அந்தரங்க உரிமைகளை ரத்து செய்கின்ற, ஒரு சுதந்திரமான மற்றும் சட்ட ஒழுங்கற்றப் பகுதி என்று அர்த்தமாகிறது. எதுவொன்றாலும் எதிர்க்கப்பட முடியாத ஒரு மிகப் பெரிய சர்வதேச ஆபத்தாக அது உருவாகியுள்ளது. பத்து ஆண்டுகளுக்கு முன்பு ஒரு தொலைக்கண்டுணர்வியின் பார்வைக்குக்கூடப் புலப்படாத ஒன்றாக இருந்த இணையத்தளம், 2001ம் ஆண்டு செப்டம்பர் 11ம் நாளன்று அமெரிக்காவில் நிகழ்த்தப்பட்டத் தீவிரவாதத் தாக்குதலைப் போன்ற இன்னொரு தாக்குதல் இணையத்தில் நடைபெறக்கூடும் என்று அதிகாரிகள் கணிக்கும் அளவுக்கு ஓர் ஆபத்தான இடமாக ஆகியுள்ளது.

இதன் விளைவாக, இணையத்தளத்தின் கட்டமைப்பை முழுவதுமாக மாற்றியமைப்பது பற்றி அரசாங்கங்களும் லாப நோக்கற்ற நிறுவனங்களும் தீவிரமாக விவாதிக்கின்றன. ஆனால், ஏற்கனவே நடைமுறையில் இருக்கின்ற ஓர் அமைப்புமுறையை மாற்றுவது, துவக்கத்தில் அதை மாற்றுவதைவிட மிகவும் கடினமானது. மேலும், சிக்கலான அரசுக் கட்டுப்பாடுகள் இணையத்தளத்தை முறைப்படுத்துவதைப் பற்றி ஒரு தீர்மானத்தை எட்டுவதற்கு உள்ளாக, இணையத்தளம் பத்து மடங்கு மாறியிருக்கும். அரசு ஆமையால் தொழில்நுட்ப முயலுக்கு ஈடு கொடுக்க முடியாது. ஏனெனில், அது தரவுகளால் திக்குமுக்காடிப் போயுள்ளது. அமெரிக்க தேசியப் பாதுகாப்பு அமைப்பு நம்முடைய ஒவ்வொரு வார்த்தையையும் வேவு பார்க்கக்கூடும், ஆனால் அமெரிக்க வெளியுறவுக் கொள்கையின் தொடர்ச்சியான தோல்விகளை வைத்துப் பார்க்கும்போது, இவ்வளவு தரவுகளையும் வைத்துக் கொண்டு என்ன செய்வது என்பது பற்றி வாஷிங்டனில் உள்ள யாருக்கும் எதுவும் தெரியவில்லை என்பதுதான் உண்மை. உலகில் என்ன நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பது பற்றி நவீன அமெரிக்கா அறிந்து வைத்துள்ள தகவல்கள் அளவுக்கு வரலாற்றில் இதுவரை எந்தவோர் அரசாங்கமும் அறிந்து வைத்திருக்கவில்லை. ஆனால், நவீன அமெரிக்காவைப்போல விஷயங்களை இவ்வளவு சிக்கலாக்குவதிலும் வெகுசில அரசாங்கங்களே வெற்றி கண்டுள்ளன. சீட்டு விளையாட்டு ஒன்றில்,

எதிராளியிடம் என்னென்ன சீட்டுக்கள் இருக்கின்றன என்று தெரிந்திருந்தும் ஒவ்வொரு சுற்றாகத் தோற்கின்ற ஒருவரைப் போன்றது இது.

இனி வரும் ஆண்டுகளில் இணையத்தளம் போன்ற புரட்சிகளை அதிக அளவில் நாம் பார்க்கக்கூடும். அவற்றில் தொழில்நுட்பம் அரசியலைப் பின்னுக்குத் தள்ளிவிட்டுத் தான் முன்னிலை வகிக்கும். செயற்கை நுண்ணறிவும் உயிர்தொழில்நுட்பமும் நம்முடைய சமுதாயங்களையும் பொருளாதாரங்களையும் (நம்முடைய உடல்களையும் மனங்களையும்கூட) விரைவில் செப்பனிடக்கூடும். ஆனால், அவை தற்போதைய அரசியல் தொலைக்கண்டுணர்வியில் இடம்பெற்றுள்ள ஒரு சிறு புள்ளி மட்டுமே. இன்றைய காலகட்டத்திய ஜனநாயகக் கட்டமைப்புகளால் பொருத்தமான தரவுகளை வேகமாகச் சேகரித்துச் செயலாக்கம் செய்ய முடியாது. அதோடு, பொருத்தமான அபிப்பிராயங்களை உருவாக்கத் தேவையான அளவுக்குப் பெரும்பாலான வாக்காளர்களுக்கு உயிரியலையும் சைபர்னெட்டிக்ஸையும் பற்றிய புரிதல் இல்லை. எனவே, பாரம்பரிய ஜனநாயக அரசியல், நடைமுறை நிகழ்வுகள்மீதான தன்னுடைய கட்டுப்பாட்டை இழந்து கொண்டிருக்கிறது, எதிர்காலத்தைப் பற்றிய அர்த்தமுள்ள முன்னோக்குகளை நமக்கு வழங்கத் தவறிக் கொண்டிருக்கிறது.

ஜனநாயக இயங்குமுறை தங்களுக்கு சக்தியையும் வலிமையையும் கூட்டுவதை நிறுத்திவிட்டது என்பதை சாதாரண வாக்காளர்கள் உணர்ந்து கொள்ளத் தொடங்கியுள்ளனர். ஒட்டுமொத்த உலகமும் மாறிக் கொண்டிருக்கிறது, ஆனால் அது எப்படி மாறிக் கொண்டிருக்கிறது அல்லது ஏன் மாறிக் கொண்டிருக்கிறது என்பது அவர்களுக்குப் புரியவில்லை. அதிகாரம் அவர்களிடமிருந்து இடம்பெயர்ந்து கொண்டிருக்கிறது, ஆனால் அது பறி போயுள்ளது என்பது அவர்களுக்கு உறுதியாகத் தெரியவில்லை. பிரிட்டனில், அதிகாரம் ஐரோப்பிய ஒன்றியத்தின் கைகளுக்கு மாறிச் சென்றிருக்கக்கூடும் என்று மக்கள் கற்பனை செய்வதால், ஐரோப்பிய ஒன்றியத்திலிருந்து பிரிட்டன் பிரிந்து போவதற்கு சாதகமாக அவர்கள் வாக்களிக்கின்றனர். அமெரிக்காவில், 'அரசியல் அமைப்புமுறையைத் தூக்கிப் பிடிக்கும் அரசுமுறை' எல்லா அதிகாரத்தையும் ஏகபோக உரிமை கொண்டாடுவதாக வாக்காளர்கள் கற்பனை செய்வதால், பெர்னி சேன்டர்ஸ், டொனால்டு டிரம்ப் போன்ற 'அரசுமுறைக்கு எதிரான' வேட்பாளர்களை அவர்கள் ஆதரிக்கின்றனர். ஆனால் இதில் வருத்தமான விஷயம் என்னவென்றால், அதிகாரம் முழுவதும் எங்கே

போனது என்பது யாருக்கும் தெரியாது. பிரிட்டன் ஐரோப்பிய ஒன்றியத்திலிருந்து விலகினாலும். டிரம்ப் அமெரிக்க அதிபராகி வெள்ளை மாளிகையில் குடியேறினாலும், அதிகாரம் மட்டும் சாதாரண வாக்காளர்களின் கைகளுக்கு நிச்சயமாகத் திரும்பி வராது.

ஆனால் அதற்காக, இருபதாம் நூற்றாண்டில் நிலவியது போன்ற சர்வாதிகார ஆட்சிமுறைக்கு நாம் திரும்பிப் போய்விடுவோம் என்று அர்த்தமில்லை. எதேச்சாதிகார ஆட்சிகள்கூடத் தொழில்நுட்ப வளர்ச்சியின் அதிவேகத்திற்கும் தரவோட்டத்தின் வேகம் மற்றும் அளவுக்கும் ஈடு கொடுக்க முடியாமல் திணறிப் போயுள்ளதுபோலத் தெரிகிறது. இருபதாம் நூற்றாண்டில், சர்வாதிகாரிகளிடம் எதிர்காலத்தைப் பற்றிய பிரம்மாண்டமான முன்னோக்குகள் இருந்தன. பழைய உலகத்தை முற்றிலுமாக அழித்துவிட்டு, அதனிடத்தில் ஒரு புதிய உலகை உருவாக்குவதில் கம்யூனிசவாதிகளும் பாசிசவாதிகளும் தீவிரமாக இருந்தனர். லெனின், ஹிட்லர், மாசேதுங் ஆகியோரைப் பற்றி நீங்கள் என்ன நினைத்தாலும் சரி, அவர்களிடம் முன்னோக்கு இருக்கவில்லை என்று உங்களால் அவர்கள்மீது பழி சுமத்த முடியாது. இன்று, அதிக பிரம்மாண்டமான முன்னோக்குகளை நனவாக்குவதை நோக்கிச் செயல்படுவதற்கான ஒரு வாய்ப்பு அனைத்துத் தலைவர்களுக்கும் இருக்கிறது. நீராவி எஞ்சின்கள் மற்றும் தட்டச்சு இயந்திரங்களின் உதவியுடன் கம்யூனிசவாதிகளும் நாஜிக்களும் ஒரு புதிய சமுதாயத்தையும் ஒரு புதிய மனிதனையும் உருவாக்க முயற்சித்தனர், ஆனால் இன்றைய தீர்க்கதரிசிகள் அதற்கு உயிர்தொழில்நுட்பத்தையும் அதிதிறன் கணினிகளையும் சார்ந்திருக்கின்றனர்.

அறிவியல் புனைகதைத் திரைப்படங்களில் ஹிட்லரை ஒத்த அரசியல்வாதிகள் இப்படிப்பட்டப் புதிய தொழில்நுட்பங்களை வேகமாகக் கைவசப்படுத்தி ஏதோ ஓர் அரசியல் கொள்கையைத் தூக்கி நிறுத்துவதற்காக அவற்றைப் பயன்படுத்துகின்றனர். ஆனால் இருபத்தோராம் நூற்றாண்டில், ரஷ்யா, ஈரான், வடகொரியா போன்ற எதேச்சாதிகார நாடுகளில்கூட, உண்மையான அரசியல்வாதிகள் ஹாலிவுட் திரைப்படங்களில் வருகின்ற அரசியல்வாதிகளிடமிருந்து முற்றிலும் வேறுபட்டுள்ளனர். அவர்கள் எந்தவொரு துணிச்சலான புதிய உலகையும் உருவாக்கத் திட்டமிடுவதுபோலத் தெரியவில்லை. கிம் ஜாங்-உன், அலி கமேனி போன்றோரின் கனவுகள் அணுகுண்டுகளுக்கும் எறிகணைகளுக்கும் அப்பால் செல்லுவதில்லை. அவர்கள் 1945ம் ஆண்டோடு நின்றுவிட்டனர். விளாடிமிர் புடினின் விருப்பங்கள் பழைய சோவியத் ஒன்றியத்தை மீண்டும்

உருவாக்குவதோடு, அல்லது பழைய ‘ஜார்’ பேரரசுகளை மீண்டும் தோற்றுவிப்பதோடு தம்மை மட்டுப்படுத்திக் கொள்ளுவதுபோலத் தெரிகிறது. இதற்கிடையே, அமெரிக்காவில் பீதியில் உறைந்து போயுள்ள குடியரசுக் கட்சியினர், அமெரிக்கச் சமுதாயத்தின் அடித்தளங்களை அழிப்பதற்கு சதித் திட்டங்கள் தீட்டுகின்ற இரக்கமற்ற ஒரு எதேச்சாதிகாரிதான் ஒபாமா என்று அவர்மீது குற்றம் சாட்டியுள்ளனர் - ஆனால் தட்டுத்தடுமாறி ஒரு சிறிய நலவாழ்வுச் சீர்திருத்தத்தைக் கொண்டுவந்தது மட்டுமே அவர் எட்டு ஆண்டுகள் அதிபராக இருந்தபோது சாதித்த ஒரே விஷயம். புதிய உலகங்களையும் புதிய மனிதர்களையும் உருவாக்குவது அவருடைய நோக்கத்திற்கு முற்றிலும் அப்பாற்பட்ட ஒன்றாக இருந்தது.

தொழில்நுட்பம் இப்போது மிக வேகமாக முன்னேறிக் கொண்டிருப்பதாலும், தங்களால் விரைவாகச் செயலாக்கம் செய்ய முடியாத அளவுக்குத் தங்களை வந்தடைகின்ற தரவுகளால் நாடாளுமன்றங்களும் சர்வாதிகாரிகளும் திணறிக் கொண்டிருப்பதாலும், இன்றைய அரசியல்வாதிகள் ஒரு நூற்றாண்டுக்கு முன்பு வாழ்ந்த தங்களுடைய அரசியல் மூதாதையரைவிட மிகமிகச் சிறிய அளவிலேயே சிந்திக்கின்றனர். அதன் விளைவாக, இருபத்தோராம் நூற்றாண்டின் ஆரம்பகால அரசியல், பிரம்மாண்டமான முன்னோக்குகள் எதுவும் இல்லாததாக இருக்கிறது. அரசாங்கம் வெறும் நிர்வாகமாக ஆகியுள்ளது. அது தன் நாட்டை நிர்வகிக்கிறதே அன்றி, அதை முன்னின்று வழிநடத்துவதில்லை. உரிய நேரத்தில் ஆசிரியர்களுக்குச் சம்பளம் கொடுக்கப்படுவதையும் கழிவுநீர்க் குழாய்கள் ஒழுங்காக வேலை செய்வதையும் உறுதி செய்வது மட்டுமே இப்போது அதன் வேலையாக இருக்கிறது, ஆனால் இருபது ஆண்டுகளில் நாடு எங்கே இருக்கும் என்பது பற்றி அதற்கு எந்த யோசனையும் இல்லை.

இது ஓரளவுக்கு நல்ல விஷயம்தான். இருபதாம் நூற்றாண்டின் மாபெரும் முன்னோக்குகள் நம்மை ஆஷ்விச் வதைமுகாம்களுக்கும் ஹிரோஷிமாவுக்கும் சீனாவின் ‘பெரும் முற்போக்குப் பாய்ச்சலுக்கும்’ இட்டுச் சென்றதை வைத்துப் பார்க்கும்போது, எந்த முன்னோக்கும் இல்லாத தன்னலவாத அதிகாரிகளின்கீழ் வாழுவது நமக்கு நல்லதாக இருக்கக்கூடும். அதே சமயம், கடவுளை ஒத்தத் தொழில்நுட்பத்தையும் தன்னலவாத அரசியலையும் ஒன்றுகலப்பது பேரழிவுக்கான ஓர் உறுதியான வழியாகும். முக்கியமான தீர்மானங்கள் அனைத்தையும் கட்டுப்பாடற்றச் சந்தையின் பொறுப்பில் விட்டுவிடுவது சிறந்தது என்று புது தாராளவாதப் பொருளியலாளர்களும் அரசியலறிஞர்களும்

வாதிடுகின்றனர். இதன் மூலம், அரசியல்வாதிகள் எந்த நடவடிக்கையும் எடுக்காமலும் அறியாமையிலும் இருப்பதற்கான ஒரு நல்ல சாக்குப்போக்கை அவர்கள் வழங்குகின்றனர். அவ்வாறு இருப்பதுதான் ஆழமான ஞானம் என்று இப்போது வேறு விதமாக அவற்றுக்கு அர்த்தம் கற்பிக்கப்படுகிறது. உலகத்தைத் தாங்கள் புரிந்து கொள்ளாமல் இருப்பதற்குக் காரணம், அதைப் புரிந்து கொள்ளுவதற்கான தேவை தங்களுக்கு இல்லை என்று நம்புவது அரசியல்வாதிகளுக்கு வசதியாக இருக்கிறது.

ஆனாலும், கடவுளை ஒத்தத் தொழில்நுட்பத்தையும் குறுகியகாலக் கண்ணோட்டத்தைக் கொண்ட அரசியலையும் ஒன்றுகலப்பதில் ஒரு குறைபாடும் உள்ளது. முன்னோக்கு இல்லாமை ஒருபோதும் ஓர் ஆசீர்வதமாக இருப்பதில்லை. அதேபோல, எல்லா முன்னோக்குகளும் மோசமானவையாக இருக்க வேண்டிய அவசியமும் இல்லை. இருபதாம் நூற்றாண்டில், நாஜிக்களின் முன்னோக்கு தானாகச் சிதையவில்லை. சோசியலிசம் மற்றும் தாராளவாதத்தின் சம அளவு பிரம்மாண்டமான முன்னோக்குகளால் அது தோற்கடிக்கப்பட்டது. கட்டுப்பாடற்றச் சந்தையின் அடித்தளமாக விளங்குகின்ற பொருளாதாரக் காரணிகளை நம்பி நம்முடைய எதிர்காலத்தை அவற்றின் கைகளில் ஒப்படைப்பது ஆபத்தானது. ஏனெனில், இக்காரணிகள், மனிதகுலத்திற்கும் இவ்வுலகிற்கும் எது நல்லதோ அதை விட்டுவிட்டு, சந்தைக்கு எது நல்லதோ அதை மட்டுமே செய்யும். சந்தையின் கைக்குப் பார்வை கிடையாது என்பதோடு, அது நம்முடைய பார்வைக்குப் புலப்படாததாகவும் இருக்கிறது. நம்முடைய எதிர்காலத்தை நாம் அதன் போக்கில் விட்டுவிட்டால், உலகம் வெப்பமயமாக ஆகிக் கொண்டுவருவது குறித்த அச்சுறுத்தல் பற்றியோ அல்லது செயற்கை நுண்ணறிவால் விளையக்கூடிய ஆபத்துக்கள் குறித்தோ அது நடவடிக்கை எடுக்கத் தவறக்கூடும்.

இதற்கு யாரோ ஒரு பொறுப்பாளி இருப்பதாகவும், இவ்வுலகத்தை ரகசியமாக இயக்கிக் கொண்டிருப்பது சக்திவாய்ந்த கோடீஸ்வரர்களை உள்ளடக்கிய ஒரு சிறு கும்பல்தானே அன்றி, ஜனநாயக அரசியல்வாதிகளோ அல்லது எதேச்சாதிகாரிகளோ அல்ல என்றும் சிலர் நம்புகின்றனர். ஆனால் இத்தகைய சதிக் கோட்பாடுகள் ஒருபோதும் பலனளிப்பதில்லை. ஏனெனில், அமைப்புமுறையின் சிக்கலை அவை குறைத்து மதிப்பிட்டுவிடுகின்றன. இவ்வுலகில் நிகழ்ந்து கொண்டிருக்கின்ற எல்லாவற்றையும், ஏதோ ஒரு பின்னறையில் உட்கார்ந்து சுருட்டுக்களைப் புகைத்துக் கொண்டும் ஸ்காட்ச் அருந்திக் கொண்டும் இருக்கின்ற ஒருசில கோடீஸ்வரர்களால்

புரிந்து கொள்ள முடியாது. எனவே, அவர்கள் அவற்றைக் கட்டுப்படுத்துவதைப் பற்றிய பேச்சுக்கே இடமில்லை. இன்றைய குழப்பமான உலகில் மனிதாபிமானமற்றக் கோடீஸ்வரர்களும் சக்தி வாய்ந்த சுயநலக் குழுக்களும் தழைத்துக் கொண்டிருப்பதற்குக் காரணம், வரைபடத்தை மற்றவர்களைவிடச் சிறப்பாக அவர்களால் படிக்க முடிகிறது என்பது அல்ல; மாறாக, அவர்கள் மிகக் குறுகிய இலக்குகளைக் கொண்டுள்ளதே அதற்குக் காரணம். ஒரு குழப்பமான அமைப்புமுறையில், குறுகியகாலக் கண்ணோட்டத்திற்குச் சில அனுகூலங்கள் உள்ளன. அந்தக் கோடீஸ்வரர்களுடைய சக்தி அவர்களுடைய இலக்குகளுக்கு நேர்விகிதத்தில் இருக்கிறது. உலகின் மாபெரும் பணக்காரத் தொழிலதிபர்கள் இன்னொரு நூறு கோடி டாலர்கள் பணத்தை உருவாக்க விரும்பும்போது, அதைச் சாதிப்பதற்கு அமைப்புமுறையை அவர்களால் மாற்றியமைக்க முடியும். இதற்கு நேர்மாறாக, சர்வதேச சமத்துவமின்மையைக் குறைக்கவோ அல்லது உலகம் வெப்பமயமாவதைத் தடுத்து நிறுத்தவோ அவர்கள் விரும்பினால்கூட, அவர்களால் அவற்றைச் செய்ய முடியாது. ஏனெனில், அமைப்புமுறை அதிகச் சிக்கலானதாக இருக்கிறது.

ஆனாலும் அதிகார வெற்றிடங்கள் நீண்டகாலம் நிலைப்பதில்லை. இருபத்தோராம் நூற்றாண்டில் பாரம்பரிய அரசியல் கட்டமைப்புகளால் அர்த்தமுள்ள முன்னோக்குகளை உருவாக்கப் போதிய வேகத்துடன் தரவுகளைச் செயலாக்கம் செய்ய முடியாமல் போனால், அப்போது புதிய மற்றும் அதிகச் செயற்திறன் கொண்ட கட்டமைப்புகள் உருவாகி அந்தப் பாரம்பரிய அரசியல் கட்டமைப்பின் இடத்தை எடுத்துக் கொள்ளும். இப்புதிய கட்டமைப்புகள் முந்தைய அனைத்து அரசியல் அமைப்புகளிலிருந்தும் முற்றிலும் வேறுபட்டிருக்கக்கூடும், அவை ஜனநாயகரீதியானவையாக இருந்தாலும் சரி அல்லது எதேச்சாதிகாரரீதியானவையாக இருந்தாலும் சரி. யார் இப்புதிய கட்டமைப்புகளைக் கட்டியெழுப்பி அவற்றைக் கட்டுப்படுத்துவார்கள் என்பதுதான் இங்குள்ள ஒரே கேள்வி. மனிதகுலத்திற்கு இது சாத்தியப்படாது எனும்போது, வேறு யாரேனும் இதை முயற்சித்துப் பார்க்க அது வாய்ப்புக் கொடுக்கக்கூடும்.

## வரலாறு ரத்தினச்சுருக்கமாக

ஒரு தரவுவாதியின் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, ஒட்டுமொத்த மனித இனத்தையும் தனியொரு தரவுச் செயலாக்க அமைப்புமுறையாக நாம் பார்க்கக்கூடும். அதில் தனிநபர்கள் அதன்

நுண்சில்லுகளாவர். அப்படியானால், ஒட்டுமொத்த வரலாறும் இந்த அமைப்புமுறையின் ஆற்றலையும் செயற்திறனையும் மேம்படுத்துவதற்கான ஒரு செயல்முறை என்று நாம் கருதலாம். பின்வரும் நான்கு அடிப்படை வழிகளில் அது இந்த அமைப்புமுறையை மேம்படுத்துகிறது:

**1.** செயலிகளின் எண்ணிக்கையை அதிகரித்தல்**:** ஒரு லட்சம் மக்களைக் கொண்ட ஒரு நகரத்தின் கணித்திறன், ஓராயிரம் மக்களைக் கொண்ட ஒரு கிராமத்தின் கணித்திறனைவிட அதிகம்.

**2.** செயலிகளின் வகைகளை அதிகரித்தல்: தரவுகளைக் கணக்கிடுவதற்கும் அவற்றை ஆய்வு செய்வதற்கும் வெவ்வேறு செயலிகள் பல்வேறுபட்ட வழிகளைப் பயன்படுத்தக்கூடும். எனவே, தனியொரு அமைப்புமுறையில் பல்வேறு வகைப்பட்டச் செயலிகளைப் பயன்படுத்துவது அதன் இயங்காற்றலையும் படைப்புத்திறனையும் அதிகரிக்கிறது. ஒரு விவசாயிக்கும் ஒரு மதகுருவுக்கும் ஒரு மருத்துவருக்கும் இடையேயான ஓர் உரையாடல் வாயிலாகத் தோன்றக்கூடிய புதுமையான யோசனைகள், மூன்று வேட்டையாடிகளுக்கு இடையேயான ஓர் உரையாடலிலிருந்து ஒருபோதும் முளைக்காது.

**3.** செயலிகளுக்கு இடையேயான இணைப்புகளின் எண்ணிக்கையை அதிகரித்தல்**:** செயலிகள் ஒன்றோடொன்று மோசமாக இணைக்கப்பட்டு இருக்கும் பட்சத்தில், அவற்றின் எண்ணிக்கையையும் வகைகளையும் அதிகரிப்பதில் எந்த அர்த்தமும் இல்லை. பத்து நகரங்களை இணைக்கின்ற ஒரு வர்த்தகப் பிணையம் விளைவிக்கக்கூடிய பொருளாதாரரீதியான, தொழில்நுட்பரீதியான மற்றும் சமூகரீதியான புதுமைகள், பத்துத் தனித்தனி நகரங்கள் உருவாக்கக்கூடியவற்றைவிட மிக அதிகமாக இருக்கும்.

**4.** ஏற்கனவே இருக்கின்ற இணைப்புகளின் வழியாகத் தரவுகள் பாய்ந்தோடுவதற்கான சுதந்திரத்தை அதிகரித்தல்**:** தரவுகள் சுதந்திரமாகச் சுற்றி வருவதற்கு வழி இல்லாவிட்டால், செயலிகளை இணைப்பதால் எந்தப் பயனும் இல்லை. சாலைகள் நெடுகிலும் திருடர்கள் பதுங்கியிருந்தாலோ, அல்லது எதற்கெடுத்தாலும் பயப்படுகின்ற ஒரு எதேச்சாதிகாரி தன் நாட்டிலுள்ள வணிகர்களும் பயணியரும் தங்கள் விருப்பம்போல நடமாடுவதற்கு அனுமதிக்காவிட்டாலோ, பத்து நகரங்களுக்கு இடையே வெறுமனே சாலைகளை அமைப்பதால் அவ்வளவாக எந்தப் பயனும் விளையாது.

இந்த நான்கு வழிமுறைகளும் பல சமயங்களில் ஒன்றுக்கொன்று முரண்படுகின்றன. செயலிகளின் எண்ணிக்கையும் வகைகளும்

எவ்வளவு அதிகமாக இருக்கின்றனவோ, அவற்றை எந்தச் சிக்கலுமின்றி இணைப்பது அவ்வளவு அதிகக் கடினமாக இருக்கிறது. எனவே, 'சேப்பியன்ஸ் தரவுச் செயலாக்க அமைப்புமுறை'யின் உருவாக்கம் நான்கு முக்கிய நிலைகளின் ஊடாக நிகழ்ந்தது. ஒவ்வொரு நிலையும் ஒரு வித்தியாசமான வழிமுறையை வலியுறுத்தியது.

முதல் நிலை அறிவுப் புரட்சியோடு தொடங்கியது. அப்புரட்சி, அதிக எண்ணிக்கையிலான சேப்பியன்ஸைத் தனியொரு தரவுச் செயலாக்கப் பிணையத்திற்குள் இணைப்பதைச் சாத்தியமாக்கியது. இது பிற மனித இனங்களுக்கும் விலங்கினங்களுக்கும் கிடைக்காத ஓர் இன்றியமையாத அனுகூலத்தை சேப்பியன்ஸுக்குக் கொடுத்தது. ஒரு பிணையத்தில் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையிலான நியான்டர்தால்களையோ, சிம்பன்சிகளையோ, அல்லது யானைகளையோதான் இணைக்க முடியும் என்று அவற்றுக்கு ஒரு கண்டிப்பான எல்லை இருக்கிறது. ஆனால், சேப்பியன்ஸின் எண்ணிக்கைக்கு எந்த வரம்பும் இல்லை.

சேப்பியன்ஸ் இவ்வுலகம் நெடுகிலும் பரவுவதற்குத் தங்களுடைய இந்த அனுகூலத்தைப் பயன்படுத்திக் கொண்டனர். ஆனால், அவர்கள் பல்வேறு நிலங்களுக்கும் தட்பவெப்பநிலைகளுக்கும் பரவியபோது, தங்களுக்கு இடையேயான பிணைப்பை இழந்து, பல்வேறுபட்டக் கலாச்சார மாற்றங்களுக்கு உட்பட்டனர். அதன் விளைவாக, பல்வேறு வகையான மனிதக் கலாச்சாரங்கள் உருவாயின. அவை ஒவ்வொன்றும் தமக்கென்று ஒரு தனித்துவமான வாழ்க்கைமுறையையும், நடத்தைமுறைகளையும், உலகக் கண்ணோட்டத்தையும் கொண்டிருந்தன. எனவே, வரலாற்றின் முதற்கட்டத்தில் மனிதச் செயலிகளின் எண்ணிக்கையும் வகைகளும் அதிகரித்தன. ஆனால் அதற்கு விலையாக, மனிதர்கள் தங்களுக்கு இடையேயான பிணைப்பை இழக்க வேண்டியதாயிற்று. 70,000 ஆண்டுகளுக்கு முன்பு இருந்த சேப்பியன்ஸின் எண்ணிக்கையைவிட, 20,000 ஆண்டுகளுக்கு முன்பு சேப்பியன்ஸின் எண்ணிக்கை அதிகமாக இருந்தது. ஐரோப்பாவில் வாழ்ந்த சேப்பியன்ஸ் தகவல்களைச் செயலாக்கம் செய்த விதம், சீனாவில் வாழ்ந்த சேப்பியன்ஸின் செயலாக்க விதத்திலிருந்து வேறுபட்டிருந்தது. ஆனால், ஐரோப்பாவில் இருந்த மக்களுக்கும் சீனாவில் இருந்த மக்களுக்கும் இடையே எந்தத் தொடர்பும் இருக்கவில்லை. என்றேனும் ஒருநாள் எல்லா சேப்பியன்ஸும் ஒரே ஒரு தரவுச் செயலாக்கப் பிணைப்பின் ஒரு பகுதியாக இருப்பது முற்றிலும் சாத்தியமற்றதாக அன்று தோன்றியிருக்கக்கூடும்.

இரண்டாம் நிலை, வேளாண் புரட்சியோடு தொடங்கி, சுமார் 5,000

ஆண்டுகளுக்கு முன்பு எழுத்தும் பணமும் கண்டுபிடிக்கப்படும்வரை தொடர்ந்தது. வேளாண்மையானது மக்கட்தொகை வளர்ச்சியைத் துரிதப்படுத்தியதால் மனிதச் செயலிகளின் எண்ணிக்கை திடீரென்று உயர்ந்தது. அதே சமயத்தில், மக்கள் ஒருவருக்கொருவர் நெருக்கமாகக் கூடி வாழுவதை வேளாண்மை சாத்தியமாக்கியது. எனவே, மிக அதிக எண்ணிக்கையிலான செயலிகளை உள்ளடக்கிய அடர்த்தியான உள்ளூர்ப் பிணையங்கள் உருவாயின. அதோடு, பல்வேறு பிணையங்கள் ஒன்றோடொன்று கருத்துப் பரிமாறிக் கொள்ளுவதற்கும் வர்த்தகம் செய்து கொள்ளுவதற்கும் புதிய வெகுமதிகளையும் வாய்ப்புகளையும் வேளாண்மை உருவாக்கியது. எழுத்தும் பணமும் இல்லாததால், நகரங்களையோ, ராஜ்ஜியங்களையோ, அல்லது சாம்ராஜ்ஜியங்களையோ மனிதர்களால் நிர்மாணிக்க முடியவில்லை. மனிதகுலம் இன்னமும் எண்ணற்றச் சிறிய பழங்குடிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவை ஒவ்வொன்றும் தத்தம் சொந்த வாழ்க்கைமுறையையும் உலகக் கண்ணோட்டத்தையும் கொண்டிருந்தன. ஒட்டுமொத்த மனிதகுலத்தை ஒன்றிணைப்பதைப் பற்றிக் கற்பனை செய்யக்கூட முடியாத ஒரு நிலையாக அது இருந்தது.

சுமார் 5,000 ஆண்டுகளுக்கு முன்பு எழுத்து மற்றும் பணத்தின் கண்டுபிடிப்பு மூன்றாம் நிலையைத் துவக்கி வைத்தது. அறிவியல் புரட்சியின் துவக்கம்வரை அந்நிலை நீடித்தது. எழுத்து மற்றும் பணத்தின் காரணமாக மனித ஒத்துழைப்பு அதிகரித்தது. மனிதக் குழுக்கள் ஒன்றோடொன்று தொடர்பு கொண்டு, பிறகு ஒன்றிணைந்து நகரங்களையும் ராஜ்ஜியங்களையும் உருவாக்கின. பல்வேறு நகரங்களுக்கும் ராஜ்ஜியங்களுக்கும் இடையேயான அரசியல் தொடர்புகளும் வர்த்தகத் தொடர்புகளும்கூட நெருக்கமடைந்தன. நாணயம் அச்சிடுதல், பேரரசுகள், உலகளாவிய மதங்கள் ஆகியவை தோன்றிய காலகட்டமான கி.மு. முதலாம் புத்தாயிரம் ஆண்டிலிருந்து, ஒட்டுமொத்த உலகத்தை உள்ளடக்கக்கூடிய தனியொரு பிணையத்தை உருவாக்குவதைப் பற்றி மனிதர்கள் பிரக்ஞையோடு கனவு காணத் தொடங்கினர்.

இக்கனவு, வரலாற்றின் நான்காம் நிலையின்போது நனவாகியது. இந்தக் கடைசி நிலை 1492ம் ஆண்டையொட்டித் தொடங்கியது. நவீன காலகட்டத்தின் துவக்கத்தைச் சேர்ந்த ஆய்வாளர்களும் முற்றுகையாளர்களும் வணிகர்களும் இந்த ஒட்டுமொத்த உலகத்தையும் உள்ளடக்கிய முதல் மெல்லிய இழைகளைப் பின்னினர். நவீன காலகட்டத்தின் பிற்பகுதியில் இந்த இழைகள் மேன்மேலும் அதிக வலிமையடைந்தன, அதிக அடர்த்தியாயின. இதன் விளைவாக,

கொலம்பஸுடைய காலகட்டத்தின் சிலந்தி வலை இருபத்தோராம் நூற்றாண்டின் எஃகு மற்றும் அஸ்ஃபால்ட் வலையாக மாறியது. அதைவிட மிக முக்கியமாக, இந்த உலகளாவிய வலைப்பின்னலின் ஊடாகத் தகவல்கள் சுதந்திரமாக உலா வர அனுமதிக்கப்பட்டன. கொலம்பஸ் முதன்முதலாக யுரேசிய வலையை அமெரிக்க வலையோடு இணைத்தபோது, ஒவ்வோர் ஆண்டும் ஒருசில தரவுத் துகள்கள் மட்டுமே கடல் கடந்து சென்றன. கலாச்சாரரீதியான பாரபட்சங்கள், கண்டிப்பான தணிக்கைமுறை, அரசியல் அடக்குமுறை ஆகியவை அதை மட்டுப்படுத்தின. ஆனால் காலம் செல்லச் செல்ல, கட்டுப்பாடற்றச் சந்தையும், அறிவியல் சமூகமும், சட்டவிதிகளும், ஜனநாயகத்தின் பரவலும் சேர்ந்து தடைகளை உடைத்தெறிய உதவின. ஜனநாயகமும் கட்டுப்பாடற்றச் சந்தையும் வெற்றி பெற்றதற்குக் காரணம் அவை 'நல்லவையாக' இருந்ததுதான் என்று நாம் பொதுவாக நினைக்கிறோம். உண்மையில், உலகளாவிய தரவுச் செயலாக்க அமைப்புமுறையை அவை மேம்படுத்தியதால்தான் அவை வெற்றி பெற்றன.

எனவே, கடந்த 70,000 ஆண்டுகளின் ஊடாக மனிதகுலம் முதலில் பல இடங்களுக்கும் பரவியது, பிறகு தனித்துவமான குழுக்களாகப் பிரிந்தது, இறுதியில் மீண்டும் ஒன்றிணைந்தது. ஆனால் இந்த ஒருங்கிணைப்புச் செயல்முறை நம்மை மீண்டும் துவக்கத்திற்குக் கூட்டிச் செல்லவில்லை. வெவ்வேறு மனிதக் குழுக்கள் இன்று ஓர் உலகளாவிய கிராமமாக ஒன்றிணைந்தபோது, அவை ஒவ்வொன்றும் அத்தனை ஆண்டுகளாகச் சேகரித்தும் வளர்த்தும் வந்திருந்த தம்முடைய தனித்துவமான எண்ணங்களையும் கருவிகளையும் நடத்தைகளையும் உடன் கொண்டுவந்தன. நம்முடைய நவீன மளிகையறைகள் இப்போது மத்தியக் கிழக்கில் விளைந்த கோதுமையாலும், ஆன்டெஸ் பகுதியில் விளைந்த உருளைக்கிழங்குகளாலும் நியூ கினியின் சர்க்கரையாலும் எத்தியோப்பியக் காபியாலும் நிரப்பப்பட்டுள்ளன. அதேபோல, நம்முடைய மொழி, மதம், இசை, அரசியல் போன்றவையும் உலகெங்குமுள்ள பல குழுக்களின் சாயலில் இருக்கின்றன.

மனிதகுலம் உண்மையிலேயே தனியொரு தரவுச் செயலாக்க அமைப்புமுறை என்றால், அது எதை உருவாக்கிக் கொடுக்கிறது? 'அனைத்தும் பிணைக்கப்பட்ட இணைய உலகம்' என்று அழைக்கப்படுகின்ற ஒரு புதிய, அதிக ஆற்றல்வாய்ந்த தரவுச் செயலாக்க அமைப்புமுறையின் படைப்புதான் அதன் விளைவு என்று தரவுவாதிகள் கூறுவர். இது மெய்யாகிவிட்டால், ஹோமோ சேப்பியன்ஸ் முற்றிலுமாக மறைந்துவிடுவர்.

# தகவல்கள் சுதந்திரமாக உலா வர விரும்புகின்றன

முதலாளித்துவத்தைப்போலவே, தரவுவாதமும் ஒரு நடுநிலையான அறிவியல் கோட்பாடாகத்தான் தொடங்கியது. ஆனால் இப்போது, எது சரி, எது தவறு என்று தீர்மானிக்கின்ற ஒரு மதமாக அது மாறிக் கொண்டிருக்கிறது. 'தகவலோட்டம்'தான் இப்புதிய மதத்தின் உச்சகட்ட விழுமியமாகும். தகவல்களின் ஓட்டம்தான் வாழ்க்கை என்றால், வாழ்க்கை மகத்தானது என்று நாம் எண்ணினால், பிரபஞ்சத்தில் தகவலோட்டத்தை நாம் ஆழப்படுத்தவும் விரிவுபடுத்தவும் வேண்டியது அவசியமாகிறது. தரவுவாதத்தைப் பொருத்தவரை, மனித அனுபவங்கள் புனிதமானவை அல்ல, ஹோமோ சேப்பியன்ஸ் இனம் படைப்பின் உச்சமோ அல்லது எதிர்காலத்தில் தோன்ற வாய்ப்புள்ள ஹோமோ டியஸுக்கான ஒரு முன்னோடியோ அல்ல. மனிதர்கள் 'அனைத்தும் பிணைக்கப்பட்ட இணைய உலகத்தை' உருவாக்குவதற்கான வெறும் கருவிகள் மட்டுமே. இந்த இணைய உலகம் நம்முடைய பூமியிலிருந்து மெல்ல மெல்ல மற்ற இடங்களுக்குப் பரவி, இறுதியில் ஒட்டுமொத்த விண்மீன் மண்டலத்தையும் இந்த ஒட்டுமொத்தப் பிரபஞ்சத்தையும்கூட முழுவதுமாக ஆட்கொண்டுவிடும். இந்தப் பிரபஞ்சத் தரவுச் செயலாக்க அமைப்புமுறை கடவுளைப்போல இருக்கும். அது எல்லா இடங்களிலும் இருக்கும், எல்லாவற்றையும் கட்டுப்படுத்தும். மனிதர்கள் அதனோடு ஐக்கியமாவர். அது அவ்வாறுதான் நிகழ்ந்தாக வேண்டும்.

இக்கோட்பாடு பாரம்பரிய மத முன்னோக்குகளை நினைவுபடுத்துகிறது. பிரபஞ்ச ஆன்மாவான ஆத்மனோடு மனிதர்களால் ஐக்கியமாக முடியும், அவர்கள் ஐக்கியம் ஆகத்தான் வேண்டும் என்று இந்துக்கள் நம்புகின்றனர். புனிதர்கள் மரணமடைந்த பிறகு, கடவுளின் முடிவற்ற அருள் அவர்களை முழுவதுமாக ஆட்கொள்ளுகிறது என்றும், பாவிகள் கடவுளுடனான தொடர்பைத் தாங்களே துண்டித்துக் கொள்ளுகின்றனர் என்றும் கிறித்தவ மதம் நம்புகிறது. சிலிக்கான் பள்ளத்தாக்கில் உள்ள தரவுவாதத் தீர்க்கதரிசிகள் பாரம்பரியமாக மீட்பர்கள் பயன்படுத்திய வகையான வார்த்தைகளையும் வாக்கியங்களையும் பிரக்ஞையோடு பயன்படுத்துகின்றனர். எடுத்துக்காட்டாக, ரே கர்ஸ்வெல் எழுதிய, தீர்க்கதரிசனங்களை உள்ளடக்கிய நூலின் பெயர் 'த சிங்குலாரிட்டி இஸ் நியர்'. தூய யோவான் எனும் கிறித்தவத் தீர்க்கதரிசியின் முழக்கமான 'பரலோக ராஜ்ஜியம் நெருங்கிவிட்டது' என்ற தீர்க்கதரிசனத்தை அது எதிரொலித்தது.

ரத்தமும் சதையும் கொண்ட, என்றேனும் ஒரு நாள் மடியக்கூடிய

ஜீவன்களை இன்னும் வழிபடுகின்றவர்கள், காலாவதியாகிவிட்டத் தொழில்நுட்பங்களிடம் மிதமிஞ்சியப் பற்றுக் கொண்டிருக்கின்றனர் என்று தரவுவாதிகள் விளக்குகின்றனர். ஹோமோ சேப்பியன்ஸ் என்பது வழக்கொழிந்து போய்விட்ட ஒரு படிமுறைத் தீர்வு. கோழிகளைவிட மனிதர்கள் எந்த விதத்தில் சிறந்தவர்கள்? மனிதர்களிடம் தகவல்கள் அதிகச் சிக்கலான வடிவங்களில் பாய்ந்தோடுகின்றன, அவ்வளவுதான். மனிதர்கள் கோழிகளைவிட அதிகத் தரவுகளை உள்வாங்கிக் கொள்ளுகின்றனர், அதிகச் சிறப்பான படிமுறைத் தீர்வுகளைக் கொண்டு அத்தரவுகளைச் செயலாக்கம் செய்கின்றனர். (இதைப் புரியும்படி சொல்ல வேண்டுமென்றால், மனிதர்கள் அதிக ஆழமான உணர்ச்சிகளையும் மிக உயர்ந்த அறிவுத்திறனையும் கொண்டிருப்பவர்களாகக் கருதப்படுகின்றனர். ஆனால் தற்போதையை உயிரியல் கோட்பாடுகளின்படி, உணர்ச்சிகளும் அறிவும்கூட வெறும் படிமுறைத் தீர்வுகள்தான் என்பதை மறந்துவிடாதீர்கள்.) ஒரு மனிதனைவிட அதிகப்படியான தரவுகளைக் கையாளவும் அதிகச் செயற்திறனோடு செயலாக்கம் செய்யவும்கூடிய ஒரு தரவுச் செயலாக்க அமைப்புமுறையை நம்மால் உருவாக்க முடிந்தால், ஒரு மனிதன் எப்படி ஒரு கோழியைவிட அதிக மேன்மையானவனாக இருக்கிறானோ, அதேபோல அந்த அமைப்புமுறையும் ஒரு மனிதனைவிட அதிக மேன்மையானதாக இருக்காதா?

தரவுவாதம் வெற்றுத் தீர்க்கதரிசனங்களோடு நின்றுவிடுவதில்லை. பிற அனைத்து மதங்களையும்போலவே, அது நடைமுறைக் கட்டளைகளைக் கொண்டுள்ளது. முதலாவதாக, ஒரு தரவுவாதி மேன்மேலும் அதிகமான ஊடகங்களோடு தன்னைப் பிணைத்துக் கொள்ளுவதன் மூலமும் மேன்மேலும் அதிக அளவில் தகவல்களை உற்பத்தி செய்வதன் மூலமும் நுகருவதன் மூலமும் தரவோட்டத்தை உச்சபட்சமாக அதிகரித்தாக வேண்டும். வெற்றிகரமான பிற மதங்களைப்போலவே, தரவுவாதமும் தன்னைப் பரப்புவதில் மும்முரமாக ஈடுபட்டுள்ளது. எல்லோரையும் எல்லாவற்றையும் இணையத்தள உலகத்தோடு இணைப்பதுதான் அதன் இரண்டாவது கட்டளை. தங்களை அதனோடு இணைத்துக் கொள்ள விரும்பாத, அதன்மீது நம்பிக்கை இல்லாத நபர்களையும் அது விட்டுவைப்பதில்லை. மேலும், அது மனிதர்களை மட்டுமல்லாமல், தெருவிலுள்ள கார்கள், சமையலறைகளில் உள்ள குளிர்சாதனப் பெட்டிகள், கூண்டுகளில் உள்ள கோழிகள், காட்டிலுள்ள மரங்கள் என்று எல்லாவற்றையும் இணைக்கக் கடுமையாக முயற்சிக்கிறது.

உங்களுடைய குளிர்சாதனப் பெட்டி தன்னுடைய அடுக்கில் எத்தனை முட்டைகள் இருக்கின்றன என்பதைப் பார்த்துவிட்டு, எப்போது புதிய முட்டைகள் வேண்டும் என்று கோழிக் கூண்டுக்குத் தகவல் அனுப்பும். கார்கள் ஒன்றோடொன்று பேசிக் கொள்ளும். மரங்கள் தட்பவெப்பநிலை பற்றியும் கரியமில வாயு பற்றியும் தகவல் தெரிவிக்கும். பிரபஞ்சத்தின் எந்தவொரு பகுதியும் வாழ்க்கையெனும் மாபெரும் வலையில் இணைக்கப்படாமல் போய்விடக்கூடாது. தரவோட்டத்தைத் தடுப்பதுதான் மாபெரும் பாவமாக இருக்கும். மரணம் என்பது தகவலோட்டம் இல்லாத ஒரு நிலையே அன்றி வேறென்ன? எனவே, தகவல் சுதந்திரம்தான் மிக மேன்மையான விழுமியம் என்று தரவுவாதம் வலியுறுத்துகிறது.

மக்கள் அரிதாகவே முற்றிலும் புதியதொரு விழுமியத்தைக் கண்டுபிடிக்கின்றனர். அது கடைசியாகப் பதினெட்டாம் நூற்றாண்டில் நிகழ்ந்தது. மனித சுதந்திரம், மனித சமத்துவம், மனித சகோதரத்துவம் ஆகிய கொள்கைகளை போதனை செய்த மனிதவாதப் புரட்சியின் மலர்ச்சிதான் அது. 1789ம் ஆண்டிலிருந்து, எண்ணற்றப் போர்களும் புரட்சிகளும் கொந்தளிப்புகளும் நிகழ்ந்தபோதிலும், எந்தவொரு புதிய விழுமியத்தையும் மனிதர்கள் கண்டுபிடிக்கவில்லை. பின்னர் நிகழ்ந்த அனைத்துச் சண்டைகளும் போராட்டங்களும் அந்த மூன்று மனிதவாத விழுமியங்களின் பெயரிலோ அல்லது அவற்றைவிடப் பழமையான 'கடவுளுக்குக் கீழ்ப்படிதல்', 'நாட்டிற்கு சேவை செய்தல்' போன்றவற்றின் பெயரிலோதான் நிகழ்த்தப்பட்டன. 1789ம் ஆண்டுக்குப் பிறகு, தரவுவாதம் மட்டுமே 'தகவல் சுதந்திரம்' என்ற, உண்மையிலேயே புதுமையான விழுமியத்தை உருவாக்கிய முதல் இயக்கமாகும்.

தகவல் சுதந்திரத்தை நம்முடைய பழைய தாராளவாதக் கொள்கையான கருத்து சுதந்திரத்தோடு நாம் குழப்பிக் கொள்ளக்கூடாது. கருத்து சுதந்திரம் மனிதர்களுக்குக் கொடுக்கப்பட்டது. தாங்கள் விரும்பியதை சிந்திப்பதற்கும் பேசுவதற்குமான அவர்களுடைய உரிமை பாதுகாக்கப்பட்டது. அவர்கள் எதுவும் பேசாமல் வாயை மூடிக் கொள்ளுவதற்கும் தங்கள் எண்ணங்களைத் தங்களுடனேயே வைத்துக் கொள்ளுவதற்குமான உரிமையும் அதில் அடங்கும். தகவல் சுதந்திரம் இதற்கு நேரெதிரானது. அது மனிதர்களுக்குக் கொடுக்கப்படுவதில்லை, மாறாக, தகவல்களுக்குக் கொடுக்கப்படுகிறது. மேலும், புதுமையான இந்த விழுமியம் மனிதர்களுடைய பாரம்பரியக் கருத்து சுதந்திரத்தின்மீது ஓர் எதிர்மறையான தாக்கத்தை ஏற்படுத்தக்கூடும். அதாவது, சொந்தமாகத்

தரவுகளை வைத்திருப்பதற்கும் அவற்றின் ஓட்டத்தை மட்டுப்படுத்துவதற்கும் மனிதர்களுக்கு இருக்கின்ற உரிமையோடு ஒப்பிடுகையில், தகவல்கள் சுதந்திரமாக வளைய வருவதற்கு அவற்றுக்குக் கொடுக்கப்பட்டுள்ள உரிமைக்கு அதிக முன்னுரிமையும் முக்கியத்துவமும் கொடுக்கப்படுகிறது.

2013ம் ஆண்டு ஜனவரி 11ம் நாளன்று, தரவுவாத மதம் தன்னுடைய முதல் பலியைக் காவு வாங்கியது. இணையத்தள ஊடுருவிகளில் ஒருவரான, ஏரன் ஸ்வார்ட்ஸ் என்ற இருபத்தாறு வயது அமெரிக்க இளைஞர், அன்று தன்னுடைய வீட்டில் தற்கொலை செய்து கொண்டார். அவர் ஓர் அரிய மேதையாக விளங்கினார். அவர் தன்னுடைய பதினான்காவது வயதிலேயே 'ஆர்எஸ்எஸ்' என்ற ஒரு முக்கியமான வலைத்தளக் கோப்பு வடிவத்தை உருவாக்க உதவினார். தகவல் சுதந்திரத்திலும் அவர் மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்தார். 2008ல் 'கொரில்லா ஓப்பன் ஆக்சஸ் மேனிஃபெஸ்டோ' என்ற ஓர் அறிக்கையை அவர் வெளியிட்டார். தகவல்கள் சுதந்திரமாகவும் வரம்பின்றியும் பாய்ந்தோட வேண்டும் என்று அவர் அதில் வலியுறுத்தினார். "தகவல்கள் எங்கு சேமிக்கப்பட்டிருந்தாலும் நாம் அவற்றை அங்கிருந்து கைவசப்படுத்தி, அவற்றை நகல்களெடுத்து, உலகத்தோடு பகிர்ந்து கொள்ள வேண்டும். காப்புரிமை இல்லாத விஷயங்களை நாம் எடுத்து அவற்றை நம்முடைய ஆவணக் காப்பகத்தில் சேர்க்க வேண்டும். நாம் ரகசியத் தரவுத்தளங்களை வாங்கி இணையத்தில் ஏற்ற வேண்டும். அறிவியல் ஆய்வறிக்கைகளைத் தரவிறக்கம் செய்து, கோப்புகளைப் பகிர்ந்து கொள்ளுகின்ற வலைத்தளங்களில் நாம் அவற்றைத் தரவேற்றம் செய்ய வேண்டும். கொரில்லா ஒப்பன் ஆக்சஸுக்காக நாம் போராட வேண்டும்," என்று அவர் கூறினார்.

ஸ்வார்ட்ஸ் தன் வாக்கைக் காப்பாற்றினார். 'ஜேஎஸ்டிஓஆர்' என்ற டிஜிட்டல் நூலகம் தன்னுடைய வாடிக்கையாளர்களிடமிருந்து கட்டணம் வசூலித்துக் கொண்டிருந்தது குறித்து அவர் எரிச்சலடைந்தார். அந்த டிஜிட்டல் நூலகத்தில் லட்சக்கணக்கான அறிவியல் ஆய்வறிக்கைகளும் கட்டுரைகளும் சேகரித்து வைக்கப்பட்டுள்ளன. அறிவியலறிஞர்கள் மற்றும் கட்டுரைப் பதிப்பாசிரியர்களின் கருத்து சுதந்திரம் இன்றியமையாதது என்று அந்நூலகம் பெரிதும் நம்புகிறது. அதே நேரத்தில், அக்கட்டுரைகளை சாதாரண மக்கள் படிக்க விரும்பினால், அதற்காக அவர்களிடமிருந்து ஒரு தொகையைக் கட்டணமாக வசூலிப்பதற்கான சுதந்திரம் தனக்கு இருப்பதாகவும் அது நம்புகிறது. அந்நூலகத்தின்படி, நான் உருவாக்கிய

யோசனைகளுக்கு எனக்குப் பணம் கொடுக்கப்பட வேண்டும் என்று நான் விரும்பினால், அவ்வாறு செய்வது என்னுடைய உரிமை. ஆனால் ஸ்வார்ட்ஸ் அப்படி நினைக்கவில்லை. தகவல்கள் சுதந்திரமாக இருக்க விரும்புகின்றன என்றும், யோசனைகள் அவற்றை உருவாக்கியவர்களுக்குச் சொந்தமல்ல என்றும், தரவுகளைச் சுவர்களுக்குப் பின்னால் பூட்டி வைத்து ஒரு நுழைவுக் கட்டணத்தை வசூலிப்பது தவறு என்றும் அவர் நம்பினார். அவர் எம்ஐடி பல்கலைக்கழகத்தின் கணினிப் பிணையத்தைப் பயன்படுத்தி 'ஜேஎஸ்டிஓஆர்' நூலகத்தின் கணினி அமைப்புமுறைக்குள் ஊடுருவி, ஆயிரக்கணக்கான அறிவியல் அறிக்கைகளைத் தரவிரக்கம் செய்தார். அவற்றை எல்லோராலும் இலவசமாகப் படிக்க முடிய வேண்டும் என்பதற்காக அவர் அவற்றை இணையத்தளத்தில் விடுவிக்கத் திட்டமிட்டார்.

விரைவில் அவர் கைது செய்யப்பட்டு, அவர்மீது வழக்குத் தொடரப்பட்டது. தான் குற்றவாளி என்று தீர்ப்பு வழங்கப்பட்டுச் சிறைச்சாலைக்கு அனுப்பப்படுவோம் என்பதை அவர் உணர்ந்தபோது, அவர் தூக்குப் போட்டுத் தற்கொலை செய்து கொண்டார். ஸ்வார்ட்ஸ்மீது வழக்குத் தொடர்ந்த, தகவல் சுதந்திரத்தை மட்டுப்படுத்துகின்ற கல்வி நிறுவனங்கள் மற்றும் அரசு நிறுவனங்களுக்கு இணையத்தள ஊடுருவிகள் ஏகப்பட்ட மனுக்களை அனுப்பி வைத்தனர், அவர்களுடைய வலைத்தளங்களைத் தாக்கினர். பல முனைகளிலிருந்தும் அழுத்தத்திற்கு உள்ளான ஜேஎஸ்டிஓஆர் நூலகம் ஸ்வார்ட்ஸின் மரணத்தில் தன் பங்கு குறித்து மன்னிப்புக் கேட்டு வருத்தம் தெரிவித்ததோடு, இன்று தன்னுடைய பெரும்பாலான தரவுகளை மக்கள் இலவசமாக அணுகுவதற்கும் அனுமதிக்கிறது.

***

அவநம்பிக்கையாளர்களை நம்ப வைப்பதற்காக, தகவல் சுதந்திரத்தின் அளப்பரிய நன்மைகளைத் தரவுவாத போதகர்கள் தொடர்ந்து விளக்கிக் கொண்டே இருக்கின்றனர். அனைத்து நல்ல விஷயங்களும் பொருளாதார வளர்ச்சியைச் சார்ந்திருப்பதாகப் பெருமுதலாளிகள் நம்புவதைப்போல, பொருளாதார வளர்ச்சி உட்பட அனைத்து நல்ல விஷயங்களும் தகவல் சுதந்திரத்தைச் சார்ந்திருப்பதாகத் தரவுவாதிகள் நம்புகின்றனர். சோவியத் ஒன்றியத்தைவிட அமெரிக்கா எப்படி அதிக வேகமாக வளர்ந்தது? ஏனெனில், அமெரிக்காவில் தகவல்கள் அதிக சுதந்திரமாக உலா வந்தன. அமெரிக்கர்கள் ஏன் ஈரானியர்களையும் நைஜீரியர்களையும்விட அதிக ஆரோக்கியமாகவும், அதிகச் செல்வச்

செழிப்போடும், அதிக மகிழ்ச்சியாகவும் இருக்கின்றனர்? தகவல் சுதந்திரத்தால்தான். எனவே, நாம் ஒரு சிறந்த உலகை உருவாக்க விரும்பினால், தரவுகள் சுதந்திரமாக உலா வர அனுமதிப்பது மிகவும் இன்றியமையாதது என்று தரவுவாதிகள் வலியுறுத்துகின்றனர்.

பாரம்பரிய நலவாழ்வு அமைப்புகளைவிட கூகுளால் கொள்ளைநோய்களை அதிக வேகமாகக் கண்டுபிடிக்க முடியும் என்பதை நாம் ஏற்கனவே பார்த்தோம். ஆனால், நாம் உற்பத்தி செய்து கொண்டிருக்கின்ற தகவல்களை கூகுள் பயன்படுத்த நாம் அனுமதித்தால் மட்டுமே அது சாத்தியம். அதேபோல, சுதந்திரமாகப் பாய்ந்தோடுகின்ற தரவால் மாசுபாட்டையும் கழிவையும் குறைக்க முடியும். எடுத்துக்காட்டாக, போக்குவரத்து அமைப்புமுறையை எடுத்துக் கொள்ளுங்கள். 2010ல் உலகிலிருந்த தனியார் கார்களின் மொத்த எண்ணிக்கை 100 கோடியைத் தாண்டியது. அன்றிலிருந்து அது தொடர்ந்து அதிகரித்துக் கொண்டே வந்துள்ளது. இக்கார்கள் இந்த பூமியை மாசுபடுத்துகின்றன, ஏகப்பட்ட வளங்களை விரயமாக்குகின்றன. இவ்வளவு கார்களும் வலம் வருவதற்கு மேன்மேலும் அதிக அகலமான சாலைகளும் அக்கார்களை நிறுத்தி வைப்பதற்கு அதிக இடங்களும் தேவைப்படுகின்றன. மக்கள் தங்களுக்குச் சொந்தமாகக் கார்களை வாங்கிப் பயன்படுத்தி அந்த வசதி அவர்களுக்குப் பழகிவிட்டதால், பேருந்துகளிலும் ரயில்களிலும் பயணிக்க அவர்கள் விரும்புவதில்லை. ஆனால், மக்கள் ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்திற்குப் போய்ச் சேருவதற்கு ஏதோ ஓர் ஊர்திதான் அவர்களுக்குத் தேவைப்படுகிறதே அன்றி ஒரு தனிப்பட்டக் கார் அல்ல என்று தரவுவாதிகள் சுட்டிக்காட்டுகின்றனர்.

எனக்கென்று சொந்தமாக ஒரு தனிப்பட்டக் கார் இருக்கிறது. ஆனால் பெரும்பான்மை நேரம் அது வெறுமனே ஓரிடத்தில் நின்று கொண்டிருக்கிறது. ஒரு சராசரி நாளன்று, காலை 8:04 மணிக்கு நான் என் காருக்குள் ஏறி, அரை மணிநேரம் என்னுடைய பல்கலைக்கழகத்திற்கு அதை ஓட்டி சென்று, அன்று முழுவதும் அதை நான் அங்கேயே நிறுத்தி வைக்கிறேன். மாலை 6:11 மணிக்கு நான் என் காருக்குத் திரும்பிச் சென்று, அரை மணிநேரம் அதை ஓட்டி வீடு வந்து சேருகிறேன், அவ்வளவுதான். எனவே, ஒரு நாளுக்கு ஒரு மணிநேரம்தான் நான் என் காரைப் பயன்படுத்துகிறேன். அப்படியானால், மீதி 23 மணிநேரம் அந்தக் காரை நான் வைத்திருக்க வேண்டிய தேவை என்ன? கணினிப் படிமுறைத் தீர்வுகளால் இயக்கப்படுகின்ற 'கார் பகிர்வு அமைப்புமுறை' ஒன்றை ஏன் உருவாக்கக்கூடாது? நான் என் வீட்டிலிருந்து காலையில் 8:04

மணிக்குப் புறப்பட வேண்டும் என்பதைக் கணினி அறிந்திருக்கும். என் வீட்டிற்கு மிக அருகில் எந்தத் தானியங்கிக் கார் சுற்றித் திரிந்து கொண்டிருக்கிறதோ, அதை அக்கணினி துல்லியமாக 8:04 மணிக்கு என் வீட்டிற்கு அனுப்பி வைக்கும். பிறகு அந்தக் கார் என்னை என்னுடைய பல்கலைக்கழக வளாகத்தில் இறக்கி விட்டுவிட்டு, கார் நிறுத்துமிடத்தில் எனக்காகக் காத்துக் கொண்டிருப்பதற்கு பதிலாக மற்றவர்களை வேறு இடங்களுக்குக் கூட்டிச் செல்லப் போய்விடும். துல்லியமாக மாலை 6:11 மணிக்கு வாசல் கதவை நான் தாண்டும்போது வேறொரு கார் என் பல்கலைக்கழகத்திற்கு வந்து என் பக்கத்தில் வந்து நிற்கும். இவ்வழியில், 5 கோடிப் பொதுக் கார்களால் 100 கோடி தனியார் கார்களின் இடத்தை எடுத்துக் கொள்ள முடியும். அதோடு, கார்களின் எண்ணிக்கை வெகுவாகக் குறைவதால், சாலைகளும், பாலங்களும், சுரங்கப் பாதைகளும், கார் நிறுத்துமிடங்களும் குறைவாகவே நமக்குத் தேவைப்படும். ஆனால், இந்த ஏற்பாடு மெய்யாவதற்கு, நான் என்னுடைய தனிநபர் அந்தரங்கத்தை விட்டுக்கொடுக்கவும், நான் எங்கே இருக்கிறேன், எங்கே போக விரும்புகிறேன் ஆகியவற்றைப் படிமுறைத் தீர்வுகள் எப்போதும் அறிந்திருக்கவும் நான் தயாராக இருக்க வேண்டும்.

## பதிவு செய்யுங்கள், தரவேற்றம் செய்யுங்கள், பகிர்ந்து கொள்ளுங்கள்!

ஆனால் அதற்கு யாரும் உங்களை ஒப்புக் கொள்ள வைக்க வேண்டிய தேவை இல்லாமல் இருக்கலாம், குறிப்பாக நீங்கள் இருபது வயதுக்குக் குறைவானவராக இருக்கும் பட்சத்தில்! மக்கள் பொதுவாகத் தரவோட்டத்தின் ஒரு பகுதியாக இருக்க விரும்புகின்றனர். அதற்காக அவர்கள் தங்களுடைய அந்தரங்க உரிமையையும் சுதந்திரத்தையும் தனித்துவத்தையும் விட்டுக்கொடுக்கத் தயாராக இருக்கின்றனர். மனிதவாதக் கலையானது தனிநபர் மேதமையைப் புனிதமானதாகக் கருதுகிறது. எனவே, ஒரு காகிதக் கைக்குட்டையில் இடம்பெற்றுள்ள பிக்காஸோவின் கிறுக்கல்கள்கூட ஏலத்தில் லட்சக்கணக்கான டாலர்கள் பணத்தைப் பெற்றுத் தருகின்றன. மனிதவாத அறிவியல் தனிப்பட்ட ஆராய்ச்சியாளரைப் புனிதமானவராகக் கருதுகிறது. தங்களுடைய பெயர் ‘அறிவியல்’ பத்திரிகையிலோ அல்லது ‘இயற்கை’ பத்திரிகையிலோ இடம்பெற வேண்டும் என்று அறிவியலறிஞர்கள் ஒவ்வொருவரும் விரும்புகின்றனர். ஆனால் இன்று அதிக எண்ணிக்கையிலான கலைப் படைப்புகளும் அறிவியல் படைப்புகளும்

‘எல்லோருடைய’ இடையறாத ஒத்துழைப்பின் மூலமாகவே உருவாக்கப்படுகின்றன. யார் விக்கிப்பீடியாவை எழுதுகிறார்கள்? நாம் எல்லோரும்தானே?

ஒரு தனிநபர் என்பவர் யாரும் உண்மையிலேயே புரிந்து கொண்டிராத ஒரு பிரம்மாண்டமான அமைப்புமுறைக்குள் இருக்கின்ற ஒருசின்னஞ்சிறு மின்னணுச் சில்லாக ஆகிக் கொண்டிருக்கிறார். மின்னஞ்சல்கள், தொலைபேசி அழைப்புகள், கட்டுரைகள் ஆகியவற்றின் வாயிலாக நான் எண்ணற்றத் தகவல் துகள்களை உள்வாங்கிக் கொள்ளுகிறேன்; பிறகு நான் அந்தத் தரவுகளைச் செயலாக்கம் செய்கிறேன்; புதிய தரவுத் துகள்களை மேலும் அதிகமான மின்னஞ்சல்கள், தொலைபேசி அழைப்புகள் மற்றும் கட்டுரைகள் வாயிலாக நான் திருப்பி அனுப்பி வைக்கிறேன். ஒட்டுமொத்தத் திட்டத்தில் நான் எந்த இடத்தில் பொருந்துகிறேன் என்பதோ, நான் உருவாக்குகின்ற தரவுத் துகள்கள் லட்சக்கணக்கான பிற மனிதர்களாலும் கணினிகளாலும் உருவாக்கப்படுகின்ற தரவுத் துகள்களோடு எப்படித் தொடர்பு கொள்ளும் என்பதோ உண்மையிலேயே எனக்குத் தெரியாது. அவற்றைக் கண்டுபிடிப்பதற்கு எனக்கு நேரமில்லை. ஏனெனில், என்னுடைய கணினியில் வந்து குவிகின்ற மின்னஞ்சல்களுக்கு பதிலளிப்பதில் நான் மும்முரமாக இருக்கிறேன். அதிகமான மின்னஞ்சல்களுக்குவிடையளிப்பது, அதிகமான தொலைபேசி அழைப்புகளை விடுப்பது, அதிகமான கட்டுரைகளை எழுதுவது ஆகியவற்றின் மூலம் நான் மேன்மேலும் அதிகமான தரவுகளை அதிகச் செயற்திறனோடு செயலாக்கம் செய்து வருவதன் மூலம், என்னைச் சுற்றிலும் இருக்கின்றவர்களை மேலும் அதிகமான தரவுகளால் நான் மூழ்கடிக்கிறேன்.

முடிவற்ற இந்தத் தரவோட்டம், யாருமே திட்டமிடாத, யாருமே கட்டுப்படுத்தாத அல்லது யாருமே புரிந்து கொள்ளாத புதிய கண்டுபிடிப்புகளையும் இடையூறுகளையும் விளைவிக்கிறது. சர்வதேசப் பொருளாதாரம் எப்படிச் செயல்படுகிறது என்பதோ அல்லது சர்வதேச அரசியல் எதை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது என்பதோ யாருக்கும் புரியவில்லை. ஆனால் யாரும் அவற்றைப் புரிந்து கொள்ள வேண்டிய தேவையும் இல்லை. நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம், வெறுமனே உங்களுடைய மின்னஞ்சல்களுக்கு வேகமாக பதிலளிப்பது மட்டும்தான். பிறகு, சர்வதேசத் தரவுச் செயலாக்க அமைப்புமுறை அதைப் படிக்க நீங்கள் அனுமதிக்க வேண்டும், அவ்வளவுதான். கட்டுப்பாடற்றச் சந்தைப் பெருமுதலாளிகள் எப்படிச் சந்தையின் மாயக் கையில் நம்பிக்கை

கொண்டுள்ளனரோ, அதேபோல, தரவோட்டத்தின் மாயக் கையில் தரவுவாதிகள் நம்பிக்கை கொண்டுள்ளனர்.

சர்வதேசத் தரவுச் செயலாக்க அமைப்புமுறை எல்லாமறிந்த ஒன்றாகவும் சர்வ வல்லமை பொருந்திய ஒன்றாகவும் ஆகிக் கொண்டிருப்பதால், அந்த அமைப்புமுறையோடு இணைத்துக் கொள்ளுவதுதான் அனைத்து அர்த்தத்திற்குமான மூலாதாரமாக ஆகிறது. மனிதர்கள் தங்களைத் தரவோட்டத்துடன் ஒருங்கிணைக்க விரும்புகின்றனர். ஏனெனில், நீங்கள் அந்தத் தரவோட்டத்தின் ஒரு பகுதியாக இருக்கும்போது, உங்களைவிட மிகப் பெரிய ஏதோ ஒன்றின் ஒரு பகுதியாக நீங்கள் ஆகிறீர்கள். உங்களுடைய ஒவ்வொரு வார்த்தையும் ஒவ்வொரு செயலும் ஏதோ மாபெரும் பிரபஞ்சத் திட்டத்தின் ஒரு பகுதி என்றும், கடவுள் ஒவ்வொரு நிமிடமும் உங்களைக் கண்காணித்துக் கொண்டிருந்தார் என்றும், உங்களுடைய அனைத்து எண்ணங்கள்மீதும் உணர்வுகள்மீதும் அவர் அக்கறை கொண்டிருந்தார் என்றும் பாரம்பரிய மதங்கள் உறுதியளித்தன. தரவு மதம் இன்று இப்படிக் கூறுகிறது: 'உங்களுடைய ஒவ்வொரு வார்த்தையும் ஒவ்வொரு செயலும் மாபெரும் தரவோட்டத்தின் ஒரு பகுதியாகும். படிமுறைத் தீர்வுகள் உங்களைத் தொடர்ந்து கவனித்துக் கொண்டிருக்கின்றன. நீங்கள் செய்கின்ற மற்றும் உணருகின்ற அனைத்து விஷயங்கள் குறித்தும் அவை அக்கறை கொண்டுள்ளன.' பெரும்பாலான மக்களுக்கு இது மிகவும் பிடித்திருக்கிறது. தரவுவாதத்தை உண்மையிலேயே நம்புகின்றவர்களுக்கு, தரவோட்டத்திடமிருந்து துண்டிக்கப்பட்டிருப்பது என்பது வாழ்வின் அர்த்தத்தையே இழப்பதைப் போன்றதாகும். நாம் செய்கின்ற அல்லது அனுபவிக்கின்ற எதுவொன்றும் யாருக்கும் தெரியாது என்றாலோ, உலகளாவிய தகவல் பரிமாற்றத்திற்கு அது எந்த விதத்திலும் பங்களிக்காது என்றாலோ, அவ்விஷயத்தைச் செய்வதிலோ அல்லது அனுபவிப்பதிலோ என்ன அர்த்தம் இருக்கிறது?

அனுபவங்கள் நமக்குள் நிகழுகின்றன என்றும், நிகழுகின்ற அனைத்திற்குமான அர்த்தத்தை நமக்குள் நாம் கண்டுபிடிக்க வேண்டும் என்றும், இதன் மூலம் பிரபஞ்சத்தை அர்த்தத்தால் நிரப்ப வேண்டும் என்றும் மனிதவாதம் முழங்குகிறது. ஆனால், அனுபவங்கள் பகிர்ந்து கொள்ளப்படாவிட்டால் அவை மதிப்பற்றவை என்றும், நாம் நமக்குள் அர்த்தத்தைத் தேட வேண்டியதில்லை என்றும், அது நம்மால் முடியாது என்றும் தரவுவாதம் அறுதியிட்டுக் கூறுகிறது. நாம் செய்ய வேண்டியதெல்லாம், நம்முடைய அனுபவங்களைப் பதிவு செய்து மாபெரும் தரவோட்டத்தோடு அவற்றை இணைக்க வேண்டியது

மட்டும்தான். பிறகு, படிமுறைத் தீர்வுகள் அவற்றின் அர்த்தத்தைக் கண்டுபிடித்து, நாம் என்ன செய்ய வேண்டும் என்பதை நமக்குத் தெரிவிக்கும். இருபது ஆண்டுகளுக்கு முன்பு, ஜப்பானிய சுற்றுலாப் பயணிகளைக் கண்டு உலகமே சிரித்தது. ஏனெனில், அவர்கள் எங்கு சென்றாலும் தங்களோடு கேமராக்களை எடுத்துச் சென்றனர், தங்கள் பார்வையில் பட்டவற்றையெல்லாம் படம்பிடித்தனர். ஆனால் இன்று எல்லோரும் அதையேதான் செய்து கொண்டிருக்கின்றனர். நீங்கள் தாய்லாந்துக்குச் சென்று ஒரு யானையைப் பார்த்தால், நீங்கள் அந்த யானையை உற்றுப் பார்த்துவிட்டு, “நான் என்னுள் எதை உணருகிறேன்?” என்று உங்களிடம் கேட்டுக் கொள்ளுவதில்லை. மாறாக, உங்களுடைய ஸ்மார்ட்போனை எடுத்து, அந்த யானையை ஒரு புகைப்படம் எடுத்து, அதை முகநூலில் பதிவேற்றி, பிறகு எத்தனைப் பேர் அதற்கு ‘லைக்’ கொடுத்திருக்கிறார்கள் என்று பார்ப்பதற்காக உங்கள் முகநூல் கணக்கை இரண்டு நிமிடங்களுக்கு ஒரு முறை பார்ப்பதில் நீங்கள் மும்முரமாக இருக்கிறீர்கள். ‘டைரி எழுதுதல்’ என்பது முந்தைய தலைமுறைகளில் பரவலாக இருந்த ஒரு மனிதவாதப் பழக்கமாகும். ஆனால் இன்றைய இளைய தலைமுறையினர் பலருக்கு அது முற்றிலும் அர்த்தமற்றதாகத் தோன்றுகிறது. நீங்கள் எழுதுவதை யாராலும் படிக்க முடியாது என்றால், அதை எழுதுவதில் என்ன அர்த்தம் இருக்கிறது என்பது அவர்களுடைய கேள்வியாக இருக்கிறது. இன்று நிலவும் புதிய கொள்கை இதுதான்: ‘நீங்கள் எதையேனும் அனுபவித்தால், அதைப் பதிவு செய்யுங்கள். நீங்கள் எதையேனும் பதிவு செய்தால், அதை இணையத்தில் தரவேற்றம் செய்யுங்கள், பிறரோடு அதைப் பகிர்ந்து கொள்ளுங்கள்.’

விலங்குகளோடு ஒப்பிடுகையில் மனிதர்களை அதிக மேன்மையானவர்களாக ஆக்குவது எது என்று இப்புத்தகம் நெடுகிலும் நாம் தொடர்ந்து கேட்டு வந்துள்ளோம். இதற்கான ஒரு புதிய, எளிய விடை தரவுவாதத்திடம் இருக்கிறது. மனிதர்களுடைய அனுபவங்கள் ஓநாய்கள் அல்லது யானைகளின் அனுபவங்களைவிட மேன்மையானவை அல்ல. ஒரு தரவுத் துகளுக்கும் இன்னொரு தரவுத் துகளுக்கும் இடையே எந்த வித்தியாசமும் இல்லை. ஆனால், மக்களால் தங்களுடைய அனுபவங்களைப் பற்றிக் கவிதைகளையும் வலைப்பதிவுகளையும் எழுத முடியும், இணையத்தில் அவற்றைத் தரவேற்றம் செய்ய முடியும். இதன் மூலம் சர்வதேசத் தரவுச் செயலாக்க அமைப்புமுறையை அவர்களால் செழுமைப்படுத்த முடியும். இதுதான் அவர்களுடைய தரவுத் துகள்களை முக்கியமானவையாக ஆக்குகிறது.

மனிதர்களால் செய்ய முடிகின்ற இக்காரியத்தை ஓநாய்களால் செய்ய முடியாது. எனவே, அவற்றின் அனுபவங்கள் எவ்வளவு ஆழமாகவும் சிக்கலாகவும் இருந்தாலும்கூட, அவை மதிப்பற்றவையாக இருக்கின்றன. எனவே, நாம் நம்முடைய அனுபவங்களைத் தரவுகளாக மாற்றுவதில் இவ்வளவு மும்முரமாக இருப்பதில் எந்த வியப்பும் இல்லை. இது நவீனப் போக்கைப் பற்றியது அல்ல. இது பிழைத்திருப்பதைப் பற்றியது. நாம் இன்னும் விலைமதிப்பு வாய்ந்தவர்கள்தான் என்பதை நமக்கு நாமேயும் நம்முடைய அமைப்புமுறைக்கும் நாம் நிரூபித்தாக வேண்டும். வெறுமனே அனுபவங்களைப் பெறுவதில் எந்த மதிப்பும் இல்லை, மாறாக சுதந்திரமாகப் பாய்ந்தோடுகின்ற தரவுகளாக அவற்றை மாற்றும்போதுதான் அவை மதிப்பு வாய்ந்தவையாக ஆகின்றன.

(ஆனாலும், ஓநாய்களும் அவற்றின் உறவுக்காரர்களான நாய்களும் முற்றிலும் மதிப்பற்றவை அல்ல. ‘நோ மோர் ஹூஃப்’ என்ற ஒரு நிறுவனம் நாய்களின் அனுபவங்களை ஆய்வு செய்வதற்காக ஒரு தலைக்கவசத்தை உருவாக்கிக் கொண்டிருக்கிறது. அந்தத் தலைக்கவசம் ஒரு நாயின் மூளை அலைகளைக் கண்காணித்து, கணினிப் படிமுறைத் தீர்வுகளைப் பயன்படுத்தி, ‘நான் கோபமாக இருக்கிறேன்’ என்பது போன்ற எளிய உணர்ச்சிகளை மனித மொழிக்கு மாற்றுகிறது. வெகு விரைவில், முகநூலிலோ அல்லது டுவிட்டரிலோ உங்கள் நாய் தனக்கென்று சொந்தமாக ஒரு கணக்கை உருவாக்கக்கூடும். உங்களுக்குக் கிடைப்பதைவிட அதிக ‘லைக்’ அவற்றுக்குக் கிடைக்கக்கூடும், உங்களுக்கு இருக்கும் ரசிகர்களைவிட அதிகமான ரசிகர்கள் அவற்றுக்கு அமையக்கூடும்.)

## தன்னைத் தானே அறிந்திடுதல்

தரவுவாதம் தாராளவாதத்திற்கும் ஆதரவானதல்ல, மனிதவாதத்திற்கும் ஆதரவானதல்ல. ஆனால், அது மனிதவாதத்திற்கு எதிரானதும் அல்ல என்பது இங்கு வலியுறுத்தப்பட்டாக வேண்டும். மனித அனுபவங்களுக்கு அது எதிரி அல்ல. ஆனால் அவற்றுக்கு உள்ளார்ந்த மதிப்பு எதுவும் இல்லை என்று அது நினைக்கிறது, அவ்வளவுதான். மனிதவாதத்தின் மூன்று பிரிவுகளை முன்பு நாம் ஆய்வு செய்தபோது, எந்த அனுபவம் அதிக மதிப்பு வாய்ந்தது என்று நாம் கேட்டோம்: பீத்தோவனின் ஐந்தாம் சிம்பொனியைக் கேட்பதா, சக் பெர்ரியின் ராக் அன்ட் ரோல் இசையைக் கேட்பதா, குள்ளமனிதர்களின் பாடலைக் கேட்பதா, அல்லது விரகதாபத்தில் இருக்கின்ற ஓர் ஓநாயின்

ஊளைச் சத்தத்தைக் கேட்பதா? ஒரு தரவுவாதியிடம் இதைக் கேட்டால், இந்த ஒட்டுமொத்தப் பயிற்சியும் தவறாக வழிநடத்தப்பட்ட ஒன்று என்று அவர் வாதிடக்கூடும். அவர் அதற்கு இப்படி விளக்கமளிக்கக்கூடும்: "இசையை அது உருவாக்குகின்ற அனுபவத்தைக் கொண்டு மதிப்பிடக்கூடாது, மாறாக, அதில் அடங்கியுள்ள தரவுகளுக்கு ஏற்பவே அது மதிப்பிடப்பட வேண்டும். ஐந்தாவது சிம்பொனி இசை அந்தக் குள்ளமனிதர்களின் பாடலைவிட அதிகத் தரவுகளைக் கொண்டிருக்கிறது. ஏனெனில், அது அதிகமான இசைக் குறிப்புகளையும் இசை வரிசைகளையும் பயன்படுத்துகிறது. மேலும், அது இன்னும் அதிகமான இசைப் பாணிகளோடு சரசமாடுகிறது. அதன் விளைவாக, ஐந்தாம் சிம்பொனியைப் புரிந்து கொள்ளுவதற்கு உங்களுக்கு மிக அதிகமான கணித்திறன் தேவைப்படுகிறது. அவ்வாறு புரிந்து கொள்ளுவதன் மூலம் நீங்கள் அதிக அறிவையும் பெறுகிறீர்கள்."

இக்கண்ணோட்டத்தின்படி, இசை என்பது கணித வடிவவிதங்களே. ஒவ்வோர் இசைப் படைப்பையும் கணிதத்தால் விவரிக்க முடியும், ஏதேனும் இரண்டு படைப்புகளுக்கு இடையேயான உறவுகளையும் அதனால் விவரிக்க முடியும். எனவே, ஒவ்வொரு சிம்பொனியின் தரவு மதிப்பையும், ஒவ்வொரு பாடலின் தரவு மதிப்பையும், அல்லது ஒவ்வோர் ஊளையின் தரவு மதிப்பையும் துல்லியமாக உங்களால் அளவிட முடியும், அவற்றில் எது அதிகச் செழுமையானது என்பதை உங்களால் தீர்மானிக்க முடியும். அவை மனிதர்களிடத்திலோ அல்லது ஓநாய்களிடத்திலோ உருவாக்குகின்ற அனுபவங்கள் உண்மையில் ஒரு பொருட்டல்ல. கடந்த 70,000 ஆண்டுகளாக, மனித அனுபவங்கள்தான் பிரபஞ்சத்திலேயே மிகச் சிறந்த தரவுச் செயலாக்கப் படிமுறைத் தீர்வுகளாக இருந்து வந்துள்ளன. எனவே, அவற்றைப் புனிதமானவையாகக் கருதியதில் நியாயம் இருந்தது. ஆனால், இந்தப் படிமுறைத் தீர்வுகள் விஞ்சப்படக்கூடிய அல்லது அவை ஒரு சுமையாக ஆகக்கூடிய ஒரு நிலையை நாம் விரைவில் எட்டக்கூடும்.

பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பாக ஆப்பிரிக்கக் காடுகளில் சேப்பியன்ஸ் இனத்தினர் பரிணாம வளர்ச்சி அடைந்தனர். அவர்களுடைய படிமுறைத் தீர்வுகள் இருபத்தோராம் நூற்றாண்டின் தரவோட்டங்களைக் கையாளுவதற்கு ஏற்ற விதத்தில் உருவாக்கப்படவில்லை. மனிதர்களுடைய தரவுச் செயலாக்க அமைப்புமுறையை மேம்படுத்த நாம் முயற்சிக்கக்கூடும், ஆனால் அது போதுமானதாக இருக்காது. மேம்படுத்தப்பட்ட மனிதப் படிமுறைத் தீர்வுகளால்கூடக் கையாள முடியாத அளவுக்கு மிகப் பெரிய மற்றும்

அதிவேகத் தரவோட்டங்களை 'அனைத்தும் பிணைக்கப்பட்ட இணைய உலகம்' விரைவில் உருவாக்கக்கூடும். குதிரை வண்டிகளின் இடத்தைக் கார்கள் பிடித்துக் கொண்டபோது, நாம் குதிரைகளை மேம்படுத்தவில்லை. மாறாக, நாம் அவற்றுக்கு முழு ஓய்வு கொடுத்துவிட்டோம். அதேபோல, இப்போது ஹோமோ சேப்பியன்ஸுக்கும் முழு ஓய்வு கொடுப்பதற்கான நேரம் வந்துவிட்டதுபோலும்.

தரவுச் செயலாக்க இயங்குமுறைகளில் மனித அனுபவங்கள் ஆற்றும் பங்கை அல்லது செயல்பாட்டைக் கொண்டே தரவுவாதம் அந்த அனுபவங்களை மதிப்பிடுகிறது. அச்செயல்பாட்டை அதிகச் சிறப்பாக நிறைவேற்றுகின்ற ஒரு படிமுறைத் தீர்வை நாம் உருவாக்கினால், மனித அனுபவங்கள் தம்முடைய மதிப்பை இழந்துவிடும். எனவே, டாக்ஸி ஓட்டுநர்கள் மற்றும் மருத்துவர்களுடைய இடத்தை மட்டுமல்லாமல், வழக்கறிஞர்கள், கவிஞர்கள், இசைக் கலைஞர்கள் ஆகியோரின் இடங்களைக்கூட மேம்பட்டக் கணினி நிரல்கள் எடுத்துக் கொள்ளும்படி செய்ய நம்மால் முடியும் என்றால், இந்த நிரல்களுக்குப் பிரக்ஞையோ அல்லது அகவயமான அனுபவங்களோ இல்லை என்பது பற்றி நாம் ஏன் கவலைப்பட வேண்டும்? மனித அனுபவத்தின் புனிதத்துவத்தை ஏதேனும் ஒரு மனிதவாதி அளவுக்கதிகமாகப் புகழத் தொடங்கினால், அப்படிப்பட்ட உணர்ச்சிகரமான அபத்தத்தைத் தரவுவாதிகள் ஒதுக்கித் தள்ளிவிடுவர். நீங்கள் புகழ்ந்து கொண்டிருக்கின்ற ஓர் அனுபவம் ஏற்கனவே காலாவதியாகிவிட்ட ஓர் உயிர்வேதிப் படிமுறைத் தீர்வுதானே அன்றி வேறொன்றுமில்லை. 70,000 ஆண்டுகளுக்கு முன்பு ஆப்பிரிக்கக் காடுகளில் அந்தப் படிமுறைத் தீர்வு மிகவும் நேர்த்தியானதாக இருந்தது. இருபதாம் நூற்றாண்டில்கூட ராணுவத்திற்கும் பொருளாதாரத்திற்கும் அது இன்றியமையாததாக இருந்தது. ஆனால் விரைவில் அதைவிடப் பன்மடங்கு அதிகச் சிறப்பான படிமுறைத் தீர்வுகள் நம்மிடம் இருக்கும்.

ஹாலிவுட்டில் தயாரிக்கப்படுகின்ற அறிவியல் புனைகதைத் திரைப்படங்கள் பலவற்றின் உச்சகட்டக் காட்சிகளில், மனிதர்கள் வேற்றுக் கிரகவாசிகளின் படை ஒன்றையோ, கலகத்தில் ஈடுபடுகின்ற ரோபாட்டுகள் அடங்கிய படை ஒன்றையோ, அல்லது அனைத்துமறிந்த அதிதிறன் கணினியையோ எதிர்கொள்ளுவர். மனிதர்களை அழிப்பதையே அவை தம்முடைய நோக்கமாகக் கொண்டிருக்கும். மனிதகுலத்தின் முடிவு நெருங்கிவிட்டதுபோலத் தோன்றும். ஆனால் கடைசிக் கணத்தில், அந்த வேற்றுக் கிரகவாசிகளாலும் ரோபாட்டுகளாலும் அதிதிறன் கணினிகளாலும் புரிந்து கொள்ள

முடியாத, அவை எதிர்பார்க்காத ஒரு விஷயத்தின் விளைவாக மனிதகுலம் வெற்றி பெற்றுவிடும். 'அன்பு'தான் அந்தச் சிறப்பு அம்சம். உச்சக்கட்டக் காட்சிவரை அதிதிறன் கணினியால் ஆட்டுவிக்கப்பட்டும் தீய ரோபாட்டுகளின் துப்பாக்கிச் சூடுகளுக்கு ஆளாகியும் வந்திருந்த கதாநாயகன் இப்போது தன்னுடைய காதலியால் உத்வேகம் பெற்று ஏதோ ஓர் எதிர்பாராத காரியத்தைச் செய்து தன்னுடைய எதிரிப் படையைத் தோற்கடித்துவிடுகிறான். இப்படிப்பட்டக் காட்சிகளை நகைப்புக்கு இடமானவையாகத் தரவுவாதம் கருதுகிறது. அது அந்த ஹாலிவுட் திரைக்கதை ஆசிரியர்களை இவ்வாறு கடிந்து கொள்ளுகிறது: "உங்கள் கற்பனை இவ்வளவுதானா? காதலா? இது ஏதோ புனிதமான பிரபஞ்சக் காதல்கூட அல்ல. இரண்டு பாலூட்டிகளுக்கு இடையேயான கவர்ச்சி சார்ந்த ஈர்ப்பு இது. இதைத் தாண்டி உங்களால் சிந்திக்க முடியவில்லையா? இந்த ஒட்டுமொத்த விண்மீன் மண்டலத்தையும் வெற்றி கொள்ளும் தீவிர நோக்கத்துடன் படையெடுத்து வருகின்ற அனைத்துமறிந்த அதிதிறன் கணினிகளோ அல்லது வேற்றுக் கிரகவாசிகளோ இந்த உணர்ச்சிகரமான ஹார்மோன் நடவடிக்கையைக் கண்டு வாயடைத்துப் போய்விடுவர் என்று நீங்கள் உண்மையிலேயே நம்புகிறீர்களா?"

***

மனித அனுபவத்தைத் தரவு வடிவவிதங்களோடு சமன்படுத்துவதன் மூலம் தரவுவாதம் நம்முடைய அதிகாரத்திற்கும் அர்த்தத்திற்குமான முதன்மையான மூலாதாரத்தை பலவீனப்படுத்துகிறது; பதினெட்டாம் நூற்றாண்டுக்குப் பிறகு நாம் பார்த்திராத ஒரு பிரம்மாண்டமான மதப் புரட்சி விரைவில் ஏற்படும் என்று அது கட்டியம் கூறுகிறது. லாக், ஹியூம், வால்ட்டேர் ஆகியோரின் காலகட்டங்களில், 'கடவுள் என்பவர் மனிதக் கற்பனையின் ஒரு விளைபொருள்' என்று மனிதவாதிகள் வாதிட்டனர். "ஆமாம், கடவுள் என்பவர் மனிதக் கற்பனையின் ஒரு விளைபொருள் என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால் மனிதக் கற்பனைகூட உயிர்வேதிப் படிமுறைத் தீர்வுகளின் ஒரு விளைபொருள்தான்," என்று தரவுவாதிகள் கூறுகின்றனர். பதினெட்டாம் நூற்றாண்டில், உலகம் மனிதர்களை மையமாகக் கொண்டு இயங்கியதாகக் கூறி மனிதவாதம் கடவுளை ஒதுக்கித் தள்ளியது. இருபத்தோராம் நூற்றாண்டில், உலகம் தரவுகளை மையமாகக் கொண்டு இயங்குவதாகக் கூறித் தரவுவாதம் மனிதர்களை ஒதுக்கித் தள்ளக்கூடும்!

தரவுவாதப் புரட்சி நிகழுவதற்கு இன்னும் முப்பது அல்லது நாற்பது ஆண்டுகள் ஆகலாம். மனிதவாதப் புரட்சிகூட இரவோடு இரவாக

நிகழவில்லை. துவக்கத்தில் மனிதர்கள் கடவுள்மீது தொடர்ந்து நம்பிக்கை கொண்டிருந்தனர். தாங்கள் ஏதோ தெய்விக நோக்கத்திற்காகக் கடவுளால் படைக்கப்பட்டதாகவும், அதனால் தாங்கள் புனிதமானவர்கள் என்றும் அவர்கள் வாதிட்டனர். வெகுகாலத்திற்குப் பிறகுதான், மனிதர்கள் சுயமாகவே புனிதமானவர்கள் என்றும், கடவுள் என்ற ஒருவர் இல்லவே இல்லை என்றும் சிலர் கூறத் துணிந்தனர். அதேபோல, மனிதத் தேவைகளை நிறைவேற்றுவதற்காக 'அனைத்தும் பிணைக்கப்பட்ட இணைய உலகத்தை' மனிதர்கள் உருவாக்கிக் கொண்டிருப்பதால் அந்த இணைய உலகம் புனிதமானது என்று பெரும்பாலான தரவுவாதிகள் முழங்குகின்றனர். ஆனால் இறுதியில், 'அனைத்தும் பிணைக்கப்பட்ட இணைய உலகம்', தான் சுயமாகவே புனிதமானது என்று மார்தட்டக்கூடும்.

மனிதர்களை மையமாகக் கொண்டதுதான் உலகம் என்ற கண்ணோட்டத்திலிருந்து, தரவுகளை மையமாகக் கொண்டதுதான் உலகம் என்ற கண்ணோட்டத்திற்கு மாறுவது வெறுமனே ஒரு தத்துவரீதியான புரட்சியாக இல்லாமல் ஒரு நடைமுறைப் புரட்சியாக இருக்கும். உண்மையிலேயே முக்கியமான புரட்சிகள் அனைத்தும் யதார்த்தத்தில் நிகழுபவையாகும். 'மனிதர்கள்தாம் கடவுளைக் கண்டுபிடித்தனர்' என்ற மனிதவாத யோசனை முக்கியமானதாக இருந்தது. ஏனெனில், அது நடைமுறையில் நீண்டகாலத் தாக்கங்களை ஏற்படுத்தியது. அதேபோல, 'உயிரினங்கள் வெறும் படிமுறைத் தீர்வுகளே' என்ற தரவுவாத யோசனை, அன்றாடம் நடைமுறையில் அது ஏற்படுத்துகின்ற பின்விளைவுகளால் முக்கியத்துவம் பெறுகிறது. யோசனைகள் நம்முடைய நடத்தையை மாற்றும்போது மட்டுமே அவை உலகை மாற்றுகின்றன.

பண்டைய பாபிலோன் நகரில் மனிதர்கள் எப்போதெல்லாம் ஓர் இருதலைக் கொள்ளி எறும்பு நிலையை எதிர்கொண்டனரோ, அப்போதெல்லாம் இரவில் அவர்கள் தங்களுடைய உள்ளூர்க் கோவில் ஒன்றின்மீது ஏறி அதன் உச்சத்தைச் சென்றடைந்து வானத்தை கவனித்தனர். தங்களுடைய தலைவிதியை விண்மீன்கள் கட்டுப்படுத்தியதாகவும், அவை தங்களுடைய எதிர்காலத்தைக் கணித்ததாகவும் பாபிலோனியர்கள் நம்பினர். விண்மீன்களைக் கண்காணித்ததன் மூலம், தாங்கள் திருமணம் செய்து கொள்ள வேண்டுமா, வயல்களை உழ வேண்டுமா, போருக்குச் செல்ல வேண்டுமா போன்றவற்றை பாபிலோனியர்கள் தீர்மானித்தனர். அவர்களுடைய தத்துவரீதியான நம்பிக்கைகள் நடைமுறைச்

செயல்முறைகளாக மாற்றப்பட்டன.

புனித மறைநூல்களைக் கொண்ட யூதமதம், கிறித்தவம் போன்ற மதங்கள் முற்றிலும் வித்தியாசமான ஒரு கதையைக் கூறின: "விண்மீன்கள் பொய் கூறுகின்றன. அந்த விண்மீன்களைப் படைத்தக் கடவுள், ஒட்டுமொத்த உண்மையையும் பைபிளில் வெளிப்படுத்தியுள்ளார். எனவே, விண்மீன்களைக் கண்காணிப்பதை நிறுத்திவிட்டு பைபிளைப் படிக்கத் தொடங்குங்கள்." இதுவும் நடைமுறையில் செயல்படுத்தத்தக்க ஒரு பரிந்துரையாக இருந்தது. யாரைத் திருமணம் செய்து கொள்ளுவது, எந்த வேலையில் சேருவது, ஒரு போரைத் துவக்கலாமா வேண்டாமா போன்றவற்றைத் தெரிந்து கொள்ள மக்கள் பைபிளைப் படிக்கத் தொடங்கினர், அதன் அறிவுரையைப் பின்பற்றினர்.

அடுத்து, மனிதவாதிகள் முற்றிலும் வேறொரு புதிய கதையுடன் வந்தனர்: "மனிதர்கள் கடவுளைக் கண்டுபிடித்தனர், பைபிளை எழுதினர், பிறகு அதை ஓராயிரம் வழிகளில் அர்த்தப்படுத்தினர். எனவே, மனிதர்கள்தாம் அனைத்து உண்மைகளின் மூலாதாரமாவர். உத்வேகமூட்டுகின்ற ஒரு மனிதப் படைப்பாக பைபிளை நீங்கள் படிக்கலாம், ஆனால் நீங்கள் உண்மையிலேயே அதைப் படிக்கத் தேவையில்லை. நீங்கள் ஏதேனும் இக்கட்டான நிலைமையை எதிர்கொண்டிருந்தால், உங்கள் உட்குரல் கூறுவதை கவனமாகக் கேட்டு, அதன் அறிவுரையைப் பின்பற்றுங்கள்." பிறகு, உங்கள் உட்குரலை எவ்வாறு கேட்பது என்பது பற்றிய நடைமுறை அறிவுறுத்தல்களை மனிதவாதம் விரிவாக எடுத்துரைத்து, அதற்கான பல்வேறு உத்திகளையும் வழங்கியது. சூரிய அஸ்தமனங்களைப் பார்த்தல், கதேயின் எழுத்துப் படைப்புகளைப் படித்தல், தனிப்பட்ட டைரிக் குறிப்புகளை எழுதுதல், ஒரு நல்ல நண்பருடன் மனம்விட்டுப் பேசுதல், ஜனநாயகரீதியான தேர்தல்களை நடத்துதல் போன்றவை அந்த உத்திகளில் அடங்கும்.

பல நூற்றாண்டுகளாக அறிவியலறிஞர்களும் இந்த மனிதவாத அறிவுறுத்தல்களை ஏற்றுக் கொண்டிருந்தனர். தாங்கள் திருமணம் செய்து கொள்ள வேண்டுமா அல்லது கூடாதா என்று இயற்பியலாளர்களுக்கு சந்தேகம் எழுந்தபோது, அவர்கள் சூரிய அஸ்தமனங்களைப் பார்த்துவிட்டு, தங்கள் உட்குரலைச் செவிமடுக்க முயன்றனர். தங்களுக்குக் கிடைத்திருந்த ஒரு பிரச்சனைகரமான வேலையில் தாங்கள் சேர வேண்டுமா அல்லது கூடாதா என்று வேதியியலாளர்கள் குழப்பமடைந்தபோது, அவர்கள் தங்கள் டைரிகளில் எழுதினர், ஒரு நல்ல நண்பருடன் மனம்விட்டுப் பேசினர்.

போர் தொடுக்க வேண்டுமா அல்லது அமைதி உடன்படிக்கை ஒன்றில் கையெழுத்திட வேண்டுமா என்று உயிரியலாளர்கள் விவாதித்தபோது, அவர்கள் ஜனநாயகரீதியான தேர்தல்களில் வாக்களித்தனர். மூளை அறிவியலறிஞர்கள் தங்களுடைய அதிர்ச்சிகரமான கண்டுபிடிப்புகளைப் பற்றிப் புத்தகங்களை எழுதியபோது, கதேயின் உத்வேகமூட்டும் மேற்கோள் ஒன்று அவற்றின் முதல் பக்கத்தில் இடம்பெறும்படி செய்தனர். இதுதான் அறிவியலுக்கும் மனிதவாதத்திற்கும் இடையே உருவான நவீனக் கூட்டின் அடித்தளமாக இருந்தது. இது நவீன 'யேங்' மற்றும் 'யின்'னுக்கும், காரணம் மற்றும் உணர்ச்சிக்கும், பரிசோதனைக்கூடம் மற்றும் அருங்காட்சியகத்திற்கும், உற்பத்தி வரிசை மற்றும் பேரங்காடிக்கும் இடையேயான நுண்ணிய சமநிலையைத் தக்கவைத்தது.

அறிவியலறிஞர்கள் மனித உணர்வுகளைப் புனிதமானவையாகக் கருதியதோடு மட்டுமல்லாமல், அவ்வாறு கருதுவதற்கு அவர்கள் ஓர் அற்புதமான பரிணாமரீதியான காரணத்தையும் கண்டுபிடித்தனர். டார்வினுக்குப் பிறகு, உயிரியலாளர்கள் பின்வருமாறு பிரகடனம் செய்யத் தொடங்கினர்: "உணர்வுகள் என்பவை விலங்குகள் சரியான தீர்மானங்களை மேற்கொள்ள உதவும் பொருட்டுப் பரிணாம வளர்ச்சியால் கச்சிதப்படுத்தப்படுகின்ற சிக்கலான படிமுறைத் தீர்வுகளே. நம்முடைய அன்பு, பயம், ஆழ்விருப்பம் ஆகியவை வெறுமனே கவிதைகளை இயற்ற மட்டுமே பயன்படக்கூடிய ஏதோ தெளிவற்ற ஆன்மிக நிகழ்வுகள் அல்ல. மாறாக, லட்சக்கணக்கான ஆண்டுகள் பெறுமானமுள்ள நடைமுறை ஞானத்தை உள்ளடக்கியவை அவை. நீங்கள் பைபிளைப் படிக்கும்போது, பண்டைய ஜெரூசலம் நகரில் வாழ்ந்த ஒருசில மதபோதகர்களிடமிருந்தும் யூதகுருமார்களிடமிருந்தும் நீங்கள் அறிவுரையைப் பெறுகிறீர்கள். இதற்கு நேர்மாறாக, நீங்கள் உங்கள் உணர்வுகளைச் செவிமடுக்கும்போது, பல லட்சக்கணக்கான ஆண்டுகளாகப் பரிணாம வளர்ச்சி உருவாக்கி வந்துள்ள ஒரு படிமுறைத் தீர்வை நீங்கள் பின்பற்றுகிறீர்கள். இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறையின் கடுமையான தரக்கட்டுப்பாட்டுச் சோதனைகளை எதிர்கொண்டு வெற்றி பெற்றுள்ள படிமுறைத் தீர்வு அது. உங்கள் உணர்வுகள் என்பவை பல லட்சக்கணக்கான மூதாதையரின் குரலாகும். கடுமையான சூழல்களில் எப்படியோ தாக்குப்பிடித்துப் பிழைத்துத் தங்கள் இனத்தைப் பெருக்கியவர்கள் அவர்கள். உங்கள் உணர்வுகள் தவறிழைக்கக்கூடும், ஆனால் வழிகாட்டுதலுக்கான பெரும்பாலான பிற மூலாதாரங்களைவிட அவை சிறந்தவை என்பதில் ஐயமில்லை.

ஏனெனில், லட்சோப லட்சம் ஆண்டுகளாக அவைதான் உலகில் மிகச் சிறந்த படிமுறைத் தீர்வுகளாக இருந்தன. எனவே, கன்பூசியஸ், முகமது நபி, ஸ்டாலின் போன்றோரின் காலகட்டங்களில், மக்கள் கன்பூசிய நெறிகள், இஸ்லாம், அல்லது கம்யூனிசவாதத்தின் போதனைகளைக் கேட்டதற்கு பதிலாகத் தங்களுடைய உணர்வுகளுக்குச் செவி சாய்த்திருக்க வேண்டும்."

ஆனால் இருபத்தோராம் நூற்றாண்டில், உணர்வுகள் இனியும் உலகில் மிகச் சிறந்த படிமுறைத் தீர்வுகளாக இல்லை. இதற்கு முன்பு ஒருபோதும் இருந்திராத கணித்திறனையும் பிரம்மாண்டமான தரவுத்தளங்களையும் பயன்படுத்துகின்ற மிகவும் மேம்பட்டப் படிமுறைத் தீர்வுகளை நாம் உருவாக்கிக் கொண்டிருக்கிறோம். கூகுள் மற்றும் முகநூல் படிமுறைத் தீர்வுகள் நீங்கள் துல்லியமாக எத்தகைய உணர்வுகளை அனுபவிக்கிறீர்கள் என்பதைத் தெரிந்து வைத்திருப்பதோடு கூடவே, உங்களைப் பற்றி நீங்களே அறிந்திராத பல்வேறு விஷயங்களையும் தெரிந்து வைத்துள்ளன. எனவே, நீங்கள் உங்கள் உணர்வுகளுக்குச் செவிசாய்ப்பதை விட்டுவிட்டு, அதற்கு பதிலாக இந்தப் புறவயமான படிமுறைத் தீர்வுகள் கூறுவதைக் காதுகொடுத்துக் கேட்கத் தொடங்க வேண்டும். ஒவ்வொருவரும் எப்படி வாக்களிக்கப் போகிறார்கள் என்பதை மட்டுமல்லாமல், ஏன் ஒருவர் ஜனநாயகக் கட்சிக்கும் இன்னொருவர் குடியரசுக் கட்சிக்கும் வாக்களிக்கிறார் என்பதற்கான அடிப்படை நரம்பியல் காரணங்களையும் படிமுறைத் தீர்வுகள் துல்லியமாகத் தெரிந்து வைத்திருக்கும்போது, ஜனநாயகரீதியான தேர்தல்களை நடத்துவதில் என்ன அர்த்தம் இருக்கப் போகிறது? "உங்கள் உணர்வுகள் கூறுவதைக் காதுகொடுத்துக் கேளுங்கள்!" என்று மனிதவாதம் கூக்குரலிட்டது; ஆனால் இப்போது தரவுவாதமோ, "படிமுறைத் தீர்வுகள் சொல்லுவதைக் காதுகொடுத்துக் கேளுங்கள்! நீங்கள் எத்தகைய உணர்வை அனுபவித்துக் கொண்டிருக்கிறீர்கள் என்பதை அவை அறியும்!" என்று முழங்குகிறது.

யாரைத் திருமணம் செய்து கொள்ளுவது, எந்த வேலையில் சேருவது, ஒரு போரைத் துவக்கவா வேண்டாமா போன்றவற்றைப் பற்றி நீங்கள் சிந்திக்கும்போது, ஒரு பெரிய மலைமீது ஏறி நின்று, சூரியன் கடலலைகளுக்குள் மறைவதைப் பார்ப்பது வெறும் நேரம் விரயம் மட்டுமே என்று தரவுவாதம் உங்களிடம் கூறுகிறது. ஓர் அருங்காட்சியகத்திற்குச் செல்லுவதும், ஒரு டைரி எழுதுவதும், ஒரு நண்பருடன் மனம்விட்டுப் பேசுவதும்கூட வீண்தான். சரியான தீர்மானங்களை மேற்கொள்ளுவதற்கு உங்களை நீங்கள் நன்றாக

அறிந்திருக்க வேண்டியது அவசியம்தான், ஆனால் இருபத்தோராம் நூற்றாண்டில் நீங்கள் உங்களை அறிந்திட வேண்டுமென்றால், மலைகள்மீது ஏறுவதையும் அருங்காட்சியகங்களுக்குச் செல்லுவதையும் டைரிகள் எழுதுவதையும்விடச் சிறந்த வழிமுறைகள் இருக்கின்றன. தரவுவாதிகள் கொடுக்கின்ற, நடைமுறையில் செயல்படுத்தத்தக்க சில வழிமுறைகள் இவை:

“நீங்கள் உண்மையிலேயே யார் என்பதை நீங்கள் தெரிந்து கொள்ள விரும்புகிறீர்களா?” என்று தரவுவாதம் கேட்கிறது. பிறகு அதுவே இவ்வாறு பதிலளிக்கிறது: “அப்படியானால், மலைகளையும் அருங்காட்சியகங்களையும் பற்றி மறந்துவிடுங்கள். நீங்கள் உங்கள் ‘டிஎன்ஏ’வை வரிசையாக்கம் செய்துவிட்டீர்களா? இன்னும் செய்யவில்லையா?! பிறகு எதற்காகக் காத்துக் கொண்டிருக்கிறீர்கள்? இன்றே அதைச் செய்துவிடுங்கள். உங்களுடைய பெற்றோரும், உடன்பிறந்தோரும், பாட்டிகளும் தாத்தாக்களும்கூடத் தங்களுடைய ‘டிஎன்ஏ’வை வரிசையாக்கம் செய்து கொள்ள அவர்களை ஒப்புக் கொள்ள வையுங்கள். அவர்களுடைய தரவுகள் உங்களுக்குப் பெரும் மதிப்பு வாய்ந்தவையாகும். உங்களுடைய ரத்த அழுத்தத்தையும் இதயத்துடிப்பு விகிதத்தையும் தினமும் இருபத்து நான்கு மணிநேரமும் அளவிடக்கூடிய, நீங்கள் அணிந்து கொள்ளக்கூடிய உயிரியளவுக் கருவிகளைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? அவற்றில் ஏதேனும் ஒன்றை வாங்கி அணிந்து கொண்டு, அதை உங்கள் ஸ்மார்ட்போனுடன் இணைத்துவிடுங்கள். நீங்கள் கடைக்குச் சென்று பொருட்களை வாங்கும்போது, ஒரு கேமராவுடனும் ஓர் ஒலிவாங்கியுடனும்கூடிய ஓர் அலைபேசியை வாங்கிக் கொள்ளுங்கள். பிறகு நீங்கள் செய்கின்ற எல்லாவற்றையும் அதில் பதிவு செய்து இணையத்தில் ஏற்றிவிடுங்கள். கூகுளும் முகநூலும் உங்களுடைய அனைத்து மின்னஞ்சல்களையும் படிப்பதற்கும், உங்களுடைய அனைத்து அரட்டைகளையும் கருத்துப் பரிமாற்றங்களையும் கண்காணிப்பதற்கும், நீங்கள் போடுகின்ற ‘லைக்’குகள் அனைத்தையும் பதிவு செய்து கொள்ளவும் அனுமதியுங்கள். நீங்கள் இவற்றையெல்லாம் செய்தால், பிறகு நீங்கள் யாரைத் திருமணம் செய்ய வேண்டும், எந்த வேலையில் சேர வேண்டும், ஒரு போரைத் துவக்க வேண்டுமா அல்லது கூடாதா போன்றவற்றை ‘அனைத்தும் பிணைக்கப்பட்ட இணைய உலகின்’ மாபெரும் படிமுறைத் தீர்வுகள் உங்களிடம் எடுத்துரைக்கும்.

ஆனால் இந்த மாபெரும் படிமுறைத் தீர்வுகள் எங்கிருந்து வருகின்றன? இதுதான் தரவுவாதத்தின் மர்மமாகும். கடவுளையும் அவருடைய திட்டத்தையும் மனிதர்களாகிய நம்மால் புரிந்து கொள்ள

முடியாது என்று கிறித்தவ மதம் கூறுவதைப்போல, புதிய படிமுறைத் தீர்வுகளை மனித மூளையால் புரிந்து கொள்ள முடியாது என்று தரவுவாதம் பிரகடனம் செய்கிறது. தற்போது பெரும்பாலான படிமுறைத் தீர்வுகளைத் தனிநபர்கள் எழுதுகிறார்கள் என்பது உண்மைதான். ஆனால், கூகுள் தேடல் படிமுறைத் தீர்வு போன்ற உண்மையிலேயே முக்கியமான படிமுறைத் தீர்வுகள் மிகப் பெரிய குழுக்களால் உருவாக்கப்படுகின்றன. குழு உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் அப்புதிரின் ஏதோ ஒரு பகுதியை மட்டுமே புரிந்து கொள்ளுகின்றனர். யாருக்கும் அந்த ஒட்டுமொத்தப் படிமுறைத் தீர்வும் முழுமையாகப் புரிவதில்லை. மேலும், இயந்திரக் கற்றலும் செயற்கை நரம்பியல் பிணையங்களும் தோன்றியுள்ள நிலையில், அதிக எண்ணிக்கையிலான படிமுறைத் தீர்வுகள் தாமாகவே உருவாகின்றன, தம்முடைய சொந்தத் தவறுகளிலிருந்து பாடம் கற்றுக் கொண்டு அவை தம்மைத் தாமே மேம்படுத்திக் கொள்ளுகின்றன. மனிதர்களால் ஒருபோதும் கையாள முடியாத மலையளவுத் தரவுகளை அவை ஆய்வு செய்கின்றன, மனித மனத்திற்கு அப்பாற்பட்ட வடிவவிதங்களைக் கற்றுக் கொள்ளுகின்றன, மனிதத் திறனுக்கு மீறிய உத்திகளை சுவீகரிக்கின்றன. ஒரு மூலப் படிமுறைத் தீர்வானது துவக்கத்தில் மனிதர்களால் உருவாக்கப்படக்கூடும், ஆனால் அது வளரும்போது அது தன்னுடைய சொந்தப் பாதையைப் பின்பற்றுகிறது. எந்த மனிதனும் இதுவரை சென்றிராத, எந்த மனிதனாலும் பின்தொடர முடியாத ஓர் இடத்தை நோக்கி அது வேகமாகப் பயணித்துக் கொண்டிருக்கிறது.

## தரவோட்டத்தில் ஒரு சிற்றலை

தரவுவாதத்தை விமர்சிப்பவர்களும் இருக்கின்றனர், அதில் நம்பிக்கை இல்லாதவர்களும் இருக்கின்றனர். மூன்றாவது அத்தியாயத்தில் நாம் பார்த்ததைப்போல, வாழ்க்கையை உண்மையிலேயே வெறும் தரவோட்டமாகச் சுருக்கிவிட முடியுமா என்பது சந்தேகத்திற்குரிய ஒன்றுதான். குறிப்பாக, தரவோட்டங்களால் பிரக்ஞையையும் அகவயமான அனுபவங்களையும் உருவாக்க முடியுமா என்பது பற்றித் தற்போது நமக்கு எந்த யோசனையும் இல்லை. ஒருவேளை, இருபது ஆண்டுகளில் நமக்கு அது பற்றிய ஒரு நல்ல விளக்கம் கிடைக்கக்கூடும். அல்லது, உயிரினங்கள் உண்மையில் படிமுறைத் தீர்வுகளே அல்ல என்றுகூட நாம் கண்டறியக்கூடும்.

வாழ்க்கை என்பது வெறுமனே தீர்மானங்களை மேற்கொள்ளுவது

மட்டும்தானா என்பதும் உறுதியாகத் தெரியவில்லை. தரவுவாதத்தின் தாக்கத்தினால், உயிரியலும் சமூக அறிவியலும் தீர்மானம் மேற்கொள்ளும் செயல்முறைகள்மீது மிதமிஞ்சிய பற்றுக் கொண்டவையாக ஆகியுள்ளன. தீர்மானங்கள் மேற்கொள்ளுவதை மட்டுமே உள்ளடக்கியதுதான் வாழ்க்கை என்பதுபோல அவை செயல்படுகின்றன. அவற்றின் எண்ணம் சரிதானா? தீர்மானங்களை மேற்கொள்ளுவதில் உணர்வுகளும் உணர்ச்சிகளும் எண்ணங்களும் நிச்சயமாக ஒரு முக்கியப் பங்கு வகிக்கின்றன என்றாலும், அதுதான் அவற்றின் ஒரே நோக்கமா? தீர்மானம் மேற்கொள்ளும் செயல்முறைகளைப் பற்றித் தரவுவாதம் தன்னுடைய புரிதலை மேன்மேலும் வளர்த்துக் கொண்டிருக்கிறது, ஆனால் வாழ்க்கையைப் பற்றிய அதன் கண்ணோட்டம் மேன்மேலும் அதிகப் பாரபட்சமானதாக ஆகக்கூடும்.

தரவுவாதக் கொள்கைகளைப் பற்றிய ஒரு தீவிர ஆய்வு இருபத்தோராம் நூற்றாண்டின் மாபெரும் அறிவியல் சவாலாக மட்டுமல்லாமல், மிக அவசரமான அரசியல் பணித்திட்டமாகவும் பொருளாதாரப் பணித்திட்டமாகவும் இருக்கப் போகிறது. உயிரியல் மற்றும் சமூக அறிவியல் வல்லுநர்கள் தங்களைத் தாங்களே கேட்டுக் கொள்ள வேண்டிய ஒரு கேள்வி இது: “வாழ்க்கையைத் தரவு செயலாக்கச் செயல்முறையாகவும் தீர்மானம் மேற்கொள்ளும் செயல்முறையாகவும் நாம் புரிந்து கொள்ளும்போது நாம் எதையேனும் இழக்கிறோமா? வெறும் தரவுகளாகச் சுருக்கப்பட முடியாத ஏதேனும் பிரபஞ்சத்தில் இருக்கிறதா?” இறுதியில் தரவுச் செயலாக்க வேலைகளில், பிரக்ஞையற்றப் படிமுறைத் தீர்வுகளால் பிரக்ஞையுடன்கூடிய அறிவை விஞ்ச முடியும் என்றால், பிரக்ஞையுடன்கூடிய அறிவை ஒதுக்கிவிட்டுப் பிரக்ஞையற்ற மற்றும் மேம்பட்டப் படிமுறைத் தீர்வுகளை அதனிடத்தில் வைத்தால் என்ன இழப்பு ஏற்படும்?

ஒருவேளை, தரவுவாதத்தின் யோசனை தவறானதாகவே இருந்தாலும், உயிரினங்கள் என்பவை வெறும் படிமுறைத் தீர்வுகள் அல்ல என்பது உண்மையாக இருந்தாலும், தரவுவாதம் இவ்வுலகைத் தன்னுடைய கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவருவதை அதனால் தடுக்க முடியாது. முந்தைய பல மதங்கள் உண்மைக்குப் புறம்பான பல விஷயங்களை உள்ளடக்கியிருந்தபோதிலும், அம்மதங்கள் மிகவும் பிரபலமடைந்தன, அதிக அதிகாரத்தைக் கைவசப்படுத்தின. கிறித்தவத்தாலும் கம்யூனிசவாதத்தாலும் அதைச் செய்ய முடிந்தது என்றால், தரவுவாதத்தால் ஏன் முடியாது? தரவுவாதத்திற்கு

உண்மையில் நல்ல வாய்ப்புகள் இருக்கின்றன. ஏனெனில், அது தற்போது அனைத்து அறிவியல் பிரிவுகள் நெடுகிலும் பரவிக் கொண்டிருக்கிறது. ஓர் ஒருங்கிணைக்கப்பட்ட அறிவியல் கண்ணோட்டம் யாராலும் எதிர்க்க முடியாத ஒரு கொள்கையாக சுலபமாக மாறக்கூடும். ஓர் அறிவியல் கண்ணோட்டத்திற்கு சவால் விடுவது மிகவும் கடினமானது, ஆனால் இக்கணம்வரை, எந்தவொரு கண்ணோட்டமும் ஒட்டுமொத்த அறிவியல் சமூகத்தால் ஒருமனதாக ஏற்றுக் கொள்ளப்பட்டதில்லை. எனவே, ஒரு துறையில் உள்ள அறிஞர்களால் வெளியிலிருந்து நேர்மாறான கண்ணோட்டங்களை இறக்குமதி செய்ய முடியும். ஆனால், இசையியலாளர்களில் தொடங்கி உயிரியலாளர்கள்வரை எல்லோரும் ஒரே தரவுவாதக் கண்ணோட்டத்தைப் பயன்படுத்தினால், அறிவியலின் ஒரு பிரிவுக்கும் இன்னொரு பிரிவுக்கும் இடையேயான தகவல் பரிமாற்றம், அந்தக் கண்ணோட்டத்தை மேலும் வலிமைப்படுத்தவே செய்யும். இதனால், அக்கண்ணோட்டம் குறை கொண்டதாக இருந்தாலும், அதைத் தடுப்பது மிகவும் கடினமானதாக இருக்கும்.

உலகை வெற்றி கொண்டு அதைத் தன்னுடைய கட்டுப்பாட்டின்கீழ் கொண்டுவருவதில் தரவுவாதம் வெற்றி பெற்றுவிட்டால், மனிதர்களாகிய நம்முடைய நிலைமை என்னவாகும்? துவக்கத்தில், ஆரோக்கியம், மகிழ்ச்சி, சக்தி ஆகியவை குறித்த மனிதவாதத் தேடலைத் தரவுவாதம் துரிதப்படுத்தும். இந்த மனிதவாத விருப்பங்களை நிறைவேற்றுவதாக வாக்குக் கொடுத்து அது தன்னைத் தானே எல்லா இடங்களிலும் பரப்பிக் கொள்ளும். இறவாநிலை, பேரானந்தம், தெய்விகமான படைப்பாற்றல் ஆகியவற்றை அடைவதற்கு, மனித மூளையின் திறனுக்கு அப்பாற்றபட்ட அளவிலான தரவுகளை நாம் செயலாக்கம் செய்ய வேண்டும். எனவே, படிமுறைத் தீர்வுகள் நமக்காக அந்த வேலையைச் செய்யும். ஆனாலும், அதிகாரம் மனிதர்களிடமிருந்து படிமுறைத் தீர்வுகளிடம் கைமாறும்போது மனிதவாதப் பணித்திட்டங்கள் பொருத்தமற்றவையாக ஆகிவிடக்கூடும். தரவுகளை மையமாகக் கொண்டதுதான் உலகம் என்ற கண்ணோட்டத்திற்காக மனிதர்களை மையமாகக் கொண்டதுதான் உலகம் என்ற கண்ணோட்டத்தை நாம் கைவிடும்போது, மனித ஆரோக்கியமும் மகிழ்ச்சியும் அவ்வளவு அதிக முக்கியத்துவம் வாய்ந்தவையாகத் தோன்றாமல் போய்விடும். மேம்பட்டத் தரவுச் செயலாக்க இயந்திரங்கள் ஏற்கனவே புழக்கத்தில் இருக்கும்போது வழக்கொழிந்து போன தரவுச் செயலாக்க இயந்திரங்களைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? அனைத்தும்

பிணைக்கப்பட்ட இணைய உலகம் நம்மை ஆரோக்கியமானவர்களாகவும் மகிழ்ச்சியானவர்களாகவும் சக்தி வாய்ந்தவர்களாகவும் ஆக்கும் என்ற நம்பிக்கையில், அந்த இணைய உலகத்தை உருவாக்க நாம் கடுமையாக உழைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் அந்த இணைய உலகம் உருவாகி இயங்கத் தொடங்கிவிட்டால், மனிதர்கள் பொறியாளர் என்ற நிலையிலிருந்து கீழிறக்கப்பட்டுச் சில்லுகளாகவும், பிறகு தரவுகளாகவும் சுருக்கப்பட்டுவிடக்கூடும். இறுதியில், காட்டாற்று வெள்ளத்திற்குள் கரைந்து போகும் மண்ணைப்போல, தரவுக் குவியல்களுக்குள் நாம் கரைந்து போய்விடக்கூடும்.

ஹோமோ சேப்பியன்ஸ் இனம் பிற விலங்குகளுக்கு என்ன செய்ததோ, அதை இப்போது தரவுவாதம் ஹோமோ சேப்பியன்ஸுக்குச் செய்யப் போவதாக அச்சுறுத்திக் கொண்டிருக்கிறது. வரலாறு நெடுகிலும், மனிதர்கள் ஒரு சர்வதேசப் பிணையத்தை உருவாக்கி, எல்லாவற்றையும் அந்தப் பிணையத்திற்குள் அவற்றின் செயல்பாட்டுக்கு ஏற்ப மதிப்பீடு செய்தனர். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இது மனிதர்களுடைய கர்வத்தையும் பாரபட்சங்களையும் பெரிதும் அதிகரித்தது. அந்தப் பிணையத்தின் மிக முக்கியமான செயல்பாடுகள் அனைத்தையும் மனிதர்கள் நிறைவேற்றியதால், அந்தப் பிணையத்தின் சாதனைகளுக்கு நாம்தான் காரணம் என்று நம்மால் சுலபமாக மார்தட்டிக் கொள்ள முடிந்தது, படைப்பின் உச்சம் நாம்தான் என்று நம்மால் சுலபமாக நம்ப முடிந்தது, பிற விலங்குகளுடைய வாழ்க்கையையும் அனுபவங்களையும் மிகவும் குறைத்து மதிப்பிட முடிந்தது. ஏனெனில், அவை குறைவான முக்கியத்துவம் வாய்ந்த செயல்பாடுகளை நிறைவேற்றின. எப்போதெல்லாம் ஒரு விலங்கு தன்னுடைய வேலையைச் செய்வதை நிறுத்தியதோ, அப்போதெல்லாம் அது முற்றிலுமாக அழிந்து இந்த பூமியிலிருந்து காணாமல் போயிற்று. மனிதர்களாகிய நாம், அந்தப் பிணையத்துடனான செயல்பாட்டுரீதியான முக்கியத்துவத்தை இழக்கும்போது, நாம் படைப்பின் உச்சமல்ல என்பதை நாம் கண்டறிவோம். நாமே உருவாக்கி வைத்துள்ள அளவுகோல்கள், முற்றிலுமாக அழிந்துவிட்ட மாமூத்துக்களோடும் சீன ஆற்றிலிருந்து மாயமாய் மறைந்து போன டால்பின்களோடும் நாம் போய்ச் சேர்ந்து கொள்ளும் நிலைக்கு நம்மைத் தள்ளிவிடும். அப்போது பின்னால் திரும்பிப் பார்க்கும்போது, மனிதகுலம் அந்தப் பிரபஞ்சத் தரவோட்டத்திற்குள் ஒரு சிற்றலையாக மட்டுமே இருந்து வந்துள்ளது என்பது தெரிய வரும்.

எதிர்காலத்தை நம்மால் கணிக்க முடியாது. ஏனெனில்,

தொழில்நுட்பம் முன்கூட்டியே தீர்மானிக்கப்பட்ட ஒன்றல்ல. ஒரே தொழில்நுட்பத்தால் வெவ்வேறு வகையான சமுதாயங்களை உருவாக்க முடியும். எடுத்துக்காட்டாக, தொழிற்புரட்சித் தொழில்நுட்பங்களான ரயில்கள், மின்சக்தி, வானொலி, தொலைபேசி போன்றவற்றைப் பயன்படுத்தி, கம்யூனிசவாத சர்வாதிகார ஆட்சிகளையும், பாசிச ஆட்சிகளையும், தாராளவாத ஜனநாயக ஆட்சிகளையும் அமைக்க முடிந்தது. தென்கொரியாவையும் வடகொரியாவையும் எடுத்துக் கொள்ளுங்கள்: அவ்விரு நாடுகளுக்கும் ஒரே மாதிரியான தொழில்நுட்பம் கிடைத்தது, ஆனால் அவை வெவ்வேறு வழிகளில் அதைப் பயன்படுத்துவதைத் தேர்ந்தெடுத்தன.

செயற்கை நுண்ணறிவு மற்றும் உயிர்தொழில்நுட்பத்தின் எழுச்சி நிச்சயமாக இவ்வுலகை மாற்றும், ஆனால் முன்கூட்டியே தீர்மானிக்கப்பட்டத் தனியொரு விளைவு உருவாக வேண்டும் என்ற அவசியமில்லை. இப்புத்தகத்தில் வரைகோடிட்டுக் காட்டப்பட்டுள்ள அனைத்து நிகழ்வோட்டங்களும் சாத்தியக்கூறுகளாகப் புரிந்து கொள்ளப்பட வேண்டுமே அன்றி, தீர்க்கதரிசனங்களாக அல்ல. இவற்றில் சில சாத்தியக்கூறுகள் உங்களுக்குப் பிடிக்கவில்லை என்றால், இவை யதார்த்தமாவதைத் தடுக்கக்கூடிய புதிய வழிகளில் நீங்கள் தாராளமாக சிந்திக்கவும் நடந்து கொள்ளவும் செய்யலாம்.

ஆனால், புதிய வழிகளில் சிந்திப்பதும் நடந்து கொள்ளுவதும் அவ்வளவு எளிதானதல்ல. ஏனெனில், நம்முடைய எண்ணங்களும் நடவடிக்கைகளும் வழக்கமாகத் தற்போதைய சித்தாந்தங்கள் மற்றும் சமூக அமைப்புமுறைகளால் மட்டுப்படுத்தப்படுகின்றன. நாம் தற்போது சிந்திக்கின்ற விதத்திலிருந்து விடுபட்டு வித்தியாசமாக நடந்து கொள்ளுவதற்கும் நம்முடைய எதிர்காலத்தைப் பற்றிப் புதுமையான வழிகளில் சிந்திப்பதற்கும் நமக்கு உதவும் பொருட்டு இப்புத்தகம் நம்முடைய தற்போதைய சிந்தனையின் மூலத்தைத் தடம் காணுகிறது. ஒரே ஒரு திட்டவட்டமான நிகழ்வோட்டத்தைக் கணிப்பதன் மூலம் நம்முடைய தொடுவானங்களைக் குறுக்கிக் கொள்ளுவதற்கு பதிலாக, நம்முடைய தொடுவானங்களை விரிவுபடுத்துவதும், நாம் தேர்ந்தெடுப்பதற்கு ஏகப்பட்ட விஷயங்கள் இருப்பது பற்றிய விழிப்புணர்வை நமக்குக் கொடுப்பதும்தான் இந்நூலின் நோக்கமாகும். நான் மீண்டும் மீண்டும் வலியுறுத்தி வந்துள்ளதைப்போல, 2050ம் ஆண்டில் வேலைவாய்ப்புச் சந்தையும் குடும்பமும் சுற்றுச்சூழலும் எப்படி இருக்கும் என்பதோ, எந்த மதங்களும் பொருளாதார அமைப்புமுறைகளும் அரசியல் கட்டமைப்புகளும் உலகில் ஆதிக்கம் செலுத்தும் என்பதோ உண்மையிலேயே யாருக்கும் தெரியாது.

ஆனாலும், நம்முடைய தொடுவானங்களை விரிவுபடுத்துவதுகூட நமக்குப் பாதகமாக அமையக்கூடும். அவை முன்பைவிட அதிகக் குழப்பத்தை நமக்குக் கொடுக்கக்கூடும், நாம் செயலற்றுப் போக வழி வகுக்கக்கூடும். இத்தனை நிகழ்வோட்டங்களும் சாத்தியக்கூறுகளும் இருக்கும்போது, நாம் எதன்மீது கவனம் செலுத்த வேண்டும்? உலகம் முன்பைவிட மிக வேகமாக இப்போது மாறிக் கொண்டிருக்கிறது. பிரம்மாண்டமான அளவிலான தரவுகள், யோசனைகள், வாக்குறுதிகள், மற்றும் அச்சுறுத்தல்கள் நம்மை நோக்கி வெள்ளமெனப் பாய்ந்தோடி வருகின்றன. மனிதர்கள் தங்களுடைய அதிகாரத்தைக் கட்டுப்பாடற்றச் சந்தையிடமும், முகமறியா மனிதக் கூட்டத்திடமும், புறவயமான படிமுறைத் தீர்வுகளிடமும் தாரை வார்க்கின்றனர். ஏனெனில், இவ்வளவு தரவுகளை நம்மால் கையாள முடியாது. கடந்தகாலத்தில், தகவலோட்டத்தைத் தடுத்ததன் மூலம் தணிக்கைமுறை வேலை செய்தது. இருபத்தோராம் நூற்றாண்டில், தொடர்பில்லாத மற்றும் பொருத்தமற்றத் தகவல்களால் மக்களை மூழ்கடிப்பதன் மூலம் தணிக்கைமுறை இயங்குகிறது. எதன்மீது நாம் கவனம் செலுத்த வேண்டும் என்பது நமக்குத் தெரிவதில்லை. பல சமயங்களில், முக்கியமற்ற விவகாரங்களைப் பற்றி ஆய்வு செய்வதிலும் விவாதிப்பதிலும் நாம் நம்முடைய நேரத்தின் பெரும்பகுதியைச் செலவிடுகிறோம். பண்டைய காலகட்டங்களில், தரவுகளைக் கைவசப்படுத்த முடிவது சக்திக்கான அடையாளமாகப் பார்க்கப்பட்டது. இன்று, எதை விட்டுத்தள்ள வேண்டும் என்பதை அறிந்திருப்பதுதான் நம்மிடம் சக்தி இருப்பதற்கான அடையாளமாகப் பார்க்கப்படுகிறது. எனவே, நம்முடைய குழப்பமான உலகில் நிகழ்ந்து கொண்டிருக்கின்ற அனைத்து விஷயங்களையும் கருத்தில் கொள்ளும்போது, நாம் எதன்மீது நம் கவனத்தைக் குவிக்க வேண்டும்?

குறுகியகாலக் கண்ணோட்டத்தில் நாம் சிந்தித்தால், மத்தியக் கிழக்கு நாடுகளில் நிலவும் கொந்தளிப்பு, ஐரோப்பாவின் அகதிகள் நெருக்கடி நிலை, சீனப் பொருளாதாரத்தின் வேகம் குறைவது போன்ற உடனடிப் பிரச்சனைகள்மீது நாம் கவனம் செலுத்துவது நல்லது என்று தோன்றும். நீண்டகால நோக்கில் சிந்தித்தால், உலகம் வெப்பமயமாதல், பெருகி வரும் சமத்துவமின்மை, வேலைவாய்ப்புச் சந்தை சுருங்குதல் போன்றவற்றை நாம் கருத்தில் எடுத்துக் கொள்ள வேண்டும். ஆனால், வாழ்வைப் பற்றிய ஒட்டுமொத்தக் கண்ணோட்டத்தை நாம் கருத்தில் எடுத்துக் கொண்டால், ஒன்றோடொன்று பிணைந்துள்ள கீழ்க்கண்ட மூன்று செயல்முறைகள் பிற எல்லாப் பிரச்சனைகளையும் ஒட்டுமொத்தமாக ஒதுக்கித் தள்ளிவிட்டு முன்னால் வந்து நிற்கின்றன:

1. உயிரினங்கள் என்பவை படிமுறைத் தீர்வுகள் என்றும், வாழ்க்கை என்பது தரவுச் செயலாக்கம் என்றும் கூறுகின்ற, அனைத்தையும் உள்ளடக்கிய ஒரு கொள்கையின்மீது அறிவியல் ஒன்றுகுவிகிறது.

2. அறிவானது பிரக்ஞையிடமிருந்து துண்டிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறது.

3. பிரக்ஞையற்ற, ஆனால் மிகவும் அறிவார்ந்த படிமுறைத் தீர்வுகள், விரைவில், நம்மை நாம் அறிந்திருப்பதைவிட அதிகச் சிறப்பாக நம்மைப் பற்றி அறிந்திருக்கும்.

இம்மூன்று செயல்முறைகளும் மூன்று முக்கியமான கேள்விகளை எழுப்புகின்றன. நீங்கள் இப்புத்தகத்தைப் படித்து முடித்து நெடுநாட்கள் கழித்தும் இவை உங்கள் மனத்தில் நிலைத்திருக்கும் என்று நான் நம்புகிறேன்:

1. உயிரினங்கள் உண்மையிலேயே வெறும் படிமுறைத் தீர்வுகள்தானா? வாழ்க்கை என்பது உண்மையிலேயே வெறும் தரவுச் செயலாக்கம்தானா?

2. அறிவா அல்லது பிரக்ஞையா - எது அதிக மதிப்பு வாய்ந்தது?

3. பிரக்ஞையற்ற, ஆனால் மிகவும் அறிவார்ந்த படிமுறைத் தீர்வுகள், விரைவில், நம்மை நாம் அறிந்திருப்பதைவிட அதிகச் சிறப்பாக நம்மைப் பற்றி அறிந்திருக்கும்போது, சமுதாயத்திற்கும் அரசியலுக்கும் அன்றாட வாழ்க்கைக்கும் என்ன நிகழும்?

***

## நன்றியுரை

பின்வரும் மனிதர்களுக்கும் விலங்குகளுக்கும் அமைப்புகளுக்கும் நான் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்:

விபாசனா தியானத்தை எனக்குக் கற்றுக் கொடுத்த என்னுடைய ஆசான் சத்ய நாராயண கோயெங்கா அவர்களுக்கு (1924-2013) என் நன்றி. உள்ளது உள்ளபடியே யதார்த்தத்தைப் பார்க்கவும், மனத்தையும் உலகையும் சிறப்பாக அறிந்து கொள்ளவும் அந்த தியானம் எனக்கு உதவியுள்ளது. கடந்த பதினைந்து ஆண்டுகளாக விபாசனா தியானத்தைப் பயிற்சி செய்து வந்துள்ளதிலிருந்து எனக்குக் கிடைத்த கவனக்குவிப்பும் அமைதியும் உள்நோக்கும் இல்லாமல் இப்புத்தகத்தை என்னால் எழுதியிருக்க முடியாது.

இந்த ஆய்வுத்திட்டத்திற்கு நிதியுதவி செய்த இஸ்ரேல் அறிவியல் அமைப்புக்கு என் நன்றி.

ஹீப்ரூ பல்கலைக்கழகத்திற்கும், குறிப்பாக என்னுடைய வரலாற்றுத் துறைக்கும் என் நன்றி. பல ஆண்டுகளின் ஊடாக, தங்களுடைய கேள்விகள் மூலமாகவும் மௌனத்தின் மூலமாகவும் ஏராளமாக எனக்குக் கற்றுக் கொடுத்த என்னுடைய அனைத்து மாணவர்களுக்கும் என் நன்றி.

என்னுடைய ஆராய்ச்சி உதவியாளர் ஐடன் ஷெரருக்கு என் நன்றி. சிம்பன்சிக்கள், நியான்டர்தால்கள், சைபார்குகள் என்று நான் அவரை நோக்கி வீசிய அனைத்தையும் அர்ப்பணிப்போடு கையாண்டவர் அவர். அவ்வப்போது எனக்கு உதவிய என்னுடைய பிற ஆராய்ச்சியாளர்களான ராம் லைரன், ஈயால் மில்லர், ஓம்ரி ஷெஃபர் ரவீவ் ஆகியோருக்கு என் நன்றி.

பிரிட்டனில் உள்ள பெங்குவின் ரேன்டம் ஹவுஸ் பதிப்பகத்தைச் சேர்ந்த என்னுடைய பதிப்பாளர் மிகால் ஷாவிட்டுக்கு என் நன்றி. என்னை நம்பி இந்தச் சூதாட்டத்தில் துணிந்து இறங்கிய அவர், பல ஆண்டுகளாக எனக்கு ஆதரவு அளித்து வந்துள்ளார். பெங்குவின் ரேன்டம் ஹவுஸ் பதிப்பகத்தைச் சேர்ந்த எல்லி ஸ்டீல், சுசேன் டீன், பெத்தன் ஜோன்ஸ், மரியா கார்பட்-லுசெரோ, மற்றும் அவர்களுடைய சகாக்களுக்கு என் நன்றி. அவர்கள் அனைவருடைய உதவியையும் நான் மெச்சுகிறேன்.

இப்புத்தகத்தின் கையெழுத்துப் பிரதியை அருமையாகத் திருத்திக் கொடுத்து, என்னை தர்மசங்கடத்தில் நெளிய வைத்திருக்கக்கூடிய பல தவறுகளிலிருந்து என்னைப் பாதுகாத்த டேவிட் மில்னருக்கு என் நன்றி.

இப்புத்தகத்தைப் பிரபலப்படுத்த உதவிய பிரீனா கதேருக்கும் லைஜா கிரெஸோவாட்டிக்கும் என் நன்றி.

நியூயார்க்கில் உள்ள ஹார்ப்பர்காலின்ஸ் பதிப்பகத்தின் தலைவரான ஜானதன் ஜோவுக்கு என் நன்றி. அவருக்கு முன்பு அங்கு என்னுடைய பதிப்பாளராக இருந்த கிளேர் வாட்சலுக்கும் என் நன்றி. அவர்களுடைய நம்பிக்கைக்கும் ஊக்குவிப்பிற்கும் உள்நோக்கிற்கும் நான் நன்றிக்கடன் பட்டுள்ளேன்.

இந்நூல் பற்றிய தங்களுடைய பொன்னான பின்னூட்டக் கருத்துக்களையும் அறிவுரையையும் கொடுத்து உதவிய ஷ்முவெல் ரோஸ்னருக்கும் எரான் ஸ்மோராவுக்கும் என் நன்றி.

இன்றியமையாத உதவியை நல்கிய டெபோரா ஹாரிஸுக்கு என் நன்றி.

இந்நூலின் கையெழுத்துப் பிரதியை கவனமாகப் படித்து, என்னுடைய தவறுகளைத் திருத்துவதற்கு ஏராளமான நேரத்தையும் முயற்சியையும் செலவிட்டு, விஷயங்களை மற்றவர்களுடைய கண்ணோட்டங்களிலிருந்து பார்க்க எனக்கு உதவிய ஏமாஸ் அவிஸார், ஷைலோ டெ பெர், டிரிஸா ஐசன்பர்க், லூக் மேத்யூஸ், ராமி ராத்தோல்ஸ், ஓரென் ஷ்ரீகி ஆகியோருக்கு நன்றி.

கடவுளை அதிகமாக வசைபாடாமல் இருக்க என்னை ஒப்புக் கொள்ள வைத்த யிகல் பொரொசாவ்ஸ்கிக்கு என் நன்றி.

எஷ்தால் காட்டில் என்னோடு சேர்ந்து நடந்தபடி தன்னுடைய உள்நோக்குகளை எனக்கு வழங்கிய யோரம் யோவெலுக்கு என் நன்றி.

முதலாளித்துவ அமைப்புமுறையைப் பற்றி நான் சிறப்பாகப் புரிந்து கொள்ள எனக்கு உதவிய ஓரி காட்ஸ், ஜே பொமெரான்ஸ் ஆகியோருக்கு நன்றி.

மூளை மற்றும் மனத்தைப் பற்றிய தங்களுடைய சிந்தனைகளை என்னோடு பகிர்ந்து கொண்ட கார்மெல் வைஸ்மேன், யோக்கின் கெல்லர், அந்துவான் மசீரெஸ் ஆகியோருக்கு நன்றி.

பல ஆண்டு இதமான நட்புக்கும் அமைதியான வழிகாட்டுதலுக்கும் டீகோ ஆல்ஸ்டைனுக்கு என் நன்றி.

இந்நூலின் கையெழுத்துப் பிரதியில் சில குறிப்பிட்டப் பகுதிகளைப் படித்துத் தங்களுடைய கருத்துக்களைப் பகிர்ந்து கொண்ட எஹூத் ஆமிர், ஷுகி பிரக், மிரி வார்ஸெல், கை ஜாஸ்லாவாகி, மிக்கல் கோஹன், யோசி மாரி, ஆமிர் சுமகாய்-ஃபிங், ஸாராய் அஹரோனி, ஆதி எஸ்ரா ஆகியோருக்கு என் நன்றி.

உற்சாகத்தின் ஊற்றாகவும் ஓர் உறுதியான புகலிடமாகவும் விளங்குகின்ற ஐலோனா ஏரியலுக்கு என் நன்றி.

என்னுடைய மாமியாரும் கணக்காளருமான ஹானா யாஹாவுக்கு என் நன்றி.

எனக்கு ஆதரவையும் நட்பையும் வழங்கி வந்துள்ள என்னுடைய பாட்டி ஃபேனி, தாயார் ப்னீனா, சகோதரிகள் லியத் மற்றும் ஐனத், மற்றும் என்னுடைய பிற குடும்ப உறுப்பினர்கள் மற்றும் நண்பர்களுக்கு என் நன்றி.

இப்புத்தகத்தில் சில முக்கியமான கருத்துக்கள் மற்றும் கோட்பாடுகள் குறித்துத் தங்களுடைய இன்றியமையாத கண்ணோட்டங்களைக் கொடுத்து உதவிய சம்பா, பெங்கோ, மற்றும் சிலிக்கு என் நன்றி.

இறுதியாக, என்னுடைய வாழ்க்கைத்துணைவரும் மேலாளருமான இட்ஸிக்குக்கு என் நன்றி.

***

## படங்கள் உதவி

1. *Computer artwork © KTSDESIGN/Science Photo Library.*
2. *The Triumph of Death, c.1562, Bruegel, Pieter the Elder © The Art Archive/Alamy Stock Photo.*
3. *© NIAID/CDC/Science Photo Library.*
4. *Moscow, 1968 © Sovfoto/UIG via Getty Images.*
5. *'Death and dying' from 14th-century French manuscript: Pilgrimage of the Human Life, Bodleian Library, Oxford © Art Media/Print Collector/ Getty Images.*
6. *© CHICUREL Arnaud/Getty Images.*
7. *© American Spirit/Shutterstock.com.*
8. *© Imagebank/Chris Brunskill/Getty Images/Bridgeman Images.*
9. *© H. Armstrong Roberts/ClassicStock/Getty Images.*
10. *© De Agostini Picture Library/G. Nimatallah/Bridgeman Images.*
11. *Illustration: pie chart of global biomass of large animals.*
12. *Detail from Michelangelo Buonarroti (1475–1564), the Sistine Chapel, Vatican City © Lessing Images.*
13. *© Balint Porneczi/Bloomberg via Getty Images.*
14. *Left: © Bergserg/Shutterstock.com. Right: © s_bukley/Shutterstock. com.*
15. *© Karl Mondon/ZUMA Press/Corbis.*
16. *Adapted from Weiss, J.M., Cierpial, M.A. & West, C.H., 'Selective breeding of rats for high and low motor activity in a swim test: toward a new animal model of depression', Pharmacology, Biochemistry and Behavior 61:49–66 (1998).*
17. *© 2004 TopFoto.*
18. *Film still taken from www.youtube.com/watch?v=wWIbCtz_Xwk © TVR.*
19. *© NOVOSTI/AFP/Getty Images.*
20. *Rudy Burckhardt, photographer. Jackson Pollock and Lee Krasner papers, c.1905–1984. Archives of American Art, Smithsonian Institution. © The Pollock–Krasner Foundation ARS, NY and DACS, London, 2016.*
21. *Left: © Richard Nowitz/Getty Images. Right: © Archive Photos/*

*Stringer/Getty Images.*

22. *Courtesy of the Sousa Mendes Foundation.*
23. *Courtesy of the Sousa Mendes Foundation.*
24. *© Antiqua Print Gallery/Alamy Stock Photo.*
25. *Woodcut from 'Passional Christi und Antichristi' by Philipp Melanchthon, published in 1521, Cranach, Lucas (1472–1553) (studio of ) © Private Collection/Bridgeman Images.*
26. *Source: Emission Database for Global Atmospheric Research (EDGAR), European Commission.*
27. *© Bibliothèque nationale de France, RC-A-02764, Grandes Chroniques de France de Charles V, folio 12v.*
28. *Manuscript: Registrum Gregorii, c.983 © Archiv Gerstenberg/ullstein bild via Getty Images.*
29. *© Sadik Gulec/Shutterstock.com.*
30. *© CAMERIQUE/ClassicStock/Corbis.*
31. *© Jeff J Mitchell/Getty Images.*
32. *© Molly Landreth/Getty Images.*
33. *The Thinker, 1880–81 (bronze), Rodin, Auguste, Burrell Collection, Glasgow © Culture and Sport Glasgow (Museums)/Bridgeman Images.*
34. *© DeAgostini Picture Library/Scala, Florence.*
35. *© Bpk/Bayerische Staatsgemäldesammlungen.*
36. *Staatliche Kunstsammlungen, Neue Meister, Dresden, Germany © Lessing Images.*
37. *Tom Lea, That 2,000 Yard Stare, 1944. Oil on canvas, 36''x28''. LIFE Collection of Art WWII, U.S. Army Center of Military History, Ft. Belvoir, Virginia. © Courtesy of the Tom Lea Institute, El Paso, Texas.*
38. *© Bettmann/Corbis.*
39. *© VLADGRIN/Shutterstock.com.*
40. *Virgin and Child, Sassoferrato, Il (Giovanni Battista Salvi) (1609–85), Musee Bonnat, Bayonne, France © Bridgeman Images.*
41. *© Bettmann/Corbis.*
42. *© Jeremy Sutton-Hibbert/Getty Images.*
43. *Left: © Fototeca Gilardi/Getty Images. Right: © alxpin/Getty Images.*
44. *© Sony Pictures Television.*
45. *© STAN HONDA/AFP/Getty Images.*

46. *‘EM spectrum’. Licensed under CC BY-SA 3.0 via Commons, https://commons.wikimedia.org/wiki/File:EM_spectrum.svg#/media/File:EM_spectrum.svg.*
47. *© Cornell Bioacoustics Research Program at the Lab of Ornithology.*
48. *Illustration: the spectrum of conciousness.*
49. *© ITAR-TASS Photo Agency/Alamy Stock Photo.*
50. *© Jonathan Kirn/Getty Images.*

***

# கலைச்சொல் பட்டியல்

(கீழே கொடுக்கப்பட்டுள்ள சொற்கள் அந்தந்த அத்தியாயத்தில் இடம்பெற்றுள்ள வரிசைப்படி பட்டியலிடப்பட்டுள்ளன)

## அத்தியாயம் 1

| | |
|---|---|
| உயிர்தொழில்நுட்பம் | Biotechnology |
| பெரும் முற்போக்குப் பாய்ச்சல் | Great Leap Forward |
| நச்சுயிரி | Virus |
| பற்றுயிரி | Bacteria |
| மரபணுத் தொகுதி | Genome |
| நுண்ணுயிரி | Microorganism |
| நுண்ணுயிர்க்கொல்லி | Antibiotic |
| நோய்த்தடுப்பு மருந்தேற்றம் | Vaccination |
| உயிர்மின்னணுக் கொன்றுண்ணி | Bionic predator |
| பிணையம் | Network |
| மீமெய்யியல் | Metaphysical |
| மரபுப் பொறியியல் | Genetic engineering |
| உயிரணு உயிரியல் | Cell biology |
| ஏவு பாதை | Trajectory |
| தனிநபர் சராசரி வருடாந்திர உற்பத்தி | Per capita GDP |
| தாராளவாத மக்களாட்சி | Liberal democracy |
| வேட்டையாடி | Hunter-gatherer |
| தனிநபர் சராசரி வருடாந்திர வருவாய் | Per capita income |
| மின்தூசியுறிஞ்சி | Vacuum cleaner |

| | |
|---|---|
| புணர்ச்சிப் பரவசநிலை | Orgasm |
| சரசம் | Foreplay |
| மின்முனை | Electrode |
| தொலை இயக்கி | Remote-control |
| மிதிப்படி | Pedal |
| உயிர்வேதியியல் | Biochemistry |
| உயிர்வேதிப் பொருள் | Biochemical |
| கவனக்குறைவு மிகையியக்கக் கோளாறு | ADHD |
| உயிர்பொறியியல் | Biological engineering |
| சைபார்க் பொறியியல் | Cyborg engineering |
| செயற்கை உயிரினப் பொறியியல் | Non-organic engineering |
| இணையவெளி | Cyberspace |
| இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறை | Natural selection |
| அதிமனிதர்கள் | Superhumans |
| ஒட்டுறுப்பு அறுவைச் சிகிச்சை வல்லுநர் | Plastic surgeon |
| மரபுச்சிதைவு மாற்றம் | Mutation |
| சோதனைக்குழாய் வழிக் கருக்கட்டல் : | In vitrio fertilization |
| மரபியல் நோய் | Genetic disease |
| அணுக்கரு டிஎன்ஏ | Nuclear DNA |
| மதியிறுக்கம் | Autism |
| முரண்பாடு | Paradox |
| தொழிற்கட்சி | Labour party |

| | |
|---|---|
| மின்வெளிப் போர் | Cyber warfare |
| மனிதவாதம் | Humanism |

## அத்தியாயம் 2

| | |
|---|---|
| உயிர்த்திரள் | Biomass |
| சிறுகோள் | Asteroid |
| நுண்ணறிவுசார் வடிவமைப்பு | Intelligent design |
| சூழல் மண்டலம் | Ecosystem |
| ஆன்மவாதி | Animist |
| தகவமைத்துக் கொள்ளுதல் | Adapt |
| பண்ணைப்படுத்தப்பட்ட விலங்குகள் | Domesticated animals |
| முதனி | Primate |
| பரிணாம உளவியல் | Evolutionary psychology |
| படிமுறைத் தீர்வு | Algorithm |
| நிகழ்தகவு | Probability |
| மாறிகள் | Variables |
| கணிப்பான் | Calculator |
| நரம்பியல்சார் செயல்முறை | Neurological process |
| ஆத்திக மதங்கள் | Thiest religion |
| சமயச் சார்பு ஆட்சி | Theocracy |
| இறையியல் | Theology |
| தொன்மவியல் | Mythology |
| கூழைக்கடா | |

| | |
|---|---|
| | Pelican |
| நேனோதொழில்நுட்பம் | Nanotechnology |
| தாராளவாதம் | Liberalism |
| நவீனமான பண்ணைப்படுத்துதல் | Industrial farming |
| கணினி நிரல் | Computer program |

## அத்தியாயம் 3

| | |
|---|---|
| ஓரிறைவாதம் | Monotheism |
| தேவதைக் கதை | Fairy tale |
| சார்புக் கோட்பாடு | Theory of relativity |
| குவாண்டம் விசையியல் | Quantum mechanics |
| ஒரணு உயிரி | Unicellular organism |
| நிலைபேறுடைமை | Eternity |
| பிரக்ஞை | Consciousness |
| ஆற்றல் உணரி | Energy sensor |
| மையச் செயலகம் | Central processing unit |
| மின்காந்தசக்தி வாய் | Socket |
| உயிர்வேதித் தரவுச் செயலாக்கப் | Biochemical data-processing |
| படிமுறைத் தீர்வு | Algorithm |
| எதிர்மின்னணு | Electron |
| வன்புணர்வு | Rape |
| அடைப்பிதழ் | Valve |
| உந்துத் தண்டு | Piston |

| | |
|---|---|
| இயக்கப் புரணி | Motor cortex |
| ஒப்புருவாக்கம் | Simulation |
| மின்வேதிக் குறியீடுகள் | Electrochemical signatures |
| பிரக்ஞைக்கான குறியீடுகள் | Signatures of consciousness |
| நரம்பணுவியல் | Neurobiology |
| இஸ்லாமிய சகோதரத்துவ அமைப்பு | Islamic Brotherhood |
| நடத்தைசார் பொருளியல் | Behavioral economics |
| தொன்மைப் பொருளியல் | Classical ecomomics |
| முதனியியல் வல்லுநர் | Primatologist |
| கற்பனையான ஒழுங்குமுறை | Imagined order |
| மனித ஒத்தழைப்புப் பிணையம் | Human cooperation network |
| மரபுக் குறியீடு | Genetic code |

## அத்தியாயம் 4

| | |
|---|---|
| இருமை யதார்த்தம் | Dual reality |
| பரஸ்பரம் பொதுவான அகவயமான பிணையம் | Intersubjective network |
| தரவுச் செயலாக்கத் திறன் | Data-processing ability |
| வர்த்தகப் பிணையம் | Trade network |
| வணிகச்சின்னம் | Brand |
| அதிகாரத்துவம் | Bureaucracy |
| படிமுறைத் தீர்வு | Algorithm |
| நுழைவுரிமை | Visa |
| மனித ஒத்துழைப்புப் பிணையம் | |

| | |
|---|---|
| | Human cooperative network |
| ஊது உலை | Blast furnace |

## அத்தியாயம் 5

| | |
|---|---|
| உயிர்பொறியியல் | Bioengineering |
| தாராளவாதம் | Liberalism |
| அறநெறிசார் தீர்ப்பு | Ethical judgement |
| கருந்துளை | Black hole |
| அடிப்படைவாதி | Fundamentalist |

## அத்தியாயம் 6

| | |
|---|---|
| கட்டுப்பாடற்றச் சந்தைமுறை | Free-market |
| துணிகர முதலீட்டாளர் | Venture Capitalist |
| பங்குப் பரிவர்த்தனையக வர்த்தக நிதி | ETF (Exchange-Traded Fund) |
| பலகைசார் விளையாட்டு | Board game |
| உள்ளெரிப் பொறி | Internal combustion engine |
| உயிர்க்கோளம் | Biosphere |
| பைங்குடில் வாயு | Greenhouse gas |
| பனிப்படுக்கை | Ice cap |
| பொதுவுடமை அறிக்கை | Communist Manifesto |

## அத்தியாயம் 7

| | |
|---|---|
| விடுவிப்பு ஷரத்து | Escape clause |
| வானவில் பேரணி | Gay parade |
| முக்கோணவியல் | Trigonometry |
| யதார்த்த நிகழ்ச்சி | Reality show |
| பிரக்ஞையுடன்கூடிய உணர்வுநிலை | Sensitivity |
| தாராள மனிதவாதம் | Liberal humanism |
| பரிணாமரீதியான மனிதவாதம் | Evolutionary humanism |
| இயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறை | Natural selection |
| உயராற்றல் மனிதர்கள் | Superior people |
| குறைவாற்றல் மனிதர்கள் | Inferior people |
| பண்பாட்டுச் சார்பியம் | Cultural relativism |
| தொழில்நுட்ப மதம் | Techno-religion |
| மெய்நிகர் சொர்க்கம் | Virtual paradise |
| தொடருந்துப் பொறி | Locomotive |
| உள்ளெரிப் பொறி | Internal combustion engine |

## அத்தியாயம் 8

| | |
|---|---|
| மின்னேற்றம் | Electric charge |
| நிகழ்தகவு | Probability |
| மையச் செயலகம் | Central processing unit |
| நியதிக் கொள்கை | Determinism |
| தொலை இயக்கி | Remote-control |
| அதிர்ச்சிக்குப் பிறகான மன அழுத்த | Post-traumatic stress |

| | |
|---|---|
| பாதிப்பு | disorder |
| விமானியில்லா வானூர்தி | Drone |
| மெய்நிகர் | Virtual |
| பார்வைப் புலம் | Field of vision |
| உடலியங்கியல் | Physiology |

## அத்தியாயம் 9

| | |
|---|---|
| பிணையம் | Network |
| விமானியில்லா வானூர்தி | Drone |
| இணையத்தள ஊடுருவி | Hacker |
| அறநெறிசார் படிமுறைத் தீர்வு | Ethical algorithm |
| பன்னாட்டுக் குற்றவியல் நீதிமன்றம் | International criminal court |
| வடிவவிதம் | Pattern |
| அறிவியல் புனைகதைத் திரைப்படம் | Science-fiction movie |
| அதிநுண்ணறிவு | Super-intelligence |
| அருகிவரும் உயிரினம் | Endangered species |
| வெப்ப இயக்கவியல் | Thermodynamics |
| வடிவவியல் | Geometry |
| தரவு வங்கி | Databank |
| உயிரியளவுத் தகவல் | Biometric data |
| மார்பக ஊடுகதிர்ப்படச் சோதனை | Mammography examination |
| மருந்தாளர் | Pharmacist |
| தகவல் சேவை மையம் | Call center |

| | |
|---|---|
| வலைப்பக்க வடிவமைப்பாளர் | Web page designer |
| இயற்கைப் படிமுறைத் தீர்வு | Organic algorithm |
| கணிப்பான் | Calculator |
| முக அங்கீகாரம் | Facial recognition |
| இயந்திரக் கற்றல் | Machine learning |
| செவ்விசை | Classical music |
| காப்பீட்டு எழுத்துறுதி வழங்குவோர் | Insurance underwriter |
| கடலோடி | Sailor |
| மெய்நிகர் உலக வடிவமைப்பாளர் | Virtual-world designer |
| நிகழ்தகவு | Probability |
| உணரி | Sensor |
| செயலி | Computer application |
| உளநிலைப் பகுப்பாய்வு | Psychoanalysis |
| மரபணுத் தொழில்நுட்பம் | Genetic technology |
| தேடல் பொறி | Search engine |
| புவியிடங்காட்டி | GPS |
| இதயமுடுக்கி | Pacemaker |
| நேனோதொழில்நுட்ப நோய்த்தடுப்பு அமைப்புமுறை | Nanotech immune system |
| நச்சுயிரித் தடுப்பி | Antivirus |
| உயிரியளவு உணரி | Biometric sensor |

## அத்தியாயம் 10

| | |
|---|---|
| இஸ்லாமிய அரசு | Islamic state |

| | |
|---|---|
| தொழில்நுட்ப மனிதவாதம் | Techno-humanism |
| தரவு மதம் | Data religion |
| பரஸ்பரம் பொதுவான அகவயமான தளம் | Intersubjective realm |
| செயற்கைத் தேர்ந்தெடுப்புச் செயல்முறை | Selective breeding |
| பிரக்ஞை | Consciousness |
| வீச்சு எல்லை | Spectrum |
| ஒளி நிறமாலை | Light spectrum |
| ஒலி அலைமாலை | Sound spectrum |
| அலைநீளம் | Wavelength |
| அகச்சிவப்புக் கதிர் | Infrared ray |
| நுண்ணலை | Microwave |
| வானொலி அலை | Radiowave |
| புறவூதாக் கதிர் | Ultraviolet ray |
| எக்ஸ்-கதிர் | X-ray |
| காமா கதிர் | Gamma ray |
| மதியிறுக்கம் | Autism |
| மனச்சிதைவு நோய் | Schizophrenia |
| மனிதவியலாளர் | Anthropologist |
| மீஇயல்புசார் மனநிலை | Super-normative mental |
| லிம்பிக் அமைப்புமுறை | Limbic system |

## அத்தியாயம் 11

| | |
|---|---|
| தரவோட்டம் | Data flow |

| | |
|---|---|
| தரவுச் செயலாக்கம் | Data-processing |
| தரவுவாதம்- | Dataism |
| உயிர்வேதிப் படிமுறைத் தீர்வு | Biochemical algorithm |
| மின்னணுப் படிமுறைத் தீர்வு | Electronic algorithm |
| வடிவவிதம் | Pattern |
| உயிரணு உயிரியலாளர் | Cell biologist |
| தரவுவாதி | Dataist |
| கணினி அறிவியல் | Computer science |
| பெரும் தரவுக் குவியல்கள் | Big data |
| பகிர்வுச் செயலாக்கம் | Distributed processing |
| மையச் செயலாக்கம் | Centralized processing |
| அரசியலறிஞர் | Political scientist |
| அனைத்தும் பிணைக்கப்பட்ட இணைய உலகம் | Internet-of-all-things |
| இணையவெளி | Cyberspace |
| வலைப்பக்க வடிவமைப்பு | Web design |
| இறையாண்மை | Sovereignty |
| தொலைக்கண்டுணர்வி | Radar |
| தரவுச் செயலாக்க அமைப்புமுறை | Data-processing system |
| ஜனநாயக இயங்குமுறை | Democratic mechanism |
| நுண்சில்லு | Chip |
| கணித்திறன் | Computing power |
| தரவுச் செயலாக்கப் பிணையம் | Data-processing network |
| புத்தாயிரம் | Millennium |

| | |
|---|---|
| இணையத்தள ஊடுருவி | Hacker |
| தரவுச் செயலாக்க இயங்குமுறை | Data-processing mechanism |
| டிஎன்ஏ வரிசையாக்கம் | DNA Sequencing |
| உயிரியளவுக் கருவி | Biometric device |
| ஒலிவாங்கி | Microphone |
| தேடல் படிமுறைத் தீர்வு | Search algorithm |
| நிகழ்வோட்டம் | Scenario |